

# ப்ருஹ்ம வித்யா

## பாகம்-8

ஸ்ரீ பகவத்ராமானுஜரின் 'ஸ்ரீபாஷ்ய'த்தின்
முதல் அத்யாயத்தின் 5-ம் அதிகரணம் முதல்
இறுதிவரை




**S. JAGANNARAYANAN**

Deputy, Secy. (Rtd.), Ministry of Finance,
Government of india, New Delhi


Price : Rs. 150/

ஸ்ரீ:



# ப்ருஹ்ம வித்யா

## பாகம்-8

ஸ்ரீ பகவத்ராமானுஜரின் ஸ்ரீபாஷ்யத்தின் முதல் அத்யாயத்தின் 5-ம் அதிகரணம் முதல் இறுதிவரை




**S. JAGANNARAYANAN**
Deputy Secy.. (Rtd.)
Ministry of Finance
Government of India, New Delhi.


*Author of*

*துளஸி ராமாயணம், த்ரிவேணி ராமாயணம், திருப்பாவை, நம்மாழ்வாரின் திருவாய்மொழி, கீத கோவிந்தம், மீராபஜன், தியாகராஜரின் பஞ்ச ரத்ன கீர்த்தனைகள்.*

First Edition 1988 1000 Copies


This book has been printed with the financial assistance given by Tirumalai Tirupathi Devasthanams, Tirupathi(A.P.) under their scheme — Aid to Authors for Religious books.

Financial assistance by a token grant has been promised by the Ministry of Education, Government of India, New Delhi, after completing all the Volumes of Brahma Vidya.

Please see also the list of donors in earlier Volumes; Mr. Vasan Associates, Chartered Accountants, Madras.

*வெளியிட்டவர் :*

**S. ஜெகந்நாராயணன்**
**10, திருவீதி அம்மன் தெரு,**
**ராமகிருஷ்ணா நகர், மதராஸ் - 28.**

*அச்சிட்டவர் :*

**இளங்கோ அச்சுக் கூடம்,**
**166, இராயப்பேட்டை ஹை ரோடு,**
**சென்னை - 4. போன் : 7 4 1 2 1**

***பாரதி விஜயம் பிரஸ், சென்னை-5.***

***பத்மாலயா பிரஸ், சென்னை-18.***

***ரத்னம் பிரஸ், சென்னை-1.***

***ரமணி பிரிண்டர்ஸ், சென்னை-28.***



ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மிநிருஸிம்ஹ பர பிருஹ்மணே நம :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்ததேசிகயதீந்திர மஹாதேசிகாய நம:

1. ஒன்றுந் தேவமுலகுமுயிரும் மற்றும் யாதுமில்லா
அன்று. நான்முகன் தன்னொடு தேவருலகோடுயிர் படைத்தான்
குன்றம் போலமணிமாட நீடு திருக்குரு கூரதனுள்
நின்றவாதிப்பிரான் நிற்க மற்றைத்தெய்வம் நாடுதீரே.

(நம்மாழ்வார்-திருவாய் மொழி)

अखिलभुवनजन्मस्थेमभङ्गादिलीले विनतविविधभूतव्रातरक्षैकदीक्षे ।
श्रुतिशिरसिविदीप्ते ब्रह्मणि श्रीनिवासे भवतु मम परस्मिन् शेमुषी भक्तिरूपा ।

पाराशर्यवचस्सुधामुपनिषद्दुग्धाब्धिमध्योद्धृतां
संसाराग्निविदीपनव्यपगतप्राणात्मसञ्जीवनीम् ।
पूर्वाचार्यसुरक्षितां बहुमतिव्याघातदूरस्थिताम्
आनीतां तु निजाक्षरैः सुमनसो भौमाः पिबन्त्वन्वहम् ॥

## பதிப்பாளரின் பணிவுரை. (1)

## பிருஹ்ம வித்யா—3-வது பாகம்

### பகவத் ஸ்ரீ ராமானுஜரின் ஸ்ரீபாஷ்ய சாஸ்திரம்

1. ஸ்ரீ பாஷ்யத்தின் முதற் அத்யாயம் - ஸூத்ர சதுஷ்டயம் எனப்படும் சாரீரகசாஸ்திர உபோத்காதம் - ஏற்கனவே பிருஹ்ம வித்யா - இரண்டாம் பாகமாக ஸ்ரீரங்கம் கோவில் சம்ப்ரோக்ஷண சமயம் வெளியிடப்பட்டது. அதைத் தொடர்ந்து முதற் அத்யாயம் இறுதிவரை ஐந்தாம் அதிகரணத்திலிருந்து, ஆரம்பிக்கப்பட்டு முடிக்கப் பெற்று ஸமர்ப்பிக்கப்படுகிறது. மற்ற பாகங்களும் இனி வரப்போவதாகவிருக்கின்றன.

இந்த முதற் அத்யாயத்திலே பரத்வம் ஸ்ரீ மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந்நாராயணனே ஜகத் ஏககாரணம் - ஜீவாத்மா இல்லை, அது போல அசித்தான ப்ரதானமுமில்லை என்று ஸ்தாபிதம் செய்யப் படுகிறது. ப்ருஹ்ம வித்யைகளுள் இருபத்து நான்கு வித்யைகளின் விஷயங்களாக இந்த அத்யாயத்தின் அதிகரணங்கள் இருக்கின்றன.

இக்காரியத்தைச் செய்துமுடித்த எம்பெருமானை அலர் மேல் மங்கை ஸமேத ஸ்ரீ சீனிவாஸனை அடியேன் அடிக்கடி அடிக்கடி சுக்ருத ப்ரணாமம் செய்கிறேன்.

வாசகதோஷங்கள் க்ஷந்தவ்ய:

தாஸன்

| | |
|---|---|
| மதராஸ்-10-6-88<br>வெள்ளிக்கிழமை<br>ஏகாதசி விபவஹு<br>வைகாசி 28 | எஸ். ஜகந்நாராயணன்<br>Dy. Secy. (Retd.) Ministry of Finance<br>Government of India, New Delhi |

**பிரும்மவித்யா — 2-ஆம் பாகம்—அதில் போடப்பட்ட அஹோபிலமடத்து சம்பிரதாய பிரவர்த்தகர்கள் தொடர்ச்சி ஸ்ரீ அழகிய சிங்கர்களின் ஸ்ரீபாஷ்ய கிரந்த நூலைப்பற்றிய கிரந்த அருளிச் செயல்கள்:—**

**1.** முதலாவது பட்டம் ஸ்ரீமதாதிவண் சடகோபயதீந்திர மஹாதேசிகன். இவர் ஸ்ரீமத் அஹோபில மடத்தை முதல் முதலில் ஸ்தாபித்தவர். காலட்சேப முறையில் ஸ்ரீ பாஷ்யத்தை பிரவர்த்திப்பித்தார். உதயபானுமிச்ரன் என்கிற அத்வைத பண்டிதனை பதினொரு தினங்கள் நடந்த வேதாந்த வாதத்தை நடத்தி வெற்றி பெற்றார். இவரைப் பற்றியே பின்னால் வந்த அழகிய சிங்கர் பீடாதிபதிகள் காலட்சேப முறையில் ஸ்ரீபாஷ்யக் கருத்துக்களை பரவச் செய்தனர். அவர்களில் சிலர் கிரந்தவடிவில் சில புத்தகங்களை வெளியிட்டனர். அவைகளில் முக்கியமான சிலவற்றை கீழே தந்துள்ளோம். ஸ்ரீபாஷ்யக்கருத்துக்களை தெளிவுபடுத்த ஸ்ரீமாலோலவித்வத் சபை பிரதிவர்ஷமும் நடைபெறுகிறது.

**2.** 27-வது பட்டம் ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ வீரராகவ வேதாந்த யதீந்திரமஹாதேசிகன்.

சண்டமாருத வ்யாக்யானம் (சண்டமாருதம் என்கிற கிரந்தம் மஹாசாரியர் என்கிற வைணவப் பெரியவர் (16th Century AD) விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப்பற்றியது; சண்டமாருதம் (சததூஷணியின் விளக்கம்) விஜயபஞ்சகம், பிரும்மசூத்ரபாஷ்ய உபந்யாஸம் போன்றவை)

(பிருஹ்மசப்தவர்தார்த்தம்)

**3.** 34-வது பட்டம் ஸ்ரீவண்சடகோப சடகோப ராமானுஜ யதீந்திர மஹாதேசிகன், இவரால் ஸ்ரீமத் அதிகரண ஸாராவளி வ்யாக்யானமான அதிகரண கல்பதரு எழுதப் பெற்றது, பதயோஜனை என்று சொல்லப்படும்.

A

4. 42-வது பட்டம் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீஸ்ரீரங்க சடகோப யதீந்திர மஹாதேசிகன்.

இவரால் ஸ்ரீநிருஸிம்ஹப்ரியா என்கிற தமிழ் பத்திரிகை (ஹிந்தி பத்திரிகை) வெளியிடப்பட ஏற்பாடுகள் செய்யப் பட்டது. அன்றிலிருந்து இன்றுவரை இந்த தமிழ் பத்திரிகை மாதந்தோறும் வந்து கொண்டிருக்கிறது. இதில் ஸ்ரீபாஷ்யம் பற்றி கட்டுரைகளும் அழகிய சிங்கரின் திவ்ய அருள் மொழிகளும் காணப்பெறும். மாலோலவித்வத் சபையை பிரதிவர்ஷம் நடத்தி வந்தார். விசிஷ்டாத்வைத வேதாந்த கோசம்; வேதாந்த தீபிகையில் வந்த சில உபந்யாஸங்கள். இவரால் சோதிதமான கிரந்தம் தத்வடீகை (தத்வடீகை ஸ்ரீ வேதாந்த சார்யரால் இயற்றப்பட்ட ஸ்ரீபாஷ்ய விளக்க நூல் ஆனுல் இங்கு குறிப்பிடப்பட்டத் தத்வ டீகை 41-வது பட்டம் ஸ்ரீ அழகிய சிங்கரின் சதாபிஷேக நூல்.)

5. 43-வது பட்டம் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவீரராகவசடகோப யதீந்திர மஹாதேசிகன்.

ஸ்ரீஸார போதிநீ வ்யாக்யான ஸஹிதம் ஸ்ரீமத்ரஹஸ்ய த்ரயஸாரம். (இதில் சில பகுதிகள் ஸ்ரீபாஷ்யக் கருத் துக்களடங்கியவை)

6. 44-வது பட்டம் ஸ்ரீவண்சடகோப ஹ்ருதய ஸ்ரீவேதாந்த தேசிக யதீந்திர மஹாதேசிகன்.

வேதாந்த வாக்யார்த்தங்களில் மிகவும் ஸமர்த்தர். ஸ்ரீ அழகிய சிங்கர் கேட்கும் கேள்விகளுக்குப் பெரிய வித்வான் களாலும் உடனே ஸமாதானம் சொல்லி விடமுடியாது. மேன்மேலும் கேள்களைக் கேட்பதில் உத்ஸாஹமுடையவர். ஸ்ரீமாலோலவித்வத் ஸபை பிரதிவர்ஷமும் நடைபெறுகிறது (அடியேனைக் கூட சில கேள்விகள் கேட்டு பதில் சொல்ல முடியாமல் திகைக்கும்படி செய்து விட்டார்.)

*சாரீரகாதிகரண க்ரமபோதிநீ—ப்ரும்ம சூத்ரார்த்த* பத்ய மாலிகை, ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸித்தாந்த தத்வ ஸங்க்ரஹம். (உபயம் - நி ரு ஸி ம் ஹ பி ரி ய ா ஸ்ரீரங்கம் கோவில் சம்ப்ரோக்ஷணமலர் பங்குனி — 1987)

श्रीः

ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீ அஹோபிலமடம் 44-வது பட்டம் ஸ்ரீவண்சடகோப
ஸ்ரீ வேதாந்ததேசிக யதீந்த்ர மஹாதேசிகன் அவர்களால்
பூர்வாச்ரமத்திலே அனுக்ரஹிக்கப்பட்ட

# ॥ ब्रह्मसूत्रार्थपद्यमालिका ॥

(முதல் அத்யாயம் முதல் பாதம் தொடர்ச்சி......)

## १. ईक्षत्यधिकरणम् ।

ஸத்வித்யை (ஈக்ஷத்யதிகரணம்)

॥ ईक्षतेर्नाशब्दम् ॥

सदेवेत्यादिकैश्शब्दैः न प्रधानमिहोच्यते ।
ईक्षतेरन्वयात्तस्मिन् ब्रह्म सच्छब्दगोचरः ॥ १ ॥

॥ गौणश्चेन्नात्मशब्दात् ॥

संकल्पस्त्वथ गौणस्स्यात्सद्भवेदानुमानिकम् ।
इति चेन्नात्मशब्देन सच्छब्दो हि विशेष्यते ॥ २ ॥

॥ तन्निष्ठस्य मोक्षोपदेशात् ॥

सदर्थोपासकस्यात्र मोक्षोक्तेर्ब्रह्म तद्भवेत् ।
प्रधानप्राप्तिरिति चेन्मुक्तिर्नानन्दतां भजेत् ॥ ३ ॥

॥ हेयत्वावचनाच्च ॥

सच्छब्दवाच्यं न ध्येयं हेयत्वादित्यनुक्तितः ।
ध्येयत्वेनैव चोक्तत्वाद्ब्रह्माऽऽनन्दस्सदुच्यते ॥ ४ ॥

---

குறிப்பு:—பிரும்ம வித்யா — 2ஆம் பாகம் முந்தின சூத்ரங்களுக்கு பார்க்கவும்,

॥ प्रतिज्ञाविरोधात् ॥

कारणस्य तु विज्ञानात्कार्यज्ञानं भवेदिति ।
प्रतिज्ञाया(:) विरोधाच्च प्रधानं तु न कारणम् ॥५॥

॥ स्वाप्ययात् ॥

कारणे लयवाक्याच्च स्वात्मनो लयकारणम् ।
ब्रह्मैवेति प्रधानं तु सच्छब्देन न कथ्यते ॥ ६ ॥

॥ गतिसामान्यात् ॥

कारणाख्यायिवाक्यानां या प्रवृत्तिः प्रदृश्यते ।
सद्वाक्यस्यापि तत्साम्यात्सच्छब्दार्थः परःपुमान् ॥ ७ ॥

॥ श्रुतत्वाच्च ॥

इदमात्मत एवेति श्रुतत्वादिह नो भवेत् ।
प्रधानं कारणं किंतु ब्रह्मैवास्य हि कारणम् ॥ ८ ॥

२. आनन्दमयाधिकरणम् ।

ஆனந்தமயவித்யை (ஆனந்தமயாதிகரணம்)

॥ आनन्दमयोऽभ्यासात् ॥

आनन्दमयशब्देन परमात्मा हि कथ्यते ।
ते ये शतमिति श्रुत्या त्वभ्यस्तानन्दवत्त्वतः ॥ ९ ॥

॥ विकारशब्दान्नेति चेन्न प्राचुर्यात् ॥

विकारार्थे मयट्शब्दान्न ब्रह्मात्वेति चेन्न तत् ।
प्राचुर्यार्थक एवैष मयट्शब्दः परो हि सः ॥ १० ॥

॥ तद्धेतुव्यपदेशाच्च ॥

एष ह्येवानन्दयातीत्यात्मानन्दस्य वाक्यतः ।
हेतुत्वव्यपदेशाच्च ब्रह्मानन्दमयो भवेत् ॥ ११ ॥

॥ मान्त्रवर्णिकमेव च गीयते ॥

सत्यं ज्ञानमनन्तमित्युदितं मन्त्रवर्णतः ।
आनन्दमयशब्देन गीयते तत्परं तथा ॥ १२ ॥

॥ नेतरोऽनुपपत्तेः

ब्रह्मेतरो मन्त्रवर्णे नोदितस्स्वल्पधीरयम् ।
बहु स्यामिति संकल्पानुपपत्तेर्विशेषतः ॥ १३ ॥

भेदव्यपदेशाच्च ॥

जीवाच्च विज्ञानमयाद्भेदेनास्य विमर्शनात् ।
आनन्दमय इत्यत्र ब्रह्मैव प्रतिपाद्यते ॥ १४ ॥

॥ कामाच्च नानुमानापेक्षा ॥

इच्छयैव जगत्सृष्टेः अचित्संसर्गतो विना ।
बहु स्यामिति वाक्यात्तु न जीवोऽस्य हि कारणम् ॥

॥ अस्मिन्नस्य च तद्योगं शास्ति ॥

जीवस्यास्मिन् महानन्दे ह्यानन्दावाप्तिरुच्यते ।
लब्ध्वाऽऽनन्दीति शास्त्रेण ब्रह्मानन्दमयस्ततः ॥ १६ ॥

३. अन्तरधिकरणम् ।

உத்கீதஹிரண்மய புருஷதிருஷ்டி: (அந்தராதிகரணம்)

॥ अन्तस्तद्धर्मोपदेशात् ॥

आदित्येऽक्षणि योऽन्तः स परमात्मा हिरण्मयः ।
सर्वपाप्मोदितत्वादितद्धर्माणामिहेरणात् ॥ १७ ॥

।। भेदव्यपदेशाच्चान्यः ।।

आदित्ये तिष्ठतोऽस्यैव सूर्याद्भेदोपदेशतः ।
तिष्ठन् य आदित्य इति जीवादन्यः परः पुमान् ।।१८।।

४. आकाशाधिकरणम् ।

உத்கீதாகாஸத்ருஷ்டி:— (ஆகாசாதிகரணம்)

।। आकाशस्तल्लिङ्गात् ।।

आकाशः परमात्मेति तल्लिङ्गादिह तूच्यते ।
परायणत्वसृष्ट्यादिकारणत्वविशेषणात् ।। १९ ।।

५. प्राणाधिकरणम् ।

பிரஸ்தாவபிராணத்ருஷ்டி: (பிராணாதிகரணம்)

।। अत एव प्राणः ।।

पूर्वोक्तदेव लिङ्गाच्च प्राणो ब्रह्मेति कथ्यते ।
सर्वप्राणिप्राणनाच्च निर्देशाच्च प्रसिद्धवत् ।। २० ।।

६. ज्योतिरधिकरणम् ।

காயத்ரி வித்யா—கௌஷேய ஜ்யோதிர் வித்யா
(ஜ்யோதிரதிகரணம்)

।। ज्योतिश्चरणाभिधानात् ।।

परो दिवो ज्योतिरिति निर्दिष्टः पुरुषोत्तमः ।
भूतजातस्य कृत्स्नस्य तत्पादत्वप्रकीर्तनात् ।। २१ ।।

॥ [illegible]ऽभिधानान्नेति चेन्न तथा चेतोऽर्पणनिगमात्तथाहि दर्शनम् ॥

प्रक्रमेऽस्मिस्तु गायत्र्या(:)अभिधानान्न तेजसः ।
इति चेन्न परस्यैव तत्साम्योपास्तये तथा ॥ २२ ॥

॥ भूतादिपादव्यपदेशोपपत्तेश्चैवम् ॥

भूतादिपादवत्त्वस्य व्यपदेशोपपत्तितः ।
गायत्रीशब्दनिर्दिष्टं ज्योतिर्ब्रह्मेति गम्यते ॥ २३ ॥

॥ उपदेशभेदान्नेति चेन्नोभयस्मिन्नप्यविरोधात् ॥

दिवीत्येकत्र सप्तम्या पञ्चम्या दिव(:) इत्यतः ।
उक्तिभेदात्परो नेतिनोभयत्राविरोधतः ॥ २४ ॥

७. इन्द्रप्राणाधिकरणम् ।

பிரதர்தனவித்யை—(இந்திரபிராணாதிகரணம்)

॥ प्राणस्तथानुगमात् ॥

इन्द्रप्राणपदोद्दिष्ट (:) इन्द्रात्मा ब्रह्म चेष्यते ।
आनन्दामृतशब्दाद्यैः उपसंहारदर्शनात् ॥ २५ ॥

॥ न वक्तुरात्मोपदेशादिति चेदध्यात्मसंबन्धभूमाह्यस्मिन् ॥

इन्द्रस्य वक्तुस्स्वस्यैव मामुपास्वेति चोदनात् ।
इन्द्र एवेति चेन्नात्र ब्रह्मानन्तगुणान्वयात् ॥ २६ ॥

॥ शास्त्रदृष्ट्या तूपदेशो वामदेववत् ॥

जगच्छरीरं ब्रह्मेति शास्त्रज्ञानात्तु चोदना ।
वामदेवादिवच्चात्र मामुपास्वेति वक्षिणः ॥ २७ ॥

॥ जीवमुख्यप्राणलिङ्गान्नेति चेन्नोपासा त्रैविध्यादाश्रि-
तत्त्वादिह तद्योगात् ॥

इन्द्रजीवप्राणलिङ्गान्नात्र ब्रह्मेति चेन्न हि ।
उपासा त्रिविधाऽन्यत्र यथेहाख्यानतस्तथा,

इति ब्रह्मसूत्रार्थपद्यमालिकायां प्रथमाध्यायस्य प्रथमः पादः ॥

## अथ प्रथमाध्यायस्य द्वितीयः पादः ॥

### ८. सर्वत्रप्रसिद्धाधिकरणम् ।

*சாண்டில்ய வித்யா - (ஸர்வத்ரபிரஸித்தாதிகரணம்)*

॥ सर्वत्र प्रसिद्धोपदेशात् ॥

सर्वं खल्विदमित्यत्र प्रसिद्धस्योपदेशतः ।
सर्वात्मा परमात्मैव मनोमय (:) उदीर्यते ॥ २९ ॥

॥ विवक्षितगुणोपपत्तेश्च ॥

वक्ष्यमाणगुणानां तु परस्मिन्नेव संभवात् ।
तज्जलानित्युपास्यत्वं परमात्मनि युज्यते ॥ ३० ॥

॥ अनुपपत्तेस्तु न शरीरः ॥

मनोमयो न जीवोऽत्र स्रष्टृत्वादेरसंभवात् ।
संकल्पेनैव सर्वत्र बहु स्यामिति कीर्तनात् ॥ ३१ ॥

॥ कर्मकर्तृव्यपदेशाच्च ॥

प्रेत्याभिसंभवानीति कर्मकर्तृत्वशंसानात् ।
प्राप्योपासकयोरत्र प्राप्यं ब्रह्म हि कारणम् ॥ ३२ ॥

॥ शब्दविशेषात् ॥

एष म आत्मा चेत्यादिषष्ठ्या प्रथमया च तौ ।
निर्दिष्टौ प्रथमान्तार्थस्तयोर्मध्ये मनोमयः ॥ ३३ ॥

॥ स्मृतेश्च ॥

सर्वस्य चाहमित्यादिस्मृत्या चैव हृदि स्थितः ।
जीवादन्यस्स्मृतेर्दाता ज्ञानदः परमेश्वरः ॥ ३४ ॥

॥ अर्भकौकस्त्वात्तद्व्यपदेशाच्च नेति चेन्न निचाय्य-
त्वादेवं व्योमवच्च ।

अल्पत्वाल्पस्थानवत्त्वव्यपदेशात्सनेश्वरः ।
इति चेन्न निचाय्यत्वान्महत्त्वं व्योमवत्स्वतः ॥ ३५ ॥

॥ संभोगप्राप्तिरिति चेन्न वैशेष्यात् ॥

हृदये वर्तमानत्वे जीवस्येव परमात्मनः ।
दुःखादिप्राप्तिरिति चेन्नास्याः कर्म हि कारणम् ॥

८. अत्त्रधिकरणम् ।

நாசிகேத வித்யா அத்த்ரதிகரணம்

॥ अत्ता चराचरग्रहणात् ॥

सूचितोऽत्ता तु संहर्ता परमात्मेति निश्चयः ।
मृत्यूपसेचनब्रह्मक्षत्रान्नं हि जगद्भवेत् ॥ ३७ ॥

॥ प्रकरणाच्च ॥

महान्तं विभुमित्यादिप्रक्रमात्पर(:) एव सः ।
अत्ता चराचरस्येति संहर्ता जगतो भवेत् ॥ ३८ ॥

॥ गुहां प्रविष्टावात्मानौ हि तद्दर्शनात् ॥

हृत्प्रविष्टौ जीवपरौ बुद्धिजीवौ न चात्र हि ।
गुहाहितं प्रविश्येति तयोरेव तदुक्तितः ॥ ३९ ॥

॥ विशेषणाच्च ॥

तयोरेव प्रकरेण ह्युपास्योपासकत्वतः ।
विशिष्य वचनादत्र ब्रह्मजीवौ गुहाहितौ ॥ ४० ॥

९. अन्तरधिकरणम् ।

உபகோஸல வித்யா அக்நித்ரய வித்யா அந்தாதிகரணம்

॥ अन्तर(:) उपपत्तेः ॥

अक्ष्यन्तर्वर्तिपुरुषो जीवबिम्बसुरात्परः ।
अमृतत्वाभयत्वादिगुणानामुपपत्तितः ॥ ४१ ॥

॥ स्थानादिव्यपदेशाच्च ॥

यश्चक्षुषीति श्रुत्या च स्थानादिव्यपदेशतः ।
नियन्तृत्वामृतत्वादिगुणेभ्यश्च परः पुमान् ॥ ४२ ॥

॥ सुखविशिष्टाभिधानादेव च ॥

कं ब्रह्मेति सुखाढ्यस्य ध्यानार्थमिहः चाक्षणि ।
अभिधानात्स्थितेरत्र ह्यक्ष्यन्तस्थः पर पुमान् ॥ ४३ ॥

॥ अत एव च स ब्रह्म ॥

तस्मात्कं ब्रह्म स्वं ब्रह्मेत्यत्राकाशस्य कीर्तनात् ।
अक्ष्याधारतया तस्य त्वाकाशो हि परः पुमान् ॥४४॥

॥ श्रुतोपनिषत्कगत्यभिधानाच्च ॥

श्रुतोपनिषदां या च गतिरुक्ताऽर्चिरादिका ।
सैवात्रोपासकस्योक्तेत्यतोऽपि स परः पुमान् ॥ ४५ ॥

॥ अनवस्थितेरसंभवाच्च नेतरः ॥

नियमेनाक्षण्यवृत्तेर्न जीवोऽक्षिगतस्त्विह ।
नियन्तृत्वामृतत्वादिपूर्वोक्तसंभवाच्च हि ॥ ४६ ॥

१०. अन्तर्याम्याधिकरणम् ॥

அந்தர்யாமி வித்யா (பிராஹ்மணம்) அந்தர்யாம்யதிகரணம்

॥ अन्तर्याम्यधिदैवाधिलोकादिषु तद्धर्मव्यपदेशात् ॥

अन्तर्याम्यधिदैवाधिलोकादिषु परात्परः ।
सर्वाऽवेद्यनियन्तृत्वब्रह्मधर्मस्य शंसनात् ॥ ४७ ॥

॥ न च स्मार्तमतद्धर्माभिलापाच्छारीरश्च ॥

प्रधानजीवौ नैवात्र त्वन्तर्यामितियोदितौ ।
असंभावितधर्माणां तयोरत्राभिधानतः ॥ ४८ ॥

॥ उभयेऽपि हि भेदेनैनमधीयते ॥

उभयेऽन्तर्यामिणोऽपि यो विज्ञाने य आत्मनि ।
इत्यक्ष्यादिवदत्रापि भेदेनैनमधीयते ॥ ४९ ॥

११. अदृश्यत्वादिगुणकाधिकरणम् ॥

அக்ஷரவித்யை-அத்ருஸ்யத்வாதி குணகாதிகரணம்

॥ अदृश्यत्वादिगुणको धर्मोक्तेः ॥

अदृश्यत्वादिगुणकं अक्षरं परमः पुमान् ।
सर्वज्ञत्वादिधर्मोक्तेश्चाक्षरात्परतः परः ॥ ५० ॥

॥ विशेषणभेदव्यपदेशाभ्यां च नेतरौ ॥

स्वज्ञानात्सर्वविज्ञानादक्षरं नेतरो भवेत् ।
अक्षरात्परतो जीवात्परत्वेन पृथक् श्रुतेः ॥ ५१ ॥

॥ रूपोपन्यासाच्च ॥

अग्निर्मूर्ध्येत्यक्षरस्य चन्द्रसूर्यौ च चक्षुषी ।
सर्वदेवाद्यङ्गकत्व शंसनात्परमेश्वरः ॥ ५२ ॥

१२. वैश्वानराधिकरणम् ॥
வைஶ்வாநர வித்யை-வைஶ்வாநராதிகரணம்

॥ वैश्वानरस्साधारणशब्दविशेषात् ॥

वैश्वानरः परं ब्रह्म जाठरादिविलक्षणम् ।
ब्रह्मशब्दप्रभृतिभिः सामान्यस्य विशेषणात् ॥ ५३ ॥

॥ स्मर्यमाणमनुमानं स्यादिति ॥

अग्निर्मूर्धेति यद्रूपं ब्रह्मणोऽन्यश्रुतौ स्मृतम् ।
वैश्वानरः परं ब्रह्म तद्रूपस्मरणादिह ॥ ५४ ॥

॥ शब्दादिभ्योऽन्तः प्रतिष्ठानाच्च नेति चेन्न तथा
दृष्ट्युपदेशादसंभवात्पुरुषमपि चैनमधीयते ॥

होमाधारान्तराग्नित्वश्रुतेर्ब्रह्मन चेन्न हि ।
जाठराग्निशरीरस्योपास्तये पुरुषस्य सा ॥ ५५ ॥

॥ अत एव न देवता भूतं च ॥

लोकत्रयशरीरत्वात्पुरुषत्वेन कीर्तनात् ।
वैश्वानरो नाग्निदेवो न च भूततृतीयकम् ॥ ५६ ॥

।। साक्षादप्यविरोधं जैमिनिः ।।

वैश्वानरपदेनेवाग्निशब्देनापि योगतः ।
बोधने चाऽविरोधं तु ब्रह्मणो जैमिनिर्जगौ ।। ५७ ।।

।। अभिव्यक्तेरित्याश्मरथ्यः ।।

द्युमूर्धत्वादिमात्राभिः परिच्छिन्नत्वमत्र तु ।
उपासकाभिव्यक्तेरित्याश्मरथ्यमुनेर्मतम् ।। ५८ ।।

।। अनुस्मृतेर्बादरिः ।।

द्युलोकप्रभृतीनां तु मूर्धत्वादिप्रकल्पनम् ।
तथैवोपासनं वक्तुं इति बादरिरब्रवीत् ।। ५९ ।।

।। संपत्तेरिति जैमिनिस्तथा हि दर्शयति ।।

अग्निहोत्रत्वसंपत्तेः प्राणाहुत्यास्तु जैमिनिः ।
उरोवेदित्वादिक्लृप्तिमब्रवीदाह हि श्रुतिः ।। ६० ।।

।। आमनन्ति चैनमस्मिन् ।।

द्युमूर्धादीन् अवयवानुपासकतनौ तथा ।
ध्यात्वा हुत्यार्चनार्थं च वैश्वानरमिहामनन् ।। ६१ ।।

इति ब्रह्मसूत्रार्थपद्यमालिकायां प्रथमाध्यायस्य
द्वितीयः पादः ।।



## ॥ अथ प्रथमाध्यायस्य तृतीयः पादः ॥

### १३. द्युभ्वाद्यधिकरणम् ।

த்யுப்வாத்யதிகரணம்

**॥ द्युभ्वाद्यायतनं स्वशब्दात् ॥**

द्युभ्वाद्यायतनं ब्रह्म नाड्याधारं च तद्विदुः ।
स्वशब्दादमृतस्यैष सेतुरित्यादिकादिह ॥ ६२ ॥

**॥ मुक्तोपसृप्यव्यपदेशाच्च ॥**

प्रक्रमेऽस्मिन् यदा पश्यो रुक्मवर्णं च पश्यति ।
साम्यं परं तदैतीति श्रुतेर्ब्रह्म द्युभूधरम् ॥ ६३ ॥

**॥ नानुमानमतच्छब्दात्प्राणभृच्च ॥**

प्रधानवच्च जीवोऽपि द्युभ्वाद्यायतनं नहि ।
तद्वाचकानां शब्दानां अभावादिति सिद्ध्यति ॥ ६४ ॥

**॥ भेदव्यपदेशात् ॥**

यदा पश्यत्यन्यमीशमिति श्रुत्या तयोरिह ।
भेदेन व्यपदेशाच्च न जीवस्सर्वधारकः ॥ ६५ ॥

**॥ प्रकरणात् ॥**

अथ परा ययेत्यादिब्रह्मप्रकरणादपि ।
द्युभ्वाद्यायतनं ब्रह्म निश्चेयं नेतराविह ॥ ६६ ॥

**॥ स्थित्यदनाभ्यां च ॥**

एकत्रैव तनौ तिष्ठन् अन्योऽनश्नन् फलं स्वराट् ।
अश्नन् जीवो मुह्यतीति तत्राभोक्ता परः पुमान् ॥६७॥

१४. भूमाधिकरणम् ॥

பூம வித்யா-பூமாதிகரணம்

॥ भूमा संप्रसादादध्युपदेशात् ॥

जीवादूर्ध्वं चोपदेशाद्भूमाऽत्र परमः पुमान् ।
सनत्कुमारगुरुणा नारदाय विशेषतः ॥ ६८ ॥

॥ धर्मोपपत्तेश्च ॥

प्रतिष्ठितस्स्वे महिम्नि भूमेति वचनादिह ।
अनन्याधारकत्वादिगुणवत्त्वाच्च तत्परम् ॥ ६९ ॥

१५. अक्षराधिकरणम् ॥

கார்க்கியக்ஷர வித்யா-அக்ஷராதிகரணம்

॥ अक्षरमम्बरान्तधृतेः ॥

अक्षरं तु परं ब्रह्म ह्यव्याकृतधृतेरिह ।
ओतत्वेन च सर्वस्य प्रोतत्वेनाक्षरे श्रुतेः ॥ ७० ॥

॥ सा च प्रशासनात् ॥

प्रशासने त्वक्षरस्य विधृताविति शंसनात् ।
शासनात्सा विधृतिरित्यज्ञो जीवो न कारणम् ॥७१॥

॥ अन्यभावव्यावृत्तेश्च ॥

अदृष्टं द्रष्ट्रिति श्रुत्या ह्यन्यभावनिषेधतः ।
अक्षरं परमात्मा हि जगत्कारणमुच्यते ॥ ७२ ॥

१६. ईक्षतिकर्माधिकरणम् ॥

திரிமாத்ரப்ரணவவித்யா - ஈக்ஷதிகர்மாதிகரணம்

॥ ईक्षतिकर्मव्यपदेशात्सः ॥

ईक्षते पुरुषमिति ह्यजरत्वादिशंसनात् ।
चतुर्मुखादन्य(:) इति पुरुषोऽसौ परः पुमान् ॥ ७३ ॥

१७. दहराधिकरणम् ॥

தஹரவித்யா - தஹராதிகரணம்

॥ दहर(:) उत्तरेभ्यः

दहरोस्मिन्नन्तर(:) इत्युक्तो हि दहरः परः ।
उत्तरेभ्यस्तु वाक्येभ्यः प्रतिपन्नगुणान्वयात् ॥ ७४ ॥

॥ गतिशब्दाभ्याम् तथा हि दृष्टं लिङ्गं च ॥

तस्मिन्गतिब्रह्मलोकशब्दाभ्यां दहरः परः ।
संपद्येति ब्रह्मलोक इत्यन्यश्रुतिलिङ्गतः ॥ ७५ ॥

॥ धृतेश्च महिम्नोऽस्यास्मिन्नुपलब्धेः ॥

असंभेदाय लोकानां महिम्नो विधृतेरिह ।
परस्य तस्य चास्मिस्तु श्रवणाद्दहरः परः ॥ ७६ ॥

॥ प्रसिद्धेश्च ॥

प्राणनादिसनाथाया: प्रसिद्धेः प्रबलत्वतः ।
भूताकाशप्रसिद्धेरप्यत्र दह्र; परः पुमान् ॥ ७७ ॥

॥ इतरपरामर्शात्स: इति चेन्नासंभवात् ॥

जीवस्य च परामर्शात्संप्रसाद(:) इति श्रुतेः ।
वाक्यशेषे स(:) इति चेन्न जीवोऽनुपपत्तितः ॥ ७८ ॥

।। उत्तराच्चेदाविर्भूतस्वरूपस्तु ।।

य आत्मापहतेत्यादिश्रुत्या जीवः इहेति चेत् ।
आविर्भूतगुणोक्त्यात्र न जीवो दहरो भवेत् ।। ७९ ।।

।। अन्यार्थश्च परामर्शः ।।

माहात्म्यकथनार्थं तु ब्रह्मणोऽन्यस्य कीर्तनम् ।
संप्रसादस्य मुक्त्यादौ स्वरूपापादनेन तु ।। ८० ।।

।। अल्पश्रुतेरिति चेत्तदुक्तम् ।।

अल्पत्वाल्पस्थानवत्त्वश्रुत्या ब्रह्म न तद्यदि ।
निचाय्यत्वादेवमिति दत्तोत्तरमिदं पुरा ।। ८१ ।।

।। अनुकृतेस्तस्य च ।।

परमं साम्यमित्यादिश्रुत्या साम्यानुकारतः ।
जीवोऽनुकर्ता दहरस्त्वनुकार्यः परः पुमान् ।। ८२ ।।

।। अपि स्मर्यते ।।

इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
इति स्मृत्याऽनुकर्ता च जीवस्त्विति न कारणम् ।।८३।।

१८. प्रमिताधिकरणम् ।।

ப்ரமிதாதிகரணம்

।। शब्दादेव प्रमितः ।।

अङ्गुष्ठमात्रः पुरुषः कठवल्यामुदीरतः ।
भूतभव्यादीशितृत्वशब्दादेव परः पुमान् ।। ८४ ।।

॥ हृद्यपेक्षया तु मनुष्याधिकारत्वात् ॥

उपासने मनुष्याणामधिकारात्परात्मनः ।
अङ्गुष्ठप्रमितत्वं च हृदयापेक्षया भवेत् ॥ ८५ ॥

१९. देवताधिकरणम् ।

தேவதாதிகரணம்

॥ तदुपर्यपि बादरायणस्संभवात् ॥

देवानां च भवेद्ध्यानं अर्थित्वादेश्च संभवात् ।
बादरायण(:) आचार्यस्त्वेवमेवेति मन्यते ॥ ८६ ॥

॥ विरोधः कर्मणीति चेन्नानेकप्रतिपत्तेर्दर्शनात् ॥

शरीरवत्त्वे देवानां विरोधः कर्मणीति चेत् ।
नैवं नानावपुःप्राप्तेः सौभर्यादिषु दर्शनात् ॥ ८७ ॥

॥ शब्दः इति चेन्नातः प्रभवात्प्रत्यक्षानुमानाभ्याम् ॥

देवादीनां तनोर्नाशे वेदोऽनित्यार्थयुग्भवेत् ।
इत्ययुक्तमिदं शब्दात्तत्सृष्टेश्च श्रुतेस्स्मृतेः ॥ ८८ ॥

॥ अत एव च नित्यत्वम् ॥

सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमिति श्रुतेः ।
धाता पदं हि संस्मृत्य सृजतीत्यस्तु नित्यता ॥ ८९ ॥

॥ समाननामरूपत्वाच्चावृत्तावप्यविरोधो दर्शनात्स्मृतेश्च ॥

समाननामरूपाभ्यां पुनर्ब्रह्म सृजत्यतः ।
अविरोधो लयेऽपीति श्रुत्या स्मृत्या च गम्यते ॥ ९० ॥

२०. मध्वधिकरणम् ।।

மதுவித்யா-மத்வதிகரணம்

**।। मध्वादिष्वसंभवादनधिकारं जैमिनिः ।।**

मध्वादिषु वसूनां चाऽनधिकारं तु जैमिनिः ।
प्राप्तत्वाच्च वसुत्वस्याऽनर्थित्वान्मनुते मुनिः ।। ९१ ।।

**।। ज्योतिषि भावाच्च ।।**

ज्योतिर्होपासते देवा(:) इत्येवं ब्रह्मचिन्तने ।
अधिकारप्रतीत्यैषामन्यत्रानधिकारिता ।। ९२ ।।

**।। भावं तु बादरायणोऽस्ति हि ।।**

जन्मान्तरे वसुत्वस्य प्राप्त्यर्थं स्वतनोर्भवेत् ।
परस्योपासनं तषां बादरायण(:) आह हि ।। ९३ ।।

२१. अपशूद्रादिकरणम् ।।

ஸம்வர்கவித்யை - ஸத்யகாம வித்யா - அபசூத்ராதிகரணம்

**।। शुगस्य तदनादरश्रवणात्तदाद्रवणात्सूच्यते हि ।।**

हंसेनानादरश्रुत्या तदैवाद्रवणाद्गुरौ ।
शूद्रेत्यामन्त्रणं शोकात् न शूद्रस्त्वागतस्स हि ।। ९४ ।।

**।। क्षत्रियत्वगतेश्च ।।**

जानश्रुतेस्तु तत्रैव बहुदायित्वदर्शनात् ।
क्षत्रियत्वं गम्यतेऽतो न शूद्रस्याधिकारिता ।। ९५ ।।

**।। उत्तरत्र चैत्ररथेन लिङ्गात् ।।**

उपरिष्टाच्च विद्यायां क्षत्रियत्वं तु गम्यते ।
अथाजयंश्चैत्ररथं कापेया(:) इति लिङ्गतः ।। ९६ ।।

॥ संस्कारपरामर्शात्तदभावाभिलापाच्च ॥

ब्रह्मविद्याप्रकरणे संस्कारपरिमर्शनात् ।
संस्काराभाववचनान्न शूद्रस्याधिकारिता ॥ ९७ ॥

॥ तदभावनिर्धारणे च प्रवृत्तेः ॥

जाबालस्य तु शुश्रूषोः शूद्रत्वाभावनिश्चये ।
उपदेशप्रवृत्तेश्च न शूद्रस्याधिकारिता ॥ ९८ ॥

॥ श्रवणाध्ययनार्थप्रतिषेधात् ॥

आम्नायश्रवणाध्याययागादिप्रतिषेधतः ।
उपासनेऽप्यधीकारो न शूद्रस्यति निश्चितम् ॥ ९९ ॥

॥ स्मृतेश्च ॥

न चास्योपदिशेद्धर्ममित्यादिस्मृतितस्तथा ।
उपासने नाधिकारश्शूद्रस्यति च गम्यते ॥ १०० ॥

(प्रमिताधिकरणशेषः)

॥ कम्पनात् ॥

अङ्गुष्ठप्रमितप्राणपदार्थब्रह्मजाद्भयात् ।
सर्वे देवा(:) जागरूका(:) इति श्रुत्या परस्स हि ॥

॥ ज्योतिर्दर्शनात् ॥

अङ्गुष्ठमात्रस्तु परो ज्योतिषोऽत्रैव दर्शनात् ।
तस्य भासा सर्वमिदं विभातीति श्रुतं यतः ॥ १०२ ॥

(अत्युत्तमज्योतिषश्च दर्शनात्स परः पुमान् ।
तस्य भासा सर्वमिदं विभातीति श्रुताविह ॥)

२२. अर्थान्तरत्वादिव्यपदेशाधिकरणम् ।

॥ आकाशोऽर्थान्तरत्वादिव्यपदेशात् ॥

नामरूपविविर्वोढा ह्याकाशः परमेश्वरः ।
बद्धमुक्तोभयावस्थादन्यत्वेनास्य कीर्तनात् ॥ १९३ ॥

॥ सुषुप्त्युत्क्रान्त्योर्भेदेन ॥

प्राज्ञेन संपरिष्वक्तः सुषुप्तौ कीर्त्यते पृतक् ।
भेदेन चैवमुत्क्रान्तौ जीवादन्यः परः पुमान् ॥ १०४ ॥

॥ पत्यादिशब्देभ्यः ॥

सर्वस्याधिपतीत्यादिशब्दैश्च व्यपदेशतः ।
प्राज्ञश्च परमात्मायं जीवादन्यस्सुनिश्चितः ॥ १०५ ॥

इति ब्रह्मसूत्रार्थपद्यमालिकायां प्रथमाध्यायस्य
तृतीयः पादः ॥

अथ प्रथमाध्यायस्य चतुर्थः पादः ॥

२३. आनुमानिकाधिकरणम् ।

आनुमानिकमप्येकेषामिति चेन्न शरीररूपक विन्यस्तगृहीते-
र्दर्शयति च ॥

प्रधानमपि चेकेषां कारणं त्विति चेन्नहि ।
रथरूपेण विन्यस्ततनुरव्यक्तमुच्यते ॥ १०६ ॥

॥ सूक्ष्मन्तु तदर्हत्वात् ॥

शरीरावस्थमव्यक्तं प्रवृत्त्यर्हं तदेव हि ।
तस्मादव्यक्तशब्देन न प्रधानमिहोच्यते ॥ १०७ ॥

॥ तदधीनत्वादर्थवत् ॥

परमात्माधीनतया रतत्वादिनिरूपणम् ।
स्यात्प्रयोजनवत्सर्वं नाव्यक्तमिह तान्त्रिकम् ॥ १०८ ॥

॥ ज्ञेयत्वावचनाच्च ॥

ज्ञेयत्वेव ह्यवचनान्न प्रधानमिहोच्यते ।
व्यक्ताव्यक्तज्ञविज्ञानादिति तेषां मतं ह्यतः ॥ १०९ ॥

॥ वदतीति चेन्न प्राज्ञो हि प्रकरणात् ॥

अशब्दमस्पर्शमिति ज्ञेयं तद्वदति श्रुतिः ।
इति चेन्न प्रकरणात्परमात्मा हि कथ्यते ॥ ११० ॥

॥ त्रयाणामेव चैवमुपन्यासः प्रश्नश्च ॥

उपासनमुपास्यं च ध्यातारं पृच्छतस्तदा ।
उपदेशास्त्रयाणां च न प्रधानमिहोच्यते ॥ १११ ॥

॥ महद्वच्च ॥

महत्तत्त्वाग्रहो यद्वदात्मशब्दविशेषणात् ।
प्रधानस्याप्यग्रहस्तु परत्वादात्मनस्तथा ॥ ११२ ॥

२४. चमसाधिकरणम् ।

॥ चमसवदविशेषात् ॥

यथेदं तच्छिरः इति चमसस्य शिरस्त्ववत् ।
अजायाः अविशेषाच्च न परोक्ता त्वजा हि सा ॥११३॥

॥ ज्योतिरुपक्रमा तु तथा ह्यधीयत एके ॥

ब्रह्मकारणिका सा तु ज्योतिषाधिष्ठिता ह्यजा ।
अणोरणीयानित्यत्र तैत्तिरीया ह्यधीयते ॥ ११४ ॥

॥ कल्पनोपदेशाच्च मध्वादिवदविरोधः ॥

लये स्थितस्य चैकस्य मधुत्वं कार्यता रवेः ।
अजायाः अपि सृष्ट्यादिवचनाच्च तथा भवेत् ॥११५॥

२५. संख्योपसंग्रहाधिकरणम् ।

ஜ்யோதிஷாம் ஜ்யோதிர் வித்யா ஸங்க்யோப
ஸங்கிரஹாதி கரணம்

॥ न संख्योपसंग्रहादपि नानाभावादतिरेकाच्च ॥

यस्मिन् पञ्चपञ्चजना(:) इति संख्याग्रहेऽपि च ।
नानाभावातिरेकाभ्यां सांख्योक्तप्रक्रिया न हि ॥११६॥

॥ प्राणादयो वाक्यशेषात् ॥

प्राणादयः पञ्चजना(:) इन्द्रियाणीति निश्चिताः ।
प्राणस्य प्राणमिति च वाक्यशेषो हि दृश्यते ॥ ११७ ॥

॥ ज्योतिषैकेषामसत्यन्ने ॥

केषांचिदन्नस्येत्यादेरसद्भावेऽपि शाखिनाम् ।
ज्योतिषामिति शब्देन बोध्यन्ते हीन्द्रियाणि तु ॥

२६. कारणत्वाधिकरणम् ।

॥ कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्तेः ॥

आकाशादौ कारणत्वं सर्वज्ञस्यैव कथ्यते ।
आत्मन(:) आकाश(:) इति तस्माद्ब्रह्मैव कारणम् ॥

॥ समाकर्षात् ॥

असद्वा इदमित्यत्र सर्वज्ञं सर्वकारणम् ।
समाकृष्य ब्रवीतीति ब्रह्मैवात्र हि कारणम् ॥ १२० ॥

## २७. जगद्वाचित्वाधिकरणम्

பாலாகிவித்யை ஜகத்வாசித்வாதி கரணம்

**॥ जगद्वाचित्वात् ॥**

यस्य वैतत्कर्म चेति श्रुतं कर्म जगद्भवेत् ।
पुण्यादिवशगो जीवः कथ्यते नात्र हि श्रुतौ ॥ १२१ ॥

**॥ जीवमुख्यप्राणलिङ्गान्नेति चेत्तद्व्याख्यातम् ॥**

जीवलिङ्गात्प्राणलिङ्गात्कारणं ब्रह्म नो भवेत् ।
इति चेत्त्रिविधोपास्तिसिद्ध्यर्थमिति वर्णितम् ॥१२२॥

**॥ अन्यार्थं तु जैमिनिः प्रश्नव्याख्यानाभ्यामपि चैवमेके ॥**

अस्मिन् जीवपरामर्शो जीवादन्यत्वसिद्धये ।
आख्याति प्रश्नव्याख्याभ्यां जैमिनिस्त्वपि चेतरे ॥

## २८. वाक्यान्वयाधिकरणम् ।

மைத்ரேயி வித்யா-வாக்யாந்வயாதிகரணம்

**॥ वाक्यान्वयात् ॥**

मैत्रेयीब्राह्मणस्थानां वाक्यानामन्वयात्तदा ।
परमात्मेति युक्तत्वाद्द्रष्टव्यस्तान्त्रिको न च ॥१२४॥

**॥ प्रतिज्ञासिद्धेर्लिङ्गमाश्मरथ्यः ॥**

प्रतिज्ञायास्तु सिद्ध्यर्थं जीवबोधकशब्दतः ।
ब्रह्माभिधानं लिङ्गमित्याश्मरथ्यमुनेर्मतम् ॥ १२५ ॥

**॥ उत्क्रमिष्यत(:) एवंभावादित्यौडुलोमिः ॥**

जीवशब्दात्परस्योक्तिरुत्क्रमिष्यत: एव हि ।
ब्रह्मभावापत्तितस्स्यादौडुलोमिमुनेर्मतम् ॥१२६ ॥

॥ अवस्थितेरिति काशकृत्स्नः ॥

अवस्थितेरात्मनि च ब्रह्मणो जीववाचकात् ।
अभिधानं युक्तमिति काशकृत्स्नमुनेर्मतम् ॥ १२७ ॥

२९. प्रकृत्यधिकरणम् ।

॥ प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् ॥

उपादानं च तद्ब्रह्म प्रतिज्ञसिद्धये भवेत् ।
सुवर्णकटकादीनां दृष्टान्तानामबाधतः ॥ १२८ ॥

॥ अभिध्योपदेशाच्च ॥

बहु स्यामिति संकल्पश्रुत्या ब्रह्मैव कारणम् ।
उपादानं निमित्तं च जगतोऽस्येति निश्चतम् ॥ १२९ ॥

॥ साक्षाच्चोभयाम्नानात् ॥

उपादानं निमित्तं च भवेद्ब्रह्म जगत्प्रति ।
ब्रह्म वनं ब्रह्म वृक्षः इति साक्षादुदीरणात् ॥ १३० ॥

॥ आत्मकृतेः ॥

बहुत्वकरणात्स्वस्य कर्तृत्वं कर्मता च हि ।
अतो ब्रह्म निमित्तञ्चोपादानञ्चेति कथ्यते ॥ १३१ ॥

॥ परिणामात् ॥

ब्रह्मणो बहुधा ह्यत्र परिणामान्नच क्षतिः ।
सूक्ष्माचेतनचिद्वस्तुशरीरस्य शरीरतः ॥ १३२ ॥

**॥ योनिश्च हि गीयते ॥**

यद्भूतयोनिमित्यादिश्रुत्या सर्वजगत्प्रति ।
उपादानमिति ब्रह्म गीयते चेति निश्चितम् ॥ १३३ ॥

३० सर्वव्याख्यानाधिकरणम् ।

**॥ एतेन सर्वे व्याख्याता(:) व्याख्याताः ॥**

न्यायेन चैतदन्तेन जगत्कारणवादिनः ।
वेदान्तास्तु परब्रह्मबोधकाः इति निश्चितम् ॥ १३४ ॥

इति ब्रह्मसूत्रार्थपद्यमालिकायां प्रथमाध्यायस्य
चतुर्थः पादः ॥

इति श्रीमद्वेदमार्गेत्यादिबिरुदावळीमेदुराणां चतुराधिक
चत्वारिंशत्संख्यासंख्यातपट्टाभिषेकपरिमण्डितानां
श्रीवणशठकोप श्रीवेदान्तदेशिकयतीन्द्र-
महादेशिकानां कृतिषु ब्रह्मसूत्रार्थ-
पद्यमालिकायां प्रथमाध्यायः ॥



# Section I

**ஸ்ரீமத் பெரிய ஆண்டவன் ஆஸ்ரம வெளியீடு (1971) ஸ்ரீபாஷ்யஸாரம் — ஸ்ரீமத்திருக்குடந்தை ஆண்டவன் அருளியஸாரம் அதிலடங்கிய கருத்துக்களை சுருக்கி நாம் கீழ் தந்துள்ளோம். (நன்றி).**

1. வேதங்கள் தான் முக்யபிரமாணம்—மோக்ஷத்தை விரும்புகிற ஜனங்களும் நல்ல மார்க்கத்தை உபநிஷத்துக் களின் மூலம் பூர்வாசார்யர்களால் தெளிவாக காட்டப்பட்ட உபநிஷத் அர்த்தங்களே நல்லவழி. ஜைமினியினால் வேதத் தின் பூர்வபாகங்களின் அர்த்தங்களை நிர்ணயம் பண்ணு வதற்கு சூத்ரங்கள் இயற்றப்பட்டன. அவைகளுக்கு எவரும் பாஷ்யம் செய்யவில்லை. ஏனெனில் பூர்வபாகத்தில் சொல் லப்படும் கர்மாக்களை அனுஷ்டிப்பதில் மாறுபாடு இல்லை. ஸ்வர்க்கம் முதலிய புருஷார்த்தங்களை அடைய முடியும். ஆனால் மோக்ஷத்தில் நோக்கில்லை உத்தரபாகம் உப நிஷத்துக்களின் கருத்துக்களடங்கிய பிரும்ம சூத்ரங்கள்— வியாஸரால் அருளப்பெற்றது. ஞானத்தினால் அடையப் படவேண்டிய புருஷார்த்தம்—545 சூத்ரங்களடங்கிய சாரீரக சாஸ்திரம். உலகங்கள் எல்லாம் பகவானுக்குச் சரீரம். அவ்வுலகங்களுக்குப் பகவான் ஆத்மா - சாரீரகன் - பர மாத்மா அவனைப் பற்றிய சாஸ்திரம் சாரீரக சாஸ்திரம்.

முதல் அத்யாயத்தில் ஸர்வேஸ்வரரான ச்ரியப்பதியான ஸ்ரீமந்நாராயணன் பரபிரும்மம்; ஸகல பிரபஞ்சங்களுக்குக் காரணபூதன்; காரணமாவது மூன்று வகையுண்டு, உபாதான காரணம் - நிமித்தகாரணம் - ஸஹகாரிகாரணம். மூவகைப் பட்ட காரணமும் இப்பிரபஞ்சத்திற்கு பிரஹ்மமே. சூக்ஷ்ம மான அறிவுள்ள (சேதன) வஸ்துக்கள், சூக்ஷ்மங்களான அறிவில்லாத (அசேதன) வஸ்துக்கள் இவைகளைச் சரீரமாக உடைய, கூடின பிருஹ்மம் ஆதலால் பிருஹ்மம் உபாதான காரணம். இவைகளைப் படைப்பதற்கு உபயோகமான

சங்கல்ப ஞானத்தோடு கூடின பிரும்மம் நிமித்த காரணம் ஞானம் சக்தி முதலிய குணங்களோடு கூடின பிருஹ்மமே ஸஹகாரி காரணம், ஆக ஒருவனே ச்ரியப்பதியே ஸர்வ காரணம். இம்மூவகைப்பட்ட காரணங்களும் ஸ்ரீமந் நாரா யணனையே பற்றியிருப்பதால் உபநிஷத்துக்களில் சொல்லப் பட்ட காரண வாக்யங்கள் பரமாத்மாவினிடத்தில் பொருந்தி யிருக்கின்றன. என்று சொல்வது (ஸ்ரீபாஷ்யத்தின்) முதல் அத்யாயம். அதனால் ஸமந்வயாத்யாயம் எனப்பெயர். சில ஸ்மிருதிகளில் சொல்லப்பட்ட சில அர்த்தங்களுக்கு ஸ்மிருதிகளாலே விரோதம் யேற்படுகிறது. உதாரணமாக பிரகிருதி உலகத்திற்கு காரணம் என்று சாங்கிய ஸ்மிருதி சொல்கிறது. மேலும் இதர மதங்களாலேயும் விரோதம் யேற்படுகிறது. (இவை யோகம், பாசுபதம் போன்றவை).

உபநிஷத்துக்களிலே ஆகாசம், ஜீவன் முதலியதத்வங் களை நித்யமாகச் சொல்கிறபடியால் அவைகளுக்குப் பர மாத்மா காரணமில்லை என்று உள்ளுக்குள்ளேயே விரோதம் யேற்படுகிறது; இந்திரியங்கள் நித்யம் என்று சிலர் சொல் கிறார்கள். இவ்விதமாகில் இந்திரியங்களுக்குப் பரமாத்மா காரணமில்லை என்றாகிறது. இதேபடி உலகில் எல்லா வஸ்துக்களுக்கும் பரமாத்மா காரணமில்லை என்கிற முதல் அத்தியாயத்தில் சொல்லப்பட்டவற்றுக்கு விரோதம் யேற் படுகிறது. ஆகவே இரண்டாவது அத்யாயத்தில் கீழ்ச் சொன்ன விரோதங்களில்லை. பரமாத்மாவே ஸர்வகாரணம் என்று ஸ்மிருதிகளாலும் யுக்திகளாலும் உபநிஷத் வாக்யங் களாலும் ஸ்தாபிதம். ஆகவே இரண்டாம் அத்யாயத்திற்கு அவிரோத அத்யாயம் எனப் பெயர்.

மூன்றாம் அத்யாயத்தில் உபாயங்கள் சிந்திக்கப்படு கின்றன. உபய லிங்காதி-ஸர்வபலப்ரதன் என்பதால் பகவா னுடைய பெருமையையுணர்த்துவதால் தான் அவனிடம் ஆசை - பக்தி பிறக்க வழியுண்டு; பக்திதான் எவ்வளவு பிரிவுகளையுடையது - அந்தபக்திக்கு அங்கங்கள் யாவை, ஸம்சாரத்தில் வைராக்யம் யேற்படவேண்டிய உபாயம்,

இவை முப்பத்திரண்டு விதமாம்; அவனைத் தியானம் செய்ய வேண்டும் என்கிற பக்தியின் பிரிவுகளையும், அந்த பக்திக்கு அங்கமான வர்ணாஸ்ரமதர்மங்களையும் இவை எல்லாம் சொல்லப்படுவதால் மூன்றும் அத்யாயம் உபாயாத்யாயம் எனப் பெயர்.

பரமாத்மாவை உபாஸிப்பதின் பலனைச் சொல்வது நான்காம் அத்யாயம். மரண சமயத்தில் நம்மிடமுள்ள புண்யபாபகர்மங்கள் நசிக்கின்றன, அதன் பின் ஜீவன் இந்த உடலிலிருந்து எப்படி புறப்படுகிறான்? என்கிற விஷயம் சொல்லப்படுகிறது. அதாவது ஜீவன் தன் புண்யபாபங்களைவிட்டு, இச்சரீரத்திலிருந்து 10 இந்திரியங்கள் மனஸ் பிராண வாயு, பஞ்சபூத சூக்ஷுமங்கள், இவைகளுடன் ஜீவன் நடுநாடியினால் வெளியே கிளம்பி அர்ச்சராதி மார்க்க வழியாக கமனம் அவனுக்கு யேற்படுகிறது. கலங்காப் பெரு நகர், பரமபதம் என்கிறபடி ஸ்ரீவைகுண்டத்தில் ஜீவன் பரமாத்மாவையடைந்து பரமாத்மாவுக்கு ஸமானமான ஆனந்தத்தையடைகிறான். இதுவே நான்கு அத்யாயங்களின் அர்த்தமாகும்.

## Section II

**ஸ்ரீமத் ராமானுஜ மதத்தில் சாரீரக சாஸ்திரத்திலும் பகவத் குணங்களே பேசப்படுகின்றன. பகவத் விஷயம் போல, ஸ்ரீபாஷ்யமும் பகவத்குணானு பவப்ரதானமே. ஆகவே ஸ்ரீபாஷ்யத்திலுள்ள பதினாறு பாதங்களிலும் பதினாறு குணங்களே அனுபவிக்கப்படுகின்றன.**

### முதற் பாதம்

ஸகல பிரபஞ்சங்களையும் உண்டு பண்ணுகிறவன் என்கிற குணம் பேசப்படுகிறது. பகவான் ஒவ்வொரு பொருளிலும் அனுப்பிரவேசித்து ஒவ்வொரு வஸ்துவுக்கும் உருவம், பெயர் கொடுப்பதால் வஸ்துத்வம் அதற்கு யேற்படுகிறது. சித் அசித் இவைகளைப் படைக்கக் காரணமாகிற கல்யாணகுணம் பேசப்படுகிறது.

## 2-ம் பாதம்

இந்த உலகங்கள் எல்லாம் பகவானுக்கு சரீரமாகிற படியால், பகவானே அவைகளுக்கு ஆத்மாவாகிற படியால் சரீர ஆத்மபாவம் என்கிற குணம் சொல்லப்படுகிறது. இந்த சித் அசேதன வஸ்துக்களில் அவன் இருந்தாலும், அவைகளின் தோஷங்கள் பகவானைச் சாரா. (சூத் 1-2-8) அநச்நந் அன்ய: அபிசாகசீதி-ஸம்போக பிராப்தி: இதிசேந்ந வைசேஷியாத் என்கிற உபநிஷத் வாக்ய ஸூத்ரங்கள் இங்கு அனுஸந்தேயம். பகவான் விலக்ஷணமான ஆத்மாவான தால் சூக்ஷ்ம ஸ்தூலசேதன அசேதன சரீரத்வம் என்கிற குணம் இந்த பாதத்தில் சொல்லப்படுகிறது.

## 3-ம் பாதம்

ஸ்வநிஷ்டத்வம் என்கிற குணம் ஓதப்படுகிறது. மூவகைப்பட்ட சேதனர்களை (நித்ய முக்தபத்தன்)—ஆத் மாக்களை அவன் தரித்துக் கொண்டு தனக்கு வேறு ஒரு ஆதாரமில்லாதபடியால, பரமாத்மா "ஸ்வநிஷ்டன் ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்க்கி...பிரதிஷ்டித:; அக்ஷரம் அம்பராந்த த்ருதே:, ஸாச ப்ரசாஸநாத் என்கிற ஸூத்திரத் தில் இந்த உபநிஷத்வாக்யம் அனுஸந்தேயம்.

## 4-ம் பாதம்

நிரவதி மஹிமா (எல்லையில்லாத மேன்மையுடையவன்) என்கிற தன்மை பேசப்படுகிறது. உதாரணமாக கடவல்லி யில் சொல்லப்பட்ட "இந்திரியேப்ய. பராஹ்யர்த்தா என்கிற சுருதிக்கு கபில மத ஸித்தங்களான ப்ரகிர்யைகள், அதேபடி பரமாத்மாவே காரணம் என்கிற பொருளுக்கு விரோதமாகத் தோன்றுகிறது. ஆகவே ஜகத்காரணம் பிரகிருதியா, ஜீவனு என்கிற சம்சயம் யேற்பட்டு, அந்த அந்த கடோபநிஷத் வாக்யங்களை நன்கு ஆராயுங்கால், எல்லா வேதாந்தங்களா லும் கோஷிக்கப்படுகிற பரமாத்மாவே ஜகத் காரணம் எனக் காட்டப்படுகிறது. இப்பாதத்தின் முதலில் அசேதன பிர கிருதி ஜகத் காரணமென்றும், இறுதியில் ஜீவன் என்றும்,

இவை இரண்டையும் தகர்த்து பரமாத்மாவே பிரபஞ்ச காரணம் அதற்க்குள்ள பெருமைசக்தி—சொல்லப்படுகிறது பரமாத்மா விஷயத்தில் [சூத்.(1-4-1; 1-4-22; 1-4-26-29)]

## 5-ம் பாதம்

கீழ்ச் சொன்ன பரமாத்மா என்கிற பொருள் ஸ்ருதி ஸ்மிருத்யுக்தி ஸித்தம். ஜகத்காரணம் என்கிற பொருளுக்கு விரோதம் சொல்ல அவ்வித விரோதத்தை பரிஹரித்து ஒருவராலும் பாதிக்கப்படதவன் பரமாத்மா நிர்பாதத்வம் என்கிற பகவத் குணம் பேசப்படுகிறது. ஜல்பங்களைச் சொல்லும் கபிலன் முதலிய முனிகளுடைய கருத்துக்களைக் கண்டித்து, ஸ்ருஷ்டிக்கு உபயோகப்படும் ஸர்வசக்தி இத்யாதி குணங்களை பகவானுக்குச் சொல்லி ஸ்மிருதி நியாயங்களாலே பரிஹரித்துச் சொல்வதால் நிர்பாதத்வம் பகவானுக்கு ஏற்படுகிறது.

## 6-ம் பாதம்

பரமாத்மா ஆப்தன், ஆஸ்ரிதர்களுக்கு கற்பத்தருவாக விருக்கிறன். ஆப்தனுக விருக்கிறன் பாஞ்சராத்ர நிஷ்டனுக்கு ஆப்தனுகவிருக்கிறன்;இதனுல் மற்ற மதங்கள் கபில பௌத்த ஜைன பாசுபத மதங்களைத் தள்ளி பாஞ்சராத்திரத்தில் வேத விருத்தம், வேதநிந்தையாதுமில்லை, அர்த்தம் ஒன்றுமில்லை என்று சாதிப்பதால் நிஷ்டர்களுக்கு ஆப்தனும்.

## 7-ம் பாதம்

ஆகாசம் ஆத்மா இவைகளுக்கு காரணமாயிருப்பவன் பகவான் என்று அர்த்தம் சொல்லப்பட்டு இந்திரியங்களால் காணப்படும் தூக்ஷ்மமான ஆகாசம் முதலான பஞ்பூதங்களிலும், அவைகளின் நுட்ப உருவங்களான ஐந்து தன்மாத்திரைகளிலும் அதினினும் மிக நுட்பமான அணு பரிமாண ஜீவனிடத்திலும் ஸமமாகக் காரணபூதமாக விருக்கிறன். அதாவது பிருகிருதி மஹத் அஹங்கார ஸாத்விக அஹங்காரத்திலிருந்து இந்திரியங்கள் தாமஸ அஹங்காரத்தி

லிருந்து பஞ்சபூத ஸூக்ஷ்மங்கள்; பஞ்சபூதஸூக்ஷ்மங்களி லிருந்து பஞ்சமஹாபூதங்கள் உண்டாவதால், பரமாத்மாவே ஜகத் காரணமாகும். அவனே உபாதான, நிமித்த ஸஹகாரி காரணமாகும். இவைகளைப் போல ஸூக்ஷ்மமான அணுபரிமாணமுள்ள ஜீவனுக்கும் காரணமாகிருன். ஆகவே ஆகாசம் நித்யம், ஆத்மாவும் நித்யம் என்று சொல் லப்படுகிறது. இந்த பாதத்தில் சமாதானம் சொல்லப்படுவ தால் பகவான் எப்படி காரணமாகிருன் என்று காட்டப்படு கிறது. அசேதனம் விகாரஸ்பதம் வடிவத்திலே மாறுதல் யேற்படுகிறது. ஜீவன் உண்டாகிறதென்ருல், அதற்கு வடிவத்தில் மாறுதல் இல்லாமையால் ஞானத்தில் ஸங்கோச விகாஸம் யேற்படுகிறது. ஆகவே அசேதனத்திற்கு ஸ்வ ரூப அந்யதாபவம் என்றும் ஜீவன் வெவ்வேறு தேகங்களை யடைவதால் அதன் ஸ்வரூபாவமான ஞானத்தில் மாறுதலை யடைகிறது. ஆகவே ஆகாசம் நித்யம் (சரீர ஆத்மபாவத் தால்) என்றும்; ஜீவன்களுக்கு தேக வித்யாஸங்களால் யேற்படும் ஞானமாறுதல்களால் ஜீவன்களுக்கு காரணமாக விருப்பவன் பரமாத்மா என்கிற குணம் பேசப்படுகிறது.

## 8-ம் பாதம்

இந்திரயங்களுக்கும் பகவான் காரணம் என்று சொல் லப்படுகிறது. இந்திரியங்கள் பிரளயத்திலேயேயிருந்தன. ரிஷிகள் என்பது இந்திரியங்கள். இவை பதினொன்று என்றும் அணுபரிமாணம் உள்ளவை என்றும், "ரிஷிகள்" என்கிற பஹுவசனத்தாலும் பரமாத்மாவே சொல்லப்படு கிருன் என்று ஸ்தாபித்து ஸூக்ஷ்மமான இந்திரியங்களுக்கும் பரமாத்மாவே காரணமென்று அர்த்தம் என்று சொல்வ தால் பரமாத்மாவே இந்திரயங்களுக்கும் காரணம்.

## 9-ம் பாதம்

எப்பொழுதும் ஒரே தன்மை உடையதாயிருந்து ஸ்வர்க்கம் நரகம் இவற்றுக்குப் போய்க்கொண்டிருக்கிற ஜீவனையும் (ஸகல ஜீவர்களையும்) தழுவித்தழுவிவருகிற

ஸம்சாரத்தை நடத்துவதற்கு வேண்டிய ஸங்கல்பத்தை உடையவன் என்னும் பொருள் இதில் காணப்படுகிறது. பிரளய கால ஸமுத்திரம் போல் பொங்கிவருகிறது-ஸம்சாரத்தில் ஜீவர்களுக்கு அவரவர்களுடைய பலவகைப்பட்ட கர்மாக்களாலே அவரவர்கள் ஆசைபடுகிற விஷயங்களில் எல்லோருக்கும் ஸமராயிருந்து வைஷம்யம் நைர்கிருண்ய மில்லாமல், அவரவர்கள் செய்த கர்மாக்களின்படி ஆசைக்கு அனுகுணமாக சம்சாரத்தை நடத்துகிறார்கள். இதனால் ஜீவர்கள் விழிப்பு, ஸ்வபனம, தூக்கம் முதலிய எல்லா சமயங்களிலும் நிர்வாஹகாரராயிருந்து ஸம்சாரத்தைநடத்திவைத்தல்என்கிறகுணம் இதில் பரமாத்மாவுக்குச் சொல்லப்படுகிறது.

## 10-ம் பாதம்

அசேதனம் சேதனம் இரண்டிலும் கலந்து அந்தர்யாமியாய் இருந்தாலும் அவற்றின் தோஷங்கள் பகவானிடம் சேரா. சரீரத்தின் தோஷங்கள் ஆத்மாவைச் சேராது போல அதேபடி சகல கல்யாண குணங்களுக்கு நிதி, தன்னிலும் மேற்பட்ட ஒருவனுமில்லை, சகல பலப்ரதன் என்கிற குணங்களை இதில் காணலாம்.

## 11-ம் பாதம்

பலவித உபாஸனைகளுக்கு இலக்கானவன் என்கிற குணம் பேசப்படுகிறது. வித்யைகள் 32 என்றும்—(அதாவது ஸத், தஹர, சாண்டில்ய பூமவித்யை, உபகோஸல, போன்றவை) பரமாத்மாவை பலவிதமான 32 விதங்களாகத் தியானம் செய்யப்படுகிறது. ஒவ்வொரு வித்யையிலும் தியானம் பண்ணப்படும் குணங்கள் வேறு ஆயினும் வித்யைகள் எல்லாவற்றிலும் தியானம் பண்ணப்படுகின்ற குணங்களும் வெவ்வேறானவை. இப்படிப்பட்ட வித்யைகள் எல்லாவற்றாலும் தியானம் செய்ய வேண்டியது ஸ்ரீமந்நாராயணன் தான். இந்த விஷயம் லிங்க பூயஸ்த்வ அதிகரணத்தில் சொல்லப்படுகிறது. ஸ்ரீமந்நாராயணன் எல்லா வித்யை

களிலும் சொல்லப்பட்டவன். எல்லாக் குணங்களுடன் கூடியவன் பஹுபஜனபதம் என்றால் எல்லா விதமானபக்திக்கும் இலக்கானவன்.

## 12-ம் பாதம்

தியானம் செய்பவர்கள் அவரவர்களுக்குரிய வர்ணாஸ்ரம தர்மங்களை உடையவர்கள். பகவான் ஆஸ்ரம தர்ம அனுஷ்டானத்தினால் சந்தோஷப்படுகிறவன் என்று சொல்லப்படுகிறது. பக்தி பிரபத்திக்கு ஆஸ்ரம தர்மங்கள் அங்கங்கள் ஸாத்விக தியாகத்தோடு ஆஸ்ரம தர்மங்களுக்குரிய நித்ய நைமித்திக காம்ய கர்மாக்களைச் செய்வதால் மனம் சுத்தமடைந்து இதனால் ஸந்துஷ்டனான பகவான் பக்தி யோகத்தைத் தலைக்கட்டி வைக்கிறான், விதுரன், பத்னியில்லாதவன் அநாஸ்ரமியாக விருந்தாலும், அவனுக்குள்ள ஜபம் உபவாஸம்தானம்—தேவதாராதானம் இவைகள் வித்யைக்கு அங்கமாகும். சந்யாஸி ஆஸ்ரமத்தில் உள்ளவர்களுக்கும் அக்னி காரியமில்லாவிடினும், அவருக்குரிய தர்மங்களால் ப்ரிஸன்னனான பகவான் பக்தியை நடத்தி வைக்கிறான். ஆகவே இதில் வர்ணாஸ்ரம தர்மங்களால் சந்தோஷமடைபவன் பகவான் என்கிற குணம் சொல்லப்படுகிறது.

## 13-ம் பாதம்

பகவான் ஆஸ்ரிதர்களின் புண்ய பாபகர்மாக்களையும் ஒழிக்கவல்ல, பாபங்கள் - கர்மங்கள் நசிப்பதால் பக்தி யோகம் யேற்படுகிறது. தேசகாலம் ஸ்வபாவத்தால் யேற்படும் பாபங்கள் நம்மிடம் ஒட்டாமல செய்கிறான். இதனால் ஸர்வ பாபங்களையும் விடுவிக்கிறான் என்ற குணம் பேசப்படுகிறது.

## 14-ம் பாதம்

மோக்ஷமார்க்கத்திற்கு தலைவாசலான ப்ரும்ம நாடியின் வழியாக ஜீவனை நுழையச் செய்கிறான், என்கிற குணம்

பேசப்படுகிறது. பக்தி பிரபத்தி செய்கிறவனுக்கு எந்த நாடியில் புகுவது என்பது தெரியாது. எம்பெருமான் அந்தர் யாமியாக விருந்து பிருஹ்மநாடி வழியாக ஜீவனுக்கு வழி காட்டி அனுப்புகிருன். (101 வது நாடி) இதை அர்ச்சராதி மார்க்கம் என்றும் பிரும்ம நாடி யென்றும் இதன் வாசலை ஒளியாகக் காட்டி பகவான்பக்தி பிரபத்தி யோகநிஷ்டனைப் நுழையச் செய்கிருன். அதில் நுழைந்து விட்டால், பின்பு ஒரே பகலாகயிருக்கும். இதனுல் பகவானின் ஜீவனை நடை கொள்ளச் செய்கிருன் என்னும் குணம் சொல்லப்படுகிறது.

## 15-ம் பாதம்

அர்ச்சராதி மார்க்கத்தில் வரும் வழி நடத்துகிறவர்களை பகவான் சங்கல்பிக்கிருன். அவர்கள் அக்னி, பகல், ஒளி, ந ள் உத்தராயணம் வர்ஷம் காற்று சூரியன் சந்திரன் வைத் யுதன், வருணன் இந்திரன் பிரஜாபதி என்னப்படுபவர்கள் அவர்களுக்குத் தலைவனுகவும் தானும் பிரதானனுயிருந்து வழி நடத்துகிற குணம் சொல்லப்படுகிறது பிரகிருதியை யும், விரஜா நதியையும் தாண்டவைத்து அவனைத் தன்னை அனுபவிக்கச் செய்கிருன்.

## 16-ம் பாதம்

பகவானை உபாஸிப்பதால் நிச்சயமாய்ப் பலன் கொடுப் பான். தன்னை அடைந்து அனுபவிக்கிற விடத்தில் பரம போக்யங்களாகையாலே என்றும் விடமுடியாத திருவடி களை உடையவன் என்ற குணம் பேசப்பட்டது. உபய விபூதி நாதன் ஸர்வாத்மா, அவனுடைய பரமபதம் அதில் சேர்ந்த ஜீவனை தன்னை எக்காலத்திலும் விட்டுப் பிரியாத படி சேர்த்து அனுபவிக்கச் செய்கிருன். பரமாத்மா மோக்ஷ ஆனந்த சுகத்தைத் தருபவன் என்கிற குணம் பேசப்படு கிறது.

**விசிஷ்டாத்வைத ஸாரம்:**

பிரபஞ்சமும், பிரும்மம் என்று சொல்லப்படுகிற பரமாத் மாவும் ஒன்று தான் என்று வேதம் சொல்கிறது. அதன்

பொருள், காரணமாவது உருவத்தாலும் பெயராலும் பிரித்துச் சொல்ல முடியாத சூக்ஷ்மமான அறிவுள்ள வஸ்து (சேதனம்) அறிவில்லாததை (அசேதனம்) இவைகளைச் சரீர மாகக் கொண்ட பிரும்மம்.

**காரியமாவது** உருவத்தாலும் பெயராலும் சொல்லும் படி யோக்யதையான ஸ்தூலமான அறிவுள்ள வஸ்து (சேதனன்) அறிவில்லாத வஸ்து இவைகளைச் சரீரமாகக் கொண்ட பிரும்மம், சித் அசித் விசிஷ்ட பிரும்மம் மூன்று தத்துவங்களையும் சேர்த்துப் பார்த்தால் ஒன்றே; ஆனால் ஈஸ்வர லக்ஷணம் வேறு, ஜீவலக்ஷணம் வேறு, அசேதன லக்ஷணம் வேறு, சூக்ஷ்மஸ்திதி ஸ்தூல ஸ்திதிகளை அடை கின்றன. சித் அசேதனம். காரணம் என்கிற சூக்ஷ்ம அவஸ் தையில் இவைகளுடன் பகவான் கூடியிருக்கிறான். காரிய தசையாகிற ஸ்ருஷ்டிக்குப் பின்பு ஸ்தூல சித் அசித் விசிஷ்ட பிரும்மமாக விளங்குகிறான். பகவானே பிரபஞ் சத்தை உண்டு பண்ண நினைத்து, "நான் அநேகப் பொருள் களாக ஆகப் போகிறேன்" என்று சங்கல்பிக்கிறான். ஸ்தூல மான அறிவுள்ள பொருள் ஸ்தூலமான அசேதனம் கூடிய தால் பிருஹ்மமும் பிரபஞ்சமும் ஒன்றென்று சொல்லப்படு கிறது. பகவான் விபு (எங்கும் வியாபித்திருப்பவன்) ஸர்வ சக்தன் ஸர்வக்ஞன் உலகைப் படைத்து காத்து அழிப்பவன்.

ஜீவன் அற்பசக்தி—அல்பக்ஞன் - அணுபரிமாணமுள்ள வன். அசேதனம், அறிவில்லாதது. மாறுதலுக்குட்பட்டது அநித்யம். ஆகவே மூன்றும் வெவ்வேறான தத்வங்கள். ஆனால் அத்வைத சுருதிக்கும் த்வைத சுருதிக்கும் முரண் பாடில்லாமல் பொருள் கூறுகிறோம்.

அசேதனம் - மூவகை - பிரகிருதி, காலம் சுத்தஸத்வம். காலம் க்ஷணம், நாழிகை முஹூர்த்தம், பகல் இரவு பக்ஷம் மாதம் ஸம்வத்ஸரம் முதலிய பிரிவுகளை உடையது. சுத்த ஸத்வம் பரமபதலோகம்; ரஜோதமோகுணம் கலக்காத சுத்த ஸத்வதிரவியம் இது. பரமபதலோகமும் அங்குள்ள வாபீ கூப தடாக மண்டபகோபுராதி ரூபமாயும் நித்ய முக்தர்

களுடைய சரீரமாயிருக்கும். காலம் பரமபதத்தில் ஆட்சி செய்யாது. பிரகிருதி இருபத்து நான்குவகை, மூலபிரகிருதி, மஹான்; அஹங்காரம் (ஸாத்விகம் ராஜஸம், தாமஸம் ஆக மூவகை) ஞானேந்திரியம் ஐந்து, மனம் பஞ்சமஹா பூதங்கள் ஐந்து சூக்ஷ்மங்கள் ஆக 24. இவைகளால் ஆக்கபட்டது பிரும்மாண்டமும் அதில் உள்ள பொருள்களும்.

ஜீவனில் மூவகை நித்யன், முக்தன், ஸம்சாரி. ஸம்சாரி ஜீவன் மோக்ஷமடைய ஆசை கொண்டால் நல்ல ஆசார்யனை அடைந்து மூன்று மந்திரங்களைக் கற்று, அர்த்தபஞ்சகத்தைத் தெரிந்து கொண்டு உலகனைத்தும் நாராயணனுடைய உடம்பு என்று உணர்ந்து இவைகளில் எந்த உபாயத்தைச் செய்வதற்குத் தனக்கு தகுதி உண்டு என்று அறிய வேண்டும்.

பகவத் தாஸனுகவும் உபாயத்தைச் செய்து முடித்தவனும், மோக்ஷத்தையடைய ஆசையுள்ளவனும், தன் நிஷ்டைக்கு அனுகுணமாக வாழ்க்கையை நடந்து கொண்டு நித்ய நைமித்திக கர்மாக்களைச் செய்து கொண்டு பகவத் ப்ரீதிக்காகவும், பாகவத அபசாரம் வராதபடி காலத்தைக் கழிக்க வேண்டும்.

இப்படிச் செய்வதால் பகவான் நமக்கு ஸங்கல்பித்து வைத்த ஒரு காரணத்தால் இந்த சரீரத்திலிருந்தும் பிரித்து உயர்ந்த அர்ச்சிராதி மார்க்கத்தின் வழியாக அனுப்பி தன் தாளின் கீழ் வாழ்ச்சியை அளிக்கிறான். பிறகு காலதத்வமுள்ளளவும், ஒரே இன்பவெள்ளமே, ஒரே பகலே, ஒரே உணர்வேதான்.



## முக்கிய வேதாந்த பதங்களின் அர்த்தம்

அவ்யக்தி—கண்ணுக்குப் புலப்படாத வஸ்து பிறகு புலப்பட்டு அது பிரகாசமடைகிறது. Manifestation to make a thing visible which was not visible before

அசித்சமஷ்டி—மூலபிரகிருதி in the subtlest (சூக்ஷ்மமான) நிலை, இதற்கு தமஸ் என்றும் பெயர்; நாமரூப வ்யாகரணமின்றி இருப்பது.

அதிஷ்டானம்—தவறாக பார்ப்பதற்கு ஒரு Base (ஆஸ்ரயமான இடம்) வஸ்து இன்னொரு வஸ்துவாக முத்துச் சிப்பி, வெள்ளியாகத் தோன்றுவதற்குக் காரணமான இடம்.

அத்யாஸம்—ஒரு வஸ்துவை இன்னொரு வஸ்துவாகப் பார்த்தல் - ஆரோபித்தல் சரீர தர்மங்களை ஆத்மாவில் ஆரோபித்தல்; கயிற்றை பாம்பாகப் பார்த்தல்.

அதிருஷ்டம் (அபூர்வம்)—ஒரு நற்செய்கையினாலோ கெட்ட செய்கையினாலோ ஒருவித சாமர்த்தியம் உண்டாக்கப்பட்டு அதற்குப் பலனாக ஒரு சமயத்தில் அந்த மனிதனுக்கு உபயோகப்படுகிறது.

அஹம்பாவம்—மஹத்திலிருந்து உண்டாக்கப்படும் பிரகிருதியின் அம்சம்; இது பஞ்சபூதங்களுக்குக் காரணமாகிறது ஸ்ருஷ்டிகிரமப்படி. அஹங்காரம் — மனித உடலில் இருக்கும் தத்வம் தன்னை சரீரத்திற்குப் பதிலாக அறியும்படி திகைக்கிறது.

**அம்சம்**—ஜீவன் பிரும்மத்தின் அம்சம் - அந்த அம்சம் ஈஸ்வரன், ஜீவன், பிரகிருதி மூன்றும் சேர்ந்த கூட்டுப் பொருளாக விருக்கிறது.

**அநுபூதி**—பிரத்யக்ஷ ஞானம் சங்கரரின்படி எல்லாப் பிரத்யக்ஷக்காட்சிகளிலும் பார்த்தல் (இந்திரியங்களால் அறிதல்) அது கேவலம் அனுபூதி (அனுபவ) ஞானம். சித்ஸ்வரூபம். (ஞான ஸ்வரூபமே).

**அநிர்வசனீயம்**— ஸத் என்றோ அஸத் என்றோ (வஸ்து இருக்கிறது. வஸ்து இல்லை என்றோ) சொல்லப்பட முடியாத படியிருப்பது—ஒரே அசாதாரண வஸ்து.



ஸ்ரீ:



ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மிந்ருஸிம்ஹ பரப்ருஹ்மணே நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்த தேசிக
யதீந்திர மஹாதேசிகாய நம:

## ஸமர்ப்பணம்

### பதிப்பாளரின் பணிவுரை

பிருஹ்ம வித்யா என்கிற ஆத்மவித்யையை பூஜ்ய ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் பாஷ்ய சுருக்கத்துடனும் (முதற் பாகம்) ஸ்ரீபகவத் ராமாநுஜரின் ஸ்ரீபாஷ்யத்தின் விரிவுரை யுடனும் 2ம் பாகமாக இரண்டு பாகங்களாக முதலில் ஸமர்ப் பணம் செய்துள்ளேன். இப்பொது இந்த புத்தகம், பிரும்ம வித்யா என்கிற தலைப்புடன் வரும் புத்தகங்களின் மூன்றும் பாகம் ஆகும். இதில் ஸ்ரீபாஷ்யத்தின் முதல் அத்யாயத் தின் முதற்பாதம் ஐந்தாவது அதிகரணமாகிற ஈக்ஷத்யதி கரணத்திலிருந்து நான்காம் பாதம் முடிய - அதாவது ஸர்வ வ்யாக்யாநாதி கரணம் முடிய - 31 அதிகரணங்களின் - 134 சூத்ரங்களின் விஷயமாகும். ஏற்கனவே வெளியிடப்பட்ட பிருஹ்மவித்யா 2-ம் பாதத்தில் ஸ்ரீபகவத் ராமாநுஜரின் ஸ்ரீபாஷ்யத்தின் முதற் அத்யாயம் முதல் பாதம் - நான்கு சூத்திரங்கள் விஷயமாக புத்தகம் வெளிவந்து விட்டது. அதை ஸ்ரீரங்கம் கோவில், ஸம்ப்ரோக்ஷண மலராக வெளி யிட்டேன். இப்புத்தகம் என் அருமைக் குழந்தைகள் ஸ்ரீமதி சுஜாதா ஸ்ரீவத்ஸா ஸ்ரீதரன் ஸ்ரீரமா இவர்களின் அன்புக்காக வெளியிடப்படுகிறது. சாரீரக சாஸ்திரமாகிற ஸ்ரீபகவத் ராமானுஜரின் ஸ்ரீபாஷ்யம் நாலு அத்யாயங்கள் - 156 அதி கரணங்கள் - 545 சூத்திரங்களின் எண்ணிக்கை கொண்டது. ஆகவே இதற்கு அடுத்தாற் போல வரும் பாகங்களில் இரண்டாம் அத்யாயம் 3-ம் அத்யாயம் 4-ம் அத்யாயம் விஷயமாக வெளிவரும்.

பிருஹ்மவித்யையில் ஸ்ரீபகவத்ராமானுஜ பாஷ்யத்தில் ஸகல காரணவாக்யங்களும் பிருஹ்மத்திடமே அதாவது மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணனிடமே அந்வயித்து (பொருந்தி) நிற்கின்றன. இதை விபரமாக சுருத பிரகாசிகை ஆசார்யரும் மற்றவர்களும் காட்டியபடி கடைசி அதிகரணமாகிற ஸர்வவ்யாக்யாநாதி கரணத்தில் காட்டியுள்ளேன்.

மேலும் இந்த முதல் அத்யாயம் நான்கு பாதங்களிலும் முறையே சேதனு சேதனங்களின் அடையாளங்கள் மிகத் தெளிவில்லாமலிருக்கும் வாக்கியங்களும், அவ்வடையாளங்கள் தெளிவில்லாமலிருங்கும் வாக்கியங்களும், அவ்வடையாளங்கள் தெளிவாயிருக்கும் வாக்கியங்களும், அவ்வடையாளங்கள் மிகத் தெளிவாயிருக்கும் வாக்கியங்களும் ஆராயப்படுகின்றன. ஸ்ரீபகவத் ராமானுஜரால் ஜிக்ஞாஸாதிகரணமாகிற முதற் அதிகரணத்தில் ஸ்தாபிக்கப்பட்ட தத்வதிரயம் (சேதன அசேதன விசிஷ்ட பிருஹ்மம் ஸ்ரீமந் நாராயணனே) மீண்டும் விளக்கப்படுகிறது; ஸ்ரீமந் நாராயணனுடைய மகிமைகளும் ஐஸ்வர்ய விபூதிகளும் கல்யாண குணங்களும் எல்லாம் பரக்கப் பேசப்படுகின்றன; அதனுல் ஜகத் காரணத்வம் முமுக்ஷு பாஸ்யத்வம் முதலான தனிப்பட்ட பெருமைகளைக் கொண்டு ஸ்ரீமந்நாராயணனே பரதேவதை என்று அந்த தேவதா ஸார்வபௌமனையே கூறுகின்றன எனக்காட்டப்பட்டது.

இந்த புத்தகத்தின் உபோத்காதத்தில் ஸ்ரீபாஷ்ய மத பிரவர்த்தகர்களைப் பற்றிச் சொல்லும்போது அஹோபில மடத்து அழகிய சிங்கர்களின் ஸ்ரீபாஷ்யத்தைப்பற்றிய அருளிச் செயல்களும்; ஸ்ரீரங்கம் பெரியாஸ்ரமம் ஸ்ரீமதாண்டவனின் ஆஸ்ரம (1971) வெளியீடு ஸ்ரீபாஷ்யஸாரம் குண பரமாக ஸ்ரீபாஷ்யம் எனக்காட்டிப் பெற்ற விஷயமும் காட்டப்பட்டிருக்கிறது; மேலும், தற்போது ஸ்ரீஅஹோபில மடம் 44வது பட்டம் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்த தேசிக யதீந்திரமஹா தேசிகன் அவர்களால் அனுக்ரஹிக்கப்பட்ட

சாரீரகாதி கரண கிரம போதிநியும், அதிகரண ஸூத்ர சங்க்யா விஷயபோதிநியும் தொடர்ந்து பிருஹ்ம சூத்ரா ரார்த்த பத்யமாலிகாவின் (ஏற்கனவே உம் பாகத்தில் கொடுக்கப்பட்ட அந்த விஷயத்தின்) தொடர்ச்சியும் சாரீரக சாஸ்திரத்தின் முதல் அத்யாயம் முடிய எல்லாம் சேர்க்கப் பட்டுள்ளன. இந்த விஷயங்களை எனக்கு உதவிய ஙிருஸிம்ஹ பிரியா ஸம்பாதகர்களுக்கும், 44-ம் பட்டத்து அழகிய சிங்க ருக்கும் ஸ்ரீரங்கம் பெரியாஸ்ரமம் ஸ்ரீமதாண்டவன் ஆஸ்ரமத் திற்கும், இவ்விஷயங்களுக்காக நான் மிக்க கடமைபட்ட வனுக நன்றி பலதடவைகள் செலுத்துகிறேன். இத்துடன் முதற்அத்தியாயம் சம்பந்தப்பட்ட வரை 24 உபநிஷத் வித்யைகள் விஷயமாவதால் அந்தவித்யைகளின் அதி கரணங்களையும் உபநிஷத் விஷயமாகவும் காட்டியுள்ளேன்; சிலவேதாந்த பதங்களுக்கும் அர்த்தமும் கொடுத்திருக் கிறேன்.

இப்புத்தகம் தயாரிப்பதற்கு நான் பல பேர்களுக்குக் கடமைப்பட்டுள்ளேன். முக்யமாக ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான் வித்வன்மணி ஸதர்த்த பிரகாசகராஜ: ந்யாய வேதாந்த வித்வான் ஸ்ரீ உப. வே. வில்லிவலம் கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமிக்கும்; (இவரே அடியேனை பூர்ணமாக ஸ்ரீபாஷ்ய அதிகாரியாக ஆக்கினுர்)தமது சிரமத் தைப் பாராமல் அடியேனுக்கு நன்கு சிக்ஷித்தார். அவருக்கு பலதடவைகள் க்ருதக்ஞதை சொன்முலும் தகும். அடுத்த படி கோஷ்டபுரம் ஸ்ரீ உ. வே. ராமனுஜாச்சாரியார் ஸ்வாமியாகும் (இவருடைய திருத்தகப்பஞர் கோஷ்டபுரம் ஸ்ரீ உ. வே. ஸௌம்ய நாரயணுச்சாரியார் ஸ்வாமி ஆவார். ஆத்மவித்யா பூஷணம் ஸ்ரீ. V. S. V குருஸ்வாமி சாஸ்திரி அவர்களுக்கும் (அத்வைத சம்பிரதாய விஷயங் களுக்கும்) கடமைபட்டவனுக இவர்களை பல தடவைகள் சுக்ருத நமஸ்காரங்கள் செய்து விண்ணப்பம் செய்கிறேன். இன்னும் ஸ்ரீபாஷ்ய கருத்துக்களடங்கிய உத்தமூர் ஸ்வாமி யின் ஸ்ரீபாஷ்ய புத்தகங்களும், ஸ்ரீகோழியாலம் ஸ்வாமி அவர்களின் திருநக்ஷத்திரம் வருகிறது. ஸ்வாமிகளின் ஸ்ரீ சாரீரக காரிகாவளி என்னும் பெயருடன் வெளியிடப்பட்ட

கிரந்தமும் இன்னும் பல பெரியோர்களுடைய கிரந்தங்களும் அடியேனுக்கு மிக்க உதவி செய்தன. இவர்கள் அனைவருக்கும் நான் கடமைப்பட்டவனாக விருக்கிறேன். இந்நூல்களின் உபகாரத்வத்தை மிகவும் உயர்த்தி சொல்கிறேன்.

இப்புத்தகத்தை அச்சிட பல பேர்கள் பண உதவி செய்துள்ளனர். அவர்களின் பெயர்களை இப்புத்தகத்தின் முன்பாகங்களிலே கொடுத்திருக்கிறேன். அவைகளைப் பார்க்கவும்.

பிருஹ்ம வித்யா 2ம்பாகம் ஸ்ரீபகவத்ராமானுஜரின் சாரீரக சாஸ்திர உபோத்காதம், ஸ்ரீ ஸ்ருதபிரகாசிகாபட்டர் காட்டிய வழி சூத்ரசதுஷ்டயம் என்கிற புத்தகத்தை ஸ்ரீ ஆண்டாள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாவை வ்யாக்யான கிரந்தத்துடன் அடியேனது ஆசார்யரான ஸ்ரீ அழகிய சிங்கருக்கும் அப்போது நடந்த ஸ்ரீரங்க கோவில் தெற்கு கோபுரம் ஸம்ப்ரோக்ஷண சமயத்தில் ஸமர்ப்பணம் செய்தேன். அதே சமயம் ஸ்ரீரங்கம் பெரியாஸ்ரமம் ஸ்ரீமதாண்டவனின் சதாபிஷேக உத்ஸவத்தின் சமயமாக விருந்தது. அந்த சமயம் அந்த புத்தகத்தை அவருக்கும் ஸமர்ப்பணம் செய்தேன். இப்போதும் இந்தபுத்தகத்தை என் ஆசார்யரான ஸ்ரீ அழகிய சிங்கருக்கு ஸமர்ப்பணம் செய்கிறேன். எல்லா விதத்திலும் தகுதியில்லாத அடியேனையும் கிருதார்த்தமாக்க வேண்டும். இந்த கிரந்தத்தைமன முவந்து ஆமோதித்து அங்கீகரிக்க வேண்டும் என்று பலதடவைகள் சுக்ருத நமஸ்காரங்களுடன் பிரார்த்திக்கிறேன்.

இக்காரியத்தை செய்து முடிக்கச் செய்த எம்பெருமானை அலர்மேல் மங்கை ஸமேத ஸ்ரீநிவாஸனை நான் அடிக்கடி அடிக்கடி சுக்ருத பிரணாமம் செய்கிறேன்.

வாசகதோஷங்கள் க்ஷந்தவ்ய:

உதாரணமாக "பிருஹ்ம" சப்தத்தினால் சொல்லப்படும் பிருஹ்மத்தை - பிரும்ம என்று பலவிடங்களில் போடப்

பட்டிருக்கிறது. "பிரும்ம" சப்தம் சதுராநனுகிற பிரும் மாவையும் குறிக்கும்.

ஆனால் "பிருஹ்" என்கிற தாதுவிலிருந்து வரும் "பிருஹ்மம்" என்கிற சப்தம் மஹத்தானது எனப்பொருள் கொண்டது. (அதுவும் பெரியது. தன்னையடைந்தவர் களையும் பெரியதாக ஆக்குவது என்கிற அர்த்தமாகும்). "பகவான்" என்கிற சப்தத்தில் காட்டப்படும் ஷாட்குண்ய பரிபூர்ணன் ஸ்ரீமந்நாராயணனைப் போலவே என இங்கேயும் அர்த்தம் கொள்ளவேண்டியது. இம்மாதிரி எழுந்துதோஷங் கள் தமிழ் பாஷையினுலும் சரியான அச்சகம் போன்ற உபாதிகளால் யேற்படுவதாகும். அம்மாதிரி வாசக தோஷங் களை பிழைகளை மன்னிக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.

தாஸன்

**S. ஜெகந்நாராயணன்**
(Retd) Dy. Secretary
Ministry of Finance
Govt of India-New Delhi

**மதராஸ் - 28**
**10 திருவீதி அம்மன் தெரு**
**ராமகிருஷ்ண நகர்**
**விபவ வருஷம் சித்திரை மீ**
**முதற்தேதி 13-4-1988**
**சதயம் நக்ஷத்திரம் - தமிழ் வருஷப் பிறப்பு நாள்**



## முதற் அத்யாயத்தின் வித்யைகள் விபரம்:—

உபநிஷத்துக்களில் 32 வித்யைகள் பேசப்படுகின்றன. இந்த புத்தகத்தில் கீழ்க்கண்ட வித்யைகள் கீழ்கண்ட அதி கரணங்களில் விஷயமாக விருக்கின்றன.

1. ஸத்வித்யை (ஈக்ஷத்யதிகரணம்)

2. ஆனந்தமயவித்யை (ஆனந்தமயாதிகரணம்)

3. உத்கீத்ஹிரண்மய புருஷத்ருஷ்டி: (அந்தராதிகரணம்)

4. உத்கீதாகாஸத்ருஷ்டி:— (ஆகாசாதிகரணம்)

5. பிரஸ்தாவபிராணதிருஷ்டி: (பிராணாதிகரணம்)

6. & 7. காயத்ரி வித்யா—கௌக்ஷேய ஜ்யோதிர் வித்யா ச (ஜ்யோதிரதிகரணம்)

8. பிரதர்தனவித்யை—(இந்திரபிராணாதிகரணம்)

9. சாண்டில்ய வித்யா - (ஸர்வத்ரபிரஸித்தாதிகரணம்)

10. நாசிகேத வித்யா - அந்தராதிகரணம்

11. & 12. உபகோஸல வித்யா - அக்நித்ரய வித்யா ச அந்தராதிகரணம்

13. அந்தர்யாமி வித்யா (பிராஹ்மணம்)
அந்தர்யாம்யதிகரணம்
கார்க்யக்ஷர வித்யா-அக்ஷராதிகரணம்

14. அக்ஷரவித்யை-அத்ருஸ்யத்வாதி குணகாதிகரணம்

15. வைஸ்வாநர வித்யை-வைஸ்வாநராதிகரணம்

16. பூம வித்யா - பூமாதிகரணம்

17. த்ரிமாத்ர பிரணவ வித்யா - ஈக்ஷதி கர்மாதி கரணம்

18. தஹரவித்யா - தஹராதிகரணம்

19. மதுவித்யா—மத்வதிகரணம்

20. & 21. ஸம்வர்கவித்யை — ஸத்யகாமவித்யா ச— அபசூத்ராதிகரணம்

22. ஜ்யோதிஷாம் ஜ்யோதிர் வித்யா - ஸங்க்யோப ஸங்கிரஹாதி கரணம்.

23. பாலாகிவித்யை - ஜகத்வாசித்வாதி கரணம்

24. மைத்ரேயீ வித்யா - வாக்யாந்வயாதிகரணம்

—0—

முதற் அத்யாயத்தில் அதிகரண—
சூத்ரஸங்க்யா (முதற் அத்யாயம்)

அத்.

பாதம்

1-1 அயோக வ்யவச்சேத பாதம் — சூத். 32 அதி. 11
அஸ்பஷ்டதர ஜீவாதிலிங்க
வாக்யவிசாரம்

1-2 அன்யயோக வ்யவச்சேத பாதம்
அஸ்பஷ்ட ஜீவாதிலிங்க
வாக்யவிசாரம் — சூத். 33 அதி. 6

1-3 அன்யயோக வ்யவச்சேத பாதம்
ஸ்பஷ்டஜீவாதிலிங்க வாக்யவிசாரம் சூத். 44 அதி. 10

1-4 அன்யயோக வ்யவச்சேத பாதம்
ஸ்பஷ்டதர ஜீவாதிலிங்க
வாக்யவிசாரம் — சூத். 29 அதி. 8

மொத்தம் 138 — 35

ஆனந்த ரூபத்திஞல்- அதுதன்னைவிட வேருனதாக வில்லாதபடி விவரிக்கப்படுகிறது- சிர: पक्ष:- पुच्छ இத்யாதிகளால் பக்ஷிரூபமாக கருடஞக வர்ணிக்கப்படுகிறது. ஆகவே பிருஹ்மமே ஆனந்த ஸ்வரூபமாக விருப்பதாலே- அதாவது ஆனந்தம்-சுகம்-பிரிய-மோத- பிரமோத (திருப்தி) ஆனந்த இவைகளை ஸ்வரூபமாக அவயவங்களாகக் கொண்டபடியால் (ஆஸ்ரயதயா) ஆனந்தமயன் அகண்டரூப ஆனந்தமயமாக விருக்கிருன்: ब्रह्मपुच्छं प्रतिष्ठा — ஆனந்தமயஞன பிருஹ்மம் புச்சமாயும் ஆதாரமாயும் (சுக ஆனந்தங்களுக்கு ஆதாரமாகவும்) இருப்பிடமாகவுமிருக்கிருன், ஆகவே ஆனந்தமயனைவிட அன்ய வேருன ஒன்றை (அல்லது எது ஆனந்தத்தை ஸ்வரூபமாக வுடையதோ அதைவிட) அன்ய வஸ்து பிருஹ்மமாக விருக்குமாஞல் - அப்போது இவ்விதம் சொல்லியிருக்க வேண்டும் - तस्माद्वा एतस्मादानन्दमयादन्योऽन्तर आत्मा ब्रह्म- என்று. இதைவிட வேருன அன்ய வஸ்து- (ஆனந்த ஸ்வரூபமாகவுள்ளதோ) அது அந்தராத்மா - அது பிருஹ்மம் என்று ஓதப்பட்டிருக்க வேண்டும் ஆஞல் இங்கு அவ்விதம் சொல்லவில்லை. अन्योऽन्तर आत्माऽऽऽनन्दमय: என்று கூறி முடிக்கிறது.

பிருஹ்ம பிரகரண ஆரம்பத்தில் அவ்விதம் சொல்வது சரியில்லை. என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்ருல் எவன் பிருஹ்மத்தை அறிகிருஞே அவன் பிருஹ்மபிராப்தியாகிற மேலான பதத்தை யடைகிருன் என்று சொல்லி பிரகரண முடிவில் सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म - என்று பிருஹ்ம லக்ஷணங்களைச் சொல்லி- எல்லா சேதன அசேதன வஸ்துக்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டி तदेव - அந்த லக்ஷணங்களையுடைய பிருஹ்மமே) तस्माद्वा एतस्मा - दात्मन:- "ஆத்மந்" என்கிற பதத்தாலே பிருஹ்மாத்மகமாக ஐக்யம் காட்டப்பட்டு; இதஞல் பிருஹ்மத்திற்கு யேற்பட்ட ஸர்வவஸ்துக்களுக்கும் உள் இருக்கும் ரஸம் - அந்தரத் வேத ஆத்மத்வம் உபதேசிக்கப்பட்டு; அன்னமயாதிகளில் அந்த அந்த இடங்களில் ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சொல்லி, அங்கே ஒவ்வொரு இடத்திலும் (அன்னமய உடலில் சூக்ஷ்மபிராணமய ஆத்மா; பிராணமய ஆத்மாவுக்குமேல் மஞேமயன் - விக்ஞான மயன் விக்ஞானமயத்திற்கும் மேல்பட

ஷூக்ஷ்மமாயுள்ள ஆத்மா ஆனந்தமயம்) - என்று ஆத்மசப்தத்தால் காட்டி - பிராணமயாதிகளை அதிக்ரமித்து கடைசியில் अन्योऽन्तर-ऽऽत्मा आनन्दमयः என்று ஆத்ம சப்தத்தால் விக்ஞானமயனிலிருந்து வேறுபட்ட உள்ளிருப்பவன்-अन्तरं आत्मा- ஆனந்தமயன் (ஆனந்த ஸ்வரூபம் உள்ளவன்) என்று முடிக்கிறது. ஆகவே ஆத்ம சப்தத்தால் பிரகரணமுடிவில் காட்டப்பட்ட பிருஹ்மமே ஆனந்தமயன் - என்று நிச்சயிக்கப்படுகிறது. (நாம் சொல்வது:_ எதுபோல வென்றால் " ஆத்மாவா இதமேக ஏவாக்ர ஆஸீத்; ஸ ஈக்ஷத...இத்யாதிகளைப்போல) ஒரே பிருஹ்மம் பிருஹ்மத்வ வேஷத்தாலே புச்சத்வம் ஆனந்தத்வ ரூபத்தாலே ஆத்மசப்திதம்.)

மேலும் இவ்விதம் சொல்லப்படலாம். ब्रह्म पुच्छं प्रतिष्ठा- என்று சொல்லி - பிருஹ்மம் புச்சமாகவும் ஆதாரமாகவு மிருக்கிறது- (தை. 2-2-5-1) असन्नेव स भवति, असद्ब्रह्मेति वेद चेत, अस्ति ब्रह्मेति चेद्वेद, सन्तमेनं ततो विदु - என்று இந்தபிரகரணத்திலே மேல் சொல்லிய சுருதி. காட்டுகிறது - எவன் பிருஹ்மத்தை இல்லையென்று சொல்கிறானோ - அவனும் இல்லையென்று ஆகிறான். எவன் பிருஹ்மத்தை அறிந்து - இருக்கிறதாக ஒப்புக்கொள்கிறானோ-அவனை இருப்பதாக வித்வான்கள் ஒப்புக்கொள்கிறார்கள். இதிலிருந்து பிரும்மத்தின் விஷயமாக ஞான அக்ஞானங்களினால் ஒருவனுடைய ஆத்ம ஸத்பாவமோ - அஸத்பாவமோ காட்டப்படுகிறது; இதே மாதிரி ஆனந்தமயனுடைய ஞான அக்ஞானங்களினாலே ஏற்படுவதில்லை (ஸத்பாவமோ அஸத்பாவமோ); மேலும் ஆனந்தமயன் விஷயத்தில் ஞான அக்ஞானங்கள்-இவைகளில் சங்கை (சந்தேகம்) கொள்வது சரியில்லை - ஏனெனில் ஆனந்தமயன் பிரியமோதாதி ரூபத்தினால் எல்லா உலகங்களிலும் அறியப்படுகிறான்-அதனால் அதன் ஸத் அஸத்பாவங்களில் சங்கை கொள்வது யுக்தமில்லை. ஆகவே இந்த சுலோகம் ஆனந்தமயனுக்கு ஒதப்படவில்லை. ஆகையால் ஆனந்தமயனைவிட அன்யன் பிருஹ்மமாகும். तस्मात् आनन्दमयादन्यात् ब्रह्म -

இப்படிச் சொல்வதும் சரியில்லை. इदं पुच्छं प्रतिष्ठा இங்கே புச்சத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது - ஆதாரமாயிருக்கிறது. (புச்சம்தர்மி பரமாகவிருக்கிறது. पृथिवी पुच्छं

ष्ठा – ப்ருதிவிவாலாகவும் ஆதாரமாகவும் இருக்கிறது. (தை - 2-1-2-1) अथर्वाङ्गिरसः पुच्छं प्रतिष्ठा - அதர்வா அங்கிரஸ்கள் (சுலோகங்கள்) புச்சமாகவும் ஆதாரமாகவுமிருக்கின்றன (தை 2. 1-3-1); महः पुच्छं प्रतिष्ठा - மஹஸ் (பிரகாசம்)வாலாகவும் ஆதாரமாகவுமிருக்கிறது. (தை 2. 2-4-1) என்று சொல்லி அந்த அந்த இடங்களில் இப்படி உதாரணங்கள் காட்டப்பட்டிருக்கின்றன-अन्नाद्वै प्रजाः प्रजायन्ते - அன்னத்திலிருந்து பிரஜைகள் உண்டாயினர்-இம்மாதிரி சுலோகங்களால்-எப்படி புச்சம்மாத்திரம் அவயவமாகச் சொல்ல வரவில்லை-தர்மிபரமாக-அந்த அங்கங்களை உடைய முழுதேகத்திற்கும் - அன்னமயாதிரஸங்களால் விளங்கும். (முழுதேகத்திற்கும்) அவயவியை காட்டுகிறது. அதுபோல இங்கேயும் ஆனந்த மயன் விஷயத்திலேயும் தர்மிபரமாக கொள்ளவேண்டும் - எவன் பிருஹ்மத்தை இல்லையென்கிறானோ - அவனும் இல்லையென்று ஆகிறான் - இந்த சுலோகத்தினால் இங்கேயும் அவ்யவி முழு ஆனந்த மயன் விஷயத்திலும் சம்பந்தப்படுகிறது. ஆனால் அதன் அங்கமான வ்யதிரிக்தமான வாலைச்சொல்லவில்லை - அந்தவால் (புச்சம்) (ஆதாரம்).

(இவ்விதம் சொல்வது சரியில்லை. எப்படி - இவ்விதம் ब्रह्म पुच्छं- प्रतिष्ठा (தை. 2-1-1) ; இது தான் புச்சம் (வால்-இது தான் ஆதாரம்- என்று சொல்லிய பிறகு பூமி (ப்ருத்வீ) புச்சமாகவும் ஆதாரமாகவுமிருக்கிறது. (இங்கு சுருதி சொல்கிறது. तस्यैष एव शारीरं आत्मा। यः पूर्वस्य। तस्माद्वा एतस्मात् विज्ञानमयात्। अन्योन्तर आत्माऽऽनन्दमयः। तेनैष पूर्णः। सवा एष पुरुषविध एव, तस्य पुरुष विधताम्। अन्वयं पुरुषविधः। तस्य प्रियमेव शिरः। मोदो दक्षिणः पक्षः। प्रमोद उत्तरपक्षः। आनन्द आत्मा ब्रह्म पुच्छं प्रतिष्ठा। — இங்கே ஆனந்த என்பதற்கு நாம் சொல்லும் அர்த்தம் ஹேய ப்ரத்யனீக கல்யாண குணங்களைக் கொண்டதால் மஹா ஆனந்த சுகவிசிஷ்ட ஸ்வஸ்வ ரூபபானுப்வம். (பிருஹ்மம் தன்னையே அனுபவிக்கிறது) ; புச்சத் வேறச ஆத்மத் வேறச ரூபம் என வாச்யம் ब्रह्म पुच्छं இங்கே பிருஹ்ம-उक्त सर्व सुखाधार भूतमानन्दस्वरूप परि- ஆனந்த பதம் தர்மிபரம் அதனுடைய நிரதிசய சுகரூபத்தினும்- அது அதிசய சுகங்களையும் அளிக்கிறது).

அதாவது அன்னமயாதிகளுக்கு தலை முதல் புச்சம் வரை(வால் வரை) அவயவ கற்பனை செய்து— உபதேசித்த பின்னர் பிரிய- மோத- ப்ரமோத- ஆனந்தாதிகளை தலை- இரண்டு பக்கத்து இறக்கை- நடு வுடலாக உபதேசித்து- (இங்கு கருடன் உருவகமாகக் காட்டப்படுகிறுன்) பிறகு புச்ச பதத்தால் ஆனந்த ரூபதர்மி - என்று காட்டப்படுகிறது - ஏனெனில் ப்ரதிஷ்டா என்கிற பதமிருக்கிறது. புச்சம் பிருஹ்மமாயினும் அபரிசின்ன ஆனந்தமே. ஸ்வரூபமாதலால் அதால்பிரஸித்தி யாகும். ஸமாபனம்—முக்யார்த்தமாக சொல்லவேண்டும் என் பதை ஞாபகப்படுத்துகிறது. ஆகவே இங்கு ஆனந்தமயனே பிரக்ரர்ந்தம் பிருஹ்மம் என்பதாகும். (அத்வைதி)

ஆனந்த மயனுக்கு ஆதாரமாக தம் (तम्) பிருஹ்மத்தைச் சொல்லவேண்டும். ஆனந்த மயனும் தலை முதல் புச்சம் வரை எல்லா அவயங்களையும் ஆனந்தபதம் ஸ்வரூபத்தை அனுபவிப்ப தால் யேற்படும் சுகம் பிருஹ்மபுச்சம் பிரதிஷ்டா என்றது முடிவி லுள்ள எல்லா ஆனந்தமய வாக்யத்தாலும் முன்னுள்ள பரியாயங் களில் அன்மையாதிகளைப் போல எனக் கருத்து.

ஸ்ரீபாஷ்யம் :—

பிருஹ்மம் ஆனந்தமயனிலிருந்து வேறுகவிருக்கிறபடியால்- வாலைச் சொல்லவில்லை - (இங்கு புச்சம் அவயவமாகச் சொல்லப் படவில்லை. பறவைக்கு இரக்கையன்றோ பிரதிஷ்டம் நிலைத்துநிற்ப தற்குக்காரணம்- ஆதாரமாகவிருக்கிறது என அர்த்தம். அதுபோல ஆனந்தமயனுக்கு பிருஹ்மம், புச்சம்போல, ஆதாரமாயிருக்கிறது எனக்கொள்ளவேண்டியது ஆகலாம்) ஆனந்தமயனே பிருஹ்மம் என்று கொள்ளப்படுமாகில் - பிரியமோதாதி ரூபத்தினுல் விவரிக் கப்படும் ஆனந்தமயன் விஷயத்தில் அபரிச்சின்ன ஆனந்தத்தின் ஸத்பாவம் அஸத்பாவம் ஆகியவற்றில் சங்கை யேற்படுவது யுத்தம்தான் - பிருஹ்மத்தையே புச்சம் (ஆதாரம்) என்று சொல்லி அந்த பிருஹமத்தின் ஆனந்தத்தை அபரிச்சின்னத்தினுல் (அள விடும்படி எல்லையில்லாத மகிமைகள் பெற்றது) - அறிய முடியாது என்பது பொருந்தும். ஆகவே ஆனந்தமயன் பிருஹ்மமாகவில்லை.

என்று சொல்லக்கூடுமானால், ஏனெனில் பிரஹ்மம் நிரவயவம், அதற்கு சிரம்முதலான அவயவங்கள் இல்லாதபடியாலே - அதனால் ஆனந்தமயன் வேறு என்றால் - அதற்கு பதிலாக நாம் சொல்வது- புச்சம் கூட பிருஹ்மமாக ஆகமாட்டாது - புச்சத்வ பிரதிஷ்டை அபாவாத் (நிரவயவ மாதலால் (ஆதாரம்) இல்லை என்பதாலும் - புச்சம்கூட பிருஹ்மமாக ஆவதில்லை.

**விளக்கம்:—**

இங்கே புச்சத்வம்-வால்-ஆதாரம்-என்கிற பதத்திற்கு என்ன அர்த்தமென்றால் அத்வைதி சொல்வது (அவித்யையினால்) கல்பித மானவஸ்துவுக்கு ஆதாரமாக விருக்கிறபடியால் - பிருஹ்மத்தின் அடையாள லக்ஷணமாகவிருக்கிறது-கல்பிதவஸ்துவுக்கு பிருஹ்மம் ஆஸ்ரயமளிப்பதால் - புச்சம் பிரதிஷ்டேதி - ரூபத்தால் மாத்திரம் சொல்லப்படுகிறது. அப்போது-நாம் சொல்வது சந்தோஷத்தைத் தலையாகக் கற்பிப்பதும்-மற்ற மோத ஆனந்தாதிகளை மற்ற அவயவங்களாக கற்பிப்பதும்-பிருஹ்மத்திற்கு சில அடையாள விசேஷங்களோடு காட்டுவதற்க்காகவும் (அதாவது உபாஸனத்திற்க்காகவும்-புத்திக்கு எளிதில் புலப்படுவதற்க்காகவும்) - அந்த பிருஹ்மம் ஆனந்தமயனாக விருப்பதால் - துக்கம் முதலியவைகளுக்கு வேறுபட்டிருப்பவனாக விருப்பதாலே, அதனாலே ஆனந்தமயம். அதனால் பிருஹ்மத்தையே சொல்லவேண்டும். ஆனந்தபதம் ஸ்வரூபத்தை அனுபவிப்பதால் யேற்படும் சுகம் பிருஹ்ம புச்சம் பிரதிஷ்ட என்றது முடிவிலுள்ள எல்லா ஆனந்தமய வாக்யத்தாலும் முன்னுள்ள பர்யாயங்களில் அன்னமயாதிகளைப் போல ஆனந்தமயனும் தலை முதல் புச்சம் வரை எல்லா அவயவங்களையும் அபேக்ஷித்து முக்யார்த்தமாக சொல்லப்பட வேண்டும் என்பதாகும்.

**ஸ்ரீ பாஷ்யம்:—**

(அத்வைதி) ஆகையால் என்ன ஸித்தித்தது-மேற் சொன்ன பிரகாரம் பிரும்மம், ஸத்யம் ஞானம் அனந்தம் பிருஹ்மம் என்கிற படியாலே-விகாராஸ் பதமான அசித் ஜடவஸ்துவிலும் வேறுபட்டவனாகவும்) - அவனைத்தவிர மறற எல்லாவஸ்துக்களிலும் வேறுபட்டவனாகவும், பரிச்சின்னவஸ்துக்களிலிருந்தும் வேறுபட்டவ

ளுகவும் - ஓதப்படுகிறது - ஆகையால் இந்த வாக்யம்- "ஆனந்த மயன்" - துக்கத்திலிருந்து வேறுபட்டவன் எனக் காட்டுகிறது. ஆகவே அகண்டைகரஸ ஆனந்த ரூபமானவன் ஆனந்தமயன்- மய - "பிராணமயம்" என்பதைப்போல ஸ்வார்த்தமாகவே விகாரார்த்தத்தில் சொல்லப்பட்டாலும் ப்ராசுர்ய (நிரம்பின வனுக) ஸ்வரூபமேயில்லாதபடியாக) பிராணமயன் என்பதைப் போல - ஸ்வார்த்தம் (இயற்கையான அர்த்தம்) காணத்தகுந்தது ஆகவே அவித்யாபரிகல்பிதவிவித விசித்திரதேவாதி சரீரங் களால் பேதபின்னமான பல ஜீவாத்மாக்கள் ஸ்வபாவத்தினுல் ரூபம் - அகண்டைக்ரஸம் - ஸீகப் ஒன்றை கொண்ட ஆனந்த மயன் என்று சொல்லப்படும் - ஆகவே ஆனந்தமயன் பிரத்ய காத்மாவாகும். (இது அத்வைதபக்ஷம்) - நிர்குண பிருஹ்ம பரவாதம், (முந்தி சாங்கியன் ஆட்சேபித்தான் - இப்போது அத்வைதி பூர்வபக்ஷியாகிறுன்).

இவ்விதம் சொல்லப்படுமாகில் - நாம் (இரண்டுபேர்களுக்கும்) பதில் சொல்வோம். आनन्दमयोऽभ्यासात् - ஆனந்தமயனுக ஓதப் படும் பரமாத்மாவை தேயேஸதாம்-என்று அவனுடைய ஆனந்தத் தைப் பெருக்கிச் சொல்லியபடியாலே ஆனந்தமய: - இதனுல் பரமாத்மாவாகும். எப்படி ? அப்யாஸத் सैषाऽऽनन्दस्य मीमांसा भवति-சுருதி இப்படி பிருஹ்ம ஆனந்தத்தின் அளவைச் சொல்ல ஆரம்பிக்கிறது -" இப்போது இது பிருஹ்மானந்தத்தை அளவிட முடியாததாக இருக்கிறது - அதனை விளக்குவோம் - கேண்மின் - என்று சொல்லி முடிக்கிறபோது यतो वाचा निवर्तन्ते - அது வாக்குக் கும் மனத்திற்கும் எட்டாதது என்று கூறி முடித்திருப்பதாலே சத (நூறு) குணி (மடங்கு) உத்தரகிரமேண (பெருக்கிச் சொல்வதால்) நிரதிசயமானதும் - உச்ச நிலையைக் கூறியதாகும்.

(இங்கே சுருதியில் - ஒரு மனிதன் நல்லயௌவனம் உள்ள வனுய்-ஸர்வ சாஸ்திரங்களைக் கற்று - அவனுக்கு அடங்கி நடக்கும் யுவர்களுக்கு உபதேசிப்பவனுவும், நல்ல ஆரோக்யம் புஷ்டியுள்ள வனுயும்-பூர்ண ஆயுளும் மனோதேக பலமும்பெற்று-பூவுலகத்தில் ஒரு இடமும் விட்டு பாழாகாதபடி - ஸம்பூர்ண விஸ்வத்திற்கு அரசனுகவிருப்பானுகில் அவனது ஆனந்தம் மானுஷானந்தம், ஒரு

அளவாகிறது) எனக்கூறப்படுகிறது. அதைபோல 160மடங்கு பெரி யது மனுஷ்ய கந்தர்வர்களின் ஆனந்தம்-இனி தேவ கந்தவர்கள்- பித்ருக்கள்-தேவலோக வாசிகள்-தேவ ஸாயுஜ்யம் பெற்றவர்கள்- தேவர்கள் இந்திரன் - பிரஹஸ்பதி பிரஜாபதியான பிரும்மா இப்படி வரிசைக்கிரமமாக ஒவ்வொருத்தருடைய ஆனந்தத்தை நூறு மடங்காகப் பெருக்கி - பிரும்மாவுக்கு மேல்பட்ட பிருஹ்மத் தின் ஆனந்தத்தை "இவ்வண்ணமாக சதுர்முகாநந்தத்தைவிட நூறுமடங்கு கொண்டது" என்று சொல்லி பல பிரும்மாண்டங் களில் உள்ள பல பிரும்மாக்களின் ஆனந்தத்திற்கு மேற்பட இப் படியுள்ள ஸர்வத்தையும் ஆளும் எம்பெருமானின் ஆனந்தத்தை அளவிடப்போமோ - என்று கூறுவது - அது வாக்கிற்கும் மனத் திற்கும் எட்டாத பேரானந்தச் சுவையாகும் என்று முடித்தது. आनन्द आत्मा - ब्रह्म पुच्छं प्रतिष्ठा । - எனமுடித்தது.)

அத்தகைய பிருஹ்மத்துக்கு - அதனுடைய ஆனந்தத்துக்கு - சரிசமமாக ஜீவன் இருக்கமுடியாது-அவனுக்கு ஆனந்த துக்கமிஸ்ர பரிமித (அளவிடும்படி - ) சுகங்களை உடையவனாக இருப்பதினால் - இந்த மஹத்தான பேரானந்தம் அதனால் குறித்துக்காட்டப்படு கிறது-நிகிலஹேய ப்ரத்யனீக கல்யாண குணங்களின் பொக்கிஷ மாகவிளங்குபவனும் - சித் அசித்வஸ்துக்களை விடவேறானவனும் (விலக்ஷணமான) பரமாத்மாவைத்தான் தனது இஷ்டப்படமாக அடைய முடியும்-அப்படியே-இந்த சுருதியும் கூறிகிறது - तस्माद्वा एतस्माद्वि ज्ञानमयात् अन्योऽन्तर आत्माऽऽनन्दमय :-(தை-5-2) ஜீவனை விக்ஞான மயன் புத்தியை உடையவனாக என்று சொல்லி எல்லாவற்றிற்கும் சூக்ஷ்மனாய் - அனைத்தையும் தரிக்கும் ஜீவாத்மாவை ஆனந்தமய னாகச் சொல்லி முடிக்கிறது - இதனால் ஜீவனும் (பரமாத்மாவைப் போல ஆனந்தமயனாகிறான் - விக்ஞானம - புத்தி - புத்தியை உடையவன். விக்ஞானமயனானவன் ஜீவனே-இங்கு புத்திமாத்திர மல்ல-ஏனெனில் மயட்பிரத்யயத்தினால் பேதம் காட்டப்படுகிறது- விக்ஞானம் என்பதற்கும் விக்ஞானமயன் என்பதற்கும் - (மயட் பிரத்யயம் விகார சப்தமில்லை - பிராசுர்யம்-(புத்தி) நிரம்பியவனாக இருப்பவன்) ஆனால் பிராணமயன் என்கிற பிரயோகத்தில் - நாம் ஒத்துக்கொள்ள வேண்டிய அவசியத்தால் மயட் பிரத்யயம் பிரா

னைக் குறிப்பதால் பிராணனாகவேயிருக்கிறது. ஆனால் இங்கு விக்ஞான மயன் - ஜீவனுக்கு விக்ஞானத்தை (அறிவு - புத்தியை) குணமாக உடையவனாக - அறிவையே ஸ்வரூபமாகவும் குணமாகவும் கொண்டிருக்கும் ஜீவனை ஞானம் என்றும் ஞானமயன் என்றும் சொல்வது பொருந்தும் (விக்ஞானமயன் ஞானமேயான புத்தியென்று (ஸ்வரூபமாக) கூறுவது பொருந்தாது. ஞானத்தை உடையவன்-மயட் என்னும் விகுதி (பிரத்யயம்) வ்யதிரேக ப்ரதீதே:-வேறுபாட்டைக் காட்டும், அன்னமயன் என்று அன்னத்திலும் வேறுபட்ட அன்னத்தையுடைய சரீரத்தைச் சொல்வது போல-ஜீவனை ஞானமயன் என்று அழைப்பது சரி பிராணமயன்-மனோமயன் என்னுமிடங்களில் வேறுவழி இல்லாதபடியால் - அவசியமாகவே-மயட் பிரத்யயத்துக்கு பிராணன்-மனம் என்னும் ஸ்வரூபமான ஸ்வார்த்தப் பொருள் கொள்ளப்பட்டது. இங்கு விக்ஞான மயனை புத்தியை உடைய ஜீவனாகக் கொள்வதால் - ஸ்வார்த்தே மயட்டாக பொருள் கூறுவது ஸ்வரஸமன்று. விக்ஞானம் யஜ்ஞம் தநுதே (தை ஆ 5-1) ஞானம் யாகத்தைச் செய்கிறது-என்கிறயிடங்களில் இப்பிரகரணத்திலேயே அறிவையுடைய ஜீவனை அறிவாகவே உரைக்கப்பட்டது. இங்கே ஜீவனை ஞானத்தை உடையவனாகவும்-(ஞானமயன்) ஞானம் என்றும் (ஸ்வரூபமாகவே ஞானம்) என்றும் கூறுவது சரியாகலாம். ஆனால் அவனிலும் சூக்ஷ்மனாய் அவனைத் தரிக்கும் பரமாத்மாவே ஆநந்தமயன் எனப்படுகிறான் என்று காட்டப்படுகிறது; அதனால் இங்கே மயட் பிரதயயத்திற்கு அர்த்தமில்லாமல் போவது சரியில்லை.

நாம் ஏற்கனவே சொல்லிவிட்டிருக்கிறோம், ஜீவனுக்கு பத்த முக்த ஆகிய இருதசைகளிலும் - பிரத்யகாத்மா அறிபவனாக இருக்கிறான்-அறிவைக் குணமாக உடையவன்-வெறும் அறிவுமாத்திரமல்ல. இப்போது பிராணமயன் - என்கிறவிடத்திலும் அது போன்ற மற்றவிடங்களிலும் - மயட் பிரத்யயத்திற்கு பிராசுர்ய அர்த்தத்தில் இப்போதே சொல்லப்படும் அர்த்தத்துடன் கூடியதாக விருக்கும் என்கிறபடி)

நீ கேட்கலாம் - அப்படியானால் - விக்ஞான பதபிரயோகமே ஜீவனைக் குறிக்கிறதாகச் சொல்வது-சரியாகும்-இந்த சுலோகப்படி

**विज्ञानं यज्ञं तनुते**-(தை. 2-4-5-1) விக்ஞானம் யாகத்தைச்செய்கிறது. இங்கே விக்ஞானத்தை (அறிவை) உடைய ஜீவனை அறிவாகவே (ஸ்வரூபமாகவே சொல்லியிருக்கிறது. ஜீவன் அறிபவனாகவுமிருக்கிறான்-அறிவை குணமாக உடையவனாகவுமிருக்கிறான்: அவனுக்கு ஸ்வரூபமாகவும் அதையே குணமாக உடையவனாகவும் சொல்லபடுகிறான். ज्ञातुरप्य आत्मन: स्वरूपमपि स्वप्रकाशतया विज्ञानमित्युच्यते इति न दोष: - ஜீவனை ஞானமென்றும்-ஞானமயன் என்றும் சொல்வதால் தோஷமில்லை. நிருபகஸ்வரூப தர்மமாக-ஞானேக (ஞானம் ஒன்றே) வஸ்துவின் ஸ்வரூபத்தை விளக்குகிறது-ஸ்வரூப நிரூபண தர்ம சப்தங்கள் அந்த அந்த வஸ்துக்களின் (ஜாத்யாதி) தர்மங்களின் வழியாக-தர்மி (உடையவனுடைய) ஸ்வரூபத்தையும் பிரதிபாதிக்கிறது - கவாதி சப்தம்போல (சாஸ்நா. தாடி) இத்யாதிகளால் அடையாளம் புரிந்து கொள்ளும்படி; பொதுவான குணங்களாகிற மிருகங்களின் குணத்தையும் - அந்த அந்த ஜாதி விசேஷ குணங்களையும் ஸ்வரூபமாகவேகாட்டும்; அவை ஸ்வரூபநிரூபண தர்மங்களாகவிருக்கும்: பாணினி-3-3-113-कृत्युल्युटो बहुलम्-க்ருத்ய என்கிற aff-x கர்த்ரில்யுட்டை ஆஸ்ரயிக்கிறது-அதற்கு (கிருத்ய) ல்யுட் ஒரு அர்த்தத்தைவிட பல பொருள் கொண்டதாககாட்டும். க்ஞு (அறிவதற்கு-to know) என்கிற தாதுவுக்கு-वि சேர்க்கப்பட்டால் ல்யுட் கர்த்தாவைக் குறிக்கும் - அல்லது -இவ்விதமாக க்ஞு என்ற தாது (to know) நந்த (சந்தோஷிப்பதற்கு - to Please) என்கிற நந்தியாதித்வம் என்கிற தாதுக்களின் கூட்டத்தைப் போல-ல்யுத் என்பதுகூடச் சேர்த்துக்கொள்ளவேண்டியது. க்ஞு (to know) என்கிற தாதுவுக்கு ஒரு கர்த்தா-ல்யு: என்பது அவசியம் (பாணினி இலக்கணப்படி) நந்த இத்யாதிகளுக்கும் - அதே மாதிரி க்ருஹ (to seize) என்கிற தாதுக்கூட்டங்களுக்கும் ல்யுர் சேர்த்துக் கொள்ளப்படுவதால் (affx) கர்த்ரி பிரயோகம் உண்டு. (அதாவது நந்த என்று ஆரம்பிக்கும் தாது கூட்டங்களுக்கும்-க்ரஹ என்ற தாது கூட்டங்களுக்கும் (நிநி) பிரயோகிக்கப்படுட-அச்-பச்-என்பதைப்போல சேர்க்கப்படும். இம்மாதிரி affiz (விகுதி பிரயோகத்தால்-சேதன தர்மமாகிற கர்த்தாக்களைக்காட்டும் பெயர் சொற்கள் அந்த தாதுக்களிலிருந்தே கிடைக்கப்பெறும்.)

இந்தக் காரணத்தினுல் विज्ञानं यज्ञं तनुते कर्माणि तनुतेऽपि च - (விக்ஞானம் யாகத்தைச்செய்கிறது; அதுவே கர்மாக்களையும் செய்கிறது. (தை.2-11-5-1) விக்ஞானம் என்பதற்கு யக்ஞாதி கர்த்ருத்வம் சொல்லப்படுகிறது ஆனுல் புத்திமாத்திரத்திற்கு கர்த்ருத்வம் யேற்படுவதில்லே. புத்தி அசேதனமானபடியால்-அதற்கு கர்த்ருத்வம் இருக்கமுடியாது - யேற்படாது. வாஸ்தவமாகவே அசேதன வஸ்துக்களாகிற அன்னமயன் அன்னத்தால் வளரும் சரீரத்தைச் சொல்லி - இத்யாதிகளில் - அசேதன வஸ்துக்கள் விஷயத்திலே - விக்ஞான மயனுக்கு முன்பாகச் சொல்லப்பட்ட பிராணமயன் - மனோமயன் - இத்யாதிகள்கூட ஜீவனுக்கு அசேதவமான உபகரணங்களாகவிருக்கின்றன. இவைகளில் கர்த்ருத்வம் ஏற்படாது - ஏனெனில் இது சேதனனுக்கு தர்ம பூதமாகவிருப்பது. அதே காரணத்தினுல் பரமாத்மா சேதனமாகவும், அசேதனமாகவும் ஆனுன் चेतनमचेतनं च स्वासाधारणैः निलयनत्वानिलयनत्वादिभिः धर्मविशेषैर्विभज्य निर्दिशद्वाक्यम — विज्ञानं चाविज्ञानं च - इति - தனித் தனியாக சுருதி சொல்கிறது-சேதனன் (ஜீவன்)- அசேதனன் (அசித)-அவைகளின் விசேஷ தர்மங்களால் வீடுள்ளதாகவும் - வீடில்லாததாகவும் காட்டி-அப்படியே இந்த சுருதி விக்ஞானம் என்ற பதத்தால் அறிவை (ஞானத்தை) உடைய சேதனனைச் சொல்லி - அதை அவனுக்கு அசாதாரண தர்மமாக ஒதிற்று. (விக்ஞான சப்தேந தத்குணம் சேதனம் வததி). அதேபடி-பிரு. 2 அந்தர்யாமி பிராம்மணத்திலே - यो विज्ञाने तिष्ठन् - என்கிற (மாத்யந்தினர்கள் சாகையிலே (அதேபடி காண்வபாடத்திலே - பர்யாயஸ்தானத்தில்) இவ்விரு பதங்களால் சொல்லப்படுகிறது மாத்யந்தினர்கள் சாகையிலே பரமாத்மா (அவன்) ஆத்மாவில் இருப்பவனுகை-மா.பிரு.2. 3-7-22) என்றும் காண்வசாகையிலே ஆத்ம சப்தத்தினுல்-यः आत्मनि तिष्ठन् - பர்யாய ஸ்தானத்தில், மாத்யந்தினசாகையில் ஓதப்பட்டதால்-விக்ஞானசப்த நிர்திஷ்டம் யோவிக்ஞாநேதிஷ்டந், (காண்வசாகை) ஜீவாத்மா தான் (மாத்யந்தினசாகையில் என்று தெளிவாகிறது. விக்ஞானமிதி-நபும்ஸலிங்கம் வஸ்துவாக விருக்கும் அபிப்ராயத்தைக்காட்டும். அதேபடி விக்ஞானமய ஜீவாத் (ஜீவனைவிட) அன்யஸ்ததந்தர:-வேருக விருப்பவன்-ஜீவனுக்குள் வசிப்பவன்-ஆனந்தமயனுன பிருஹ்மமாகும் - பரமாத்மாவே - ஆனந்தமயன்.

இந்த ஸ்லோகத்தில் அவ்விதம் இருந்தாலும் विज्ञानं यज्ञं तनुते - விக்ஞானம் யாகத்தைச் செய்கிறது என்பதில் ஞானம் மாத்திரமே காட்டப்படுகிறது. न ज्ञाता - அறிபவனை சொல்ல வில்லை - அவ்விதமாயினும் अन्योऽन्तर आत्मा विज्ञानमयः - உள்ளிருப் பவன் (மனோமயனிலிருந்து வேறுபட்டவன் - இவன் உள்ளிருப் பவன் அவனே விஞ்ஞானமயன்-விக்ஞான (அறிவை) குணமாகவுள் ளவன். இதனாலே விக்ஞானத்தை உடைய சேதனன் (ஜீவன்) சொல்லப்படுகிறான். எப்படி - अन्नाद्धि प्रजाः प्रजायन्ते - அன்னத்தி லிருந்து பிரஜைகள் உண்டாயினர்-கேவலம் அன்னம் உபாதான காரணமாயினும் - இந்த சுருதியில் स वा एष पुरुषोऽन्नरसमयः- இங்கே அதே அன்ன சரீரமாகவுள்ள புருஷன் அன்னரஸத்தினால் ஆக்கப்படுகிறான் - ரஸமயனாகவிருக்கிறான் - அதாவது விகார சப் தத்தினாலே-சரீரம் அன்னரஸமாக ஆக்கப்பட்டிருக்கிறது. அன்னம் மாத்திரம் சொல்லப்படவில்லை-தன்மய: என்பதால் तत् विकार : (பிராசுர்யமல்ல) - மாறிவிட்டான் என்ற அர்த்தம். இவைகள் எல்லாவற்றையும் மனத்தில் கொண்டு - சூத்ரக்காரர்-தானே भेदव्यपदेशात्त — ஆனந்தமயன் (பிருஹ்மம்) ஜீவனை விட வேறானவ வன் - ஏனெனில் இந்த வாக்கிய பிரகரணத்திலே - ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் ஓதப்படுகிறது-(சூத் 1-1-18); அநந்தர மேவ சொல்லப்போகிறார்.

பூர்வபக்ஷியினால் யாது சொல்லப்பட்டதெனில்-ஜகத்காரணத் தைக்கொண்டு சேதனன் யாரோ ஒருவன் ஸ்ருஷ்டி செய்திருக்க வேண்டும் - அந்த ஒருவன் யாரென்றால் - ஜீவனோடு ஸாமானாதி காரணத்தினால் ஒற்றுமை சொல்லப்பட்ட பிருஹ்மம் சா.2,6.3.2 अनेन जीवेनात्मना अनुप्रविश्य-(பிருஹ்மம் சங்கல்பித்தது)-நானேயா யிருக்கும் இந்த ஜீவனுள் வ்யாபித்து; சா.2-6-8-7ல் तत् त्वमसि- சுவேத கேதுவே-நீ பிருஹ்மமாகவிருக்கிறாய்.- இதனால் ஜீவ ஸ்வரூ பத்தையும் ஜகத் காரணத்தையும் ஒன்று என்று காட்டுவதால் - இதைத் தவிர வேறு ஒன்றுமில்லை என்று சொல்லி - இத்தகைய ஜீவஸ்வரூபம் பிரகரண அந்தத்திலே ब्रह्मविदाप्नोति परम् - பிரும் மத்தை அறிந்தவன் மேலான பதத்தையடைகிறான் என்று சொல் லப்பட்ட சுருதி வசனத்தை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு - ஜீவ ஸ்வரூபமே ஆனந்தமயன் அந்த ஆனந்தமயன் துக்கத்தி

லிருந்து வேறுபட்ட சுக ஸ்வரூபமாக இருக்கிறன் என்றும் ஓதப் பட்டது-இவ்விதம் சொல்வதும் (அதாவது ஜீவனுக ஆனந்தமய னைச் சொல்வது)-அயுக்தம்-சரியில்லை.

ஜீவனுக்கு சேதனத்வமிருப்பது ஸத்யமானுலும் - तदैक्षत बहुस्यां प्रजायेयेति तत् तेजोऽसृजत - அது (ஸத்) ஸங்கல்பித்தது - நான் பலவாக ஆவேன்-முதலில் அது தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தது (சா.2-6-2-3) என்று ஸ்ருஷ்டிக்கு பூர்வமாக ஸங்கல்பம் - அதனுல் ஏற்படும் விசித்திர ஸ்ருஷ்டியோகம் இத்யாதி ஜீவனுக்கு ஒட்டாது (அவன் அற்பசக்தியுள்ளவனுதலால் அவனுக்கு ஜகத் காரண ஸங்கல்பம் பொருந்தாது). சரி இது பத்த ஜீவனில்லை-முக்த ஜீவ னுல் முடியும் என்று சொன்னுல்-அவனுக்கும் ஸர்க்காதி (ஸ்ருஷ்டி) ஜகத்வ்யாபாரம்-இத்யாதி வர்ஜம் (சா.மீ. 4-4-27; போகமாத்தி ரம் ஸாம்யம் (சா.மீ. 4-4-27); என்று சூத்ரக்காரரால் காட்டப் பட்டதாலே. (ஆகவே ஜீவன் பக்ஷம் தள்ளப்படவேண்டியதாகும்.)

மீண்டும் நீ கேள்விகேட்கலாம் - எப்போது ஜகத் காரண பூத பிருஹ்மம் ஜீவ ஸ்வரூபத்தை தனது ஸ்வரூபமாகக் கொள்ள வில்லையோ-அப்போது अनेन जीवेनात्मना நானேயாயிருக்கும் இந்த ஜீவனுள் வியாபித்து (சா,2-6-3-2); तत् त्वमसि - நீ பிருஹ்மமாக விருக்கிறுய் (சா.2-6-8-7) என்கிற சுருதிவாக்யங்களில் ஸாமாநாதி கரணத்தினுல் ஒற்றுமை ஜீவனுக்கும் ஜகத்திற்கும் ஸாம்யம் (ஒற்றுமை) ஸாதிக்கப்படுகிறது-என்று கேட்பாயாகில் அதற்கு ப்தில் நாம் உரைப்பது - எப்படி பிருஹ்மம் - (எப்படிப்பட்ட பிருஹ்மம்-அதாவது) - நிரஸ்தநிகில தோஷகந்தன் (யாதொரு ஹேயமோ-தோஷமோ இல்லாதவன்) ஸத்ய ஸங்கல்பன்-ஸர்வ க்ஞன் ஸர்வ சக்தியுள்ளவன் - அநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாண குணகணன்- (சேர்க்கை பெற்றவன்) - ஸகல வஸ்துக் களுக்கும் காரண பூதன்-அத்தகைய பிருஹ்மம், நானுவித அனந்த ஜந்துக்களையே ஸ்வருபமாக (வாழ்க்கை நடத்துகிறவனும்) உள்ளவனும் பரம் ஸம்சாரியாகவிருப்பவன் - கர்மாக்களுக்கு அடிமைப்பட்டு பலவித தேகங்களை எடுப்பவன் - இவைகளால் புத்தி மழுங்கிப் போய் தடுமாறுகிறவன்-ஸகலபிரவிருத்திகளிலும் ம்கனைப்பட்டுப் போகிறவன் - அத்தகைய ஜீவஸ்வருபத்தை, உத்

திருஷ்டமான மேல் காட்டியபடி விளங்கும் பிருஹ்மம் எப்படி எடுத்துக் கொள்ளக்கூடும் ?

சரி நீ மீண்டும் வாதிப்பாயாகில் - ஸாமாநதி கரணத்தி னுல் - ஜீவனும் ஜகத்தும் ஒன்று என்பது சரியானதுதான் - எப்போது இரண்டுக்குள் ஒன்று மித்யை (அதாவது ஜகத்மித்யை - பிருஹ்மம் சத்யம்) — ஆகுமானுல் — சரியாகுமே என்று (சொல்வாயானுல்); (அத்வைதி); நாம் அதற்கு பதில் கூறுவது- ''ஐயனே - நீரே சொல்லும் எதற்கு இந்த ஹேயசம்பந்தம் சொல்லக்கூடும் ? ஜிவனுக்கா (ஏனெனில் தோஷங்களாகிற அவித்யை முதலியவை ஏற்படுவதால்); இல்லை ஹேயப்ராத்யனீக கல்யாண கதானஸ்வரூபமுள்ள பரமாத்மாவுக்கா ?

பிருஹ்மத்திற்கு ஹேயப்ரத்யனிக கல்யாண குணங்களை ஸ்வபாவமாகவுடைய பிருஹ்மம் அநாதி அவித்யா அதனை வந்து ஆஸ்யம் செய்வதால், ஹேய சம்பந்தத்தை மித்யையி னுல் பிராதிபாஸம் (தோற்றுவிப்பதாக) ஏற்பட்டு - அதனுல் மித்யாரூபமான தோஷ சம்பந்தத்தை பிருஹ்மம் அடைகிறது — அதனுல் ஜீவனுகமாறுகிறது-என்று நீ சொல்வாயாகில் - இதனுல் உன் பேச்சில் உள்ள முறண்பாடுகளை - விப்ரதி பத்தியை - நீ அறிகிருயில்லை - ஏனெனில், பிருஹ்மமோ ஹேயப்ரத்யனீகன் - கல்யாணகுணதாமர் - அவனுக்கு சற்றும் பொருந்தாது - மேலும் அனுதி அவித்யா ஆஸ்ரயம் அதனைச் செய்வதால், அனந்த துக்க விஷயமும் மித்யையை தோற்றுவிக்கிறது (ஆஸ்ரயத்தினுல்)- என ஆகும். இதில் உள்ள முறண்பாட்டை நீ உணருகிருயில்லை ஆஸ்ரயத்தினுல் பிருஹ்மம் ஹேய சம்பந்தத்தினுல் அதுவும் ஹேயமாகத் தோன்றுகிறது. ஆகவே ஹேய (அவித்யை) சம்பந்தம், அதற்கு எதிர் தட்டான கல்யாண குணங்கள் உள்ளது — இரண்டும் விருத்தமாச்சுதே. அவ்விதமாயினும் ஹேயசம்பந்தம் - அதனுல் மித்யாத்வம் தோற்றமே ஆகும் - இதனுல் பிருஹ்மத்திற்கு தோஷமில்லை என்று சொல்வதும் சரி யில்லை, பிருஹ்மம் அவித்யைக்கு ஆஸ்ரயமளிப்பதாலும் - அதே பிருஹ்மம் ஸ்வரூபமாகவே (ஸத்யம் ஞானம் அனந்தம்) இத்யாதி கல்யாண குணங்களை உடையதும் - இரண்டும் ஒன்றும்

கொன்று விரோதமே! அவ்விதமாயினும் - நீ சொல்லக்கூடாது - இதில் யாதொரு விரோதமில்லை - ஏனெனில் அவித்யை ஆஸ்ரயமும் தோற்றமே என்று சொல்வாயாகில் - நாம்பதில் அளிப்பது - எது தோற்றமாயிருந்தாலும் - எது ஹேய சம்பந்தத்தை அடைந்தாலும் - அதனால் அடையப்படும் புருஷார்த்தமும் அவ்விதமேயிருக்கும் - நீயே சொல்கிறாய் - இத்தகைய அவித்யை நாசமாக்குவதற்கும் மித்யாபூத: புருஷார்த்தத்தை அடைவதற்கும் வேதாந்த சிரவணம் பண்ணவேண்டியது - வேதாந்தங்கள் இதற்க்காக ஆரம்பிக்கப் படுகின்றன. இவ்விதம் ஹேயசம்பந்தம் - அத்துடன் சம்பந்தப் பட்ட அபுருஷார்த்தத்தை நாசமாக்குவது (அதைப் போக்கு வதற்கு) - இவ்விதம் சொல்வது பிருஹ்மஸ்வரூபத்திற்கே - ஹேய ப்ரத்யனீக கல்யாண குணதாமன் - இத்யாதிகளுக்கு விரோதமல்லவா? (ஹேயசம்பந்தம் பிருஹ்மத்திற்கு ஒட்டாது)

நீ கேட்கலாம் - "அதற்கு நாம் என்ன செய்கிறது" என்று சா. உ. येनाश्रुतं श्रुतं भवति - எந்த ஒன்றைத்தெரிந்து கொண்ட தால் - எல்லாவஸ்துக்களும் அறியப்பட்டதாகும் (ஏக விக் ஞானத்தினால் ஸர்வவிக்ஞானம்); என்று பிரதிக்ஞை செய்து விட்டு - சா. உ. 6-2-1- सदेव सोम्येदमग्र आसीत् ஸத் ஒன்றுதான் ஸ்ருஷ்டிக்கு முன்பு இருந்தது; இத்யாதிகளால் பிருஹ்மம்தான் ஜகத்யேக காரணம் என்று காட்டிவிட்டு; சா. உ. 6 - 2 - 3 तदैक्षत बहु स्याम् - நான் பலவாக ஆவேன் என்று பிருஹ்மம் ஸத்ய ஸங்கல்பம் செய்து-அத்தகைய பிருஹ்மத்தை சுருதி காட்டிவிட்டு; அந்த பிருஹ்மமே சா. உ. 6-8-7) तत् त्वमसि பிருஹ்மமாக நீயிருக்கிறாய் - என்று ஸாமாநதிகரண்யத்தினால் ஜீவனும் பிருஹ்மமும் ஒன்று; அந்த ஜீவனே முடிவில்லாத லைகதுக்கங் களுக்கு இருப்பிடம் என்று கூறி; இவ்விதம் ஜீவபிரும்ம ஸாம் யத்தினால் பிருஹ்மமே அவித்யா ஆஸ்ரயத்திற்கும் அதுபோன்ற தோஷங்களுக்கும் இருப்பிடம் எனபரிகல்பிக்க வேண்டியது - என்று சொல்வாயாகில் - நாம் இதற்கு பதில் கூறுவது - சுருதி சொல்வது சரிதான் என்று சாதிப்பதற்கு எது தவறோ - அனுப பத்தியோ - (தவறான தீர்மானமோ) அதை கல்பிக்கக்கூடாது

(அதாவது அவித்யா - ஆஸ்ரயம் - கல்பிதம் - பிருஹ்மம் ஹேய சம்பந்தமடைவது - எல்லாம் தோற்றமே எனச் சொல்லக் கூடாது).

மேலும் பிருஹ்மத்துக்கு (நீ சொல்கிறபடி) ஹேய சம்பந்தமும் பாரமார்த்திகமே (உண்மையே); ஆனால் கல்யாண குணங்களுக்கு பிருஹ்மம் இருப்பிடம் - என்பதும் மித்யாபூத மாகிவிடும். அவ்விதமானால் இந்த சாஸ்திரபடனம் - ஆத்தி ஆத்மிக ஆதிபௌதிக ஆதிதைவிக தாபங்களால் - தாபத்ரயங் களால் வாட்டப்படும் சேதனங்களை உஜ்ஜீவிப்பதற்காக, சாஸ்திரம் யேற்பட்டது (பரவித்யை உண்டாயிற்று - तापत्रया मिहतिरेव तस्य पारमार्थिकी; कल्याणैकस्वभावस्तु - அவர் களுக்கு (பத்த ஜீவர்களுக்கு) உபதேசிப்பதற்காக - பிருஹ்ம விஷயத்திலே, மூவித தாபத்ரயம் என்பது உண்மை (பாரமார்த் திகம்); ஆனால் பிருஹ்மத்தின் ஸ்வபாவமே கல்யாண குணங் களை கொண்டது - அது பிராந்திபரிகல்பிதம் (கல்பிதத்தால் யேற்பட்டது) என்று சொல்லி - ஜீவர்களை ஸம்யக் (நன்றாகவே) உஜ்ஜிவிக்கச் செய்வதற்காக அவ்விதம் போதிக்கப்பட்டது.

மேலும் இவ்விதமான தவறான முடிவை சாஸ்திரவிஷயத் திலும் - பிருஹ்ம விஷயத்திலும் - இல்லாமல் ஆக்குவதற்கு - நிதவறாக பிருஹ்ம விஷயத்திலே - சொல்கிறாய் - நிர்விசேஷசிந் மாத்திரம் பிருஹ்ம ஸ்வரூபம் - அதைவிட்டு பரிதியாகம் செய்து பிருஹ்மம் ஜீவஸ்வருபத்தை அடைந்து துக்கத்தை அனுபவிக்கிறது - அதற்கு ஸத்யஸங்கல்பத்வம், கல்யாணகுணா கரத்வம், ஜகத்காரணத்வம் இத்யாதிகளும் மித்யாபூதமிதி கல்பநியம் பிராந்தியினால் கற்பிக்கப்பட்டன என்று சொல் வாயாகில், நாம் சொல்வது "அஹோ भवतां (உங்களுடைய) வாக்யார்த்த பர்யாலோசனை குசலதா (ரொம்ப கெட்டிக் காரத்தனமாகவுள்ளது)! ஏகவிக்ஞானத்தினால் ஸர்வவிக்ஞானம் அடையப்படுகிறது என்று பிரதிக்ஞை செய்து விட்டு - ஸர்வமும் மித்யை தான் - எல்லாவஸ்துக்களும் இல்லவேயில்லை தோற்றமே தான்! எல்லா அறிவும் அபாவமே என்று சொல்வதாகும். ஒரு வஸ்துவின் ஏகவிக்ஞானம் பாரமார்த்தவிஷயம் என்றால் -

அந்த பிரகாரம் ஸர்வ விக்ஞானமபி (எல்லா வஸ்துக்களின் அறிவும்) பாரமார்த்திகம்-அது அந்த ஏகவிக்ஞானத்தில் அடங்கியுள்ளது (அந்தர்கதம்). அப்போது அந்த ஒன்றை அறிவதால் ஸர்வவிக்ஞான மிதி (அது)-என்று சொல்வதற்கு முடியும் வாஸ்தவத்திலே - உண்மையாகவிருக்கும் முத்துசிப்பியை அறிவதாலே - அதில் ஆரோபிதமான வெள்ளியை காண்பது - மித்யை என்பதால்-அந்த வஸ்து தெரியப்பட்டதாக ஆகாது. சுத்தி பாரமார்த்தம் - அக்ஞானத்தினல் அதில் ஆஸ்ரயமானவெள்ளி அபரமார்த்தம் - சுத்தி ஞானத்தினல், வெள்ளி (அபரமார்த்தமானது) என்று எவ்விதம் அறியக்கூடும் ? அதிஷ்டான ஸத்தியத்தினலே - மித்யா ஆஸ்ரய வஸ்து எவ்விதம் அறியப்படும் ?

மேலும் நாம் சொல்வது - ஏகவிக்ஞானத்தினல் ஸர்வ விக்ஞான பிரதிக்ஞை நிறை வேறப்படுவதற்கு அர்த்தம் இது தான் - (இது அத்வைதியின் பதில்) நிர்விசேஷ பிரும்ம மாத்திரமே ஸத்யம் - மற்றவை மிதியை அஸத்யம் - என்று சொல்வாயாகில் - நாம்பதில் கூறுவது - அவ்விதமில்லை சா. உ. 6-1-8ல் येनाश्रुतं भवत्यमतं मतमविज्ञातं विज्ञातम् - என்று சுருதி சொல்கிறது. (நீ உன் ஆசார்யரைக் கேட்டுத் தெரிந்து கொண்டாயா? அதனல் - எது கேட்கப்படாததோ - அது கேட்கப்பட்டதாகவும்-எது நினைக்கப்படாததோ - அது நினைக்கப்பட்டதாகவும் - எது அறியப்படாததோ - அது அறியப்பட்டதாகவும் இருக்கிறது (நீ உன் ஆசார்யரைக் கேட்டாயா - எந்த உபதேசத்தினல், எல்லாவஸ்துக்களும் மித்யை என்று சொல்லப்படுகிறதோ - அல்லது எதனல் எல்லாவஸ்துக்களின் அறிவும் பாதிதமாகிறதோ - என்று கேள்வி உன் பிரகாரம் இருக்கவேண்டும் ஆனல் அவ்விதமில்லை).

(நாம் சொல்வது) இந்த கேள்விக்கு அர்த்தம் யாதெனில் - எந்த ஒரு வஸ்து கேட்கப்படுகிறதோ, எந்த வஸ்துக்கள் முன்னல் கேட்கப்படாதாக விருந்ததோ - அவைகளும் கேட்கப்பட்டன - வாகுமோ அந்த ஒரு வஸ்துவின் ஸத்பாவம் - அந்த வஸ்து குணரஹிதமானது நிர்விசேஷம் - அதுவே ஜகத்காரணமாகக் காட்டப்படுகிறது - அந்த பிரதிக்ஞையினல் விளக்கப்

பட்டிருக்குமாகில், அப்பொது உதாரணங்களாகத் கொடுக்கப் பட்டவை - உதாரணமாக - பையா, எப்படி ஒரு பிடி களிமண்ணி னால், எந்த வஸ்துக்கள் களிமண்ணினால் ஆக்கப்பட்டனவோ அவைகளும் அறியப்பட்டனவாகும். (சா. உ. 6-1-4) இந்த உதாரணமும் சரியானதாக விருக்காது.

(येन श्रुतेना श्रुतमपि श्रुतं भवतीति ह्यस्य वाक्यार्थः। कारणतयोपलक्षित निर्विशेषवस्तु मात्रमेव सद्भावश्चेत् प्रतिज्ञातः—சா. 2-6-2-4 यथा सोम्यैकेन मृतपिण्डेनसर्वंमृण्मयं विज्ञातम् - इति दृष्टान्तोपि न घटते।

நமது நிர்வாஹம் யாதெனில் காரணவஸ்துவைத் தெரிந்து கொள்வதால்தான் அதன்கார்யவஸ்துக்களும் அறியப்பட்ட தாகும். அதாவது ஒருபிடி களிமண்ணைத் தெரிந்து கொள்வ தால் - ம்ருத்பிண்ட விக்ஞானத்தினால் தத்விகாரஸ்ய (மாறுதல் களாகிற காரியங்கள்) ஞாததா - அறியப்பட்டதாகும் எனக் காட்டியது. அங்கேகூட, விகாரத்தின் (காரியமாறுதலினால்) அஸத்யம் (வஸ்துவின் அஸத்பாவம்) அபிப்ராயம் கொண்ட தாகும். ஆனால் இந்த களிமண்ணின் மாறுதல்களின் அபர மார்த்தத்வம் - ஸ்வேத கேதுவுக்கு நிச்சயமாக நிர்மானிக்கப்பட வேண்டியது என்று இருக்கமுடியாது - ஏனெனில் பிராந்தியினால் கயிற்றில் பார்க்கப்பட்டது (தவறான எண்ணத்தினால்) பாம்பு (கயிற்றிலும்) அதுபோல மற்ற அபரமார்த்தமான அம்புதாரை இத்யாதிகளும் ஆகும். ஆகவே நாம் சொல்லவிரும்புவது பிரதிக்ஞைக்கு அர்த்த ஸம்பாவனம் யேற்படுவதற்கு - यथा सोम्य என்று பிரஸித்தமான உதாரணத்தை கொடுப்பது - அந்த உபந்யாஸம் சரியானதாகாது. (உன் பிரகாரம்).

மேலும் நீ சொல்லக்கூடாது - இந்த ஏகவிக்ஞானம் ஆராய்சி யேற்படுவதற்கு முந்தி - சுருதி போதிக்கிறதே तत् त्वमसि - (சா. உ. 6-8-7) நீ பிருஹ்மமாக விருக்கிறாய் - அதுபோல மற்ற மஹாவாக்யங்களாலும் உடனேயே வாக்யஜன்ய ஞானம் உற்பத்தியாகிறது. அதனால் விகாரங்களை அடையப்படும் காரியங்களின் அஸத்யதா (மித்யாத்வம்) யேற்படுவதும் - அதற்கு தர்க்க சம்மதியும் -; தர்க்கத்தின் அஸம்மதியும் - இதனாலே பிரயாணபதவியையும் அடைந்ததாக விருக்கிறது. இதன்

அர்த்தம் பின்னால் சொல்லப்படும் சா. மீ. 2-1-15 என்கிற ஸூத்திரத்தில் तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः- (காரணமான பிருஹ்மத்தைக் காட்டிலும் கார்யமான உலகம் வேறு படாமலேயுள்ளது. ஆரம்பணசப்தாதிப்ய:- வாசாரம் பணம் முதலான வேதவாக்யங்களிலிருந்து (இது விளங்குகிறது). (இதனால் காரிய காரணங்கள் வேறுபடாதவையே - பிருஹ்மத்திற்குச் சேதனுசேதனங்கள் சரீரமாயிருந்தால் சேதனு சேதனங்களின் தோஷங்கள் பிருஹ்மத்தினிடம் ஒட்டமாட்டா-இது விலக்ஷணத்வாதி கரணத்திலும் விளக்கப்பட்டதாகும்) இதனால் விசிஷ்டாத்வைதவாதிகள் ஸத்கியாதிவாதிகளாவர்கள். எது இருக்கிறதோ - அதுதான் உண்டாகும். காரியகாரண ஒற்றுமை உண்டு என்பதாம்) ஆகவே सदेव सोम्येद मग्र आसीदेकमे वाद्वितीयम्— तदैक्षत बहु स्यां प्रजायेयेति तत् तेजोऽसृजत - हन्ताहमिमतिस्रोदेवता अनेन जीवेनात्मनाऽऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि- ஸத் ஒன்றுதான் முதலில் இருந்தது. ஒன்றே ஒன்று அத்விதியமாக (அதைப்போல இன்னொரு வஸ்துஇல்லை யெனும்படி) இருந்தது. அது நினைத்தது - நான் பலவாக ஆவேன் - பிறப்பேன். அது தேஜஸ்ஸை உண்டாக்கியது; மூன்று தேவதைகளிலும் ஜீவனுடன் உள் நுழைந்து - நானேதான் என்று சொல்லும்படி - நான் நாமருபம் வ்யாகரணம் (பிரித்தலைச்) செய்கிறேன் (சா. உ. 6-3-2) सन्मूलाः सोम्येमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः ऐतदात्म्यमिदं सर्वं— உண்டாக்கப்பட்ட இந்த எல்லாவஸ்துக்களும் - பிரியனே ஸத்தில் ஸ்தாபிதம்; ஸ்த்திலே அவைகளின் வாசஸ்தலம்; ஸத்திலே வேர் ஊன்றி கிடக்கின்றன. (இந்த எல்லாம் ஸத்தை ஆத்மாவாகவுடையது. (சா. உ. 6-8-7); இத்யாதி சுருதி வசனங்களால் இந்த ஜகத் ஸத்தை ஆத்மாவாகவுடையது - அது சரீரமாகவும் உள்ளது. ஸ்ருஷ்டியின் முன்பு (பூர்வகாலே) நாமருபவிபாகம் இல்லை. ஜகத் உற்பத்திக்குப்பிறகு - ஸத்சப்த வாச்யமான பிருஹ்மம் - இதற்கு தன்னைத் தவிர வேறு ஒரு காரண வஸ்துவை அபேக்ஷிக்காது - ஸ்ருஷ்டி காலத்திலே "நானே (பிருஹ்மமே) बहुमेवानन्तविचित्ररूपेण நானே(தான்) பலவாக ஆவேன்" என்று சொல்லும்படி - அந்த மாதிரியான பிருஹ்மத்தைத் தவிர வேறு யாருக்குமில்லை - நானேதான் பல

வஸ்துக்களாகப் பிறக்கக்கடவேன் என்று சங்கல்பித்து பல சர அசர வஸ்துக்களாக சரீர பாவத்தினுல் மாறி (பிருஹ்மம் மாருதது - இந்த வஸ்துக்கள் அதுக்கு சரீரமானபடியால் சூக்ஷ்ம சித் அசித்வஸ்துக்கள் ஸ்தூலசித் அசித் வஸ்துக்களாக மாறி - அசாதாரண ஸங்கல்ப் விசேஷத்தினுல் - தனக்குத்தான் உரிய தான அந்த ஸங்கல்ப விசேஷத்தினுல் மாறி, அநந்தவிசித்திர தத்வங்களை - வெவ்வேருன லக்ஷணங்களோடு - விலக்ஷண உற்பத்தி கிரமத்தினுல் மாறியது - விசிஷ்டா ஸ்ருஷ்டிக் ஸமஸ்த அசேதவைஸ்துக்களிலும் ஸ்வாத்மக (பிருஹ்மத்தையே ஆத்மாவாகக் கொண்டபடியால்) - ஜீவர்களிலும் அனுப்ர வேசித்து இப்படி அனந்தமான நாமரூபவ்யாகரணம் (பிரிதல்) செய்து தன்னிலும் வேறுபட்ட எல்லா வஸ்துக்களும் பிருஹ் மத்தையே ஆதாரமாகவும் மூலமாகவும் கொண்டபடியால் - ஸ்வாயத நத்வம் - அவைகளில் தன்னிருப்பிடமாகக் கொண்டு - அவைகளுக்கும் வஸ்து வ்யவஹாரயோக்யதையை அளித்து ஒவ்வொன்றிலும் பிருஹ்மம் அந்தர்யாமியாக விருப்பதால் - ஒவ்வொருவஸ்துவின் பிரவிருத்தி (செயல்படுதல்) நிவிருத்தி களுக்குக் காரணமாயும், பிருஹ்மத்தினுலே அவை வாழ்கின்றவை யாகவும், (स्वेनैव जीवनम्) ; स्वप्रतिद्वन्द्वनित्याद्य नन्त विशेषाः शास्त्रैक समधिगम्यः प्रतिपादिताः சாஸ்திரம் ஒன்றினுலே அறியப் படுவதாக விருக்கின்றன.

இதேமாதிரி - மற்ற சுருதி பிரகரணங்களிலும் பிருஹ்மத் துடன் சம்பந்தம் கொண்டதாக - அபஹத பாப்மத்வதி குணங் களும், நிரஸ்த நிகிலதோஷதா - (யாதொரு தோஷங்களில்லாத வரும்) - ஸர்வக்ஞ, ஸர்வேஸ்வரத்வ, ஸத்யகாமத்வம் - ஸத்ய ஸங்கல்பத்வம் ஸர்வானந்தகரணம் (மட்டற்ற சுக ஆனந்தங் களைக் கொண்டவராயும்) நிரதிசய ஆனந்த யோகாதய :- (தானும் ஆனந்தித்து - தன்னை உபாஸிப்பவர்களுக்கு ஆனந் தத்தை அளிப்பவராகவும்) சாஸ்திரம் தவிர மற்ற ஸகல பிரமாணங்களுக்கு அறியப்படாதவராயும், ஆயிரக்கணக்கான வழிகளாலே பிரதிபாதனம் செய்யப்பட்டதாகும். இவ்விதம் சாஸ்திரத்தைத் தவிர மற்றப் பிராமணங்களுக்கு அதீதனுயும் - அந்த விசேஷவிசிஷ்ட (கூடிய) இந்த பிரும்மம் என்பதை காட்டு வதற்கு நீ சொல்கிருயே - அதை நிர்விசேஷ வஸ்து மாத்திரமே என்று உபதேசபரத்வம் - அது அஸங்கதத்வேந - சரியில்லை உந்மத்தனுடைய பிரலாபமே ஒழிய சாஸ்திரத்தை அறிகிறவன் இவ்விதம் சொல்லமாட்டான்.

तत् त्वमसि- என்பதில் त्वं பதம் சம்சாரித்வ விசிஷ்ட ஜீவ வாசி - இங்கே பிரகரணவிஷ்யமாக விருக்கிறதே (ஸத்வித்யை - ஏகவிக்ஞானம்); ஜீவனைக் குறிக்கும். तत् - பிருஹ்மத்தை பல கல்யாண குணங்களுள்ளதாகவும் - சுருதி ஒன்றினாலே அறியப் படவேண்டியதாயும் - நீ சொல்கிறாயே - அது நிர்விசேஷவஸ்து - அது முழுவதும் தவறாகும். ஆகவே त्वं பதமும் तत् பதமும் ஸாமா நதி சரணத்தினால் ஸாம்யம் சொல்லப்பட வேண்டுமானால் - உன் பிரகாரம் பிருஹ்மத்திற்கு அதன் ஸ்வரூபமாகிற குணங்களை பரித்யாகம் செய்யவேண்டும். நிர்விசேஷ ஸ்வரூபத்தை ஸ்தா பிக்க அதன் முக்யார்த்தத்தைவிட்டு விடவேண்டியது - तत् பதத்திற்கு நிர்விசேஷம் யெனினில் निर्विशेष प्रकाश स्वरूपस्य च - பிரும்மத்திற்கு அவித்யையினால் அதன் ஸ்வரூபமாகிற பிரகாசம் மறைக்கப்படுகிறது என்பதும், அது நிர்விசேஷம் (குணமில்லா ததும்) என்றும் சொல்வது - பிரும்மஸ்ரூபத்திற்கே விநாசம் பிருஹ்மம் ஸ்வயம் பிரகாசமுள்ளது - அதை மறைப்பது என்பது பிரகாசநாசம் என்கிற ஸ்வரூப நாசமாகும் என்று யேற்கனவே சொல்லப்பட்டதாகும் பிருஹ்மத்திற்கு அவ்விதம் நேராது அவித்யாதிரோதாநம் स्वरूपनाश பிரஸங்கத்தினால் அது ஏற்படு வதற்கு பிரஸக்தியில்லை. இம்மாதிரி விஷயத்திலே, त्वं तत् பதங் களுக்கு ஸாமாநதி கரணத்தினாலே - ஒற்றுமையிருப்பதாலே, உன் பிரகாரம் அர்த்தம் சொல்ல வேண்டியதானால் तत् - त्वं ஆகிற இரண்டு பதங்களுக்கும் முக்யார்த்தத்தைப் பரித்யாகம் செய்துவிட்டு லக்ஷணையினாலே - (சுத்த ஜீவனுக்கும் சுத்த பிருஹ் மத்திற்கும் - सोऽयं देवदत्तः என்பதைப்போல) ஒற்றுமை சொல்லி அர்த்த நிர்வாஹம் செய்யவேண்டியதுதான். (முக்யார்த்தம் ஸித்திக்கிறபோது கௌணபிரயோகம் (லக்ஷணையினால் அர்த்தம் சொல்வதும்) ஸத்வித்யா பிரகரணத்திலே तत् त्वमसि வருவ தாலே - அத்வைதிபிரகாரம் சொல்வதானால் - ஏகவிக்ஞானத்தி னால் ஸர்வவிக்ஞானம் கிடைக்கும் என்கிற பிரதிக்ஞையையும் விடவேண்டியதாகும் அது சரியில்லாதபடியாலே.

நாம் சொல்கிறோம் - ஸமாநாதிகரணத்தின் உதவியினாலே - ஏகார்த்தம் (ஒரேவஸ்து) பிரதிபாதனம், அதனாலே-விசேஷணம்

சங்கள் சொல்லப்பட வேண்டிய தாகையாலே - நீ சொல்கிறுப் போல தாத்பர்ய ஒற்றுமை இருந்தால்போதும் என்பது அஸம்பவம் ; விசேஷணங்களை இல்லாதபடி செய்து - அதனுலே வஸ்து மாத்திரம் ஏகத்வம் காட்டுவது - அதற்காக முக்ய அர்த்தத்தை விட்டு விட்டு - லக்ஷண பிரஸங்கமாக அர்த்தம் சொல்வது - சரியில்லை. விசேஷங்கள் (குணங்கள் - தர்மங்கள்) வஸ்துவின் ஸ்வரூபத்தைக் குறிக்கும் தர்மங்களாகும். அதற்கு கௌண (லக்ஷணை) பிரஸங்கம் அவசியமில்லை, சரிவராது. உதாரணமாக நீலோத்பலகம்-நீலம் - உத்பலம் என்கிற இரண்டு பதங்கள் அந்த வஸ்து (உத்பலம் - தாமரை) நீலம் எனப்படும் விசேஷ்யத்துடன் பிரதிபாதனம் செய்யப்படுகிறது. (விசேஷ்யைகத்வ பிரதி பாதன பரத்வேன நீலத்வ, உத்பலத்வ இரண்டையும் விசேஷணத்வயம் - இரண்டையும் சொல்லவரவில்லை, ஆனுல் வஸ்து ஒன்றுதான் எனக்காட்டுவதற்கு, அந்த வஸ்து அந்த விசேஷ்யத்துடன் கூடியது என்று சொல்வதற்கு வந்தாகும். तद्विवक्षायां हि नीलत्व विशिष्टा कारेणोत्पलत्व நீலவர்ணத்துடன் கூடியரூபத்தைக் கொண்ட உத்பலம் - विशिष्टाकारस्यैकत्वं - குணமும் அத்துடன் கூடிய ஆகாரமும் வஸ்துவும் ஒன்ருக ஒரு பொருளிலே வருகிறது साकारस्यैकत्व प्रतिपादनंप्रसज्येत - விருக்கிறது. அதாவது தர்மம் வஸ்துவில் அடங்கியுள்ளது தனித்தனியாக வஸ்துவையோ காட்ட விருப்பமில்லை.

இங்கே இரண்டு ரூபங்கள் - ஒரு ஆகாரத்திற்கு உத்பலமாக விருக்கும் தன்மை; இன்னொரு ஆகாரத்திற்கு நீலத்வம் ஆகிறதன்மை - இரண்டும் குணபரமாக விருக்கின்றன என்கிற நோக்கமில்லை ஆனுல் நோக்கம் யாதென்ருல் குணம வஸ்துவின் ஸ்வரூபத்தில் அடங்கியுள்ளது. அந்தவஸ்து நீலமாகவும் உத்பலமாகவுமிருக்கும் - முதலில் சொல்லியபடி ஆகுமானுல், தோஷம் அன்யோன்ய ஆஸ்ரய தோஷம் யேற்படும் இரண்டாவதில் அது யேற்படாது. அன்யோன்ய ஆஸ்ரயதோஷம் குணத்திற்கும் ஜாதிக்கும் யேற்படும். ஆகவே நீலத்வ உத்பலத்வ - இரண்டினுலும் உபலக்ஷித (காட்டப்பட்ட) வஸ்து ஏகத்வ மாத்திரம் - ஒன்றேதான் ஸாமாநாதிகரணத்திலுல் பிரதிபாதிக்கப்படும்.

ஆகவே सोऽयं देवदत्तः - என்பதில் ஸாமாநதிகரணத்தின் உதவியி ஞல் ஒரு வ்யக்தியைக் காட்டமுடியாது - அந்த வ்யக்தி ஒரு காலத்தில் (अतीत.) இருந்தவன் - தூரதேசத்திலிருந்தவன் - அவன் அதே ஸ்திதியில் இப்போது இருக்கிருன் - (எப்படி?) அருகே நிற்பதாயும் - இப்போது என்கிறவர்த்தமான (நிகழ்) காலத்திலே, இங்கு ஒரு வ்யக்திதான் குரிப்பிடப்படுகின்றது. காலம் தேசம் என்கிற விசேஷங்களை நீக்கிவிட்டால் ஸ்வரூப மாத் திரம் ஐக்யம் ஸித்திக்கும்-ஸாமாநதிகரணத்திஞல் இங்கே நீலோத் பல உதாரணத்திலே-நீலம் அல்லது வேறு ஒன்று பதத்திஞல் ஒரு குணம் காட்டப்பட்டாலும் - அந்த குணம், வேருக, விரோதம் யேற்படுவதாலே, ஸாமாந்ய அதிகரணத்தின் 'சமயம், காட்டப் படுவதில்லே. ஆயினும் அந்த குணம் அந்த வஸ்துவுக்கு ஸ்வரூப நிருபணதர்மமாக பிரதான அம்சமாக பிரதிபாதனம் செய்யப் படுகிறது. இதில் லக்ஷணே வருவதில்லே. ஆனுல் விருப்பம் இது வாக - அதாவது குணமாக ஒரு வஸ்துவுக்கு குறிக்க விருப்ப மில்லாவிடில் - எந்த வஸ்துவுக்கு அது ஸாமாந்ய அதிகரணத் திஞல் காட்டக்கூடிய முக்யாம்ஸமாகவிருக்கிறதோ - அப்போது அந்த விருப்பம் நிறை வேறலாம். இதுதான் ஸாமாநதி கரண விஷயத்தில் ஸ்வபாவம் (தன்மை) என்று சொல்வதால் விரோதம் ஒன்றுமில்லே.

(இந்த விஷயத்தை நாம் விளக்கி - பிரும்ம வித்யா 2-ம் பாகத்திலும்-ஸ்ரீ பாஷ்யமும் வேதார்த்த ஸங் கிரஹமும் என்கிற தலேப்பிலுள்ள விஷயங்களேயும் 2-ம் பாகத்தில்-சாஸ்திர சதுஷ்ட் யம் - ராமானுஜ பாஷ்யத்தில் பார்க்கவும்).

ஆகவே இவ்விதம் நீ வாதிப்பதும் அதற்கு பதில் கொடுப் பதும் - அஸாரம். வாஸ்தவத்திலே -எல்லா வாக்கியங்களிலும் பதங்களுக்கு வ்யுத்பத்தி செய்து - அர்த்தத்தை ஸித்திப்பதற்கு - பதம் வாக்யங்களின் கூட்டு அமைப்பு - ஸம்ஸர்க்கம் விசேஷ மாத்திரம் - ஆனுல் இங்கே நீலம் - உத்பலம் ஸாமாநாதிகரணத் திலே காட்டப்படும்போது ஒரு வஸ்து நீலத்வமாகவும் - நைல் யாதி விசிஷ்ட ஏவ - அந்த வஸ்துவுடன் கூடியதாகவே - வ்யுத புத்தியிஞல் அடையப்படுகிறது. பதங்களின் அர்த்தம் - குறிப்

பிட்ட வஸ்துவுக்கும் மற்ற வஸ்துக்களுக்கு முள்ள சம்பந்தத்தைக் காட்டும், மற்ற பதங்களுக்கும் உள்ள சம்பந்தத்தினுல் அறியப்படுகிறது ; உதாரணமாக नीलमुत्पलमानय - (நீலமான தாமரையைக் கொண்டு வா) - இதில் நீலமாதி விசிஷ்டமேவ आनीयते - நிலவர்ண முள்ளதையே கொண்டு வரவேண்டியது எப்படி "விந்த்யமலைக்காட்டில் மதத்திஞல் திமிரடைந்த யானைக் கூட்டங்கள் இருக்கின்றன" - विन्ध्यारण्यं मदमुदितो मातङ्ग-गणातिष्ठति - இதில் இரண்டு பதங்கள் விசேஷண விசிஷ்டதிதிஞல் (சேர்க்கையினுல் - யானைக்கு விந்தியகாடுகள்; யானைக்கு மதம் பிடித்தல் என்கிற இரண்டு விசேஷணங்கள் இருக்கின்றன) - ஆனுல் அர்த்தம் ஒன்று யானைக் கூட்டங்கள் இருப்பது காட்டப் படுகிறது. இதில் விசேஷணங்களைச் சேர்ப்பதாலேதான் அர்த்தம் ஸித்திக்கிறது.

அதேபிரகாரம் வேதாந்த வாக்யங்களிலும்கூட ஸாமாநாதிகரணத்திலே அறியப்பட வேண்டியது பிருஹ்மம் குணங்களுடன் கூடிய விசேஷண விசிஷ்டமேவ பிருஹ்மம் என்று அறியப்பட வேண்டியது. இங்கே ஒரே ஒரு குணத்தைச் சொல்வதாலே (அந்த வஸ்துவுக்கு) - ஏற்கனவே அந்த வஸ்துவுக்கு பல குணங்கள் உள்ளன - அதனுல் யேற்பட்ட அதன் ரூபம் மீண்டும் அந்த குணத்திஞல் குறிப்பிடப்படுகிறது, என அர்த்தமில்லை. ஆனுல் அந்த வஸ்துவின் நிஜஸ்வரூபமே ஸர்வ விசேஷணங்களால் விசேஷ்யமாக விருக்கிறது. குணங்கள் வஸ்துவைவிட்டு நீங்காதபடி அப்ரதிக் ஸித்ததர்மங்களாக விருக்கிறபடியால் ஸ்வரூப நிரூபணதர்மங்களாகும். அதனுல் सर्वैः विशेषणं स्वरूपमेव विशेष्यम् - அதேபடி (கை லட வ்ருத்த அங்கத்தில்) भिन्न प्रवृत्ति निमित्तानां शब्दानामेकस्मिन्नर्थे वृत्तिः सामानाधि-करण्यम् - ஸாமாநாதி கரணம் எப்போது ஸித்திக்கிறதென்றுல் - (பதங்களுக்குள்ளே) - வெவ்வேறு அர்த்தங்களைக் காட்ட சக்தியுள்ள பதங்கள் ஒரே ஒரு வஸ்துவுக்கு அங்கமாக உபயோகப்படுவதால் ஸித்திக்கும். அதன் நோக்கம் - ஆமோதித்தோ அல்லது நிஷேதம் செய்தோ சில பதங்களைப் பொருளுடன் சேர்த்துச் சொல்லும்போது - அதே வஸ்து சில விசேஷண்

களால் ஏற்கனவே காட்டப்பட்ட ஒரு ஆகாரம் (ரூபம்) - அந்த ரூபத்துடன் கூடிய அந்த வஸ்து இன்னும் சில விசேஷங்களால் யேற்படும் இன்னும் சில ரூபங்களுடன் - வஸ்து ஐக்யம் (ஒன்று) என்று காட்டப்படுகிறது. உதாரணமாக - தேவதத்தன் சியாம நிறமுள்ளவன், யுவா - லோஹிதாக்ஷன் (சிகப்பு கண்ணுள்ளவன்) அதீனன் (மனோபல முள்ளவன்) அகிருபணன் - (பணமுள்ளவன்) அநவத்யன் (தோஷமற்றவன்) இம்மாதிரி உதாரணத்தில் பல விசேஷணங்கள் கூடிய ஒரு வ்யக்தி சொல்லப்படுகிறான். ஸாமாநதி கரணத்திலே - ஏதாவது இரண்டு குணங்கள் சொல்லப் பட்டாலும் - அவை எப்போதும் அந்த வஸ்துவுடன் இருப்பதாக வில்லாதபோது - எப்போதாவது அவை அந்த வஸ்துவுக்கு ஸம்ப விக்குமானாலும் - அப்போதுகூட நாம் ஒத்துக்கொள்ள வேண்டி யது. அந்த இரண்டு பதங்களுக்குள்ளே ஒரே ஒரு பதம் அதன் முக்யார்த்தத்தை - இயற்கையாகவுள்ள குறிப்பிடுதலை - கொள்ள வில்லை - ஆனால் அந்த இரண்டு பதங்களுக்குமே முக்ய அர்த்தத்தைக் காட்டாது என்று சொல்வது இல்லை; ஆகவே நாம் ஒத்துக்கொள்ள வேண்டியது - உதாரணமாக - गौर्वाहीकः - வாஹிக தேசத்தில் இருப்பவன் ஒரு பசு (brute) -; அதேமாதிரி இந்த உதாரணத் திலே - नीलोत्पलादिषु- நீலோத்பலம் - இது மாதிரி மற்றவை களிலும் இரண்டு தர்மங்கள் ஒன்று சேர்ந்து ஒரே வஸ்துவைக் காட்டும்போது -; ஸாமாந்யதி கரணம் ஸித்திக்கலாம்; ஆகவே இங்கே காட்டப்படுகிறது - ஒரே ஒரு வஸ்துதான் - இரண்டு தர்மங்களுடன் கூடியது - उभयधर्मसंप्रतिपाद्यते—

மேலும் நீ சொல்லலாம் - ஒரு குறிப்பிட்ட வஸ்துவின் தர்மத் துக்கு - வேறாக, ஸ்வரூபத்திலே இன்னொரு தர்மத்தினால் அந்த வஸ்துவைக் காட்டும்போது வித்யாஸப்படுமானால் -; ஆகையால் பதங்களின் வேற்றுமை ஸாமாநாதி கரணத்தில் ஒன்றாகவிருப்ப தானாலும் - அந்த பதங்களால் ஒரே ஒரு வஸ்துவைக் காட்ட முடி யாது - அது இம்மாதிரி உதாரணத்திலோ - படம் - கடம் (துணி - பானை) வஸ்துக்கள் வேறாகவிருப்பதாலே - ஸாமாநாதி கரணம் ஸித்திக்காது. ஆகவே ஸாமாநதி கரணத்தில் பதங்கள் ஒரே ஒரு வஸ்துவைக்குறிக்க ஸாமர்த்தியமிராது - எப்போது அந்த வஸ்து வுக்கு பல விசேஷணங்கள் இருப்பினும், ஆனால் ஸாமாநாதி

க்ரணத்தினுல் வஸ்துவின் ஸ்வரூப தர்மங்கள் (அப்ரதிக் ஸித்த தர்மங்கள்) முதலில் காட்டப்பட்டு, அந்த அந்த விசேஷணங் களாலே; பிறகு அந்த பதங்கள் ஒரே ஒரு வஸ்துவைக் காட்டுவ தாகவுமிருக்கின்றன. विशेषणमुखेन स्वरूपमुपस्थाप्य तदैक्यं பிரதி பாதன பரத்வமேவ,

சரி, அவ்விதமிருக்கலாம் - ஒரு நிபந்தனை - எப்போது வஸ்து இரண்டு விசேஷணங்களோடு கூடுவதினுலே - அந்த வஸ்துவைக் காட்டுதலுக்கு-ஒரே ஒரு வஸ்துதான் என்பதற்கு விரோதமாகும். இங்கே அப்படியில்லை. ஒரே ஒரு வஸ்துதான் இருக்கிறது - வஸ்து ஐக்யம் என்பதற்கு எது தடையாக விருப்பது என்றால், அந்த வஸ்து இரண்டு தர்மங்களுடன் கூடிய சம்பந்தம்-அந்த சம்பந்தம் யேற்படினும் அது ஒரே ஒரு வஸ்துவைக்காட்ட அந்த இருதர்மங் களால் காட்ட, யோக்யதை பெற்றதில்லை. இத்தகைய அஸாமர்த் தியம் (ஒரே ஒரு வஸதுவை காட்டுவதில்) - கடம் படம் (பானை - துணி) உதாரணங்களில் காணலாம். - இவை வேறு பிரமாணங் களால் ஒன்ருகலாம் - ஆனுல் ஸாமாநதி காரணத்தினுல் ஆகாது. ஆனுல் நீலோத் பல உதாரணத்தில்-அதுயாதிரி இதர உதாரணங் களிலும் அம்மாதிரி விரோதம் காணப்படுவதில்லை. அதுபோல, எதில் வஸ்து விரோதம் காணப்படவில்லையேப - உதாரணமாக தண்டித் - தடியை வைத்திருப்பவன் - குண்டலவாந்-(குண்டலம் அணிபவன்)-இந்த உதாரணங்களில் மனிதன் ஒன்றுதான். ஒரு தர்மத்தினுல் அந்த வஸ்துவுக்கு உருவம் ஏற்படுகிறது. அதே மாதிரி ருசியைக்கொண்டது; வாசனையைகொண்டது; இவைகள் தர்மங்கள் - ஒரே வஸ்துவில் சம்பந்தம் பெற்றவையாகக் காணப் படுகின்றன.

இங்கே சொல்வது - அம்மாதிரி விரோதம் ஒன்றுமில்லை; ஒரு வஸ்துவுக்கு இரண்டு தர்மங்களின் சேர்க்கை - ஸாமாநதி கரணத் தினுல் காட்டுவது ஒரே வஸ்துதான் - அதற்கு தர்மங்களைக் குறிக் கும் பதங்களால் வித்யாஸத்தினுல் காட்டப்படுகிறது. இல்லாத போனுல், ஒரே வஸ்துவை நிர்தேசிக்க, வஸ்துவின் நிஜ ஸ்வரூபத் தைக் காட்ட ஒரு பதத்திற்குமேல் பல உபயோகப்படுத்துவதற்கு காரணம் இல்லை. இவ்விதமாக - அவற்றிற்கு ஸாமாநதி கரணம்

ஸம்பவிப்பதில்லே. தர்மங்களுக்குள்ளே பரஸ்பரம் சம்பந்தம் - அந்த தர்மங்களுக்கும் அந்த வஸ்துவுக்குமுள்ள சம்பந்தம்-இவை கள் எவ்விதமாயினும், ஸாமாநதி கரணத்திலே பதங்களால் காட்டப்படும் விசேஷம் - அது அந்த வஸ்துவுக்கு எப்போதாவது ஸம்பவிக்கலாம் - நித்யமாக ஸ்வரூபத்தோடு கலந்து வஸ்துவின் யாதிருச்சிக தர்மமாக ஏற்படுமாகில் அப்போது அந்த வஸ்து ஒரே ஒரு யாதிருச்சிக தர்மத்திஞல் குறிப்பிடப்பட்டு நன்கு காட்டப் படும்; அதஞலே மற்ற யாதிருச்சிக தர்மங்களும் அர்த்தமில்லாமல் போய்விடும். வேறு ஒரு ஆகாரம் (வடிவம்) மற்ற யாதிருச்சிக தர் மங்களால் வஸ்துவின் ஸ்வரூபத்திற்கு ஒப்புக்கொள்ளப்படுமாஞல் அப்போது இவ்விதம் சொல்வதற்கு சரியாகும் - அந்த வஸ்துவின் நிஜ ஸ்வரூபம் பாதிதமானதே. இதஞல் ஸவிசேஷ த்வமே பிரஸங்கமாகும்.

सोऽयंदेवदत्त: -(அவனே இந்த தேவத்தன்) என்கிற உதார ணத்திலே; லக்ஷணையிஞல் அர்த்தம் சொல்வதற்கு லவலேசமும் இடமில்லே. விரோத அபாவாத்-ஏனெனில் விரோதமில்லே-வஸ்து வில் இல்லே-ஆஞல் தேசகாலங்களில் உண்டு. இந்தக் காரணத்தி ஞலே सोऽयं - என்று பிரத்யபிஜ்ஞைசெய்து, காலத்வய ஸம்பந்தத் தாலே வஸ்து (புருஷன்) ஒன்றுதான்-வஸ்து ஐக்யம் ஏற்படுகிறது. இல்லாதபோஞல் பிரத்யக்ஷ காட்சிகளில் விரோதம் ஏற்படும் (முந்திப்பார்த்த தேவதத்தன் வேறு - இப்போது இந்த விடத்தில் காணப்படும். வ்யக்தி வேறு - வெவ்வேறு தர்மங்களுடன் கூடிய வன் என்று; தேச வித்யாஸத்திஞல் யேற்படும் விரோதம் (அந்த இடம் வேறு-இப்போது காணப்படும் இடம் வேறு) அது காலங் களின் பேதங்களாலே இல்லேயென்று ஆகவிருகிறது.

எந்தக் காரணத்திஞலும்-ஸாமாநதி கரணத்தில் உபயோகப் படுத்தப்படும் பதங்கள் ஒரே வஸ்துவைக் குறிப்பதில் ஸாமர்த்திய முள்ளதாகில்- அந்த வஸ்துவுக்கு பல விசேஷணங்களிருப்பினும் அதே காரணத்தில் ஸோமத்திற்குப்பதிலாக காரணங்கள்றைக் கொடுத்து - अरुणयैक हायान्या पिङ्गाक्षया सोमं क्रीणाति - விலேக்கு வாங்குவது-(ய ஜு. தை 6-1-6-7 ஒரு வருஷ வயது உள்ளதாயும்- மேப்பு நிறமாகவும் இருக்கவேண்டியது. அந்த கன்றுக்கு: [illegible]

பட்டிருக்கிறது. ஆகவே இவ்விதம் சொல்லப்படுகிறது. இங்கே வஸ்துவாகிற கன்றுகுட்டி - சிகப்பு நிறமுள்ளது. ஒருவயது என்கிற இரண்டு தர்மங்கள் ஒரே ஒரு செய்கையில் (கிரயம் கொடுத்து வாங்குவது) · சம்பந்தம் கொண்டிருக்கிறது. அதனாலே விதிக்கப்படுகிறது. அந்த பதங்கள் ஒரே ஒரு வஸ்துவைக்குறிக்கின்றன. अर्थैकत्वे द्रव्यगुण योरैककर्म्यान्नियमः स्यात् - (பூர்வ. மீம் 1. 3-1-12); இங்கே-பூர்வபக்ஷி இவ்விதமாக அபிப்ராயப்படுகிறான்- अरुणया पिङ्गाक्ष्या एकहायन्या गवा सोमं क्रीणातीति - अरुण - என்கிற வார்த்தை இதில் சிகப்பு நிறத்தன்மையாகிற குணத்தை (கன்றுக்குட்டியின் நிறத்தைக் காட்டுகிறது-ஏனெனில் குணம்-ஜாதியைப் போல வஸ்துவின் சரீரத்திற்கு ஒரு விசேஷத்தன்மையை-திரவ்ய பிரகாரதயா ஸ்வாபாவாத்-காட்டுகிறபடியால் திரவிய பர்யந்தம் வரை சிகப்புத் தன்மையைக்காட்டுகிறது. அதேமாதிரி சிகப்பு தன்மையில்-ஏகாயந- (ஒரு வருஷம் வயது காளைக்கன்று) விஷயத்தில் இந்த சிகப்புத்தன்மை அன்வயம் சேர்ந்திருப்பதில்)யாதொரு நியமமில்லை-ஏனெனில் ஒரே விதியில் இரண்டு கட்டளைகள்-ஏகாயநமும் அருண நிறமும் இரண்டு இருக்கிறதிற்கு விதிகள் இருக்கவேண்டிய நிர்ப்பந்தமில்லை. அந்த விதிக்கு ஒருவன் விலை கொடுத்து ஸோமத்தை வாங்கவேண்டும்-சிகப்பு நிறமுள்ளதும் - ஒரு வருடம் வயதானதும் கன்றுக்குட்டியைக் கொடுத்து விலைக்கு வாங்கட்டும் - என்பதில் ஒருவயது கன்று-(விலைக்குப் பண்டமாற்று) சிகப்பு நிறமுள்ளது. இப்படி இரண்டுவிதமான நியமங்கள் சரியாகாது. இந்தக் காரணத்தில் வாக்யத்தை உடைத்து-எங்கே அருணயா (சிகப்பு) வருகிறதோ-அதனால் ஒரு விசேஷத்தை வித்யாஸமின்றி காட்டி-அந்த சிகப்பு தன்மை அந்த யாகத்தைச் சொல்லும் பிரகரணம் முழுவதும் எல்லா வஸ்துக்களிலும் அடங்கியிருக்கிறது - என்கிற அர்த்தம் கொடுக்கிறதற்கு-வாக்யச் சேதம் பண்ணவேண்டும். சிகப்பு अरुणयेति - ஸ்திரிலிங்கத்தைப் பிரயோகம் செய்திருப்பது - பொதுவாக அங்கே கூறப்பட்ட அவசியமான எல்லா வஸ்துக்களையும் - அவை எல்லாவிதமான லிங்கங்களாக விருக்கிறபடியால் அவைகளைக் காட்டுவதற்கே. ஆகவே சிகப்பு நிறத்தன்மை விஷயத்தில் ஏகாஹாயன (ஒரு வருஷம் வயதுள்ளகன்றுடன்) சம்பந்தம் எப்போதும் இருக்கவேண்டிய அவசியமில்லை என்கிறார்கள்.

இதற்கு பதில் நாம் சொல்வது - இங்கு வஸ்துவும் (கன்று) குணமாகிற சிகப்பும் இரண்டும் ஒரு செயலுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது (விலைக்கு வாங்குதல் பண்டமாற்று) - அப்போது நியமம் அந்த இரண்டும் ஒரே வஸ்துவைக் குறிக்கவேண்டியது. (பூர். மீ III - 1 - 12) अर्थैकत्वे द्रव्यगुण योरैक कर्म्यनियमः स्यात्। अरुणयै-कहायन्या - இப்பதங்கள் அருணவிசிஷ்டத்ரவியம் ஏகாஹயனம் - ஸாமாநதி கரணத்தாலே ஸித்தம் - அருணய ஏகாஹயனம் - இவைகளால் வஸ்து சிகப்பு நிறத்தால் லக்ஷணமாகக் காட்டப் பட்டது (அந்த வஸ்து - ஒரு வயதுள்ள கன்றுக்குட்டி) இங்கே இரண்டு பதங்கள் ஒரே திரவியத்தைக் காட்டுகின்றன. இதனால் என்ன ஸித்திப்பது - கன்றுக்குட்டி ஒரு வயதுள்ளதாகவும் - சிகப்பு நிறமுள்ளதாயும் - இரண்டும் அருணயா என்கிற பதத்தின் சம்பந்தம் சிகப்புடன்; ஏகாஹயனத்ரவியம் அருணகுணத்தைக் காட்டும் பதத்தினால் விசேஷண விசேஷ்ய பாவத்தினால் ஸம்பந்தம் கொண்டு இருப்பதால் கிரியா ஐக்ய ஏககர்மாவுடன் அன்வயம் - விரோதமில்லை என்பதாகும். ஒரு செயலாகிற வாங்குதலுடன் சம்பந்தத்தில் விரோதமில்லை. ஆகவே அருண நிறத்வம் - திரவியத்துடன் (கன்றுடன்) சம்பந்தம் இரண்டும் அவசியம் எனக் காட்டப் பெற்றது. இந்த மாதிரி சம்பந்தம் - கிரியாஸம்பந்தம் - (ஒரு வயதுள்ள கன்றை); அது மாதிரி சிகப்பு நிறமுள்ளது - அத்துடன் சம்பந்தம் - ஒரு விதிவாக்யமாக ஏற்படுமானால் - அந்த ஒரு வாக்கியத்திற்கு இரண்டு அர்த்தங்களைக் கொண்டதாகும். ஆனால் இங்கே இம்மாதிரியில்லை. अरुणया - (சிகப்பு) என்கிற பதத்தாலே, எந்த வஸ்து சிகப்பு நிறத்துடன் கூடியதோ - அது காட்டப்படுகிறது. அதனால் என்ன தெரிகிறது - ஸாமாநாதி கரணத்தினாலே - சிகப்பு நிறத்வம் ஏகாஹயனத்வம் - இரண்டிற்கும் அர்த்தம் கிடைப்பது ஒரு வயதுள்ளகாளைக் கன்றாக விருப்பதுடன் அதன் சிகப்பு நிறமாகிற குணத்துடன் சம்பந்தம் என்பது இல்லை. तस्यैकहायनीत्वमात्रमवगम्यते न गुण संबन्धः। விசிஷ்டதிரவ்ய ஐக்யமேவஹி (அந்த வஸ்துவுடன் கூடச் சேர்ந்திருப்பதே) ஸாமாநதி கரணத்தின் அர்த்தம். வஸ்து ஒன்று— அதற்கு பல விசேஷணங்கள் உண்டு. भिन्नप्रवृत्तिनिमित्तानां शब्दानामेकस्मिन्नर्थे वृत्तिः समानाधिकरणम् - இதுதான் அதன் லக்ஷணம்.

ஸாமானதிகரணம் யேற்படும் பதங்களுக்குள்ளே அந்த பதங்க ளுக்கு வெவ்வெறு அர்த்த ஸாமர்த்தியம் உண்டு. அவைகளினுல் ஒரே ஒரு வஸ்துவைக் காட்டுவதற்கு-அந்தவஸ்துவுக்கு அந்த பதங் கள் விசேஷணங்களாக அப்ரதிக்ஸித்ததர்மங்களாக-காட்டுவதாம். உதாரணமாக, அது இவ்விதமாகவிருக்கிறது-रक्तः पटो भवति- இந்த துணியின் நிறம் சிகப்பு-இது மாதிரி வாக்யங்களில் ஒரே வாக்யம்—ஒரே வஸ்து—அப்படி பதங்கள் இருப்பதால் ஸித்திப் பது. ஐகார்த்தம்-ஏகவாக்யம். வாஸ்தலத்திலே இவ்வாக்யத்தின் நோக்கம் - துணியுடன் சம்பந்தம் கொண்டது நிறம்—அது भवन - क्रिया சம்பந்தம் (இருக்கிறதாக-சம்பந்தத்தால்) வாக்ய வ்யாபாரம் யேற்படுகிறது. துணிக்கு சிகப்பு நிற சம்பந்தம் - रक्तः (சிகப்பு) என்கிறதால் தெரிகிறது. ஸாமாநதி கரணத்தினுல் இவ்வளவு தான் தெரியவரும் - துணி அம்மாதிரியான திரவியம் அது சிகப்பு நிறத்துடன் சம்பந்தம் கொண்டது.

ஒரு குறிப்பிட்ட வாக்யத்திலே-அது ஸமாநாதி கரணத்தி ஞல் அர்த்தம் சொல்லப்படும்போது—ஒரு வஸ்து ஒரு குணத் தாலோ, அல்லது இரண்டு தர்மங்களாலோ-அல்லது பல குணங் களாலோ (விசேஷணங்களாலோ) சொல்லப்பட விரும்பும்போது, அந்த வஸ்து குறிப்பிட்ட பதங்களால் காட்டப்பட்டு-எப்படி யென்றுல்-காரகனுடைய வேற்றுமை விகுதியினுலோ-அல்லது முதல் வேற்றுமை விகுதியாலே (afix)-அதனுலே ஸமாநதிகரணம் ஏற்பட்டு-இவ்விதமாக பல தர்மங்களுடன் கூடிய வஸ்து ஒன்றே தான். அந்த ஒன்று (திரவியம் ஏகம்) இம்மாதிரி கிரியா பதத் துடன் வாக்யத்தில் சம்பந்தம் கொண்டதாகவிருக்கிறது—(सर्व विशेषण विशिष्टोऽर्थ एक इति ज्ञापयित्वा ; तस्य क्रियासंबन्धाभिधानः - विवक्षितम् —இதை நாம் உதாரணத்தில் காட்டுவோம். देवदत्तः श्यामो युवा लोहिताक्षो दण्डी तिष्ठति, தேவதத்தன் சியாம நிறமுள்ள வன் யுவா - சிகப்பு கண்களுள்ளவன் - தண்டத்தை உடையவன் குண்டலத்தை உடையவன் - இருக்கிறுன் ; (கிரியாபதத்துடன் சம்பந்தம்— இதில்) नीलमुत्पलमानय, गामानय शुक्लां शोभनाक्षीं मृ- (நீலோத் பலம் கொண்டுவா-பசுவைக் கொண்டு வா-வெள்ளை நிறமுள்ளதும் அழகிய கண்களுள்ளதும் (பசுவை) கொண்டு வா.

(6) மாந்திர வர்ணத்திலும் सत्यं ज्ञानं अनन्तं பிருஹ்ம என்பதில் பிருஹ்மமே பிராப்யம் எனவும் ஜீவனை பிராப்தாவாகவும் கூறியது.

(7) முக்த அவஸ்தையிலும் ஜீவனுக்கு ஜகத் வியாபாரம் வர்ஜம் - ஆகவே ஸ்ருஷ்டிக்கு வேண்டிய விபஸ்சித் (பேரறிவு) ஜீவனுக்குப் பொருந்தாது பரமாத்மாவுக்கே தகும். ஆகவே ஞான ஆனந்தம் பிரும்மத்துக்கே ஸ்வரூப நிரூபக தர்மங்களாகும். ஜகத் காரணத்வம் - விபஸ்சித்திஞல் யேற்படுவது. பலவித கல்யாண குணங்கள்-பஹீவ்ரிஸமாஸத்தில் கொண்டதாக பிருஹ்மம் ஓதப் படுகிறது. எவன் இந்தவிதமாக - வாக்மனஸ்ஸுக்கு எட்டாதபடி அளவிடமுடியாதது பிருஹமானந்தம் என்று அறிகிருனே, அவன் யாரிடமிருந்தும் பயப்பட அவசியமில்லை-என்பது ஸித்தம்.

(8) भेदव्यपदेशात्—பிராணமயன், மஞேமயன் - என்பதில் பிராணமயன், மஞேமயன் - மயட்டுக்கு பிராணன் மனம் என்று ஸ்வார்த்தம் சொல்லி-அறிவை உடைய விக்ஞானமயனை (ஜீவனை)ச் சொல்லி-அவனைத் தரிக்கும் பரமாத்மா என்று சொல் லியபடியால் பரமாத்மா ஆனந்தமயன்.

சித்தாந்தத்தில் ஆனந்தமயன் சரீர ஆத்மபாவத்திஞல் - ஜீவனைத் தரிக்கிற பரமாத்மாவுக்கே நிருபாதிக ஆனந்தமுடைய தால் - அது ஸ்வரூப லக்ஷணமாகும் ஸ்வரூப நிருபண தர்மமாகும் ஞானம் ஆனந்தம் என்பது.

எம்பெருமானுக்கு துக்கம் லவலேசம் இல்லையா என்கிற கேள்வி எழும். ஆனந்த பிராசுர்யம்-அல்ப துக்கம் இதற்கு பரிஹாரமாக அபஹதபாப்மத்வாதி குணங்கள் ஓதப்பட்டன பர மாத்மா விஷயத்தில்-ஆகவே அல்ப துக்கமும் இல்லை என்பதாகும்.

உபநிஷத் பாஷ்யக்காரர் "விசோக;—ஹேய சம்பந்தமில்லா தவன். நிருபாதிகமாகவே விபஸ்சித் சப்தத்திஞல் சொல்லப்பட்ட ஸர்வக்ஞத்வம்-அதேபோல ஆனந்தமும்-ஆகவே ஆத்மா அந்யோ அந்தர ஆத்மா ஆனந்தமய: — என்று உப ஸம்ஹாரம் செய்யப் பட்டு-ஜீவனல்ல பரமாத்மாவே நிருபாதிக ஆனந்தமயன் என்று முடிக்கப்படுகிறது.

அத்வைதிகள் இந்த அதிகரணத்திற்கு நிர்விசேஷ பிருஹ்மம் சொல்லப்படுகிறது என்கிருர்கள். இது பாஷ்யக்காரர் அபிப்ரா யப்படி தவறாகும். ஆனந்தம் பகவானுக்கு ஸ்வரூபநிரூபண தர்மமாகும்.

### அதிகரணம் 7 - அந்தரதிகரணம் (1-1-7)

இதுவரை சொல்லியதால் - ஜீவன் மந்த (அல்ப) புண்ணியம் உள்ளவன்; அவனுக்குத் தன் இச்சைப்படி ஜகத் ஸ்ருஷ்டியைப் பண்ண சக்தியிராது அப்பேற்பட்ட ஜகத் ஸ்ருஷ்டிக்கு அதிசய ஆனந்தயோகம் (ஆனந்தத்துடன் கூடிய யோகம்)பய அபயஹேது வாகவிருப்பது - இத்யாதி பரமாத்மாவுக்கே சொல்லப்படும் லக்ஷணங்கள் - ஜீவனுக்கு இருக்கமுடியாது - ஏற்படுவதற்கு பிரஸங்கமில்லை. இருந்தாலும் ஜீவர்களிலே விலக்ஷண புண்யவான்கள் - சூரியன் - இந்திரன் - பிரஜாபதி ஆகிய நாமதேயமடைந்தவர்கள் அவர்களுக்கு ஜகத்காரணத்வம் ஏற்படலாமே-என்கிற சங்கை எழ-சூத்ரக்காரரே இந்தப்பேய் சந்தேகத்தை விரட்டுகிறார்-இந்த அந்தராதி அதிகரணத்தில்.

### अन्तस्तद्धर्मोपदेशात् (1-1-21)

அந்தஸ்தத்தர்ம உபதேஸாத் (1-1-21)

அந்தः-ஆதித்யனுக்கும் - கண்ணுக்கும் உள்ளிருப்பவன் பரமாத்மாவே - தத்தர்மோபதேஸாத்-பரமாத்மாவுக்கே உரியதான தன்மைகளை (தர்மங்களை) உபதேசிப்பதாலே.

ஜீவன் அற்ப அறிவு -அற்பசக்தி - அற்ப பரிமாணமுள்ளவன்- அத்தகையவனுக்கு ஜகத்காரணத்வம் ஏற்படமுடியாது. ஆயினும் சில விசேஷ சக்திபெற்ற புருஷர்கள் உதாரணமாக ஆதித்ய புருஷன்-அக்ஷி புருஷன்-இவர்களுக்குக் கூடுமோ-என்கிற சந்தேகம் போக்கடிக்கப்படுகிறது.

(ஸத்வித்யையில் ஆத்மா சப்தத்தினால் பிருஹ்மத்தை காட்டிற்று ஆனந்த வல்லியிலும் आत्मन् आकाश - என்று ஆத்ம சப்தத்தால் பிருஹ்மத்தைச் சொல்லியது-அது ஜகத் காரணம் என்றும் அதற்கு பயந்தே எல்லோரும் வேலை செய்கிறார்கள் என்றும்; ஸ்வசங்கல்பத்தினால் ஸ்ருஷ்டிக்கிறார். இதனால் பரமாத்மா ஸர்வ சரீரியாகி எல்லோரையும் ரக்ஷிக்கிறார் எனக் காட்டப்பெற்றது. அந்த பரமாத்மா உத் என்றும், புருஷன் என்றும் சொல்லப்படுபவன் - அவனுக்கு இருப்பிடம் சூர்யமண்டலம் - அக்ஷிணி - என்று

சொல்லி दृश्भोगा यतनेन्द्रिया श्रयशरीर श्रवणात् - இதனால் அக்ஷி புருஷன் என்கிறபடி ஆகி-அதனால் जीवत्वसिद्धेः- என்றும் காட்டப் படுகிறது.]

*சா. உ. 1-6-7ல்* य एषो अन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते - हिरण्यश्मश्रुः हिरण्यकेशः आप्रणखात् सर्व एव सुवर्णः । तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी । तस्योदिति नाम - स एष सर्वेभ्यः पाप्मभ्य उदितः उदितः ; उदेति ह वै सर्वेभ्यः पाप्मभ्यो य एवं वेद । तस्यर्क्च साम च गेष्णौ इत्यधिदैवतम् ; अथाध्यात्मम् - अथ य एषोऽन्तरक्षिणि पुरुषो दृश्यते, सैवर्क्, तत् साम, तदुक्थम्, तद्यजुः तद्ब्रह्म, तस्यैतस्य तदेव रूपं यदमुष्य रूपम् ; यावमुष्यगेष्णौ तौ गेष्णौ; यन्नाम तन्नाम"—इति ।

அந்த புருஷன் (எவன்) சூர்யமண்டலத்தின் மத்தியில் காணப் படுகிறானோ - ஹிரண்மய: (தங்க நிறமுள்ளவன்) அவனுக்கு ஹிரண்யஸ்ம ஶ்ரு:-போன்ற தாடியை உள்ளவன் - ஹிரண்யகேச முள்ளவன் தலையிலிருந்து நகம்வரை ஸுவர்ண நிறம். அவனுடைய இரண்டு கண்கள் कप्यासं पुण्डरीकमेव - अक्षिणी - அவனுக்கு 'உத்' என்கிற நாமம் (மிகப்பெரியவன் என அர்த்தம்) அவனே ஸர்வ பாபங்களுக்கும் उदितः - மேற்பட்டவன் அதீதன் ஸ்பர்சிக்கப்பட முடியாதவன் उत् என்று அவனை எவன் அறிகிறானோ அவனும் ஸர்வ பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான், ருக் ஸாமாக்கள் அவனை யே புகழ்ந்து பாடுகின்றன. அவனையே அதிதைவதம் (தேவதை களில் இருப்பவன்) என்கின்றன. அந்த புருஷனே - அத்யாத்மத் திலே நம்மிடம் இருக்கிறான், அவனே நம் கண்களின் உள்ளே अन्तरक्षिणी पुरुषः - என்று காணப்படுகிறான், அவனே ருக் ஸாமா வாகவுமிருக்கிறான், அவனே உக்தமாகவும் இருக்கிறான் (உக்தம் ஸஸ்திரங்கள் எனப்படும் கீதங்கள் புருஷ ஸூக்தம்மாதிரி) அவனே யஜுஸ் அவனே பிருஹ்மம். அந்த அக்ஷிணி புருஷனின் ரூபம் சூர்ய மண்டல அந்தர்வ்ருத்தியான புருஷனின் ரூபத்தைபோல तदेव அதேதான் என்று சொல்லும்படி இருக்கிறது. சூர்ய மண்டல அந்தர் வ்ருத்தி புருஷனைபற்றிய கீதங்கள்-இந்த புருஷனைப்பற்றிய கீதங்களும் ஒன்றுதான். சூர்ய மண்டல புருஷனுக்கு எந்த பெயர் உண்டோ அதுவே இந்த புருஷனுக்கும் ஆகும். यन्नाम तन्नाम इति—

**விளக்கம்** :—உத்கீத பிரகரணத்திலே - சாந்தோக்யத்திலே- உத்கீதமும் பிரணவமும் ஒன்று என நினைத்து - அதைப் பல கிரணங்கள் நிறைந்த சூர்யனாகவும் - பல பிராணன்களுக்கு (இந்திரியங்களுக்கு) ஆதாரமான பிராணவாயுவாகவும் திருஷ்டி செய்பவனுக்கு பல நன்மைகள் உண்டாகும் எனச் சொல்லி - அங்கங்களான உபாஸனங்கள் பலவற்றைக் கூறி - ஆதித்ய மண்டலத்தினுள்ளே ஹிரண்மய திவ்யமங்கள விக்ரஹனாக விருக்கும் பரமாத்மா - புண்டரீகாக்ஷன் - அந்த புருஷனை அதிதைவதமாக (சூர்யனிடமும்) அத்யாத்மத்தில் (நமது கண்களில்) தன் இருப்பிடமாகவும் சொல்லி - அந்த எம்பெருமானாகவும் - உபாஸிக்கலாம் என்று சொல்லிற்று அவனே கானம் செய்யப்படும் எல்லாருக்குகளுக்கும் - வைதிக கார்யங்களுக்கும் விஷயமாகிறான். இப்படி உபாஸிப்பதால் மேலுள்ள உலக போகங்களும்-அத்யாத்மத்தில் (கண்ணில்) உபாஸிப்பவனுக்கு மனுஷ்ய போகங்களும் கீழுள்ள லோகத்தின் போகங்களும் - ஆள்கின்றவனுமான எம்பிரானை உபாஸித்தால் பல போகங்களும் கிடைக்கப் பெறுகின்றன. இங்கே உத்கித உபாஸனை - உத்கீதத்தை நினைத்துச் செய்யும் திருஷ்டி உபாஸனமாகும் எல்லாமுள்ள பெருமானாக உத்கீதத்தை நினைத்து - செய்யும் திருஷ்டி உபாஸனையாகும்)

முதலில் எம்பெருமானின் திருமேனியை வர்ணிக்கிறது. பொன்மயமான புருஷன் இத்யாதி. கண்கள் செந்தாமரை போன்று-தஸ்ய யயாகப்யாஸம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணீ என்று சொல்லிற்று. கப்யாஸம் என்பதற்குப் பொருள் கூறும்போது சர்ச்சை உண்டாயிற்று. சங்கரர் கருங்குரங்கின் ஆஸனவாய் போன்ற நிறமுள்ள சிகப்பு தாமரைப் பூ எவ்வாறு இருக்குமோ - அவ்வாறு என்று பாஷ்யமிட்டார். ஆனால் வேதத்தில் நபும்ஸமாயிருக்க-கப்யாஸ; என்று புல்லிங்கமாக்கினார். எம்பெருமானார் வேறுவிதமாக அபிப்ராயப்பட்டார். எம்பெருமானுக்கு ஹேய சம்பந்தமில்லை. ஸகல உத்கிருஷ்டமான கல்யாண குணங்களுக்குத் தாமன்-இருப்பிடம் ; அவருக்கு ஈனமான உவமை தகுமா என்று நினைத்து - தாமரையே நேருவமை, அதற்கே உவமை அது என்று ஸாமாநதி கரணத்தினால் பொருள் கூறினார். குரங்கின் ஆஸனவாய் கண்ணுக்கு நேராகி உவமையன்றே. யாதவ பிரகாசர்

இவ்வாறு பொருள் கூறும்போது பகவத் ராமானுஜர் கண்ணீர் விட்டு விட்டு தாம் கீழ்க்கண்டவாறு உரைத்தார். அதாவது மிகப் புராதனமான திரமிடாசார்ய பாஷ்யத்திலே கப்யாஸ என்ற சொல்லுக்கு ஆறு பொருள்கள் உரைக்கப்பட்டன. அவை- குரங்கின் ஆஸனவாய் போன்றது - சிறிது மலர்ந்தது - தண்டோடு இருப்பது - சூர்ய கிரணத்தால் மலர்ந்தது சூர்ய மண்டலம். ஜலத்தில் இருப்பது - என்பன. குரங்கின் ஆஸனவாய் - பொருள் சரியாயினும் - நிகிருஷ்ட (நீசமான) உதாரணமாம் (ஈனஉவமை யாம்) தாமரைப் பூவிற்கே இது உவமை என்னிலும் அதாம் உவமைக்கு உவமை வேண்டுவதில்லை. புண்டரீகம் என்பதற்கு வெண்தாமரைக்குப் பொருள் கொள்ளாமலிருப்பதற்கு - புண்ட ரீகபதம் செந்தாமரையிலே வேத பிரஸித்தமாதலால் - இதுவும் வீணும். இதிலிருந்து எளிதில் கிடைக்காது. ப்யாஸகம் என்று இருப்பின் கூடலாம். மூன்ருவது - சூர்ய மண்டலமும் ஹருதய புண்டரீகமும் எப்படி பகவானுக்கு யிருப்பிடமோ - அதேபிர காரம் கண்களும் இருப்பிடம் எனப் பொருள்தேறும். இது திருமேனி வர்ணனை, சந்தர்ப்பத்திற்குச் சேராது. ஆகையால் திரமிட பாஷ்யத்தில் தோன்றும் மூன்று அர்த்தங்களைக் காட்டி விட்டு-மேல் மூன்றையே தழுவினது என்று உபஸம்ஹாரம் செய் தார் ராமானுஜர். கப்யாஸம்= ஜலத்தில்-ப்யாஸம் இருப்பது - கபி - ஜலத்தை உட்கொள்ளும் தண்டில், ப்யாஸம்= இருப்பது; கபி-ஜலத்தை உட்கொள்ளும் தண்டில், ஆஸம் இருப்பது; கபி - சூர்யனுல் ஆஸம் - மலரச் செய்யப்படுகிறது: அம்மூன்றும் பொருந்தும். எல்லாவற்றையும் சேர்த்தால், ஆழமான ஜலத்தில் தண்டோடு சூர்யகிரணம் பட்டு மலர்ந்த செந்தாமரை போன் றன—எம்பெருமானின் திருக்கண்கள் - ஸஹஸ்ரநாமத்தில் விருஷாகபி: என்று பாடமிருப்பதால்-ஜலத்தை உட்கொள்ளுகிற கபி என்ற சூர்யன் ஆவன். இப்படி கப்யாஸ புண்டரீகாக்ஷ திருஷ்டியை உத்கீதத்திலே சொல்லிற்று. (இங்கு நமது விளக்கம்- ஜிக்ஞாஸாதி கரணத்திலும் ஸ்ரீ பாஷ்யக்காரரின் வாழ்க்கைச் சரித்திரத்திலும் - பிருஹ்மவித்யா பாகம் 2ல் காண்க.)

அவர் வேதார்த்த ஸங்கிரஹத்தில் மூன்று அர்த்தங்களையும் ஒன்ருக்கினுர்.

வாக்ய கிரந்தத்தில் கம் பிபதீதி கபிः — (सूर्यः) पद्मनाला च। कपिना (सूर्येण) भास्यते विकास्यत इति; कपि भूते नाले आस्त इति; के जले पयास्ते—वर्तत इति च कप्यासमिति। புண்டரீக விசேஷணம் - ரக்தாம் போலும். सोमपाशब्दवत् - जलेपाश्वर्थको नालवाची कपीति सप्तम्यन्तम् - नाले என அர்த்தம்.

ஸ்ரீ பாஷ்யம்: இங்கே ஸந்தேகம் - அயம் (இந்த) அக்ஷி புருஷன் (கண்ணுக்குள்ளே வசிப்பவன்) - ஆதித்யமண்டல அந்தர் (உள்ளேயிருக்கும்) வ்ருத்தி புருஷன் (இந்த இரு இடங்களிலும் இருக்கும் புருஷன்) அதே ஜீவனாகும் - யார் என்றால் - எந்த ஜீவனுக்குத் தனது புண்ய கர்மாக்களின் சேர்க்கைக் கூட்டங்களால் (உபசயை:) - அதன் காரணமாக யேற்படும் ஐஸ்வரியங்களால் ஆதித்யனாகவும் - மற்றும் (அவனைப் போன்ற தேவதைகள்) - என்று சொல்லக்கூடும் - ஜீவனே ஆகும் என்பதாகும்; இல்லை பரமாத்மாவா (சூர்யனைவிட வேறானவர்). பூர்வபக்ஷி - ஜீவனேயாகும் ஏன்? அவனுக்கு தேகமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஜீவனுக்குத்தான் யேற்படும் தேக ஸம்பந்தம். சரீர சம்பந்தம் ஜீவனுடைய கர்மானுகுணமாக பிரிய அப்ரிய யோகாய - புண்யபாப பலன்களை அனுபவிப்பதற்கு யேற்படுவதாகிறது. ஆகையால் முக்ததசையில் ஜீவனுக்கு கர்மஸம்பந்தம் ரஹிதம் (இல்லாதது) அதனால் அசரீரத்வம் (சரீரமில்லாமை என்பதால்) சொல்லப்படுகிறது. சா. உ. 8-12-1ல் न ह वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति—अशरीरं वा व सन्तं न प्रियाप्रिये स्पृशत.- அவனுக்கு (எவனுக்குச் சரீரமிருக்கிறதோ - சரீரத்துடன் எவன் இருக்கிறானோ - அவனுக்கு பிரிய அப்ரியங்கள்நாச மடைவதில்லை. சரீரமில்லாதவனை அவை தொடருவதில்லை. ஸ்பர்சிப்பதில்லை; மேலும் ஞானத்தின் அதிகமான தன்மை, அதேபடி சக்தியில் ஆதிக்யம் (ஏற்றம்) அதிசயமான புண்யங்களால் ஏற்படுவது இந்தக் காரணத்தினால் பெரிய புண்யங்களின் பலனாக லோக காமேசத்வம் (உலகங்களுக்குப் பதி - இஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் திறமை) ஏற்படுகிறது. ஆகையால் அதுவே உபாஸிக்கத் தகுந்தது (உபாஸ்யத்வம்); அதுவே பலன் கொடுப்பதால் (பலதாயித்வம்); அது பாபங்கள் அழிவதற்குக் காரணமாதலால்

(க்ஷபணகர்த்வேந) மோக்ஷத்தை அடையவிருப்பதாலே (மோக்ஷ உபயோகித்வம்); நாம் பார்க்கிறோம் - மனிதர்களுக்குள்ளேயும் - சிலர் அதிக புண்யசாலிகளாகவிருப்பதாலே, ஞானத்திலேயோ, சக்திகளிலோ மிகப் பெரியவர்களாகக் காணப்படுகிறார்கள் அதேபடி - ஸித்தர்கள் கந்தர்வர்கள் - தேவர்கள் - இந்திரனைப் போன்றவர்கள். ஆகையால் பிரும்மா மற்றவர்கள் இவர்களில் ஒருவன் ஒரு கல்பத்திலே புண்ய விசேஷத்தால் - இத்தகைய ஐஸ்வர்யங்களை யடைந்து ஜகத்தை ஸ்ருஷ்டிக்கக்கூடச் செய்கிறான் - என்றும் இப்படி வ்யஷ்டி ஸ்ருஷ்டியைப் பண்ணுதலாலே அவனே ஜகத்காரணமாகவும் சொல்லப்படுகிறான்.

ஜகத்ஸருஷ்டி வாக்யங்களிலே - ஜகத்காரணத்வம் ஜகத் அந்தராத்மத்வம் ஆகியவைகளைகூறும் வாக்யங்களிலே - புண்ணியங்களின் உபசிதத்தால் (கூட்டச் சேர்க்கையாலே) மஹாபுண்ய விசேஷத்தாலே ஸர்வக்ஞனாகவும் ஸர்வசக்திமானாகவும் இருக்கிறான். ஆகையால் பரமாத்மா என்று சொல்லப்படுபவன் - இத்தகைய அதிசய ஞானபலமுள்ள ஜீவனைத்தவிர - வேறில்லை - வேறானவன்யாருமில்லை-பரமாத்மா நாம. அவ்விதமிருக்க-சுருதி சொல்கிறது - अस्थूलमनण्वह्रस्वं - (ஸ்தூலமில்லை - அணுவாகவுமில்லை - குட்டையாகவோ தீர்க்கமாகவோ இல்லை) என்பதால் ஜீவாத்மாவின் ஸ்வரூபமே இங்கு அபிப்ராயம் - எனக் காட்டுகிறது. மோக்ஷசாஸ்திரத்திலேயும் ஜீவஸ்வரூபத்தைச் சொல்லி, பிறகு உபாயத்தைச் சொல்லி - பிராப்தி எனப்படுவதையும் இவை காட்டுகிறது.

இப்படி (ஜீவன் என்று) சொல்வாயாகில் (அக்ஷி புருஷன்) अन्तस्तद्धर्मोपदेशात् – अन्तरादित्येऽन्तरापि च यः पुरुषः प्रतीयते எந்த அக்ஷி புருஷனோ-எந்த ஆதித்யமண்டலத்திலுள்ள புருஷனே அவன் பரமாத்மாவே-தர்ம உபதேசாத் (அவனைப் பற்றிய தர்மங்கள் ஓதப்பட்டதால்) - அந்தர் உள்ளிருப்பவன் - தத்தர்மோபதேசாத் (அவனது தர்மங்களை ஓதப்படுவதாலே) அவன் ஜீவாத் அன்யனான பரமாத்மாவே ஏன்? तद्धर्मोपदेशात् - இந்த தர்மங்கள் ஜீவனுக்கு அஸம்பவம். அதனால் அவனைவிட பெரியவனான பரமாத்மாவின் தர்மங்கள் - யாது? அவை अपहतपाप्मत्वादि -

பாபமின்மை - பசிதாசமின்மை - ஜரைமிருத்யு இன்மை இத்யாதி எட்டு குணங்கள் - இவை மீண்டும் தஹரவித்யையிலும் தஹர அதிகரணத்திலும் கூறப்படும்) சா. உ. 1-6-7ல் **स एष सर्वेभ्यः पाप्मभ्य उदितः** - இத்யாதிகளால் (இந்த இவனே எல்லாவித பாபங்களுக்கும் மேலானவன் - அதீதன் – பற்றப் படாதவன்) (அபஹதபாப்மா); இதன் அர்த்தம் அபஹத பாப்மத்வம் - அபஹத கர்மத்வம் (கர்மசம்பந்த மில்லாதபடியால் - பாப மின்மை) இதன் அர்த்தம் - சிறிய அளவில்கூடகர்ம வஸ்யனாக இல்லாமல் - ஸ்வதந்திரனாக விருப்பது. **कर्मवश्यतागन्धरहितत्वं** - என்று அர்த்தம். கர்மாதீனமாக விருப்பவனுக்கு சுகதுக்கங்கள் ஏற்படுகின்றன - அத்தகைய கர்மவஸ்யன் ஜீவன். ஆகவே அபஹத பாப்மத்வம். ஜீவனைவிட வேறான பரமாத்மாவுக்கே உரியதான தர்மம். இந்த அபஹதபாப்மத்வத்தை நம்பியும் - மேலும் அவனுடைய ஸ்வரூபம் உபாதிகளால் யேற்படாமல் இயற்கையாகவே - லோககாமேஸத்வம் (அந்த பரமாத்மா ஸர்வ பதியாகவும் - தன் விருப்பங்களைத்தானே ஸாதிக்கும் ஸத்ய சங்கல்பனாகவும்) (ஸத்யஸங்கல்பத்வாதிகம்) இவை பரமாத்மா வுக்கே 'ஸ்வரூப நிரூபணத்தர்மங்களும் - நிருபிதஸ்வரூபகத தர்மங்களாகும்.

**விளக்கம்** :- (ஸ்வரூபநிரூபக தர்மங்கள் என்பதை விளக்கு வோம். பரமாத்மாவுக்கு பல தர்மங்கள் ஓதப்படுகின்றன - ஸத்யம் ஞானம் அனந்தம் இத்யாதி - இவைகளைத் தெரிவதற்கு முன்பே இன்னும் சில குணங்களும் பரிச்சயமாக விருக்க வேண்டும் - அஸ்தூலத்வம் இத்யாதி; அந்தர்யாமித்வம்; ஜகத் காரணத்வம்; லக்ஷ்மி பதிதவம்; நிருபாதிக ஸர்வக்ஞத்வம் - மற்ற வஸ்துக்களைப் பிரித்துக்காட்டி பரமாத்மாவுக்கே இவை உரியன - இதர வஸ்து வ்யாவ்ருத்த ஸ்வரூபத்தை - காட்டுகிறது. ஆனந்தம், ஸத்ய காமத்வம் - இத்யாதிகளும் பரமாத்மாவுக்கும் உண்டு ஜீவனுக்கும் உண்டு. ஆகவே தர்மங்கள் இருவிதம் - விசேஷ்யஸ்வரூபநிஷ்டா; ஸவிசேஷணஸ்வரூப நிஷ்டாச்ச என இரண்டாவது. முதல் வர்க்கத்தில் (விசேஷ்யஸ்வரூபநிஷ்டா;) இதில் ஆனந்தாதி குணங்கள். மற்றவை ப்ரத்யேகமாக பரமாத்மாவைத்தான் சொல்லும்.

ஸர்வக்ஞன் - ஸர்வ நியந்திருத்வம் - ஜகத்காரணத்வம் (ஜீவர் களுக்கு ஜகத்வ்யாபாரவர்ஜம் இத்யாதி சூத்ரங்களால் இல்லை). இன்னும் சில குணங்கள் பரமாத்மாவின் ஸ்வரூபத்தையே விமர்சிக்கும் - அதாவது ஸ்வரூபத்திலே அடங்கியுள்ளவை अन्तर्गतमेव - ஞான ஆனந்தம் ஸ்வரூபத்திலிருந்து விட்டுப்பிரிக்க முடியாத தர்மங்கள்.

இவைகளில் ஸத்யம் ஞானம் அனந்தம் அமலத்வம் ஸ்ரீயப்பதி த்வம் அபஹதபாப்மத்வாதி எட்டு குணங்கள்-நிருபாதிகமாகவே இத்யாதி. ஏற்கனவே ஸ்வரூபமாக விருக்கும் தர்மங்களை மீண்டும் பலசுருதி வாக்யங்களலே ஊரிஜிதம் செய்யப்படுபவை யாக. இன்னும் சில தர்மங்கள் இருக்கின்றன - अपरेतु - स्वरूप उपदेश परवाक्य प्रतिपन्नानां - सर्वविद्यानयायित्वम् - नोपास नोयोग-विद्यानाम् - न च - यः सर्वज्ञः सर्ववित् இதனால் ஸ்வரூப உபதேச பர வாக்ய ப்ரதிபந்நதபா - सार्वज्ञयादिनामपि - सर्वे विद्यांनुयायित्वम् प्रसज्यते वाच्यं ; சிலதர்மங்கள் உபாஸனபரமக விருக்கின்றன. संभृतिद्यु व्याप्त्यपि चातः- என்கிற அதிகரணத்தில் அநராப்ய கர்மாக்களைச் சொல்லும்போது - உபாஸனார்த்தம் யேற்பட்ட தர்மங்கள். ஆனந்தமயாதி கரணத்திலே நிருபாதிகமாகவே ஞான ஆனந்தமும் - ஜகஜ்ஜன்மாதி, ஈக்ஷத் அதிகரணங்களில் ஜகத்காரணத்வமும் - ஸத்யம் ஞானம் அனந்தம் இத்யாதி களும் - ஹ்ரீஸ்சதேலக்ஷ்மீஸ்சபத்ந்யௌ என்றும் - பூர்வபிரதி பந்நாகாரமாகக்கொண்டு ஜன்மகாரணத்வம் முதலான உப லக்ஷணங்களாலும், யதோவா இமாநி - என்று தொடங்கும் வாக்யத்தாலே காட்டப்பட்டதாகும். உபலக்ஷணமுறையாலும் வேதவாக்யம் பிருஹ்மலக்ஷணம் உரைக்கமுடியும் எனக்காட்டப் பட்டது. இந்த அந்தரதிகரணத்திலே புண்டரீகாக்ஷத்வம் என்கிற நிருபத ஸ்வரூபகத தர்மமும் உபதேசிக்கப்படும். எல்லாக் குணங்களும் 'ஸ்ரீயப்பதியான ஸ்ரீமந்நாராயணனுக்கே எனக் கொள்வதாகும்.

(அபஹதபாப்மத்வாதி குணங்கள் பரமாத்மாவுக்கு இயற்கை யாகவே உள்ளவை. முக்தஜீவனும் பரமாத்மாவின் பிரஸாதத் தினால் - வித்யையின் பலனாக - மோக்ஷதசையில் அடைகிறான்

என்பதாகும்) பரமாத்மாவுடன் இந்த எட்டு குணங்களில் ஒற்றுமை (ஸாம்யத்தை) அடைகிறன்.

ஸ்ரீ பாஷ்யம்:—அபஹுத் தபாப்மத்வாதி குணங்கள் நிருபாதிக மாகவே ஜீவனைவிட வேறுன பரமாத்மாவுக்கே சோந்தம். அதே மாதிரி பரமாத்மாவுக்கே ஸ்வரூபநிருபகதர்மங்களை-மேலும் அவை களை ஊர்ஜிதம்செய்யவே லோககாமேசத்வம், ஸத்யசங்கல்பத்வம், ஸர்வ பூதாந்தராத்மாவாகவிருப்பது - பரமாத்மாவுக்கே ஸ்வரூப தர்மங்கள் பேசப்படுகின்றன. यथाह-एष आत्माऽपहतपाप्मा विजरो विमृत्युः विशोको विजिघत्सोऽपिपासः सत्यकामः सत्य सङ्कल्पः - (இந்த பரமாத்மாவுக்கு இயற்கையாகவே - பாபமின்மை-கிழத்தனமில் லாமை, இறப்புயில்லாமை - சோகமின்மை பசியின்மை - தாக மின்மை - ஸத்யகாம ஸத்யசங்கல்பன் - தான் நினைத்ததை நிறை வேற்றும் திறமையுள்ளவன் - நல்லவைகளையே நினைப்பவன்) இத்யாதி சா. 2-8-1-5) (8-7-1); இதே போல இன்னொரு சுருத்யும் (சுபாலே-7-1)ல் एष सर्वभूतान्तरात्माऽपहतपाप्मा दिव्योदेव एको नारायणः - அந்த நாராயணரே ஒருவர் ஆகும் - அவர் ஸர்வ பூதங்களுக்கும் அந்தராத்மா (மேலான நியமனத்தைச் செய்கிற வர்) - அபஹுதபாப்மா (பாபமின்மை) இத்யாதி குணங்களை உடைய திவ்ய தேவரான ஸ்ரீமந் நாராயணன்.

(தை ஆந. II-6-1) सोऽकामयत - बहुस्यां प्रजायेयेति-பிரும்மம் இச்சைப்பட்டது - நான் பலவாக ஆவேன், பிறப்பேன் என்று நினைத்து-தைய்யஸங்கல்ப பூர்வகம் - பிறகு ஸம்ஸ்தசித் அசித்வஸ்து ஸ்ருஷ்டி யோகத்திஞல் ஸங்கல்பத்திற்கும், நானே (உண்டாக்கப் பட்ட வஸ்துக்களுக்கு) பய அபய ஹேதுவாக நிரு பாதிகமாக ஆவேன் - (பய அபயஹேதுத்வம்), வாக்கு மனது இவைகளுக்கு அடங்காதபடி பரிச்சேதரஹித அநவதிகாதிசய ஆனந்தயோகத் தை நிருபாதிகமாகவே கொண்டவஞக - இவைகள் எல்லாம் அகர்மவச்ய (இயற்கையாகவே) பகவானுக்கு அடையப்பட்ட தாகும். இத்தகைய குணயோகம் இயற்கையாகவே பரமாத்மா வுக்கு உள்ளவை - இவை ஜீவனுக்கு ஏற்படுவதில்லையாகும்.

तस्यैष एव शारीर आत्मा (தை. ஆ.5)ல் விக்ஞான மயனுக்கு ஆனந்தமயனே சரீர சம்பந்தியான ஆத்மா-என்பதால், ஆனந்த

மானுக்கு சரீர ஸம்பந்தம் சொல்லப்படுவதாலே-இங்கே புருஷன் எனப்படுபவன் ஜீவனைத்தவிர வேறு இல்லை என்று சொல்வது அயுக்தம்-சரியில்லை.

மேலும் இவ்விதம் சொல்வதும் சரியில்லை - சரீரத்வம் யேற்படுவது - அதனால் ஸசரீத்வம் - சரீரத்துடன் சம்பந்தப்படுவது, கர்மாவிற்கு அடிபணிவதாலே ஏற்படணும் என்கிற நிர்ப்பந்தமில்லை. ஸத்யஸங்கல்பத்தினால் - ஸ்வஇச்சையினால் பரமாத்மாவுக்கு சரீரம் எடுக்க முடியும் - அதனால் சரீர ஸம்பந்தம் பரமாத்மாவுக்கு யேற்படக்கூடும். இங்கு நாம் சொல்கிறோம் - ஶரீரம் நாம - திரிகுணாத்மக பிரகிருதி பரிணாமரூபத்தின் பூத ஸங்காதம் (சேர்க்கையாகும்) அத்தகைய சரீரத்தை ஜீவன் கர்மாவினால் பெறுகிறான். பரமாத் மாவுக்கு அவ்விதமில்லை. ஸ்வசங்கல்பத்தினாலே சுத்த ஸத்வமாகவே - அப்ராகிருத சரீரத்தை பரமாத்மா எடுக்கிறான். ஜீவனுக்கு கர்மவச்ய தேகத்தினால் அபஹதபாப்மத்வத்தினால் யேற்படுவதும் (கிழத்தனம்-பசிதாகம் இத்யாதிகளுடன் சம்பந்தப்பட்ட சரீரம்) அதேமாதிரி ஸத்ய ஸங்கல்பத்வமும் புருஷனுடைய இச்சையினால் யேற்படுகிறதுமான சரீரம் ஜீவனுக்கு ஸித்திக்காது. அபுருஷார்த்தமாகிறபடியாலே, (அதாவது அக்ஷிணிபுருஷன் - ஜீவன் என்கிறான் பூர்வபக்ஷி. அவனுக்கு சரீரமிருப்பதாலே. இங்கே சரீரம் திரிகுணாத்மக ஸங்காதமான சரீரம பேசப்படுகிறது. இத்தகைய தேக ஸம்பந்தம் - பரமாத்மாவின் இச்சையால் - அபஹதபாப்மத்வதி ஸத்யசங்கல்பதி குணங்கள் கொண்ட புருஷனுக்கு யேற்படுவதில்லை - ஏனெனில் அத்தகைய திரிகுணாத்மக தேக சம்பந்தம் புருஷார்த்தமில்லாதபடியாலே. ஜீவனுக்கு இம்மாதிரி தேகம் கர்மத்தினால் யேற்படுகிறது.) சர்மவச்யனான ஜீவன் - அவனுக்கு தன் நிஜ ஸ்வரூபமே (அவித்யாதிகளால் மறைக்கப்பட்டு) தெரியாது. அப்பேற்பட்ட ஜீவனுக்கு திரிகுணாத்மக ஸங்காதமான தேக சம்பந்தத்தை விலக்க முடியாது. ஏனெனில் அவன் கர்மபலபோகத்தை அனுபவிக்க நேரிடுகிறது. அவனுக்கு விருப்பமில்லாவிடினும். நாம் சொல்வது சரிதானாகும். நாம் ஒப்புக்கொண்டால் - பரமாத்மாவின் தேகம் திரிகுணாத்மக ஸங்காதமாக ஆனது - பிரகிருதியின் பரிணாமம் என்று. ஆனால்

பரமாத்மாவுக்கு தேகம் அவ்விதமில்லை - அது சுத்த ஸத்வம் - அப்ராகிருதம் - ஸவய இச்சையால் எடுத்துக்கொள்ளப்படுகிறது- அது அவன் ஸ்வரூபத்தர்மங்களுக்கு ஒத்துவரும். அது அவன் இச்சை (உதாரணம் நரனும் சிங்கமும் கலந்த உருவம் - நரஸிம்ஹன்). அது அப்ராகிருதம். ஆகவே நாம் சொல்வது எல்லாம் உபபந்தம் (பொருத்தமாகும்.)

என்ன சொல்லப்பட்டதுவென்றால் - பரமாத்மா மேலானவர் நிகிலஹேய ப்ரத்யனீக அனந்த ஞான ஆனந்த ஸ்வரூபமுள்ளவன் - அதனாலே அசித் வஸ்துக்களுக்கு வேறானவன் - விலக்ஷணன் ஸ்வாபாவிக அநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாண குணகணங்கள் கொண்டவன். அதேமாதிரி - அந்த பரமாத்மாவுக்கு இயற்கையானதும் - தேவ மயமான திவ்யமங்களரூபமும் உண்டு. (திவ்யமங்கள விக்ரஹம் - திவ்ய ஆத்மஸ்வரூபத்திற்கு தனியாக); அசிந்த்ய (எண்ணப்பட முடியாதபடி) திவ்ய அத்புத நித்ய நிரவத்ய (தோஷமில்லாத - பரிபூர்ணன்) - நிரதிசய ஔஜ்ஜ்வல்ய, ஸௌந்தர்ய - ஸௌகந்த்ய - ஸௌகுமார்ய - லாவண்ய - யௌவனாதி அனந்த குணகண நிதி (பொக்கிஷம் - அத்தகைய அழகு பெற்றது திருமேனியின் அழகு) அத்தகைய திவ்ய ரூபமும் ஸ்வாபாவிகம் இதி. அதேதிவ்ய மங்கள விக்ரஹம் உபாஸகனை அனுக்ரஹிக்கும் நிமித்தம் - அவன் இச்சைப்படி - (நாராயணன்) பரமாத்மா இப்படிப்பட்ட தேகத்தை தான் எடுத்து உபாஸகனுடைய பக்திக்காக - அவனுக்கு அனுகுணமாக அத்தகைய தேகத்தை அடைய - அந்த அந்த உபாஸகனுடைய பிரதி பத்திக்கு யேற்ப (அதிகாரி யோக்யதைக்குத் தகுந்தபடி) சரீரம் எடுப்பதற்குக் காரணமாகிறான் - அபாரகாருண்ய சௌசீல்ய வாத்ஸல்ய ஔதார்ய - ஜலநிதிபோல பரமாத்மா நிரஸ்த நிக்லஹேயகந்த (இல்லாதபடியாக) அவனே அபஹத பாப்மா - பரமாத்மா - பரப்பிருஹ்மம் - புருஷோத்தம நாராயணனாகும்.

தை. பி. 1ல் यतो वा इमानि भूतानि जायन्ते-(''எதனிடமிருந்து இவ்வுலகங்கள் உண்டாகின்றனவோ - எதனால் பிறந்தவை வாழ்கின்றனவோ - (வாழ்ந்தவை) பிரளயத்தில் எதை அடை

கின்றனவோ அதை அறிவாயாக, அதுவே பிருஹ்மம்'') என்று பிரும்ம லக்ஷணத்தை உரைத்திருக்கிறது. சா. 26-2-1. सदेव सोम्येदमग्र आसीत् ஸௌம்மிய - ஸத்ஒன்றுதான் ஸ்ருஷ்டிக்கு முன்பே இருந்தது. ஐத். 1-1-1 आत्मा वा इदमेक एवाग्र आसीत् ஆத்மா - இது ஒன்றுதான் முதலில் (ஆரம்பத்தில்) இருந்தது. மஹா. 1-1-1 एको ह वै नारायण आसीत्, न ब्रह्मा नेशानः। நாராயணன் ஒருவரே இருந்தார் - பிரும்மாவும் ஈஸானனுகிற ரூத்ரரும் இல்லை (பிரளயசமயத்தில்) - இதனுல் நிகில ஜகத்யேக காரணத்திஞல் யேற்படுவது பரமான பிருஹ்மமே. தை. அல் सत्यं ज्ञानं मनन्तं ब्रह्म- பிரும்மம் ஸத்யம் ஞானம் அனந்தம் - இவை களை ஸ்வரூபமாகவும் குணங்களாகவும் உடையது பிருஹ்மம் பிரு. உ. 3-9-29 विज्ञानमानन्दं ब्रह्म-பிரும்மம் ஸத்யம் ஞான ஆனந்தமாக விருக்கிறது இவைகளை (ஸ்வரூபமாகவும்-குணமாகவும் உடையது)- இவைகளால் இம்மாதிரியான ஸ்வரூபம் ஓதப்படுகிறது. मन्त्र (Adi up 68) निर्गुणम् (ஹேயகுணமில்லாதது); ஸ்வே 6-26 - निरञ्जनम् - களங்கமில்லாதது சுத்தமாகவுளது) பரமாத்மாவுக்கு அபஹதபாப்மத்வதி - எட்டு குணங்கள் - பாபமின்மை ஜரை யின்மை - மிருத்யுயின்மை - பசிதாசமின்மை - ஸ்தயகாம ஸத்ய ஸங்கல்பத்வம் - (நிரஞ்சனம் - அக்ஞானமில்லை பரமாத்மா வுக்கு) ஸ்வே 6-8 न तस्य कार्यं करणं च विद्यते न तत् समश्चाभ्यधिकश्च दृश्यते - அந்த பரமாத்மாவுக்கு சரீரமோ இந்திரி யங்களா இல்லை, அவனுக்குச் சமமாகவோ - மேலானவஞே ஒருவனும் இல்லை. அவருடைய மேலானசக்தி அறிவிக்கப்படுகிறது வாஸ்தவமாக பலவகைப்பட்டதாகவும் இயற்கையாகவும் இருக்கிறது - ஞானத்தை பலத்தை - சேஷ்டிதம்-ஸ்வரூபமாகவும் உடையது. पराऽस्य शक्तिः विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञान बलक्रिया च நாம் அறியலாமா? அந்த மேலான பரமாத்மாவைப் பற்றி அறியலாமா? - அவருடைய சக்தி மிகப்பெரியது - तमीश्वराणां परमं महेश्वरं तं देवतानां परमञ्च दैवतम्-ஈஸ்வரர்க்களுக்கு ஈஸ்வரராகவும், தேவதைகளுக்கும் மேலான தைவமாகவும் இருக்கிறூர் ஸ்வே 6-3 स कारणं करणाधिपाधिपो (ஜீவன்) न चास्य कश्चिज्जनिता न चाधिपः அவர் காரணம், அவரே கரணுதிபதியான ஜீவனுக்குப்பதிர் அவருக்குபிதா - உண்டாக்கியவர் இல்லை

அவருக்கு மேலானவர் ஒருவருமில்லை (யஜ். ஆ. 3-12 पुरुषसू) सर्वाणि रूपाणि विचित्य धीरः नामानि कृत्वाऽभि वदन् यदास्ते - இங்கே காணப்படும் எல்லா ரூபங்களும் அவரால் உண்டாக்கப்பட்டவை. நாமரூபங்களும் அவரால் கொடுக்கப்பட்டன. இத்தகைய ஸர்வக்ஞன் பரமாத்மா - वेदाहं वेदं पुरुषं महान्तं आदित्यवर्णं तमसः परस्तात् - நான் அந்த மஹாபுருஷனை அறிகிறேன் - அந்த புருஷனுக்கு ஆதித்ய (சூரிய பிரகாச) ஒளியும் - பொன்மயமான ஒளியும் தமஸ்ஸாகிற இருட்டுக்கு அப்பால் இருப்பவரான அவரை - பரமாத்மானை அறிகிறேன். தை, நா-1 அனு. 8. सर्वेनिमेषा जज्ञिरे विद्युतः पुरुषादधि எல்லா நிமிஷங்களும் அந்த பரமாத்மாவிடமிருந்து உண்டாயின அவருடைய காந்தி மின்னலைப்போல மிகப்பிரகாசமிருக்கிறது. नीलतोयमध्यस्थ विद्युल्लेखा प्रकरणे பார்க்கவும் - தை. உ. பநிஷத்தில் - தமஸ் என்பதற்கு நம்முடைய பிராகிருத லோகங்களுக்கு அப்பால் - எல்லா வற்றிற்கும் மேல்பட்ட பரமபதத்தில் இருக்கும் புண்டரீகாக்ஷனை ஸ்ரீயப்பதி - அவரை நான் அறிவேன் - என்ஹ்ருதயத்திலும் இருப்பவரையும் அறிவேன் - அவரே கலாமுகூர்த்தம் காஷ்டங்கள் - அஹோராத்ரி - எல்லாவற்றிற்கும் ஈசர்

இந்த சுருதி வாக்யங்கள் மேலான பிருஹ்மத்திற்கு பிராகிருதமான ஹேயகுணங்களை மறுத்தும் - அதேமாதிரி பிரா கிருத ஹேயமான தேகசம்பந்தத்தையும் அதனால் யேற்படும் கர்மவஸ்யத்தினால் யேற்படும் சம்பந்தத்தையும் மறுத்து; (தேகம் ஏற்படும் என்கிற கர்மநியமத்தையும் மறுத்து); ஸந் மூலம் (வேரோடு) மறுத்து - அதற்குப்பிறகு இந்த சுருதிகள் பரமாத்மாவுக்கு கல்யாண குணயோகமும் உண்டு - அதனால் கல்யாணரூபம் உண்டு என்று சொல்லுகின்றன.

இங்கே சொலலப்படுகிறவிஷயம் - பரமாத்மா தன்னை உபாஸிப்பவர்களை அனுக்ரஹிக்க - தன் இச்சையினால் (ஸ்வா பாவிகமேவ) ரூபத்தை (அவதாரம்) எடுக்கிறார். அந்த ரூபம் உபாஸகனின் புத்திக்கு யேற்ப - தேவனோ - மனுஷ்யனோ அவதாரம் எடுக்கிறார் - அதற்கு ஆகாரம் - ஸம்ஸ்தானம் யேற் படுகிறது - ஸ்வஇச்சையினால் பரமகருணையினால் பகவான்

அவதரிக்கிறார். இதையே பலசுருதிகள் சொல்கின்றன - (உ. நா) अजायमानो बहुधा विजायते - इति - பிறப்பிலி (பிறப்பில்லாத - கர்மவச்யத்தினால் பிறப்பில்லாத) பகவான் ஸ்வஇச்சையினால் பல பிறவிகளை அடைகிறார். ஸ்மிருதிகளும் (கீதை) 4-6-8) - अजोऽपि सन् अव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् । प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया-நான் கர்மவச்யப் பிறப்பில்லாதவனாக விருப்பினும், என் ஸ்வரூபத்திலே அளவிடமுடியாதபடி விருப்பவனாகையால், நானே எல்லோருக்கும் பதியாகவிருப்பதாலும் - நான் என்னுடைய (எனக்கு அதீனமான பிரகிருதியை) கூடக்கொண்டு - மீண்டும் மீண்டும் பிறக்கிறேன் - என்னுடைய ஆத்மமாயையினால் - ஸாதுக்களை ஸம்ரக்ஷிக்கவும் - துஷ்டர்களை சிக்ஷிக்கவும் அவதரிக்கிறேன். இங்கே ஸாதவ: - உபாஸகர்கள் அவர்களைக் காப்பாற்றுவதற்கே உத்தேஸ்யம் - (அதற்கு அடுத்தாற்போல வரும் - துஷ்டர்களை சிக்ஷப்பது) - அமுக்யத்வம் - ஏனெனில் பரமாத்மா தன் சங்கல்பத்தால் வைகுண்டத்திலிருந்தே ஸம்ஹரிக்க சக்திபெற்றவன் प्रकृतिं स्वाम् - எனக்கு அதீனமான பிரகிருதி - (இதற்கு நாம் அர்த்தம் சொல்வது - பிறப்பற்றவனாயினும், அவ்யயாத்மா (அழிவற்ற சக்தி ஞான ஆனந்தாதிகளை உடையவனாகிலும் - ஆத்ம மாயயா - எனது இச்சையினால் ஸ்வாம் பிரகிருதிம் - எனது அப்ராகிருத சுத்தஸத்வமான ரூபத்தை அதிஷ்டாய (உள்அமர்ந்துகொண்டு) ப்ரேரணம் செய்து - ஸம்பவாமி - அவதாரம் செய்கிறேன். பிறப்பு - ஸங்கல்பமாகிற இச்சை; அவதார காலத்திலும் என் சக்திகளும் மகிமைகளும் குன்றுவண்ணம் - ஸர்வஜ்ஞனாகவும், ஸமஸ்த கல்யாண குண பூர்ணனாயும் - ஸர்வேஸ்வரனாயும் இருக்கிறேன். சில சமயங்களில் ஆசுரபிறவிகளை வஞ்சிப்பதற்க்காக - மனுஷ்ய சுபாவங்கள் உள்ளவன் போல அபிநயிக்கிறேன்).

प्रकृतिः - ஸ்வபாவம் - எனக்கே உரித்ததானதர்மம். அப்ராகிருத திருமேனியோடு அவதரிக்கிறான். स्वमेव स्वभावमास्थाय, न संसारिणां स्वभावमित्यर्थः - எனக்கு அதீனமான என் அப்ராகிருத ரூபத்தை - ப்ரேரணம் செய்து (சரீர ஆத்மபாவத்தினால் இங்கு பேசிற்று - உபாதான

காரணமாதலாலும் அந்தர்யாமித்வத்தினுலும்) நான் அவதரிக்கிறேன். இதனுல் நான் ஸம்சார ஜீவனைப்போல மீண்டும் மீண்டும் பிறப்பதில்லை. என் ஸங்கல்பத்தால் எனக்கு அதீனமான பிரகிருதியை (அப்ராகிருதரூபத்தை - சுத்தஸத்வத்தை - ஸ்வமேவ நானே விருப்பத்தினுலே - என்ஸ்வபாவத்துடன் (மகிமை சக்தியுடன் - இவை பூமியில் குறையாமல் - பரிபூர்ண பிருஹ்மமாகவே) அவதரிக்கிறேன். அதனுல் நான் ஸம்சாரி ஜீவனைப்போல அல்ல என அர்த்தம்) आत्ममायया - எனது இச்சையாலே - சங்கல்பரூபேண ஞானம் என அர்த்தம். நிகண்டிலே माया वयुनं ज्ञानं - என்று சொல்லும்போது - மாயைக்கு ஞானம் என்கிற பொருளில் - பர்யாய சப்தமாக கூறப்படுகிறது.

மேலும் பராசரபகவான் (விபு. 6 - 7 - 70 - 72ல் समस्ताः शक्तयश्चैता नृप यत्र प्रतिष्ठिताः-तत् विश्वरूपवैरूप्यं रूपमन्यत् हरेर्महत् । समस्त शक्ति रूपाणि तत् करोति जनेश्वर। देवतिर्यङ्मनुष्याख्याचेष्टा-वन्ति स्वलीलया। जगतामुपकाराय; न सा कर्मनिमित्तजा - என்று ராஜனே - எப்போது இந்த சக்திகள் ஸ்தாபிதமாயிற்ருே - அவை பரமாத்மாவின் இன்ெனாரு உருவம்தான், அந்த உருவம் அவருடைய விஸ்வரூபத்திலிருந்து வேறுபட்டது. லீலா மாத்திரமாக அவர் அந்த அவதாரத்தை (ரூபத்தை) எடுக்கிருர் - அப்போது அந்த ரூபத்திற்கு எல்லாச்சக்திகளும் மகிமைகளும் குன்ருமல் இருக்கின்றன. அவை வெவ்வேறு தேவதிர்யக் மனுஷ்ய ஆகாரங்களால் (வடிவங்களால்) - சேஷ்டிதங்கள் செய்கின்றன. ஸ்வலீலையினுலே -; அந்த சேஷ்டிதங்கள் உலகங்களின் நன்மைக்காகவே - அவை கர்ம ஆதாரமாக யேற்பட்ட செயல்கள் அல்ல - ஏனெனில் பரமாத்மா கர்மா அதீதன் - கர்மாக்களால் பற்றப்படாதவன் கர்மங்களின் பலன்களாக அந்த சேஷ்டிதங்கள் யேற்படுவதில்லை.

மஹாபாரதத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. அவதார ரூபமாக விருப்பினும் - அப்ராகிருதத்வம் (அதாவது சுத்த ஸத்வம்) न भूतसंघसंस्थानो देहोऽस्य परमात्मनः - அவருடைய திவ்யதிருமேனி ஐம்பூத ஸங்கலம்ஸ்தானத்தினுல் (சேர்க்கையினுல் ஏற்பட்டதல்ல) - ஆகவே பரமாத்மாவாகிற பரம்

பிருஹ்மமே இம்மாதிரி ஆதித்ய மண்டலத்தின் உள்ளேயும் - கண்ணின் உள்ளேயுமிருக்கிற புருஷன் - இந்த ரூபத்துடன் இருக்கிறான். அந்த ரூபம் பரமாத்மாவுக்கே உரியது - அவனுடைய தர்மமாகும் (அப்ரதிக்ஷித்த தர்மாகும்) अयमपितस्यैव धर्मः - ஆகவே ஆதித்ய மண்டல அக்ஷிய அதிகாரணத்தில் ஆதித்யனையும் ஜீவனையும்விட வேறானவன் பரமாத்மாவே எனவாகும்.

(இங்கே ஸ்ரீமந்நாராயணனுக்கு கப்யாலம் - புண்டரீக அக்ஷியின் உடையவன் என்றும் - பொன்மயமான சரீரம் இத்யாதி - அவனுடைய தர்மமென்றும் ஓதப்பட்டும்; ஜன்மாத்யதிகரணத்திலே - காரணத்வம்; பிறகு आनुमानिक - பிரதானம் ஜகத்காரணம் ஆகாது, ஈஸ்வரபக்ஷம் உபாதான ரூபம்; சாஸ்திர யோநித்வாதி கரணத்தில் சாஸ்திர திருஷ்டியினுல் உபாதானத்வம் சொல்லப்பட்டு - புருஷார்த்தத்திற்கு ஸமந்வயாதி கரணம் - அவனை உபாஸிப்பதே புருஷார்த்தம் என்றும்; ஈக்ஷத்யதி கரணத்தில் - ஜகத்ஸ்ருஷ்டி ஈக்ஷத் குணத்தாலே - சொல்லப்பட்டு - அந்த பரமாத்மா சித் அசித் வஸ்துக்களைவிட வேறானவன் - அவைகளைத் தனது சரீரமாகக் கொண்டு - தான் ஆத்மாவாக இயங்குவதால் - ஸர்வேஸ்வரத்வம் சொல்லப்பட்டு; அந்த ஈஸ்வரன் ஆனந்த மயாதிகரணத்திலே - ஆனந்த ரூப ஜீவனைவிட மேலானவனும் நிரதிசய ஞான ஆனந்தத்தை நிருபாதிகமாவே ஸ்வரூபமாகக் கொண்டவனும் ஆனந்தத்வம் உள்ளவனுயும்; இங்கே பரமாத்மாவுக்கு அப்ராகிருத ஹிரண்ய வர்ண பரம போக்ய புண்டரீகாக்ஷித்வம் - அதனுல் யேற்படும் திவ்ய மங்கள் விக்ரஹம் - அவன் ஸ்ரீயப்பதியே - பிருஹ்மம் எனச் சொல்லப்படுகிறான். மற்ற அதிகரணங்களின் சேர்க்கையினுல் - ஏற்கனவே ஸ்வரூப லக்ஷணங்களால் ஸ்தாபிக்கப்பட்ட பிருஹ்மம் - இதனுலும் வலுப்படுத்தப்பட்டு, தத்தர்ம உபபத்தே: - தல்லிங்காத் - என்றுதத் சப்தப்ரயோகத்தினுல் - व्यतिरिक्तम् என்று காட்டப்பட்டது - இது அத்வைதிகளின் பாஷ்யத்திலேயும் காணப்படும்.

தத்தர்மே - என்பதால் பரமாத்மாவிற்கு உரிய தர்மங்கள் உபதேசிக்கப்பட்டன. அதனுல் ஆதித்ய அந்தர் வ்ருத்திபுருஷன் ஜீவனல்ல - அது பரமாத்மாவே-நிருபாதிகமாகவே அபஹதபாப்

மத்வாதி குணங்கள் - பொன் மயிர்-பொன் உருவம் - கப்யாஸம் புண்டரீக அக்ஷிணி-அப்ராகிருத விக்ரஹம்-திவ்யதிருமேனி-என்று அர்த்தம்.

அத்வைத பாஷ்யத்திலே-ஆனந்தமயன் ஜீவனல்ல-பரமாத்மா என்று சொல்வதற்குக் காரணம் - பிருஹ்மம் உபாஸ்யம் என்று எடுத்துக் காட்டவும். (அதாவது சுத்த பிருஹ்ம பிரதிபத்தி (ஞானம்) யேற்படுவதற்க்காகவும்) சில வாக்யங்கள் உபாஸனையைச் சொல்லும்போது - சிலவற்றில் உபாஸ்யம் பிருஹ்மமன்று என்று சங்கை வருவதால் - அந்த சங்கையைப்போக்கி - பிருஹ்ம உபாஸ்யம் எனக்காட்டல் வேண்டும். ஜீவபரத்தை மறுத்து - பிருஹ்மபரம் என்று சொல்லி - பிருஹ்மபதம், ஆனந்த மயபதம், ஆனந்தபதத்தின் அப்யாஸம் ஆகிய மூன்றையும் முக்கியமாகக் கொண்டு நிர்குண பிருஹ்மத்தின் பிராதான்யத்தைச் சொல்லி - இந்த அந்தரதிகரணத்தில் "ரூபமுள்ளதாயிருத்தல்" முதலிய பிரமாணங்களைக்கொண்டு-ஜீவனை ஹிரண்மய புருஷனைச் சொல்வதுதான் பொருந்துமாதலால் - பொதுவாய் "கதிஸாமாந்யாத்" என்றதால் எல்லா வேதாந்த வாக்யங்களும் நிர்குண பிரும்மத்தின் ஸமந்வயத்திற்கு அபவாதம் (மறுப்பு) யேற்பட-அந்த அபவாதத்தை மறுத்து-நிர்குண பிருஹ்ம ஸமன்வயத்தை நிலைநாட்டவேண்டி-இந்த அதிகரணம் தொடங்குகிறது-அதாவது ஸர்வாத்மபாவம்-பாப சம்பந்தமற்றிருத்தல்-பரமாத்மாவிடமே பொருந்துமாதலால் - பரமேஸ்வரனே பொன்மயபுருஷன் ஆவர். மரியாதை (எல்லை) ஆதாரம் ரூபம்-இவைகள் உபாஸனைக்கு வேண்டி போதிக்கப்படுதலால் - அவை பரமேஸ்வரரிடம் உபாதியினாலே சம்பவிக்கலாம் என ஸித்தாந்தம்.

**ஸூத்ரம் 22.** भेदव्यपदेशाच्चान्यः (1-1-22)
பேதவ்யபதேசாச்சாந்ய: (1-1-22)

பேதவ்யபதேஸாத் ச (ஆதித்யன முதலான ஜீவர்களைக்காட்டிலும் பேதத்தைச்சொல்லுவதால்-அந்ய: ஜீவனில் வேறானவன் பரமாத்மாவே.

ஆதித்யன் முதலிய ஜீவர்களிடம் பேதம் உபதேசிக்கப்படுகிறது. (பிரு. 2. மா. 3-7-9) य आदित्ये तिष्ठन् आदित्योऽन्तरो यमादित्यो न वेद यस्यादित्यः शरीरं य आदित्यम् अन्तरो यमयति

எந்த பரமாத்மா - சூர்யனுக்குள் வசிப்பவனுகவு - எவனை சூரியன் அறியானே, எவனுடைய தேகம் சூர்யனே, எவன் உள்ளிருந்து நியமனம் செய்கிருனே - அவனே உனக்கும் அந்தராத்மா - அம்ருதன். य आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरो यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो यमयति - எவன்( பரமாத்மா) ஆத்மாவில் இருந்து கொண்டு - ஆத்மாவின்உள்ளேயும் எவனை ஆத்மா அறியாதோ - எவனுடைய தேகம் ஆத்மாகவும் இருக்கிறதோ எவனுடையசரீரம் ஆத்மாவாகவிருக்றதோ எவன் உள்ளிருந்து ஆத்மாவை நியமிக்கிருனே - அவனே அம்ருதன் அவனே உனக்கு அந்தர்யாமி. சுபலோ 7-1ல் योऽक्षरमन्तरे सञ्चरन् यस्याक्षरं शरीरं यमक्षरं न वेद - यो मृत्युमन्तरे सञ्चरन् यस्य मृत्युः शरीरं यं मृत्युर्न वेद एष सर्वभूतान्तरात्माऽपहतपाप्मा दिव्यो देव एको नारायणः अவன் எவனுக்கு தேகம் அக்ஷரமோ - எவனை அக்ஷரம் அறியாதோ - எவன் ம்ருத்யுவிலும் சஞ்சரித்துக் கொண்டும் – எவனை ம்ருத்யு அறியாதோ - அவனே எல்லோருக்கும் அந்தராத்மா - (எல்லோருக்கும் நியந்தா) அவனுக்கு அபஹதபாப்மத்வாதி குணங்கள் உண்டு. பாபமின்மை இத்யாதி - அவரே திவ்யதேவரான ஸ்ரீமந்நாராயணன் இதனுல் பரமாத்மாவுக்கு அபஹதபாப்மத்வாதி குணங்கள் உண்டு. பிறகு அவரே எல்லா ஜீவர்களையும் தனது சரீரமாகக் கொள்வதால் - அவர்களுக்கு அந்தராத்மாகவாக விளங்குகிருர் எனக்காட்டிற்று. ஜீவர்களுக்கும் - ஹிரண்யகர்ப்பர் முதலான ஜீவர்களை விட அன்யன் (வேருனவன்) ஏவ பரமாத்மா இதி ஸித்தம்-பரமாத்மா தான் எனக் கிடைக்கப்பெறுகிறது.

(இதில் ஆத்மாவில் நிற்பவனுகவும், இரண்டாவதில் எவன் ஆதித்யனில் நிற்கிருனே - உள் நுழைந்து நியமிக்கிருனே, என்றும் எவன் அக்ஷரம் எனப்படும் ஜீவனேடு கலந்த அசேதனத்தினுள் ஸஞ்சரிக்கிருனே - எவனுக்கு அக்ஷரம் சரீரமோ - என்று ஆதித்யன் முதலான ஜீவர்களை பரமாத்மாவுக்குச் சரீரமாகவும் - அவனை ஆத்மாவகவும் சொல்லி - ஜீவபகவான் பேதம் சொல்வதாலே - பரமாத்மா ஜீவனிலும் வேறுபட்டவன். இங்கு காட்டப்பட்ட அந்தர்யாமி பிராம்மணத்தில் ஆதித்யன் வ்யஷ்டி ஜீவனைக் குறிக்கிறது. आत्मनि - சுத்த ஜீவன் अक्षरं - उद्भूतसमष्टि जीवं प्रधानं; (சதுரானைன் பிரதானம்); ம்ருத்யு - तमोलीन जीवं; இங்கே கார்யகாரண - பத்தமுக்த - எல்லோருக்கும் அந்தப் பரமாத்மா) - அந்தர்யாமித்வம் இதனுல் ஸித்திக்கிறது.

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம:
ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம:
நாராயணம் நமஸ்க்ருத்யநரம் சைவநரோத்தமம்
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத்

# ப்ரஹ்ம வித்யா 2-ம் பாகம்

## ஸ்ரீ பாஷ்யம் முதல் அத்யாயம்—முதற்பாதம்

### ஆகாசாதிகரணம்-(1—1—8)

தைத். உப. III-1-1 **यतो वा इमानि भूतानि जायन्ते** 'எவனிடமிருந்துஇந்த எல்லாப்பிராணிகளும் உண்டாயினவோ' இதிலிருந்து என்ன சொல்லப்பட்டது என்றால் பிரும்மமே ஜகத்காரணம் சா. உ. 6-2-1 **सदेव सोम्येदमग्र आसीत्** ஸத் ஒன்றே சௌம்யா! முதன்முதலில் இருந்தது; **तत् तेजोऽसृजत** அது தேஜஸ்ஸை உண்டாக்கியது; ஐத. உப 1-1-1 **आत्मा वा इदमेक एवाग्र आसीत्** ஆத்மா-ஒன்றுதான் ஆரம்பத்தில் இருந்தது. தை. அனு. 1 **तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः** - அந்த ஆத்மாவிலிருந்து-(பூத) ஆகாசம் உண்டாயிற்று. இந்த மாதிரி வாக்யங்களிலே ஜகத்காரண வஸ்து பொதுவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது-ஸத்-ஆத்மன்-என்று. மேலும் ஆகாசத்தைச் சொல்லும்போது இந்த சுருதிகள் ஒரு தனிப்பட்ட தத்வமாக-ஸ்வரூபத்தினாலே காண்பிக்கப்பட்ட லக்ஷண விசேஷத்தையும் அதேமாதிரி ஆனந்தத்தையும் குணமாக (விசேஷணமாக) உடையதாகவும் இம்மாதிரி அர்த்தம் கொண்டதால்-அந்த ஜகத்காரணப்பொருள் பிரதானம்-க்ஷேத்ரக்ஞன் (ஜீவன்) இவர்களிலிருந்தும் வேறுபட்ட பிரும்மம் என்றும் தெரிய வருகிறது.

இப்போது-ஆகாசம் முதலியவைகளுக்கு விசேஷ சப்தார்த்தங்கள் காட்டப்பட்டு-ஜகத் காரணத்வம்-ஜகத் ஐச்வர்யம்-என்கிற பொருளிலே ஆகாசாதி சப்தங்கள் சொல்லப்படுகின்றன. இவை சித் அசித் வஸ்துக்களுக்கு விலக்ஷணமான-வேறுபட்ட பிரும்மத்தைச் சொல்லுகின்றன.

அந்த பிரும்மமே-ஆகாசம். ஆகாசம் எனப்படுவது பரமாத்மாவே - பரமாத்மாவுக்குரிய அடையாளங்கள் காணப்படுவதால் இந்த சூத்திரத்திலே-ஆகாசம் என்ற பதத்தினுல் சொல்லப்படுவது-பிரும்மமே. ஏனெனில் பகவானுடைய விசேஷ லக்ஷணங்கள் இந்த-வாக்யப் பிரகரணத்திலே இந்த வார்த்தை குறிக்கும் அர்த்தத்திலே-சொல்லப்படுவதால்- आकाशस्तल्लिङ्गात्- வேதா சூத் 1-1-23. இதிலும்-அதற்குக் கீழ் சொல்லப்பட்ட மற்றைய சூத்ரங்களிலும் உத்தம லக்ஷணங்களுடன் கூடிய பிரும்மமே சொல்லப்பட்டதாகும். ஜகத் காரணத்வம் சில விசேஷ பதங்களால் - அதாவது பிரஸித்த 'ஆகாசம்' என்பது போன்ற விசேஷ பதங்களால் காட்டப்படுகிறது. பிறகு நிகழும் சர்ச்சைகளிலும் ஜகத் காரணத்வம் - ஜகத் ஐச்வர்யம் - இத்யாதிகளாலும் கூட - பிரும்மமே சொல்லப்படுகிறது. அந்த பிரும்மத்தைச் சொல்லும்போது-அது தனிப்பட்டதாகவும்-சேதன அசேதன வஸ்துக்களிலிருந்து வேறுபட்டதாகவும் ஆகும். இந்த பிரஸித்த சேதன அசேதன வஸ்துக்களைக்குறிக்கும் ஆகாசம் போன்ற பதங்களால் பிரும்மமே [மேல் சொல்லப்பட்ட] விசேஷணங்களால் - ஜகத் காரணத்வஜகத் ஐச்வர்யாதிகளை உடையதாகச் சொல்லப்படுகிறது.

आकाशस्तल्लिङ्गात् । (1--1—23)

ஆகாசம் என்கிற பதத்தினுலே காட்டப்படுவது பிரும்மமாகும். ஏனெனில், பிரும்மத்தின் விசேஷ அடையாளங்கள் சாந். உ. 1-9 வாக்ய பிரகரணத்திலே சொல்லப்படுகின்றன-பரமாத்மாவுக்கு உள்ள தனிப்பட்ட அடையாளங்களாலே-சொல்லப்பட்டபடியால்; பிரும்மம் சேதன-அசேதனப்பொருள்களிலும் வேறுபட்டது. அதுவே ஜகத்காரணம்.

இது சரியல்ல-வேதாந்தங்கள் ஆகாசமே பிரும்மம் என்று கூறுகிறபடியால்-என்னும் பூர்வபக்ஷம் இனிகண்டிக்கப்படுகிறது.

சாந். உப. 1-9 1 ல் अस्य लोकस्य का गतिरिति, आकाश इति होवाच सर्वाणि ह वा इमानि भूतान्याकाशादेव समुत्पद्यन्ते; आकाशं प्रत्यस्तं यन्ति आकाशो ह्येवैभ्यो ज्यायान् आकाशः परायणम् – இந்த உலகத்தின் கதி-அடையவேண்டிய புருஷார்த்தம் யாது? அவன் (பிரவாஹணன்) பதிலாகச் சொல்கிறன் "அதுதான் ஆகாசம்; இந்த பிராணிகள் எல்லாம் ஆகாசத்திலிருந்து உண்டாயின; முடிவிலே ஆகாசத்தில் லயமடைகின்றன. ஆகாசம் மற்றைய பொருள்களையும் விடப் பெரியதானபடியால் ஆகாசமே கதியாகும்." இங்கு சந்தேஹம் யாதெனில்-ஆகாச பதத்தினல் பிரஸித்த பூத ஆகாசம் சொல்லப்படுகிறதா அல்லது பிரும்மமே லக்ஷணையாக இந்த அடையாளங்களால் சொல்லப்படுகின்றதா.? பூர்வபக்ஷி சொல்வது, பிரஸித்த பூதா காசமே. ஏன்? ஒரு பதத்தினுலே ஏதாவது ஒரு பொருள் சொல்லப்படவேண்டுமாஞல் ரூடியின் பிரகாரம் அந்த பதத்தின் அர்த்தம் ஒத்துக்கொள்ளப்படவேண்டியதாகும். ஆகையால் பிரஸித்தமான பூதாகாசமே. அதுவே சேதன அசேதன வஸ்துக்கள் அடங்கிய ஜகத்திற்குக் காரணமாகிறது. ஆகவே பிரும்மம் ஆகாசத்தைவிட வேறனதல்ல.

நாம் ஏற்கனவே சொல்லிவிட்டோம். பிரும்மம் சேதன அசேதன வஸ்துக்களைவிட வேறுபட்டது என்று. ஏனெனில் அவன் ஸ்ருஷ்டி முதலிய காரியங்களை தனது ஈக்ஷணசப்தத்தால் கூறப்பட்ட ஸங்கல்பத்தால் செய்கிறன் என்று. வாஸ்தவம். அம்மாதிரி சொல்லப்பட்டது. ஆனல், அவ்விதம் சொல்வது சரியாகாது. ஆகவே, எப்போது இவ்விதம் சுருதி சொல் கிறதோ "यतो वा इमानि भूतानि जायन्ते எவனிடமிருந்து எல்லாப் பிராணிகளும் உண்டாயினவோ தை. உ. III-1-1., அவனே தான் பிரும்மம்" என்று அப்படியாஞல், எதிலிருந்து உற்பத்தி ஆயிற்றே என்கிறபோது அந்தப் பொருள் யாது? (உற்பத்தி என்பது காப்பாற்றுதல் லயமடைதல் ஆகிய எல்லாவற்றையும் சொல்வதாகும்). அவ்விதமாஞல், அந்த விசேஷ வஸ்து இந்த சுருதியினல் ஆகாசமேயாகும்.

सर्वाणि ह वा इमानि भूतान्याकाशादेव समुत्पद्यन्ते

எல்லாப் பிராணிகளும் ஆகாசத்திலிருந்தே உண்டாயின. சா. உ. 1-9-1 என்பதால் ஜகத் உற்பத்திக்குக் காரணம் நிச்சயமாகவே ஆகாசத்தைத்தவிர வேறு ஒன்றுமில்லை என்று சொல்லப்படுகிறது.

அது அவ்விதமானால் ஸத் என்பது போல மற்ற பதங்களும் பொதுவான அர்த்தத்தையே குறிக்கும். सदेव सोम्येदमग्र आसीत् ஸத் ஒன்றுதான் முதன்முதலில் இருந்தது. இந்த மாதிரி வாக்யங்களிலே ஸத் முதலிய சப்தங்கள் ஆகாசத்தைத் தனியான தத்வமாகக் கூறின மேலும் இந்த சுருதியில், ஆத்மா ஒன்றுதான் முதன் முதலில் இருந்தது. ஐத் 1- 1- 1 आत्मा वा इदमेक एवाग्र आसीत् இதில் ஆத்ம சப்தத்தால் அதே ஆகாசத்தைக் கூறியது. வாஸ்தவமாக, ஆத்ம சப்தத்தினால் கேவலம் சித் வஸ்துக்களை மாத்திரம் குறிக்கும் என்பதாகாது, உதாரணமாக பானை [ம்ருதாத்மகமாக] மண் வடிவமானது ஆத்மா என்கிற பதம் அப் என்கிற (root) தாதுவிலிருந்து வந்தது பரவுதல், எனப்பொருளதாம். ஆத்மபதம் ஆகாசத்தையும் குறிக்குமா. இவ்விதமாகச் சொல்லும்போது அந்த ஆகாசமேபிரும்மம் அதுவே, ஜகத்காரணம் என்று கூறலாம். அவ்விதமானால், ஜகத்ஸ்ருஷ்டிக்கு வேண்டப்பட்ட 'பார்த்தல்' கௌணமாக ஆகாசத்துக்கும் சொல்லக்கூடும், அதற்கு ஏற்றாற்போலச் சொல்லலாமே. ஜகத்காரணம் ஸத்பதத்தினால் சொல்லப்படுவது. அதுபோன்ற பொதுவான பதங்களாலே சொல்வதானால் அதே மாதிரி "ஈக்ஷ", என்கிற தாதுவின் அர்த்தப்பிரகாரம் ஒரு குறிப்பிட்ட சேதன வஸ்துவின் கார்யமாகத்தான் இருக்கவேண்டும். ஆனால் ஆகாசம் என்பதாலே ஒரு அடையாளம்-லிங்கம்-நிச்சயமாகச் சொல்லப்படுகிறது. இங்கு இந்தப் பிரகரணத்திலே அவ்விதம் அர்த்தமாகக் கொள்வதற்கு இயற்கையான அர்த்தப்படி ஒன்றும் சொல்லப்படவில்லை.

வாஸ்தவத்திலே இவ்விதம் சொல்லலாம். சுருதியின்படி 'ஆத்மாவிலிருந்து ஆகாசம் உண்டாயிற்று' தை. அனு. 1-1-1 आत्मन आकाशः संभूतः இதில் ஆகாசமே ஒரு உண்டாக்கப்பட்ட காரியமாகும். வாயு போன்ற மற்ற பொருள்களும் இரண்டு அவஸ்தைகளில் இருக்கின்றன. 1. சூக்ஷ்ம அவஸ்தை, 2. ஸ்தூல அவஸ்தை இவை இரண்டுக்கும் பூதாகாசத்தின் சூக்ஷ்ம அவஸ்தை காரணமாகிறது. அதன் ஸ்தூலாவஸ்தை காரியமாகிறது. ஆகவே இந்த சுருதிக்கு அர்த்தம்-ஆத்மாவிடமிருந்து ஆகாசம் உற்பத்தியாயிற்று. தை. 1-1-1 அதன் சூக்ஷ்ம அவஸ்தையிலிருந்து, அது ஸ்தூலமான ரூபத்துடன்

மாறினது आत्मन आकाशः संभूतः என்பதால் மாறினது. स्वयं स्थूलरूपः संभूत इत्यर्थः

இந்தமாதிரி சுருதிவாக்யத்தாலே - எல்லாப் பிராணிகளும் ஆகாசத்திலிருந்து உண்டாயின सर्वाणि ह वा इमानि भूतानि आकाशादेव समुत्पद्यन्ते சா. 2 1-9-1-இதனைல் சொல்லப்பட்டது ஜகக் முழுவதும் ஆகாசத்திலிருந்துதான் உண்டாகியது. அதன் லயமும் ஆகாசத்திலேதான் என்று ஆகவே இவ்விதம் தீர்மானிக்கப்படுகிறது. அந்த ஆகாசமே பிரும்மம்தான். அதுவே ஜகக்காரணமாகச் சொல்லப்படுவது, எந்தக் காரணத்தினுலேயும் பிரும்மம் என்பது பிரஸித்தமான ஆகாசத்தைத்தவிர வேறுகவில்லை. அதேகாரணத்தினல் இந்த சுருதியும் இன்னும் பல சுருதிகளும் பொருந்தியவைகளாகும் — "இந்த ஆகாசம் ஆனந்தமாக இல்லையென்றால் यदेष आकाश आनन्दो न स्यात् தை 2-7-1 சா. 2-8-24-1 आकाशो ह वै नामरूपयोर्निर्वहिता-ஆகாசம் நாமரூபத்தை உண்டாக்கி நிர்வகிக்கிறது என்பதால் பிரும்மம் பிரஸித்தமான ஆகாசத்தைத்தவிர வேருகவில்லை.

இவ்விதம் சொல்லக்கூடுமானல்-நாம் பதில் சொல்லுவோம் आकाशस्तल्लिङ्गात् [சூ 1-1-23] ஆகாச சப்தத்தினல் அறியப்படுவது-பரமாத்மாவே-அவனுக்குத்தான் அசாதாரணமான அடையாளங்கள் உண்டு-அந்த பரமாத்மா அசேதன வஸ்துக்களிலிருந்தும் பிரசித்தமான பூதாகாசத்திலிருந்தும் வேறான தத்வமாகவிருக்கிருன், எப்படி? तल्लिङ्गात् பரமாத்மாவுக்குரிய அசாதாரண அடையாளங்கள் அங்கு சொல்லப்படுவதாலே-அவையாவன நிகில ஜகத் காரணதவம் எல்லா வஸ்துக்களையும்விடப் பெரியதாகவிருப்பது सर्वस्मात् ज्यायस्त्वम् परायणत्वं எல்லோரும் அவனையே அடைக்கலமாகப் பற்றியிருப்பது-இவைகளால் பரமாத்மாவே சொல்லப்படுகிருன். உண்மையில், அசேதன வஸ்துவான ஆகாசத்தினுல் ஜகத் காரணமாகவிருக்கமுடியாது-ஏனெனில், ஒரு சேதன வஸ்து ஒரு அசேதன வஸ்துவிடமிருந்து உண்டாகாது. பராயணத்வம்-என்பதால் சேதனர்களால் அடையப்படும் முக்கியமான கதி பரம புருஷார்த்தம் (பரமப்ராப்யம்) அதுவாக விருக்கவேண்டுமானுல்-ஒரு அசேதனப் பொருளுக்கு அது

ஏற்படாது-அதுவோ விடவேண்டிய பொருளாக இருப்பது, அது ஸகல புருஷார்த்தங்களுக்கும் விரோதமாகவிருப்பது. அதேமாதிரி ஸர்வஸ்மாத் ஜ்யாயஸ்த்வம் என்பது நிருபாதிகமாக ஸர்வ கல்யாண குணங்களைக் கொண்டவனும்-அதனால் எல்லாப் பொருள்களையும்விட மேன்மை பெற்றவனும் யாவராலும் அணுக முடியாதபடி மகா மகிமைகள் பெற்றவனுமாவான். இவ்விதமாகவிருப்பதும் ஒரு அசேதனத்திற்கு முடியாது.

அந்த சுருதி வாக்யத்தில்,

सर्वाणि ह वा इमानि भूतान्याकाशादेव समुत्पद्यन्ते ।

இந்த எல்லாப் பூதங்களும் ஆகாசத்திலிருந்து உண்டாயின (சா 2-9-1) என்பதில் ஆகாசம் ஒரு பிரஸித்தமான வஸ்து என்று சொல்லப்படும். ஒரு வஸ்துவை பிரஸித்தமானது என்று சொல்லவேண்டுமானால் அதை அறிவதற்கு-சில வழிகள் உண்டு. பிரஸித்த ஆகாசத்தை அறிவது-சில பிரமாண வாக்யங்களாலே. சாந் 6. 2-1 सदेव सोम्येदमग्र आसीत् 'ஸத்'தான் முதன் முதலில் இருந்தது. இதேமாதிரி இன்னும் சில சுருதிகள் பிரும்மத்தை மேல் சொன்னபடியான வஸ்துதான் என்று நிர்ணயமாகச் சொல்கின்றன. ஆகவே பிரும்மம் என்று ஸ்தாபிக்கப்பட்ட வஸ்து அனுவாதமாக பிரஸித்தமான ஆகாசம் என்கிற பதத்தினால் காட்டப்படுகிறது. பிரும்மத்தை ஆகாசம் என்கிற பதத்தினால் மட்டும் காட்ட முடியாது ஏனெனில், அவன் பிரகாச வஸ்துவாகவிருக்கிறான்; அதாவது தனக்குள்ளே பிரகாசமாயும் பிற வஸ்துக்களையும் பிரகாசமாக்கும் காரணமாகிறான் (ஆகாசம் அனுவாத வாக்யம்-மற்றது எல்லாம் புரோவாதி வாக்யம்-அசேதனமான ஆகாசம் ஜகத் காரணமாகாது.) आकाशते-आकाशयति பிரகாசிப்பவன், பிரகாசம் செய்பவன், பரமாத்மாவே யாவான். ஆகாச சப்தம் ஒரு தத்வத்தைச் சொல்லக்கூடியதானாலும்- அது ஒரு குறிப்பிட்ட அசேதன வஸ்துவைக் குறிக்கிறது.-அது ஒரு சேதனப்பொருளுக்குக் காரணமாகாது. சுருதிகளில் காட்டப்பட்ட சில வாக்யங்கள்-सोऽकामयत-அது விரும்பியது; तदैक्षत बहुस्यां प्रजायेय-நான் பலவாக ஆவேன், (சாந். 6-2-3) (தை-அ-6) இந்த மாதிரி வாக்யங்கள்

ஸர்வக்ஞத்வம்-ஸத்ய ஸங்கல்பத்வம்-கொண்ட ஒரு வஸ்து (அது பரமாத்மாதான்) என்று சொல்லப்படுவதால்-ஆகாசம் என்பதால் பூர்வபக்ஷி சொல்கிறபடி அர்த்தம் சொல்வது-உண்மை அர்த்தத்தைவிட வேறானது-சரியான பிரமாண மாகாது. ஆகாசம் என்கிற பதம்-காச் (காஶ்)-என்கிற தாதுவில் உண்டாயிற்று-தான் பிரகாசித்து—மற்றைய வஸ்துக்களையும்-பிரகாசிக்கச் செய்கிறது). அதுபோல இன்னும் சில சுருதி களில் ஒரு குறிப்பிட்ட வஸ்துவுக்கு சில அசாதாரண தர்மங்கள் முடிவில்லாதபடியிருக்கின்றன-என்று சொல்வது-பொதுவாகச் சொல்லப்படும் அர்த்தத்திற்கு விரோதமாகச் சொல்வது என்பது—ஒரு சுருதி வாக்யம் முன்னாலே சொல்லப்பட்ட வாக்கியங்களுக்கு அனுவாதமாக-விவரிக்கிறபடி வருவதாலே-பூர்வார்த்த பிரதிபாதனம் செய்வதாகவிருப்பதன் காரணத்தினால்-அதன் அர்த்தம் உண்மை அர்த்தத்தைவிட மாறாக விருப்பது என்பது தவறாகும்.

நாம் ஏற்கனவே சொல்லியது—ஆத்மா என்கிற பதம் சேதன வஸ்துக்களை மாத்திரம் சொல்வதாக நினைக்கக்கூடாது எனெனில், அந்த பதம் இந்த மாதிரியும் உதாரணங்களில் சொல்லப்படுகிறது. ம்ருதாத்மகம் — मृदात्मको घटः இந்தப் பானை மண் மயமாகவிருக்கிறது. இதற்கு பிரதி உத்தரமாக நாம சொல்வது — 'ஆத்மா' என்கிற பதம் சேதன வஸ்துக் களைவிட வேறான வஸ்துக்களையும் சில சமயங்களில் குறிக்கும்-தேகத்தைச் சேர்த்துச் சொல்லும்போது ஆத்மா சேதன வஸ்துவையும் குறிக்கும். ஆகவே தேகத்தையுடைய ஒரு சேதன தத்வம் (வஸ்து) என்று— இந்த மாதிரி சுருதி வாக்யங்களாலே சொல்லப்படுகிறது. शरीर प्रतिसंबन्धि என்ற பொருளில் ஆத்ம சப்தம் பிரயோகமாகிறது. ஐத. 1-1 आत्मा वा इदमेक एवाग्र आसीत्-ஆத்மா ஒன்றுதான் முதன் முதலில் இருந்தது. தை. XI-1-आत्मनः आकाशः संभूतः-

ஆத்மாவிலிருந்து ஆகாசம் உண்டாயிற்று. உதாரணமாக கோ (பசு) என்கிற சப்தம் பல பொருட்களைச் சொல்லுமானாலும்-எந்தப் பொருளுக்கு தாடி போன்ற அசாதாரண அடையாளங்கள் உள்ளனவோ அந்தப் பிராணியே பொருளாகும், அவ்விதமின்றி அந்தப் பதத்திற்கு வேறு அர்த்தம் கொள்ளவேண்டுமானால் அந்த அர்த்தம்

[illegible]டத்தைப்பற்றி முக்கியமாகச் சான்று காட்டியிருக்க வேண்டும். அதுபோல கீழ்க்கண்ட சுருதிகளிலே-ஒவ்வொன்றிலும். "அவன் நினைத்தான்-நான் பல உலகங்களை ஸ்ருஷ்டி செய்வேன்;" ஐத 2-1-1 அவன் விரும்பினான், நான் பலவாக ஆவேன்-பலவாகப் பிறப்பேன். "தை. 2 II 6-1. இத்யாதிகளில் உறுதி செய்யப்படுகிறது என்னவென்றால்-ஆத்மப்பதம் ஆத்மாவான ஒரு சேதன வஸ்துவைத் தவிர வேறு ஒன்றையும் குறிப்பது இல்லை (அது பொதுவானதென்று காட்டப்படுகிறது). அது தேகத்திற்குச் சமமாகச் சொல்லப்படுகிறது சரீரப்ரதி சம்பந்தம் கொண்ட சேதனப்பொருளாகவும் சொல்லப்படுகிறது. ஐத. 1-1-1

स ऐक्षत लोकान्नु सृजा इति सोऽकामयत, बहुस्यां प्रजायेय

இத்யாதி வாக்யங்களில் அதாவது சேதன வஸ்துவைத் தவிர வேறு ஒன்றுமில்லையென்று உறுதி செய்யப்படுகிறது.

ஆகையால் பிரும்மமே எல்லா உலகங்களுக்கும் காரணம்-அதற்கு முன்னுல் சொல்லப்பட்ட அசாதாரண விசேஷ தர்மங்கள் உண்டு, அவை அதற்குத்தான் உண்டு வேறு யாருக்கும் கிடையாது இந்தக் கருத்துக்கள் கீழ்ச் சொல்லப்படும் சுருதிகளில் தெளிவாகின்றன सदेव सोम्य ஸத் ஒன்று தான் இருந்தது. (சாந். 26-2-1) என்று தீர்மானமாகக் காண்பிக்கப்பட்டது. பிரும்மமே ஆகாசம் என்கிற பதத்தினுல் காட்டப்படுகிறது. இந்த சுருதியிலே — सर्वाणि ह वा इमानि भूतानि-எல்லா பிராணிகளும் ஆகாசத்திலிருந்து உண்டாயின என்கிற வாக்யத்திலே-ब्रह्मैवाकाश शब्देन प्रसिद्धिमत्-பிரும்மமே பிரஸித்தமாகச் சொல்லப்பட்டதாகும்.

## அதிகரணம்—9.

### ப்ராணாதிகரணம்

சூத்ரம் 24 अत एव प्राण அதே காரணத்தினலே (ஆகாசத்திற்கு ஏற்பட்டதுபோல) பிருமமே பிராண சப்தத்தினல் பிரகரணத்தில் சொல்லப்படுவது. அத ஏவ-பரமாத்மாவுக்கே உரிய அடையாளங்கள் காணப்படுவதால்-இந்தக் காரணத்

திறவை-பிராணன் சாந்தோ. 10-9ல் பிரகரணம் ஆரம்ப மாகிறது - பிராணன் என்பது பரமாத்மாவேயாகும். பிரஸ்தோதா - ஸாமகானத்தைப் பாடுபவன் உத்காதாவிற்கு உதவியாகவிருப்பவன்; பிரஸ்தாவம் என்று முதலில் ஸாமத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் கூறுவதாகப்-பெயர். பிரஸ்தாவத்தை அடையும் தேவதை-என்று சொல்லப்பட்டு இருப்பதால்-சொல்லப்பட்ட விஷயம்-அந்த தேவதை யார்? प्रस्तोतर्या देवता प्रस्तावमन्वायत्ता-அதற்குப்பதிலாக அது பிராணன்.

कतमा सा देवतेति, प्राण इति होवाच सर्वाणि ह वा इमानि भूतानि प्राणमेवाभिसंविशन्ति; प्राणमभ्युज्जिहते, सैषा देवता प्रस्तावमन्वायत्ता तां चेदविद्वान् प्रास्तोष्यः, मूर्धा ते व्यपतिष्यत् -

எல்லாப் பிராணிகளும் பிராணனில் நுழைகின்றன-லயமடைகின்றன-அவை பிராணனிலிருந்து உண்டாகின்றன பிரஸ்தாவத்தில் வரும் தேவதை இதுதான். அந்த தேவதையைத் தெரிந்துகொள்ளாதுபோனால்-நீ வீணாக ஸாமம் ஓதினால்,-உன் தலை விழுந்துவிடும் - சா. 2-1-9; 1-11-4&5. இங்கு பிராணன் என்கிற பதம் - ஆகாசத்தைப்போல-சாதாரணமாக அறியப்படும் பிராணனிலிருந்து வேறான பரமாத்மாவாகும். ஏனெனில், இந்தப் பிராணனைப்பற்றி பிரகரணத்தில் சொல்லப்படும்போது-பிரஸித்தமான. இந்த அஸாதாரணமான லிங்கத்தினால் ஸமஸ்த உலகமும் அதற்குள் நுழைந்து (ஸ்ருஷ்டி ஸமயத்தில்) வெளிவருவதால்-இது பிரஸித்தியாகச் சொல்லப்படுவது.

ஆனால் இங்குகூட ஒரு ஆட்சேபம் சொல்லக்கூடும்-அதாவது பிராணனையே நம்பி-இந்த ஸம்பூர்ண பிராணிகளும் ஸ்திதி இருப்பு - பிரவிருத்தி இத்யாதிகளால் வாழ்கின்றன-அதனால் பிரஸித்தமான பிராணன் ஜகத்காரணமாக இருக்கக்கூடும் என்ற இந்த ஆட்சேபத்தை மறுத்துரைக்கிறார். கற்கள்-கட்டைகள் இவைகள் விஷயத்தில் சரியாக ஆகாது; அசேதனமானதிரி சேதனனின் (ஜீவனின்) ஸ்வபாவத்திற்கும் பொருந்தாது; ஏனெனில், பிராணன் அவற்றுள் வசிப்பதில்லை. இந்த எல்லாப் பிராணிகளும் பிராணனில் நுழைகின்றன-அதில் லயமடைவதற்கு அதில் இருந்து வெளிக்கிளம்புகின்றன.

सर्वाणि ह वा इमानि भूतानि प्राणमेवाभिसंविशन्ति प्राण-मभ्युज्जिहते-

என்பதால் ஆட்சேபம் எழ, அதை மறுத்துச் சொல்லப் படுகிறது ஆகவே பிராண சப்தம் எல்லாவற்றிற்கும் மேலான ப்ரும்மத்தைக் குறிக்கும்-எனெனில், அதுதான் எல்லாப் பிராணிகளுக்கும் உயிரையளிக்கிறது.

ஆகவே நிச்சயமாகத் தீர்மானிக்கலாம். மேலான பிரும்மமே - பிரஸித்தமான ஆகாசம் - பிராணன் இத்யாதி பொருள்களைவிட வேறானவன் - அதுவே ஜகக்காரணம். அதற்கு அபஹத பாப்மத்வாதி-ஸார்வஜ்ஞ்ய ஸத்யஸங்கல்பம் ஆகிற அநேக கல்யாண குணங்கள் உண்டு. என்பதால்-ஆகாசம், பிராணன் என்கிற வார்த்தைகளால் ப்ரும்மமே சொல்லப்படுகின்றது-என்பது ஸித்தம். (பிரஸித்தமான பிராணனைக்காட்டிலும் - வேறான பரமாத்மாவே இவ்வாக்யத்தில் சொல்லப்படும் ஜகத்காரணம்).

### அதிகரணம்—10

### ஜ்யோதிரதிகரணம்

இதற்குப்பிறகு-1-1 25 ஸூ ज्योतिश्चरणाभिधानात् ஜ்யோதிஸ் சப்தத்தினால் அறியப்படுவதும் பிரும்மமே-ஏனெனில் ச்ருதியில் அவனுடைய பாதங்களாக ஸமஸ்தபூதங்களையும் த்யுலோகத்தையும் சொல்லியிருப்பதாலே. அதற்குப் பின்பு வரும் ஸூத்ரங்களிலும் இதுதான் விஷயம். ஜகத்காரணத்திற்கு அளவிடமுடியாதபடி - நிரதிசய தீப்தி என்கிற குணம் சொல்லப்படுகிறது. அந்த ஜ்யோதிஸ்ஸே இந்திரன்-என்பது போன்ற பிரஸித்தமான பதங்களால் காட்டப்படுகிறது. இவைகள் எல்லாம் பிரும்மத்தையே குறிக்கின்றன.

ஸூ 25 ज्योतिश्चरणाभिधानात् — எல்லா பூதங்களையும் இஜ்யோதியின் ஒரு பாதமாகச் சொல்வதாலே-ஜ்யோதி எனப் படுவதும் பரமாத்மாவே (ஆகாசாதிகரணத்தில்-பஞ்சபூதங் களில் ஒன்றான ஆகாசம் ஜகத்காரணம் என்னும் பக்ஷம் மறுக்கப்பட்டது. அதேமாதிரி இரண்டாவதான வாயுவைச் சொல்வதும் மறுக்கப்பட்டது. வாயுவிலிருந்து தோன்றுவதும்-மூன்றாவது பூதமான ஆதித்யாதிகளை ஜகத்காரணமாகக் கூறும் பக்ஷம் இங்கு தள்ளப்படுகிறது).

சாந் 3-22-7-अथ यदतः परो दिवो ज्योतिर्दीप्यते विश्वतः पृष्ठेषु सर्वतः पृष्ठेष्वनुत्तमेषूत्तमेषु लोकेषु, इदं वाव तत् यदिदमस्मिन् अन्तः पुरुषे ज्योतिः

இப்போது இந்த மேலான த்யு (ஸ்வர்க்க) லோகத்திற்கு அப்பால் பிரகாசிக்கிற - நிரதிசய தீப்தி-ஜ்யோதிஸ்-இந்த உலகத்திற்கும் அப்பால் பிரகாசிக்கிறதும் எவை மேலான உலகங்கள் என்று சொல்லப்படுகின்றனவோ அவைகளையும்விட மேலானவிடத்திலும் பிரகாசிக்கிறதோ அந்த ஜ்யோதிஸ்ஸே ஆகும். அதுவே இந்த புருஷனின் உள்ளிருக்கிறது (வ்யஷ்டி பதார்த்தங்களுக்கும்-ஸமஷ்டி பதார்த்தங்களுக்கும் அப்பால் பரமபதத்தின்மேல் தமக்கு மேலில்லாத அந்த உலகங்களிலும் யாதொரு சோதி ஒளிவிடுகின்றதோ-அதுவே இம்மனிதனுக்குள் விளங்கும் ஜாடராக்னியாகும்). இதில் சம்சயம்-ஜ்யோதிஸ் சப்தத்காலே அறியப்படுவது அதேமாதிரி மனிதனின் வயிற்றிலுள்ள ஜாடராக்னியோடு ஒன்று என ஓதப்படுவது நிரதிசய தீப்தி என்றும் சொல்லப்படுவது-அதற்கு பிரஸித்தமான ஜ்யோதிஸ் பொருள்களாகிற ஆதித்யன் அக்னி முதலான அசேதனங்களிலே ஒன்றான சோதியே ஜகத் காரணமாய் இருக்கவேண்டுமா. அல்லது அந்த ஜ்யோதிஸ்-மேலான பரப்ரும்மா-சேதன அசேதன வஸ்துக்களைவிட விலக்ஷணமானவன்-எல்லாவற்றிற்கும் மேலான காரணப்பொருளானவன் எவனிடம் நிரதிசய தேஜஸ் உள்ளதோ - அத்தகைய ஸர்வக்ஞத்வம் ஸத்ய ஸங்கல்பம் கொண்ட பரமாத்மாவா?

**பூர்வபக்ஷம்:** பிரஸித்தமாகவுள்ள ஜ்யோதிஸ்தான். எப்படியெனில், (இவ்வாக்கியத்திலும் பிரஸித்தியைக் காட்டும் யத்-என்கிற பதமிருந்தாலும்-ஆகாச பிராணாதிகரண வாக்கியங்களைப்போல-இவ்வாக்கியத்திலே பரமாத்மாவுக்கே பொருந்தும் அடையாளம் ஒன்றுமில்லாதபடியால் உலகில் பிரஸித்தமான அக்னி-சூரியன் இவைகளில் ஒன்றுதான் ஜ்யோதிஸ்ஸாக இருக்கவேண்டும். மேலான பரமபுருஷனைச் சொல்லும் அடையாளங்கள் இல்லாதபடியால் பரமாத்மாவாகச் சொல்ல முடியாது. மேலும் இங்கு-அந்த சோதி ஜாடராக்னியைப் போல இருக்கிறது என்றும் சொல்லப்படுவதாலே பிரஸித்தமான ஜ்யோதிஸ்ஸே இவ்விதமாக ஜகத்காரணம் ஆகலாம். ஏனெனில் அதனுடன் சம்பந்தப்பட்டது. அளவிடப்பட முடியாத ஜ்யோதிஸ்தான்.

**அதற்குப்பதிலாக நாம் சொல்வது-யாதெனில் ஜோதிஸ்** என்பதாலே காட்டப்படுவது-பிரும்மமே-ஏனெனில் சம்பந்தப் பட்ட பிரகரணத்திலே-பரமாத்மாவின் ஒரு பாதம் சொல்லப் பட்டிருக்கிறதாலே ज्योतिश्चरणाभिधानात्- (சூத். 1 -1-25)-அந்த சோதியாக இங்கு சொல்லப்படுவது-பரமாத்மாவைக் குறிக்கும்- நிரதிசயதீப்தி சம்பந்தம் சொல்லப்பட் டிருப்பதாலே-அது பரமாத்மாவேயாகும். ஏனெனில், சுருதியில்-சா - 3-12-6ல்

**पादोऽस्य विश्वा भूतानि त्रिपादस्यामृतं दिवि ।**

என்பதால் இப்பரம்பொருளுக்கு ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள எல்லாப்பூதங்களும் ஒரு பாதமாகும். இதன் மற்ற மூன்று பாதங்கள் பரமபதத்திலுள்ளன) என்று இச்சோதியைக்குறித்துக் கூறப்படுகிறது. சா. உ. III-12-6; இதில் எல்லாப்பூதங்களும் அந்த பரமாத்மாவுக்கு ஒரு பாதமாகச் சொல்லப்பட்டு-அந்த பரமாத்மா-புருஷசூக்தாதிகளில் நாராயணன் என்று சொல்லப் படுகிறது.

சா. உ. III-13-7 **अथ यदतः परो दिवो ज्योतिः** என்கிற வாக்கியத்திலே வைகுண்டத்தில் எல்லா உலகங்களுக்கும் அப்பாலிருக்கும் மேலான சோதி-என்பதில் பரமபுருஷனுடைய அசாதாரணமான லிங்கம் (அடையாளம்) சொல்லப்படவில்லை; அவ்விதமிருப்பினும்-பரமபுருஷனின் அதே பிரகரணத்தில் முந்தின சுருதியில் பரமபுருஷனையும் மேலான உலகத்தையும் (வைகுண்டத்தையும்) சம்பந்தப்படுத்திச் சொல்லியிருப்பதாலே இந்தச் சோதியும்-மேலான உலகத்திற்கு மேலாக பிரகாசிப்பதாகச் சொல்வதால் இந்த புருஷன் பரமாத்மாவே ஆவான். (ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்-வித்யுல்லேகேவ பாஸ்வரா, இத்யாதியான உபதேசத்தாலும் ஜ்யோதி என்பது ஜாடராக்னியைக் குறிக்கும் என்கிற உபதேசத்தாலும் இவ்விதம் இரண்டும் ஒன்று என்று சொல்வதில் தவறு இல்லை. ஏனெனில் அந்த உபதேசம் ஒரு விதி வாக்யமாகும்-மேலான பரம்பொருளை ஜாடராக்னியாக நினைத்து உபாஸிப்பதிலே-குறிப்பிட்ட பலன்களை அடையலாம் என்று சொல்கிறபடியால் அந்த ஜாடராக்னிக்கும் பகவானாகவிருக்கும் தன்மை கீதையில் 15-14

**अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।**

நானே ஜாடராக்னியாகிப் பிராணிகளின் உடலிலேயிருக்கிறேன் என்று பகவானே அருளிச்செய்வதால் தெளிவாகும். எவன் இப்படி பரம் ஜ்யோதிஸ்ஸை ஜாடராக்னி ஸ்வரூபமாக அறிகிருனே-அவன் கண்ணுக்கு இனியவனாகிருன்-பெரும் கீர்த்தியை அடைகிருன் என்று சொல்லப்பட்டபடியால்-பலத்திற்காகப் பரம் ஜ்யோதிசை ஜாடராக்னியாகத் தியானிக்க வேண்டும் என்று இங்கு விதிக்கப்படுகிறது)

(சூ. 26) **छन्दोऽभिधानान्नेति चेन्न तथा चेतोर्पणनिगमात्तथा हि दर्शनम्।**

முன் வாக்யமொன்றில் காயத்ரி சந்தஸைச் சொல்வதாலே பாதோஸ்ய ஸர்வா பூதானி என்ற மந்திரத்தில் சொல்லப்பட்டது பிரும்மமில்லை, என்று கூறப்படுமாகில் (இதிசேத்) அது சரியில்லை. சேதோர்ப்பண நிகமாத்—பிரும்மத்தை காயத்திரி ஸத்ருசமாக மனத்தில் அனுஸந்திக்கும்படி உபதேசமிருப்பதாலே, ததாஹி தர்சனம்—அவ்வாறே மற்றொரு வேதவாக்யத்தில் ஒரே மாதிரியாக சந்தஸ்ஸைச் சொல்லும் சப்தம் வேறு ஒன்றைச் சொல்வதை நாம் காண்கிறோம்.

முந்தின சுருதியில் (அதே பிரகரணத்தில்)-காயத்ரி சந்தஸ் சொல்லப்பட்டிருக்கிறது—இதில் **गायत्री वा इदं सर्वम्**- சாந். 3-12-1-காயத்ரியே இவை எல்லாம்-என்று கூறி- **तदेतदृचाऽभ्युक्तम्** என்று காயத்ரியின் பெருமை அறியப்படும். ஆகவே, இந்த காயத்ரி பிரும்மம் என்று சொல்லப்படுகிறது. அவளுடைய பெருமை அவ்விதம்-என்று கூறி அதற்குப்பின்பு **तावानस्य महिमा** அதே காயத்திரி பிரும்மமாக-ஒரு ருக்கில் பின்னால் சொல்லப்படுகிறது-(அந்த ருக்கில் அக்னிக்குப் பெருமை சொல்லப்படுகிறது. அது வயிற்றிலுள்ள ஜாடராக்னி என்கிற பதத்தால் காட்டப்படுகிறது. மனிதனுக்குள்ளிருக்கும் நெருப்பு-எதனால் அன்னம் ஜீர்ணிக்கப்படுகிறதோ - அதுதான் வைச்வானரன் - (பிரு. உப. V-9) - சா. உ. III-12-6ல் அதனுடைய மகிமை இதுதான் என்று சொல்லப்பட்டிருப்பதாலே - இங்கு பிரும்மமாகிய காயத்திரி என்பது அந்த சந்தஸைக் குறிக்கும். ஆகையால் இந்த சுருதி வாக்யத்திலே பரமபுருஷனைக் குறிக்கக்காணோம். (அதாவது பாதோஸ்ய ஸர்வா பூதானி-என்பதில் நான்கு பாதங்கள் காயத்திரிக்குச்

சொல்லப்படுகின்றன. இதில் பரமாத்மாவைக் கூறியதாகச் சொல்வது சரியில்லை. ஆகையால் இதை அடுத்திருக்கும் பரஞ்சோதியைச் சொல்லும் 3-13-7 வாக்யத்தையும் பரமாத்மாவைச் சொல்லுவதாக ஒப்புக்கொள்ளவேண்டிய அவசியமில்லை. ஆகவே ஜகத்காரணமான இச்சோதி-பூதங்களில் மூன்ருவதான தேஜஸா (சோதியா)கும்; பரமாத்மா இல்லை என்பதாம்.

அவ்வித ஆட்சேபத்திற்கு நாம் பதில் சொல்வோம். ஏனெனில், **तथा चेतोर्पणनिगमात्** இந்த உபதேசம் பிரும்மத்தை அதே காயத்திரியாக தியானம் செய்து உபாஸிக்கவேண்டியது-என்பதில் காயத்திரி என்னும் பதத்தால் மாத்திரம் சொல்லப் படவில்லை ஏனெனில், ஒரு சந்தஸ் மாத்திரம் ஸர்வாத்மகமாக இராது. ஆனல், இங்கு சொல்லப்படுவது பிரும்மத்தை உபாஸிக்கிறபோது காயத்திரியுடன் ஒத்தவகை உபாஸிக்கும்படி ஓதப்படுகிறதே ஒழிய-காயத்திரியை மாத்திரம் உபாஸிக்கும்படிச் சொல்லவில்லை. இதன் அர்த்தம்-நாம் எண்ணிய பலனை யடைவதற்கு உபதேசிக்கப்படுவது, பிரும்ம விஷயத்திலே-நாலு பாதமுடைய காயத்திரியைப்போல பிரும்மமும் நாலு பாதமுடையது என்று மனத்தில் அனுஸந்திக்கவேண்டும் என்பதே; பிரும்மத்தைக் காயத்திரியென்று வேதம் சொல்வதாக அறியவேண்டும். எவ்விதமெனில்,

**इन्द्रः शचीपतिः। बलेन पीडितः। दुश्च्यवनो वृषा। समित्सु सासहिः —**

என்கிற மந்திரத்தில்-காயத்திரி சந்தஸ் நான்கு பாதங்களை யுடையதாகிறது. எல்லாப் பொருள்களும் அவனுடைய ஒரு பாதமாகும். அவனுடைய மூன்று பாதங்களும் மேலான உலகமாக இருக்கின்றன. சா. உ. III-12-6.

**पादोऽस्य सर्वा भूतानि त्रिपादस्यामृतं दिवि।**

என்பதால் பிரும்மம் நான்கு பாதங்களைக் கொண்டது; காயத்திரிக்கும் நான்கு பாதங்கள்-ஆகவே முன்பு சொல்லப் பட்டபடி-ஸாத்ருச்ய ; சுருதி அவ்விதம் சொல்கிறது

அதாவது-வேறு இடத்திலும் சந்தஸ்ஸைக் குறிக்கும் ஒரு பதம் மற்ற வஸ்துக்களையும் குறிக்கும்; அதன் பலனுடை-ஸாதருச்யம் சொல்லலாம். உதாரணமாக ஸம்வர்க

வித்யையிலே சா. உ. 4-3-8 [illegible]
என்று ஆரம்பித்து सैषा विराडन्नादी) என்று முடிகிறது-அக்னி
ஸூர்யன்-ஜலம்-சந்திரன்-வாயு என்னும் ஐந்தும் வாக்கு, கண்,
காது, மனம், பிராணன் என்னும் ஐந்தும் சேர்ந்து
பத்தாகின்றன-என்று கூறிவிட்டு-பத்து என்னும் எண்ணிக்-
கையின் ஸாத்ருச்யத்தைக்கொண்டு - सैषा विराडन्नादी-ஸைஷா
விராட் சா, உ 4-3 8 அப்படிப்பட்ட இப்பத்தும் விராட்டாகும்
என்று பத்து அக்ஷரங்களைக்கொண்ட விராட் என்னும் சந்தஸ்-
ஸாகவே-அக்னி முதலான பத்துப் பொருள்களும் அனு
ஸந்திக்கப்பட்டன (ஸம் வர்க வித்யையில்-முக்ய பிராணன்
உபாஸிக்கவேண்டியுள்ளது. அதற்குள் எல்லாப் பிராணி
களும் சமயத்தில் லயமடைவதுபோல-தனக்குள் அடக்கி
ஒடுக்குவது போல உபாஸிக்கவேண்டியது. அதில் இந்த
ஐந்தும்-மற்ற ஐந்தும் சேர்ந்து ஆக பத்து-அப்படிப்பட்ட இப்
பத்தும் விராட்டாகும்-என்று பத்து அக்ஷரங்களைக் கொண்ட
விராட் என்னும் சந்தஸ்ஸாலே-அக்னி முதலான பொருள்
களும் அனுஸந்தானம் செய்யப்பட்டன. அதுபோலவே
இங்கும் நாலு பாதங்களையுடைய பிரும்மம்-நாலு பாதங்களை
உடைய காயத்திரி ஸத்ருசமாக அனுஸந்திக்கப்படவேண்டும்.
ஆகவே பரம்ஜ்யோதிஸ் நாராயணனே ஆகும். (இந்த பத்து
எழுத்து சந்தஸ்-விராட்- (பத்து பாகங்களைக் கொண்டது
என்பது-பத்து பாகங்களாகிற அன்னத்தை உண்டு
பண்ணுவது) இந்தகாரணத்தினலும் காயத்திரி என்னும் பதம்
பிரும்மத்தைக் குறிக்கும்.

ஸூ. 27. भूतादिपादव्यपदेशोपपत्तेश्चैवम् - பூதாதி பாதவ்யப
தேசோபபத்தேஸ்ச - பூதங்கள் முதலானவற்றை காயத்
திரிக்கும் பாதமாகச் சொல்வது-பொருந்துவதற்காகவும்-ஏவம்-
காயத்திரி எனப்படுவது பிரும்மமென்றே கொள்ளவேண்டும்.
சாந் 3-12-5ல் सैषा चतुष्पदा-இந்த நான்கையும் பாதமாகக்
கொண்டது-காயத்திரி அதாவது-முதல் நான்கு மந்திரங்களில்
முறையே ஸர்வ பூதங்களாகிற ஆத்ம ஸமூஹத்தையும்,
கர்மபல போகபூமியான பூமியையும், போகோபகரணமான
சரீரத்தையும், ஆத்மாக்கள் இருக்குமிடமாகிற ஹ்ருதயத்
தையும் சொல்லி-ஐந்தாவது மந்த்ரத்தில் सैषा चतुष्पदा-என்று
சொல்லப்படுகிறது. இதனால் காயத்திரி சந்தஸுக்கு இவை

நான்கும் நாலு பாதங்களாக இருக்கமுடியாது பிரும்மத்துக்கே இவை பாதமாயிருக்கமுடியும். இக்காரணத்தினுலும் காயத்திரி சப்தத்தினுல் பிரும்மமே சொல்லப்படுகிறது.

சூ. 28. उपदेशभेदान्नेति चेन्न-उभयस्मिन्नप्यविरोधात् ।

உபதேசபேதாத்-திவி, திவ; என்கிற இரு மந்திரங்களிலும் உபதேசம் வேறுபட்டிருப்பதால்-பின் மந்திரத்தில் சொல்லப் படுவது முன் மந்திரத்தில் சொல்லப்படுவது அன்று; இதி சேத்=என்று சொன்னுல் - உபயஸ்மிந் அபி=இரண்டு உபதேசங்களிலும், அவிரோதாத்=விரோதமில்லை என்று ஏற்படுவதால்-இரண்டும் ஒன்றேயாகும்.

பூர்வபக்ஷம்: பூர்வ வாக்யத்திலே-அந்தப் பிரகரணத் திலே त्रिपादस्यामृतं दिवि-என்று அவனுடைய அம்ருதமான மூன்று பாதங்களும் த்யுலோகத்திலிருக்கின்றன. எல்லா பூதங்களும் ஒரு பாதம்-மற்ற மூன்று பாதங்கள் த்யுலோகத்தில் உள்ளன). (சாந். உ. III 12-6); மேலான த்யுலோகம் இருப்பிடமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது இங்கே- दिवः परः (சாந். உ. III-13-7) திவ் என்கிற மேலுலகத்துக்கு அப்பால்-அது (அந்த த்யுலோகம்) எல்லையாகச் சொல்லப் படுகிறது. ஆகவே உபதேசம் வெவ்வேருகவிருக்கிறது. ஆகவே முந்தின சுருதியில் சொல்லப்பட்டது பிற்பாடு வரும் சுருதியில் அறியப்படமாட்டாது. மூன்று பாதங்களும் த்யுலோகத்திலுள்ளன என்கிற முந்தினதில் காயத்திரி பிரும்மமாகவேயிருக்கட்டும். ஆனுல் அந்த பிரும்மத்தை பிற்பாடு சொல்லப்படுமா. பரோதிவ: ஜ்யோதி:-த்யுலோகத்தின் மேலுள்ள ஜோதி என்கிற சுருதியில் ஒப்புக்கொள்ள முடியாது; அவ்விதம் ஒப்புக்கொள்ளவேண்டுமென்ருல்- அதற்குப் பதிலாக-அவ்விதம் பிரும்மமாக முடியாது- ஏனெனில், முன் மந்திரத்தில் திவி) த்யுலோகத்தில் பிரும்மம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது பின் மந்திரத்தில் திவ: பர: (த்யுலோகத்திற்குமேல்) என்று பரம் ஜ்யோதிஸ் ஆனது அந்த லோகத்திற்குமேல் உள்ளதாகச் சொல்லப் படமாட்டாது. ஆகவே முன மந்திரத்தில் சொல்லப்பட்ட பிரும்மமே பின் மந்திரத்திலும் சொல்லப்படுவதாகக் கொள்ள முடியாது. பின்பு சொல்லப்பட்டதில் பூதங்களில் ஒன்றான சோதியாக இருக்கவேண்டும். அவ்விதம் சொல்வது

சரியில்லை ; அப்படி சொல்லப்படுமாகில், அதற்கு நாம் பதில் சொல்வது - அவ்விதமில்லை - ஏனெனில் இரண்டு உபதேச வாக்யங்களிலும், அர்த்த ஸ்வபாவத்திலே ஐக்யம் (ஒற்றுமை)யிருக்கிறபடியால், பிரத்யபிஜ்ஞையில் யாதொரு தடங்கலுமில்லை - உதாரணமாக, वृक्षाग्रे श्येनः - மரத்தின் நுணியில ஒரு கழுகு இருக்கிறது. (இந்த மாதிரி வாக்யத்திற்கும்) वृक्षाग्रात् परतः श्येनः மரத்தின் உச்சிக்கும்மேலே கழுகு இருக்கிறது - என்பதற்கும் ;

ஆகவே பரமபுருஷன் நிரதிசயதேஜஸ் உள்ளவன் அந்த பரமாத்மாவே दिवः परो ज्योतिर्दीप्यते - மேலான த்யுலோகத்திற்கு மேலாகவிருக்கும் பிரகாசமான ஜ்யோதிஸ் என்று பிரதிபாதிக்கப் படுகிறான். அந்த மேலான பரமபுருஷனே - நான்கு கால்கள் கொண்டவனாகச் சொல்லப்படுகிறான். एतावानस्य महिमा अतो ज्यायांश्च पुरुषः - அவனுடைய மகிமை அளவிடமுடியாதபடிவிருக்கிறது; அதைவிட மேலானவன் புருஷன். எல்லா பிராணிகளும் அவனுக்கு ஒரு பாதமாகவிருக்கின்றன. அவருடைய மற்ற மூன்றுபாதங்களும் மேலான ஸ்வர்க்க லோகத்திற்கும் மேலாகவிருக்கின்றன. पादोऽस्य विश्वाभूतानि त्रिपादस्यामृतं दिवि - (யஜு. ஆ. 3. புரு. சூ.); இவ்விதம் பரமபுருஷனுக்கு நான்கு பாதங்களும், वेदाहमेतं पुरुषं महान्तं आदित्यवर्णं तमसस्तुपारे - அவருக்கு அபௌதிகமான - அப்ராகிருதமான சரீரம் இருக்கிறதாகவும்; நான் அவருடைய ஆதித்ய பிரகாசமுள்ள உருவத்தை தமஸ்ஸிக்கு அப்பால்விருக்கும் ஜ்யோதிஸ் ஸ்வரூபத்தை அறிகிறேன். (தை. ஆ. III - 13 - 7); அவருடைய அப்ராகிருதமான பேருருவம் - தேஜஸ் அபிராகிருதமானது. இந்தக் காரணத்தினாலேயும் ஜ்யோதிஸ் சப்தம் பரமபுருஷனையே குறிக்கிறது - என்று சொல்வதில் - யாதொரு தோஷமில்லை.

### அதிகரணம் - 11 (1-1-11)

## இந்திரபிராணாதிகரணம் (கௌ - 3)

இதுவரை சொல்லப்பட்டது - நிரதிசய ஜ்யோதிஸ் (தீப்தி ;- பிரகாசம்) என்று காட்டப்படும் மேலான ஜ்யோதிஸ் - அதுமிக்க பிரசித்தமாகவிருக்கிறது - அது பரமபுருஷனே என்று காட்டப்

யட்டது. இப்போது, சூத்ரக்காரர் சொல்கிறார் - இந்திரன், பிராணன், அம்மாதிரி சப்தங்கள் யாவற்றைக் குறிக்கின்றனவோ, சுருதிகளிலே அவை உபாஸ்யமாகச் சொல்லப்படுகின்றனவோ - (ஏனெனின்) அவைகளின் உதவியினாலே, அம்ருதத்வம் (மோக்ஷம்) அடையப்படுகிறது — உபாயமாகவிருக்கின்றன — (காரணத்வ வ்யாப்தி) இவைகளே - ஜகத்காரண வஸ்துவுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன. (அதாவது பரம புருஷனுக்குச் சரீரமாக அவை இருக்கின்றன. இந்திர சரீர பரமாத்மா என்கிறபடி). அதனாலே அந்த சப்தங்களும் பரம புருஷனையே ஓதுகின்றன எனவாம்.

## சூத்ரம் - 29 प्राणस्तथाऽनुगमात् (1-1-29)
## பிராணஸ்ததாऽனுகமாத் (1-1-29)

ப்ராண: பிராணன் எனப்படுவது பரமாத்மாவே ததா அநுகமாத் - ஏனெனில் பரம புருஷனுடைய தர்மங்களான ஆனந்தம் முதலானவற்றில், இப்பிராணன் சேர்ந்திருப்பதாலே.

முன் அதிகரணத்தில் - சூரியன் அக்னி முதலிய சோதிகளுக்கு ஜகத் காரணத்வமில்லை - என்று காட்டப்பட்டது. இந்த அதிகரணத்தில் அவர்களுக்குத் தலைவனான இந்திரனே ஜகத் காரணம் என்னும் பக்ஷம் தள்ளப்படுகிறது.

கௌஷீ - பிராம்மணத்திலே, प्रतर्दनो ह वै दैवोदासिरिन्द्रस्य प्रियं धामोप जगाम युद्धेन (च) पौरुषेण च என்று ஆரம்பித்து - வரம் பெற்றுக்கொள் (என்று இந்திரனால் ஆக்ஞையிடப்பட்ட) பிரதர்த்தனன் என்னும் அரசனை - (அதாவது இந்த அரசன் புத்தி-பலம்-வீர்யத்தினால் இந்திரனை சந்தோஷிப்பித்தான், அதனால் ப்ரீதியடைந்த இந்திரன் அரசனை "வரம் வேண்டிக்கொள்" என்று சொல்ல - அரசன் சொன்னான் - மனிதனுக்கு எதை நீ ஹிததமமாக (மிகவும்) நல்லதாக நினைக்கிறாயோ-அதை எனக்குச் சொல்வாய்-வரமாக என்றதும்-இந்திரன் கூறினான் "स होवाच, प्राणोऽस्मि प्रज्ञात्मा तं मामायुरमृतमित्युपास्स्व-என்னை நீ உபாஸிப்பாய். இதையே நான் மனிதனுக்கு மிகவும் நல்லதென்று நினைக்கிறேன்". இந்திரன் மீண்டும் சொன்னான் - அறிவு ரூபமான ஆத்மாவா

யிருக்கும் நானே பிராணனாகவும் விருக்கிறேன், பிராணனாயிருக்கும் என்னை ஆயுளாகவும், அம்ருதமாகவும், உபாஸிப்பாய்''—ஹிததமம்; மோக்ஷ உபாயம்; உபாஸனம் இங்கு சொல்லப்படுவதால், சம்சயம் இந்திர பிராணசப்தம் தேவேந்திரனைச் சொல்கின்றதா (ஒரு ஜீவனைச் சொல்கிறதா) அல்லது பரமாத்மாவையா? நானே - பிராணன், நானே ஆத்மா - என்னையே உபாஸிப்பாய், அம்ருதத்தை அடைவாய் - என்பதாலே.

இந்திர, பிராண சப்தங்கள் ஜீவவாச்ய சப்தங்கள்—அதாவது இவை பிரஸித்த ஜீவனான தேவேந்திரனா-பிராண சப்தம் ஸாமாநாதி கரணத்தினாலே சொல்லப்படும் (அதே இந்திரனாகிற) ஜீவன் சொல்லப்படுகிறானா-அல்லது அவனைவிட வேறான பரமபுருஷனா? ஏன்? இந்திரபதம் ஒரு குறிப்பிட்ட தேவதையைக் குறிக்கும். த்வஷ்டாவின் புத்ரன் என்று அடையாளமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்திரனோடு ஒரே வேற்றுமையில் சொல்லப்படும் பிராண சப்தமும் இந்த்ரனையே சொல்லுவதாக வேண்டும். ஆகவே இந்திரயுபாஸனமே ஹிததமம்-மோக்ஷோபாயம் என்பதாயிற்று. இந்திரன் பிரதர்த்தனனிடம் சொல்லியது: मामुपास्वहिततमंमन्यसे- இதனால் மோக்ஷம்தான் ஹிததமம். அது हिततमश्चामृतत्व प्राप्त्युपाय एव சாந்.உ. 6-14-2ல் तस्य तावदेवचिरम्-यावन्नविमोक्ष्ये अथ सम्पत्स्ये என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ஜகத்காரணமான பிரும்மத்தை உபாஸிப்பதால் மோக்ஷம் கிடைக்கிறது. "எது வரை அவன் சரீரத்திலிருந்து விடுபெறுமலிருக்கிறானோ - அது வரைதான் தாமதம். பிறகு அவன் மோக்ஷமடைகிறான்." ஆகவே மோக்ஷ ஸாதனமாகக் கூறப்பட்ட இந்திரனே ஜகத்காரணமாவான். இது பூர்வபக்ஷம்.

சித்தாந்தம் கீழே உரைக்கப்படுகிறது. இதற்குப்பதிலாக प्राणस्तथानुगमादिति பிராணன் (அதேபடி இந்திரன் - அதுபோல மற்ற பதங்கள்) பிருஹ்மமேயாகும், ஏனெனில் இங்கு அவ்விதமே அறியப்பட வேண்டியதாகும். இந்திரன் என்றும், பிராணன் என்றும் கூறப்படுவது இந்திரன் எனப்படும் ஜீவனல்ல. அவனுக்கும் வேறானவனும் அந்தர்யாமியான பரமபுருஷனே இங்கு கூறப்பட்டதாகும் (இந்திரசரீரபரமாத்மா எனவாம்) स एष प्राण एव

प्राणात्मा आनन्दोऽजरोऽमृतः । அதே பிராணன் பரமாத்மா-அந்த ஸர்வக்ஞனை பிராணன் எனப்படும் ஆத்மா ஆனந்தமாகவும், நரையற்றவனாகவும், மரணமற்றவனாகவிருக்கிறான். இங்கு இந்திர பிராணசப்தங்களால் சொல்லப்படும் ஆத்மாவானது குணமாகவும் ஸ்வரூபமாகவேயும் ஆனந்தியாகவும், அம்ருதஸ்வரூபமாகவும் - அஜரஸ்வரூபமாகவும்-உள்ளதாகச் சொல்லப்படுகிறது. ஸாமாநதி கரணத்தினுல் இந்திர பிராணபதங்களுக்குக் காட்டப்படும் பர மாத்மா-ஜகத்காரணமாகவும், மோக்ஷோபாயமாகச் சொல்லப்படு கிறது. நம்மைப்போல ஜீவஸ்வரூபனை இந்திரனுக்கு ஒட்டாது. ஆகவே इन्द्रः - இந்திரனுக்கும் அந்தர்யாமியான பரமாத்மாவா கும். (இந்திர சரீர பரமாத்மா என அர்த்தம்.) இந்திரன் என்கிற பதத்திற்கு பெரிய ஐஸ்வர்யமுள்ளவன். அது பரமாத்மாவாகும்)

**ஸூத்ரம் 30 - न वक्तुरात्मोपदेशादिति चेदध्यात्मसंबन्धभूमा ह्यस्मिन् (1 - 1 - 30)**

**ந வக்துராத்மோபதேஸாதிதி சேத் அத்யாத்மஸம்பந்த பூமாஹ்யஸ்மிந் (1-1-30)**

வக்து : ஆத்மோபாதேஸாத் - இந்திரன் ''என்னையே உபா ஸிப்பாய்''-என்று சொன்னதாலே, ந-இந்திர பிராணன் என்னப் படுவது பிருஹ்மமாக முடியாது. இதிசேத் - எனில், அத்யாத்ம ஸம்பந்த பூமா ஹ்யஸ்மிந் - பரமாத்மாவுக்கே உரிய (சம்பந்தப் பட்ட) பெருமைகளே இந்த பிரகரணத்தில் சொல்லப்படுவதாலே அவை உபதேசிக்கும் இந்திரனுக்கும் காணப்படுகின்றனவன்றோ - (இது சித்தாந்த சூத்ரம் - பூர்வபக்ஷி சரியாகச் சொல்லவில்லை).

மேலே சொல்லப்பட்டவை - இந்திர பிராணசப்தங்களை நிர் திஷ்டம் செய்கின்றன. आनन्दोऽजरोऽमृतः - ஆனந்தஸ்வரூபனாக வும் - கிழத்தனம் இல்லாதவனாகவும் மரணமற்றவனாகவுமிருப் பவன் (கௌஷ். 2) என்னும் வாக்யத்திற்கு உபக்ரமத்தை ஒட்டியே அர்த்தம் செய்துகொள்ளவேண்டியது என்கிற பூர்வ மீமாம்ஸையில் உபக்ரமாதி கரணஸித்தம். ஆகவே இங்கு கூறப்படு பவன் இந்திரனென்கிற ஜீவனே. ஆகவே இந்திர பிராண சப்தங்கள் பரமாத்மா பரம் என்பது சரியில்லை. ஏனெனில் இங்கு சொல்பவன்

சாக்ஷாத் இந்திரனேயாகும். मामुपास्स्व-मामेव विजानीहि-प्राणोऽस्मि प्रज्ञात्मा - (நானே பிராணன் - நானே பிரக்ஞாத்மா - तं मामायुरमृत मित्युपास्स्व - இதில் வக்தா இந்திரன் त्रिशीर्षाणं त्वाष्ट्रमहनम् மூன்று தலைகளையுடையவனும், த்வஷ்டாவின் பிள்ளையுமான விஸ்வ ரூபனை நான் கொன்றேன்என்று உபக்ரமித்து. ஜீவனுகவிருக்கும் அவனுக்கேயுள்ள அடையாளங்களையும் காட்டியிருக்கிறுன். ஆகவே உபக்ரமத்தை ஒட்டியே பொருள் கொள்ளவேண்டும். அவ்விதமானுல் முடிவு இந்த பிரகரணத்திலே "அவனே ஆனந்த ஸ்வரூபனுகவும்... அம்ருதனுகவுமிருக்கிறுன்" என்று சொல்லப்படு மாகில்—

இதற்கு சூத்ரக்கரரே பரிஹரிக்கிருர். अध्यात्म सम्बन्धभूमाह्य- स्मिन् - இவை அந்தராத்மாவின் குணங்களாகும். அதனுல் இந்த பெருமைகள் பரமாத்மாவுக்குச் சொந்தமாகும். முக்த தசையில் இந்திரனுக்கு வரலாம். அவன் சம்சாரதசையில் இருக் கிறுன்-அப்போது சொல்லும்போது). சம்பந்தம் ஆத்மாவிற்குச் சொல்லப்பட்டதாகும் - सोऽध्यात्मसम्बन्धः - பரமாத்மாவுக்கு இது மாதிரி அநேக கல்யாண குணங்கள் - சம்பந்தப்பட்டவை. तच्चास्मिन् प्रकरि परमात्मन्येव - யேற்படுவதாகும்.

இங்கே காட்டப்பட்ட குணங்கள் (தர்மங்கள்) अध्यात्म- सम्बन्धभूमाह्यस्मिन् அத்யாத்மஸம்பந்தம் என்பதால் ஆத்மா வினுடைய குணங்கள் - அந்த குணங்கள் பரமாத்மாவுக்கே அசாதாரணமாக யேற்பட்ட குணங்களாகும். அவருடைய பெருமைகள் (भूमा) बहुत्वं - அநேகம் இந்த பிரகரணத்திலே ஓதப்படுகின்றன. முதலிலேயே - நீ என்னிடம் இஷ்டப்பட்ட வரத்தைப் பெற்றுக்கொள். எது மனிதனுக்கு (मनुष्यायहिततमं) ஹித்தமமாக விருக்கிறது என்று எண்ணுகிருயோ - அதை நீ வேண்டிக்கொண்டவனுக என்று இந்திரன் சொன்னதும்-அவனே பதியாக - இறுதியிலே - ஹித்தமமாக உபதேசிக்கிறுன் - "என்னையே உபாஸிப்பாயாக - என்னை உபாஸிப்பதே மனிதனுக்கு ஹித்தமம். என்னை ஆயுள் என்றும் அம்ருதம் என்றும் உபாஸனம் செய் பிராணனே ஆயுள் - பிராணனே அம்ருதம் - இதனுல் இவ்வுலகில் முழு ஆயுளைப்பெற்று - பிறகு ஸ்வர்க்கத்திலும் அழியாமல் இருக்கலாம்" என்றுன்.

இந்த உபதேசத்திலும் பரமாத்மாவினுடைய அசாதாரண தர்மமாகிற மோக்ஷஸாத்மன - அது உபாஸனத்தின் மூலமாகச் செய்யப்படவேண்டியது - அதனால் பிராணிசப்த நிர்திஷ்டனை இந்திரனைச் சொல்லியதாகும். அவ்விதமே - एष एव साधु कर्म कारयतितम्, यमेभ्योलोकेभ्य उन्निनीषति। एष एवासाधुकर्मकारयतितम्, यमधो निनीषति—பரமாத்மா அவனவனுடைய கர்மானுகுண மாக ஜீவர்களை செயல்படுத்துகிறான். எவனை இந்த உலகங் களிலிருந்து விலக்கி அப்பால் கொண்டுபோக நினைக்கிறானோ (ஸங்கல்பிக்கிறானோ) அவனை நற் கர்மாக்களைச் செய்யும்படி தூண்டுகிறான். எவனை கீழே தள்ளவேண்டுமென்று ஸங்கல் பிக்கிறானோ, அவனை பாபகர்மாக்களைச் செய்யும்படி பிரவர்த்திக் கிறான். ஆகவே இது பரமாத்மாவினாலேதான் செய்ய முடியும் அவனுடைய அசாதாரண தர்மமாகும். அதேமாதிரி பரமாத் மாவே எல்லாப்பொருள்களுக்கும் ஸர்வாதாரத்வமாக விளங்கு கிறான் - எப்படி — तत् यथा रथस्यारेषु नेमिरर्पितानाभावरा अर्पिताः, एवमेवैताः भूतमात्राः प्रज्ञामात्रास्वर्पिताः प्रज्ञामात्राः प्राणे अर्पिताः - பரமாத்மா எல்லா வஸ்துக்களையும் சரீரமாகக் கொண்டதாலே - அவை பரமாத்மாவுக்கே பொருத்தமாகும்; பரமாத்மாவே இங்கு சொல்பவனாக அறியவேண்டும் - எங்கன மெனில், ரதச்சக்கரத்தின் ஆரங்களில் நேமியெனப்படும் வட்டம் எப்படி கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ, அந்த ஆரங்கள் நடுவி லுள்ள நாபியில் எப்படி கோர்க்கப்பட்டனவோ, அப்படியே இந்த அசேதனப் பொருள்கள் சேதனப் பொருள்களில் கோர்க்கப் பட்டுள்ளன. அந்த சேதனர்களும் பிராணன் எனப்படும் பரமாத்மாவிடம் கோர்க்கப்பட்டுள்ளன. இப்படியாக சேதன அசேதன வஸ்துக்களுக்கு ஆதாரமாயிருக்கும் தன்மை - இது பரமாத்மாவின் தர்மம், இங்கு பிராணனுக்குச் சொல்லப்படு கிறது. பிராணனுக்கும் அந்தர்யாமியாகவும் ஆதாரமாகவுமிருக் கிறான்; அவனே ஆத்மாவாகவுமிருக்கிறான். பூதமாத்திரிகைகள் சூக்ஷ்மமான பிரக்ஞான மாத்ரைகளை தங்கள் இருப்புக்கு நம்பி யிருக்கின்றன. பிரக்ஞானமாத்ரைகள் பிராணனை நம்பியிருக் கின்றன. स एष प्राण एव प्रज्ञात्माऽऽनन्दोऽमृतः அந்த பிராணனே பரமாத்மா - ஆனந்த ஸ்வரூபம் - இறத்தலில்லாதவன், அம்ருதம்;

அசேதனப் பொருள்களைக் குறிக்கும் வார்த்தை பூதமாத்திரைகள்; பிரக்ஞானமாத்திரைகள் சேதனர்கள். இரண்டும் பரமாத்மாவுக்கு சரீரம், ஆகவே உபக்ரமத்திலே பிராணன், இந்திரன் என்பவை எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவிருக்கும் பரமாத்மாவேதான், முடிவிலும் அந்த பரமாத்மாவே ஆனந்த ஸ்வரூபன்-அஜரன்-அம்ருதன். ஆகவே பரமாத்மாவே இரண்டிலும் சொல்லப்படுகிறுன். एष लोकाधिपतिरेष सर्वेशः—அவரே எல்லா உலகங்களுக்கும் பதி - ஸர்வேஸர் (கௌ. 3-9) - இந்த தர்மங்களும் பரமாத்மாவுக்கே பொருந்தும். ஆகவே அத்யாத்ம ஸம்பந்தமான பல பெருமைகளை கூறும் குணங்கள் அறியப்படுவதாலே-பரமாத்மாவே இந்திர பிராண சப்தங்களால் குறிக்கப்படுகிறுன். முதலிலும் நடுவிலும் முடிவிலும் பரமாத்மாவுக்குரிய பெருமைகளே ஜீவ லிங்கங்களைக்காட்டிலும் அதிகமாக ஓதப்படுகின்றன. ஆகவே பிராண சப்தங்கள் பரமாத்மாவையே குறிக்கும்.

மேலும் காட்டப்படுகிறது - இந்த சந்தர்ப்பத்திலே - இந்திரன் என்று சொல்லப்படும் பிரஸித்தமான ஜீவன்-அவனுக்கு "தன்னையே உபாஸிக்கப்படவேண்டிய பொருள்" என்று கூறுவது எப்படி பொருந்தும்? அதற்கு சூத்ரக்காரரே பதில் கூறுகிறுர். அடுத்த சூத்திரத்தில் :-

**சூத்ரம் 31 शास्त्रदृष्ट्या तूपदेशो वामदेववत् (1-1-31)**
**சாஸ்திரத்ருஷ்ட்யா துஉபதேசோ வாமதேவவத் (1-1-31)**

வாமதேவவத் - வாமதேவரிஷியைப்போல, உபதேசோ து (இங்கு இந்திரனின்) உபதேசமும் சாஸ்திரதிருஷ்ட்யா-சாஸ்த்திர திருஷ்டியேயாகும்.

பரமாத்மாவின் லிங்கங்கள் அதிகமானவையென்று என்று சொல்லப்பட்டது - மேலதிகரணத்தில். இதற்குமேல் என்னையே உபாஸி - என்று எப்படி இந்திரன் உபதேசம் செய்யக்கூடும் என்கிற கேள்விக்கு - பதில் சூத்ரக்காரரே உபதேசிக்கிறுர்.

பிராக்ஞாத ஜீவ பாவத்திஞல் இந்திரன் - என்னையே அறிவாய் - என்னையே உபாஸிப்பாய் - என்கிற வாக்கியங்களாலே,

அவனுடைய அந்தராத்மாவே பரமாத்மாவாகும் இந்த சொந்த ஆத்மாவின் அறிவு சாஸ்திரதிருஷ்டியினுலே அடையப்படுகிறது - தன்னைப்பற்றிய அறிவு சாஸ்திரஸித்தமாதலால் - அவன் தன்னைக் குறிக்கும்போது - பரமாத்மாவையே சொல்கிருன் என அர்த்தம் செய்துகொள்ளவேண்டியது.

என்ன சொல்லப்பட்டதுவென்ருல் - अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि - ஜீவனுடன் (பரமாத்மா) உள் நுழைந்து - தானே என்று சொல்லும்படி - நான் நாமரூப வயா கரணம் செய்கிறேன். (27. 2. 6-3. 2) ऐतदात्म्यमिदं सर्वम् - (யஜு-ஆ-3-11-12): இந்த இவை எல்லாம் பரமாத்மாவை ஆத்மாவாகவுடையது; अन्तः प्रविष्टः शास्ता जनानां सर्वात्मा - ஸர்வாந்தர்யாமியான நாராயணன் எல்லா ஜனங்களையும் உள் நுழைந்து நியமிக்கிருன். य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरो यमात्मा न वेद यस्याऽऽत्मा शरीरं य आत्मानमन्तरो यमयति - (பிரு. 5. 7. 22) எவன் ஜீவாத்மாவினுள் வசித்துக் கொண்டு - உள் இருட்பாஞே எவனை ஜீவாத்மா அறியாஞே, எவனுக்கு இந்த ஜீவாத்மா சரீரமோ, எவன் ஜீவாத்மாவை உள் நுழைந்து நியமிக்கிருஞே - சுபாலோ - 7 एष सर्वभूतान्तरात्मा अपहतपाप्मा दिव्यो देव एको नारायणः (எல்லாப் பூதங்களுக்கும் அந்தராத்மாவாயும் பாப மற்றவனுகவுமிருப்பவன் - பரமபதத்திலிருக்கும் நாராயணன் என்னும் தேவன் ஒருவனே) - இத்யாதி வாக்யங்களில் ஜீவாத்மா வுக்கு ஆத்மாவாக விருப்பவன் பரமாத்மாவேயாகும். இது சாஸ்திர அறிவாகும், ஜீவாத்மா பரமாத்மாவுக்குச் சரீரம்; நான்-நீ மற்றவர்கள் என்கிற சப்தங்கள் ஜீவர்களைச் சொல்லிடினும் - பரமாத்மாவரையில் அர்த்தம் சொல்லப்படும். ஆகவே இந்த சுருதிகளில், मामेव विजानीहि (என்னை அறிவாய்) - मामुपास्व - என்னை உபாஸிப்பாய்-என்பதால் ஸர்வாத்ம சரீரகம் பரமாத்மா வையே உத்தேஸ்யம்-பரமாத்மாவே, உபாஸ்யம் - அவனே மோக்ஷோபாயம்-என்கிறபடி. இப்படி அசித்தும் சித்தும் சரீரமாகவும், பரமன் ஆத்மாவாகவுமிருக்கையாலே, சிதசித்துக்களைப் பரமனோடு ஒரு வேற்றுமையில் படிக்கலாம் என்பதை अनेन जीवेन आत्मना अनुप्रविश्य - நான் ஜீவனுக அசித்தில் வியாபித்து அதற்கு

நாமரூபத்தை செய்வேன் - ஸர்வம் கல்விதம் பிருஹ்ம— (இவை யெல்லாம் பிருஹ்மாத்மகமாக விருப்பவை) - அதுபோல - சாஸ்திர ஸித்தமான அறிவினுல் என்னை (இந்திரன்) என்பதற்கு தனக்கும் அந்தர்யாமியாக விருக்கும் ஸமாநாதி கரணத்தினுல் பரமாத் மாவைச் சொல்லியதாம் - இந்திர சரீரபரமாத்மா. சூத்ரக்காரர் மீண்டும் சொல்கிருர் - वामदेववत् - வாம தேவரிஷியைப்போல - अहंमनुरभवं सूर्यश्चाहम् - நானே மனுவாக ஆனேன், நானே சூர்ய ஞகவுமானேன், நானே ரிஷியாகிற கக்ஷிவான் ஆகவுமிருக்கிறேன் (कक्षीवानृषिरस्मि) என்ருர். (நம்மாழ்வாரும் சுடல் ஞாலம் நானே என்ருர்.) ஜீவஞன வாமதேவர் ஸர்வாந்தராத்மாவாகிற பரப் பிரும்மம் நானே - அவருக்கு எல்லாம் சரீரமானபடியாலே, சரீர வாச்ய சப்தங்கள் ஆத்மாவாகிற அந்தர்யாமியான பரமாத்மா வரை பர்யவஸானம் செய்யப்படுமாகையாலே - अहम् (நானே மனு, சூர்யன்) என்று அறிந்தார் தனக்கும் அந்தர்யாமி பகவான்; அதேபடி மனு சூர்யன் முதலானவர்களுக்கும் அந்தர்யாமி பரமாத்மாவென்று என்று ஸாமாஞதி கரணத்தினுல் பொருள் கொள்ளவேண்டியது. (ருத்ரனும் அதர்வ சிரஸ்ஸில் अहमेकः பிரதமமாஸம் (நான் ஒருவனே முதலில் இருந்தேன் என்ருர்.) तद्धैतत् पश्यन्नृषिः वामदेवः प्रतिपेदे - நானே மனுவாயும் சூர்ய ஞகவும் - கக்ஷிவாஞகவும இருக்கிறேன். कक्षिवानृषिरस्मि विप्रः —

இதேபடி பிரஹ்லாதனும் சொன்ஞன் - வி.பு. 1 - 19 - 85 सर्वगत्वादनन्तस्य स एवाहमवस्थितः—मत्तः सर्वमहं सर्वं, मयि सर्वं सनातने—பகவான் அநந்தன் எங்குமிருப்பதால் - நானும் அவனே யாகிறேன். என்னிடமிருந்து எல்லாம் உண்டாகின்றன. நானே எல்லாம். ஸநாதனஞகிற என்னுல் என்னிடம், எல்லாம் செயல் படுகின்றன. இதேபடி - சாஸ்திரதிருஷ்டியாலே இந்திரனும் தனக்கு அந்தர்யாமியான பரமாத்மாவை மனத்தில் கொண்டு - ''என்னையே உபாஸிப்பாய்'' - என்று கூறியதாகத் தெளிய வேண்டியது.

இங்கு ஆட்சேபம் எழுப்பி - அதற்கு பரிகாரம் சொல்லப்பட்டு மீண்டும் சூத்ரக்காரர் காரணம் கூறுகிருர், ஏன் இந்த பிரகரணத் தில் சேதன சப்த பதங்கள் - (இந்திரன் - ஜீவன் அதேபடி அசேதன பதங்கள் - பிராணன் - இத்யாதி - பிராணன் (அசேதனவாச்யம்) விசேஷங்களால் இவைகளும் பரமாத்மாவையே குறிக்கிறபடி யால் - அவனே உபாஸ்யம் - என்பதற்கு என் இந்த பதங்களால் காட் டப்படுகின்றன. அந்த காரணத்தை சூத்ரக்காரர் சொல்கிருர்.)

**ஸூத்ரம் - 32 जीवमुख्यप्राणलिङ्गान्नेति चेन्नोपासात्रैविध्यादाश्रित-त्वादिह तद्योगात् — (1-1-32)**

**ஜீவமுக்ய பிராணலிங்காந்நேதி சேந்நோபாஸாத்ரை வித்யாதா ஸ்ரீதத்வாதிஹதத் யோகாத். (1-1-32)**

*ஜீவ முக்ய பிராணலிங்காத் - ஜீவனின் அடையாளங்களும் முக்கிய பிராணனின் அடையாளங்களும் (இங்கு) உள்ளபடியாலே, ந (பரமாத்மாவின் தர்மங்களைக் கொண்டு அர்த்த நிர்ணயம் செய்வது) கூடாது - இதி சேத்-என்று கூறினால் ந-அது சரியில்லை. உபாஸாத்ரைவித்யாத் - உபாஸனை மூன்று விதமாகையாலும், ஆஸ்ரிதத்வாத் (வேறிடங்களிலும் மூவகையுபாஸனங்களும்) ஆஸ்ரயிக்கப் பட்டிருக்கையாலும்-இஹதத்யோகாத் - இவ்விடத்திலும் மூன்றுவித உபாஸநம் கூறப்பட்டிருப்பதாகையாலும்.*

ஜீவனுடைய லிங்கங்கள் - கூறப்பட்டவை — न वाचं विजिज्ञासीत; वक्तारं विद्यात् - त्रिशीर्षाणं त्वाष्ट्रमहनम् - अरुन्मुखान् यतीन् सालावृकेभ्यः प्रायच्छम् - எவனும் அறிவதற்கு ஆசைப்பட வேண்டாம் — (எதை) - பேச்சு என்பது யாது? அவன் யார் பேசுகிறவன் என்பதை அறிந்துகொள்ளட்டும். (கௌ. 3-8); நான் மூன்று தலைகளை உடையத்வ வஷ்டாவின் பிள்ளையைக் கொன்றேன்; நான் அருண்முகர்களாகிற பக்தர்களை ஓநாய்களுக்கு அளித்தேன். (கௌ. 3-1); அதேபோல முக்ய பிராணனின் அடையாளங்களும் இங்கு கூறப்படுகின்றன - अथ खलु प्राण एव प्रज्ञात्मेदं शरीरं परिगृह्योत्थापयति எதுவரை இந்த தேகத்தில் முக்யபிராணன் வஸிக்கிறதோ - அதுவரை உயிர் நிச்சயமாக விருக்கிறது (கௌ. 3-1); यावद्ध्यस्मिन् शरीरे प्राणो वसति, तावदायुः - சேதன பிராணன் இந்த தேகத்தை ஆட்கொண்டு - அதை உயர எழுப்புகிறது. (கௌ. 3 2); இதனாலே, இப்படி சொல்லப்படுமாகில் - இந்த வாக்யபிரகரணத்திலே - அந்தராத்யாவாகிற பரமாத்மாவுக்குப் பல வகை குணங்கள் சொல்லப்படவில்லையே - என்றால் - இதற்குப் பதில் - நாம் சொல்வது - இந்தக் காரணத்தினால் நீ சொல்வதுபோல அவ்விதம் மில்லை; ஏனெனில், பிரும்மத்தை உபாஸிப்பது மூன்று விதமானது. அதாவது பிரும்மத்திற்கு சில பதங்களால் சில குணங்களால் அறிவுறுத்தப் படுவது-அதனால் பிரும்மத்தின் உபாஸனையில் மூன்றுவிதமாகும் இதற்கு அர்த்தம் யாதெனில் - பிரும்மம் அதனுடைய ஸ்வரூப (ஸ்வரூபேண) (கல்யாண குணங்களுக்கு) யேற்ப ஜகத்வேக

காரணம்-என்று நேராக உபாஸிப்பது; பிரும்மத்தை தனது சரீரமாக போக்த்ரு சேதன வர்க்கமாக விருப்பதாக உபாஸிப்பது; பிரும்மத்தை அசேதன வஸ்துக்களைத் தனது சரீரமாகவும் - தனது போக்யஸாதனங்களாகக் கொண்டதாக உபாஸிப்பது - தனது சோக்யபோகோபகரண சரீரத்தைத்தானே அனுபவிப்பதாகக் கொண்ட பிரும்மத்தை உபாஸிப்பது என்பது மூன்றுவது வகையாகும். ஆக இம்மாதிரியான மூவகை உபாஸனை வழிகள் மற்ற சுருதிகளிலும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

(இங்கு சொல்லப்படுவது போக்தாபோக்யம் (ச்வே) அனுபவிப்பவனுகிற ஜீவன், அனுபவிக்கப்படும் அசித்-என்கிற வழிகளில் முதல் வழியில்சித் - போக்தா (அனுபவிப்பவன்) என்று அழைக்கப்படும் ஜீவஸ்வ ரூபத்துக்கு அந்தர்யாமியாக அனுஸந்திப்பது - இரண்டாவது வகை; போக்தா போக்யம் - (ச்வே) எனப்பட்டவைகளில் அசித் என்றும்; போக்யம் என்றும்; (அறிவற்றது-அனுபவிக்கப்படுவது) எனறு சொல்லப்படும் அசேதனவஸ்துக்ளின் ஸ்வரூபத்திற்கு அந்தர்யாமியாக அனுஸந்திப்பது - மூன்றுவது வகை. உபாஸனையாகும். இப்படி மூவகை உபாஸனங்களை உபதேசிப்பதற்க்காகவே இந்த பிரகரணத்தில் பிருஹ்ம ஸ்வரூபத்தை நேரே சொல்லும் பதங்களையும் ஜீவனுன இந்திரனுக்கு அந்தர்யாமியாசப் பரமாத்மாவைச் சொல்லும் இந்திர பதத்தையும் அசேதனமான பிராணனுக்கு அந்தர்யாமியாசப் பரமாத்மாவைச் சொல்லும் பிராணபதத்தையும் பிரயோகித்து, இந்த உபநிஷத் பிருஹ்மத்தை இம்மாதிரி மூவகையாக உபாஸிப்பது உண்டு என்று மற்ற சுருதிகளிலும் உண்டு எனக் காட்டப்படுகிறது - தைத்திரியத்தில் ஸத்யம் ஞானம் அனந்தம் பிருஹ்ம (இயற்கையாகவே ஸத்யமாயும் - எப்போதும் குறைவில்லாத ஞானத்தை ஸ்வரூபமாகவும் குணமாகவும் உடையதாய் தேச கால வஸ்துக்களால் பரிச்சேதமற்ற பிருஹ்மம் ஆனந்தோ பிருஹ்ம - இவைகளால் பிருஹ்ம ஸ்வரூபம் அனுஸந்தானம் தை அனு 6 तत् सृष्ट्वा तदेवानुप्राविशत् - तदनुप्रविश्य सच्चत्यच्चाभवत् निरुक्तं चानिरुक्तम् च, निलयनं चानिलयनम् च विज्ञानं चाविज्ञानम् च, सत्यम् चानृतम् च सत्यमभवत् — அதை ஸ்ருஷ்டித்து, அதையே உள் வியாபித்து அதனுல் விகாரமற்றதாய் - (ஜாதி குணங்களாகச் (தர்மங்களைச்) சொல்லும் சப்தங்களால்) சொல்லப்பட்டதாய், தனக்கு ஒரு ஆதாரமற்றதாய் - அறிவுள்ள ஜீவனுகவும், விகாரமுள்ள (ஜாதிகுணங்களைச் சொல்லும் சப்தங்களால்) சொல்லப்படுவதால் - (ஜீவனை) ஆதார

மாகயுடையதாய் - அறிவற்றதான அசேதனமாகவுமாயிற்று. ஸ்தூலசித் அசித் வஸ்துக்களாக மாறியபோதிலும் - சரீரத்வரா மாறுதல் யேற்பட்டதால் ப்ரும்மம் விகாரமற்றதாகவே யிருந்தது. இத்யாதி முதலானதான வாக்யங்களில் போக்தாவான ஜீவனைச் சரீரமாகக் கொண்ட ப்ருஹ்ம உபாஸனமும் சேதன அசேதனவஸ்துக்களை - போக்யமாகவும் போகோபகரணமாக சரீரத்தைக் கொண்ட ப்ருஹ்மோ பாஸனமும் ஆக இருவகை உபாஸனங்களையும் அனுஸந்திப்பதற்க்காகவே இந்திர ப்ராண பதங்கள் ப்ரும்மத்தையே கூறுகின்றன. இந்த ஆகவே ப்ர கரணத்தில் கூறப்படும் இந்திர ப்ராண சப்தவாச்யன் பரமாத் மாவேயாகும். (இந்திர ப்ராண சரீர பரமாத்மா); ஆகவே மூவகை உபாஸனை களும் சரிதானகும்.

என்ன சொல்லப்பட்டது வென்றால் - ஹிரண்ய கர்ப்பரான (சதுர்முக) ப்ரும்மாவிலிருந்து கீழ்யுள்ள ஜீவர்களுக்கோ - அதே மாதிரி ப்ரகிருதி முதலிய அசேதன வஸ்துக்களுக்கோ - பரமாத்மாவுக்குரிய அசாதாரண தர்மங்கள் (குணங்கள்) சொல்லப்பட்டாலும் - அல்லது அவற்றைப் பரமாத்மாவோடு ஒரே வேற்றுமையில் ஸாமாநதிகரணத்தினல் சரீர ஆத்ம பாவம் சொல்லப்பட்டாலும், அந்த வாக்யங்களில் அந்த சேதனசேதனங்களுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவின் உபாஸனம் விதிக்கப்படுகிறது—அந்தராத்மா உபாஸனம் ப்ரதி பாதிதம் என்று அர்த்தம். ஆகவே இந்திர ப்ராண சப்தங்களால் நிர்திஷ்டிக்கப்பெற்ற - ஜீவர்களுக்கும் அந்தர் பூதமாகவிருக்கும் பரமாத்மாவே உபாஸ்யம் அனுஸந்தானம் என்பது ஸித்தம்.

இந்திரப்ராண அதிகரணம் முற்றிற்று

ஸ்ரீ பகவத் ராமானுஜ விரசிதே ஸ்ரீ பாஷ்யே

முதல் அத்யாயம் - முதற்பாதம் முற்றிற்று.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

சுபமஸ்து



ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :
ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம :
ஸ்ரீமத் ஸ்ரீவண் சடகோப வேதாந்த தேசிக யதீந்திர
மஹா தேசிகாய நம :

# பிரும்மவித்யை - 3-ஆம் பாகம்

அதில்

## ஸ்ரீ பகவத்ராமானுஜ விரசிதே ஸ்ரீபாஷ்யே

### முதல் அத்யாயம் — 2ம் பாதம்

முந்தின பாதத்தில் - (முதல் அத்யாயம் - முதற்பாதம்). பிரும்ம விசாரம் நன்றாகச் செய்வதற்கு, ஒரு ச்ரோத்திரியன் நான்கு வேதங்களை (அர்த்தத்துடன் கற்று) - அந்தப்படி - கர்மாங்கமான யாக யக்ஞாதிகளைச் செய்து-கர்ம மீமாம்ஸையில் நன்கு தேர்ச்சி பெற்று - யாதாத்மிய விக்ஞானமடைந்து - அதன் பிறகு தெளிவடைகிறான், இந்த கர்மங்கள் கேவல கர்ம பலன்களுக்காகவே செய்திடின் பிறப்பு இறப்பு ஆகிற ஸம்ஸ்ருதி - சம்ஸாரகதியை அடையச் செய்வதால் - அல்பம் அஸ்திரம் அநித்யம் என பலன்களைக் கொண்டதால் இவைகளில் அதிருப்தியடைந்தவனாக - நித்யபலன்களை - புருஷார்த்தமாக அதாவது மோக்ஷத்தை விரும்புகிறவனாக, பிரும்ம விசாரத்திற்கு ஒரு நல்ல ஆசார்யனை அணுகி - அவரால் நன்கு சிக்ஷை பெற்று, பிரும்ம விசாரத்தில் இறங்குகின்றான். தான் படித்த வேதாந்த வாக்யங்களை - குருவின் சிக்ஷையினாலும் - தனது சொந்த முயற்சியினாலும் ஆராய்ந்து - சிரவணம் - மனனம் நிதித்யாஸம் - இத்யாதிகளால் பிரும்ம விசாரம் செய்யப் புகுகின்றான். வேதாந்த வாக்யங்களிலும் - குருவின் சிக்ஷையிலும் ஆபாத ப்ரீதி (நம்பிக்கை - விசுவாசம்) யேற்

பட்டு - அனந்தமானதும் ஸ்திரமாகவுமுள்ள பிரும்ம ஸ்வரூபத்தை உபாஸனுமார்க்கமாக அடைய இச்சை கொண்டவனுக, பதங்களின் அர்த்த வீர்யம் - வ்யுத்புத்தி - வாக்ய சாமர்த்தியம் இவைகளை நன்கு கற்று, பிறகு தனக்குள் நிச்சயத்தையடைகிருன். இந்த வேதாந்த வாக்யங்களாலே "பரம புருஷார்த்த லக்ஷணமாகிற மோக்ஷத்தையடைய இச்சையுள்ளவனுக, விருக்கிறேன். உபாஸனுமார்க்கமாக பிரும்மத்தை அறிய விரும்புகிறேன். பிரும்ம ஞானமாகிற தத்வத்ரயத்தின் ஸ்வரூப ஸ்வபாவங்களை நன்கு தெரிவதால் பிரும்மம் அடையப்படுகிறது. வஸ்துக்களின் பெயர்களைச் சொல்லும் சப்த சக்திகளையும் தெரிந்து கொள்கிறேன்'', இவ்விதமாக, இந்த வேதாந்த வாக்கியங்களின் உதவியினுல் ஸர்வத்துக்கும் மேலான பரமாத்மாவாகிற பிருஹ்மத்தினிடம் நிச்சயமான பிரமாண பாவத்தை அடைகிறுன். அதன் பிறகு பிரும்ம மீமாம்ஸமாகிற சாரீரக மீமாம்ஸையில் சாஸ்திர படனம் செய்ய ஆரம்பிக்கிருன். அதனுல் நித்யமாயும், அனந்தமாயும் ஸ்திரமுள்ளதான பிரும்ம ஞானம் - பிரும்மோ பஸானே இத்யாதிகளில் இழிந்தவனுகிருன்.

இந்த வேதாந்தசிரவணம் - மனனம் - நிதித்தியாஸத்தினுல் - குரு சிஸுஷயினுல் தேர்ச்சி பெற்றவனுக், போக்த்ரு - போக்ய - போகோபகரண - போகஸ்தானம் - இத்யாதிகளின் லக்ஷணங்களைத் தெரிந்து (அதாவது பிருஹ்மம் ஆத்மா - சித் அசித் பிருஹ்மத்துக்குச் சரீரம் - ஆக தத்வத்ரயத்தின் ஸ்வரூப ஸ்வபாவங்களையுணர்ந்தவனுக) நிகில ஜகத் (இந்த சித் அசித் முழுவதும்) உற்பத்தி - ஸ்திதி - லயம் (உதய - விபவ - லயம்) - இவைகளைச் செய்பவரும் — ஆனந்த ஸ்வரூபம் - அதுவே குணம் உள்ளதான பரபிருஹ்மம் தான் ஜகத் ஏககாரணம் என்று மனம் தெளிகிருன். தான் கற்றுணர்ந்த வேதாந்த வாக்யங்களாகிற - உதாரணமாக यतो वा इमानि — எவனிடமிருந்து இந்த ஜகத் உற்பத்தி - ஸ்திதி - அடைகின்றதோ - எவனிடம் லயமடைகிறதோ, இத்யாதி வாக்யங்கள் போதிக்கின்ற பிரும்ம யாதாத்மிய ஞானம்தான் மோக்ஷத்தை அடைவிக்கிறது என மனம் தெளிகிருன்.

**(இது இரண்டாவது அதிகரணம் விஷயமாகும்.) - ஜகத் ஜன்மாத்யதி கரணம்.**

ஜகத்யேககாரணம் பரபிரும்மம்தான்-அது சேதன அசித் வஸ்துக்களிலிருந்து வேறுபட்டதாயும் - सकलेतर विलक्षण " சாஸ்திரம் ஒன்றினால் மட்டுமே அறியத்தக்கது - ஏனெனில் பிரத்யக்ஷாதி போன்ற மற்ற இதர பிரமாணங்களால் ஸாதிக்க முடியாதபடியால் இந்த விஷயம் சாஸ்திரயோனித் வாத் - என்கிற மூன்றும் அதிகரணத்தில சொல்லப்பட்டதாகும். நான்காவதான ஸமந்வயாத்தியதிகரணத்திலே - சொல்லப்பட்டது – வேதாந்த வாச்யங்கள் கிரியை சம்பந்த மாமுல் தான் பிராமாண்யம் - ஸித்தபரமான பிருஹ்மத்தை அறிவதற்கும் வ்யுத்பத்தி பண்ணினால் அர்த்த போதகத்வ முண்டு, தாத்பர்யம்யேற்படலாசையால் - சாஸ்திர விசாரம் யேற்படலாம் என்பது சித்தாந்தம். அர்த்தவாதவாக்யங்களுக்கும் பிராமாண்யம் யேற்படுவதால், ஸித்தபர வாக்யங்களுக்கு பிராமாண்யமில்லை என்று சொல்வது தவறு - ஆகவே பிரும்ம விசாரத்திற்கு கர்ம்விசாரம் நியமேந அபேக்ஷித மாகையால், அத - அத: என்கிற பத அதர்த்தம் தேவைப்பட்டது. பூர்வ மிமாம்ஸம் உத்தரமிமாம்ஸம் இரண்டும் சேர்ந்து ஒரே சாஸ்திரமாகும் என்பது நான்காவது அதிகரணத்தினால் தெளிவு பெற்றது. ஆகவே பிருஹ்ம விசாரம் செய்யத்தகுந்தது. சாஸ்திரபிரமாணதினால், பிரவிருத்தி நிவிர்த்தித்தர்மங்களைத்தான் போதிக்க வந்தது என்கிற கர்ம மிமாம்ஸகனின் பக்ஷம் தள்ளப்பட்டு - விதி கிரியை அவசியமில்லை — பதங்களுக்கு சக்தி கிரஹணம் யேற்படுவதால் எல்லாப் பதங்களும் கிரியாபரமே என்கிற மீமாம்ஸகனின் வாதம் தள்ளப்பட்டது-யுக்தியற்றது. பிரவிருத்தி நிவிருத்தி விஷயமில்லாத ஸித்தவஸ்துக்களும் புருஷார்த்த ஆகக் கூடும் என்று காட்டப்பட்டது. புருஷார்த்தங்களைச் சொல்லும் வேதம் மிகச்சிறந்த புருஷார்த்தம் மாகிற மோக்ஷஸ்வரூபத்தை அடைய விப்பது பிரும்மமே என்பதும் தெளிவாயிற்று. பிரும்மம் சாஸ்திரம் யேக பிரமாணம் என்பதும் ஊர்ஜிதம். ஆக இந்த விஷயங்

க்ள் நான்கு காரணங்களால் நான்கு அதிகரணங்களில் காட்டபட்டது (சாஸ்திர சதுஷ்ட்யம்).

அதற்குப்பின்பு பிருஹ்மத்திற்கு ஈக்ஷணகுணம் உண்டு. பிரும்மத்திற்கு ஜகத்ஸ்ருஷ்டிக்கு ஸங்கல்பம் (ஈக்ஷணம்) (பார்க்கிறது - நினைக்கிறது) யேற்பட்டு - அது மாதிரி இன்னும் பல கல்யாண குணயோகத்துடன் கூடியது பிருஹ்மம் என்று ஸ்தாபிக்கப்பட்டதாலே-அநுமானஸித்த மான பிரதானம் ஜகத்காரணம் என்கிற வாதம் தள்ளப்பட்டு மேலும் என்ன ஸ்தாபிக்கப்பட்டதென்றால் - (6வது அதி கரணம்) சேதன வஸ்து (ஜீவன்) வேறு - பிரும்மம் வேறு - ஜீவன பத்தன் - (நித்யஸம்சாரி) முக்தன்யென்றும்; பிருஹ்ம்ம் அவனைவிட விலக்ஷணமான ஸ்வரூப ஸ்வபாவங் கள் உடையதாகவும் - ஸ்வாபாவிக அநவதிகாதிஸய ஆனந்த விபஸ்சித் (ஸர்வக் ஞத்வம்) குணங்களை உடைய தாயும் - நிகில சேதனர்களுக்கும் பயத்தையும் அளிப்ப வனுகவும் ஸத்யஸங்கல்பம் - ஸமஸ்த சேதன அசேதன அந்தராத்மா இத்யாதி குணவிபவங்களால் ஜீவனைவிட வேறுபட்டவன் ஈஸ்வரன் - அவனே ஜகத்யேககாரணம் பத்த முக்தவர்க்கங்களடங்கிய ஜீவன் அல்ல என்றும் சொல்லப்பட்டது. ஸ்ரீமந்நாராயணனே ஜகத்யேக காரணம் எனத்தெளிவாயிற்று.

மீண்டும் 7 - வது அதிகரணத்தில் சொல்லப்பட்டது. ஸ்ரீமந்நாராயணனுக்கு அப்ராக்ருத (சுத்த ஸத்வமுள்ள) சரீரம் - திவ்ய மங்கள ரூபம் - கர்ம நிமித்தத்தால் யேற் பட்டதல்ல - அசாதாரண திவ்ய மங்கள ரூபம் உண்டு. ஜீவனுக்கு கர்மாக்களின் பலன்களாகிற பாப புண்யங் களுக்குயேற்ப சரீரம் - பகவானுக்கு ஸங்கல்பத்தினுல் அப்ராகிருத சரீரம் - கர்மவச்யமில்லை என்பதாம்).

எட்டாவது அதிகரணத்திலும் - ஒன்பதிலும் - பரமாத் மாவே தான் பிரஸித்த ஜகத்காரணம் - ஆகாசம் பிராணன் ஆகிற அசேதனவஸ்துக்கள் காரணமாக மாட்டா. அவை

பகவானுக்குச் சரீரமாகவிருப்பதால் - பிரஸித்தமாகியிருக்கின்றன. அதுமாதிரி மற்ற சேதன அசேதனவஸ்துக்களும் காரணமல்ல - இவை பகவத் சரீர சம்பந்தத்தால், பிருஹ்மம் ஒவ்வொரு வஸ்துவிலும் அநுப்ரவேசம் செய்து - ஸர்வ சரீரதயா ஸர்வ பிரகாரம் பிரும்மமே அவஸ்திதம் என்றும் காட்டப்பட்டது. சித் அசித் ஈஸ்வரன் மூன்றும் பேதமும் விலக்ஷணத்தினுல் தனித் தனியாகக் காட்டப்பட்டு - ஜீவ பிரும்ம ஐக்யம் சரீர ஆத்ம சம்பந்தத்தால் - ஐக்யமும் பேதமும் நிர்வஹிக்கப் பட்டது. இதனுல் காரணகாரிய ஐக்யமும் ஜகத் ஸத்யம் என்றும் ஸ்தாபிக்கப் பட்டது.

பத்தாவது அதிகரணத்தில் ஜ்யோதிஸ் என்பதும் பரமாத்மாவே. அது அசாதாரணமான தீப்தி (பிரகாசம்) என்கிற குணத்தை உடையது. அது பரமாத்மாவே என்பதற்கு இன்னொரு காரணம் - மேலான ஸ்வர்க்க லோகத்திற்கும் மேலான த்யுசம்பந்தம் யேற்பட்டதாலேயும் - அந்த பரம் ஜ்யோதிஸ்தான் பிற்பாடு சொல்லப்பட்ட மூன்றுவிதமான உபாஸன மார்க்கத்தினுல் அடையப் பெறும் என்றும் காட்டப்பட்டது. பரமாத்மாவுக்கு இதனுல் பிரத்யபிஞானம்யேற்பட்டது, அவனே பரம் ஜ்யோதிஸ் - உஜ்ஜவல பிரகாசம் எனலாம்.

பதினென்று - பன்னிரண்டாவது அதிகரணங்களில் பரமபுருஷனே எல்லாவற்றிற்கும் பரமகாரணம், (ஏனெனில் அவன் ஒவ்வொரு வஸ்துவிலும் அநுப்ரவேசம் செய்து யாவற்றையும் தன் நியமனத்தினுல் செயல்படுத்துவதால்); அந்த பரமபுருஷனை உபாஸனமார்க்கத்தினுல் ஆராதிப்பதால் அம்ருதத்வ பிராப்தி ஹேதுவாகிறுன். அவனே நல்லவர்களையும் தீயவர்களையும் நல்ல கெட்ட கர்மாக்களினுல் ஆட்டிப்படைத்து - கர்ம பலன்களையும் கொடுப்பவனுகவும், ஸாதுக்களை ஸம்ரக்ஷிக்கிறவனுகிறுன். இந்த விஷயம் சாஸ்திர திருஷ்டியினுல் இந்திராதி (பிராணுதி) சப்தங்களால் காட்டப்பட்டது.

இவ்வளவு விஷயங்கங்களால் - இந்த விதமாக முதற் அத்யாய முதற்பாதத்தில் காட்டப்பட்டது. வேதாந்த வாக்யங்களுக்குக்கு விஷயமாக ஸ்ரீமந்நாராயணரே (மஹா லக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந்நாராயணரே)பரதத்வம் - அவரே ஸர்வகாரணம், அவர் சாஸ்திரம் ஒன்றினாலே (இதர பிரமாணங்களுக்கு அதீதரானபடியாலே) அறியத்தகுந்தவர் அவர் ஸர்வக்ஞர் ஸத்ய ஸங்கல்பத்வம்-இதியாதி அபரிமித உதாரகுண ஸமூஹங்களைக் கொண்ட ஸவிசேஷ பிருஹ்மம் குணஸாகரம் மற்ற வஸ்துக்களிலிருந்து வேறுபட்ட (ஸ்வேதர ஸமஸ்த வஸ்து விலக்ஷண) பரபிரும்ம புருஷோத் தமன் (முக்தன் - நித்யர் - பத்தர்களிலிருந்து வேறுபட்ட மஹா புருஷன்) ஸ்ரீமந்நாராயணரே வேதாந்தங்களால் அறியத்தக்கவர் என்பதும் காட்டப்பட்டது.

இப்பொழுது முதல் அத்யாயம் - இரண்டு - மூன்று - நான்காவது பாதங்களில் சில சந்தேகங்களுக்கும் ஆட் சேபங்களுக்கும் பதில் சொல்லப்படுகிறது. यद्यपि वेदान्तवेद्यं அறியத்தகுந்தவர் பரபிருஹ்மமே யாகிலும் तथापि कानि चिद्वेदान्त वाक्यानि प्रधान क्षेत्रज्ञान्त र्भूतवस्तु विशेषस्वरूपप्रतिपादनपराण्येव சில வேதாந்த வாக்யங்கள் பிரதானம் (அசித்) க்ஷேத்ரக்ஞன் (ஜீவன்) என்பவைகளையும் காட்டி - சம்பந்தப்படுத்தியதால் ஜகத்காரண சங்கையேற்படுவதால் - அந்த சங்கையைப் போக்க பிரும்மமே ஜகத்காரணம் என்று ஸ்தாபிக்கப்பட்டது மன்றி - பிரதானம் ஜீவன் இவைகளில் அந்தர் பூதமாக விருக்கும் பிருஹ்மத்தின் விசேஷஸ்வரூபம் காட்டப்பட்டது மன்றி, அந்த சந்தேகங்களை விரட்டின காரணத்தினாலே - அந்த அந்த வேதாந்தவாக்யங்களுக்கு பிருஹ்மமே ஸகல கல்யாண குணயோகத்துடன் கூடின ஸ்ரீமந்நாராயணராக வும், காட்டப்படுகிறது. இந்த சுருதிவாக்யங்களுக்குள்ளே அஸ்பஷ்ட ஜீவாதிலிங்க வாக்யங்கள் - தெளிவில்லாத அடையாளங்களைக் கொண்ட ஜீவபர வாக்யங்கள் விசாரிக்கப்படுகின்றன. முதல் பாதத்தில் சேதன அசேதனங்களைப்பற்றிய மிகவும் தெளிவில்லாத அடை யாளங்கள் கொண்ட வாக்யங்கள் விசாரிக்கப்பட்டன. முதற்

பாதத்திற்காட்டிலும் இந்த பாதத்தில் பூர்வபக்ஷியின் ஆட்சேபங்களுக்கு இடம் அதிகம் என்ற கருத்து. மூன்றாவது பாதத்தில் ஸ்பஷ்டலிங்கங்கள் - அடையாளங்கள் தெளிவாயிருக்கும் வாக்யங்கள் விசாரிக்கப்பட்டு அவையும் பிருஹ்மத்தையே கூறுகின்றன. அதேபடி நான்காவது பாதத்தில் மிகத் தெளிவான ஜீவாதிலிங்கங்களை உடைய வாக்யங்கள் விசாரிக்கப்படுகின்றன ஆக நான்கு பாதங்களிலும் ஜீவன் அசித் ஆகியவற்றின் லிங்கங்கள் (அடையாளங்கள்) மேன் மேலே தெளிவாயிருக்கும் வேத வாக்யங்கள்) ஆராயப்படுகின்றன. பாதங்கள் மேலே செல்லச் செல்ல ஜீவாதி - அசித் இவைகளின் லிங்கங்கள் தெளிவாகின்றன என்று கருத்து.

முதல் அத்யாயம் - 2வது பாதம்.

## सर्वत्र प्रसिद्धोपदेशात् (1-2-1)

## ஸர்வத்ர பிரஸித்தோபதேஸாத் (1-2-1)

ஸர்வத்ர (ஸர்வம் கலவிதம் பிருஹ்ம - என்ற வாக்யத்தில்) எல்லாப் பொருள்களோடும் (ஒரே வேற்றுமையில் ஸாமான்யாதி கரணத்தினால்) படிக்கப்படும் வஸ்து பரபிருஹ்மமே - பிரஸித்தோபதேஸாத் - ஸுபிரஸித்தமானதாக (அதை உபதேசிக்கையாலே)

சென்ற அதிகரணத்தில் பிராணனைச் சரீரமாகக் கொண்ட வஸ்துவுக்கு (பிரும்மத்திற்கு) ஜகத் காரணத்வமும், முமுக்ஷு பாஸ்யத்வமும் சொல்லப்பட்டது. இவ்விரு தன்மைகளும் ஜீவனுக்கும் இருக்கலாமே என்கிற ஆக்ஷேபம் இந்த அதிகரணத்தில் தள்ளப்படுகிறது.

சாந் உபநிஷத்தில் 3 - 14 - 1 & 2 சொல்லப்பட்டது. अथ खलु क्रतुमय: पुरुष: । यथा क्रतुरस्मिंल्लोके पुरुषो भवति,तथेत: प्रेत्य भवति । அந்த புருஷன் ஆராதனையினால் சந்தோஷப் படுத்தப் படுகிறான். அதுவே ஸ்வரூபமாகும். எவ்விதம் இந்த

உலகில் ஒரு மனிதனின் ஆராதனை விருக்கிறதோ - அவன் இறந்த பின்பு அதுவாகவே ஆகிறான் - யதாக்ரது ந்யாயப் படி. அவன் உபாஸிக்கட்டும் - स क्रतुं कुर्वीत — मनोमयः प्राणशरीरो भारूपः इत्यादि । அவன் மனோமயனாக (மனத்தினால் ஆக்கப் பட்டவனாக விருக்கிறான் அவன் பிராணனை தன் சரீரமாக வும், தேஜஸ்ஸை தன் உருவமாகவும் கொண்டிருக்கிறான். இங்கே உபாஸ்ய வஸ்து எது என்று விசாரிக்கப்படுகிறது. அவன் உபாஸிக்கட்டும் (எதை?); அதற்கு பதிலாக - மனோ மயன் - அவன் பிராணனை தனது சரீரமாகக் கொண்டிருக் கிறான். மிக்க தேஜஸ்ஸை தனது ரூபமாகக் கொண்டிருக் கிறான்)

(இங்கு சொல்லப்படுவது - சா. உபநிஷத்தில் சொல்லப் பட்டிருக்கிறது இது எல்லாம் பிருஹ்மம் - ஏனெனில் இது எல்லாம் அவனிடமிருந்து உண்டாயிற்று - அவனிடம் லய மடைகிறது. அவனால் காக்கப்படுகிறது. இவ்விதமாக சாந்தியுடையவனாய் உபாஸிக்கக் கடவன்-என்று படிக்கப் படுகிறது. இதில் எல்லாமயிருப்பதாக ஓதப்படும் பிருஹ் மம் ஜீவனாகவே இருக்க முடியும் என்கிற சந்தேகம் (பூர்வ பக்ஷம்).

ஆகவே சந்தேகம் - பரமாத்மாவுக்கு மனோமயத் வாதி குணங்கள் உண்டா - ஜீவனுக்கு உண்டா? (சந்தேகம் எழுவதற்குக் காரணம் - ஜீவனுக்குத் தான் கர்ம சம்பந்தம் உண்டு - அதனால் பிரும்மா முதல் புல்வரை எல்லாப் பொரு ளாக ஆகமுடியும். ஜீவனையும் பிருஹ்ம சப்தத்தால் சாஸ்திரங்களில் சொல்லப்படுவதைக் காண்கிறோம். இந்த உலகம் கர்மத்தின் ஆதாரத்தைப் பற்றியே - கர்மம் காரணமாகவே தோன்றி - வாழ்ந்து மறைகிறது. தஜ்ஜலாந் (அதனால் தோன்றி வாழ்ந்து மறைகிறபடியால்) - என்று காரணத்தைச் சொல்வதும் ஜீவனிடம் பொருந்துகிறது. மேலும் பிருஹ்மம் தோஷங்களுக்கிருப்பிடமாக விருக்கும் எல்லாப் பொருள்களாகவும் ஆக முடியாது. சூத்ரத்தின் அர்த்தமாக - ஸ: என்று சேர்த்து - ஸர்வ வஸ்துக்களிலும் அவற்றின் ஆத்மாவாக உபதேசிக்கப்படுபவன் - ஸ:- அந்த

பரமாத்மாவே-பிரஸித்த உபதேசாத் - வேறிடத்தில் 1-3-12 ஈக்ஷதி கர்ம வ்யபதேசாத் (1-3-12) என்னும் சூத்திரத்தி லிருந்து - ஸாத்ய வாசகமான ஸ: என்னும் பதம் எடுத்து இங்கு சேர்த்துக் கொள்வதால் - வேறிடத்தில் பிரஸித்த மானதை அநுவாதம் செய்கிற படியாலே - எனத்தெளிவது).

(மீண்டும் விளக்கம் - சா. உ. சாண்டில்ய வித்யையில் இது எல்லாம் பிரும்மம், ஏனெனில் அதனிடம் எல்லாம் உண் டாகி - அதனுல் வாழ்ந்து அதில்லயமடைகிறது. சாந்தமுக ஒருவன் உபாஸிக்கப்பட்டும். யதாக்ரது (எதை உபாஸிக் கிறானே - அதை அவன் இறந்த பின்பு அடைகிறான் என்கிற) நியாயத்திருல்-அதன்படி பிருஹ்மம் மனேமயன்- பிராணனைத் தன் தேகமாகவும், தேஜஸ்ஸை தனது உருவ மாகவும், ஸத்யசங்கல்பனுகவும், இருக்கிற படியால் - அவனே ஆகாசத்தைப் போலவும் - எல்லாக் கர்மாக்களாக வும், எல்லா ஆசைகளாகவும் எல்லா சுகந்தரஸங்களாயும் உடையதாயும், சுவை முதலிய குணங்களையுடையதாயும், பேச்சில்லாமையும் கவலையில்லாமையுடன் இருக்கிருன். இப் பேற்பட்ட பரமாத்மா எனக்கு ஆத்மா, அவனது உருவம் என்ஹிருதயத்தில் ஒருயவதான்யம் - அரிசியை விட மிகச் சிறியதாயும், அல்லது கடுகைவிட அளவில் சிறியதாயும்,... அந்த பரமாத்மாவே எனக்கு ஆத்மாவாயும் - அவன் அளவில் பூமியைவிடவும், ஆகாயத்தைவிடவும் - மற்ற இந்த எல்லா உலகங்களையும் விடப் பெரியவன் - அவனே (உபாஸகனுகிற) எனக்கு ஆத்மா, அவனே பிரும்மம்-என்று நினைக்கிறபடியால் - அந்த உபாஸகன் இறந்த பின்பு அவனையே அடைகிருன். இவ்விதமாக - மேல் சொல்லப் பட்ட இந்திரபிராணுதி கரணத்தில் பிராண சரீரகனுக்கு (பரமாத்மாவுக்கு) ஜகத் காரணத்வமும் உபாஸ்யத்வமும் சொல்லப்பட்டது. இவ்விரண்டும் சாண்டில்ய வித்யையில் ஜீவனுக்குச் சொல்லப்பட்டிருப்பதாகக் கொண்டு ஜீவனே ஜகத்காரணம் என்கிற சந்தேகம் எழ - அதைத் தள்ளுவது இந்த அதிகரணத்தில. தஜ்ஜலாந் - இதில் தச் சப்தம் பிருஹ்

மம். தஜ்ஜம் தல்லம் ததந் என்று கொண்டு பிரும்மத்தி னிடமிருந்து உண்டாவது - தல்லம் - அதில்லயமடைவது - ததந் - பிரும்மத்திற்கு அதீனமான ஸ்திதியையுடையது தே ந அந்தீதிததந் - என்று வ்யுத்புத்தி.

இதம் ஸர்வம் பிருஹ்ம என்கிறதிப் ஸாமாநதி கரண்யத்திஞல் ஜகத்துக்கும் பிருஹ்மத்துக்கும் தாதாத்மியம் (ஒற்றுமை) சொல்லப்படுகிறது. இதனுல் யேற்படுவது, இதுவெல்லாம் பிருஹ்மமன்றே - சேதஞ சேதன வஸ்துக்களாடங்கிய ஜகத்தும் பிரும்மமும் ஸாம்யம் - **जगच्च स**: என்கிற படி இதுவெல்லாம் பிரும்மமே என்பதாம். அது மீண்டும் விளக்கப்படுகிறது.)

**ஸ்ரீபாஷ்யம்** (தொடர்ச்சி):—இந்தவிடத்தில் **मनोमय: प्राणशरीरो भारूप:** —என்பதில ஜீவஞ பரமாத்மாவா உபாஸகனுடைய உபாஸ்ய வஸ்து யாது? பூர்வபக்ஷம்—ஜீவன் தான் உபாஸிக்கப் படவேண்டும். எனெனில் மஞேமய: பிராண சரீர: என்கிற குணங்கள் ஜீவனுக்கு தான் உண்டு இவை ஜீவனுக்கு உபகரணங்களாக விருக்கின்றன. மேலும் இவை பரமாத்மா விஷயத்தில் நிஷேதிக்கப் பட்டிருக்கின்றன. உதாரணம் - முண். 2 2-1-2ல் **अप्राणोह्यमना**: (பரமாத்மாவுக்கு பிராணன் இல்லை. மனமில்லை); (இன்னொரு காரணம் இந்த சுருதி பிரகரண ஆரம்பத்திலே - இதம் ஸர்வம் **सर्वं खल्विदं ब्रह्म** பிரும்மம் இதஞலே உபாஸ்யப் பொருளாக அமையாது. ஏனெனில் இந்த வாக்யத்தின் நோக்கம் - பிரும்மம் இந்த எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக விருக்கிறது. (இந்த உபதேசத்தைச் சொல்வதாக நோக்கம்). ஒருவன் சாந்த உள்ளமுடையவஞக உபாஸிக்கட்டும் - என்கிறபடி சொல்லியிருப்பதாலே. [ஏஷ ம ஆத்மா அந்தர் ஹ்ருதயே - என்றும் மேலே ஓதப்பட்டுள்ளது. சரீரத்தினுள்ளே யிருக்கின்ற ஹ்ருதயத்தி லிருப்பதாகச் சொல்லப்பட்டது. இதஞல் அந்த பிரும்மத் திற்கு சரீரம் - அதஞலே (சரீரசம்பந்தத்தாலே சுகதுக்கங் களுக்கு பிரும்மம் போக்தாவென்றும் - அல்பமான ஸ்தானத் தையுடையது என்றும், தோஷங்கள் பிரும்மத்துக்கு யேற்

படும். பிருஹ்மம் அணுபரிமாணம் என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. இவை ஜீவாத்மாவுக்கு ஏற்படலாம். அல்ப ஸ்தானம் அணுபரிமாணம் சுகதுக்க போக்தாவாகை பிரும் மத்துக்கு ஸம்பவிக்கமாட்டாது. ஆதலால் ஜீவாத்மாவே "ஸர்வம் கல்விதம் பிருஹ்ம" என்ற உபக்ரமத்திலுள்ள பிருஹ்ம சப்தத்திஞல் கொள்ளப்படவேண்டும். விசித்திர கர்மங்களின் பலஞக - தேவமனுஷ்யாதி பாவம் பெற்றுப் பிறப்பதஞல் - ஸர்வமிதம் பிருஹ்ம என்று சொன்ன ஒற்றுமை (அபேதம் - ஜகத் பிரும்மம்) உபபந்நமாகக் குறை யில்லை. (பூர்வபக்ஷி - நிரீஸ்வர சாங்கியஞக விருக்கலாம் என சிலர் கருத்து).]

மேலும் சாந்த உள்ளத்தினஞக உபாஸிக்கட்டும் - என்கிற வாக்யத்திற்கு உபாஸ்ய பொருள் ஒன்று வேண்டும். பிரும்மம் மேலே காட்டியபடி ஏஹம ஆத்மா அந்தர் ஹ்ருதயே - என்கிற வாக்கியப் பிரகாரம், பிரும்மத்தைச் சொல்வதாக எடுத்துக் கொள்ளவேண்டும். ஏனெனில் பிரும்மமே மனேமயாதி குணங்களை உடையதாகச் சொல் லப்பட்டிருப்பதாலே, (அதே பிரகாணத்திலே) - பிரும்மத் தையே கொள்ளவேண்டும். ஏனெனில் இரண்டு நிர்திஸ்ய காரணங்கள் - ஒன்று - உபாஸகன் விதி பிரகாரம் யேற் படவும் - (2) விதி பிரகாரம் உபாஸ்ய பொருள் ஒன்று - இரண்டும் தேவையாகும்.) இது சாத்யமாகும்.) வேற்று மையை சிறிது மாற்றுவதால்- (எதில்) அவன் மனேமயஞக யிருக்கிறுன். அவன் பிராணனைச் சரீரமாகக் கொண்டிருக் கிறுன். அதஞல் இரண்டு விசேஷங்கள் ஜீவனுக்கும் பொருந்தலாமல்லவா? ஜீவன் என்று கொண்டால் - பிரும்மம் என்கிற பதம் (வாக்ய பிரகரண முடிவிலே एतद्ब्रह्म உபஸம்ஹாரம் - பிரும்ம பதம்) ஜீவனையே மரியாதையாகக் கூறிய பதமாகும் எனக் கொள்ளலாம். ஆகவே ஜகத் துக்கும் ஜீவனுக்கும் அபேதம் கூறலாமல்லவா? இருவகை அபேதம் சாக்ஷாத்தாகவும் - பரம்பரையாகவும் சரீர ஆத்ம பாவத்தைக் கொண்டதால் - இரண்டுக்கும் பொருத்த மாகும்.

இவ்விதமில்லை - என்று நாம் பதில் சொல்கிறோம். सर्वत्र प्रसिद्धोपदेशात् - வேறிடத்தில் பிரஸித்தமானதை அனுவாதம் செய்கையால் என்றபடி. மனோமயத்வாதி குணங்கள் பிரும்மத்துக்கு உண்டு. எப்படி? सर्वत्र - எல்லா வேதாந்தங்களிலும் மேலான பரபிரும்மமே இவ்வித குணங்களைக் கொள்வதாலே சொல்லபபட்டதாலே - இங்கே பிருஹ்மம் தான். எவ்விதமெனில் - மு 2 - 2 - 7 - मनोमय: प्राणशरीरनेता: மனோமயனுன பரமாத்மா பிராணனைச் சரீரமாகவுடைய பரமாத்மா; தைத் 1 - 6 - 1 स य एषोऽन्तर्हृद आकाश: । तस्मिन्नयं पुरुषो मनोमय: । अमृतो हिरण्मय: - (ஆகாசம் அல்லது இடைவெளி ஹ்ருதய மத்தியிலிருக்கிறது. அந்த தஹராக காசத்தில் மனோமயனுக ஒரு புருஷன் இருக்கிறுன். அவன் அம்ருதன்- அவன் தங்கத்தைப் போலப் பிரகாசிக்கிறுன். தை. நா. 2 - 12 - हृदा मनीषा मनसाऽभिक्लृप्तो य एनं विदुरमृतास्ते भवन्ति, அந்த பரமாத்மா ஹ்ருதயத்தில் அறியப்படுகிறுன் - பேரறிவினுலும், மனத்தினுலும்; எவர்கள் அவனை அறிகிறுர்களோ, அவர்களும் அம்ருதம் (இறப்பைக்கடந்தவர்களாக) ஆகிறுர்கள். கட் 6 - 9 (மு 3 - 1 - 8) न चक्षुषा गृह्यते नापि वाचा (பரமாத்மா கண்களாலும் பேச்சாலும் அறியப்படுகிறதில்லை. मनसा तु विशुद्धेन (?) பரமாத்மா சுத்தமான மனதினுல் அறியப்படுகிறுர்.

அதேபோலே கே. 1 - 2 - प्राणस्य प्राण: பிராணனுக்குப் பிராணன்; (கௌ. 3 - 1) अथ खलु प्राण एव प्रज्ञात्मेदं शरीरं परिगृह्योत्थापयति - இப்போது வாஸ்தவத்திலே எல்லாம் அறிந்த ஆத்மா (பிரக்ஞாத்மா) - பிராணனுக விருக்கும் இந்த பிரக்ஞாத்மா நன்றுகச் சரீரத்தைப் பற்றிக்கொண்டு, அதை விட்டு உயரக் கிளப்புகிறது. சா. உ. 1 - 11 - 5 - सर्वाणि ह वा इमानि भूतानि प्राणमेवाभिसंविशन्ति प्राणमभ्युज्जिहते - இந்த எல்லாப் பிராணிகளும் பிராணனுக்குள்ளே நுழைகின்றன. (லயமடைகின்றன) - அவை பிராணனிலிருந்து வெளிக்கிளம்புகின்றன.

मनोमयत्वं - மனத்தினுல் ஆக்கப்பட்டது என்பதற்கு விசுத்தமான மனத்தினுல் அறியப்படத்தக்கது (விசுத்

தேக மனத்தினுல் அறியத்தக்கது. प्राणशरीरत्वं-प्राणस्यापि பிராணனுக்கும் ஆதாரம் - பிராணனையும் கட்டுப்படுத்தும் (நியந்திருத்வம்). இவ்விதமிருக்கும்போது, एष म आत्माऽन्तर्हृदये एतद्ब्रह्म - இந்த ஆத்மா ஹ்ருதயத்தின் நடுவே இருக்கிறது. அதுவே பிரும்மம். பிரும்மம் என்கிற பதம் இந்த சுருதி வாக்யத்திலும் வருகிறது. இங்கேயும் முக்கிய - இயற்கை யான அர்த்தத்திலும் உபயோகப்படுத்தப்படுகிறது. अप्राणोह्यमना: (மு. 2. 2 - 1 - 2) வாஸ்தவத்திலே அவனுக்கு உயிர் இல்லை - மனமில்லை. இந்த வாக்யம் பிரும்ம விஷயத்தில் மறுக்கிறது. அவனுக்கு மனத்தை நம்பும்படி அவ்விதமான ஞானம் இருக்கிறது - அல்லது பிராணனை நம்பும்படி வாழ்க்கை (இருப்பு - ஸ்திதி) விருக்கிறது. (மன ஆயத்தம், ஞானம் ஆயத்தாம் ஸ்திதியையும் பிரும்ம விஷயத்தில் நிஷேதிக்கிறது.)

அல்லது (சூத்ரத்திற்கு இப்படியும் சொல்லலாம்) சா. உ. 3 - 14-1 सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत- இவை எல்லாம் வாஸ்தவத்திலே பிருஹ்மமே ஏனெனில் இவை பிரும்மத்தினிடம் உண்டாகி - மறைகின்றன. அவனுல் காப்பாற்றப்படுகின்றன என்று சாந்தியுடையவனுய் உபா ஸிக்கக் கடவன் என்று படிக்கப்படுகிறது. அவன் பிரும் மத்தை எல்லா ஆத்மாக்களுக்கும் ஆத்மாவாக தியானிக் கட்டும். उपासीत - உபாஸனம் ஸர்வாத்மகம் பிரும்ம - என்று விதிக்கப்பட்டிருக்கிறது. (அதாவது சாந்தியை அடைந்து - உபாஸிக்கவேண்டியது). ஆகவே स क्रतु कुर्वीत - (அவன் உபாஸனையைச் செய்யட்டும்) என்கிற வாக்யம் முந்திச் சொல்லப்பட்டதற்கு அனுவாதம் செய்கையினுலே - எவ்விதமெனில் அதே பிரும்மத்திற்கு அம்மாதிரியான குணங்களை விதிப்படி, அதிகாரபூர்வமாக உண்டு என்று ஸாதிப்பதாலே - அதாவது மனேமயத்வாதி குணங்களும் மற்றவைகளும். ஆகவே सर्वात्मकं ब्रह्म மனேமயத்வாதி குணங்களை உடைத்ததாக விருக்கிறது என்று சாந்த மனத் துடன் உபாஸிக்கப்படவேண்டியது - என்கிறது பூராவாக் யார்த்தமாகும்.

சரி - அவ்விதமானால் - மீண்டும் சந்தேகம் - அதாவது இங்கே "பிரும்மம்" என்கிற பதத்தினால் பிருஹ்மம் சொல்லப் படுகிறதா அல்லது ஜீவனா? ஏன்? பிரத்யக ஆத்மா (ஜீவன்) தான் சொல்லப்படுகிறது என்பது சரி. எவ்விதமெனின் ஜீவபதத்துடனே "ஸர்வ" பதம் ஸாமா நாதிகரண்யத்தினால் ஸாம்யம் சொல்லப்படுகிறது. "எல்லாம்" (सर्वमिदं) என்கிற பதம் சதுர்முக பிரும்மாவிலிருந்து ஸ்தம்பம் (பூச்சி) பர்யந் தம் அடங்கிய பூராஜகத். பிரும்மாதிபாவம் பிரத்யகாத் மாவினால் அடையக்கூடும். அநாதியாகவரும் அவித்யா மூல கர்ம விசேஷ உபாதியினால் இந்த பிரும்ம பாவம் (அது மற்ற வஸ்துக்களின் பாவம்) அடையக்கூடும். ஆனால் பர பிரும்ம விஷயத்திலோ - ஸர்வக்ஞத்வம் - ஸர்வசக்தித்வம் - அபஹதபாப்மத்வாதி குணங்கள் கொண்ட பரபிரும்மம் - அதற்கு நிரஸ்த ஸமஸ்த அவித்யாதி தோஷகந்தங்களே யேற்பட பிரஸக்தியில்லை - ஸமஸ்தஹேய (துச்சமான) ஆகாரம் (ரூபம்) கொண்ட ஸர்வபாவம் ஸம்பவிக்க மாட்டாது. பிருஹ்மம் கல்யாணகுணாத்மகம்- ஹேயகுணங் களுக்கு எதிர் தட்டு அவ்விதமிருக்க - ஸர்வபாவம் (எல்லாப் பொருள்களுமாக ஆகமுடியாது - தோஷங்களுக்கு இருப்பிட மான எல்லாப் பொருள்களுமாக ஆகமுடியாது. எல்லா மாயிருப்பதாக ஓதப்படும் பிரும்மம் - என்று ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதிலயங்களைச் செய்வதைக் காரணமாகவும், எல்லாப் பொருளுமாயிருக்கும் தன்மை (ஜகத்-பிரும்மம்) அதிலிருந்து யேற்படும் அர்த்தமாகவும் இங்கு ஓதப்படுகிறது. ஜீவனுக்கு கர்மத்தினால் பலதேகங்களை அடைய ஸர்வபாவமிருக்கலாம் ஆனால் பிருஹ்ம விஷயத்திலே - அந்தர்யாமித் வத்தினால் யேற்படும் - நியந்திருத்வம் - அதிலிருந்து யேற்படும் எல்லா மாவதாக சொல்வது - அதே பிரும்மம் ஸ்ருஷ்டி ஸ்திதிலயம் செய்வதால் — எல்லாமாவதாக ஓதப்படுகிறது என்பது தெளிவு. கர்மவச்ய ஜீவனுக்கு அது காரணமாக (குணங் கள் காரணமாக) எல்லாமாவதாகச் சொல்லுவது ஒட்டவே ஒட்டாது.)

பிரத்யகாத்மாவுக்கு சில சமயங்களிலே சுருதியிலே பிருஹ்ம சப்தம் ஓதப்படுகிறது. அதே காரணத்தினுல் மேலான பரபிரும்மம் சில சந்தர்ப்பங்களில் ஸவிசேஷமாக - உதாரணம் பரமேச்வரனுக்கு பரமாத்மந் - பரபிருஹ்மந் - ஏற்படக்கூடும். மேலும் உபாதிகளிலிருந்து விடுபட்ட ஜீவன் - முக்ததசையில் - பரமாத்மாவைப்போல- ப்ருஹத்வம் (மிகப் பெரிய தன்மையை) அடைகிருன் அச்சமயம் முக்தனை "பிருஹ்மந்" என்று அழைக்கக் கூடும். ஏனெனில் சுருதியே அவ்விதம் சொல்கிறது. ஸ்வே 5 - 9 - स चानन्त्याय कल्पते-அவன் (முக்தன்) (அநந்தத்திற்கு) அம்ருதத்வத்திற்கு தயாராகிவிடுகிருன். ஜகத்தின் உற்பத்தி - ஸ்திதி - லயம் எல்லாம் பிரத்யகாத்மாவின் கர்மாவினுல் யேற்படுவதால் - அவனையும் இந்த சுருதி வாக்யப்படி ஜகத் காரணம் என்று சொல்லலாமே - (அதாவது - ஸர்வம் இதம் - இவை எல்லாம் (ஜீ வ னி ட மி ரு ந் து) உண்டாகி - அவனிடம் லயமாகி, அ வ ளு ல் காப்பாற்றப்படுகிறது. (சா. உ III - 14 -1 तज्जलानिति हेतु:—தஜ்ஜலாந் என்பதானது இதம் என்பதற்கு ஹேதுகர்ப்பவிசேஷணம். இதம் ஸர்வம் பிருஹ்ம கலு என்று அந்வயம், தத் - பிரும்மம் என்று அர்த்தம் -)

இங்கே இதன் அர்த்தம். இந்த பிரத்யகாத்மா ஸ்வதோ தன் ஸ்வபாவமாகவே - பிரும்மமாக விருக்கிருன். முக்த தசையில் - உபாதிகளிலிருந்து விடுபட்ட போது - அபரிச் சின்ன ஸ்வரூபத்தோடு பிருஹ்ம பூதனுக விருக்கிருன். அநாதிகாலமாக வரும் அவித்யையினுல் கர்மநிமித்தமாக தேவதிர்யக்மனுஷ்ய ஸ்தாவராதி ரூபங்களில் இருப்பதாகக் காணப்படுகிருன். (ஸம்சாரதசையில்) (இது பூர்வபக்ஷம் - ஜீவாத்மாவே "ஸர்வம் கல்விதம் பிருஹ்ம என்று உபக்ரமத் திலுள்ள பிருஹ்ம சப்தத்தால் கொள்ளப்பட வேண்டும். ஜீவனுடைய விசித்திர கர்மபாவத்தினுலே தேவமனுஷ்யாதி பாவம் பெறலாம். ஸர்வபாவம் அடையலாம்—என்பதால் सर्वमिदं என்கிறது என்பது).

இந்த ஆக்ஷேபத்திற்கு பதில் உரைக்கப்படுகிறது. सर्वत्र प्रसिद्धोपदेशात् என்கிற சூத்திரத்திலுள்ள सर्वत्र (சா. 2 सर्व

खल्विदं - ) ஸர்வம் பிரஸித்தம் இதம் என்று காட்டப்படுவதா கையாலே - सर्वस्मिन् ஜகத்திலே பிரும்ம சப்தத்தினுல் எல்லாப் பொருள்களுக்கும் ஆத்மாவாக உபதேசமிருப்பதால் आत्मतया अभिधीयमानं परं ब्रह्मैव - न प्रत्यकात्मा - பிரும்மம் இருப்பதால் இது பிரத்யகாத்மாவைச் சொல்லாது. ஏன்? பிரஸித்த உபதேசத் தினுல் என்கிற சூத்திரத்திலே பதில் இருப்பதால் - तज्जलानिति என்கிற காரணத்தினுலே பிரஸித்தமாக உபதேசம் செய்வ தாகச் சொல்லப்படுகிறது. இந்த எல்லாம் வாஸ்தவத்தில் பிருஹ்மமே सर्वमिदं ब्रह्म) இதற்கு அர்த்தம் பிருஹ்மாத்மகமாக ஜகத்பூராவும் இருக்கிறது. பிரும்மத்திலிருந்து உற்பத்தி - பிரும்மத்தில் லயம் - பிரும்மாதீன ஜீவனம் - இது தான் ஹேறது. இதனுல் யேற்படுவது பிரும்மாத்மகம் ஸர்வம் கல்விதம் ஜகத் என்று சொல்லும் போது - எந்த பிரும்மத்திட மிருந்து ஜகஜ்ஜன்ம ஸ்திதிலயம் வேதாந்த வாக்யங்களால் ஏற்படுகிறது என்று காட்டப்படுகிறதோ-அந்த பிரஸித்த மான வேதாந்த உபதேசம்-அதே பிருஹ்மம் தான்-இங்கே யும் சொல்லப்படுகிறது. तत् சப்தம் பரபிரும்மம் என்பதைச் சொல்கிறது. பரமேவ பிருஹ்ம; அதேபடியாகவல்லவோ- இந்த சுருதியிலும் காணப்படுகிறது - (தை-ப்ரு 3-1-1) यतो वा इमानि भूतानि जायन्ते, येनजातानि जीवन्ति, यत् प्रयन्त्यभिसंवि- शन्ति—तत् विजिज्ञासस्व - तद् ब्रह्म என்று உபக்ரமித்து - आनन्दो ब्रह्मेति व्यजानात् । आनन्दाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते । தை. உ. III-6-1) என்றவைகளால்-எதனிடமிருந்து எல்லாப் பொருள் களும் உண்டாகின்றனவோ, எதனுல் தோன்றியவை வாழ் கின்றனவோ, ப்ரளய காலத்தில் எதில் நுழைகின்றனவோ அதை அறிவாயாக-அதுவே ப்ருஹ்மம் என்று ஆரம்பித்து- பிறகு அவன் ஆனந்தத்தை பிருஹ்மம் என்று அறியட்டும்; வாஸ்தவத்திலே ஆனந்தத்திலிருந்து இந்த எல்லாப்பிராணி களும் தோன்றின-இதிலிருந்து ஆக்கல் அளித்தல் அழித்தல் பரபிரும்மத்தினுல் ஏற்படுகிறது, அந்த பரபிரும்மம் ஆனந் தியாகவும் ஆனந்த ஸ்வரூபமாகவுமிருக்கிறது (ஆனந்த வல்லி-தை.); முந்திச்சொல்லப்பட்ட பிருஹ்மத்திற்கு அநவதி காதிஸய ஆனந்த யோகத்துடன் கூடியதும் - விபஸ்சித:

(ஸர்வக்ஞஞ்கிற பரஸ்மாத் பிருஹ்மணயேவ (பிருஹ்மமே) ஜகத் உற்பத்தி ஸ்திதி லயத்திற்குக் காரணமாக ஓதப்படு கிறது.

அவ்விதமே ஸ்வே. 2 - 6 - 9 அந்த பிருஹ்மமே காரணம் - स कारणं करणाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः - பிருஹ்மமே காரணம். அவனே க்ரணங்களுக்கு அதிபதி யான ஜீவனுக்கும் அதிபதி; அவனுக்கு உற்பத்தி கிடை யாது. அவனைவிட மேலான அதிபர் யாருமில்லை. இவ் விதமாக பிருஹ்மம் ஜீவனுக்குப் பதியாகவும் காட்டப்படு கிறது (கரணுதிபதிக்கும்பதி);

இந்தப் பிரகாரம் ஒவ்வொரு சுருதியிலும் - ஸர்வத்ர - எல்லாவிடங்களிலும் பரபிருஹ்மமே ஸர்வ காரணத்வம் என்பது பிரஸித்தம். ஆகையாலே பரபிரும்மத்தினிட மிருந்து தோன்றியதாலும், அதிலே லயமடைவதாலும் அதனுல் ரக்ஷிக்கப்படுவதாலும் - அப்பேற்பட்ட பிருஹ் மாத்மகதயா - எல்லாப் பொருள்களுக்கும் ஆத்மாவாக விருக் கிறபடியால் - (எல்லாப் பொருள்களும் பிருஹ்மத்திற்கு சரீரமாகவிருக்கிறபடியால்) ஜகத்திற்கும் பிருஹ்மத்திற்கும் தாதாத்மியம் (ஒற்றுமை) கூறுவது உபபந்நம் (சரிதான்). ஆகையால் ஸர்வ பிரகாரம் ஸர்வ சரீரம் ஸர்வாத்மபூதம் பரப்பிருஹ்மம் அப்பேற்பட்ட பிருஹ்மத்தை சாந்தமடைந்த வனுக உபாஸிக்கட்டும் என்று சுருதியிலே கூறப்பட்ட தாலே, பரஸ்ய பிருஹ்மமே (ஸர்வாத்மகத்வம்) தான் ஆத்ம வாகவும் மற்றவை யாவும் அதற்குச் சரீரமாகவுமிருப்பதால், அந்த பிரும்மமே - ஸர்வாத்மகத்வத்தினுல் உபாஸிக்கப்பட வேண்டியது என்பது தெளிவு. அந்த உபாஸனத்தைத் தான் சுருதிகள் போதிக்கின்றபடியால் - பிரஸித்த உபதேச மாகும்.

(அது எப்படி ஸம்பவிக்கிறது என்பது மீண்டும் காட் டப்படுகிறது.) பரப்பிருஹ்மமே காரண அவஸ்தையிலும் காரிய அவஸ்தையிலும் - சூக்ஷ்ம ஸ்தூலசித் அசித் வஸ்துக் களாகிற சரீரத்தினுலே - அதற்கு பிருஹ்மம் ஆத்மாவாக

விருப்பதாலே - ஸர்வதா (சூக்ஷ்ம ஸ்தூல தசைகளிலே) பிருஹ்மம் ஸர்வாத்ம பூதமாகவிருக்கிறது. இந்த விதமாக ஜகத்திற்கும் பிருஹ்மத்திற்கும் தாதாத்மியம் (ஒற்றுமை) காட்டப்படுகிறது - எப்படிப்பட்ட பரபிருஹ்மம் - परस्य सकल हेयप्रत्यनीककल्याणगुणाकरत्वं न विरुध्यते प्रकारभूतशरीरगतानां दोषाणां प्रकारिणि आत्मनि अप्रसङ्गात् - என்கிற காரணத்தினாலே - அதாவது அதெப்படி முடியும் என்கிற மீண்டும் ஆட்சேபம் எழ - எல்லா வஸ்துக்களும் சரீரம் என்றால் - சேதநா சேதந பொருள்களைக் கொண்ட பிருஹ்மமே தோஷங்களை அடையக் கூடும் - என்கிற ஆக்ஷேபத்திற்கு சரீரியான பரமாத்மாவிற்கு அந்த தோஷங்கள் ஒட்டாது - தோஷங்கள் சரீரமாயிருக்கும் சேதநாசேதநங்களிடமே உள்ளன. ஆகையால் ஸர்வாத் மகத்வத்தாலே பரமாத்மா எல்லாப் பொருளுமாகக் கூறுவது பொருந்தும்.''

**விளக்கம்:**— மேலும் காரிய காரண அவஸ்தைகளில் - சரீரத்வாரா மாறுதல்கள் யேற்படுவதால் - ஆத்மாவாகிற ப்ருஹ்மத்திற்கு யாதொரு மாறுதல் இல்லை என்பதாகும். மேலும் தேந அநிதீதி ததந் - என்பதில் வ்யுத் புத்திகாண்க. இதம் ஸர்வம் பிருஹ்மம் என்ற ஸாமாநாதிகரண்ய நிர்தேச ஸித்தமான அபேதம் (ஒற்றுமை - தாதாத்மியம் ஜகத்திற்கும் பிருஹ்மத்திற்கும் உபாதாந உபாதேய பாவரூப கார்ய காரண பாவத்தாலும், சரீர ஆத்மபாவத்தாலும் இரண்டு பிரகாரம் விவக்ஷிதம். அதில் தஜ்ஜத்வதல்லத்வ ஹேதுகமான அபேதம் காரிய காரண பாவபிரயுக்தம். தத் (அந்த பிரும்மத்தின்) அதீன ஸ்திதி லயத்வாதி - அதீனத்தினால் சரீர ஆத்மபாவம். மேலும் மண்ணுண்டை தானே பானையாக பரிணமிப்பதுபோல பிருஹ்மம் தானே ஸ்வரூபேண ஜகத்தாகபரிணமிப்பது கிடையாது. பிருஹ்மம் நிர்விகாரம். சரீரதயா - சூக்ஷ்ம அவஸ்த்தை ஸ்தூல அவஸ்தையாக மாறுகிறது - முன்பு பாலன் - இப்போது யுவா - கிழவன் - இந்த மாறுதல்கள் சரீரத்திற்குத் தானே - ஆத்மாவுக்கல்ல - ஆகவே சரீரத்வார பரிணாமம் பிருஹ்மத்திற்கு யேற்படுகிறது. ஆகவே பிருஹ்மமே சூக்ஷ்ம சேத

நாசேதந சரீரகமும் ஸ்தூல சேதநா சேதந சரீரகமாய் கொண்டு-காரண கார்ய பாவத்தை அடைவதால் - பிரபஞ்சமும் பிருஹ்மமும் சரீர சரீரி பாவத்தையடைந்து நிற்கையால் இருவகையான அபேதம் காட்டப்படுகிறது. சரீரத் வாரா பரிணமம் விவக்ஷிதம் அதனுல் சரீர தோஷங்கள் சரீரியாகிற ஆத்மாவை - பிருஹ்மத்தைச் சேராது. ஸர்வமிதம் பிருஹ்ம - என்பதற்கு காணப்படுகிற காரிய பூததேவ மனுஷ்யாதி சேதநா சேதநாத்மகமான ஜகத்தை சரீரமாக வுடையது பரபிருஹ்மம் என்று பொருள் தேறுகிறது.)

**ஸ்ரீபாஷ்யம்:—**(தொடர்ச்சி) ஆகவே யாதொரு தோஷமில்லை. அதற்கு எதிராக - நிரதிசய ஐஸ்வர்யகுணங்களுள்ள பிருஹ்மம் - உபயலிங்காத் பிருஹ்மத்தின் பெருமை அதன் நியந்திருத்வம் ஸர்வபதித்வம் - ஏற்கனவே முந்தி சொல்லப்பட்ட பெருமைகள்யாவும்-பிரும்மத்திற்கு இரண்டு விதமாக விசேஷமாகக் காட்டப்படுகின்றன. ஆகையால் ஸர்வாந்தர்யாமியான பரபிரும்மம் ஜகத்காரணமாகவும், ஸர்வாத்மாவாகவும் ஆகிறது என்பதாயிற்று.

பூர்வபக்ஷியினுல் மேல் சொல்லப்பட்டது—பிரத்யகாத்மாவிற்கும் ஸர்வ பொருள்களுக்கும் தாதாத்மியம் (அபேதம்) சொல்வது பொருநதாது. ஒரு ஜீவன் மற்றொரு ஜீவனிலிருந்தும் ப்ரதி சரீரம் வேறுபட்டவன். ஒரு ஜீவன் மற்றொரு சரீரத்தோடுயிருக்கும் மற்றொரு ஜீவனுக ஆக முடியாது- விதவிதமான கர்மபலத்தினுல் யேற்பட்ட தேகம். ஆகவே முக்தன் விஷயத்திலும் கூட - அவன் ஸ்வரூபம் உபாதிகளிலிருந்து விடுபட்டு - அதனுலே ஆவிர்பாவமான குணங்களால் ஜகத்திற்கு தாதாத்ம்யம் (உலகை சரீரமாக உடைய நிலை என்று பொருள்) - சொல்லப்பட்டாலும் - ஜகஜ்ஜன்மஸ்திதிலயபிரளய காரணத்வம் ஜீவனுக்கு ஸம்பவிக்கமாட்டாது. பிற்பாடு முக்தனுக்கு போகத்தினுல் ஸாம்யமே ஒழிய जगत्व्यापारवर्जम् - இது பரமாத்மாவுக்கே சொந்தம் என்று சொல்லப்படுகிறது (சா மீ - 4 - 4 - 7) மீண்டும் இவ்விதம் சொல்வது சரியில்லை ஜீவனே காரணம்-ஏனெனில் ஜீவனின் உற்பத்திஸ்திதிலயம் ஜீவனுடைய

கர்மாவின் நிமித்தமாக - **जगज्जन्मस्थितिलयानां स एव कारणं**-அந்த ஜீவனே க்ாரணமாவதால், அவன் ஒருக்காலும் ஜகத்பதியாக ஆகமாட்டான். அவனுக்கும் ஜகத்திற்கும் தாதாத்மியம் ஒட்டாது. ஒரு சரீரத்தோடிருக்கும் ஜீவன் மற்றொரு சரீரத்தோடிருக்கும் மற்றொரு ஜீவனாக முடியாது. ஆகவே ஜீவனை எல்லாமாவதாகச் சொல்வது எவ்வகையிலும் ஒட்டாது. ஆதலால் பரமாத்மாவேதான் பிருஹ்ம சப்தத்தினால் அறியப்படுகிறான் (ஜீவனல்ல). இந்த வழிபிரகாரம் சூத்ரார்த்தம் சொல்வது பொருத்தமாகும். பெரியோர்களும் - சூக்ஷ்ம அறிவாளிகளும் இம்மாதிரியாக சூத்ரார்த்தம் சொல்வதை மிகவும் மதிக்கிறார்கள் - விருத்திக்காரர் போதாயனரும் **सर्व खल्विति सर्वात्मा ब्रह्मेशः** வாஸ்த்நவத்திலே இவையெல்லாம் (சா. உ. 3 - 14 - 1) என்பதற்கு அர்த்தம் பிரும்மம் இந்த வஸ்துக்களுக்கு ஆத்மாகவாக விருப்பதால் அவை சரீரமாக விருப்பதால் - ஸர்வாத்மா பிரும்மமே ஈச:- மேலானபதியாக விருக்கிறார். ஜகத்பதியாக விருக்கிறார். ஜகதீச:- என்பதாம்.



# அனுபந்தம்

மனோமயத்வாதி குணங்கள் - உபாஸ்யங்களாக ஓதப் பட்டவை - ஜீவாத்மாவினிடம் ஸம்பவிக்க மாட்டாது. அதற்கு விளக்கம் - மனோமயத்வம் பிராண சரீரத்துவம், பா (भा) ரூபத்வம் - ஸத்ய ஸங்கல்பத்வம் - ஆகாசாத் மகத்வம் - முதலானவை. அக்குணங்கள் - மனோமயத்வம் என்பதற்கு - ந சக்ஷுஷா க்ருஹ்யதே - நாபி வாசா - மநஸாது விசுத்தேந - இதில் உபதேசிக்கப்பட்டது யோக பரிசுத்த மனோக்ராஹ்யத்வம். ஆகவே இதில் ஹேய சம்பந்தம் இல்லாதது. பத்த ஜீவனுக்கு ஸம்பவிக்காது.

பிராண சரீரத்வம் - யஸ்ய ப்ராணச் சரீரம் என்று அந்தர்யாமி பிராஹ்மணத்திலே ஸித்தமான பிராணனுக்கு நியாமகத்வ ரூபமானது. அதே மாதிரி भारूपत्वं—आदित्य वर्ण तमस: परस्तात् - இத்யாதி - உயர்வற உயர்ந்த தேஜோ மய ஸ்வரூபம். ஸத்ய ஸங்கல்பம் - நினைத்ததை ஸாதிக்கக் கூடிய திறமை. ஆகாசாத் மகத்வம் - யஸ்ய ஆகாசஸ் சரீரம் - என்று அந்தர்யாமி பிராம்மணம் பிரஸித்தமாய் - ஆகாசத்திற்கு நியாமகத்வ ரூபமானது ஏற்பட்டது. இந்த அதிகரணத்தில் - இம்மாதிரி குணங்கள் அற்ப சக்தியுள்ள அணுபரிமாணமுள்ள - கர்ம வசிய ஜீவாத்மாவுக்கு ஸம்ப விக்க மாட்டா. அடுத்த சுருதியில் "ஏவமித: ப்ரேத்ய அபி ஸம்பவிதாஸ்மி-பிருஹ்மத்திற்கு ப்ராப்யத்வமும் ஜீவனுக்கு பிராப்த்ருத்வமும் சொல்லப்பட்டிருப்பதாலே - பிராப்யனும் பிராப்தாவும் வேறானபடியால் - இங்கு பிருஹ்ம சப்தம் ஜீவனைக் குறிக்காது. மேலும் ஏஷம ஆத்மா அந்தர்ஹ்ரு தயே - என்று ஜீவனை உபாஸகனாக-ஷஷ்டியந்த பதத்தாலே உபாஸ்யமான பிருஹ்மத்தை ஏஷ: என்கிற பிரதமாந்த பதத்தினால் நிர்தேசம், இதனால் பிருஹ்ம சப்தம் ஜீவனாக முடியாது. ஆகவே सर्वं खल्विदं ब्रह्म - என்று பிரகாரந்தமான பிருஹ்மம் ஜீவனில்லை ; பரமாத்மாவே யாகும்.

பரமாத்மா அபரிச்சின்னன், அவனை அந்தர் ஹ்ருதயே அணீயாந் வ்ரீஹேர் வா'' - என்று சொல்லப்பட்டதால், அல்ப பரிமாணம் பரமாத்மாவுக்குச் சரியா? சரீர சம்பந்தத்தால் யேற்படும் சுக துக்கானுபவம் பிரும்மத்திற்கு யேற்படுமே - இதற்குப் பரிகாரம் - பிருஹ்மம் உபாஸகர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டு - தன்னைத் தாழ்த்திக் கொண்டு உபாஸகனின் ஹ்ருதயத்தில் அற்ப பரிமாணமுகவிருக்கிருன் என்பது ஔபாதிகமாகும். இரண்டாவதாக - சரீரத்தினுள் புகுவதால் - கர்ம பல போகம் ஸம்பவிக்காது - ஜீவனுக்தான் பொருந்தும். அவன்தான் கர்ம பல போக்தா. பிரும்மத்தினிடம் ஒட்டாது. பரம புருஷன் சரீரத்தினுள் புகுந்திருப்பது நியமனார்த்தம் - ஸ்வய இச்சையினுலே. ஆகவே இரண்டு சங்கைகளும் பரிஹரிக்கப்பட்டன.

முதலடியில் सर्वं खलु ब्रह्म என்று தொடங்கி - முடிவில் एतद्ब्रह्म என்றபடியால் உபக்ரம உபஸம்ஹாரங்களில் பிருஹ்மமே இந்த சாண்டில்ய வித்யையில் சொல்லப்பட்டது. अप्राणोऽह्यमनाः என்றது ஜீவனைப் போல பிருஹ்மம் பிராணனைக்கொண்டு உயிர் வாழ்வதில்லை என்பதை தெரிவிக்க வந்ததே யன்றி - பிராணனையும் கட்டுப்படுத்தும் சக்தி உண்டு பிருஹ்மத்திற்கு - என்பதை இது தடுக்காது! என சித்தாந்தம்.

பரமாத்மா ஜீவனுக்கு அவனவன் கர்மானுஸாரமாகப் பலனளிப்பவன் - பல பல விதைகளில் குணங்கள் மாருமல்- செடிகள் வளர்ந்து - அதே தன்மையுடனிருந்தாலும் - விதைகள் வளர பொதுக்காரணம்- ஜலம் உஷ்ணம் எப்படித் தேவையோ - அப்படி ஜீவ கர்மங்கள் பலனைக் கொடுக்க - எம்பெருமான் அவசியம். सर्वं என்பது - கார்யமான ஜகத். ஆயினும் உலகின் தோஷங்கள் பரமாத்மாவைச் சேராது. முக்த தசையில்கூட ஜீவனுக்கு உலகைச் சரீரமாக உடைய நிலை (பரமாத்மாவுக்குப் போல) ஜீவனுக்கு யேற்படாது - ஜகத் வ்யாபார வர்ஜம் இத்யாதிகளால்.) ஆகவே உபாஸகன் ஜீவன் வேறு-உபாஸ்யமான பிருஹ்மம் வேறு.) கலு-சப்தம் பிரஸித்திலை - மற்ற சுருதிகளில் முக்கியமாகக்

காட்டப்பட்ட பிரஸித்தி - सर्वत्रेति - இந்த பதம் பிரதிக்ஞா கடகம் வாச்யம் - तत् सर्वं खल्विति वाक्यस्य विषयैत्व एव घटते। ஸப்தமி நிர்தேசேன प्रपञ्चस्य ब्रह्मणश्चैक्य रूपं तादात्म्यं वारयति, इदमिति निर्दिष्टाचेतनदेह तादात्म्यस्य प्रत्यगात्मन्यसंभवात् पूर्वपक्षिणामपिसर्वमित्यस्य सर्वत्रात्मतया स्थितमित्येवार्थो वर्णनीय: ஸித்தாந்தி சொல்வது चेतनाचेतन सर्वग्रहणेन सम्यग घटत इति च ज्ञापयति—सर्वात्वसर्वजन्मास्थितिलयहेतुत्व रूपप्रसिद्धार्थोपदेशादि इति சூத்ரார்த்தம். अत एव च स ब्रह्म- इति सूत्रात् ब्रह्मशब्दाकर्ष: प्राणशरीरत्वं - न हि प्राण: शरीरं तस्य। प्राण: शरीरे यस्येति विग्रह: क्लिष्ट: —உத்தமூர்ஸ்வாமி.

विवक्षितगुणोपपत्तेश्च (1 - 2 - 2)

விவக்ஷிதகுணோபபத்தேச்ச - இங்கு சொல்லப்படும் குணங்கள் பொருந்த வேண்டுமாகையாலே - பரமாத்மாவே சொல்லப்படுகிறான்—(ஜீவனல்ல).

இந்த சுருதியில் சொல்லப்படும் மஹிமையாதி குணங்கள் - பரமாத்மாவிற்கே பொருந்தும் - मनोमय: प्राणशरीरो भारूप: सत्यसङ्कल्प आकाशात्मा सर्वकर्मा सर्वकाम: सर्वगन्ध: सर्वरस: सर्वमिदमभ्यात्तोऽवाक्यनादर:—அவன் (பரமாத்மா) விசுத்தமான மனத்தால் அறியத்தக்கவன் - பிராணனைச் சரீரமாக உடையவன் - தேஜோமயமானவன் - ஸத்யஸங்கல்பன் ஆகாசம் போன்ற சூக்ஷ்ம ஸ்வரூபத்தை உடையவன் - எல்லாக் காரியங்களையும் செய்பவன்-விரும்பப்படும் எல்லாப் பொருள்களையும் ஐஸ்வர்யங்களை உடையவன் - எல்லா நறுமணம் நறுசுவை உடைய (பரமாத்மா) இந்த எல்லாக் கல்யாண குணங்களைக் கொண்டவன். ஒருவரை ஆஸ்ரயிக்க வேண்டிய அவசியமில்லாதவன் - ஆகையால் யாவரிடமும் வாய்ப்பேச்சில்லாதவன் - என்று பல குணங்கள் சொல்லப்பட்டன. मनोमय: பரிசுத்தமான மனம் ஒன்றினால் கிரஹிக்கத் தகுந்தவன் - விவேக விமோகாதி ஸாதனங்களாகிற ஏழு உபாயங்களால் (பரமாத்மா) கிரஹிக்கத் தக்கவன் - விவேகம் - (விமோகம், அப்யாஸம், கிரியை - கல்யாண (மங்களங்கள்) அனஸாத -

அனுத்தர்ஷம் - இவை ஆத்ம குணங்கள் - பிரும்ம வித்யா - 2ம் பாகம் 33 பக்கம் பார்க்கவும்) இந்த ஆத்ம குணங்களால் சுத்தமான மனத்தினுல் கிரஹிக்கப்படுகிருன். அப்பேற்பட்ட பரமாத்மா - கல்யாண குணச் சேர்க்கைகளுடனும் - ஹேய குணங்கள் இல்லாதவன் - தனிப்பட்ட பெருமையுடையவன் - ஸகல வஸ்துக்களிலும் வேறுபட்ட விலக்ஷண ஸ்வரூபம் ஸ்வபாவம் சொல்லப்படுகிறது. மலின மனங்களால் மலின (அழுக்கடைந்த) பொருள்களே அறியப்படுகின்றன. பர மாத்மா அவ்விதமல்ல. பிராண சரீர: - ஜகத்திலுள்ள எல்லாப் பிராணிகளின் பிராணன்களைத் தரிக்கிறவன் - சரீர தயா - ; प्राणो यस्य शरीरं - எவனுக்கு பிராணன் சரீரமாக விடுக்கிறதோ - அதனுல் இவன் ஆத்மாவாகிருன் - அதனுல் आधेयं विधेयं शेषभूतं च स प्राणशरीर: - எல்லாம் பகவத் அதீனம். ஆதே யத்வம் - விதேயத்வம் - (ஒருவனுக்கு அடங்கியது) சேஷத்வம் - இத்யாதி சரீரத்தின் லக்ஷணங்கள் - அந்த சரீரங்களைத் தாங்குகிறவன் இத்தகைய பிராண சரீர பரமாத்மா. சரீர சப்த ப்ரவிருத்தி நிமித்தங்கள் காட்டப்படு கின்றன. அந்தர்யாமி பிராம்மணத்தில் சொல்லப்பட்ட பிராணனுக்கு நியாமகத்வ ரூபமானது; பாரூபத்வமாவது பிரஸித்தமான ஒளியோடு கூடிய விக்ரஹமுடைமை - அப்ராகிருத அசாதாரண நிரதிசய கல்யாணாதி திவ்ய ரூபத்வம்(திவ்ய மங்கள ரூபம்) - நிரதிசய தீப்தி: - பிரகாசம் உள்ளவர் என்று அர்த்தம். सत्यसंकल्प: अप्रतिहतसङ्कल्प: - பலித்தே தீரும்படி ஸங்கல்பம் கொண்டவர். आकाशात्मक: - பிரஸித்த ஆகாசத்தைப் போல ஸூக்ஷ்ம அவஸ்தையிலும் இருப்பவர் - (உபாஸனு நிமித்தமாக), சுத்தமாகவும் இருப்பவர் - ஆகா ஸத்திற்கு நியாமகத்வரூபம். ஆகாசத்திற்கு ஆத்மாவாக வும் ஆகாசம் சரீரமாகவுமிருப்பவர். இந்த ஆகாசமே மற்ற பொருள்களை உண்டாக்கியது. பூத கணங்களின் தோற்றம் பிரசித்த ஆகாசத்திலிருந்து ஏற்பட்டது. அப் பேற்பட்ட ஆகாசத்தைத் தனது சரீரமாகக் கொண்ட பரமாத்மா; மேலும் அவர் ஆகாசத்தைப் போலத்தானும் பிர காசித்துக் கொண்டும், மற்ற வஸ்துக்களையும் பிரகாசிக்கச் செய்கிருர். நிகில ஜகத் காரணத்வம் - எல்லாவஸ்துக் .

களையும் விட மிகப் பெரியதாக விருப்பது - எல்லோரும் அவனையே அடைக்கலமாகப் பற்றியிருப்பது - இவைகள் அடையாளங்கள். ஆகவே பிரசித்த ஆகாசத்தைத் தனது சரீரமாகக் கொண்ட பரமாத்மா - அவன் தான் ஈக்ஷணம் செய்தான் · ஸ்ருஷ்டிப்பேன் என்று நினைத்தான். ஆகவே பிரும்மமே ஆகாச சப்தத்தால் காட்டப்படுகிறது. (லிங்கங் கள் சொல்லப்பட்டன)

ஸர்வ கர்மா - காரியம் செய்யப்படுவதாலே கர்மா - பரமாத்மாவே ஸர்வகர்மஸமாராத்யன் - கர்மஸ்வரூபமாக வும், கர்மங்களின் பலன்களையும் அளிப்பவனாக விருக்கிறான். அவனுடைய பிரியத்தை உத்தேசித்து ஸர்வ கர்மங்களும் செய்யப்படுகின்றன. அதேபடி ஸர்வகாம:—இச்சிப்பதால் காமம் - அவனையே காமம் என்கிறபதம் சொல்கிறது. ஆசைப்படத்தக்கவன் (கல்யாண குணங்களாலேயும் - ஹேயகுணங்களில்லாதபடியாலும் - திவ்ய மங்கள ரூபம் அதி ஆச்சரியகரமாயும் வெகு அழகாயுமுள்ளதான படி யால். போக்ய போகோப கரணங்கள்-அவைகள் பரிசுத்தம்- எல்லா விதங்களிலும் பரிசுத்தமானவன் - सर्वगन्धः सर्वरसः எல்லா நறுமணங்களும் - எல்லா நறுசுவைகளும் அவனே கடவல்லியில் अशब्दमस्पर्शम् (கட. 1-3-15) அவனுக்கு லக்ஷ ணம் - ஸ்பர்சித்தினாலே விஷயமாக மாட்டான். அதாவது பிராக்ருத கந்தரஸாதிகள் அவன் விஷயத்தில் நிஷேதிக்கப் பட்டிருக்கின்றன. அதனால் அப்ராக்ருத கந்தங்களையும், ரஸங்களையும் உடையவர் - அவனுக்கே உரித்தவை - நிர வத்யன் (தோஷம் - களங்கமில்லாதவன் நிரதிசய கல்யாண குணங்களுக்கு இருப்பிடம். தன்னுடைய போகத்திற்க்காகவே அவருடைய இச்சைக்காகவே ஸர்வவிதங்களிலும் கந்தங்கள் ரஸங்களை உடையவர். सर्वमिदमभ्यात्तः—அவர் இவை எல்லா வற்றையும் தனக்கே உரிமையாக்கிக் கொண்டார். இந்த கல்யாண குணங்களால் யேற்படும் - ஸர்வ கந்த ஸர்வ ரஸங்களை தனக்கே ஸ்வீகரித்துக் கொண்டார். अभ्यात्तः— தனக்கே உரிமையாக்கிக் கொண்டார் என்கிற அர்த்தம் கொண்ட பதத்தில் - நாம் தெரிந்து கொள்ள வேண்டியது

4

"க்த" என்கிற - भुक्ता ब्राह्मणा: (பிராம்மணர்கள் அவைகளைச் சாப்பிட்டார்கள் - "என்கிற அர்த்தத்தைப் போல கர்த்தரி க்த:—கர்த்தாவிஷயமாக - எடுத்துக் கொள்ள வேண்டியது. (புக்தம் - சாப்பிடப்பட்டது. முன் சேர்க்கப்பட்ட பிரத்யயம் புக்த - எவன் ஒருவன் சாப்பிட்டிருக்கிறனே - என்கிறபடி அர்த்தம்); அவாக்கீ - अवाकी - வாக் - பேச்சு; பேச்சில்லாத வன் ஏன் அவர் அவாக்கீயாக விருக்க வேண்டும் आह-अनादार அவருக்கு கவலைகள் இல்லை - அவாப்தஸமஸ்தகாமன் எல்லா ஆசைகளையும் அடையப் பெற்றவர். அதனால் கவலை களில்லை. இந்தக் காரணத்தினால் அவர் பேசுவதில்லை அவரே अनादर - யாருக்கும் பயப்பட வேண்டியதில்லை. யாரையும் உதவிக்கு கேட்க வேண்டியதில்லை. அவரே ஸர்வ ஸாம் ராட். அவாப்த ஸமஸ்த காமத்வத்தினாலே - யாரையும் எதற்கும் யாசிக்க வேண்டியதில்லை. பிரும்மா முதற்கொண்டு ஸ்தம்பம் வரை - அதனாலே தானே திருப்தி அடைந்தவனாக, பேச்சில்லாமலிருக்கிறன். இம்மாதிரியான ஆதார ரஹிதன் அஜல்பாக:—ஜல்பம்-யுக்தி - இவைகளில்லாதவர். பரிபூர்ண ஐஸ்வர்யம் நிரம்பியிருக்கிறபடியால் - பிரும்மாதி ஸ்தம்ப பர்யந்தம் - நிகிலஜகத் - ஒரு புல்லுக்கு சமானமாக - மனம் அடங்கி திருப்தியுள்ளவனாக விருக்கிறன். இப்பேற்பட்ட கல்யாண குணங்கள் இந்த வாக்ய பிரகரணத்திலே ஓதப் படுவதால் - இவை பரமாத்மாவையே குறித்துக் காட்டு கின்றன. ஜீவனுக்கு பொருந்தாது. ஆகவே பரமாத்மாவே ஜகத்காரணம்.

## Sutra - 3 - अनुपपत्तेस्तु न शारीरः (1-2-3)

அநுபபத்தே: து - முற்கூறிய குணங்கள் ஜீவனிடம் பொருந்தாது. ஆகையால் ந சாரீர:—இவன் ஜீவன் ஆக மாட்டான். (முன் சூத்திரத்தில் ஓதப்பட்ட கல்யாணகுணங் கள் சரீர சம்பந்தமுள்ள ஜீவனிடம் பொருந்தா அதனாலும் இந்த பிரகரணத்திலும் சொல்லப்படுபவன் பரம் பொருளே யாவான்-எனக்கருத்து) பரமாத்மா அப்பேற்பட்ட குண ஸாகரம், இவைகளை சீர் தூக்கி நன்றாக ஆராய்ந்து பார்ப்பவர் களுக்கு - யாதொரு சந்தேகம் தோன்றாது. அதாவது இந்த

வாக்ய பிரகரணத்திலே - ஜீவன் தான் சொல்லப்பட்டிருக்கிறுன் என்று - தோன்றுது. ஏனெனில் சரீர சம்பந்தமுள்ளவனும், அபரிமித துக்க சம்பந்த யோகமுள்ளவனும், பக்தன் முக்தன் என்கிற பிரிவுகளை உடையவனும் - ஒரு சாதாரண - அற்பசக்தி அறிவுள்ள ஒரு புழு பூச்சியைப் போல விருக்கும் ஜீவனுக்கு இம்மாதிரி கல்யாண குணங்கள் லவலேசமும் இருக்காது.

## Sutra - 4 - कर्मकर्तृव्यपदेशाश्च (1-2-4)

கர்ம கர்த்ருவ்யபதே சாச்ச - பகவானை அடையப்படுபவனுகவும் (பிராப்யன்)-ஜீவனை அடைபவனுகவும் (பிராப்தாவாகவும்) சொல்லப்படுவதாலே - இவன் பரம் பொருளே.

एतमित. प्रेत्याभिसंभवितास्मि - சா. உ (3-1-4)

இந்த உலகிலிருந்து கிளம்பி, நான் அவனை யடைகிறேன் - இதிலிருந்து மேலான பரபிரும்மம் அடையப்படும் வஸ்துவாகச் சொல்லப்படுகிறது. ஜீவனை அடைபவனுகவும் காட்டப்படுகிறது (ஜீவனின் இருநிலைகள் - பத்தன் - முக்தன் ஸம்சாரதசை முக்ததசை காட்டப்படுகிறது.) ஆகவே ஜீவன் உபாஸகனுகவும் அடையப்படும் மேலான பரபிரும்மம் உபாஸ்யப் பொருளாகவும் ஓதப்படுகிறது. ஆகவே பிரும்மம் வேறு - கர்மகர்த்ரு வ்யபதேசம் சொல்லப்பட்டதாகும்.

## Sutra 5—शब्दविशेषात् (1-2-5)

சப்த விசேஷாத் - ஒரே பிரகரணத்திலே - வேற்றுமை வித்யாஸத்திஞல் - ஜீவன் வேறு பரமன் வேறு என்று காட்டப்படுகிறது.

एष म आत्मा अन्तर्हृदये (சா. உ. 3-14-3) இருதயத்திலுள்ள சிறிய ஆகாசத்தில் இருக்குமிவன் எனக்கு ஆத்மா என்று இப்பிரகரணத்திலே உள்ள மற்றொரு வாக்கியத்தில் "மே" என்று ஜீவனை ஆறுவது வேற்மையிலும் - ஆத்மா - என்று பரமாத்மாவை முதல் வேற்றுமையிலும் கூறியிருக்கிறபடி

யால் - முன்னவனுக்கு (ஜீவன்) பின்னவனை (பரமனை) அந்தர்யாமியாய் சொல்லி - ஜீவனிலும் வேறுபட்டவன் பரமாத்மா என்று காட்டப்பட்டதாகும்.

एषमे आत्माऽन्तर्हृदये - என் ஹ்ருதயவாசி எனக்கு ஆத்மா என்று சாரீர: (ஜீவனை) 6ம் வேற்றுமையிலும் உபாயமாகிற ஆத்மா (பரமாத்மாவை) முதற் வேற்றுமையினுலும் நிர்தேசிக்கப்பட்டது. இந்த விதமாக - இங்கே அதே போல (சாண்டில்ய வித்யையில்) - ஜீவபிருஹ்ம விஷயசம்பந்தத்தில் - சுருதிகளிலே காணப்படுகிறது - ஸமான பிரகரணத்திலே அதாவது அக்னிரஹஸ்யம் (வாஜஸேநயர்கள்) சப்த விசேஷம் ஜீவபிரும்ம விஷய சம்பந்தத்தில் காட்டப்படுகிறது. அக்னி ரஹஸ்யம் - यथा व्रीहिर्वा यवोवा श्यामाको वा श्यामाकतण्डुलो वा, एवमयमन्तरात्मन् पुरुषो हिरण्मय:; यथा ज्योतिरधूमम् - எந்த (பரமாத்மா) ஜீவனுக்குள் (அந்த ராத்மங்நாக) விருக்கிருஞே - அவன் யவதானியம் - பார்லி - அரிசி. பருப்பு (அளவு பரிமாணமாக சூக்ஷ்மமாக விருக்கிருஞே, அந்த ஹ்ருதய வாசி புருஷஞகவிருக்கிருன். அவன் ஹிரண்மயமாக (தங்கமாக) விருக்கிருன். புகையில்லாத நெருப்பைப் போல கொழுந்து விட்டு எரிகிறுப்போல விருக்கிருன். (சத. பிரா. 10 - 6 - 3 - 2). இங்கே ஜீவனை சரீரத்தினுள் அந்தராத்மந் என்கிற பதத்திஞல் - 7ம் வேற்றுமையிலும் உபாஸ்யப் பொருளாகிற பரமாத்மா - புருஷன் என்றும் ஹிரண்மயன் என்றும் முதல் வேற்றுமையில் வேருகக் காட்டப்பட்டதாகும். ஆகையால் மேலான பரபிரும்மமே உபாஸனைக்கு உரிய பொருளாகும். உபாஸகனைவிட வேறு என்றும் தெளிவு.

## Sutra 6—स्मृतेश्च (1-2-6)

ஸ்ம்ருதியிலும் இவன் பரமாத்மாவே. கீதை 15-19. सर्वस्य चाहं हृदि संनिविष्टोमत्त: स्मृतिर्ज्ञानमपोहनं च ஞானம் உண்டாகிறஹ்ருதயத்தில் - எல்லாப் பிராணிகளுடைய ஹ்ருதயத்தில் நான் இருந்து கொண்டு அவை எல்லாவற்றையும் என் ஸங்கல்பத்திஞல் நியமிக்கிறேன். அதனுல் நான் அவை

எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக விருக்கிறேன். ஆதலால் என்னிடமிருந்தே எல்லாப் பிராணிகளுக்கும் ஸ்மிருதி - நினைவு (ஞானம்) மறப்பது - ஊஹம் முதலிய யாவும் என்னாலேயே உண்டாகின்றன. மீண்டும் கீதை 15-19- यो मामेवमसंमूढो जानाति पुरुषोत्तमम् புருஷோத்தமமுன என்னை அஸம் மூட:— மயக்கமின்றி ஸர்வவிலக்ஷணனாக அறிபவன் - பகவத் ஸ்வரூபத்தை - குணங்களை நன்கு அறிகிறவன் - அதே மாதிரி தத்வத்ரயங்களில் சேதன அசேதன வஸ்துக்களின் ஸ்வருபங்களையும் அறிந்து - இவைகளைக் காட்டிலும் புருஷோத்தமனாகிற என்னை வேறாகவும் - என்னை அடைவதற்கு உபாயமாக என்னையே எண்ணிக் கொண்டு - அதன்படி உபாஸித்து - எல்லாவற்றாலும் என்னை வந்தடைகிறான். ஆகவே புருஷோத்தமனே உபாஸ்யம். மீண்டும் கீதையில் 18-61 ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुनतिष्ठति, भ्रामयन् सर्वभूतानि-यन्त्रारूढानिमायया । तमेव शरणं गच्छ என்று சாரீரம் (ஜீவன்) உபாஸகன் - பரமாத்மா உபாஸ்யமான பொருள் என்று ஸ்மிருதி காட்டுகிறது. (18 - 61 - அர்ஜுனா - எல்லாவற்றையும் நியமிக்கிற வாசுதேவன் எல்லாப் பிராணிகளுடையவும் - அறிவுக்கு மூல காரணமாகிய ஞானம் உண்டாகிற ஹ்ருதயத்தில் உட்கார்ந்து கொண்டு - எல்லோரையும் யந்திரம் போல ஆட்டி வைக்கிறான் - சூத்திரதாரியாக ஆத்மாவில் இருந்து கொண்டு ஆட்டிப் படைக்கிறான். இந்த மாயையைப் போக்குவதற்கு என்னை வந்து சரணமடைவாய் - உன் பிரயத்னத்தால் முடியாது. எல்லாவற்றையும் நியமிக்கிற அந்தர் யாமியையே ஸர்வபாவேந - சரணமாகப் பற்று.

## Sutra—7. अर्भकौकस्त्वात् तद्व्यपदेशाच्चनेति चेन्न निचाय्यत्वादेवं व्योमवच्च - (1-2-7)

அர்ப்ப கௌகஸ்த்வாத் - சிறியதான ஹ்ருதயத்தை யிருப்பிடமாகக் கொண்டவனுகையாலும் - தத்வ்ய பதேஸாத்ச சிறியவன் என்று ஓதுகையாலும் - ந இதிசேத் இவன் பரமாத்மாவாக ஆகமாட்டான் எனில், ந - இவ்விதம் சரியில்லை - நிசாய்யத்வாத் யேவம் - இருதயத்தில் உள்ளவு

ஞக - உபாஸனை நிமித்தம் - உபாஸிப்பதற்கு இப்படி ஓதப் படுகிறது. வ்யோமவத் ச - ஆகாசத்தைப் போல பெரியவ ஞகவும் கூறப்படுகிருன்.

அல்ப ஆயதனத்வம் - அற்ப (சிறிய) வீடு - யிருப் பிடம், என்கிற அர்த்தம். அர்ப்ப கௌ கஸ்துவம் - அந்த இருப்பிடத்தைக் கொண்டு வஸ்துவும் சிறியது - அதுமாதிரி சிறியதான ஹ்ருதயத்தை ஒட்டி - அதில் வசிப்பவனும் சிறியவன் என்று சொல்வது - தத்வ்யபதேச:— இதஞல் அல்பத்வ வ்யபதேசம் - போதிப்பது பரமாத்மாவுக்குச் சரியா? एष म आत्माऽन्तर्हृदये - என் ஹ்ருதயத்தில் வசிப்பவன்- அவன் எனக்கு ஆத்மா (சா. 3-14-3 & 4); அவனுடைய உருவம் அணுவைப்போல சிறியதாக விருக்கிறது - (எது போல) अणीयान् व्रीहेर्वा यवाद्वा'' - வ்ரீஹிதானியமோ - அரிசியோ - பார்லியைப் போலவோ மிகச் சிறியது-இத்யாதி களால் அணுபரிமாணத்வம் ஜீவனுக்குப் பேசப்படுகிறது. ஸ்வருபத்திஞல் வ்யபதேசமிருப்பதாலே - இது பரமாத்மா வல்ல, ஆனல் அது ஜீவாத்மாவேயாகும். அதன்படி - இந்த சுருதியிலும் மு. 1-1-6 - सर्वगतं सूक्ष्मं तदव्ययं यद् भूतयोनिं परिपश्यन्ति धीराः - என்பவைகளால் - ஞானிகள் அவனைப் பார்க்கிருர்கள். எங்கும் நிறம்பி செல்பவனுகவும், அதி சூக்ஷ்மமாயும், அவனே எல்லாப் பூதங்களுக்கும் உற்பத்தி ஸ்தானமாகவும் (பார்க்கிருர்கள்); இதேமாதிரி இன்னும் சில சுருதிகளிமே - பரமாத்மாவினுடைய அபரிச்சின்ன த்வம் அளவிட முடியாதபடி இருப்பவஞக ஓதியிருப்ப தாலும், அதேமாதிரி ஜீவனுக்கு, ஜீவனுடைய பரிமாண அளவு அங்குசத்தின் நுணியைப் போல மிகச் சிறிய தாகவும் சொல்லப்பட்டிருப்பது - காரணமாக சந்தேகம் எழலாம். பரமாத்மாவை அபரிச்சின்னஞக வோதியிருப்ப தற்கு முரணுக இந்த பிரகரணத்தில் ஏஷம ஆத்மா அந்தர் ஹ்ருதயே அணீயாந் - வ்ரீஹிர்வா - இத்யாதிகளால் சொல் லப்பட்டதால் - ஹ்ருதயரூபமான அல்ப தேசத்திலிருப்பும் அதற்குத் தகுந்தாற்போல அல்ப பரிமாணமும் (பரமாத்மா

வுக்குப் பொருந்தாதே. அதேபடி - ஜீவனுக்கு ஆராக்ர மாத்திரம் (பரிமாணம்) என்கிற வ்யபதேசமிருக்கிறதே.

இவ்விரண்டு சங்கைகளுக்கு பரிஹாரம் சொல்லப்படு கிறது. அவ்விதமில்லை - பரமாத்மாவே அணுஸ்வரூபமாக சூக்ஷ்மதசையை அடைகிறான் - உபாஸகனின் நிமித்தம். அவனால் அறியப்பட வேண்டியவனாகையால்; அதனால் அது அவருடைய இயற்கையான ஸ்வரூப மல்ல. அவர் ஆகாயத்தைப் போல மிகப் பெரியவராக விருக்கிறார் என்று **ज्यायान पृथिव्या: ज्यायानन्तरिक्षात् ज्यायान् दिवो ज्यायानेभ्यो लोकेभ्य: इति** அவர் பூமியைவிட பெரியதாகவும் - அந்தரிக்ஷத்தைவிடப் பெரியதாகவும் - ஸ்வர்க்கலோகத்தையும் விட மிகப் பெரிய தாயும் மற்ற எல்லா உலகங்களையும் விட மிகப்பெரியவராக விருக்கிறார் - என்கிறபடி வ்யபதேசத்தினால் பரமாத்மாவின் ஸ்வாபாவிகமஹத்வம் பேசப்படுகிறது. அதனால் உபாஸ கனை அனுக்ரஹிக்க - அவர் அல்ப உருவத்தை வஹிக்கிறார் அவனுடைய ஹ்ருதயத்தில் ஸந்நிஹிதனாயிருந்து கொண்டு அல்ப பரிமாணனாயிருப்பது-ஒள பாதிகமாகும், அனுஸந்தா னார்த்தமாக இங்கனே ஏற்படுகிறது.

சரி, அவ்விதமாயின்-**सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत** ஒருவன் சாந்தமடைந்தவனாக உபாஸிக்கட்டும் - அந்த பிரும்மத்தை ஸர்வகாரணமாக (ஆக்கல் அழித்தல் அளித் தல் இத்யாதிகளுக்கு) உபாஸிக்கட்டும் என்று ஸர்வ உத் பத்தி பிரளய காரணத்தினால்-ஸர்வ பொருள்களுக்கும் ஆத் மாவாக விருப்பதாலே - ஒவ்வொரு பொருளிலும் அனுப்ர வேசம் செய்திருக்கிறபடியால் - ஸர்வ ஆத்மாவாகவும் - விருக்கிறார் என்று உபாஸகன் பிரும்மத்தை உபாஸிக்க வேண்டியது என்று விதிக்கப்பட்டிருக்கிறது. அவ்வித மிருக்க - இந்த சுருதியிலே - **अथ खलु क्रतुमय: पुरुष:** - இப்போது இந்த புருஷன் க்ருதுமயனாக (உபாஸனைமயனாக) விருக் கிறான். எவ்விதமெனில் யதாக்ருது நியாயப்படி - இந்த உலகில் எவ்விதம் உபாஸிக்கிறானோ-அதேபிரகாரம் அதையே பலனாக - அவன் இறந்த பின்புமடைகிறான் - (சா.உ.3-14-1)

(यथा क्रतुरस्मिल्लोके पुरुषो भवति, तथेतः प्रेत्य भवति) என்று உபா ஸனுப்ரகாரம் பலன் அடையப்படுகிறது என்று சுட்டிக் காட்டி—

அதே மாதிரி பிறகு இந்த சுருதி வாக்யத்தாலே - स क्रतुं कुर्वीत அவன் க்ருதுவை உபாஸிக்கட்டும் - உபாஸனு விதி மீண்டும் வற்புறுத்தப்பட்டு - (எதற்காகவெனில்) அதிகாரபூர்வமாக உபாஸ்ய பொருளின் குணங்களை விமர் சிக்கிறது - அதாவது பரமாத்மாவின் குணங்களைக்காட்டி உபாஸனை செய்யச் சொல்கிறது. அதற்குப் பிறகு - இந்த சுருதியினுலே - मनोमयः प्राणशरीरोभारूपः सत्यसंकल्प आकाशात्मा सर्वकर्मा सर्वकामः सर्वगन्धः सर्वरसः सर्वमिदमभ्यात्तोऽवाक्यनादरः (அர்த் தம் முன்பு கூறப்பட்டுள்ளது - அதைப்பார்க்கவும் சா. உ. 3-14-2) இம்மாதிரி ஜகதைஸ்வர்யத்துடன் கூடிய வரும் - (அதாவது ஸர்வ லோகாதிபதி என்கிற ஐஸ்வர்யம் கூடிய வரும்). ஸ்வரூபமாகவே மேற்சொல்லப்பட்ட மனுேமயாதி குணங்களை உடையவருமான பரமாத்மா என்றும் ஓதப் பட்டது அப்பேற்பட்ட மஹத்வம் பொருந்தியவர் - एषम आत्माऽन्तर्हृदयेऽणीयान् व्रीहेर्वा यवाद्वासर्षपाद्वा - (கடுகு அது போல சிறியது) श्यामाकाद्वा श्यामाक तण्डुलाद्वा (அரிசியைப்போல) - என்று உபாஸகனுடைய ஹ்ருதயத்திலே அணுஸ்வரூபமாக விருக்கிறுர். இந்த விதமாக விருக்கும் உபாஸகனுடைய ஆத்மாவாக அந்தர் ஹ்ருதயத்திலே விருக்கிற படியால் உபாஸகர்களின் அனுக்ரஹத்தை முன்னிட்டு உபாஸகர் களின் ஹ்ருதயத்தில் ஸந்நிஹிதனுக விருந்து கொண்டு அல்ப பரிமாணமாகப் பரமாத்மா விருப்பது ஔபாதிகம் - என்று சொல்லிவிட்டு மேலும் சுருதி சொல்கிறது. एषम आत्माऽन्तर्हृदये ज्यायान् पृथिव्या ज्यायानन्तरिक्षात् ज्यायान् दिवो ज्यायानेभ्यः लोकेभ्यः सर्वकर्मा सर्वकामः सर्वगन्धः सर्वरसः सर्वमिदमभ्यात्तोऽवाक्य नादरः — அந்த பரமாத்மா ஹ்ருதயத்தினுள்ளே எனக்கு ஆத்மாவாகவும் - அவர் பூமிக்குப் பெரியவராகவும், அந்தரிக்ஷத்திற்கும்-ஸ்வர்க்கலோகத்திற்கும் எல்லா உலகங் களுக்கும் பெரியவராகவுமிருக்கிறுர்; அவர் ஸர்வ கர்ம ஸமா

ராத்யனுகவும் - ஸர்வகாமங்களை உடையவராயும் - ஸர்வ கந்த ஸர்வ ரஸங்களாகவும் - மேற்சொல்லப்பட்ட எல்லாக் குணங்களையும் தனக்கே உரிமையாக்கிக் கொண்டவராயும்- பேச்சில்லாதவராகவும் - கவலையில்லாதவராகவும் (இவை களின் விளக்கம் முன்பே கொடுக்கப்பட்டுள்ளது) விருக் கிறார். (சா.உ. III - 14-3&4);

இவ்விதமாக அந்தர் ஹ்ருதய அவஸ்தித உபாஸ்யமான பரம் பொருளை அடைய வேண்டியது-என்று காட்டி விட்டு **एष म आत्माऽन्तर्हृदये एतद्ब्रह्म**—இந்த பரமாத்மாவே என் ஹ்ருத யத்திலிருக்கும் என் ஆத்மா - அவரே பிருஹ்மம் என்று சொல்லி (சா.உ.III - 14 - 4); அப்பேறப்பட்ட பிரும்மத்தை இடைவிடாது உபாஸிக்கப் படவேண்டியது என்றும்; அதாவது அந்த பிருஹ்மம் மேற்சொல்லப்பட்ட குணங்களை உடையவராகவும் - பரமகாருண்யத்தினுலும் - உபாஸகர் களை ரக்ஷிக்கும் பொருட்டு ஹ்ருதயத்தில் ஸங்கிஹிதருக - தன்னைத் தாழ்த்திக் கொண்டு - அனுஸந்தானத்திற்காக ஓதப்படுகின்ற தத்தனையும்.

மேலும் இந்தக் கருத்து வலியுறுத்தப்படுகிறது. இந்த சுருதியினுலே-**एतमितः प्रेत्याभिसंभवितास्मि**-(சா. உ. 3-14-4) "இந்த உலகிலிருந்து புறப்பட்டு - நான் அவனை (பரமாத்மாவை) அடைகிறேன்—எதை உபாஸித்தேனே - அதையே பலனுக அடைகிறேன்" என்கிற புத்தி நிச்சயத்தினுலே உபாஸனை யின் பலனில் ப்ராப்தி நிச்சயித்து அனுஸந்தானம் செய் கிறான் - என்று ஓதிவிட்டு; கடைசியாக இந்த சுருதியினுலே **इति यस्य स्याद् अद्धा न विचिकित्साऽस्ति** - எவன் இந்த மாதிரி நிச்சய புத்தியை உபாஸனை-உபாஸ்யப் பொருளில் அடைகிருனே அவனுக்கு யாதொரு மனக் கலக்கமும் - சந்தேகமுமில்லை. அவன் விஷயத்தில் ப்ராப்யம் (அடைய வேண்டியது) - ப்ராப்தி (அடைவது) இவைகளில் நிச்சயமாகப் புத்தியைச் செலுத்தி அவ்விதமே அடைகிருன் என்று ஓதப்பட்டது. அதில் அவனுக்கு யாதொரு சந்தேகமுமில்லை. அவன் இஷ்டப்படியே அதை அடைகிருன். உபாஸனையின் பலனுக.

(ஆகவே பரமாத்மா ஜீவனின் சரீரத்திற்குள் நுழைந்தாலும் சரீர சம்பந்தம் அவனுக்கு இருந்தாலும் ஜீவனுக்குள்ள சுக துக்கங்கள் கிடையாது. பரமபுருஷன் சரீரத்தினுள் புகுந் திருப்பது நியம நார்த்தமாகவும் ஸ்வய இச்சையினுலேயும் ஏற்படுகிறது. ஆனுல் ஜீவனுக்கு கர்ம பலனுக சுகதுக்கங் கள் புண்ய பாபரூபங்களாகிற கர்மங்களைப் பண்ணி அவற்றின் பலனை அனுபவிக்க நேரிடுகிறது. அவ்வித மல்ல பரமாத்மா விஷயத்தில். ஏனெனில் கர்மவச்ய பிறப்பு இறப்பு அவனுக்கில்லை என்பதாகும்) (ஆகாசம் கடாகாசம் மடாகாசம் என்று அந்தந்தப் பொருள்களின் எல்லைப் பரி மாணம் கொண்டாலும் ஆகாசத்தின் பெருமை குறையாது. அதுபோலவே இங்கும்.)

ஆகையால் உபாஸனுர்த்தம் பரமாத்மா ஜீவனுடைய ஹ்ருதய பிரதேசத்தில் ஒரு அல்ப தேசத்திலிருப்பு அதற்க் கீடாக அல்ப பரிமாணமுடைமையும் பொருத்தமானதே யாகும்.

Sutra 8 संभोगप्राप्तिरिति चेन्न वैशेष्यात् (1-2-8)

ஸம்போகப்ராப்தி: (சரீரத்தினுள் இருப்பதாக ஒப்புக் கொண்டால்) சுகதுக்க அனுபவம் பரமாத்மாவுக்கும் வர லாமே. இதிசேத் எனப்படுமாகில் - ந - வராது. வைசேஷ் யாத் அதற்குக் காரணம் வேறுபடுகையாலே. ஜீவனுடைய தேகத்தில் பரமபுருஷன் இருக்கிறுன். எப்படி ஜீவாத்மாவும் இருக்கிறதோ அதுபோல என்று ஒப்புக் கொண்டால் பர மாத்மாவிற்கு சரீரத்திற்க்குள் இருப்பது அதனுலே யேற் படும் சுகதுக்காதிகள் (ஜீவனுக்கு யேற்படுவது போல) யேற்படலாமே என்று சொல்லக்கூடுமானுல் நாம் சொல்வது அவ்விதமில்லை. वैशेष्यात् பரமாத்மாவுக்கு சரீரத்துக்குள் நுழைவது வேறு காரணத்தினுலே (அதாவது ஜீவனைப் போல கர்ம பலன்களை அனுபவிப்பதற்க்கில்லை). சரீர அந்தர் விருத்தியினுல் சுகதுக்க அனுபவங்கள் யேற்படுவ தில்லை. அதற்கு மாறுக புண்யபாபரூப கர்மங்களுக்கு அதீனயாகவும் அவைகளின் பலன்களாகவும் சுகதுக்கானு

பவங்கள் யேற்படுகின்றன. ஜீவனுக்கு எதிர்தட்டாக ஸ்வ ரூபத்திலேயிருக்கும் பரமாத்மா அபஹதபாப்மத்வாதி குணங்கள் இயற்கையாகவே பெற்றிருப்பதால், சுகதுக்கானு பவங்கள் அவருக்கு ஸம்பவிக்க பிரஸக்தியே இல்லை. அவர் உள் நுழைந்திருப்பது ஸ்வ இச்சை, நியமனார்த்தம், அவ் விதமே சுருதி சொல்கிறது. முண். 3-1-1-ஸ்வே 4-6.) तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन् - अन्यो अभिचाकशीति (ஒரு மரத்தினுள் ஜீவ பரமாத்மாவாகிற இருபக்ஷிகள் இருக்கின்றன. ஜீவபரமாத் மாக்களினுள் ஜீவன் கர்ம பலத்தைப் புஜிக்கிறான். அதைப் புசியாத பரமாத்மா மிக விளங்கி நிற்கிறான். ஆகையால் ஜீவனுக்கு கர்ம பலபோகம் பரமாத்மாவுக்கு அது இல்லை.

### அத்தரதி கரணம் [1-2-2] [கட. 1-2-25]

பரமாத்மா சுகதுக்கமாகிற கர்மபல போகம் அனு பவிப்பதில்லை என்றால் அப்போது அந்த சுகதுக்க அனு பவங்களை அனுபவிக்கிறவனாகச் சொல்லப்படும் பிராணி எல்லாவிடங்களிலும் ஜீவனாகவே இருக்கவேண்டும். பர மாத்மாபோக்தாவில்லை யென்றால் ஸர்வத்ர (எல்லாவிடங் களிலும்) அனுபவிக்கின்றவன் ஜீவனே யாகும் - என்கிற சங்கையைப் போக்க சூத்ரக்காரர் பதில் அளிக்கிறார்.

### अत्ता चराचरग्रहणात् [1-2-9]

அத்தா [பிராஹ்மணக்ஷத்ரியரை] உண்பவனாகச் சொல் லப்பட்டவன் பரமாத்மாவே. சராசரகிரஹணாத் [உணவாக அசைவனவும் அசையாதனவுமான எல்லாப் பொருள்களை யும் எடுக்கையால் [உண்பதாலே] சராசரம் என்பதை பிராம்மணக்ஷத்திரிய பதங்களால் காட்டப்பட்டது.

[இங்கு சொல்லப் போவது ம்ருத்யுவாகிற ஊறுகாய் முதலானவற்றைப் புஜிப்பவனாகச் சொல்லுமிடங்களில் கூறப்படுபவன் ஜீவனே ஆகவேண்டும் என்னும் வாதம் தள்ளப்பட்டு பரமாத்மா ம்ருத்யுவுக்கும் ம்ருத்யுவாக விருக் கிறான் என்று சொல்லப்படுகிறது]

கடவல்லியில் சொல்லப்பட்டிருக்கிறது. यस्य ब्रह्म च क्षत्रञ्च उभे भवत ओदनः। मृत्युर्यस्योपसेचनम्, वा इत्थावेदयत्र सः எவருக்கு பிராஹ்மணரும் க்ஷத்திரியருமாகிற இருவர்க்கமும் உண வாகின்றனரோ, யமன் எவனுக்கு ஊறுகாயாகிருனே என்று கடவல்லியில் உணவையும் ஊறுகாயையும் உண்ப வனுக ஒருவன் ஓதப்படுகிருன். பிராஹ்மணர் க்ஷத்திரியபதங் கள்சர அசர வஸ்துக்கள் என அர்த்தம். அப்பேற்பட்ட ஒரு வனின் ஸ்வரூபத்தை எவ்விதம் அறிய முடியும்? இங்கே சம்சயம் உணவு ஊறுகாய் இவைகளேச் சாப்பிடுகிறவன் अत्ता உண்பவனுகச் சொல்லப்பட்டவன் ஜீவனு அல்லது பரமாத்மாவா? எது சரியாகும்? ஜீவன் என்பது பூர்வபக்ஷம் எவ்விதம் போக்த்ருத்வம் சுகதுக்கானுபவம் [அனுபவிப் பவன்] ஜீவனுக்கு அவனது கர்மானுஸரணையாக யேற்படு வதாலும் மேலும் ஜீவனுக்கு அம்மாதிரி கர்மவஸ்யனுன படியால் ஸம்பவிப்பதாகும்.

அதற்குப்பதில் உரைக்கப்படுகிறது. अत्ता चराचरग्रहणात् பிராம்மண க்ஷத்திரியர்களே உண்பவன் பரமாத்மாவே ஏனெ னில் இந்த இரு பதங்களும் சர அசர வஸ்துக்களேச் சொல் லியதாகும்.

[சங்கரர் வேருெரு அபிப்ராயம் கொள்கிருர் உண்பவன் அக்னி என்ருர். எவர்கள் ஜீவன் என்று சொல்கிருர்களோ அவர்கள் ஒடநா உபசேசனம் என்பதை அனுபவிக்கத் தகுந்த பொருள் - எதுவோ இன்னென்றுக்கு அடங்கியிருக் கிறதோ அது என்று அபிப்ராயப்படுகிருர்கள். அவர்கள் ஜீவர்களே இருவிதமாக [ஆண் பெண்] போக்ய வஸ்துக் களாகப் பரஸ்பரம் இருப்பதாக எண்ணுகிருர்கள் ஆத்மாக் கள் நித்யமானபடியால் இறப்பு அவர்களுக்கு அடங்கியிருப் பதாக எவ்விதம் ஊறுகாய் உணவுக்கு அடங்கியிருக்கிற மாதிரி, இறத்தல் அவர்களின் போக்யத்துக்கு இடைஞ்சலாக விராது. வேதாந்தின் பிற்பாடு சொல்லப் போகிருன்- உண் பவனே அழிப்பவனுகவும் யோக்தாவாகவும் 'இல்லே என்று.)

சந்தேகம் - ஜீவனு-பரமாத்மாவா? பூர்வபக்ஷியின் பதில் ஜீவன்தான் - அதற்குப் பதிலாகச் சொல்லப்படுகிறது, பரமாத்மாதான் - உண்பவன் அவனேதான். ஏனெனில் சராசரம் முழுவதையும் உண்பது (அழிப்பது) அவனுக்குத் தான் யேற்படுகிறது. இவ்விதம் உண்பது கர்ம நிமித்த மல்ல - ஆயினும் அதற்கு அர்த்தம் ஜகஜ்ஜன்ம ஸ்திதிலய ஹேது பூதம் மேலான பிரும்மமாகிற விஷ்ணுவுக்கு யேற் படுகிறது - அவரே ஸர்வ காரணம் - ஸம்ஹாரஸ்திதி உற் பத்தி காரணம். ஏனெனில் இந்த பிரகரணத்தில் ஓதப்படு கிறது - III - 9 - सोऽध्वन: पारमाप्नोति तद्विष्णो:परमं पदम् - அவன் (ஜீவாத்மா) அர்ச்சராதி வழியில் சென்று அக்கரை அடைந்து விஷ்ணுவின் பதத்தை யடைகிறுன். அதேபோல, मृत्युर्यस्योपसेचनम् - ம்ருத்யு எவருக்கு ஊறுகாய்ாக விருக் கிறதோ - என்கிற வாக்கியத்திறல் - ब्रह्म च क्षत्रञ्च (பிராஹ்மண க்ஷத்திரியர்கள்) அடங்கிய ஸம்பூர்ண சரா சரத்தை - இது உணவாகவும் - அந்த உணவைச் சாப்பிடு வதற்கு உபயோகப்படும் ஊறுகாய் மிருத்யுவாகவும் - அந்த ஊறுகாயையும் கடைசியில் விழுங்கப்படுவதால் - மிருத்யு வும் முழுங்கப்படுகிறுன். சகல சராசரங்களையும் விழுங்கு கிறுன். உபசேசனத்தின் உதவியால் - இந்த ஸம்பூர்ண சராசரங்களடங்கிய ஜகத்தை முழுங்குவது (அழிப்பது) பிருஹ்மத்துக்குத்தான் முடியும். எல்லா உலகையும் சம்ஹரிக்கும் பரமாத்மா சாப்பிடும் உணவு (ஸர்வ ஸம் ஹாரம்) கர்ம காரணமாக வரும் சாதாரண சாப்பாடு அன்று. ஆகவே ஜீவனில்லை. போக்த்ருத்வம் பரமாத்மந் ஏவ.

## Sutra 10 प्रकरणाच्च 1-2-10

ப்ரகரணுத்ச (ப்ரகரணத்திலே இவன் பரமாத்மாவே.)

பிரகரணத்திலும் பரமாத்மாதான் சொல்லப்படுகிறுன். அது இவ்விதம் ஆரம்பமாகிறது (கட. 21 - 22 - 25) महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति பெரியவனும் ஸர்வவ்யாபி யுமான பரமாத்மாவை உபாஸிக்கும் அறிவாளி வருத்தப்

படமாட்டான். கட. உ 1 - 2 - 23 - नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन, यमेवैष वृणुते, तेन लभ्य: तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम् - என்று பிரகிருதத்தில் ஓதப்பட்டது. அப் பரமாத்மாவானவன் சிரவணமநந நிதித்யாஸங்களால் அடை யப்படமாட்டான். எவனை இவன் வரிக்கிறனோ அவனாலே இவன் அடையத் தக்கவன். அவனுக்கே இவன் தன் ஸ்வரூபத்தை தானே காட்டுகிறான். (இவன்-ஈஸ்வரன்)

மேலும் क इत्था वेद यत्र स: - (1 - 2 - 25) அந்த பரம் பொருள் எப்படிபட்டதென்று எவன் அறிவான்? என்று இநதப் பிரகரணத்தில் ஓதப்பட்டிருக்கிறது. இப் பெரு மைகள் பரமாத்மாவுக்கே பொருந்தும். அவனது கிருபை யால்தான் அவனை அறியக் கூடும். முன்னாலே சொல்லப் பட்டதை ஹ்ருதய ஸந்நிவேசனாக அனுக்ரஹிக்கவே விருக் கிறான். அவனது கிருபையால்தான் அவனை அறிய முடியும் என்கிற அபிப்ராயம் பலப்படுத்தப்படுகிறது.

நீ இவ்விதம் மீண்டும் வாதிக்கலாம் नायं ब्रह्मक्षत्रोदन सूचित: पुरुषोऽपहत पाप्मापरमात्मा - உண்பவன் பிராஹ்மண க்ஷத்திரியர்களை பரமாத்மா அல்ல ஏனெனில் அவனுக்கு ஸ்வபாவமாகவே பசியில்லை अपहतपाप्मा அவன் பாபங்க ளில்லாதவன். அந்தவாக்ய பிரகரண அநந்தரம்·) ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्ध्ये । छाया तापौ ब्रह्मविदो वदन्ति पञ्चाग्नयो ये च त्रिणाचिकेता: इति எவர்கள் பிருஹ்மத்தை அறிகிறார்களோ பஞ்சாக்னி வித்யையை உபாஸித்து திரிநாசிகேதஸ் சடங்கை செய்து முடித்து விட்டு அவர்கள் சொல்கிறார்கள்- இரண்டு பேர்கள் போக்தா வாக (குடிப்பவர்களாக) கர்மபலன்களை (ருதம்) புண்யங் களை ஸ்வர்க்க லோகத்தில் அனுபவிக்கிறார்கள். நற் பயனை அனுபவிக்கிறார்கள். அவர்கள் ஹ்ருதய குகையில் நுழைந்து ஹ்ருதயத்திலுள்ளே ஜ்வலிக்கும் ஆகாசத்தில் வசித்துக் கொண்டு சூர்ய பிரகாசமாயும நிழலாகவும் இருக் கிறார்கள். இங்கே சொல்லப்படும் இரண்டாவது பொருள் முக்கிய பிராணனோ அல்லது புத்தியாக இருக்கலாம். ருத

பானம்-கர்மபலனை அனுபவிப்பது இது யாருக்கு முடியும். இது பரமாத்மாவுக்கு அஸம்பாவிதம். புத்தி பிராணன் ஜீவனுக்கு உபகரணங்களாகவும் அந்த ஜீவன் புண்யங்களை அனுபவிப்பவனுகவுமிருப்பதால் அவனுக்கு உதவி செய்யக் கூடும். ஆகவே இப்பிரகரணத்தில் உண்பவன் ஒரே ஆசாமி ஜீவனுகத்தான் இருக்க முடியும். (பூர்வபக்ஷசூத்ரம்) இதற்குப் பதில் கீழே காண்க.

## Sutra गुहां प्रविष्टावात्मानौ हि तद्दर्शनात् (1-2-11)

குஹாம் பிரவிஷ்டௌ இருதயகுஹையில் நுழைந்திருப்பவர்களிருவரும் ஆத்மானௌஹி - ஜீவனும் பரமாத்மாவும் ஆவர். (பிராணஜீவர்களல்லர்) தத்தர்ச நாத் ஜீவ பரமாத்மாக்களுக்கே ஹ்ருதய குகையில் நுழைந்திருத்தல் காணப் படுவதால்.

பிரகரணத்திலே சொல்லப்படவில்லை - பிராணனும் ஜீவர்களுமல்லர். ஆனுல் இருவர்கள் ஹ்ருதய குகையில் நுழைந்தும் ருதம் (கர்ம பலன்களை) அனுபவிக்கிருர்கள் (குடிக்கிருர்கள்) இந்த இருவர்கள் ஜீவனும் பிராணனுமா - அல்லது ஜீவனும் புத்தியுமா? எவர்கள் இருவர்களாவது அவர்கள் ஜீவனும் பரமாத்மாவும் சொல்லப்பட வேண்டும். ஏனெனில் வாக்ய பிரகரணத்திலே அவ்விதம் காணப்படுகிறது. (அதாவது ருதம் பிபந்தௌஸுக்ருதஸ்ய லோகே குஹாம் பிரவிஷ்டௌ (கட. 1-3-1) கர்ம பலத்தைப் பருகுபவர்களும், புண்ணிய லோகமான இவ்வுலகில் இருதய குஹையில் நுழைந்திருப்பவர்களான இருவர் என்று எடுக்கப் பட்டது. கர்ம பலனை பருகுபவர்களாக இருவரையும் எடுக்கையாலே இவர்கள் ஜீவனும் பிராணனுமா? அல்லது ஜீவனும் புத்தியுமே ஆகவேண்டும். பரமபுருஷனுக்கு கர்மானுபவமில்லாதபடியாலே, இவர்கள் ஜீவபரமாத்மாக் களாக ஆகமுடியாது ஸுபவத ஒத ந பிராணனேடு அல்லது புத்தியோடு கூடிய ஜீவனே கூறப்படுதல் வேண்டும் உலகத்தை உண்பவனுகக் கூறப்படுபவனும் ஜீவனேயாக வேண்டும். இது பூர்வபக்ஷம் அதற்குப் பதிலாக ஜீவனும்

பரமாத்மாவும் தான் சொல்லப்படுகிறார்கள். ஏனெனில் ஹிருதய பிரவேசம் இருவர்களுக்குப் பிரகரணத்தில் சொல்லப்படுவதாலே).

பரமாத்மாவுக்குப் கூறப்பட்ட ஆட்சேபம் மீண்டும் பரிஹரிக்கப்படுகிறது. (கட. உ तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं गुहाहितं गह्वरेष्टं पुराणम् । अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति (காண்பதற்கு அரியவனும் கர்மம் காரணமாக) நமக்கு காணப்படாதபடி மறைந்திருப்பவனும் ஸர்வ பூதங்களிலும் எங்கும் வியாபித்திருப்பவனும் இருதய குஹையிலிருப்பவனும் அந்தர்யாமியாயும் இருப்பவனும், ஸநாதனும் தேவனுமான பரமாத்மாவை மற்ற விஷயங்களிலிருந்து திருப்பி ஆத்ம ஞானத்தினாலே விவேகமுள்ளவன் அறிகிறான், அவன் இன்ப துன்பங்களை விடுகிறான். அவைகளை நீங்கப்பெறுகிறான். இதனால் பரமாத்மா இருதய குஹையிலிருப்பவன் என்று கூறப்பட்டது.

ஜீவன் விஷயத்தில் இதே பிரகரணத்தில் சொல்லப்பட்டது. (கட. 4-7) या प्राणेन संभवत्यदितिर्देवतामयी । गुहां प्रविश्य तिष्ठन्ती या भूतेभिर्व्यजायत । (கர்ம பலனை உண்பதாலே அதிதி (अदिति) எனப்படும் யாதொரு ஜீவன் பிராணனோடு கூட வாழ்கிறானோ, தேவர் எனப்படும் இந்திரியங்களால் உண்டாகும் இன்பத்தை உடையவனாக ஆகிறானோ இருதய குஹையில் நுழைந்திருக்கிறானோ அவன் (ஜீவன்) பஞ்சபூதங்களோடு கூடிப்பிறக்கிறான். இதனால் ஜீவனின் ஹ்ருதய குஹைப் பிரவேசம் கூறப்பட்டது. ஆகையால் ருதம் பிபந்தௌ என்னும் மந்திரத்திலும். ஹ்ருதய குஹையிலும் இருப்பவர்களாக ஜீவனும் பரமாத்மாவும் ஆக வேண்டும். अदिति என்பதற்கு அர்த்தம்-கர்மபலத்தை உண்கை; இது ஜீவனுக்கும். प्राणेन संभवति பிராணனோடு கூடவிருக்கிறான் என்பதற்கு பொருள்-பிராணசம்பந்தமுள்ள ஜீவன். देवतामयी தேவர்களால் நிறப்பப்பட்டிருக்கிறான் என்பதற்கு இந்திரியங்களை நம்புகிறான், தன் அனுபவத்திற்கு (இந்திரியங்கள்) गुहां प्रविश्य तिष्ठन्ति ஹ்ருதய புண்டரீகத்தினுள்ளே வசிக்கிறான்.

(வர்த்தினீ); भूतेभिर्व्यजायत ப்ருதிவியாதிகளாகிற பூதங்களுடன் கூட அவன் பிறக்கிறன், தேவாதி ரூபங்களைப் போல பலதேகங்கள் எடுக்கிறன்—இவ்விதமிருக்க ऋतं पिबन्तौ என்று பரமாத்மாவையும் ஜீவனோடு வாசியறக் கர்ம பலத்தைப் புஜிப்பவனுகக் கூறியிருப்பது ஒட்டாதே எனென் - ஒரு கூட்டத்தில் "छत्रिणो गच्छन्ति சிலர் குடையை எடுத்துப் போனலும் கூட்டம் முழுவதையும் குடை கொண்டு செல்கிறர்கள் என்று கூறுவது போல கர்மபலத்தைப் புஜிக்கும் ஜீவனோடு பரமாத்மாவிருப்பதால், பரமனையும் கர்ம பலனைப் புஜிப்பவர்கள் என்று கூறியதாகக் கொள்ளலாம். இல்லாதபோனல் ஜீவன் கர்மபலனைப் புஜிப்பதாலும் பரமன் ஜீவனை புஜிக்கும் விஷயத்தில் செய்விப்பவனை செய்விப்பவனுக அவனை ஆள்பவனுக விருக்கிறன் எனக் கொள்ளலாம். (ஜீவன் பரமாத்மாவின் ஆணையினுல் கர்மபலனைப் புஜிக்கிறன், நியந்திருத்வத்தாலே யேற்படுவது) (கேவலம் சாக்ஷியல்ல என்பதாம்) பிரயோஜ்ய பிரயோஜக ரூபேண பாரே க்ர்த்ருத்வம் ஜீவபரயோ: உபபத்யதே).

## Sutra - 12 - विशेषणाच्च (1-2-12)

விசேஷணுத்ச (ஜீவபரர்களே இப்பிரகரணததில்) விசேஷிக்கப்படுவதாலே ஜீவன் பரமாத்மாவே.

இந்த பிரகரணத்தில் எல்லாவிடங்களிலும் ஜீவனும் பரமாத்மாகவும் ஜீவன் உபாஸகன் (பரமாத்மா) உபாஸ்யம் (ஆராதிக்கப்பட வேண்டிய வஸ்து) ப்ராப்தா பிராப்யம் என்கிற லக்ஷணங்களுடன் கூடச் சேர்ந்து விருக்கிறர்கள் என்று கட. 1-1:17ல் ब्रह्मजज्ञं देवमीड्यं विदित्वा निचाय्येमां शान्तिमत्यन्तमेति இதிபிரம்மஜக்ஞும் (ஜீவன்) அவனைத் தெரிந்து கொண்ட பிறகு தெய்வீகத் தன்மை பொருந்தியதாயும் மரியாதை செய்யப்பட வேண்டிய தாயும் அவன் இயற்கையான ஸ்வரூபத்தையும் அறிந்து கொண்டு அவன் சாஸ்வத மான சாந்தியை அடைகிறன் (ஜீவனைப் பற்றிச் சொல்லியது கட. 1-1-17); பிரம்ம ஜ்க்ஞோ-ஜீவன்-பிராம்மணனிலிருந்து உண்டான அறிவாளி என்று அர்ந்தம்; இங்கே

அவனை தெய்வீகம் பொருந்தியவனாகவும் மரியாதைக்கு உரியவனாகவும் தெரிந்து கொண்டு; என்பதற்குப் பொருள் ஜீவாத்மாவை நன்கு அறிந்து கொண்டு அந்த ஜீவன் உபாஸகன் என்றும் அவனுக்கு ஆத்மா பிரும்மம் என்றும் தெரிந்து கொண்டு; அதே பிரகாரம், கட. 1-3-2 यः सेतुरीजानानामक्षरं ब्रह्म यत्परम् । अभयं तितीर्षतां पारं नाचिकेतं शकेमहि (सि) நாம் பரமாத்மாவை உபாஸிப்பதற்கு தகுதியாவோம் (எவ்வித மான பரமாத்மா) அந்த பரமாத்மா யாகயக்ஞங்களுக்கு ஸேதுவாக (பாலமாக) விருக்கிறார் ஆதாரமாக விருக்கிறார்; அழியாதவர்; அவர் ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கி அவதிப் படுபவர்களுக்கு அபயம் கொடுப்பவராக அக்கரையில் இருக் கிறார் அவரை நாசிகேதாக்னியின் வழியாக அடையக் கூடும். (அதாவது நாசிகேதாக்னியை உபாஸித்து அடையக் கூடும்.) [இந்த அக்னி உபாஸனையை நாசிகே தஸ் பிரும்மரிஷி யமனிடமிருந்து வரமாக பெற்றார்] இவ் விதமாக பரமாத்மாவே உபாஸ்யம் [ஆராதிக்கப்பட வேண்டியது] என்று சொல்லப்பட்டது. नाचिकेतम् நாசிகேத அக்னி உபாஸனை; ப்ரமாத்மா அதனால் திருப்தி அடையப் பெறுபவன்.

கட.வ. 1-3-3 आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव च । (ஜீவனை தேரில் உட்கார்ந்திருக்கும் எஜமானனாகவும் சரீரத்தை தேரா கவும் நினைத்துக் கொள்—இங்கே ஜீவனை உபாஸகனாகவும் காட்டப்படுகிறது. அதேபடி இந்த சுருதியில் கட. 1-3-9- विज्ञानसारथिर्यस्तु मनः प्रग्रहवान्नरः । सोऽध्वनः पारमाप्नोति तद् विष्णोः परमं पदम् इति (அறிவைத் தேரோட்டுபவனாகவும், மனத்தைக் கடிவாளமாகவும் கொண்டு மனிதன் ஸம்சார வழியின் அக் கரையான விஷ்ணுவின் பதத்தையடைகிறான். இதனால் பரமாத்மாவை உபாஸிக்கப்படுபவனாகவும் அடையப்பட வேண்டியவனாகவும்; (பிராப்யம்); ஜீவனை அடைகிறவனாக வும (பிராப்தா) என்றும் காட்டப்படுகிறது. இங்கேயும் கட. கட. 1-3-1 छायातपौ நிழலும் ஒளியும் என்று என்கிற பதத்தினாலே அக்ஞத்வம் (அறிவில்லாதவன் அவித்யை யினால் சூழப்பட்டவன்) ஸர்வக்ஞத்வம் (எல்லாம் அறிந்த

வன்) என்கிற விசேஷ்யங்கள் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் காட்டப்பட்டிருக்கின்றன.

இவ்விதமாக சொல்லப்படலாம்—இந்த சுருதியினாலே கட. 1-1-20. येयं प्रेते विचिकित्सा मनुष्ये अस्तीत्येके नायमस्तीति चैके ஒருவன் உயிர் நீங்கிய பிறகு இம்மாதிரியான சந்தேகம் யேற்படுகிறது. சிலர் அவனைப் பற்றிச் சொல்கிறார்கள் - அவன் இருக்கிறான் என்றும், மற்றும் சிலர் அவன் இல்லை என்றும்; இந்த சுருதி ஒரு கேள்வியுடன் (யமனிடம்)ஆரம்பமாகிறது. ஜீவாத்மாவின் உண்மையான ஸ்வபாவத்தைப் பற்றியது, அதனாலே இந்த பிரகரணம் முழுவதும் ஜீவனைப் பற்றிச்சொல்லியதுஎன்று வாதிப்பது தவறாகும்.(ஜீவபரமாகவில்லை பரமாத்மா பரமாகவிருக்கிறது என்று அர்த்தம்) இங்கே கேள்வியாதென்றால் அதனால் சந்தேகம் யாதுமில்லை. தேகத்தைவிட வேறான ஜீவாத்மா இருக்கிறானா இல்லையா என்கிற சந்தேகத்தினால் கேள்வியேற்படவில்லை. ஏனெனில் அவ்விதமிருந்தால், யமனிடமிருந்து நாசிகேதஸ்ஸினால் கேட்கப்பட்ட இரண்டு வரங்கள் தவறாகும் - கேட்க முடியாது - கேட்பதற்குத் தகுதியல்ல. (ஜீவன் இவ்வுலகில் மரித்தவனாகவே கருதப்படுகிறான் என்பதால் - ஆனால் ஆத்மா விஷயம் ஓதப்படவில்லை. அதைத் தெரிந்துகொள்ளவும் அது எங்கே போகிறது, யாரை அடைகிறது என்பதாகவும் அர்த்தம்).

ஆகவே பிதாவினால் செய்யப்பட்ட யாகத்தில் அவருடைய ஆஸ்தி முழுவதும் செலவழிக்கப்படும் சமயத்தில் நாசிகேதஸ் என்கிற குமாரன் தனக்குள் நினைத்தான். "நம்பிதா செய்யும் யாகம் பலனை அடையாது. காரணம் தானம் கொடுப்பதில் வஸ்து குறைவை அடைந்திருக்கிறது (நோஞ்சலும்-புஷ்டியில்லாத பசுக்களை பிதாதானமளிப்பதில் தோஷமிருக்கிறபடியால்); நாசிகேதஸ் ஆஸ்திகர்களுக்குள்ளே அக்ரன், அவன் நினைத்தான்; அதனாலே அவன் விரும்பினான். "இந்த யாகம் நல்ல பலனை அளிக்க வேண்டும். அதற்காகத் தன்னையே தானமாக பிதாவைக்

கொடுக்கும்படி செய்ய வேண்டும். ஆகவே அவன் தன் பிதாவை நெருங்கி, அடிக்கடி வினவினான் நிர்பந்தித்தான். "நீர் ஸர்வ வேதஸ (யாகத்தில்) என்னை யாருக்குத் தான மாக அளிக்கப் போகிறீர்? (கட 1 - 4), அதற்கு அப்புறம் பிதாவினால் யமனுக்களிக்கப்பட்டு, "நீ யமனுடைய உலகை யடைவாய்" என பிதா கோபத்தினால் அவ்விதம் சொல்ல, நாசிகேதஸ்ஸும் யமனை அடைந்தான். கடவல்லியிலே இது காணப்படுகிறது. कस्मै मां दास्यसि - என்னை யாருக்கு அளிக்கப் போகிறீர்? பல தடவைகளால் நிர்பந்திக்கப்பட்ட பிதா, தன் குமாரன் நாசிகேதஸ்ஸிடம் - "யமனுக்கு" என்று உத்தரம் சொல்ல; அதனால் புத்ரன் யமகிருஹத்தை யடைந்தான்.

யமன் அதற்கு முன்பே தன் வீட்டைவிட்டு வெளிக் கிளம்பியதால், நாசிகேதஸ் யமன் திரும்பி வரும்வரை அன்ன ஆகார மின்றி காத்திருந்தான். இதனால் (அதிதி ஸத்காரம் நடைபெறாதபடியால் பயமடைந்த யமன், தன் பாபத்திற்குப் பிராயச்சித்மாக நாசிகேதஸ்ஸுக்கு மூன்று வரங்கள் அளித்தான் - உபவாஸமாக விருந்த அதிதிக்கு.

யமனால் வினவப்பட்ட நாசிகேதஸ் முதல் வரத்தினால் பிதாவின் பிரஸாதம் என்கிறதை வேண்டுபவனாக, தனக்கும் தன் பிதாவிற்கும் யாதொரு மனக் கசப்பும் வருத்தமும் இருக்கக் கூடாது. இப்படிப்பட்ட வர்த்தமானம் (நிகழ்வது) தேகம் வேறு ஆத்மா வேறு என்று பாகுபாடு தெரியாதவனால் கேட்கமுடியாது. நாசிகேதஸ் ரிஷி குமாரனானதலால் அவனுக்கு ஆத்மா வேறு தேகம் வேறு என்று நன்கு தெரியும்.

இரண்டாவது வரமாக அக்னி வித்யையைப் பற்றி உபதேசம் கேட்டான். இந்த அக்னி உபாஸனையினால் தேகத்தைவிட்டுக் கிளம்பின் ஆத்மா அடையப் போகும் சுப பலன்களை அடைவிக்கக் கூடியது. அத்தகைய அக்னி உபாஸனை. அதற்கு நாசிகேதாக்னி உபாஸனை என்று யமனால் பெயர் சூட்டப்பட்டது. இந்த வரமும் ஆத்மா யாது

தேகம் யாது என்று பாகுபாடு அறியாதவனுல் கேட்கப்பட மாட்டாது.

மூன்ருவதான வரத்திலே நாசிகேதஸ் யமனிடம் கேட்ட கேள்வி இவ்விதம் ஆரம்பமாகிறது. (கட. 1-1-20 येयं प्रेते विचिकित्सा मनुष्ये अस्तीत्येके नायमस्तीति चैके। एतद्विद्या मनुशिष्टस्त्वयाऽहं वरणामेष वरस्तृतीय: इति -"ஒருவன் இறந்த பிறகு இந்த சந்தேகம் எழுகிறது.

சிலர் அவன் இருக்கிருன் யென்றும், சிலர் அவன் இல்லையென்றும் சொல்கிருர்கள். உம்மால் உபதேசிக்கப் பட்ட நான் இந்த உண்மையை அறிய விரும்புகிறேன். இதுதான் நான் கேட்கும் மூன்ருவது வரமாகும். இந்த விடத்திலே கேட்கப்பட்ட கேள்வி, பரமபுருஷார்த்த ரூபமாக பிருஹ்ம பிராப்தி அதன் லக்ஷணமாகிற மோக்ஷம் அதன் லக்ஷணம் யாதாத்ம்ய விக்ஞானம் அதற்கு தேவைப்படக் கூடிய உபாயஞானம் அந்த உபாயமாகிற உபாஸனையினுல் பரமாத்மா ஆராதிக்கப்படுவது, அதனுல் யேற்படும் பர அவர (மேலான பரமாத்மா கீழான ஜீவாத்மா) இவர்களின் ஆத்மதத்வத்தை அறிய இச்சைப்படுகிறேன்" இதுதான் அவன் கேட்ட மூன்ருவது கேள்வியின் தாத்பர்யம்.

ஆகவே கேள்வி - கேவலம் தேகவியோகமான ஆத்மா வைப் பற்றியது மட்டுமல்ல; ஆனுல் அதற்கு மேம்பாடாக தேகபந்தத்திலிருந்து ஜீவாத்மாவுக்கு விடுதலை எப்படி கிடைக்கும் அதை விளக்குவதற்காக सर्वबन्धविनिर्मोक्षाभिप्रायम् இந்த பிரஸ்னம் யேற்பட்டது. இதே மாதிரி மற்ருெரு சுருதியிலே (பிரு.உ. 2-4-12).न प्रेत्य संज्ञाऽस्ति மோக்ஷத்திற்குக் கிளம்பிய பிறகு, (கடைசி தேகவியோகத்திலே) ஜீவனுக்கு யென்று தனிப்பட்ட ஔபாதிக ஞானம் என்பது இல்லை. (இதுமைத்ரேயி ஸம்வாதத்தில் காணப்பெறுகிறது. யாக்ஞ யவல்கியரிடம் देवादि देहे कीकारात्मकभ्रमं निर्दिश्य तदभावस्य मैत्रेयी प्रतिकथनात्-प्रेत्येति चरम शरीर वियोगोऽभिमत इति भाव: । மோக்ஷார்த் தம் கடைசி சரீரம் வியோகம். (பிரிவு) ஏற்படும் போது-यथा

उताविद्वानमुं लोकं प्रेत्य एतमित: प्रेत्याभिसंभवितास्मि इत्यादौ ॥ இங்கே கூட முக்தி சொல்லப்பட்டது. तरति जन्ममृत्यु इति स मृत्युपाशान् पुरत: प्रणोद्य येन पुनर्न जायते इति श्रवणात् उपस्थितं प्रायणं चरमशरीरवियोग एवेति मन्तव्यम् (உத்தமூர்ஸ்வாமி).

ஸ்ரீபாஷ்யம்:—

இதற்கு அர்த்தம் மோக்ஷத்தை அடைய தகுதியானவனுக்கு அவன் எல்லாப் பந்தங்களிலிருந்து விடுபடுகின்ருன். அப்போது சந்தேகம் ஏற்படும்-அவன் இருக்கிருனு அல்லது இல்லையா என்கிற சந்தேகம் ஏற்படும் ஏனெனில் ஜீவனுடைய ஸ்வரூபத்தினுலே அதனுல் ஏற்படும் சர்ச்சைகள் (வாதங்கள்) அபிப்ராயபேதங்கள் யாவற்றையும் போக்கடிப்பதும், நிச்சயமான தீர்மானத்தை இந்த விஷயத்தில் நான் அடைய விரும்புகிறேன். ஜீவனுடைய ஸ்வரூபம் யாது? அவனுக்கு கதி யாது என்கிற உண்மைகளைப் போதிக்கும் வித்யையை நான் உம்மிடமிருந்து அறிய விரும்புகிறேன். त्वयाऽनुशिष्टोऽहं (உம்மால் உபதேசிக்கப்பட்டவனுக) विद्यां जानीयाम्- அந்த வித்யையை அறிய விரும்புகிறேன்.

இந்த விதமாக மோக்ஷபுருஷார்த்தத்திலே பஹூதா பலவிதமான அபிப்ராய பேதங்கள் அறிஞர்களுக்குள்ளே யேற்பட்டிருக்கின்றன. சிலபேர்கள் (மாத்யாமிகன் பௌத்தன்) அபிப்ராயம் ஆத்மாவின் ஸ்வரூபம் ஞானம் தான் மோக்ஷதசையில் அந்த நிஜஸ்வரூபம் அழிந்து போகிறது (स्वरूपोच्छित्तिलक्षणं मोक्षमाचक्षते); இன்னும் சிலர்களின் அபிப்ராயம் (அத்வைதிகள்) அவித்யை நஷ்டமாகிறது. சுத்தபிரும்மமாகிறது. चितिमात्रस्यैव सतोऽविद्यास्तमयम्; परे (இன்னும் சிலர் தார்க்கிகர்கள் நையாயிகர்கள் ஆத்மா தனிப்பட்டு ஒன்று பட்டுபோகிறது. அந்த நிலையில் ஆவிர்பவித்த சில வைசேஷிக குணங்களாகிற ஞானம் முதலியவை ஆத்மாவிலிருந்து பிரிக்கப்பட்டு அழிந்து போய் அந்த ஆத்மா தனியாக தன் இயற்கையான ஸ்வரூபமாகிற ஜடத்தன்மை பாஷாணம் (கல்லைப் போல யாதொரு உணர்ச்சியுமற்ற) கைவல்யரூபத்தை அடைகிறது. வைசேஷிக குணங்களாகிற புத்தி சுகதுக்க இச்சா த்வேஷ பிரயத்ன தர்மா

தர்மபாவனைகள் இவைகள் அழிந்து கல்லைப்போல உணர்ச்சி யற்றதாக ஆத்மா ஆகிறது. (ஜீவன் முக்தி நிலையைப் போல); अपरे பாஸ்கரர்கள் இவர்களின் அபிப்ராயம் பர மாத்மா உண்டு. அவனுக்கு இயற்கையாகவே அபஹத பாப்மத்வதி (பாபமில்லாமை பசியின்மை இத்யாதி) குணங் கள் உண்டு. அந்த பரமாத்மாவுக்கு உபாதி ஸம்பந்தத்தால பத்த ஜீவனாகி உபாதி ஸம்பந்தம் விலகுவதாலே மோக்ஷ தசையிலே தன் ஸ்வரூபத்தை அடைகிறது. உபாதியினாலே யேற்படுகிறது. ஸம்ஸர்க்கம் நிமித்த ஜீவபாவம் அந்த பாவம் அழிகிறது என்பதாம். யாதவ பிரகாசரின்பக்ஷமும் स्वरूपोच्छित्ति सोदर:;

இப்போது வேதாந்த சிஷ்டர்களான விசிஷ்டாத் வைதி களின் அபிப்ராயம் சொல்லப்படுகிறது. त्रय्यन्त निणता: நிகில ஜகத் ஏக காரண்ய [ஜகத்காரணம்] अखिलहेय प्रत्यनीकानन्तज्ञाना-नन्दैकस्वरूपस्य [யாதொரு நீசகுணங்கள் இல்லாதபடி எதிர் தட்டாக விருக்கும் பரபிரும்மம் ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தமே ஸ்வரூபமாகவும் குணமாகவுமுடைய பரமாத்மா ஸ்வாபாவிக [இயற்கையாகவே) அநவதிகாதிசய அஸங்க் யேய கல்யாண குணாகரஸ்ய (குணங்கள் கொண்ட பர பிரும்மம்) ஸகலேதர (சித் அசித் இவைகளில் வேறுபட்ட வனும் ஜீவனில் பத்தன் முக்தன் நித்யன் இவர்களிலும் வேறுபட்ட) விலக்ஷணன் ஸர்வாத்மபூதன் (எல்லாப்பதார்த் தங்களும் ஜீவர்களும் அவனுக்கு சரீரம் அவன் அவை களுக்கு ஆத்மா); परस्य பிருஹமண: (யாவரையும் உள்ளி ருந்து கொண்டு நியமிக்கிறவன் அந்த பரமாத்மா அவனுக்கு எல்லாம் சரீரமாகிறபடியாலே பிருஹ்மம் பிரகாரி (ஆத்மா) ஆகிறான். அந்த ஜீவாத்மாவுக்கு மோக்ஷம் எவ்விதம் ஸம்ப விக்கிறது யென்றால் அவன் மோக்ஷ தசையில் அறிகிறான் - பரமாத்மாவுக்குத் தான் சேஷம், அவித்யை நீங்கியவனாக, அதனால் கர்மபந்தங்களும் அறுபட்டுப்போய் ஆனந்த மடைகிறவனாக பகவானுக்கு அனுகூலனாக ஆகி பகவானைப் போல ஆனந்த ரூபத்தையும் அபரிச்சின்ன தர்மபூத ஞானத்தை ஸ்வரூபமாகக் கொண்டவனாகவும் பகவத் ஸாம்

யத்தை அனுபவிக்கிருன் (எப்படி) (अस्ति ब्रह्मेति चेद वेद सन्तमेनं ततो विदु: इति-ब्रह्मज्ञानरूपा या श्रुतिसिद्धा सत्ता, तस्या: परां काष्टामेवेत्येवकाराभिप्राय: । [உத்த மூர்ஸ்வாம்]

அப்போது ஜீவன் ஸ்வய அனுபவத்தாலே (அனுபவை கரஸஸ்ய ஜீவஸ்ய) பகவத் பிரஸாதத்தை அனுகூலனுக அடைந்து இன்பமடைகிருன். அந்த முக்ததசையில் ஜீவனுக்கு அநாதி காலமாகத் தொடர்ந்துவரும் கர்மரூப அவித்யாதிகளால் திரோஹித (மறைக்கப்பட்ட) ஸ்வரூபம் (ஞானுகாரம்) அதனுல் மக்னப்பட்டவன் இப்போது அவித்யா போன்ற உபாதிகளிலிருந்தும் விடுபட்டவனுக தனக்கு முன்பேயிருந்த ஸ்வாபாவிக பரமாத்மா அனுபவத்தையே மோக்ஷம் எனக் கூறுகிருர்கள். (ஸ்வாபாவிக பரமாத்மா அனுபவ மேவ மோக்ஷம் எனக் கூறுகிருர்கள்.) இந்த விடத்திலே (கட. வல்லியில்) மோக்ஷ ஸ்வரூபம் — அதற்கு வேண்டிய ஸாதனம் (முமுக்ஷுவிஞல் மோக்ஷ ரூப பிரஸ்னம். யாது செய்யப்பட வேண்டியது அதை அடைவதற்கு என்று அர்த்தம். அதை வினயமாகக் கேட்கிருன் நாசிகேதஸ் யமனிடம். ப்ராப்ய, ப்ராப்த்ரு, ப்ராபக ஆகிற மூன்று விஷயங்களைப் பற்றி விசாரிக்கிருன். அதற்கு பதில் பரமபுருஷார்த்த பரத்வ வாதஸ்ய - பரம புருஷஸ்ய ப்ரதான பிரதிபாத்யத்வாத் தத்பரத்வ மேவ பிரும்ம க்ஷத்திர மந்திரஸ்யேதி பாவ:— இதுதான் நாசிகேத வித்யை நாசிகேதனுல் வினவப்பட்ட யமன் பலவகைப்பட்ட போகங்களை அளிக்கும் வேறு வரங்களை அவனுக்கு அளித்தும் - நாசிகேதஸ் அவைகளில் மனம் செலுத்தாமல், இந்த வித்யையே உபதேசிக்கும்படி பிடிவாதமாகயிருந்தான். யமனும் அவனை வித்யா தானத்திற்கு ஸத்பாத்ரம் என்று நினைத்து தனது பரீக்ஷையின் முடிவில் அவனுக்கு உபதேசித்தான். பர [மேலான பரமாத்மா] அவர [ஜீவாத்மா] இவைகளின் ஆத்ம தத்வ விக்ஞானம் உபாயம் என்றும் அதாவது பரமாத்மாவின் உபாஸனம். அதனுல் அடையப்படும் விஷ்ணு பதப் பிராப்தி லக்ஷணம் அதுதான் மோக்ஷம் என்பதையும் तं दुर्दर्शं गूढं मनुप्रविष्टम् என்று ஆரம்பித்து

सोऽध्वन: पारमाप्नोति तद्विष्णो: परमं पदम् காண்பதற்கு அரியவ ஞகவும் கண்களுக்குப் புலப்படாதவனும் கர்மமாகிற அவித்யையினுல் மறைக்கப்பட்டவனும் என்று ஆரம்பித்து அறிவைத் தேரோட்டுபவஞகவும் மனத்தைக் கடிவாள மாகவும் கொண்ட மனிதன் ஸம்சார வழியின் அக்கரை யான விஷ்ணுவின் பதத்தை அடைகிருன் (கட 1-2.); என்று கடைசியிலே உபதேசமிருப்பதால், யமன் நாச்கேதஸ் ஸுக்கு பரமாத்ம - ஜீவாத்ம ஸ்வரூபத்தைச் சொல்லி பரமாத் மாவின் உபாஸனமே மோக்ஷ ஹேது என்று காட்டி - இதனுல் பர (பரமன்) அவர (ஜீவன்) இவர்களின் மேலான கீழான நிலைகளையும் காட்டி, அத்துடன் இன்னும் உபரி வித்யைகளாகிற பிரணவாக்னி வித்யை முதலியவைகளையும் சிக்ஷித்து நாசிகேதஸ்ஸின் விருப்பப்படி எல்லாம் அளித்தான். இவ்விதம் சொல்வது ஸர்வம் பொருத்தம் (ஸமஞ்ஜஸம்) ஆகையால் பரமாத்மாவே ருதம்பிபந்தௌ என்பதில் ஜீவ பரர்களே ஒழிய, புத்தி ஜீவன் இல்லை. பிராண ஜீவர்களோ அல்லர். ஆகையால் சராசரங்களை உண்பவஞக ஒதப்படு பவன் பரமாத்மாவே ஆகும். பரமாத்மா உபாஸ்யம்-ஜீவன் உபாஸகன். பலன் விஷ்ணு பதம் என்பதாகும்.

## அந்தராதிகரணம் [1-2-3]

### अन्तर उपपत्ते: (1-2-13)

### அந்தர உபபத்தே:

அந்தர:- கண்களில் உள் இருப்பவஞக ஒதப்படுபவன் பர மாத்மாவே. உபபத்தே: [அங்கு ஒதப்படும் குணங்கள் பர மனுக்கு பொருந்துமாகையால்].

க இத்தா வேத யத்ரஸ: என்று முன் அதிகரணவாக்யத் தில் பரமாத்மாவை அறியப்பட வேண்டியவஞகச் சொல் லிற்று. அப்படியாஞல் சாந்தோக்யத்தில் கண்ணிலே காணப்படுபவஞக ஒதப்படுபவன் பரமாத்மா ஆகமுடியாது. என்கிற வாதம் இதில் தள்ளப்படுகிறது.

சாந்தோக்யத்தில் (4-15-1)'' ''य एषोऽक्षिणि पुरुषो दृश्यते, एष आत्मेति होवाच, एतदमृतमभयम् एतद्ब्रह्म - என்று; அவன் ஆத்மா வாக விருக்கிறன். அவன் அம்ருதன் - அபயம் அவனே பிருஹ்மம்.

(இந்த வாக்யம் உபகோசல வித்யையில் வருகிறது. உபகோஸலன் சத்யகாமஜாபாலரிடம் சிஷ்யனுக குரு குல வாசம் செய்தான். அவனுக்கு உபதேசம் பல வருஷங்களா யினும் பிருஹ்மத்தைப்பற்றி அளிக்கப்படவில்லே. ஒரு சமயம் குரு வெளி ஊருக்குச் சென்றிருக்கிற சமயம், அவன் வருத்தப்பட்டுக் கொண்டிருக்க, குருவின் மூன்று அக்னிகள் அவனுக்கு உபதேசம் அளித்தன. அவனிடம் பரிதாபம் கொண்டு, அவன் குருவுக்குச் செய்யும் சிஸ்ருஷையில் சிரத் தையுள்ளவனுக விருந்தபடியால்; அந்த அக்னிகளின் உப தேசம், சேர்ந்தும் தனித்தனியாகவுமிருந்தது. பிரும்மத் தைப்பற்றியும் கண்ணுக்குள்ளே யிருக்கும் புருஷன் சூரிய னுக்குள்ளேவிருக்கும் புருஷன் சந்திரன் மின்னல் இவை களில் உள்ளவன், அவர்களின் சம்பந்தம் இவைகளேச் சொல்லி விட்டு அக்னிகள் மீண்டும் சொல்லின. ''இதற்கு மேலான நான்காவது உபதேசத்தை நீ குருவினிடம் கேட் பாய்'' என்று. ஜாபாலகுரு திரும்பி வந்ததும் அவனுடைய தேஜஸ் மிக்க முகத்தைப் பார்த்ததும் புரிந்து கொண்டு அவ னுக்கு நான்காவது உபதேசத்தை அளித்தார். கண்ணுக் குள்ளே இருக்கும் புருஷனேச் சொல்லி, அவனே பிரும்மத் துடன் சமம் என்று சொல்லி அவனுக்கு அர்ச்சராதி மார்க் கத்தை உபதேசித்து தன் உபதேசத்தை முடித்தார்).

இங்கு சந்தேகம். இங்கு சொல்லப்படும் புருஷன் கண் ணுக்குள்ளிருப்பவன் கண்ணின் பிரதிபிம்பமாகக் காணப் படும் உருவமா, ஜீவனுகவோ, எதிரே நிற்பவர்களின் ஆத்மாவின் பிரதிபிம்பமாகவோ, இந்திரியமாகிற கண் ணுக்கு அபிமானியான தேவதையாகவோ, இவ்விதம் ஒன்று ஆகவேண்டும். பரமாத்மா கண்ணில் காணப்படுவதாக பிரஸக்தியில்லே யாகையால், இந்த புருஷன் அவனுக ஆக

முடியாது (பூர்வபக்ஷம்). பிரதி பிம்பத்தின் ஆத்மா என்று சொல்லலாம். எப்படி? — ஏனெனில் பிரஸித்தமான நிர்தேச மிருப்பதாலே. दृश्यते - பார்க்கப்படுகிறுன் என்கிற பதம் உபயோகப்படுத்தப்படுகிறது. அவனை நாம் நேரில் பார்ப்ப தாலே. (அபரோக்ஷத்திஞல் காட்டப்படுகிறது). ஜீவாத்மா? ஏனெனில் அவன் தேகத்திலிருப்பதால், கண்ணில் விசேஷ மாக விருக்கலாம். இது லௌகிகமாக பிரஸித்தியாகவிருக் கிறது. அதஞல் சரியாகலாம். ஏனெனில் திறந்த கண் களில் காணப்படுவதால், அந்த ஜீவன் தேகத்தை விட்டுக் கிளம்பும்போது, இறக்கிற சமயத்தில், கண்ணைப் பார்த்துச் சொல்கிருர்கள். ஜீவாத்மா சரீரத்திலிருக்கிருஞ, இல்லையா, என்று நிச்சயிக்கிருர்கள். பிரு. 5 - 5 - 2 - रश्मिभिरेषोऽस्मिन् प्रतिष्ठित: கண்ணின் அபிமானி தேவதையான சூரியஞக விருக்கக்கூடும். சுருதியிலே கண்ணுக்குள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. "அவன் (சக்ஷுஸ்ஸில் பிரதிஷ்டை பண்ணப்பட்ட) அபிமானி தேவதை சுருதி பிரஸித்தம். இந்த நான்குக்குள் ஏதாவது ஒன்ருக விருக்கவேண்டும். பிரஸித்தமாக நிர்தேசமிருப்பதால், கண்ணுக்குள்ளிருப்பவன் இவற்றுள் யாராவது இருக்கலாம்.

இவ்விதம் சொல்லப்படுமாகில் நாம் பதில் சொல்வோம் अन्तर उपपत्ते: கண்ணுக்குள்ளிருப்பவன் பிருஹ்மமே ஏனெனில் வாக்யபிரகரணத்தில் ஓதப்படும் எல்லா குணங்களும் அவன் விஷயத்தில் தான் சரியாகும. ஏன்? சுருதி அவ்விதம் சொல்கிறது. एष आत्मेति होवाचैतदमृत मभयमेतद् ब्रह्मेति । அவன் சொன்ஞன் அவன் ஆத்மாவாக விருக்கிறன். அது அம்ருத மாகவும் அபயமாகவும் விருக்கிறன். அது தான் பிருஹ் மம். அவனை ஸம்யத்வாம (संयद्वाम)-என்று கூப்பிடுகிறர்கள். (அதாவது அவனிடம் விரும்பத்தக்க எல்லா குணங்களும் குடியிருக்கின்றன) அவனே தான் வாமனீ (கல்யாண குண யோகத்துடன் கூடியவஞயும் நற்பயன்களை கொடுப்பவன்); एष हि सर्वाणि वामानि नयति - அவன் எல்லாப் பிராணிகளையும் நற்பொருள்களை அடைய உதவுகிறன் (அழைத்துச் செல் கிறன்). அவனே भामनि; (பிரகாசம்) ஏனெனில் அவன்

எல்லா உலகங்களிலும் பிரகாசிக்கிறான். (சா.உ. IV - 15 - 1 to 5 - ) एष हि सर्वेषुलोकेषु भाति इत्येषां गुणानां परमात्मन्येवोपपत्ते; எல்லா குணங்களும் பரமாத்மா விஷயத்தில் சரியானதே ஆகும்.

## Sutra 14—स्थानादिव्यपदेशाच्च (1-2-14)

ஸ்தாநாதிவ்யபதேசாத்ச (கண்ணில்) நிலை நியமனம் முதலியவை (பரமாத்மாவுக்கும்) சொல்லுகையாலும் (இவன் பரமாத்மாவே).

கண்ணுக்குள் இருப்பதால் (வஸ்துவின்) ஸ்திதி (இருப்பு), நியமனம் (கட்டளையிடுவது) இவை பரமாத்மா விஷயத்தில் ஓதப்படுவதால் சரியாகும். பிரு உ. 3 - 7 - 18 यश्चक्षुषि तिष्टन् அவன் கண்ணுக்குள் விருந்து கொண்டு;— ஆகையால் यएषोऽक्षिणिपुरुष: அந்த புருஷன் (காணப் படுபவனு கவும்) கண்ணுக்குள் இருப்பவனுகவுமிருக்கிறான். ஆகை யால் அவனை ஒரு பொருள் என்று பிரஸித்தமாக கூறு வதால். பரமாத்மா 'விஷயத்தில் சரியாகும். இந்த ஒரே அபிப்ராயத்தின்படி दृश्यते (காணப்படுகிறான்) என்று சொல் வது ஸாக்ஷாத்கார வ்யபதேசம் யோகிகளால் காணப்படு வதால் சரியாகும்.

## Sutra 15—सुखविशिष्टाभिधानादेवच (1-2-15)

ஸுகவிசிஷ்டாபிதாநாத் ஏவச—சுகத்தோடு கூடியவனு கச் சொல்லப்படுவதாலே (இவன் பரமாத்மாவே)

கண்ணுக்குள் இருப்பவன் பரமாத்மாவே அவன் கண்ணில் ஆதாரமாயிருப்பவன் புருஷோத்தமன் சா.உ. कं ब्रह्म खं ब्रह्म சுகத்தோடு கூடியது பிருஹ்மம்; மிகப்பெரியது பிருஹ்மம்; பிருகிருதத்திலே சுகவிசிஷ்டனுகக் கூறி அத னுலே இவனை உபாஸிக்கவேண்டிய ஸ்தானத்தைக் காட்டு வதற்காக ஸம்யத்வாமத்வாதி (எல்லா நற்குணங்களும் சேர்ந்திருப்பதாகவும்) குணங்களிலிருப்பதாகச் சொல்லி, य एषोऽक्षिणि पुरुष: (அவன் கண்ணுக்குள் இருக்கும் புருஷன்)

என்றும் ஓதப்படுகிறதாகையாலேயும் இவன் பரமாத்மாவா கவே முடியும் சுகமற்றமற்றவர்களால் முடியாது. एवकारो அதனுலே நைரபேக்ஷ்யமான ஹேதுவைக்காட்டுவதாகும். (ஸ்வதந்தரமாகவே வேறு உதவியின்றி பிருஹ்மமே உப கோஸலனுக்கு அவனுடைய குருவினுலே சாக்ஷாத்தாக உப தேசிக்கப்பட்டது)

இங்கே சொல்லக்கூடும் - மூன்று அக்னிகளால் உப தேசிக்கப்பட்ட உபாஸனருபம் பிரகிருதத்தின் நடுவில் வருவதால் कं ब्रह्म (சுகத்தையுடைய பிருஹ்மம்) பிருஹ்மம் என்று பிரகிருத ஆரம்பத்திலே வருவது-அது இங்கே சொல் லப்படவில்லை. (என்று சொல்லப்படலாம்). ஆகவே இந்த மூன்று அக்னிகளும் முதலில் பிரும்மம் உபாஸிக்கப்பட வேண்டியது என்று இந்த சுருதிவாக்கியத்திலே சா. உ. 4-10-5 प्राणो ब्रह्म कं ब्रह्म खं ब्रह्म பிரும்மம் பிராணனே, பிருஹ்மம் சுகத்தோடு கூடியது, மிகப்பெரியது பிரஹ்ம) பிருஹ்மம் ஆகாசம் என்று பிரும்மவித்யையை உபதேசித்து பிறகு अथ हैनं गार्हपत्योऽनुशशास பிறகு கார்ஹபத்ய அக்னி உபதேசித்தது (சா. உ. 4-11-1); என்று சுருதி ஆரம்பித்தது. (இதனுல் அக்னி உபாஸனையை விளக்கியது. இதனுலே அக்னி வித்யை பிரும்மவித்யைக்கு அங்கம் என்று சொல்ல முடி யாது. ஏனெனில் இந்த அக்னி உபாஸன விஷயத்தில் பலன் பூர்ண ஆயுள் என்று ஒதி அதற்கு எதிராக பிருஹ்மவித்யை யின் பலன் அனந்தம் அதற்குள் அடங்கியது ஸர்வாயுட் பிராப்தி என்று சொல்வதால் அதற்கு விரோதம் யேற்படக் கூடும்.

இந்த ஆட்சேபத்திற்கு பதில் அளிக்கிறோம் இரண்டு இடங்களிலும் பிரகரண உபக்ரமத்திலும் முடிவிலும் प्राणो ब्रह्म பிருஹ்மம் பிராணன் (சா. உ. 4-10-5) என்று ஒதிவிட்டு; एतदमृतमभयमेतद् ब्रह्म इति அது அம்ருதம் அபயம் அது பிரும்மம் என்று இருவிடங்களிலும் பிருஹ்ம சப்தம் ஓதப்பட்டிருக் கிறது. आचार्यस्तु ते गतिं वक्ता உன் ஆசார்யர் உனக்கு மோக்ஷ வழியை (அர்ச்சராதி மார்க்கத்தை) உபதேசிப்பார்

என்று அக்னிகளின் வசனத்தினுலே, கதி (வழி) முதலில் உபதேசிக்கப்பட்டு பிறகு பிருஹ்ம உபாஸனை சொல்லப்பட வேண்டும்; இல்லாத போனுல் உபதேசம் பூர்த்தியாகாது (ஸமாப்தமாகாது); அந்த பிரகரண மத்தியிலே வரும் அக்னி வித்யை பிரும்ம வித்யைக்கு அங்கமாக நிச்சயிக்கப்பட வேண்டும். அவ்விதம் தீர்மானிப்பது இந்தக்காரணத்தினுல் கூட अथ हैनं गार्हपत्योऽनुशशास என்று சொல்லியிருப்பதாலே பிறகு கார்ஹபத்ய அக்னி உபகோஸலனுக்கு உபதேசித்தது சா. உ. 4-11-1; பிரும்ம வித்யையைப் பெற அவனுக்கு அருகதை அக்னி வித்யையைப் பற்றி உபதேசம் இருப்பதாலே அங்க அங்கீபாவமாகும். மேலும் இந்த சுருதியில் व्याधिभिः प्रतिपूर्णोऽस्मि சா. உ. 4-14-1 நான் வியாதியால் கஷ்டப்படுகிறேன்—“அன்பனே, இந்த எங்களைப் பற்றிய உபாஸனை பிருஹ்மோபாஸனை — இரண்டும் உனக்கு உபதேசிக்கப்பட்டன. பிருஹ்ம பிராப்தி அத்துடன் பல ஆசைகளை நிறைவேற்ற முடியாமல் இவைகளால் பிருஹ்ம பிராப்திக்கு இடைஞ்சலாகவிருக்கும் பல வியாதிகளால் அதாவது ஸம்சாரபயம் கர்ப்பவாஸம் கிழத்தனம் இறப்பு இத்யாதிகளால் கஷ்டப்படுகிற உனக்கு அக்னி உபாஸனையும் பிருஹ்மோபாஸனையும் இரண்டுமே உபதேசிக்கப்பட்டன. एष सौम्य ते अस्मद्विद्या चाऽऽत्मविद्या च இரண்டையும் ஸமுச்சயமாக (கூட்டி) உபதேசித்திருப்பதாலே மோக்ஷத்தை ஏகபலனுகக் கொண்ட ஆத்மவித்யையும் அதற்கு அங்கமாக அக்னி வித்யையும் சொல்லப்படுகின்றன எனத்தீர்மானிக்கலாம். (திருக்கள்ளம் ஸ்வாமி)

இவ்விதமாக அக்னி உபாஸனை பிருஹ்ம உபாஸனைக்கு அங்கமாகவிருக்கிறது என்று அறிந்த பிறகு பூர்ண ஆயுள் பலனுக (அக்னி உபாஸனைக்குச் சொல்லப்படுவது) (மோக்ஷத்தைத் தவிர மற்ற பலன்களைக் கொடுப்பது என்று சொல்வது) அர்த்தவாதமே புகழ்ச்சி சொல்லே ஆகும்.

மேலும் இங்கே மோக்ஷத்திற்கு விரோதமாக ஏதேனும் பலன் ஒன்றும் சொல்லப்படவில்லை. अपहते पाप कृत्यां लोकी भवति, सर्वमायुरेति, ज्योग जीवति; नास्यावरपुरुषाः क्षीयन्ते, उप वयं तं

भुञ्जामोऽस्मिंश्च लोकेऽमुष्मिंश्च ஏனெனில இந்த சுருதியில் சொல்லப்படும் எல்லாப்பலன்களும் பாபகர்மங்கள் அழியும்போது, அவன் மேலான உலகத்தை அடைகிறுன். அவனுக்கு பூர்ண ஆயுள் ஏற்படுகிறது. அவன் பிரகாசமாக வாழ்கிறுன்; அவனுடன் சம்பந்தப்பட்ட யாவரும் கெட்டுப்போவதில்லை—இதனுலே காட்டப்படுவது அவன் சிஷ்யர்கள் சிஷ்யர்கள் இத்யாதி அவன் குமாரர்கள் பேரன்கள் இத்யாதி இவர்கள் எல்லோரும் பிருஹ்மத்தை அறிந்த பிருஹ்மவித்துக்களாவார்கள். அவன் குலத்தில் பிறந்த எவனும் பிரும்ம ஞானியாகவிருப்பான். இந்த மாதிரி பலன்கள் பிரும்ம ஞானிக்கு வேறு ஒரு சுருதியில் ஓதப்படுகின்றன. (மு. உ. III-2-9; 3-3) உபவாயாந்தம் புஞ்ஜாஸ்மோஸ்மிஸ் சலோகே அமுஷ்மிம்ஸ்ச (இங்கே) வாயம்-நாங்கள் அதாவது மூன்று அக்னிகள் தம் உபாஸகனை உபகோஸலனே; உபபுஞ்சாஸ்மி நாங்கள் அவனை எல்லாக்கஷ்டங்களிலிருந்தும் காப்பாற்றுகிறேம்.

இந்த விதமாக அக்னி உபாஸனை பிருஹ்மோபாஸனைக்கு அங்கமாக இருக்கிறது அதனுலே அது அத்துடன் (பிரும்மோபாஸனையுடன்) கூடச்சேர்ந்து படிக்கப்பட்டது. ஆகவே பிரகரண உபக்ரமத்திலே खं ब्रह्म சுகத்துடன் கூடியது மிகப்பெரியது பிருஹ்மம்; இத்யாதிகளால் ஓதப்பட்ட பிருஹ்மமே இங்கே கண்ணுக்குள்ளே வசிப்பவனுகச் சொல்லப்படுகிறது. அவனுக்கு (உபாஸகனுக்கு) உபாஸிக்க வேண்டிய ஸ்தானத்தைக் காட்டுவதற்காக य एषोऽक्षिणि என்றும்; பிரும்மத்தினுடைய ஸம்யதாம வாமனி போன்ற கல்யாண குணங்களைச் சொல்வதற்காகவே என எடுத்துக்கொள்ள வேண்டியது.

अपहतपापकत्वात् - பிருஹ்ம பிராப்திக்கு விரோதியாக விருக்கும் பாபங்களைப் போக்குகின்றது. लोकी भवति- அதற்கு விரோதிகளாக விருக்கும் பாபங்களை அழிப்பதால், பிருஹ்ம லோகம் அடையப்படுகிறது; सर्वमायुरेति - பிருஹ்ம உபாஸனை முடிவில் எவ்வளவு ஆயுள் வேண்டப்படுகிறதோ, அது

அடையப்படுகிறது. ज्योगजीवति - வியாதிகளால் பற்றப் படாதவனுக பிருஹ்ம பிராப்தியேற்படுகிறது. नास्यावरपुरुषाः क्षीयन्ते - அவனுடைய சிஷ்யன், அவனுக்கு சிஷ்யன், புத்ர பௌத்ரன், அவனுடன் ஸம்பந்தப்பட்ட பேர்கள் அனைவரும் பிரும்ம வித் ஆகிறுர்கள்.

மு. உ. 3 - 2 - 9 - नास्याब्रह्मवित् कुलेभवति - என்று (பிரும்மவித்து அன்றி அவன் குலத்தில் யாரும் பிறப்ப தில்லை) என்றும் சுருதிக் கடைசியில் பலனுக ஓதப்பட்டிருக் கிறது. उप वयं तं भुञ्जामोऽस्मिंश्च लोकेऽमुष्मिंश्च - நாங்கள் அக்னி கள். அவனை எல்லாக் கஷ்டங்களிலும், பிருஹ்ம பிராப்திக் குத் தடங்கலாக விருக்கும் எல்லா ஆபத்துக்களிலும் - காப் பாற்றுகிறேம். ஆகையால் அக்னி வித்யை பிருஹ்ம வித்யைக்கு அங்கமாகும். ஆகவே முன் சொல்லியபடி "கம்பிருஹ்ம" என்று பிரகரண முதலில் சொல்லப்பட்டது. அதுவே மத்தியிலே கண்ணுக்குள்ளே இருப்பதாகச் சொல்லி, சுகவிசிஷ்ட பிருஹ்மோபாஸனத்தினுல், பிரும்மத் திற்கு ஒரு ஸ்தானத்தையும் பல கல்யாண குணங்களுடன் சேர்ந்திருப்பதாகச் சொல்வதற்காகவே என அர்த்தம் கொள்ள வேண்டியது.

மறுபடியும் ஆட்சேபிக்கப்படலாம் आचार्यस्तु ते गतिं वक्ता உனக்கு இனிமேல் குரு அர்ச்சராதிவழியை உபதேசிப்பார் இதனுல் கதி (மார்க்கம்) ஒன்று தான் உனக்கு மிச்சம் எங்களால் மற்றதுயாவும் உபதேசிக்கப்பட்டது இதனால் நீவாதிக்கக்கூடாது. இங்கு சொல்ல விரும்புவது பிருஹ் மத்திற்கு ஒரு ஸ்தானம் தேசத்தில் அளிப்பதும் பிரும்ம உபாஸனைக்குத் தேவைப்படக் கூடிய பிரும்ம குனங்கள் ஆகும்.

இந்த ஆட்சேபத்திற்கு நாம் பதில் அளிக்கிறேம். आचार्यस्तु ते गतिं वक्ता இதற்கு அபிப்ராயம் யாதெனில் பிரும்ம வித்யையை உபகோஸலனுக்கு உபதேசிக்காமல், அவனு டைய குரு சத்யகாம ஜாபாலி வெளி ஊருக்குச் சென்று

விட்டார். அதனால் வாட்டமடைந்த உபகோஸலனுக்கு அவனுடைய தாபங்களைப் போக்க அவனுக்கு நற்கதி அளிக்க எண்ணம் கொண்ட அக்னிகள் அவனுடைய குரு சுஸ்ரூஷையினால் திருப்தியடைந்து, பிருஹ்ம ஸ்வரூபத்தையும் பிருஹ்ம உபாஸனையையும் அதற்கு அங்கமாகவுள்ள அக்னி உபாஸனையையும் இரண்டையும் உபதேசித்தன.

இவ்விதமாக சுருதிகளின் அர்த்தத்தை நன்றாக பரிசீலித்து - आचार्याद्धैव विद्याविदितासाधिष्टं प्रापत् - குருவினிடமிருந்து அடையப்படும் உபதேசம் ஒரு தோஷமின்றி நல்லதாக பூர்ணமாகவிருக்கும் (என்று சுருதி அர்த்தத்தை ஆலோசித்து); साधुतमत्वप्राप्तव्यमाचार्य एवास्य संयद्वामत्वादि गुणकं ब्रह्म, तदुपासनस्थान मर्चिरादिकां च गतिमुपदिश्यतु इति मत्वा - அக்னிகள் தங்களுக்குள்ளே ஆலோசித்தன. அவன் முழு பலனை பிரும்மோபாஸனையினால் அடைவதற்கு "உன் குருவே உனக்கு உபதேசம் அளிக்க வேண்டும்". (எப்படிபட்ட பிருஹ்மம்) - ஸம்யத் வாமத்வாதி குணங்கள் உடையதாயும், அந்த பிருஹ்மத்திற்கு தேகத்தில் ஒரு ஸ்தானத்தை அளிப்பதற்காகவும், அதன் பலனாக அடையப்படும் அர்ச்சராதிகமனம் (கதி) எல்லாம் சொல்லப்பட்டதாகும். ஆகவே அந்த மூன்று அக்னிகளும் आचार्यस्तु ते गतिं वक्ता - என்று சொல்லின. கதியை மாத்திரம் விட்டுவிட்டு, மற்ற எல்லா விஷயங்களையும் அக்னிகள் அவனுக்குச் சொல்லி, "அது தான் வித்யாசேஷம், உன் குரு அதை உபதேசிப்பார்" என்று காட்டுவதற்காக. இதனால்தான் ஆசார்யரும் (சா. உ.4 - 24 - 3ல்) अहं तु ते तद्वक्ष्यामि यथा पुष्करपलाश आपो न श्लिष्यन्ते, एवमेवंविदि पापं कर्म न श्लिष्यते- என்று ஆரம்பித்து, இந்தக் காரணத்தினால் ஆசார்யர் உபதேசம் செய்தார். "நான் உனக்குச் சொல்கிறேன் எப்படி தாமரை (பலாச) இலையில் தண்ணீர் ஒட்டாதோ - அதுபோல பாபங்கள் இதைத் தெரிந்து கொள்பவனை ஒட்டுவதில்லை". அதன் பிறகு அவர் சொன்னார். "அந்த பிருஹ்மத்திற்கு ஸம்யத்வாமத்வாதி கல்யாண குணங்களுடன் சேர்ந்த பிருஹ்மம் அக்ஷி (கண்ணுக்குள்ளே) ஸ்தானத்தில் இருப்பதாக உபாஸிக்கப்பட

வேண்டியது. (பிறகு அவர் சொன்னார்) அர்ச்சராதி மார்க்கத்தை. ஆகவே कं ब्रह्म खं ब्रह्म (சுகமுடையது - பெரியது பிருஹ்மம்) என்று ஓதப்பட்ட சுகவிசிஷ்ட பிரும்மமே இந்த பிரகிருதத்தில் ஓதப்பட்டு, இந்த விடத்திலே अयमक्ष्याधार: கண்ணுக்குள்ளிருப்பவன் परमात्मा பரமன் ஆகும் என்று காட்டப்பட்டது.

மீண்டும் ஆட்சேபிக்கலாம், நீ எப்படி இதை அறிவாய் कं ब्रह्म खं ब्रह्म பிரும்மம் மேலான சுகத்தை உடையது பிருஹ்மம் ஆகாயம் சா. 2 4-10-5 அந்த பிருஹ்மம் தான் கண்ணுக்குள்ளேயிருக்கிறது என்று? அதற்குமாறாக இந்த இன்னொரு சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறதே — பிரும்மம் சுகமுடையது, அது ஆகாயம் कं ब्रह्म खं ब्रह्म என்று பிரஸித்த ஆகாஸம் தான் (பூதாகாஸத்தை) சொல்லப்பட்டது. லௌகிக சுகங்களை (மோக்ஷமல்ல) பிருஹ்மமாகக் கருத வேண்டும் பிருஹ்மதிருஷ்டியாகக் கொள்ள வேண்டும் ஏனெனில் இந்த சுருதி नाम ब्रह्म நாம பிருஹ்ம, மனோபிருஹ்ம (திருஷ்டி விதியாக) இத்யாதி வசனங்களால் நாமம்தான் பிருஹ்மம் (சா. உ. 7-1-5; மனம்தான் பிருஹ்மம் (7-3-2) சுருதி வசனங்களைப்போல இருக்கிறபடியால் அவர (கீழான) பிருஹ்மமே சொல்லப்பட்டதாகும்.

(இங்கு ஆட்சேபனை பிரும்மத்தை சுகத்துடனும்- பூதாகாசத்துடன் ஒப்பிட்டிருப்பது பிரதீக உபாஸனை திருஷ்டி விதியைச் சொல்லி உபாஸிப்பது. அதனால் ஒரு வஸ்து எது பிரும்மமாகவில்லையோ அதை பிருஹ்மமாகவே நினைத்து உபாஸிப்பது. இவ்விதம் சொல்வதற்கு ஆதாரம் உபகோஸலனுக்கு உபதேசிக்கப்பட்ட வித்யையில் அக்னியின் வித்யையைப்பற்றிச் சொல்லப்படவில்லை. சூத்ரம் 16ன் நோக்கம், உபகோஸலன் மோக்ஷஹேதுவாகிற பிரும்மோபாஸனையை அறிந்தான். அதனால் ப்ரதீக உபாஸனையைப் பற்றிச் சொல்லவரவில்லை, இவற்றின் பலன் தற்காலிகம் அஸ்திரம்) அம்மாதிரி ஆட்சேபத்திற்கு சூத்திரக்காரரே அளிக்கிறார்.

## Sutra 16—अत एव च स ब्रह्म

*அத ஏவ-ச ஸ பிருஹ்ம (1-2-16)*

அத ஏவச இந்தக் காரணத்தாலேயும் - ஸ:—அவன் ப்ரஹ்ம-பிருஹ்மமேயாவான். (அது - 'க' என்கிற சப்தத்தால் காட்டப்படும் ஆகாஸம் அது பிருஹ்மமேயாகும்)

இங்கு சந்தேகம், பூர்வபக்ஷம் கம்பிரஹ்மம் கம்பிரஹ்ம என்று ஓதப்படுவது பிருஹ்மம் என்று எப்படி கூறலாம்? கம் என்றும் சுகம் खं என்றால் ஆகாசம் இந்த வாக்கியத்திலிருந்து சுகம் ஆகாசம் இவைகளில் பிருஹ்மதிருஷ்டிபண்ணி அதாவது நாம ப்ரஹ்ம, மனோபிருஹ்ம என்கிற இடங்களிற்போல அவற்றைப் பிருஹ்மமாக எண்ணி உபாஸிக்க வேண்டும் என்று விதியேற்படுமே ஒழிய, பிருஹ்மத்தை கூறுவதாக ஆக முடியாது. ஆகவே य एष हृदये என்கிற வாக்யத்திற்கு ஓதப்பட்டவன் பரமாத்மா வல்ல என்பதாம்)

ஸ்ரீபாஷ்யம்:—சா.உ. 4 - 10 - 5ல் ஓதப்பட்டிருக்கிறது. यदेव कं तदेव खं (எது சுகமானதோ அதுவே ஆகாசம் ஆகவே ஆகாசம் சுகமாக ஓதப்பட்டிருக்கிறது. அதே காரணத்தினால் அந்த ஆகாசமே க (ख) மேலான பரபிரும்மம். சுக விசிஷ்டஸ்ய ஆகாசம் சொல்லப்படுவதாலே இந்தக் ख சப்த வாச்ய ஆகாஸமே பரபிரும்மம். (திருஷ்டி விதியினால் ஆகாசத்தையே பிரும்மமாக உபாஸிப்பது). இந்த உபநிஷத் பிரகரணத்திலே அக்னிகளால் சொல்லப்பட்டன प्राणो ब्रह्म कं ब्रह्म खं ब्रह्म என்று சொல்லி (பிராணன் (அதாவது முக்ய பிராணன்) பிருஹ்மம்; மேலான சுகம் பிருஹ்மம்; खं (ஆகாஸம்) பிருஹ்மமே, என்று சொல்ல; அதற்கு உபகோஸலன் பதிலளித்தான் "विजानाम्यहं यत् प्राणो ब्रह्म; कं च तु खं च न विजानामि நான் முக்ய பிராணனாக விருக்கும் பிருஹ்மத்தை அறிவேன்; ஆனால் அந்த பிருஹ்மம் கம் (சுகம்) என்றும் खं என்றும் அறியவில்லை".

இதற்கு அர்த்தம் யாதெனில் திருஷ்டி விதியாக ப்ரதீக ஊபாஸனமாகிற அடையாளங்களை முக்ய பிராணன்

ஆகாசம் இத்யாதிகளுக்கு வைத்து பிரும்மமாக உபாஸிக்க வேண்டியது என்று அர்த்தமில்லை - இவ்விதம் அக்னிகள் உபதேசிக்கவில்லை. ஏனெனில் ஜன்மஜரா மரணாதிபவபயம் கொண்ட முமுக்ஷுவுக்கு (அதாவது பிராகிருதத்திலே உபகோஸலனுக்கு) இவைகளை உபாஸிப்பதால் மோக்ஷமடைய முடியாது. ஆகவே பிரும்மமே உபாஸ்யமாகும் என்று அக்னிகள் உபதேசித்ததாகச் கொள்ள வேண்டும். (பிருஹ்மைவ உபாஸ்ய முபதிஷ்டம்)

நாம் ஏற்கனவே ஸ்தாபித்துள்ளோம் - எல்லாப்பதங்களும் பிருஹ்மத்தையே குறிக்கின்றன; ஆகவே பிரஸித்தமான பிராணன்களும் கூட ஸமாநாதி கரணத்தாலே பிருஹ்மம் தான் என்பது நிர்திஷ்டம் (காட்டப்பட்டது). ஸ: சூத்திரத்திலிருப்பது ஆகாசம் (ததாகாஸம் என்பதிலுள்ள ஆகாசம்) (சுருதப் பிரகாசிகை); பிராணன் என்பது பிராண சரீர பிருஹ்ம, அதனாலே பிராணோ பிருஹ்மம் என்பதாம்.) இவைகளுக்குள்ளே பிருஹ்மத்தை பிருஹ்மம் என்று சொல்வது சரிதான், ஏனெனில் பிராணனைச் சரீரமாகக் கொண்டு பிராணனை நியமிக்கிறான். நியந்திருத்வம் சொல்லப்படுகிறது. ஆகவே உபகோஸலன் பதில் சொன்னான், நான் பிராணனைச் சரீரமாகவுடைய பிருஹ்மத்தை அறிவேன் विजानाम्यहं यत् प्राणो ब्रह्म;

அதே பிரகாரம் மேலான கம் (कं) खं ஆகாசம்) இவைகளும் பிரும்மத்துக்குச் சரீரமானபடியால் அதற்கு அடங்கியிருப்பதாலே, விசேஷணங்களாக விருக்கின்றன. ஆகவே அவை பரஸ்பரம் பிருஹ்ம ஸ்வரூபத்தை வ்யவச்சேதம் பண்ணுகிறபடியாலே, எப்படியெனின் நிரதிசய ஆனந்தரூப பிருஹ்ம ஸ்வரூபம் என்று காட்டுகின்றனவா அல்லது அவை பரமாத்மாவுக்கு விசேஷணங்களாக ஆவதாலே அன்யோன்ய சம்பந்தத்தை ஸ்வரூபமாக (அதாவது कं-खं என்று) கொள்ளக்கூடும். அவ்விதமிருக்க அவை (कं-खं) இரண்டுமே தனித்தனியாகவே பிருஹ்மத்திற்கு சரீரமாகிறபடியால், விஷயசுகங்களும் பூதாகாஸம் இவைகளுக்கு

நியாமகனாக பிருஹ்மம் இருக்கிறபடியால் பிரும்ம ஸ்வரூபம் இவைகளால் (சரீரமாகிறபடியால்) மேன்மையடையும். இல்லாத போனால் कं-खं இவை அன்யோன்ய வ்யவச்சேதம் செய்கிறதாகக் கொண்டால் அவைகளுக்கு ஆத்மாவாகிற பிருஹ்மம் அபரிச்சின்ன ஆனந்தைக(மே) ஸ்வரூபம் கொண்டது (ஸ்வரூபமாயும் குணமாகவும் கொண்டது) (அனந்தமாயுமுள்ளது). ஆகவே இந்த இரண்டு வகை அபிப்ராயங்களுக்குள் எது சரியானதாகும் என்பதை அறிவதற்கு உபகோஸலன் கேட்டான். विजानाम्यहं यत् प्राणोएव कं च तु खं च नविजानामि அவன் அபிப்ராயத்தை அறிந்த அக்னிகள் உபதேசித்தன - எது कं ஆகவிருக்கிறதோ அதுவே खं (ஆகாசம்) சா. உ. 4-10-5)

இதற்கு அர்த்தம் பிருஹ்ம ஸ்வரூபம் அபரிச்சின்ன ஆனந்தைக ஸ்வரூபம் यद्वा व कं तदेव खम् - यदेव खं तदेव कम् இங்கே खं என்பது யாது? பிருஹ்மம் ஸ்வரூபத்திலே சுகரூபமே. அபரிச்சின்னம் என்று அர்த்தம். ஆகையால் பிராணனைச் சரீரமாகக் கொண்டதால் प्राण विशिष्टं यद् ब्रह्म (பிராணனைச் சரீரமாகக் கொண்ட எந்த பிருஹ்மமோ) तदेव அந்த பிருஹ்மமே அபரிச் சின்ன சுகரூபம என்று அர்த்தம். ஆகவே प्राणं च हास्मै तदाकाशं चोचु: அந்த பிராணனே பிருஹ்மமாகும்; ஆகாசமே (பிரஸித்த ஆகாசமே) சுகம் என்று சொல்லலாம்படி ஆகும். ஆகவே அபரிச்சின்ன சுகம் பிருஹ்மம் இந்த சுருதியில் பிரதி பாதிக்கப் படுகிறபடியால், कं ब्रह्म खं ब्रह्म பரமான பிருஹ்மமே கண்ணுக்குள் இருப்பவனாக கூறப்படுகிறது. (பிராணம் சஹாஸ்மை ததாகாஸம் ச ஊசு:— பிராணனாயிருக்கும் அந்த ஆகாசத்தையே கூறினார் என்று சுருதி சொல்வதாலே பிரஸித்த ஆகாசத்திற்கு பிராணனாக விருப்பது ஒட்டாது. இதனாலே பிராண சரீர பரமாத்மா ஆகாஸசரீர பரமாத்மா இங்கு கூறப்படுகிறது. அளவற்ற சுகத்தை ஸ்வரூபமாகக் கொண்ட பிருஹ்மம் ஆகாசசரீர பிருஹ்மம் என்றும் காட்டப்பட்டது.

**तदेव साक्षादाधारतया अभिधीयत इत्यक्ष्याधारतया** பரமாத்மாவாகும்.

## Sutra 17—श्रुतोपनिषत्कगत्यभिधानाच्च ।

### *ச்ருதோபநிஷத்ககத்யபிதாநாச்ச (1-2-17)*

ச்ருதோபநிஷத்ககத்யபிதாநாச்ச - பரம புருஷனைப் பற்றிய உண்மை அறிவை உடையவனுக்கு (அனுஸந்திக்கத் தக்கதாக) சொல்லப்படும் அர்ச்சிராதிகதியைக் கூறுவதாலே அக்ஷிபுருஷன் பரமாத்மாவே.

(அர்ச்சிராதி மார்க்கம் தினமும் உபாஸகனுக்கு அனுஸந்திக்கப் படவேண்டியது. இது சொல்லப் படுவதாலே அக்ஷிபுருஷன் பரமாத்மாவே)

ஸ்ரீபாஷ்யம்:—**श्रुतोपनिषत्कस्य** ஸ்ருதிஸ்ம்ருதி முதலியவைகளில் உபதேசிக்கப்பட்ட பிரகாரம் பரமபுருஷனைப் பற்றிய உண்மையான அறிவைவுடையவர்கள் அனுஸந்திக்க வேண்டிய விஷயத்தை அக்னிகளும் ஆசார்யரும் உபகோஸலனுக்கு உபதேசித்தனர். இந்த விஷயம் அர்ச்சிராதிகதி. முதலில் அக்னிகள் அக்னி உபாஸனையைச் சொல்லி, அதன் பிறகு கடைசியில் ஆசார்யர் மற்ற வேதவாக்யங்களில் சொல்லப்படுவதும் முக்தியடையும் போது செல்லத்தக்கதாகச் சொல்லப்படும் அர்ச்சிராதி கமனம் என்பதை உபகோஸலனுக்கு உபதேசித்தா. பிருஹ்ம வித்யாபரமானது- உபநிஷத் வாக்யங்கள் சொல்வது. (உதாரணம் **नान्य: पन्था:** வேறு வழியில்லை, உபாஸகர்களுக்கு என்பதைப்போல.) உபகோஸலனுக்கு மீண்டும் ஆசார்யர் சொன்னது - "இந்த கதி (வழியில்) செல்பவர்களுக்கு புநராவிருத்தி (பூமியில் மீண்டும் பிறப்பு இல்லை) ரஹித பரம புருஷ பிராப்தி. அப் பேற்பட்ட உபாஸகர்கள் கதியை தினமும் அனுஸந்தித்து **तेऽर्चिषमेवाभिसंभवन्ति, अर्चिषोऽह्: अह्न आपूर्यमाणपक्षम्**" என்று ஆரம்பித்து **चन्द्रमसो विद्युतं तत्पुरुषोऽमानव: स एनान् ब्रह्म गमयति, एष देवपथो ब्रह्मपथ:, एतेन प्रतिपद्यमाना इमं मानवमावर्तं नावर्तन्ते** என்று கடைசியில் உபதேசிக்கப்பட்டது. அவர்கள் அர்ச்சிராதி வழியை

யடைகிறார்கள் என்று தொடங்கி முதலில் வெளிச்சம் (अहस्) அதிலிருந்து பகல்என்னும் தேவதை அதிலிருந்து சுக்லபக்ஷம் என்று சொல்லி முடிக்கிற போது சந்திரனிலிருந்து மின்னல் (अमानव:)' அமானுஷ்ய புருஷன் அவன் உபாஸகனை பரமாத் மாவினிடம் அழைத்துச் செல்கிறான். இதுதான் தேவபதம் பிரும்மத்திற்குச் செல்லும் வழி. இதன் வழியாகச் செல்ப வர்கள் மீண்டும் சம்சாரத்தில் பிறப்பதில்லை'' என்று முடித்து இங்கு அக்ஷிபுருஷனை அறிந்த உபகோஸலனுக்கும் செல்லத் தக்க வழி இதுதான் என்றும் உபதேசிக்கப்பட்டது. ஆகை யால் இங்கே கூட அக்ஷிபுருஷன் பரமாத்மாவே.

अनवस्थितेरसम्भवाच्च नेतर: (1-2-18)

அநவஸ்திதே ரஸம்பவாச்ச நேதர: (1-2-18)

அநவஸ்திதே:- (ஜீவன் முதலானோர் எப்போதும் கண்ணில்) இல்லாமையாலும், அஸம்பவாச்ச (இயற்கை யான அம்ருதத்வம் முதலான குணங்கள் ஜீவாதிகளுக்குப் பொருந்தாவாகையாலும்) அக்ஷிபுருஷன் பரமாத்மாவே.

பிரதிபிம்பமும் பிம்பமிருக்கும் போது இருக்குமாகை யால், ஜீவன் கண்ணில் எப்போதும் இருப்பதில்லை. அவன் தேகத்திலுள்ள மற்ற இந்திரியங்களையும் நியமிப்பவனாக இருக்கிறான். இதனால் அவனுடைய உண்மையான வாசஸ் தலம் ஹ்ருதயமே. பிரதிபிம்பத்தில் இருப்பவனுக்கு அம்ருதத்வாதி குணங்களும் இதர நிருபாதிக குணங்களும் அஸம்பாவிதம். பரமாத்மாவுக்கே பொருந்தும். ஆகவே பரமாத்மாவைத் தவிர பிரதிபிம்பங்கள் கண்ணுக்குள் இருக் கும் அக்ஷிபுருஷன் என்று சொல்வதற்க்கில்லை. மேலும் பிரதிபிம்பம் இன்னொரு புருஷன் அருகே இருப்பதினால் ஸந்நி தானத்தில் இருக்கும் போது ஏற்படுகிறது. ஆகவே அது அக்ஷிபுருஷன் ஆகாது. எல்லா இந்திரியங்களின் வியாபாரத் தின் அனுகுணமாக எல்லாவற்றையும் நியமிக்க சரியான ஸ்தானத்தில் - ஸர்வேந்திரியங்களுக்கு வேர் பற்றான ஹ்ரு தயத்திலே இருக்கிறான். ஆகவே அவன் கண்ணுக்குள்ளே

இல்லை. சக்ஷு: அவஸ்தானமில்லை. தேவதையான சூர்ய னும் கண்ணுக்குள் இருப்பதில்லை. ஏனெனில் அர்ச்சிராதி கமனத்திற்கு रश्मिभिरेषोऽस्मिन् प्रतिष्टितः சூர்யனுக்குள் இருக்கும் அவன் (பரமாத்மா) அவன் தனது கிரணங்களால் நன்கு ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். (பிரு.உ. 5-5-2) அதாவது கிர ணங்களாலே ஆதித்யன் கண்ணில் நிலை நிற்கிறான் என்று இந்த சுருதி சொல்வதாலே வெகுதூரத்திலுள்ள ஆதித்ய னும் தனது கிரணங்களால் கண்ணில் இருப்பதாக கூறப் படுகிறானே யொழிய நேரே கண்ணில் இருப்பவனாகச் கூறப்படுவதில்லை. சூரியனுக்கு கண் இடமில்லை, க்ரணங் களால் பரவுகிறானே என்பதைத் தவிர, ரஸ்மித்வாரேண அவஸ்தானம் என்கிற வசனத்தாலே; வெகுதூரத்திலும் இருக்கிறான். ஆகவே சக்ஷிஸ் அவனுக்கு வாசஸ்தான மில்லை. இன்னொரு காரணம் யேற்கனவே சொல்லப் பட்டது - பரமாத்மாவுக்கே பொருந்தும், இயற்கையான அம்ருதத்வம் முதலான குணங்கள். இந்தக்காரணத்தினா லும்கூட கண்ணில் இருப்பவன் அக்ஷிபுருஷன் பரமாத் மாவே.

## अन्तर्याम्यधिकरणम् (1-2-4)

## அந்தர்யாம்யதிகரணம் (1-2-4)

சாரீரம் 1-2-14 ஸ்தாநாதி வ்யபதேசாச்ச பரமாத்மா கண்ணினுள் நின்று (ஜீவனை) நியமிக்கிறான் என்று ஓதப் பட்டது. பிரு. உ. 3-7-18ல் यश्चक्षुषि तिष्ठन् (கண்ணுக்குள் எவன்) பரமாத்மா விருப்பவனாக இருக்கிறானோ என்பதால் பிரதிபாத்யம் கண்ணில் ஸ்திதி, நியமனம், ஆதி பரமாத் மாவுக்கே பொருந்தும் என்று சொல்லி - அக்ஷிபுருஷன் பரமாத்மாவென்று ஸ்தாபிதம். இங்கே இந்த தீர்மானம் சூத்ரக்காரரால் ஊர்ஜிதமாக்கப்படுகிறது.

**अन्तर्याम्यधिदैवाधिलोकादिषु तद्धर्मव्यपदेशात् (1-2-19)**

*அந்தர்யாம் யதி தைவாதி லோகாதிஷீ*
*தத்தர்மவ்யப தேசாத் (1-2-19)*

*அதி தைவாதிலோகாதிஷீ - அதிதைவம் அதிலோகம் முதலான பதங்களோடு கூடிய வாக்யங்களில் படிக்கப் பட்ட, அந்தர்யாமி — அந்தர்யாமியாகவிருக்கும் பரமாத் மாவே, தத்தர்ம வ்யபதேஸாத்-அந்த பரமனுக்கே உரிய தர்மங்களைக் கூறுவதால் பரமாத்மாவே, ஜீவனில்லை என்பதாகும்.*

வாஜஸேநாயர்களில் இரண்டு (கண்வ- மாத்யந்தினர் கள்) சாகைகளில் ஓதப்பட்டிருக்கின்றது. பிரு-உ. 3-7-3) **य: पृथिव्यां तिष्टन् पृथिव्या अन्तरो यं पृथिवी नवेद यस्य पृथिवी शरीरं य: पृथिवीमन्तरो यमयति - एष त आत्माऽन्तर्याम्यमृत: - इति** என்று எவன் பூமியில் வசித்துக்கொண்டு பூமிக்குள்ளேயிருந்து கொண்டு, எவனை பூமி அறியாதோ, எவனுடைய தேகம் பூமியாக விருக்கிறதோ, எவன் பூமிக்குள் வசிப்பவனாக உள் இருந்து நியமிப்பவனாக விருக்கிறானோ அவனே உன் அந்தராத்மா அம்ருதன்; அதேமாதிரி பஞ்சபூதங்களிலும் அப்புதேஜஸ் அந்தரிக்ஷம் வாயு ஸ்வர்க்கம் (த்யு) ஆதித்யன் திக்குகள் சந்திர தாராகணங்கள் ஆகாசம் தமஸ் (இருட்டு) வெளிச்சம் இவைகளின் அபிமானிதேவதைகளில் வசிப்பவனாகவும்; (அவனே) எல்லாப் பூதங்களிலும் பிராணன்வாக்கு சக்ஷீஸ் ச்ரோத்ரம் மனஸ் த்வக் (தோல்) விக்ஞானம் ரேதஸ் இத்யாதிகளில் ஆத்மாவென்று அறியப்படுகிறவனாக ஒரு வன் இருப்பதாகச் சொல்லி ஒவ்வொன்றுக்கும் உள்யிருந்து மேலான நியமனம் செய்பவனாகவிருந்தும், எவனை அந்த அந்த அபிமானி தேவதைகள் அறியாதோ, எவன் அவை களைத் தனது சரீரமாகக் கொண்டு அந்த அந்த வஸ்துக் களில் இருப்பவர்களை நியமனம் செய்து கொண்டிருக் கிறானோ அவனே உனக்கு ஆத்மாவாகவும் **एष त आत्माऽन्तर्याम्यमृत:** அந்தர்யாமியாகவும் மரணமற்றவனாகவும் மிருக்கிறான் என்று; அதற்குப் பிறகு இதுவும் ஓதப்படுகிறது. (இதனால்

பரமாத்மா எங்கும் வியாபித்தும் உள் இருந்து ஒவ்வொன்றையும் நியமிப்பவனுகவும்—என்று சொல்லிற்று.

ஆயினும் மாத்யந்தினர்களின் சாகையில் இதர கூடப் பாடங்கள் பரியாயங்களாக விருக்கின்றன. **यः सर्वेषु लोकेषु तिष्ठन्** (எவன் எல்லா உலகங்களிலும் வசித்துக் கொண்டிருக்கிருனே); **यः सर्वेषु वेदेषु** எவன் எல்லா வேதங்களிலும் வசிக்கிருனே **यः सर्वेषु यज्ञेषु** எல்லா யாகங்களிலும் வசிக்கிருனே (இந்த பர்யாயமான அதிகபாடங்கள் கடக ஸ்ருதிகளாகும் உத்தாலகரின் பிரஸ்னத்திற்கு யாக்ஞ்யவல்கியர் பதில் அளிப்பது அந்தர்யாமி பிராம்மணம்—பிருஹ உபநிஷத்; அதிதைவ அதிலோக இத்யாதி. இதனுல் யாக்ஞ்யவல்கியர் விமர்சிப்பது, பரமாத்மா (பிருஹ்மம்) ஒவ்வொன்றிலும் வசித்துக்கொண்டு உள்ளிருந்து நியமிக்கிறுன் ஜீவனுக்குள்ளேயும் இருந்துகொண்டு அவனையும் நியமிக்கிறுன். காண்வ பாடம் மாத்யந்தினர்களின் பாடம் என இருசாகைகளிலும் ஓதப்படுகிறது. காண்வ சாகையில் (3-7-14) அபிமானிதேவதைகளின் பெயர்கள் சொல்லிக் கொண்டு வரும்போது, (அந்த அபிமானிதேவதைகளில் உள்ளிருந்து நியமிப்பவன் என்று சொல்லி); அந்த வரிசையில் பூமி அப்புக்கள் தேஜஸ் அந்தரிக்ஷம், வாயு சூரியன் ஆகாசம் திக்குக்கள் சந்திர தாரகைகள், ஆகாசம் இருட்டு வெளிச்சம் என்று சொல்லி நிறுத்துகிறது. இதனுல் தீர்மானம் ஏற்படுகிறது—இத்யாதி அதிதைவதம் (அபிமானி தேவதைகள்); மாத்ய சாகையில் அதிகபாடம் ஒன்று காணப்படுகிறது. ஒருவன் எல்லா உலகங்களிலும் உள் இருந்து கொண்டு யாவரையும் நியமிக்கிறுன். ஸர்வபூதங்களிலும் விருப்பவனுவும்; அதிலோகம் (ஸர்வலோகங்களிலும்), அதிவேதம் (எல்லா வேதங்களிலும்) அதியக்ஞம் (எல்லா யக்ஞங்களிலும்) அந்தர்யாமியைப் படித்துக் காட்டுகிறது.

மேலும் காண்வ பாடத்தில் **योविज्ञाने तिष्ठन्** எவன் விக்ஞானம் முதலியவற்றில் (காண் பிரு.உ.3-7-22) வசிக்கிருனே என்கிற பாடத்திற்குப் பதிலாக வேருெரு பாடம் ஓதப்படு

கிறது. (பர்யாய ஸ்தானே); यः आत्मनि तिष्टन् என்று பர்யாயமாகச் சொல்லி (எவன் ஆத்மாவில் வசிக்கிருனே என்று சொல்லி); (மாத். பிரு. உ. 3-7-22); இதற்குப் பிறகு एषत आत्माऽन्तर्याम्यमृतः என்கிற பாடத்திற்கு பதிலாக स त आत्माऽन्तर्याम्यमृतः என்கிற விசேஷ பாடமும் காணப்படு கிறது.•

[முன்பு விசேஷபாடம் स त आत्माऽन्तर्याम्यामृतः பர்யாயத் திஞல் அதிபாடம் இருக்கிறதாகவும் अद्रष्टो द्रष्टा, अश्रुतः श्रोता, अमतो मन्ता, अविज्ञातो विज्ञाता......नान्योऽतिऽस्तिद्रष्टा......नान्योऽतोऽस्ति विज्ञाता என்று அத்ருஷ்டத்வ விசிஷ்டத்ருஷ்டத்வாதி நாத்ருஷ் டந்தர ராஹித்யாதிநாச तदुभयं परमात्मनि न घटते] (யாக்ஞ்ய வல்கியரின் பதில் உத்தாலகஞக்கு [वेत्य नुत्वं......तत् सूत्रं, येनायञ्चलोकः.........भवन्ति இதற்குப் பதிலாக - वेत्य नु त्वं...... तमन्तर्यामिणम्.........सर्वाणि च भूतानि योऽन्तरो यमयति] இதேபடி சுபாலோபநிஷத்திலும் —[एष सर्वभूतान्तरात्मेति सकृत्पाठाऽस्ति - किंतु "एषत आत्माऽन्तर्यामृत इति - प्रतिपर्यायमावर्तते तेतदन्तर्यामि अन्य इति ज्ञायंते].

(அதாவது மாத்யந்தினர்களின் பாடத்தில் அதிலோகம் அதிவேதம் அதியக்ஞம் என்னும் பர்யாயங்களைப் படிப் பதின் மூலம் ஸர்வலோகங்களிலும் ஸர்வவேதங்களிலும் ஸர்வயக்ஞங்களிலும் அந்தர்யாமியை படித்து—காண்வ பாடத்தின் यो विज्ञाने तिष्टन् என்கிற பாடத்தின் ஸ்தானத்தில் மாத்ய பாடத்தில் யः ஆத்மநிதிஷ்டந் (3-7-30) என்று தொடங்கி, படிக்கப்பட்டது. இதஞல் அந்தர்யாமி யார் பரமாத்மாவா ஜீவஞ என்கிற சந்தேகம் எழுகிறது.

பூர்வபக்ஷி — பிரத்யகாத்மா (ஜீவன்); அந்தர்யாமி யைப் படித்த பிறகு வாக்ய சேஷத்திலே द्रष्टा श्रोता (5-7-27) காண்பவன் கேட்பவன் என்று, இவனைக் கண்களால் காண்பவனுகவும், காதால் கேட்பவனுகவும் ஓதி இப்படி இந்திரியங்களால் அடையப்படும் அறிவையுடையவன் ஜீவன் என்பதாலும்; மேலும் नान्योऽतोऽस्ति द्रष्टा (5-7-27)

இவனைக்காட்டிலும் காண்பவன் வேறில்லை என்று சொல்வதால் இவன் ஜீவனாக ஆகமுடியுமே ஒழிய பரமாத்மாவாகாது (இன்னொருவன் காண்பதாகவில்லாதபடியாலே ஜீவனே கரணாதிபதியாதலால் அவன்தான் யஸ்சக்ஷுஷி திஷ்டந் என்று கண்ணில் இருப்பவனும் ஜீவனே என்று வாதிக்கிறான்.

இந்த பூர்வபக்ஷத்திற்கு பதில் நாம் அளிப்போம். अन्तर्याम्यधिदैवाधिलोकादिषु तद्धर्म व्यपदेशात्—இந்த அந்தர்யாமி பல விதமாக பிரும்மத்திலே அதிதைவம் அதிலோகம் அதிபூதம் அத்யாத்மம் அதிவேதம் என்று கூறப்பட்டதாலே இரண்டு சாகைகளிலும் (காண்வமாத்யந்தின பாடங்களில்) உத்கோஷிக்கப்படுவதால் பரமாத்மாவின் குணங்களே (விபவங்களே) சூத்ரத்திலுள்ள तत् धर्मव्यपदेशात् தர்மங்களைக் கூறுவதாலே (1-2-19); பரமாத்மாவே தான் ஜீவனல்ல. இங்கே அதிதைவம் அதிலோகம் முதலிய பதங்களோடு கூடிய வாக்யங்களில் கூறப்படும் அந்தர்யாமி அபஹதபாப்மா (பாபமற்றவன்) பரமாத்மா ஸ்ரீமந் நாராயணன் ஆவார். அதிதைவம் அதிலோகம் (சூத்திரத்திலே காணப்படுபவை) கூறப்பட்டதின் காரணம் மாத்யந்தின பாடத்திலே அதிலோகம் முதலியவை காணப்படுகின்றன. அதிதைவம் பதங்களுடன் கூடிய வாக்யங்களில், இந்த பின்னால் கூறப்பட்ட வாக்யம் காண்வசாகையிலும் கூறப்பட்டுள்ளன. இதற்கு அர்த்தம் யாதெனில் அந்தர்யாமி பரமாத்மாவேதான். எப்படி? तद्धर्मव्यपदेशात् தர்மங்கள் ஓதப்பட்டிருப்பதாலே, இந்த தர்மங்கள் பரமாத்மாவினுடையதே. यदेक एव सन् सर्वलोक - सर्व भूत - सर्वदेवादिनियमयतीति - பரமாத்மா ஒரே ஒருவராக விருப்பதால் அது அவருக்கு தர்மம். அவர் ஸர்வலோகங்களையும் (மாத்யந்தின பாடம்) ஸர்வபூத (கண்வ பாடம்) ஸர்வதேவர்களையும் நியமனம் செய்கிறார். இந்த விதமாக உத்தாலகரின் பிரஸ்னை ஆரம்பமாகிறது. य इमं च लोकं परं च लोकं सर्वाणि च भूतानि योऽन्तरो यमयति என்று உபக்ரமித்து (எவர் இந்த உலகத்தை ஆள்கிறாரோ பரலோகத்தையும் மற்ற எல்லாப் பிராணிகளையும் உள்ளிருந்து கொண்டு

ஆள்கிருரோ (அது முடிக்கிறபோது) तमन्तर्यामिणं ब्रूहि அந்த அந்தர்யாமியைப் பற்றி எனக்குச் சொல். (பிரு.உ 3-7-1) இதற்குப்பதில் பிரகரணத்தில் கொடுக்கப்படுகிறது. மஹரிஷி யாக்ஞ்ய வல்கியரால் य: पृथिव्यां तिष्टन् (எவர் பிருத்வியில் இருக்கிருரோ (பிரு.உ 3-7-3); ஆகவே எல்லா உலகங்களி லும் அதே மாதிரி எல்லாப் பூதங்களிலும் எல்லா தேவர்களி லும் எல்லா வேதங்களிலும், எல்லா யக்ஞங்களிலும் உள் நுழைந்து அவைகளே மேலான நியமனம், பலவகைப் பட்ட வைகளே பல விதமாக உள் இருந்து நியமனம் செய்வதும் அவைகள் பரமாத்மாவுக்கு சரீரமாயிருப்பதும் பிருஹ்மம் ஆத்மாவாக விருப்பதும் இவை எல்லாம் (ஸர்வ பிரகார நிய மனம்) ஸர்வ சரீரதயா ஸர்வஸ்யாத்மத்வம் ஸர்வக்ஞத்வம் ஸத்ய ஸங்கல்பத்வம் இவை எல்லாம் புருஷோத்தமனை ஸ்ரீமந்நாராயணரைத் தவிர வேறு ஒருவரிடமும் ஸம்பவிக் காது. அவர் ஒருவரிடமே காணப்படும் என்பதாகும். அப் படியே தை. ஆர. 11-20-ல் (3-21) अन्त: प्रविष्ट शास्ता जनानां सर्वात्मा (அவர் பிறக்கும் ஒவ்வொன்றிலும் உள் புகுந்து நிய மனம் செய்பவராயும் அவரே எல்லாவற்றிருக்கும் ஆத்மா வாகவுமிருக்கிருர் (தை ஆ. 3-21); மீண்டும் தை. அ. 6ல் तदनुप्रविश्य सच्च त्यच्चा भवत् எல்லாவற்றையும் படைத்த பின்பு அவர் அந்த உலகத்திற்குள் நுழைந்து அவரே ஸத்தாயும் தியத்தாயும் ஆனுர்; மற்றவர்களும் அவர்களேப்போல இவ் விதம் சொல்கிருர்கள். எல்லோரையும் அடக்கி ஆளுதல் (सर्वस्य प्रशासितृत्वं), सर्वस्य ஆத்மத்வம் இத்யாதிகளேச் சொல் கின்ருர்கள். இவை பரமாத்மாவுக்குத்தான் சரியாகும்.

இதேபோல சுபாலோபநிஷத்திலும் 6-ல் नैवेह किञ्चनाग्र आसीदमूलमनाधारमिमा: प्रजा: प्रजायन्ते । दिव्यो देव एको नारायण: चक्षुश्च द्रष्टव्यं च नारायण: । श्रोत्रं च श्रोतव्यं च नारायण: ஸ்ருஷ்டிக்கு முன்பு (பிரளயத்திலே) ஒரு பிராணியும் இல்லே. ஸ்ருஷ்டிக்கப்பட்ட எல்லாப் பிராணிகளும் முன் உண்டாக்கப்பட்ட மூலத்தி லிருந்து உண்டாகவில்லே. தேவரும் பிரபுவான ஸ்ரீமத் நாராயணர் ஒருவரே அச்சமயம் இருந்தார். கண்ணும் பார்க்கப்படும் பொருளும் நாரயணரே. அதேமாதிரி கேட்

பதும் கேட்கப்படும் விஷயமும் ஸ்ரீமந் நாரயணனே என்று ஆரம்பித்து अन्तश्शरीरे निहितो गुहायामज एको नित्यः। यस्य पृथिवी शरीरं यः पृथिवी मन्तरे - सञ्चरन् यं मृत्युः नवेद, यस्यापश्शरीरम् இத்யாதி. இன்னொரு சுருதிலேயே (சுபலோ 6) ஒரே ஒரு பரமாத்மா பிறப்பில்லாதவர், நித்யர் தேகத்தினுள்ளே ஒரு குகையில் வைக்கப்பட்டிருக்கிறார். அதில் ஓதப்பட்டுள்ளது அவர் (எவருக்கு பிருத்வி சரீரமோ, எவர் பிருத்வியினுள்ளே சஞ்சரித்துக் கொண்டும் எவரை பிருத்வி அறியாதோ, எவருக்கு எல்லா ஜலங்களும் சரீரமோ இத்யாதி. यस्य मृत्युः शरीरं यो मृत्युमन्तरे सञ्चरन् यं मृत्युर्नवेद, एष सर्व भूतान्तरात्माऽपहतपाप्मा- दिव्योदेव एको नारायणः அவர் நாராயணரே, எவருக்கு சரீரம் ம்ருத்யுவோ, எவர் ம்ருத்யுவினுள்ளே சஞ்சரித்துக் கொண்டும், எவரை ம்ருத்யு அறியாதோ, அவரே எல்லா பிராணிகளுக்கும் அந்தராத்மா, பாபமற்றவர், திவ்யமான தேவர், ஒரே ஒருவர் ஸ்ரீமந்நாராயணர் ஆவர். (சுப. 7) இங்கே (ம்ருத்யு சப்தம் பிரகிருதியைக் குறிக்கும்) பரமான பரமாத்மாவுக்கு ஸர்வாத்மத்வமும், எல்லாப் பொருள்களும் பரமாத்மாவுக்கு சரீர மாதலால் சர்வ சரீரத்வமும், உள் இருந்து எல்லாவற்றையும் நியமனம் செய்வதால் ஸர்வஸ்ய நியந்திருத்வமும் பிரதிபாதிக்கப்படுகின்றன. பகவான் ஒருவருக்கே ஸ்வாபாவிகமாக அம்ருதத்வம் என்கிற தர்மம் உண்டு. (ஜீவனுக்கோ வேறுயாருக்குமில்லை ஸ்வாபாவிகமாக என்பதாம்).

மேலும் த்ரஷ்டா,ச்ரோதா என்று இவனைக் காண்பதால் மாத்திரம் இவன் கரணாதிபதியான ஜீவனைக் குறிக்காது. ஸ்வாபாவிகமாக அவருக்கு ஸர்வக்ஞத்வம் (எல்லாம் அறிகிறவனாகவும் அறிகிறதர்மத்தையும் கொண்டவனாக விருக்கிறார்); ஸத்யஸங்கல்பம் கொண்டவராகவும் ஸ்வதயேவ தனக்குத் தானே கொண்டவராக விருக்கிறார். ச்வே உ. 3-19 पश्यत्यचक्षुः स शृणोत्यकर्णः - अपाणिपादो जवनो ग्रहीता इति அவர் கண்ணில்லாமல் பார்க்கிறார், காதில்லாமல் கேட்கிறார் கைகள் கால்களில்லாமல் அவர் எல்லாவற்றையும் கிரஹிக்கிறார். மேலும் தர்சன ச்ரவணாதி சப்தங்கள் இந்திரிய

ஜன்ய ஞானமாகாது. காண்கிருன், கேட்கிருன் என்பதால் மாத்திரம் இந்திரியங்களால் ஆகிறது என்று சொல்லக் கூடாது. ரூபம் சப்தம் முதலானவற்றை அறிவதுதான் காண்பது கேட்பது எனப்படுகிறது. இதுபரமாத்மாவுக்கு உண்டு. ஜீவர்கள் விஷயத்திலே, ஸாக்ஷாத்தாக ரூபம் வர்ணம் இத்யாதிகளை அறிவது, அவனுக்குள்ள ஞானம் கர்மத்திஞல் மறைக்கப்பட்டு, அவனுடைய இயற்கையான ஸ்வபாவம் குறைந்து போய் அதனுல் அவன் இந்திரிய ஜன்ய ஞானத்தை அடைகிருன்; சக்ஷீராதி கரண ஜன்ய ஞானத்தை உடையவஞுகிருன். ஆனுல் பரமாத்மா விஷயத் திலே இந்த ஞானம் स्वत ஏவ இயற்கையானது.

சுருதியும் பிரு. உ. 3 - 7 - 3 அவ்விதம் சொல்கிறது. नान्योऽतोऽस्ति द्रष्टा இவனைத் தவிர காண்பவன் வேறில்லை. பரமாத்மாவைத்தவிர பார்க்கிறவன் (சமமாகவோ மேலான வரோ அவனுக்கில்லை) வேறில்லை என்றதும் முன் சொன்ன படி இவனைப் போலே ஸர்வஸாக்ஷாத்கார நியமனுதிகளைப் பண்ணவல்லவர்கள் வேறுஒருவர் இல்லை என்றபடி. முந்திய வாக்கியப்படி நியந்து; द्रष्टः: அடக்கி ஆளுதலும் பார்த்தலும் அவரைத் தவிர வேறு யாருமில்லை. यं पृथिवी न वेद - எவரை பிருத்வி அறியாதோ, यमात्मा न वेद எவரை ஆத்மா அறிகிறதில்லையோ (மாத். பிரு. உ III 7 - 22); இதுமாதிரி இன்னும் சில சுருதிகளாலே அந்தராத்மா வாகச் சொல்லப்படுபவர்—அவர் பூமி, ஆத்மா அதுபோல அடக்கப்பட்ட (ஆளப்பட்ட) வஸ்துக்களை நியமனம் செய் கிருர், தான் அவர்களால் காணப்படாதவராகவும் இருக்கிருர். இதே அபிப்ராயம் இம்மாதிரி சுருதிகளிலும் காணப்படு கிறது - अदृष्टो द्रष्टः, अश्रुतो श्रोता தான் பார்க்கப்படாமல் அவர் பார்க்கிருர்; தான் கேட்கப்படாமல் அவர் கேட்கிருர் என்றும்; முந்தி சொல்லியபடி नान्योऽतोऽस्ति द्रष्टा - இவனைத் தவிர காண்பவன் வேறு யாருமில்லை — பிரு. உ. 3-7-23 என்ப தால், இவரை ஆள்பவர் வேறுயாருமில்லை, இவரே எல்லா வற்றையும் ஆள்பவராகவுமிருக்கிருர் (நியந்து நியந்த்ரந் தரம் ஸர்வகாரணம் என்று காட்டப்படுகிறது). (நியந்த்ருத்

வம் விசிஷ்ட த்ருஷ்டிருத்வம் பகவானைத் தவிர அன்ய: (வேறு ஒருவர்) இல்லை என்பதாம்)

एष त आत्मा (இது உனது ஆத்மா); सत ஆத்மா. அவர் உனக்கும் ஆத்மா. இதனால் ஜீவனுக்கு ते (உன்னுடைய) வேறு ஒரு வேற்றுமையிலும் एष - स: இவை பிரும்மத்தைக் கூறுவதால் பிரித்துக்காட்டப்படுகின்றன. ஆகவே வ்யதி ரேகவிபக்தியினால் காட்டப்பட்ட ஜீவனுடைய அந்தர்யாமி ஆத்மா ஜீவனாக முடியாது. பரமாத்மாவாகத்தான் முடியும். இவ்விதம் கொள்ளாவிடில் ஜீவபரர்களிருவரையும் அறிபவ ராகக் கூறும் வாக்யங்கள் விரோதிக்கும்.

## Sutra 20—न च स्मार्तमतद्धर्माभिलापाच्छारीरश्च (1-2-20)

### ந ச ஸ்மார்த்த மதத்தர்மாபிலாபாத்சாரீரஸ்ச (1-2-20)

ஸ்மார்த்தம் ச - ஸ்மிருதியாவது, அநுமானம் - அனுமானத் தால் அறியப்படும் பிரகிருதியும், சாரீர: ச - சரீரஸம்பந்த முள்ள ஜீவனும், ந-அந்தர்யாமியல்லர். அதத்தர்மாபி லாபாத் அவர்களுக்குப் பொருந்தாத தர்மங்களைச் சொல்லு கையாலே.

ஸ்மார்த்தம் - பிரதானம்; சாரீர: ஜீவன். கபிலருடைய ஸ்மிருதியில் சொல்லப்பட்ட பிரதானமும் ஜீவனும் அந்தர் யாமியாக ஆகமுடியாது. अतद्धर्माभिलापात् அவர்களுக்குப் பொருந்தாத தர்மங்களைச் சொல்வதாலோ, அவர்களுக்கு இல்லாத தர்மங்களைச் சொல்லியும் சொல்லப்பட்ட தர்மங் களும் அவர்களுக்குப் பொருந்தாமையாலே அந்தர்யாமி அவர்களாக ஆகமுடியாது அஸம்பாவிதம், ஸ்வபாவமாகவே எல்லாவற்றையும் பார்த்தல் सर्वस्य द्रष्टृत्वं, सर्वस्य नियन्तृत्वम्, (நியமனம் செய்தல்) ஸர்வஸ்ய ஆத்மத்வம் (எல்லா வற்றிற்கும் ஆத்மாவாக விருக்கை) ஸ்வதஏவ அம்ருதத் வம் (இயற்கையாகவே மரணமற்றவனாயிருக்கை) முதலான தர்மங்கள் இங்கு அந்தர்யாமிக்குப் படிக்கப்படுகின்றன. இவை பிரகிருதி ஜீவர்களுக்குப் பொருந்தமாட்டா. ஆகை யால் இவன் பரமாத்மாவே.

இங்கு சொல்லப்படுகிறது யாதெனில் அசேதனபிர தானம் எப்படி ஸர்வக்ஞத்வம், நியந்திருத்வம் ஸர்வாத்மத் வம், ஆகாதோ அதுபோல ஜீவாத்மாவும் இம்மாதிரி தர்மங் களைக் கொண்டவனல்ல; ஏனெனில் அதனுடைய தர்மங்கள் இவைகளைவிட வேருனவையேயாகும். (அதாவது சூத்ரக் காரரின் அபிப்ராயம், எப்படி அசேதனம் அந்தர்யாமியல்ல என்று கழித்து தள்ளவேண்டியதோ அதுபோல ஜீவனும் தகுதியற்றது. ஆகவே இரண்டுமே தள்ளப்படவேண்டி யவை). இவ்விதம் பரமாத்மாவுக்கே உரிய தர்மங்களைக் கூறுதலாலும் அதேமாதிரி ஜீவபிரதானத்திற்கு அவை பொருந்தாமையாலும் வ்யதிரேகமாக் காட்டப்பட்ட முன் இரண்டு -சூத்ரங்கள் இவைகளைத் தவிர இன்னொரு காரண மும் பரமாத்மாதான் அந்தர்யாமி அந்த அந்தர்யாமி பிரத்ய காத்மா (ஜீவன்) அல்ல வேறு என்று கீழே காட்டப்படும்.

Sutra 21—उभयेऽपि हि भेदेनैनमधीयते(1-2-21

உபயே஽பி ஹி பேதேநைநமதீயதே (1-2-21)

உபயே அபி - காண்வம் மாத்யந்தினம் என்னும் இரண்டு சாகைகளும் ஏநம்- இந்த அந்தர்யாமியை, பேதேந ஜீவனிலும் வேறுபட்டவனாக, அதீயதே ஹி- ஓதுகின்றன வன்றோ?

உபயே இரண்டு சாகைகளிலும் (மாத்யந்தின காண்வ); ஏந (இது-அதாவது) ஜீவாத்மா-அவனுடன்கூட அசேதனமாகிற வாக்கு முதலியவை இந்த அந்தர்யாமியை (ஏநம்) வேறுபட்டவனாக ஓதப்பட்டிருக்கின்றன, ஏனெனில் ஏந என்பதால் பிரித்துக் காட்டி-இவைகள் அந்தர்யாமிக்கு அடங்கியவர்கள் (எவன் ஆத்மாவில் உள் நுழைந்து நியமிக்கிருனோ அவனே உனக்கு ஆத்மாவாகவும் அந்தர் யாமியாகவும் மரண மற்றவனாக விருக்கிறான் என்று வேறு படுத்திக் காட்டியபடியால் ஜீவனையும் பிரகிருதியாகிற சரீரத்தையும் காட்டியபடியால்.

य आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरोयमात्मा न वेदयस्यात्माशरीरं य आत्मानमन्तरोयमयति, स त आत्माऽन्तर्याम्यमृत: எவன் ஆத்மாவில்

நிற்கிருனோ, ஆத்மாவின் உள்ளேயிருக்கிருனோ, எவனை ஆத்மா அறியாதோ, எவனுக்கு ஆத்மா சரீரமோ, எவன் ஆத்மாவை உள் நுழைந்து நியமிக்கிருனோ, அவனே உனக்கு ஆத்மாவாகவும் அந்தர்யாமியாகவும், அம்ருதனுகவுமிருக்கிருன். இதுமாத்: சாகை; காண்வ சாகையில் யோ விஜ்ஞாநெ திஷ்டந் என்று தொடங்கும் ஸ்தானத்தில் படிக்கப்பட்டது. யோவிஜ்ஞானே திஷ்டந் என்று காண்வசாகையில்-இரண்டு இடங்களிலும் பரமாத்மாவுக்கு எல்லோரையும் உள் இருந்து நியமிப்பதாலே இதனாலே அந்தர்யாமியான பரமாத்மாவைக் காட்டிலும் ஜீவனை வேறுபட்டவனுகப்படிப்பதால் விலக்ஷணத் வேந-ஜீவன் அடக்கப்படுகிறவன், ஆளப்படுகிறவன், பரமாத்மாவின் அதீனன் என்பதாகிற அர்த்தம் தெறும், ஆகவே இவ்விதம் நன்கு காட்டப்பட்டது. அந்தர்யாமி பரமாத்மா ஸ்ரீமந்நாராயணரே அவர் விலக்ஷணர் (வேறுபட்டவர் நாமங்கள், ரூபம், இத்யாதிகளால்). அபஹ்தபாப்மா (இயற்கையாகவே பாபமின்மை, பசிதாக மின்மை இத்யாதி) பரமாத்மாநாராயணர் என்று சித்தாந்தம் செய்யப்பட்டது. இப்படி ஸர்வ பூதாந்தர்யாமியாய் விளங்குபவர் என்று சுபோலோபநிஷத்திலே பறை சாற்றப்பட்டது அந்தர்யாமி ஸ்ரீமந்நாராயணரே என்று ஸர்வ சாகாப்ரத்யய நியாயத்தாலே ஸித்திக்கிறது. (விக்ஞானபதம் விக்ஞாநேதிஷ்டந் என்பதிலும், ஆத்மா தௌ என்பதில் சேதன-ஜீவாத்ம பரம் என்று தெளியவும்): ஆத்மா ஸாதாரண சப்தம்.)

அத்ருஸ்யத்வாதி குணகாதிகரணம் (1-2-5 ம-2)

अदृश्यत्वादि गुणको धर्मोक्तेः (1-2-22)

அத்ருஸ்யத்வாதி குணகோ தர்மோக்தே:

*அத்ருஸ்யத்வாதி குணக:* - காணப்படாமை முதலானவற்றைக் குணங்களாக உடையவனுக ஓதப்படுபவன் (பரமாத்மாவே), *தர்மோக்தே:* (அவனுக்கே பிரத்யேகமாக உரிய) குணங்களைச் சொல்லுகையாலே.

முண்டகத்தில் சொல்லப்படும் தத்வம் மூல பிரகிருதி யாகலாம் என்பது இதில் தள்ளப்படுகிறது. முன் அதிகர ணத்தில் அத்ருஷ்டோ த்ருஷ்ட தான் ஒருவராலும் காணப் டாமல்; அனைத்தையும் காண்பவன் பரமாத்மா வென்று நிரூபிக்கப்பட்டது. அந்தர்யாமியான பரமாத்மா, அப்படிக் காண்பவனுகச் சொல்லாமல், காணப்படாததாக மாத்திரம் சொல்லப்படும் (முண்.உப தத்வம்) மூல பிரகிருதி அல்ல, அதர் வணிகர்கள் தங்கள் பாடங்களில் இவ்விதம் ஓதுகிறார் கள் (மு 1-1-6) अथ परा यया तदक्षरमधिगम्यते, यत्तदद्रेश्यमग्राह्यमगोत्रमवर्णमचक्षुश्श्रोत्रंतदपाणिपादम् । नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं तदव्ययं—यद्भूतयोनिं परिपश्यन्तिधीराः - इति - பர அபர வித்யைகள் இரண்டு உண்டு. அதில் பரவித்யையாலே அக்ஷரமான (அழிவற்ற) அந்தப் பொருள் அடையப்படுகிறது. அப் பொருள் காணப்படாதது, அறியப்படாதது. கோத்ரம் மில்லாதது வர்ணமற்றது. கண்ணும் காதுமற்றது, கை காலுமில்லை. ஆனால் ஸர்வ பூதங்களுக்கும் காரணமாக விருப்பது- இதை வித்வான்கள் காண்கிறார்கள். (பரிபஸ் யந்தி) நன்றாகக் காண்கிறார்கள் (மனத்தினாலே என்று அர்த்தம் (முண் 1-1-5-6). இதேபடி, பூதயோனியான அக்ஷ ரத்தைப் படித்தபின்பு, மேல்வரும் வாக்யம் ஒன்றில் (முண் 2-1-2) अक्षरात्परत: पर: इति - மேலான அக்ஷரத்தைக் காட்டிலும் மேலானவன் என்று மற்றொருதத்வம் ஓதப்படு கிறது. (அதாவது பிரக்ருதி புருஷரு, அல்லது பரமாத்மா வோ இரண்டு இடங்களிலும் ஓதப்படுகிறது, எது சரி யாகும்? பிரக்ருதி புருஷன் என்பதே சரியாகும் என பூர்வ பக்ஷம். பிரகிருதிக்கு காணப்படாததாகவும்; அசேதனத் திலும் மேலான இன்னொரு தத்வம் புருஷன் என்றும் சொல்லப்படுவதாலே பரமாத்மாவாகிற ஒருதத்வமாக முடியாது- வெவ்வேறு தத்வங்களான பிரக்ருதி புருஷர்களே யாகவேண்டும் என்பதே பூர்வபக்ஷம்)

**ஸ்ரீபாஷ்யம்** — இங்கே சந்தேகம் அத்ருஸ்யத்வாதி (காணப்படாமை) முதலிய குணங்களையுடைய அக்ஷரம் (மூலப்பிரகிருதி); அதற்குமேல் இருக்கும் த்ருஷ்டம் கார்ய

ஜாதம் - பிரகிருதியிலிருந்து வேறுபட்டதான புருஷன். ஆகவே பிரகிருதி-புருஷனு (இரண்டுமா) அல்லது இரண்டு இடங்களிலும் ஓதப்படுபவன் பரமாத்மாவேதானு ? பூர்வ பக்ஷம்-பிரகிருதிபுருஷன். எப்படி ? இந்தவிடத்திலே அக்ஷரம் என்பதற்கு சேதனதர்மங்கள் (பார்க்கிறவன் இத்யாதி) ஓதப்படவில்லை. பிருஹ் உப. 3-7-23 अदृष्टो द्रष्टा- ஒருவராலும் காணப்படாதவனுயிருப்பவன்; அனைத்தையும் தான் காண்பவன் என்று ஓதப்பட்டதாலே இவையாகிற சேதன தர்மங்கள் ஓதப்படவில்லை; மேலும் अक्षरात्परतः परः என்றும் (மு. உ. 2-1-2) (மேலான அக்ஷரத்தைக்காட்டிலும் மேலானவன் என்றும்) கூறப்பட்டிருக்கிறது. மூலபிரகிருதியைவிட மேலான புருஷன் (ஜீவன்) என்று கொள்ளலாமே, விகாரங்களை அடையக் கூடிய பூதயோனியான (பஞ்சபூதங்களுக்குக் காரணமான) அக்ஷரம் - ஸ்தூலமாகவிருக்கும் அசேதனப் பொருள்களுக்குத் தான் காரணமாயும், தானே சூக்ஷ்மமானதுமான மூலபிரகிருதி அதைவிடமேலான புருஷன் (ஜீவன்), அதுவே இரண்டாவது வாக்கியத்தில் சொல்லப்பட்டதாகும். மூலபிரகிருதிக்கு, ஓதப்பட்ட விசேஷணங்கள் முந்தின வாக்கியத்திலே "எதற்கு நிறம், கோத்ரம் இத்யாதி இல்லையோ இந்த உலகிற்கு காரணமானதே அதை விவேகமுள்ளவர்கள் ஸாக்ஷாத் கரிக்கிறுர்கள் என்பது யாவும் மூலபிரகிருதிக்கு பொருந்தும் விசேஷணங்கள். சாங்கியபக்ஷம் இங்கு சொல்லப்படுகிறது. அப்பேற்பட்ட பிரகிருதியைக் கூறி அதற்கு மேல் ஜீவனைச் சொல்லியதாலே பிரும்மத்தைப்பற்றிய இங்கு சம்பந்தம் ஒன்றுமில்லை என்பதாம். அப்பேற்பட்ட புருஷன் ஸம்ஷ்டி புருஷனுகும். அவனே மூலபிருகிருதியைவிடபர:- மேலானவன் என்பதாகும்.

என்ன சொல்லப்பட்டதென்றால், அக்ஷரம் விபாகமின்றி காரணதசையிலிருக்கும். மூலபிரக்ருதி இங்கேயும் அதே அர்த்தத்தில் 1-1-6ல் சொல்லப்படுகிறது. ரூபம் இத்யாதிகளைக் கொண்டதும், ஸ்தூலமானவைகளாகவிருப்பதுமான பிருத்வி முதலான பஞ்சபூதங்களுக்கு

த்ருஸ்யத்வாதி காணப்படுகை முதலான தன்மைகள் இல்லையென்று கூறப்படுகின்றது. இந்த பூதயோனியான அக்ஷரம் காரணமாயிருப்பதாய், சூக்ஷ்மமான ரூபத்தைக் கொண்டதும், பிருத்வியைப்போல (ஸ்தூலமான அசேதனப் பொருள்களுக்கு) ஸஜாதீயமானதாய் விளங்கும் அசேதன மான மூலபிரக்ருதியையேகொள்வது,ஸ்தாபிதமாக எடுத்துக் கொள்வது உசிதமே. तच्च प्रधानमेव; அதைவிட மேலானதாகக் கொள்வது காரணபிரும்மா சதுரானனுகிற ஸமஷ்டிபுருஷனே ஆகும்- (The aggregate of Individual Souls). ஆக ஒரே தத்வமல்ல, வெவ்வேறு தத்வங்களாகும். காணப் படுதல் பூதயோனியான அக்ஷரம் (சூக்ஷ்ம தசையில்) ஸ்தூலத்திற்கு காரணமாயிருப்பது - சூக்ஷ்மமான மூலப் பிரகிருதி - காணப்படாதது. அதனுல் அக்ஷரம், புருஷன் இருவர்களும் புருஷனை ஆஸ்ரயித்த பிரகிருதி மஹத் முதலிய தத்துவங்களை விசேஷ பர்யந்தம் விகாரத்தை அடைவதாலே ப்ரஸூதே இதி - உண்டாக்குகிருள்.

எதுபோல்வென்ருல் சிலந்திப் பூச்சியைப் போல; மு. உ. 1-1-7 यथोर्णनाभिः सृजते गृह्णते च यथापृथिव्यामोषधयः संभवन्ति, यथा सतः पुरुषात् केशलोमानि तथाऽक्षरात् संभवतीह विश्वम्- எப்படி சிலந்திபூச்சி தன் வலையை உண்டாக்கியும் உள் இழுத்துக் கொண்டுமிருக் கிறதோ, எப்படி மண்ணினின்றும் பயிர்வகைகள் உண்டா கின்றனவோ, எப்படி புருஷன் உடலிலிருந்து மயிர் நகம் வகைகள் தோன்றுகின்றனவோ, அப்படியே இந்த அக்ஷரத் திலிருந்து உலகம் உண்டாகியது என்று கூறப்பட்டதும் இந்த பிரகிருதி தான் கூறப்படுகிறது. अक्षरशब्द वाच्यமான பிரகிருதியைக் கூறி பிறகு अक्षरात् परतः परः என்றவிடத்திலும் ஜீவனையும் கூறியதால், சேதனின் செயலால் யேற்படும் மாறுபாட்டிற்கு சிலந்தியை எடுத்தது. சேதனன் செயல் யேதும் வேண்டாது ஒன்ருேடொன்று அசேதன சம்பந்தமே போதும் எனக்காட்ட, பூமியில் பயிர்வகைகளைக் காட்டியது. மயிர் உடம்பில் தோன்றும் திருஷ்டாந்தம், சேதனனின் இருப்பு மட்டிலும் போதும் - செயல் அவசியமில்லை எனக் காட்ட எடுத்தது. ஆகவே இந்த பிரகரணத்திலே பிரதான மும் புருஷனுமாகிற இரு தத்வங்கள் பிரதிபாத்யம்.

(ராமானுஜரின் அபிப்ராயம் அக்ஷரம் (1-1-6) பிரும்மத்தைக் குறிக்கிறது. பிரகிருதி (1-1-2)ல் காட்டப்படுகிறது. எந்த குணங்கள் 1-1-6ல் சொல்லப்பட்ட அக்ஷரத்திற்கு நிஷேதிக்கப்பட்டோ அல்லது உடைமையாகக் காட்டப் படுவது, பிரும்மத்தைக் குறிப்பதாகும் ஆனால் பூர்வபக்ஷி சொல்வது - 1-1-6ல் அதிருஸ்யத்வாதி குணங்கள் நிஷேதிக் கப்பட்டதாலே அக்ஷரம் மூலபிரகிருதி அல்ல ஆனால் அது அதைப் போல ஒரு தத்வம், அதிசூக்ஷ்மமான தசையில் விபாகமின்றி ஒன்ருக ஈஷிக்கொண்டிருக்கும் தன்மையைக் காட்டுவதாம் (இது இப்படிச் சொல்வது போலவிருக்கிறது) ஒரு மனிதன் இது ஒரு நாயல்ல அது ஒரு பூனையாகவோ அல்லது நாயைப் போல ஒரு பிராணியாக விருக்கலாம் வேறு ஒரு அசேதனப் பொருளாக ஆகமாட்டாது.)

இவ்விதம் கொள்ளப்படுமானல், நாம் பதில் அளிக்கிறோம். अदृश्यत्वादि गुणको धर्मोक्तिः- எந்தப் பிராணிக்கு அத்ருஸ்யத்வாதி குணங்கள் உண்டோ (காணப்படாமை முதலானவற்றைக் குணமாக உடையவனுக ஓதப்படுபவன் பரமாத்மாவோ) ஏனெனின் அவனுக்கேயுரிய தர்மங்களாகிற (அதிருஸ்யத்வாதி) சொல்லப்படுவதாலே, அந்த பரமாத்மாவோ இந்த குணங்களை உடையவனுகவும் அவனே அக்ஷராத் பரத: பரனுக (இங்கே அக்ஷரம் - மூலபிரகிருதி மஹதாதிகளைக் காட்டிலும் மேலானதான அக்ஷரம் எனப்படும் மூலப்ரகிருதியைக் காட்டிலும் மேலானவன் - ஜீவன் அவனையும்விட மேலானவன் பரமாத்மா என்பதாகும்.)

எப்படி பரமாத்மா சொல்லப்படுகிறுன் என்பதை விளக்க य: सर्वज्ञ: सर्ववित्-எவன் எல்லாப் பொருள்களின் ஸ்வரூப ஸ்வபாவங்களை பொதுவாக விசேஷமாக அறிவானே என்று தொடங்கி; முதலாவது வாக்யத்தில் காணப்படாமை முதலான குணங்களை உடைய பூதயோந்யக்ஷரமும் இரண்டாவது வாக்யத்தில் அக்ஷரத்தைக் காட்டில் மேலானவன் ஜீவன் அவனுக்கும் மேலானவன் பரமாத்மாவே. இந்த பூதயோந்யக்ஷரத்திற்கு ஸர்வக்ஞத்வம் (அதிருஸ்யத்வாதி குணங்களைப் போல) ஓதப்படுவதால் அக்ஷரம் பூர்வபக்ஷி

அபிப்ராயப்படி பிரகிருதி ஆகாது. இரண்டாவது வாக்யத்தில் அக்ஷரம் மூலபிரகிருதியே ஆகும். இந்த மூலபிரகிருதிக்கு மேலான புருஷதத்வத்திலும் மேலானவனுமிருப்பவனும் பரமாத்மாவே. முதல்வாக்கியத்தில் பூதயோன்யக்ஷரமாக ஓதப்பட்ட பரமாத்மாவே ஆகும்.

அந்தபடி यया तदक्षरमधिगम्यते, எந்த வித்தையினால் அந்த அக்ஷரம் அறியப்படுகிறதோ (மு. 2-1-1-6) இந்த அக்ஷரத்திற்கு அத்ருஸ்யத்வாதி குணங்கள் இருப்பதாக ஓதப்படுகின்றன (அதாவது பரமாத்மா); பிறகு तत् अक्षरात् संभवतीह विश्वम्- (மு. 2-1-1-2) இந்த அக்ஷரத்தினின்று சேதனாசேதனங்கள் அடங்கிய விஸ்வம் (ஜகத்) உண்டாகிறது. இதனால் ஜகத் காரணம் ஓதுகையாலே, இது மூலபிரகிருதியாகாது பரமாத்மாவே ஆகுமென்றும். பிறகு ஓதப்படுகிறது- यः सर्वज्ञः सर्ववित् यस्य ज्ञानमयं तपः । तस्मादेतद्ब्रह्म नामरूपमन्नं च जायते । எவன் எல்லாவற்றையும் பொதுவாகவும் விசேஷமாகவும் அறிகிறானோ (பூதயோன்யக்ஷரத்தை எல்லாம் அறிந்தவன்); எல்லாவற்றின் ஸ்வரூபஸ்வபாவங்களை அறிகிறவன் என்று தொடங்கி பூதயோன்யக்ஷரத்திற்கு ஸர்வக்ஞத்வாதி முதலான தர்மங்கள் ஓதப்படுகின்றன. यस्य ज्ञानमयं तपः எவனுடைய தபஸ் (ஆலோசித்தல் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஞானமயமாகவுமிருக்கிறதோ; அவனிடமிருந்தே நாம ரூபம் அன்னம் கொண்ட வஸ்துக்கள் பிறந்தன-ஆகவே இந்த அக்ஷரம் பூதயோதி அக்ஷரம் என்று, சேதநா சேதனங்களடங்கிய உலகத்திற்குக் காரணம். இது மூலபிரகிருதியாகாது.) பரமபுருஷனேயாகும் (ஸர்வக்ஞத்வாதி குணங்களைப் போல); பூதயோன்யக்ஷரத்திற்கு ஸர்வக்ஞத்வாதி பொருந்தும். பிறகு சுருதியில் ஓதப்படுகிறது—अक्षरात् परतः परः- என்பதால் பரமாத்மா மேலானவன் (பர:); அக்ஷரத்தைக் காட்டிலும் மேலானவன்; எந்த அக்ஷரமோ, எதிலிருந்து எல்லாப்பிராணிகளும் உண்டாயினவையோ, எதற்கு ஸர்வக்ஞத்வம் அதிருஸ்யத்வாதி குணங்களும் ஓதப்படுகின்றனவோ, அந்த பரமாத்மாவேயாகும். भूतयोन्यक्षरं सर्वज्ञमेव परत्वेन व्यपदिश्यते என்பதாகும் ஆகவே अक्षरात्

परस् परः:- இங்கே அக்ஷரசப்தத்தால் பஞ்சமி அந்தம்; அக்ஷரம் என்கிற பதம். இன்னொரு அக்ஷரத்தை (பரமாத்மாவை) சொல்லவில்லை எந்த அக்ஷரம் முந்திச் சொல்லப் பட்டதோ எதற்குக் காணப்படாமை போன்ற தர்மங்கள் ஓதப்படுகின்றனவோ, அத்தகைய பரமாத்மாவை அக்ஷரம் (பஞ்சமியில் இருக்கும் அக்ஷரம் अक्षरात्......பர: குறிக்க வில்லை, ஏனெனில் ஸர்வக்ஞத்வம் பொருந்திய பரமாத்மா விஸ்வயோநி: எல்லா சேதன அசேதனப் பொருள்களுக்கும் ஜகத்காரணமாவதால், அவரே ஸர்வஸ்மாத் பரனை பரமாத்மா ஸ்ரீமந்நாராயணனே ஆகிறபடியாலே, ஸர்வ ஜகத்காரணனபடியால் அவனே மேலான தத்வமானபடி யால் அவரைவிட வேறான ஒன்று பரத்வமில்லாதபடியாலே भूतसूक्ष्मचेतं யேற்படாது. ஆகையால் அக்ஷரம் என்கிற பதம் இங்கே காட்டுவது காரணதசையிலிருக்கும் பூதசூக்ஷ்ம அசேதனமான மூலபிரகிருதியைக் காட்டுவதாகும்.

**அனுபந்தம் (விளக்கம்) :-**

(சங்கரபாஷ்யத்தின் கருத்துக்களையும் நோக்கவும். முண்டகத்தில் அத்ருஸ்யத்வம் முதலான குணங்களை யுடையவராகச் சொல்லப்படும் பூதயோநியானவர் (பரமாத் மாவே). ஏனெனில் தர்மோக்தே:- ஸர்வக்ஞத்வம் முதலிய தர்மங்கள் காணப்படுவதே அதன் காரணம், பூதயோநி: பிரதானமா? ஜீவனு ஈஸ்வரனு என்கிற சந்தேகம் எழ, ஜீவன் பக்ஷத்தில் யோநி: என்பதற்கு நிமித்த காரணம், ஈஸ்வரனாக முடியாது. ஜீவனே பூதயோநயாகலாம் என்பதும் பூர்வ பக்ஷம்; யோநி: என்பதை உபாதான காரணமாகக் கொண்டால் பூதயோநி: பிரதானத்தைக் குறிக்கும். दिव्यः (திவ்ய: ஸ்வப்ரகாசன்) எனச் சொல்லியிருப்பதால் ஜீவன் பூதயோநியாக ஆக் முடியாது. அத்துடன் அக்ஷரத்தைக் காட்டிலும் அது வேறானது என வேற்றுமை சொல்லி யிருப்பதாலே பிரதானமும் பூதயோநியாக முடியாது என்பது ஸித்தாந்தம் तत् अक्षरम्- (अतपरायणा......धीराः என் பதில்) பரா என்பதில், பரவித்யை (பிரும்மஞானம்) யானது சொல்லப்படுகிறது.

அந்த பரவித்யைக்கு அக்ஷரம் யாதெனில் நிர்குண பிருஹ்மம் अद्रश्यम्(ஞான இந்திரியங்களால் அறிய முடியாது) अग्राह्यम्-अवर्णं-अचक्षुः श्रोत्रम् अपाणिपादम्-नित्यं-विभु-सुसूक्ष्मं--अव्ययम्-भूतयोनिम्-(பிராணிகளுக்குக்காரண (அபிந்நநிமித்தோபாதான காரணமானதும்)ஆக यत् எதை धीराः परिपश्यन्ति(ஸாக்ஷாத்கரிக்கிறார்களோ) तत् அதுதான் சாஸ்திரபிரஸித்தமான அக்ஷரம், எதனுல் அந்த அக்ஷரம் அறியப்படுமோ, அது பரவித்யை, அதற்கு விஷயம் अक्षरम् எனச் சொல்லப்படுகிறது. பரமேஸ்வரனைவிட வேறு ஒன்று அத்ருஸ்யத்வம் முதலிய குணயோகங்களை உடைய அக்ஷரம் எனச் சொல்லப்படுமாளுல், அப்போது அந்த வித்யை பரவித்யை ஆகாது. ஆகவே பரவித்யையினுல் அடையப்படும் பலன் மோக்ஷ ஞானம்.

பூர்வபக்ஷி - அசேதனமான பிரதானம் பூதயோனியாகலாம் என்கிறுன் பூதயோனிக்கு திருஷ்டாந்தமாக அசேதனங்களை சுருதியிற் சொல்லியிருப்பதன் காரணம், அதுமாதிரி ஊர்ணநாபி (எட்டுக்கால் பூச்சி) உதாரணம் கொடுத்திருப்பதால், பூமியில் ஓஷதிகளும் உடம்பிலிருந்து மயிரும் நகமும் உண்டாகின்றனவோ, அங்கனமே அக்ஷரத்தினின்றும் விஸ்வமானது உண்டாயிற்று என்பதாம். சேதன திருஷ்டாந்தம் ஊர்ண நாபி; உயிருடனிருக்கின்ற சரீரமும் இவ் விஷயத்தில் திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டது. ஊர்ணநாபியின் சரீரம் அசேதனம். அதுபோல புருஷ சரீரம் (மயிர் முளைப்பதற்குக் காரணம்.) இத்தால் சேதனுதிஷ்டிதமான அசேதனம் உலக பிரசித்தமானவை. மேலும் முந்திய அதிகரணத்தில் அதிருஷ்டத்வாதியான உபதேசம் சம்பவித்த போதிலும் திருஷ்ட்ருத்வாதியான உபதேசம் (காண்பவன்) என்று இருக்கிறது. இதனுல் பிரதானம் மறுக்கப்படுகிறது. மேலும் ஸர்வக்ஞ: ஸர்வவித் என்கிற தர்மங்களும் ஓதப்படுகிறது. அசேதனமான பிரதானத்திற்கோ அல்லது குறைவுபட்ட அறிவையுடைய (உபாதியினுல் பரிச்சின்னமான அறிவை உடைய) ஜீவனுக்கும் ஸம்பவிக்காது.

மேலும் अक्षरात्संभवतीह विश्वं அக்ஷரத்தினின்றும் விஸ்வம் உண்டாகிறது என்பதால் பூதயோநி பரமாத்மாவே. अक्षरात् परतः परः என்கிற விடத்திலே பிரகிருதமான பூதயோநியான அக்ஷரத்தைக் காட்டிலும் பரமாக (மேலானவர்) ஒருவரும் சொல்லப்படவில்லை. எதனால் ஸத்யமும் அக்ஷரமுமான புருஷனை அறிவானோ, அந்த பிருஹ்மவித்யையை உள்ளபடி உபதேசித்தார் என்று தொடங்கிப் பூதயோநியும் அத்ருஸ்யத்வமுமாகிற குணங்களை உடைய அதே "அக்ஷரம்" வக்தவ்யமாக (உபதேசிக்கப்பட வேண்டியதாக) பிரதிக்ஞையும் இருக்கிறது. ஆகவே பரவித்யைக்கு அக்ஷரம் விஷயமாகிறது. अभ्युदः (அப்யுதய)த்தை (விஷயேந்திரிய சுகம்) இதை பயனாகவுடைய வித்யை எதுவோ அது பரவித்யையாகாது. அபரவித்யை யென்றும்; நிஸ்ரேயஸ் (மோக்ஷத்தை) ஸைப்பலனாக உடைய வித்யை எதுவோ அது பரவித்யை யென்றும் ஆக, பர அபர வித்யைகளின் பாகுபாடு (பிரித்துக் கூறுதல்) யேற்படுகின்றது, ஆகவே பிரதானத்தை விஷயமாக உடைய வித்யை மோக்ஷத்தை அளிப்பது என்பது ஒருவராலும் ஒப்புக்கொள்ளப்படவில்லை. ஆகையால் அபரவித்யை ருக்வேதாதிரூபமான கர்மவித்யை யாகும், இவர்கள் ஜராமரணம் அடைவதால் பிருஹ்ம ஞானமே சிறந்தது எனத் தெளிந்து பிருஹ்ம சாக்ஷாத்காரத்திற்காக வேண்டி ஸமித்தைக்கையிற் கொண்டு ஸ்ரோத்ரியனான குருவை அடைகிறான். இதனால் பரவித்யையின் அதிகாரி சூசிக்கப்படுகிறது, ஆகவே பிருத்வி முதலான திருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்டதாலும் தார்ஷ்டாந்திகமான பிருத்வி ஸ்தூலமாகவிருக்கிறது என்கிறதாலே பூதயோநியும் ஸ்தூலமாக உள்ளது என ஒப்பப்படுவதில்லை.

ஆகவே அத்ருஸ்யத்வம் முதலிய குணமுள்ள பூதயோநி பரமாத்மாவே ஆகும் என்பது சங்கரரின் சித்தாந்தம். (ஜீவனுமில்லை பிரதானமுமில்லை) பிரதானம் எனப் பெயரிய ஸ்வதந்தரமான ஒரு தத்துவத்தை ஒப்புக் கொண்டு (சாங்கியன் சொல்வது போல) அதைக்காட்டிலும் மேலான பரமாத்மா என்று சொல்லப்பட்டது, ஆனால் அசேதனத்தை பிரதானம்

புருஷன் (செயல்படுவது) இவற்றிற்கு வேருன பரமாத்மா தான் அக்ஷரம் என்று ராமானுஜரால் காட்டப்படுகிறது. ஆகவே ராமானுஜரால் கையாளப்பட்ட அடுத்த சூத்ரம் விசேஷண பேத வ்யபதே சாப்யாம் சநேதரௌ என்பதாகும். சங்கரராலும் சொல்லப்பட்டு ஜீவன்பிரதானம் பூதயோனி களாக ஆகமாட்டா, ஏனெனில் விசேஷணங்கள் (பூத யோனிக்குத் திவ்யோஹ்ய மூர்த்த: (திவ்யர் அமூர்த்தர் என்றும் अक्षरात् परत: அக்ஷர அவ்யாக்ருதம் என்பதற்கு பரத: மேலானது என்கிற அடைமொழி கொடுத்து, அதைக் காட் டிலும் பர: என்பதால் ஈஸ்வரனே ஆகும் என்று முடிவு கட்டிஞர் சங்கரர்).

**ஸ்ரீபாஷ்யம்**

Sutra-23 विशेषणभेदव्यपदेशाभ्याम् च नेतरौ (1-2-23)

விசேஷணபேத வ்யபதே ஸாப்யாஞ்ச நேதரௌ (1-2-23)

விசேஷணபேத வ்யபதே ஸாப்யாம் ச - விசேஷிப்பதா லும் பேதத்தை உறுதிபடுத்துவதாலும், இதரௌ - பிரகிருதி புருஷர்கள் ந - இங்கு சொல்லப்படவில்லை.

விசேஷம் - பூதயோன்யக்ஷரமான இப்பொருளை அறிந் தால் ஸர்வவிக்ஞானம் எல்லாவற்றையும் அறிந்ததாகும் என்று விசேஷிக்கப்படுகிறது. பிரதானம் ஜீவன் இவர்களில் வேறுபட்ட அக்ஷரம் ஸ்ரீமந்நாராயணனே. மேலே சொல்லப் பட்ட சூத்திரத்தில் अक्षरात्परत: पर என்பதில் அக்ஷரசப்தம் பிரகிருதத்திலே அத்ருஸ்யத்வாதி குணங்கள் கொண்ட அக்ஷரம் பூதசூக்தம் அசேதன மூலப்ரகிருதியாகிற படியால் பரமாத்மாவைக் குறிக்கவில்லை, ஏனெனில் ஸர்வக்ஞுகிற பரமாத்மா விஸ்வயோனி: ஸர்வஜகத் காரணம், எல்லாப் பொருள்களிலும் மேல்பட்டவருன படியாலே ஸர்வஸ்மாத் பரனுகவிருக்கிறபடியாலே, அவனை விட்டு வேறு ஒன்றுக்கு பரத்வம் ஸம்பவிக்கமாட்டாது.

(ஸங்கதி) ஆகையால் இந்த விடத்திலே அக்ஷர சப்தம் பூத சூக்ஷ்மமான அசேதனத்தைக் குறிப்பதாகும். (பரமாத்

மாவின் தர்மங்கள் அதற்கு ஒட்டாதபடியால்). இனி ஜீவ னின் பக்ஷத்தையும் தள்ள வேண்டியது. இருவர்களையும் தள்ளி விட்டு அவர்களைக் காட்டிலும் உயர்ந்த நாராயணனே யாக முடியும் என்று மீண்டும் காட்டப்படுகிறது. விசேஷிப் பதாலும், பேதத்தைச் சொல்லுகையாலும், காட்டப்பட்டது. முதல் வாக்கியத்தில் கூறப்பட்ட பூதயோனி - பரமாத்மா; இரண்டாவதான அக்ஷராத் பரத: பர: என்னுமிடத்திலும்- புருஷன் சொல்லப்படவில்லை. பரமாத்மாவே ஆகும் - ஏனெ னில் அக்ஷரத்திற்கு மேலான மற்றொன்றைச் கூறுவதால் இதுவும் பரமாத்மாவேயாகும் என்பது சரியாகும் முதலில் கூறப்பட்ட பூதயோ்யக்ஷரமாகக் கூறப்பட்ட பரமாத்மா தான் என்பது சித்தாந்தம். பரத: அக்ஷராத்—பர: என்று கூட்டிக் கொண்டால் பிரதானத்தைக் காட்டிலும் மேலான ஜீவனைக் காட்டிலும் மேலான பரமாத்மா என்பது தேறும் பூதயோந்யக்ஷரத்தை வி சே ஷி த் தி ரு ப் ப தா லு ம் பிர கரணத்தை ஒட்டி பேதம் சித்திப்பதால் அர்த்தம் இவ்விதம் கொள்ளவேண்டியது):'

**ஸ்ரீபாஷ்யம் :—** இந்த காரணத்தினாலும் கூட அந்த அக்ஷரம் எல்லாப் பூதங்களுக்கும் காரணமான பூதயோனி அக்ஷரம் - பிரதானமாகாது அது ஜீவனுமாகாது. இந்த பிரகரணத்திலே ஓதப்படும் வேற்றுமை படுத்தும் தர்மங்கள் வ்யாவர்த்தியதி என்று அர்த்தம். அதனாலே ஏகவிக்ஞானேந ஸர்வ விக்ஞானம் கிடைக்கிறது என்கிற பிரதிக்ஞை பிரதி பாதிதம்-நிருபணமாகும்.

(அதாவது அக்ஷரத்தைத் தெரிந்து கொள்வதால் அதனால் உண்டாக்கப்பட்ட எல்லா வஸ்துக்களையும் தெரிந்து கொள்ளப் படும். இங்கு உபாதான நிமித்த ஸஹகாரி காரணம் யாவும் பிரும்ம மதலால் பிரதானம் ஜீவன் இவர் களைப் பிரித்துக் காட்டி வ்யாவர்த்தயதி என்கிற பதத்தால் சூசிதம். உதாரணங்களாகக் கொடுக்கப்படும் சிலந்திபூச்சி ப்ருத்வி உயிருள்ள (மயிர், நகம் இந்யாதி தேகத்தில் யேற் படுதல்) இவைகளால் பிரகிருதி உபாதான காரணமாகலாம்,

சேதன அதிஷ்டானத்தில் தானே தன்னைப் பலவிதமாகக் கொள்ளலாம் என்று சொல்லக் கூடும். ஆனால் பிரும்ம விஷயத்தில் அவ்விதமில்லை. அதுவே ஸர்வ காரணமா கிறது. பிரகிருதி, பரமாத்மா அதிஷ்டானமின்றி செயல் படாது என்கிற விஷயம் பின்னால் சொல்லப்படும்).

**ஸ்ரீபாஷ்யம்** :- அக்ஷரத்தை (பரமாத்மாவை) பிரதானம் ஜீவன் இவர்களிடமிருந்து अक्षरात्परतः परः என்கிற வாக்யத் தினால் பிரித்துக் காட்டப்படுகிறது. (பரமாத்மா அக்ஷர மாகிற மூலபிரகிருதியை விடப் பெரியவனும், மூலபிரகிருதி அதிஷ்டிக்கும் புருஷனை விடவும் மிகப் பெரியவன். பிர கிருதியைக் கூறி — अक्षर சப்தத்தால்; अक्षरात् परतः परः என்ற விடத்தில் ஜீவன் கூறப்படுகிறது என்பது பூர்வபக்ஷம். சிலந்திபூச்சி, பயிர்வகைகள், மயிர்நகம், இத்யாதி தோன்று விக்கிறபடி அப்படியே இந்த அக்ஷரத்திலிருந்தும் உலகம் உண்டாகியது, பிரகிருதியே காரணம். சேதனன் செயலால் சிலந்தி; அசேதன சம்பந்தத்தால் பயிர் - மயிர் வகைகளைக் காட்டியது. இது தவறு என்று காட்டப்படுகிறது. பூதயோனி பரமாத்மாவென்று கூறப்பட்டு அதற்கு உலகின் உற்பத்தி ஸர்வக்ஞன் ஸர்வவித் என்று பல குணங்களும் அதிருஸ்யத் வாதி குணங்களுடன் சேர்ந்து இந்த தர்மங்கள் யாவும் பிரகிருதிக்கும் ஜீவனுக்கும் ஒட்டாது. ஏனெனில் பரமாத்மா வுக்கு दिव्यो ह्यमूर्तः पुरुषः स बाह्याभ्यन्तरो ह्यजः - மேல குறிக்கப் பட்ட அக்ஷரத்திற்கு சேராத ரூபம் முதலானவையும் குறிப் பிடப்பட்டது. ஆகவே பரமாத்மாவே ஸித்தம் என்பது சித்தாந்தம். இது கீழே விளக்கப்படுகிறது.)

**ஸ்ரீபாஷ்யம்**:- ஆகவே சுருதி சொல்கிறது முண் 21-1-4ல் स ब्रह्मविद्यां सर्वविद्याप्रतिष्ठामथर्वाय ज्येष्ठपुत्राय प्राह ஆசார்யர் பிருஹ்மா தன் மூத்த குமாரனுண அதர்வனுக்கு பிருஹ்ம வித்யையை உபதேசித்தார். பிருஹ்ம வித்யை என்பதில் ஸர்வவித்யை களும் ஆஸ்ரயம் செய்திருக்கின்றன. (எல்லாவஸ்துக்களும் பிருஹ்மத்தில் அடங்கியிருப்பதால், எல்லா சாஸ்திரங்களும் பிருஹ்ம வித்யையில் அடங்கி விட்டன என அர்த்தம்),

(பிருஹ்ம வித்யா ஸர்வ வித்யா பிரதிஷ்டாபூதா). அதிலும் பரவித்யை என்பதில் ஸர்வ வித்யைகளும் அடங்கியுள்ளன. அப்பேற்பட்ட மஹத்வம் பொருந்திய பிருஹ்மவித்யையை அறிவதற்கும் அதை யேற்கனவே அறிந்திருந்த அங்கிரஸ் குருபரம்பரா ஒராண் வழியாக சதுர்முக பிரும்மா - அதர்வர், புகழ்பெற்ற சௌனகர் (இவருக்கு மஹா சாலர் எனப்பெயர்) என்பவர் அங்கிரஸ்ஸை சமித்பாணியுடன் நமஸ்கரித்து விதிப்பிரகாரம் பூஜித்து வினவினர் 'कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति', பகவன், எதை அறிந்து கொள்வதால் இந்த வஸ்துக்களடங்கிய பிரபஞ்சம் அறிந்து கொள்ளப்படும்? (அதாவது பிருஹ்ம விஷய ஞானத்தினுல் பிரகிருதி புருஷ விஷயங்களும் ஈஸ்வர விஷயமும் அவர்களுக்குள்ள பரஸ்பர பேதங்களும் அறியக் கூடும் என்பதாகும்). (விசிஷ்டாத்வைத சித்தாந்தப்படி சூக்ஷ்மசித் அசித் விசிஷ்ட பிரும்மம் என்பது அக்ஷர சப்தத்தால் சொல்லப்பட்டு காரண பிருஹ்மத்தை அறிவதாலே அதன் காரிய விஷயங்கள் அறியப் பட்டனவாகும். பிருஹ்ம ஞானம் என்பது நாராயணனைப் பற்றிய ஞானமாகும். இந்த விஷயம் முண்டகம்-கடவல்லி-பிருஹதாரண்ய - சாந்தோக்ய விஷயங்களாகும்.)

சௌனகர் அங்கிரஸ்ஸிடம் கேட்ட கேள்வி பிருஹ்ம விக்ஞானத்தினுல் ஸர்வவிக்ஞாதம் (எல்லாம் அறியப்பட்டதாகும்) என்று சொல்லி இதனுல் பிரும்ம ஸ்வரூபம் எத்தகையது என்கிற விஷயம் கொண்டது. அங்கிரஸ் தன் சிஷ்யனை சௌனகருக்கு உபதேசித்தார்—द्वे विद्ये वेदितव्ये इति ह स्म यद् ब्रह्मविदो वदन्ति, परा चैवापरा च इति இரண்டு வித்யைகள் உள ஒன்று பரா; மற்றென்று அபரவித்யை. இரண்டுமே பிருஹ்மத்தை விஷயமாகக் கொண்டவை (வேதிதவ்யே என்பதால் இதிஹாஸ புராணங்களையும் உபநிஷத்துக்களையும் ஸ்ரவண மனந நிதித்தியாஸம் அப்யாஸம் யாகங்கள் பஞ்சமஹாயக்ஞங்கள், ஜ்யோதிஷ்டோமம் இத்யாதி; தபஸ் (ஆலோசனை) தானதர்மம் இத்யாதிகளால் பிருஹ்மஞானத்தை அடைவது, தர்ம சாஸ்திரங்கள், உபநிஷத்வாக்யங்கள் இத்யாதி) பரோக்ஷரூபமாகவும் அபரோக்ஷரூபமாகவும் இரண்டு வித

மாக ஞானம் சம்பாதிக்கப்படும். இவைகளில் சாஸ்திர ஞானம் யோகஜன்யமான ஞானம்ஆக இருவகை. பரோக்ஷம் ஞானம் சாஸ்திர ஜன்யம், அபரோக்ஷ யோகஜன்யம், இவை களுள்ளே பிருஹ்ம பிராப்திக்கு உபாயமாக விளங்குவது அபரோக்ஷ ஞானம் யோக ஜன்யம்) அதில் பக்தி ரூபமாக விருப்பதுபிருஹ்ம பிராப்திக்கு உபாயமாக விருப்பது முண். உ. 3-2-3 சொல்லப்பட்டதாகும் यमे वैष वृणुते तेन लभ्य: என்று இந்த பிரகரணத்திலே காட்டப்பட்டதாகும். (எந்த புண்ய வானை) எவனை பரமாத்மாவரிக்கிறஞே அவனுலேதான் பரமாத்மா அடையப்படுகிருன் (இந்த விஷயம் முதல் அதிகரணத்தில் லகுசித்தாந்தத்தில் விளக்கப்பட்டது. பகவானுல் வரிக்கும்படி அந்த பக்தன் பிரியதமனுக அதியோக்யதை பெற்றிருக்க வேண்டும். அப்பேற்பட்ட பக்தி யோகத்தை அடைவதற்கு விஷ்ணு புராணத்தில் சொல்லப்பட்ட விவேகாதி ஸாதனங்கள் ஏழு, அவைகளால் அனுக்ரஹிக்கப்பட்ட ஞானம், அவையாவன விமோஹம் (ஆசையற்ற தன்மை) அப்யாஸம் கிரியை கல்யாண (மங்களங்கள்) அநஸாத (துக்கத்தில் மனம் சோராமை) அனுதர்ஷம் (சுக ஆனந்தங்களில் அதிகமான உத்ஸாஹமில்லாமை (சந்தோஷமில்லாமை); ஏனெனில் இவ்விதம் விருந்தால் தான் விவேகம் யேற்படும் (டங்கர் சொல்வது த்ருவா அனுஸ்மிருதி திடமான தியானம்); விவேகம் முதலிய குணங்களிலிருந்து உண்டாகிறது. அந்த ஸ்திரமான ஸ்மிருதி விவேகாதி குணங்களினுல் உண்டாகிறது. அவை ஏழும் முன்பு கூறப்பட்டன) (விவேகாதிகளின் ஸ்வரூபம் தேகத்தை சுத்தமான ஸ்நானம் ஆகாரம் அப்யாஸம் இத்யாதிகளால் உண்டாகிறது. லகு சித்தாந்தம் முதல் அதிகரணம் P 33 காண்க)

பகவானிடம் உத்கிருஷ்டமான பக்தியைச்சம்பாதிப்பதற்கு ஏழுவிதமான சாதனங்களால் (விவேகாதி) யேற்படுவதும் ஆகமஜன்யமும் (வேதங்களினுல்) யேற்படுவதும் அத்தகைய ஞான விசேஷமாகிற பக்தியாகும். இதையே பிரு. உப. 6-4-22ல் சொல்லப்பட்டது तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन பிராம்மணர்கள் பரமாத்

மாவை அறிய இச்சைப்படுகிறார்கள் (எவ்விதம்?) வேதம் ஓதுவதாலும் யக்ஞங்களாலும் தானத்தாலும் தபஸ் உபவாஸாதிகளாலும்; மேலும் பராசரர் சொல்கிறார் - तत्प्राप्तिहेतु ज्ञानं च कर्म चोक्तं महामुने! आगमोत्थं विवेकाच्च द्विधा ज्ञानं तथोच्यते பகவானிடம் பக்தியைச் சம்பாதிப்பதற்கு மஹாமுனியே, இரண்டு வகையான ஸாதனங்கள் இருக்கின்றன - ஞானம் கர்மம் ஆகிற இருவழிகள். அத்தகைய ஞானம் இரண்டு வகைகளாகும். சுருதிகளால் உண்டாவதும் விவேகம் முதலியவைகளால் யேற்படுவதுமாகும் (வி-பு-5-60-61).

முண்.2. 1-1-5ல் तत्रापरा, ऋग्वेदो यजुर्वेदः इत्यादिना धर्मशास्त्राणि இவைகளுள் (இரண்டு வித்யைகள் உள - அவைகளில்) கீழானது அபரா - ருக்வேதம் யஜுர்வேதம் என்று ஆரம்பித்து பிறகு முடிக்கிறபோது தர்மசாஸ்திரங்கள் (இதிஹாஸ புராணாதிகள், கூடச் சேர்க்கவும்) இவைகளிலிருந்து அடையப்படும் ஞானம் பிருஹ்ம சாக்ஷாத்கார ஹேதுபூதமாகவும் பரோக்ஷ ஞானத்தை அடைவிகக சாதனமாக விருக்கிறது. இத்துடன் ஸாங்கோபாங்கமாக இதிஹாஸ புராண தர்ம சாஸ்திரங்கள் - மீமாம்ஸங்கள் - இவைகளும் பரோக்ஷ ஞானத்தை உற்பத்தி செய்வதற்கு ஹேதுவாக விருக்கின்றன.

(அதாவது சௌனகர் பிருஹ்மவித்யையை விரும்பி வந்து அங்கிரஸ்ஸைக் கேட்டார். कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति என்று எதை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும்? எனக் கேட்க; அதற்குப் பதிலாக முதலில் அபரவித்யை எனப்படும் ருக்வேதம் முதலான 18 வித்யாஸ்தானங்களும் மற்றும் பல சாஸ்திரங்களும் இதிஹாஸ புராணாதிகளையும் சொல்லி விட்டு பிறகு अथ परा என்கிற வாக்யம் வருகிறது. இதனாலே இப்பிரகரணத்தில் பிரகிருதி புருஷர்களை விட மேலாக பரமாத்மாவைக் குறிப்பிட்டுச் சொல்லியபடியாலே, ஜீவனும் பிரதானம் இங்கு சொல்லப்படவில்லை என்பதாகும்).

अथपरा यया तदक्षरमधिगम्यते அதுதான் பரவித்யை (மேலான வித்யை) எதில் அந்த "அக்ஷரம்" என்பது அறியப்படுகிறதோ. இதனால் மோக்ஷவித்யையாகிற பரவித்யை உபதேசிக்கப்படுகிறது. (அங்கிரஸ்ஸினால் சௌனகருக்கு). அந்த பரவித்யை உபாஸனம் எனப்பட்ட பிருஹ்ம சாக்ஷாத்காரத்தை லக்ஷணத்தைச் சொல்வதால் - பக்திரூபமான விசேஷ ஞானத்தினால் யேற்படுவதாகும். (இங்கு சொல்லப்படும் பக்தி வேதாந்த விக்ஞானஸீ நிஸ்சி தார்த்தா:-தான்யாசர थ-नित्यं सत्य कामा: - सत्येन लभ्य: இவைகள் போன்ற வாக்யங்

களினால் யேற்படுவதும், ஸ்ரவண - மநந நிதித்யாஸம் விவேகவிமோக இத்யாதிகளால் ஏற்படுவதும், உபநிஷத் ஜன்ய ஞானம் அபரோக்ஷ ஞானம் பக்திரூபன்ன ஞானம்; பரவித்யையினால் உபாஸந வித்யை (மோக்ஷ உபாயம் பிருஹ்ம சாக்ஷாத்காரம் யேற்படும் வரை தினமும் அனுஷ்டிக்கப்பட வேண்டியது. இவ்விதம் பரவித்யையைத் தொடங்கி உபாஸனம் எனப்பட்ட பிருஹ்மசாக்ஷாத்காரத்தைச் சொல்லி, பிறகு பிருஹ்மஸ்வரூபம்பரவித்யையில் விளக்கப்படுகிறது) यत्तदद्रश्यमग्राह्यम् எந்த பிருஹ்மம் (அக்ஷரம்) ஞான இந்திரியங்களால் அறிய முடியாதது அக்ராஹ்யம் கர்மேந்திரியங்களால் எடுக்க முடியாதது अगोत्रं अवर्णं இத்யாதி அவ்யயம் பூதயோநிம் யத் धीरा: परिपश्यन्तितत् अक्षरम्- அழிவற்ற பரம்பொருளாகும்.

இப்படி பரோக்ஷ அபரோக்ஷரூப ஞானத்வய (இருவிதமான ஞானங்களுக்கு) விஷயமாக பரஸ்ய பிரும்ம ஸ்வரூபம் ஓதப்படுகிறது. அதே மாதிரி यथोर्णनाभि: सृजते गृह्णते च எவ்விதம் சிலந்திப்பூச்சி தனது சரீரத்திலிருந்து நூலை வெளியில் உமிழ்ந்தும் பிறகு தனக்குள் இழுத்துக் கொண்டும் விருக்கிறதோ - (முண் 1-1-7) இதனால் மூன்று உதாரணங்கள் சிலந்தி - பிருத்வி - மனிததேகம் கொடுக்கப்படுகின்றன. ஊர்ணநாபி:—சிலந்திபூச்சி அசேதன சரீரத்திலிருந்து நூல் வருவதுபோல தமஸ்ஸிலிருந்து பிரஜைகள் பிரபஞ்ச சிருஷ்டிரூக்ஷம் சேதனசேதன அம்சம் சொல்லப்படுகிறது. பிருத்வி

உதாரணம் (பயிர்வகை) சூக்ஷ்மஸ்தூல விசிஷ்டத்வ அவஸ்தையிலிருந்து கார்யகாரணம் உற்பத்தி. மயிர்நக திருஷ்டாந்தம் ஸ்வரூபத்தால் யேற்படும் காரணத்வம்.) என்ன காட்டப்படுகிறதென்றால், சேதநு சேதனங்கள் அடங்கிய இந்த ஸம்பூர்ணவிஸ்வம் அக்ஷரத்திலிருந்து உண்டாகிறது. அந்த அக்ஷரமே பரஸ்ய (மேலான) பிருஹ்மமாக விருக்கிறது. இந்த பிருஹ்மத்திற்கு अद्रेश्य मग्राह्यम् என்கிற குணங்கள் ஓதப்படுகின்றன. "விஸ்வம்" என்கிற பதத்தால் கேவலம் அசேதனமாத்திரமல்ல - சேதனர்களையும் கூட்டிச் சொல்லியிருக்கிறது. (பூர்வபக்ஷி - "விஸ்வம்" என்பதால் பிரதானத்தை மட்டிலும் சொல்கிறுன்).

மேலும் இந்த சுருதியில் तपसा चीयते ब्रह्म ततोऽन्न मभिजायते अन्नात् प्राणो मन: सत्यं लोका: कर्मसु चामृतम्-பிருஹ்மம் வளர்கிறது. (எதனால்) தபஸ்ஸினால் அன்னம் அதனிடமிருந்து உண்டாகிறது. அன்னத்திலிருந்து முக்ய பிராணனும், மனமும், ஸத்யமும் (போக்த்ரு தேஹி வர்க்கங்கள் அதாவது ஜீவர்களும்) பல உலகங்களும் கர்மங்களுள் அவைகளின் பலனுக யேற்படும் அம்ருதத்வமும் (மு.உ-1-8) யேற்படுகிறபடியால் பிருஹ்மம் தான் ஸர்வ விஸ்வத்தின் உற்பத்தி பிரகாரத்திற்குக் காரணமாகிறது. இங்கே தபஸா என்பதால் ஆலோசனை (ஞானம் என்பதின் உதவியால்); மு.உ-1-1-8 यस्य ज्ञानमयं तप: - எவனுடைய ஸ்வரூபம் (தபஸ்) ஞானமயமாக விருக்கிறதோ; चीयते-வளர்கிறது. உற்பத்தியாகி வளர்கிறது. இந்த முழு சுருதிக்கும் பொருள் - பிருஹ்மம் ஸ்ருஷ்டியை ஸங்கல்பருபேண ஞானத்தினுல் "बहु स्याम्" நான் பல வாக ஆவேன் என்று பூர்வான்வி (அதேமாதிரி முந்தி செய்யப்பட்டுள்ள ஞானத்தினுல் உண்டாக்குகிறது. ஸங்கல்ப மாத்திரத்தினுல்); (இதனுலே உபாதான நிமித்த காரணம்).

ततोऽन्नमभिजायते பிறகு அன்னம் அவனிடமிருந்து உண்டாகிறது. அன்னம் என்பது போக்ய வஸ்து. பிறகு விஸ்வத்திற்கு போக்த்ருவர்க்கமாகிற ஜீவர்கள் போக்ய

வஸ்துக்களை அனுப்விப்பதற்கு போக்த்ரு போக்யரூபமிதி உண்டாக்கப்படுகிறது. இது ஸ்ருஷ்டியின் உந்முகம் (ஆரம்பம்); அவ்யாகிருதமான (பிரிக்கப்படாத) பூத சூக்ஷ்மங்களிலிருந்து போக்ய போக்த்ருவர்க்கங்கள் உண்டாகின்றன. அப்பேற்பட்ட பூதசூக்ஷமங்கள் மேலான பரபிரும்மத்தினிடமிருந்து உண்டாகின்றன என அர்த்தம். பிராணன் மனஸ் முதலியவைகளும், ஸ்வர்க்க அபவர்க்க (மோக்ஷத்தை) பலன்களை அளிப்பதுமான பலஸாதனபூத கர்மாக்கள் பரியந்தம் எல்லாமுமே விகார ஜாதமான அன்னத்திலிருந்தே உண்டாகின்றன. (அன்ன சப்தம் போக்தாரம் போக்யம் எல்லாவற்றையும் சொல்வதாகும்-போக்த்ரு போகருபமிதி).

இந்த சுருதியிலே य: सर्वज्ञ: सर्ववित् எவன் எல்லாவற்றையும் அறிகிறவனுகவும் உணர்கிறவனுகவும் இருக்கிருனே (மு. உ. 1-1-9) இதில் ஸ்ருஷ்டிக்கு தேவைப்படும் உபகரணங்களாக விருக்கும் ஸார்வக்ஞம் - (எல்லாம் அறியும் தன்மை) ஸத்யஸங்கல்பத்வம் (நினைத்ததை ஸாதிக்கக் கூடிய திறமை) இவைகள் சொல்லப்படுகின்றன. ஆகவே ஸர்வக்ஞ, ஸத்யஸங்கல்ப, மேலான பரபிரும்மத்தினிடமிருந்து அதாவது அக்ஷரத்திலிருந்து एतत् (விஸ்வமாகிற சேதன அசேதனங்களடங்கிய விஸ்வம்) காரியா காரபிருஹ்மம் (சூக்ஷ்ம சேதன அசேதன விசிஷ்ட பிருஹ்மம். ஸ்தூலசேதன அசேதன விசிஷ்ட பிருஹ்மமாகிறது சரீரத்வாரா, பிரும்மம் ஆத்மாவாகவும் இவை அவனுக்கு சரீரமாகிறபடியாலே பிரும்மம் நிர்விஹாரம் (ஸத்யம்.) ஸ்ருஷ்டியாகிற காரியம் நாமரூபவிபக்தம் (நாமரூபங்களைக் கொண்டது) போக்த்ருபோக்யரூபம் (சேதன அசேதன வர்க்கங்களை கொண்டது) காரணபிருஹ்மம் காரிய பிருஹ்மமாக காரண காரிய ஐக்யம் ஆகிறது என்பது விளக்கப்படுகிறது. ஏதத் என்பதால் அக்ஷரம் எனப்படும் பிருஹ்மம் - கார்யா காரபிருஹ்மம் நாமரூபவிபக்தம் போக்த்ருபோக்யரூபம்ச ஜாயதே என்று அர்த்தம். பிருஹ்மசப்தம் விசிஷ்டவேஷத்துடன் விருக்கும் பிருஹ்மம் என்பதாகும். (ஸ்ருஷ்டி கிரமம் சொல்லப்படும் பிரகணம் இது. பகவானுக்கு முந்தியேற்பட்ட

ஸ்ருஷ்டி அனுபவஞானம், சேதன அசேதன பரஸ்பர ஸ்வரூபஸ்வபாங்கள் வேற்றுமைகள், கர்மங்களாகிற தேகஸ்வரூபங்கள் எல்லாவற்றையும் பலவகைப்பட்ட பிந்ந பிந்ந வர்க்கங்கள், இவைகளை சங்கல்ப ஞானத்தினால் செய்கிறான் பரமாத்மா.அவனே காரணபிருஹ்மம் அவனே காரிய பிருஹ்மமாகிறான் சரீரத்வாரா. அவனே அன்னம், அன்னத்தைக் கொடுப்பவன், சாப்பிடுகிறவன், நாமரூபவிபாகம் கொண்ட சேதன அசேதன வர்க்கங்களுக்கு கர்மானுகுணமான ஸங்கல்ப ஞானத்தினால் காரணமாகிறான். என்பதாகும்)

மு. உ. 1-2-1ல் तदेतत् सत्यम् இந்த வஸ்துதான் (அக்ஷரம் தான் ஸத்யம்; தான் மாறுதபடி ஸர்வப்பொருள்களுக்கும் ஆத்மாவாக விருகிறது) என்று மேலான பரபிரும்மத்திற்கு நிருபாதிக ஸத்யத்வம் அவனும் ஸத்யம் ஜகத்தும் ஸத்யம் பேசப்படுகிறது. मन्त्रेषुकर्माणि कवयो यान्यपश्यन् तानि त्रेतायां बहुधा संततानि । तान्याचरत(च)नियतं सत्यकामा: எந்த எந்த கர்மசடங்குகளை இந்த ரிஷிகள் கண்டனர்களோ அந்த கர்மசடங்குகளே த்ரேதாயாம் மூன்று அக்னிகளிலே பலவாக, ஸத்யகாமா என்று ஆகின. ஸத்யகாமாவை அடைய நான் இந்த ஹோமங்களை அக்னிகளில் செய்கிறேன்.

(இங்கே சொல்லப்படுவது முண்டகத்தில் 1-2ல் முதல் மந்திரம்; எவனுக்கு பிருஹ்மத்தை அடைய ஆசையிருக்கிறதோ அவனால் செய்யப்பட வேண்டிய ஹோமயக்ஞங்கள். இந்தயாக கர்மங்கள் மூன்று அக்னிகளாக ஆயின. ஸத்யத்தை விரும்பி இவைகளைச் செய். காம்ய கர்மாக்கள் நிஷ்காமகர்மாக்கள் இவைகளை தினமும் அனுஷ்டிப்பதால் மோக்ஷம் ஸித்திக்கும். குருவின் உபதேசத்தால் சிஷ்யன் நிரந்தரமான பிரும்ம ஞானத்தையும் அக்ஷரமான பிருஹ்ம ஸ்வரூபத்தையும் அறிகிறான்)

இதனால் (மந்த்ரத்தால் ஸார்வக்ஞ ஸத்யஸங்கல்பத்வாதி கல்யாண குணாகரமான அக்ஷரம் (பரப்பிருஹ்மம்) புருஷம் (புருஷோத்தமன்) ஸ்வத: (தானே ஸ்வரூபத்திலே) ஸத்யம்

நித்யம் தன்னை உபாஸிப்பவர்களுக்கு—அதாவது நீ அவனை அடைய வேண்டுமானுல், ஆமுஷ்மிக பலன்களை அளிக்கும் கர்மாக்களைத் தியாஜ்யம் செய்து நிரந்தரமான ஐஹிக பலன்களைத் தரும் கர்மாக்களைச் செய். இந்த கர்மாக்கள் ருக் யஜுர் ஸாம அதர்வ வேதங்களில், ஓதப்பட்டிருக்கின்றன. யார்யாருக்கு என்ன அபிலாஷையோ இஷ்டமோ, அப்பேற்பட்ட பலவகைப்பட்ட பலன்களைத் தரும் கர்மாக்கள், இம்மூன்று அக்னிகளின் விஷயத்தில் பலவகைப்பட்டவையாக விருக்கின்தன. ருஷிகளால் பலவிதமாகப் பார்க்கப் பட்டு அனுஷ்டிக்கப்பட்டன அதேபடி வர்ணாஸ்ரமதர்மங்கள் இவ்விதம் பஹுதா (பலவிதப்பட்ட கர்மாக்களை) ஆசரணை செய் என்று சொல்லி மு. உ. 1-2-1ல் एष वः पन्थाः என்று ஆரம்பித்து முடிக்கிற போது (மு 1-2-6) एष वः पुण्यः सुकृतो ब्रह्मलोकः இதுதான் உன் வழி, மார்க்கம்; (முடிக்கிற போது) இதுதான் உனது புண்யலோகமான பிருஹ்மலோகம்; உனது நற்கர்மாக்களாலும் புண்யத்தினுல் சம்பாதிக்கப் பட்ட புண்ய யாக யக்ஞாதிகளை செய்யும் படிக்கும் (கர்மானுஷ்டான பிரகாரம்) அவைகளை எவ்விதம் செய்வது-என்பதற்கும் குறிப்புக்கள் தரப்பட்டிருக்கின்றன.

மேலும் சுருதி ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட கர்மாக்களைச் சரியாகச் செய்வதால் என்ன நற்பலன்களைப் பெறலாம்? விதிப்படி அவைகளைச் சரியாகச் செய்யப்படாமலோ குற்றம் குறைகளுடன் செய்யப்பட்டால் கர்மாக்களைச் செய்தாப்போல ஆகாது கர்மாக்களைச் செய்யாமலிருப்பதற்கு சமம் என்று அறிவுறுத்தி மீண்டும் இந்தப்பிரகாரம் சுருதி சொல்கிறது. மு-1-2-7ல் प्लवा ह्येते अदृढा यज्ञरूपा: अष्टदशोक्त मवरं येषुकर्म, एतच्छ्रेयो येऽभिनन्दन्ति मूढा: जरामृत्यु ते पुनरेवापियन्ति-யாகயக்ஞாதிகளை செய்வது அதனுல் நஸ்வரமான பலன்களை (ஸ்வர்க்கம் இத்யாதிகளை) அடைவது—சிறிய படகில் செல்வது போல. எவர்கள் இவைகளைச் செய்கிருர்களோ - பதினெட்டு அங்கங்களைக் கொண்ட (தீக்ஷிதர் அவர் மனைவி பதினுறு ருத்விக்குக்கள் இவர்கள் யாகம் செய்வதற்கு மிக அவசியம்) யாகங்களைச் செய்வதும், யாகங்களை செய்கிற

விதத்தை அறிபவர்களுக்கும், சுருதி சொல்கிறது. "மூடர்களே, நீங்கள் அறிவீர்களா? உங்களுக்கு அநித்யமான பலன் தான் ஸம்பவிக்கும். உங்களுடைய இஷ்டங்கள் பூர்த்தியான பிறகு மீண்டும் சம்சாரத்தில் வந்து பிறப்பீர்கள். நீங்கள் இறப்பு பிறப்பு ஆகிற சுழல்களைத் தப்பமுடியாது. ஆகையினுல் சந்தோஷப் படாதீர்கள். கர்மாக்களே சந்தோஷத்தை அளிக்கும் என்று முடிவு கட்டாதீர்கள்," என்று கூறி எவர்களுக்கு கர்மாக்களைப் பற்றிய ஞானம் அதாவது அவைகள் நஸ்வரமான பலன்களைத் தருபவை என்கிற அறிவினுல் பிருஹ்ம ஞானம் தான் அடையப்பட வேண்டிய புருஷார்த்தமாகும். யாகயக்ஞாதிகள் அபர வித்யையென்றும பிரும்மஞானம், உபாஸனம் இத்யாதி பர வித்யைன்றும் அதன் பலனுக பூமிக்குத் திரும்பி வருதல் கிடையாது என்றும் காட்டிற்று (மு.உ. 1-2-7).

"तप: श्रद्धे येह्युपवसन्ति (மு. உ. எவர்கள் தபஸ் (ஆகிர பிருஹ்மம்) சிரத்தை (விஸ்வாசம்) இத்துடன் உபாஸனை செய்கிறுர்களோ என்கிற பாடங்களினுயே மீண்டும் பலன்களை உத்தேசியாமல் செய்யப்பட்ட கர்மாக்களைச் செய்பவர்களுக்கு ஞானிகளுக்கு, அவர்களால் அநுஷ்டிக்கப்பட்ட நிஷ்காம கர்மாக்களாலே பிருஹம பிராப்தியேற்படுகிறது. என்று சுருதி புகழ்வதாலே அந்த ஞான (உபாஸ்யு) மார்க்கம் இவ்விதம் சுருதியினுல் காட்டப்படுகிறது. परीक्ष्य लोकान् கேவலம் கர்மபலன்களுக்காகச் செய்யும் கர்மநிஷ்டனுக்கு கிடைக்கும் அஸ்திரமான லோகங்களை பரிட்சை செய்துவிட்டு, அவைகளிலிருந்து விடுபட்ட மனத்தினுக மோக்ஷத்தை அடைய ஆசையுள்ளவனுக பிருஹ்மபிராப்திக்காக அதை அடைய உபாயபூதமான ஞானத்தையடைவதற்காக ஜிக்ஞாஸ (இச்சை) கொண்டவனுக ஒரு நல்ல ஆசார்யனை அணுகி உபதேசம் கேட்கிறுன். அச்சமயம் அவனுக்கு ஆசார்யர் உபதேசமளிக்கிறுர் முண். உ. 2-1-10 तदेतत् सत्यम्; यथा सुदीप्तात् பையா, அது தான் ஸத்யம்-நன்றுக கொழுந்துவிட்டு எரியும் அக்னியிலிருந்து...என்று ஆரம்பித்து முடிக்கிறபோது तोऽरिव शायन्ति विकिरतीह सोम्य ஸௌம்ய

எவன் இதை நன்கு அறிகிருனே, அவன் அவித்யாகிரந்தி (முடுச்சுக்களை) அவிழ்க்கிருன் (உதறுகிருன்) என்று சுருதி முடிக்கிற போது, முந்திச் சொல்லப்பட்ட அக்ஷரம் எனப் படும் பூதயோநி, அதுவே பரமாத்மா, அவனுக்கே சொந்த மான ஸ்வரூப குணங்களுடன் கூட, அதுவுமன்றி அந்த பரமாத்மாவே ஸர்வ பூதாந்தராத்மதயா (எல்லாவஸ்துக் களைத் தனது சரீரமாகக் கொண்டு தான் ஆத்மாவாக விருப் பதாலே) விஸ்வ சரீரத்வேந (சேதன அசேதன வஸ்துக் களாகிற) சரீரத்துடனே, விஸ்வரூபமாக விளங்குகிருன்.

அதனுலே அவனிடமிருந்தே விஸ்வஸ்ருஷ்டி யேற் பட்டது என்று சுருதிகாட்டி (இதனுல் பிருஹ்மமும் ஸத்யம் பிருஹ்ம காரியமான ஜகத்தும் ஸத்யம் என்று சொல்லி); மீண்டும் சுருதி சொல்கிறது आविः संनिहितम् (இந்த அக்ஷரமான பரமாத்மா யோகிகளால் தங்கள் ஹ்ருதயங் களில் பார்க்கப்படுகிருர். அந்த அக்ஷரமான பரமாத்மா அவ் யாகிருதமான பிரகிருதியைக் காட்டிலும் மேலான புருஷனை யும் (ஜீவாத்மாவையும்) விடமேலானவர் (அவ்யாகிருதம் மூலபிரகிருதி விபாகமில்லாத நாமரூபரஹித, மூலபிரகிருதி; புருஷன்ஜீவன்;) (அவருடைய ஸ்வரூபம் மேலே வர்ணிக்கப் படுகிறது அந்தபரமாத்மா பரமவ்யோமநி வைகுண்டத் திலே (மேலான உலகிலே) பிரதிஷ்டிதமாகவும் அநவதிகாதி சய (அளவிடப்பட முடியாதபடி அபரிமித) அதிசய ஆனந்த ஸ்வரூபத்துடன் கூடிவரும், அவரே ஒவ்வொருத்தருடைய ஹ்ருதய குகையில் அந்த அந்த உபாஸனுப் பிரகாரம் உபாஸ்யதேவதையாக விருப்பவராகவும் சொல்லப்படுகிருர். அத்தகைய உபாஸனத்திற்கு பரபக்தி, ரூபத்வம் - பரபக்தி, பரஞான பரமபக்தி இத்யாதிகளால் அடையத்தக்கவராக விருக்கிருர். இதனுலே உபாஸகன் அடையும் நன்மைகளும் சொல்லப்படுகின்றன. அவித்யை, மோகம் ஆகியவை நஷ்ட மாகி பிருஹ்மானுபவம் யேற்படுகிறது. வைகுண்ட பிராப்தி யேற்படுகிறது. அதில்தேககர்மாக்களிலிருந்து விடுபட்டமுக் தன்பிருஹ்மத்திற்குச் சமமாக பிருஹ்மானுபவத்தை அனு பவிக்கிருன். ஜகத்வியாபாரவர்ஜம், மற்ற விஷயங்களில்

முக்தன் பிருஹ்மத்துடன் ரூபம் குணங்கள் இத்யாதிகளில் ஸாமயத்தை அடைகிறான். இவ்விதம் கூறிவிட்டு சுருதி பிரகரணம் முடிந்துவிடுகிறது. (இதனாலே உபாஸனையின் பெருமையும் ஸகுணபிருஹ்ம உபாஸனையின் பெருமையும் சேர்த்துச் சொல்லப்பட்டதாகிறது).

(இங்கே சொல்லப்படும் கருத்துக்கள் மீண்டும் அக்ஷரதி கரணத்திலும் காணப்படும். கார்கிபிரஸ்னம் सहोवाचैतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति अस्थूलमनणु अह्रस्वमदीर्घलोहितमस्नेहम-च्छायम् - इत्यादि (1-3-3); அங்கேயும் அக்ஷராத் பரத: பர:-பிரகிருதி ஜீவன் இவர்களுக்கு மேலான பராமத்மா என்று காட்டப்படுகிறது. सा च प्रशासनात् என்கிற சூத்ரத்திலும் பார்க்கவும்)· (மீண்டும் தஹர வித்யயிலும் சொல்லப்படுகிறது. பரமாத்மா அறியப் படும்போது ஹ்ருதய கிரந்திகள் அவிழ்கின்றன. சந்தேகங்கள் சிதறுகின்றன. கர்மாக்கள் அழிகின்றன. அவன் அச்சமயம் பிருஹ்மத்தைப் போல ஆகிறான். புண்யபாபங்களை உதறித் தள்ளுகிறான். பிருஹ்ம ஸாம்யத்தையடைகிறான். எவ்விதம் நதிகள் தங்கள் ஸ்வரூபங்களை விட்டு விட்டு கடலில் ஸங்கமாகி, நாமரூபங்கள் விடப்பட்டு பிரும்மத்துடன் கலந்து விடுகின்றனவோ - அது போல அவன் (முக்த ஜீவன்) துக்கத்தைக் கடந்தவனாகிறான். அம்ருதனாகிறான் இத்யாதி).

ஆகவே இவ்விதமாக பிரக்ருதி-ஜீவன்-ஈஸ்வரன் தனித் தனியாகப் பிரித்துக் காட்டி (भेदव्यपदेशात्) பல விசேஷணங்களாலே பரமாத்மாவுக்கேயுரிய குண தர்மங்களைச் சொல்லி அக்ஷரம் பரமாத்மாவே என்று காட்டப்படுவதால், இந்த பிரகரணத்தில் அது பிரதானமுமாகாது. அதேபடி அது புருஷனாகிற ஜீவனுமாகாது. परमात्मा-अन्त: प्रविष्ट: शास्ता जनानाम् सर्वात्मा என்று கூறி. तदेवानुप्रविश्य...सच्चत्यच्चाऽभवत् இவ்விதம் ஸ்ருஷ்டியைச் சொல்லி, அனுப்ரவேசத்தைச் சொல்லி மேலான நியமனம் அந்தர்யாமியாக விருப்பதாலே எல்லாவற்றையும் பிரேரணை செய்பவனாகவும் ஆள்கிறவனாகவும் சொல்லி अन्त: शरीरे निहितो गुहायां தஹரபுண்டரீகத்தில் அவனும்

அபஹதபாப்மத்வதி குணங்களுடன் உபாஸ்யம் என்று சொல்லி एषं सर्व भूतान्तरात्माऽपहतपाप्मादिव्यो एको नारायण: (சுபாலோ பநிஷத்) நாராயணனே யாவற்றினுள்ளே யிருந்தபோதிலும் ஸத்யம்; அவன் யாதொரு மாறுபாட்டையோ தோஷங் களேயோ அடையாமல் அப்ராகிருதனாக விளங்குகிறான் என்று சுருதி ஓதிற்று. சரீர ஆத்மபாவம் அந்தர்யாமித்வம் இத்யாதிகளால் ஸர்வாந்தர ஆத்மாவாகவிருக்கிறான். இப்பேற்பட்ட பரமாத்மாவை, உத்தாலகரைப் பார்த்து அங்கிரஸ் கூறினார். 'இவர்தான் ते आत्मा உனக்கும் ஆத்மா' வென்றார். ஆகவே வ்யதிரேகமுகேந, எப்படி அசேதனமான பிரகிருதிதர்மங்கள் அதேபோல ஜீவனுடைய ஸ்வரூப ஸ்வபாவங்கள் இவையாவும் பரமாத்மா விஷயத்தில் பொருந்தா, சேராது என்றும் கூறியதாகும். அந்தர்யாமி பிராஹ்மணத்தில் காண்வசாகையில் விக்ஞானம் என்பதால் ஜீவன் என்றும் यो विज्ञाने तिष्ठन् (विज्ञानं); அதேமாதிரி மாத்யந் தினசாகையில் य आत्मनि तिष्ठन् ஆத்மசப்தத்தால் ஜீவன் विज्ञान-आत्म சப்தங்கள் இரண்டும் ஜீவனைச் சொல்லி, அந்தர் யாமியான பரமாத்மா வேறு என்றும் காட்டி, இருவித சாகைப்படி ஜீவனைவிட வேறாய், இவர்களை நியமிப்பவன் பரமாத்மாவே என்றும், அந்தர்யாமி யென்றும் காட்டப் பட்டதாகும். (ஆளவந்தார் ஸித்தி திரயத்திலே புத்தியை விக்ஞான சப்தத்தால் அறிப்படும் என்றார்)

(வேதங்களில் கூறியபடி யாக யக்ஞாதிகளைச் செய்து வரும்படி பணித்து, சரிவரச் செய்யப்படாமற் போனால், கரை கடக்க உறுதியான ஓடமாக அமையாது என விளக்கி பயனைக் கருதாமல் நிஷ்காமமாக செய்த கருமங்களைப் புகழ்ந்து, இந்த கர்மாக்கள் பிருஹ்மத்தை அடையவிக்கும் ஸாதனம் என்று கூறி அதற்கு ஞானம் தேவை ஞானத்தை யடைய ஒரு நல்ல ஆசார்யனை அணுகி முறைப்படி ஸேவித்து ஹ்ருதயபுண்டரீகத்திலுள்ள அந்தர்யாமியை (அடியேனுள்ளளான் என்றப்படி ஸங்கிஹிதனானபடியை) அனுஸந்தித்து உபாஸனமகிமையினால் பிருஹ்ம ஸாம்யம் பெறுகிறான் என்று கூறி உபநிஷத் முடித்தது)

**ஸ்ரீபாஷ்யம்:**-ஆகவே இம்மாதிரி காட்டப்பட்ட விசேஷண விசேஷங்களாலே, பேதவ்யபதேசாத் இந்த பிரகரணத்திலே பிரதானமோ அல்லது ஜீவனோ சொல்லப் படவில்லை. பேதவ்யபதேசத்தினாலே மீண்டும் அன்வய வ்யதிரேகோ காட்டப்படுகிறது. மேலான பரமாத்மா சொல்லம்படுகிறார் முண் 2-1-2 दिव्यो ह्यमूर्तः पुरुषः स बाह्यमन्तरो ह्यजः । अप्राणो ह्यमनाः शुभ्रो ह्यक्षरात्परतःपरः இத்யாதிகளாலே பேதவ்யபதேசம் நன்கு காட்டப்படுகிறது. அந்த பரமாத்மா திவ்யமாகவும் சரீரமில்லாதபடி அமூர்த்தம் (புருஷர் - பரமாத்மா); உள்ளிலும் வெளியிலும் உள்ளார்; அவரே அஜர் (பிறப்பில்லாதவர்); அவர் மூச்சுக்காற்று விடுவதில்லை. அவருக்கு மனமில்லை. சுத்தமாகவிருப்பவர் அவர் அக்ஷரத்திற்கு மேலான தத்வத்திற்கும் (ஜீவன்) மேலானவர்: (பரத: அக்ஷராத்பர: என்று பூர்வபக்ஷி சொல்கிறன். மஹதாதிகளைக் காட்டிலும் மேலான அக்ஷரம் எனப்படும் மூலபிரகிருதியை விட மேலானவன் என்று ஜீவதத்வத்தைச் சொல்கிறன்: இது தவறு. இதமூல இரண்டுகுறைகள் உடா. அக்ஷராத்பரத: (அக்ஷரத்தைக் காட்டிலும்) மேலானதைக்காட்டிலும் பொருள் என்று படித்திருப்பதை பரத: அக்ஷராத் (மேலான அக்ஷரத்தைக் காட்டிலும் என்று மாற்றி பொருள் கொள்ள வேண்டியிருப்பது ஒருகுறை. அப்படி கொள்வதிலும் எதைக்காட்டிலும் மேலான அக்ஷரம் என்று சுருதியில் சொல்லாதபடியால், மஹதாதிகளைக் காட்டிலும் மேலான அக்ஷரம் என்று கொள்வதற்க்காக. இரண்டாவது குறை, மஹதாதிகளைக் காட்டிலும் எனகிற பதத்தை வருவித்துக்கொள்ள வேண்டியிருப்பது. ஆகையால் நாம் கூறியபடி பிரதானம் புருஷன் இவர்களைவிட மேலான பரமாத்மா அவனுக்கு பூதயோங்யக்ஷரத்தை விசேஷித்திருப்பதாலும் பேதத்தை சொல்லுகையாலும் அக்ஷரம் பரமாத்மாவான ஸ்ரீமந்நாராயணனே.)

அந்த பரமாத்மா புருஷனுகிற ஸமஷ்டி புருஷனுக்கும் மேலானவர். அவருக்கு அத்ருஸ்யத்வாதி குணங்கள் ஓதப்பட்டிருக்கின்றன. ஆகவே அக்ஷரம் பரமாத்மாவே என்று

அர்த்தம். அக்ஷரம் என்கிறபதம் अश्नुत् अश என்கிற தாது விலிருந்து (பரவியிருத்தல்) க்க்ஷர என்கிற தாதுவிலிருந்தும் யேற்படும். இதற்கு (க்க்ஷர) வெளிவருதல் உணடாகுதல். அக்ஷரம் இன்னொரு வஸ்துவினுடைய கார்யமாகாது—न क्षरतीति वा अक्षरम् அழியாத வஸ்து (பரமாத்மா); ஆகையால் அவ்யாகிருத (நாமரூப விபாகமின்றிவிருக்கும்) பிரதானம் அக்ஷரம் என்கிற சப்தத்தால் அறியப்பட்டாலும் ஏனெனில் மூலபிரகிருதி அதிசூக்ஷ்மமாக அதனுடைய காரியங்களில் (உபாதான காரணமாக) ஸ்வவிகார வ்யாப்தியினால் காணப் படக்கூடும்; இல்லாதவிடில், மஹத் போன்ற தத்வங்களைப் போல இது (மூலபிரகிருதி) உண்டாகவில்லை. (அநாதியான படியால்.) நாமாந்தரமாக மற்ற அதனுடைய காரியங்களி லிருந்து வேறுபடுத்திக் காட்டப்படும்படி தனியாகவுள்ள நாமம்-பெயர் கொண்டதான படியால், இன்னொன்றிலிருந்து அது உற்பத்தியாகவில்லை. योऽयक्षरणाभावाद्वा இரண்டினாலும் अक्षरत्वं என்று மூலபிரகிருதியை எப்பொழுதாவது கூறும்படி நேரிடலாம். तत् (மூலபிரகிருதி) अव्याकृतेऽपिस्व विकारव्याप्तया वा महदादिवत् नामान्तराभिलापयोग्यक्षरणा भावाद्वा अक्षरत्वं कथञ्चिदुपपद्यते.

## Sutra 24 - रूपोपन्यासाच्च (1-2-24)

## ரூபோபந்யாஸாச்ச (1-2-24)

ரூபோபந்யா ஸாத்ச - உலகம் முழுவதையும் அக்ஷரத் திற்கு சரீரமாகச் சொல்வதாலே அக்ஷரம் பரமாத்மாவே.

மு.உ..1-1-4 अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ दिशः श्रोत्रेवाक् विवृताश्चवेदाः, वायुः प्राणो हृदयं विश्वमस्य पद्भ्यां पृथिवी ह्येष सर्व भूतान्तरात्मा (இவனுக்கு (பரமாத்மாவுக்கு) அக்னி எனப்படும் த்யுலோகம் தலையாகவும், சந்திர ஸூர்யர்கள் கண்களாகவும், திக்குக்கள் ஸ்ரோத்திரங்களாகவும், வேதங்கள் வாக்குக்களாகவும், வாயு பிராணனாகவும், ஹ்ருதயம் இந்த விஸ்வமாகவும், ப்ருதிவி அவரது கால்களாகவுமிருக்கின்றன. ஆகவே இத்தகைய ரூபம் ஸர்வபூதாந்தராத்மாவாகிற பரமாத்மாவுக்கே சொந்த மாகும். ஆதலால் அத்ருஸ்யத்வாதி குணங்கள் கொண்ட அக்ஷரம் பரமாத்மாவே, பிரக்ருதி புருஷன் ஆகமாட்டாது.

வைஸ்வாநராதி கரணம் (1-2-6) (சா். 2 &-அக்னி)

Sutra 25 - वैश्वानरः साधारण शब्दविशेषात् (1-2-25)

வைஸ்வாநர: ஸாதாரண சப்தவிசேஷாத் (1-2-25)

வைஸ்வாநர: — வைஸ்வாநரன் என ஓதப்படுபவன் பரமாத்மாவே. ஸாதாரண சப்தவிசேஷாத் (பொதுவான சப்தத்தை விசேஷிக்கிறபடியாலே)

மேலதிகரணத்தில் பூதயோநயக்ஷரம் பரமாத்மாவென்று நிரூபிக்கப்பட்டது. மூவுலகை உடையவனுகையால், பரமாத்மா வென்று நிரூபிதம். இந்த அதிகரணத்தில் இப்படி மூவுலகையும் சரீரமாக உடையதாயிருக்கும் பெருமை பரமாத்மாவைத் தவிர, வேறு சில பொருள்களுக்கும் உண்டு என்கிற சந்தேகம் தள்ளப்படுகிறது.

சாந்.உ., 5-11-6ல் இவ்விதம் ஓதப்பட்டிருக்கிறது. आत्मानमेवेमं वैश्वानरं संप्रत्यध्येषि; तमेव नो ब्रूहि என்று ஆரம்பித்து பிறகு சா.உ., 5-18-1ல் यस्त्वेतमेवं प्रादेशमात्रमभिविमानमात्मानं वैश्वानरमुपास्ते इति "நீர் இந்த வைஸ்வாநராத்மாவையே இப்போது உபாஸிக்கிறீர். அவனையே நீர் எங்களுக்கு உபதேசிப்பீராக" என்று தொடங்கி; "எவன் இந்த வைஸவாநரனை உபாஸிக்கிருனே- அந்த வைஸ்வாநரன் எங்குமிருப்பவனுகவும் அளவற்றவனுகவிருப்பவனுகவும் அவன் த்யு அந்தரிக்ஷம் முதலியவைகளில் வியாபித்து, அளவிட முடியாதபடியிருக்கிருனே, அத்தகைய வைஸ்வாநரனை உபாஸிகிறவனுன ஸ: ஸர்வேஷு லோகேஷு ஸர்வேஷு பூதேஷு ஸர்வேஸ்வாத்ம ஸ்வந்நமத்தி- அவன்ஸர்வலோக ஸர்வ பூதங்களிலும் ஸர்வாத்மாக்களிலும் அன்னத்தை உண்கிருன் - என்று முடிக்கிறது. இந்த விடத்தில் சந்தேஹம் - இந்த வைஸ்வாநர ஆத்மா பரமாத்மாவா (ஆத்ம சப்தம் வைஸ்வாநரன் எனப்படும் அது பரமாத்மாவைக் குறிக்குமா) அல்லது வேறு சிலவற்றைக் குறிக்குமா? (இங்கு வைஸ்வநர என்கிற பதத்தின் அர்த்தம் சரியாகச் சொல்லமுடியாது. நான்கு பொருள்களில் ஏதாவது ஒன்றைச் சொல்லலாம். ஜாடராக்னியாக விருக்கலாம்.

பஞ்சபூதங்களில் ஒன்றான அக்னியிடமும், வைஸ்வாநரஸ்ய ஸுமதௌஸ்யாம என்றவிடத்திலுள்ள ஒரு தேவதையாக விருக்கலாம், அல்லது நான்காவதாக பரமாத்மாவாகவிருக் கலாம். இந்த நான்கு இடத்திலும் வைஸ்வநரசப்தம் பிர யோகமிருப்பதாலே. இந்த பிரகரணத்திலும் இந்த நான்கு தத்வங்களுக்கான லிங்கங்கள் (அடையாளங்கள்) காணப் படுகின்றன. எது சரியாகும்? ஆகவே இங்கு வைஸ்வாநரன் பரமாத்மாவென்று அறுதியிடமுடியாது. பூர்வபக்ஷம்.

உதாரணமாக வைஸ்வாநரசப்தம் வயிற்றில் இருக்கும் ஜாடராக்னியாக விருக்கலாம். சுருதியிலே பிரு.உ. 7-9-1- अयमग्निर्वैश्वानर: येनेदमन्नं पच्यते यदिदमद्यते, तस्यैषघोषो भवति, यावदेतत् कर्णावपिधाय शृणोति, स यदोत्क्रमिष्यन् भवति, नैनं घोषं शृणोति इति- வைஸ்வநராக்னி வயிற்றில் காணப்படுகிறது. அதனால் உண்ணப்பட்ட அன்னம் ஜீர்ணமாகிறது. அதன் சப்தத்தை ஒருவன் கேட்கலாம். காதுகளை மூடிக்கொண்டால் சப்தம் கேட்கப்படும். ஒருவன் மரிக்கும்போது அவனால் அந்த சப்தம் கேட்கப்படமாட்டாது. இரண்டாவதாக, வைஸ்வா நரசப்தப்பிரயோகம் பஞ்சபூதங்களில் மூன்றாவது மஹா பூதத்தைக் குறிக்கிற அக்னி சப்தமாகலாம். சுருதி ருக்ஸம். 10-88-12ல் विश्वस्मा अग्नि भुवनायदेवा वैश्वानरं केतुमह्नाम कृण्वन् இந்த உலகிற்காக வைஸ்வாநரன் என்கிற தேவதை (அக்னி) (சூரியன்) வெளிச்சம் தருகிறார்கள். பகலில் பிரகாசப்படுத்தி இரவை வேறுபடுத்திக் காட்டியும் உதவுகிறார்கள். மூன்றா வதாக, வைஸ்வநரபதம் ஒரு தேவதையிடமும் பிரயோகிக்கப் பட்டிருக்கிறது. देवतायां च यजुका - 1-5-11ல் ருக். 1-98-1ல் वैश्वानरस्य सुमतौ स्यामराजा हिकं भुवनानामभिश्री: इति நாம் வைஸ்வா நரன் என்கிறவனுடைய அநுக்ரஹத்தைப் பெறுவோம். வாஸ்தவமாகவே அவன் ராஜாவாகவிருக்கிறான். அவனைச் சுற்றிலும் ஒரு பிரகாசம் (Halo) சுடர்விட்டு எரிகிறது. இவைகளைத்தவிர பரமாத்மாவிடமும் வைஸ்வநரபிரயோகம் காணப்படுகிறது. (யஜீ-8-3-; பிரஸ் 11 அநு 7) तदात्मन्येव- हृदयेऽग्नौ वैश्वानरे प्रास्यत् என்றும் प्रश्न 1-7ல் स एष वैश्वानरो विश्वरूप: प्राणोऽग्निरुदयते इति च அவன் தன்னையே தன் ஆத்மாவில்

ஹ்ருதயத்திற்குள்ளிருக்கும் நெருப்பில், (அதற்கு) வைஸ்வ நரன் எனப்பெயருள்ள நெருப்பில் ஹோமம் செய்து விட் டான். அதே வைஸ்வாநரன் பிராணன் என்றும், அக்னி என்றும், கிளம்புகிறான். இந்த ஸம்பூர்ணவிஸ்வரூபமாக (விஸ்வத்தைத் தனது சரீரமாகக் கொண்டு) கிளம்புகிறான். இத்தகைய நான்கு வித வாக்ய உபக்ரமங்களிலும் இந்த பிர கரணத்திலே காணப்படுகின்றன. வேறு இடங்களிலும் விருப்பவையுடன் முறண்பாடில்லாமல் ஸர்வானுகுணதயா விருப்பதால் இங்கு கூறப்படும் வைஸ்வாநரன் பரமாத்மா வென்று அறுதியிட முடியாது.

(புவரூப = புவன உபகாரநிமித்தம் சூர்யன் அக்னி தேவதைகளின் மூலமாக வைஸ்வாநராக்னி பிரகடனமா கிறது. சுமதௌஸ்யாம சோபனமதிவிஷயம் स एष इति ஆதித்யன் என அர்த்தம். வாக்ய உபக்ரமத்திலே லிங்கம் को न आत्मा किं ब्रह्म इति ஆத்ம பிருஹ்ம விஷயமான பிரஸ்ன ரூபம்.)

இவ்விதம் கொள்ளப்படுமாகில் நாம் பதில் சொல்வோம். வைஸ்வாநர: साधारण शब्द विशेषात् பொதுவான சப்தத்தை விசேஷிக்கிறபடியாலே விசேஷிப்பதினால் பரமாத்மாவே வைஸ்வாநரனாகச் சொல்லப்படுகிறான். எவ்விதம்? சாதாரண சப்த விசேஷாத் (பொதுவான சப்தத்தை விசேஷிக் கிறபடியால்) அதனால் வைஸ்வாநரசப்தம் பரமாத்மாவுக்கே உரிய அசாதாரண தர்மங்களை விசேஷ்யமாகக் குறிப்ப தாலே வைஸ்வாநரன் பரமாத்மாவேயாகும்.

இந்த பிரகரணத்திலே (சா. உ. 5-11-1)ல் ப்ராசீன சாலர், ஸத்யயஜ்ஞர், இந்திரத்யும்நர், ஜநர், புடிலர் இவர்கள் தேஜஸ்விகளான மஹரிஷிகள் இவர்கள் உத்தாலகரை அணுகி "நம் ஆத்மா யாது? பிருஹ்மம் எது?" என்று கேட்டுத் தெளிவோம் எனக்கேட்க; உத்தாலகரும்மறு மொழிகூறுமல், கேகய அரசன் அஸ்வபதியிடம் சென்று வினவிவருவோம் வா என்று அவர்களைக் கூட்டி அழைத்துச்

சென்றார். அந்த அரசன், "வைஸ்வாநராத்ம உபாஸனை எவ் விதம் நீங்கள் செய்கின்றீர்கள்"? என்று வினவ; மேல் சொன்ன ஆறு பேர்களும் முறையே த்யுலோகம் ஆதித்யன் வாயு ஆகாசம் ஜலம் பிருத்வி என்பவற்றில் ஒவ்வொன்றை வைஸ்வாநராத்மாவாக உபாஸிப்பதாகச் சொன்னார்கள். அரசனும் "இவை வைஸ்வாநராத்மாவின் அவயவங்கள். இவை அடைவாக தலைகண்பிராணன் உடல், நீர்ப்பை பாதங்கள் என்ற அவயங்களாகும். இவை அம்சங்களே இவ்விதம் உபாஸிப்பதால் பலன்கள் இம்மையில் கிடைக் கின்றன. எல்லா அங்கங்களையும் சேர்த்து விஸ்வரூப வைஸ்வாநர உபாஸனம் செய்ய வேண்டும்" என அரசன் உபதேசித்தான். பலன் அர்ச்சிராதிகதி என்று சொல்லி "இங்கனமுள்ள பிரும்மத்தின் அவயவங்களைத் தன் உடலின் அவயவங்களில் யேறிட்டு, அந்த பிருஹ்மத்தை இதிலேவைத்து, உடலை அக்னிஹோத்ர கருவிகளாகக் கருதி வயிற்றிலிருக்கும் பிராணாக் நிஹோத்ரத்தை தன் அன்னத் தால் பஞ்சபிரான ஆஹுதிகளாகச் செய்தால் இந்திரிய அபிமான தேவதைகளும் திருப்தியடைந்து உபாஸகனின் பாபங்கள் உடனே அழிந்து போகின்றன. இந்த அக்னி ஹோத்ரத்தை அன்றோ உலகம் ஆஸ்ரயித்திருக்கிறது". என்று அரசன் அவர்களுக்கு உபதேசித்தான்.

**ஸ்ரீபாஷ்யம்:**-அவ்விதமே ஐந்து மஹரிஷிகள் ஔபமன் வாதய: ஒன்று சேர்ந்து **को न आत्मा ? किं ब्रह्म ?** என்று விசா ரித்து, **उद्दालक:** என்பவரை (அருணியின் புதல்வர் அவர்) அவரை முன்னிட்டு வைஸ்வாநர வித்யையைக் கேட்டனர்.

(நமக்கு யார் ஆத்மா? பிருஹ்மம் என்பது யாது? உத்தால கர் ஆத்மாவை வைஸ்வாநர: என்று கருதி உபாஸிக்கிறார். அவரிடம் கேட்டுத்தெளிவோம். உத்தாலகர் தமக்கு முழு வதும் தெரியாதபடியால் அவர்களை அழைத்துக் கொண்டு கேகய அரசன் அஸ்வபதியிடம் சென்று வினவினர். "இந்த அரசன் ஆத்மாவை வைஸ்வாநரர் என்று உபாஸிக்கிறான். அவனிடம் செல்வோம்"என்று அனைவரும் கேகய அரசனிடம்

சென்றனர். ஆறுபேர்கள் (உத்தாலகர் மற்ற ஐந்துரிஷிகள்) அவனிடம் செல்ல, அரசன் அவர்களை நன்கு உபசரித்தான். "என் நாட்டில் திருடன் இல்லை, எதற்கு வந்தீர்கள்—நான் உங்களைக் கண்டதும் யாகம் செய்ய உத்தேசிக்கிறேன்" நீங்கள் பிரும்ம வித்துக்கள். சந்தோஷமாக பங்கு பெற வேண்டும், எனக்கேட்க மீண்டும் சொன்னான், "எவர்கள் பிரும்மவித்துக்களோ அவர்கள் அவைகளை பிரதிக்ரஹம் செய்யலாம். நியாயமாகச் சம்பாதித்த பணம்" என்று சொல்ல, நான் உங்களுக்கு ஒவ்வொரு ருத்விக்கும் கொடுக்கப் படும் அளவு பணம் தருகிறேன். நீங்கள் இங்கு தங்கிவிட்டு அவைகளைப் பெற்றுக் கொண்டு செல்லலாம்" என்று சொல்ல (சா. 2-11-5); அவர்கள் அசுவபதியிடம் சொன்னார்கள். "எங்களுக்கு ஆத்மாவைப்பற்றி உபதேசம் செய்யவும். வைஸ்வாநர ஆத்மா யார்? को न आत्मा ? किं ब्रह्म என்று கேட்க "நாங்கள் முமுக்ஷீக்கள். வைஸ்வாநர ஆத்மாவை அறிய ஆசையுள்ளவர்கள்" என்று கூறவும்; அவன் அதை உப தேசித்தான் — என்பது உபநிஷத்கதை.

ஆகையால் வைஸ்வாநராத்மா பரமாத்மாவே ஆகும். இந்த ஆத்மபிருஹ்ம சப்தங்களால் ஆரம்பித்து, பிறகு ஸர் வத்ரராத்ம வைஸ்வாநரன் என்று சொல்லி,வைஸ்வாந விராட் ஸ்வரூபம் எல்லா ஜீவர்களையும் கொண்டதாயும் - அது உப க்ரமத்திலே காட்டப்பட்டதாகும். "को न आत्मा, किं ब्रह्म? என்று ஜீவாத்மா நாமாத்மபூத பிருஹ்மம் தான் அறியப்படவேண் டியது—என்று அவர்கள் வினவினார்கள். இங்கே ஆத்மந் பிருஹ்மந் என்கிற சப்தங்களால் ஆரம்பித்து பிறகு ஸர்வத்ர ஆத்மா வைஸ்வாநர சப்தத்தால் வ்யவஹரித்தது. அந்த இடங்களிலே ஆத்மந்-வைஸ்வாநரன் என்கிற சப்தங்களால் ஆரம்பித்து - பிறகு ஸர்வத்ர ஆத்மா வைஸ்வாநர சப்தத் தால் வ்யவஹரித்தது. அந்த இடங்களிலே "ஆத்மந" வைஸ்வாநரன் என்று பிரும்ம சப்த ஸ்தானத்திலே காட்டிய படியால் வைஸ்வாநரன் பிருஹ்மம் தான் என்பது தெளி வாகும். [वैश्वानरसाधारणशब्दविशेषात् इति सिद्धान्तः].

மேலும் இன்னொரு சுருதியில் स:सर्वेषु लोकेषु सर्वेषु भूतेषु सर्वेष्वात्मस्वन्नमत्ति (சா. உ. 5-18-1) பரமாத்மா (அவன்) எல்லா அன்னத்தையும் எல்லா உலகங்களிலும் எல்லாப் பிராணி களிலும் எல்லா ஆத்மாக்களிலும் உண்ணுகிறான். तद्यथेषीकात् लमग्नौ प्रोतं प्रदूयेत, एवं हास्य सर्वे पाप्मान: प्रदूयन्ते। எவ்விதம் தர்பையில் (ஈஷிக reed) ஈர்க்குச்சி பிரிக்கப்பட்டு அக்னி யில் ஆஹூதி செய்யப்பட்டால், அந்த எஜமானனுடைய பாபங்கள் அறவே நாசமடைகின்றன, எரிந்து போகின்ற னவோ இந்த பலன் இங்கே சொல்லப்படுகிறது. வைஸ்வாநர ஆத்மவிக்ஞானத்தின் பலனாக வைஸ்வாநர ஆத்மா மேலான பரபிருஹ்மமே ஸ்ரீமந்நாராயணன் என்று காட்டப்படுகிறது परं ब्रह्म ज्ञापयति.

இங்கே கூட வைஸ்வநரன் பரமாத்மாவேயாகும்.

Sutra 26—स्मर्यमाणमनुमानं स्यादिति

ஸ்மர்யமாணமநுமாநம் ஸ்யாதிதி - (1-2-26)

இதி—இப்படி (அதாவது உலகனைத்தையும் தன் உருவாகக் கொண்ட) வைஸ்வாநரன் ஸ்மர்யமாணம் அறிவுறுத்தப்படுகிறது. அநுமானம் - ஸ்யாத் வைஸ்வா நரன் பரமாத்மாவே என்னும் விஷயத்தில் அனுமானத்திற்கு (அதாவது வைஸ்வாநரன் என்பது பரமாத்மாவே) காரண மாகிறது — அடையாளமாகக் காட்டப்படுகிறது. அந்த அடையாளம் திரைலோக்ய சரீரத்வம் வைஸ்வாநரனுக்கு ஸ்மிருதி புராணங்களில் பல வசனங்களாலே ஓதப்படு கிறது.

த்யு (த்யுலோகம் (ஸ்வர்க்கம்) முதலாக பூமி வரை முடிவாக அவயவவிபாகங்களால் வைஸ்வாநரனின் த்ரை லோக்ய சரீரத்வமாகிற ரூபம் உபதேசிக்கப்படுகிறது. தலை முதலாக கால்கள் வரையுள்ள பல அவயவங்கள் கொண்ட விராட் ரூபம் ஓதப்படுகிறது. அந்த ரூபம் சுருதி ஸ்மிருதி களில் பரமபுருஷனின் விராட் ரூபம் என்று காட்டப்படு கிறது. இதே விராட் ரூபம் இதமிதி, இவ்விதமாக - ஸ்மர்ய

மாணம் அறிவுறுத்தப்படுகிறது, அதாவது எது அறிவுறுத்தப்படுகிறதோ பரமபுருஷனுகிற வைஸ்வாநரனின் தேகம் என்று அதற்கு லிங்கம் அடையாளம்) அனுமானத்திற்கும் ஸித்தம், விஷயமாகிறது. லிங்கம் என்று அர்த்தம். இவ்விதம் इदं என்று அடையாளம் காணப்படுகிறது. இதி சப்தம் அவருடைய பிரகாரம் (சரீரம்) என்பதாகும். இந்த விதமாக இந்த ஸ்வரூபமாக இந்த அடையாளங்களுடன் ரூபம் இருப்பதால் இது வைஸ்வாநரனுடைய ஸ்வரூபம் அது பரமாத்மாவேயாகும் என்று அனுமானம் ஸித்திப்பதால் ஸ்மர்யமாணம் (ஸ்மர்யமாணம் ஸ்மிருதிகளில் காணப்படுகிறது என்று சங்கரரின் அபிப்ராயம்; ஆனால் ராமானுஜர் அனுமானத்தினால் அறிவுறுத்தப்படுகிறது என்கிறார்; 31ம் சூத்ரத்தையும் நோக்கவும்)

ஸ்ருதிகளிலும் பரம புருஷனுடைய ரூபம் த்யுமுதல் பிருத்வி வரை வியாபித்திருக்கும் திரைலோக்ய சரீரத்வம் பரமபுருஷனுக்கு இருக்கிறதாக காணப்படுகிறது பிரஸித்தம் உதாரணம் அதர்வணத்தில் (மு. உ. 2-1-4ல்) अग्निमूर्धा चक्षुषि चन्द्रसूर्यौ दिशः श्रोत्रे वाक् विवृताश्च वेदाः । वायुः प्राणो हृदयं विश्वमस्य पद्भ्यां पृथिवी ह्येष सर्वभूतान्तरात्मा इति வைஸ்வாநரனுக்கு அக்னியெனப்படும் த்யு லோகம் தலையாகவும் சந்திர சூரியர்கள் கண்களாகவும், திக்குகள் திசைகளாகவும் வேதங்கள் பேச்சுக்களாகவும், வாயு பிராணனாகவும், எல்லா உலகமும் ஹ்ருதயமாகவும் பூமி கால்களாகவும் உள்ளன. இவன் எல்லாப் பூதங்களுக்கும் அந்தராத்மாவாக யுள்ளவன் என்று ஓதப்படுகிறது. இங்கு அக்னி என்பது த்யுலோகத்தைக் குறிக்கும்; ஏனெனில் பிரு. உப, 6-2-9ல் असौ वै लोकोऽग्निः அந்த உலகம் வாஸ்தவமாகவே அக்னியாக விருக்கிறது.

முனிகளும் இவ்விதம் சொல்கிறார்கள்—यां मूर्धानं यस्य विप्रा वदन्ति खं वै नाभिं चन्द्रसूर्यौ च नेत्रे, दिशः श्रोत्रे विद्धि पादौ क्षितिं च सोऽचिन्त्यात्मा सर्वभूत प्रणेता इति த்யுலோகம் தலையாகவும் ஆகாசம் நாபியாகவும் (தொப்பூள்)-கண்கள் சந்திர சூர்யர்களாகவும்

திசைகள் காதுகளாகவும், கால்கள் பூமியாகவும், அப்பேற்பட்ட (வைஸ்வாநரனின்) விராட் (விஸ்வ) ரூபம் நினைக்க முடியாதபடி (பெருமைகள் கொண்டன) அவரே ஸர்வபூதங்களையும் தூண்டுபவர் - தலைவர் - செயல்படுத்துபவர். எவருக்கு வாய் அக்னியாகவும் த்யௌ (ஸ்வர்க்க) லோகம் தலையாகவும், தொப்புள் ஆகாயமாகவும் காதுகள் திசைகளாகவும் அவரே இந்த லோகாத்மந் அத்தகைய விராட் ஸ்வருபத்துக்கு நமஸ்காரம் (यस्याग्नि रास्यं द्यौर्मूर्धा खंनाभिश्चरणौ क्षिति:, सूर्यश्चक्षु; दिश: श्रोत्रं तस्मै लोकात्मने नम: மஹாபாரதம் 12-46-70 இதே அபிப்ராயம் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்துதியிலும் காணப்படுகிறது.

பூபாதௌ யஸ்யநாபிர் வியதஸுர நிலச்சந்திர ஸுர்யௌச நேத்ரே
கர்ணவாசா: சிரோத்யௌர் முகமபி தஹநோயஸ்யவாஸ் தேயமப்தி : ।
அந்தஸ்தம் யஸ்ய விஸ்வம் ஸுரநரக கூகோ போகிகந்தர்வ தைத்யை :
சித்ரம்ரம் ரம்யமாணம் திரிபுவநவபுஷம் விஷ்ணு மீசம் நமாமி

(எவனுக்கு பூமி கால்களாகிறதோ, ஆகாயம் நாபியாகிறதோ, காற்று பிராணனாகிறதோ, சந்திர சூர்யர் கண்களாகின்றனரோ, திசைகள் காதுகளாகின்றனரோ, த்யுலோகம் தலையாகிறதோ, அக்னி முகமாகிறதோ, கடல்மூத்திர கோசமாகிறதோ, தேவர் - மனிதர் - பறவை - பசு - பாம்பு கந்தர்வ அசுரர் - ஆகியவர்களால் விசித்திரமாகவும் அழகாகவும் விளங்கும் உலகனைத்துக்கும், எவனுக்கு ஹ்ருதயமிருக்கிறதோ மூவுலகையும் உடலாகக் கொண்ட ஈசனை அவ் விஷ்ணுவுக்கு பல நமஸ்காரங்கள்).

இங்கேயும் இந்த பிரகரணத்திலும் கூட த்யு முதலியவை வைஸ்வாநரனுக்கு தலையாகவும் மற்ற அவயவங்களாகவும் சொல்லப்படுகின்றன. ஆகவே அந்த ஆறு ரிஷிகளால் (ஔபமன்ய - உத்தாலகர் ஆதி) மஹரிஷிகளால் கேகய

அரசன் இவ்விதம் கேட்கப்பட்டான். "நீர் வைஸ்வாநரனை ஆத்மாவாகவே உபாஸிக்கிறீர். அவனையே எங்களுக்கு உரைப்பீர்" आत्मानमेवेमं वैश्वानरं संप्रत्य ध्येति, तमेवनो ब्रूहि என்று வினவப்பட்ட கேகய மன்னன் அவர்களுக்கு வைஸ்வாநர ஆத்மாவை உபதேசிக்க விரும்பினன். ஆனால் அதற்கு முன்பு அவன் அவர்களுடைய விசேஷமான பிரஸ்னத்தின் முழுநோக்கத்தை அறிய அவர்களுக்கு எவ்வளவு தூரம் இந்த வித்யையில் பரிச்சயமிருக்கிறது என்று அறிய விரும்பி - அவர்களை அறிந்த வண்ணம் சொல்லுமாறு நியமித்தான். அவர்களுடைய பதில்களிலிருந்து அவன் புரிந்து கொண்டான். சிலவற்றை இவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களில் ஒருவருக்காவது வைஸ்வாநர ஆத்மாவைப்பற்றித் தெரியவில்லை. ஆகவே ஒவ்வொருவரை மன்னன் கேள்வி கேட்டான்.

"ஔபமன்யவ நீ உபாஸிக்கிற ஆத்மா யார்? (சா. உ. 5-12-1) कं त्वमात्मानमुपास्से அதற்குப் பதிலாக "दिवमेव भगवो राजन्" इति - நான் திவம் (ஸ்வர்க்க லோகத்தை) உபாஸிக்கிறேன்; அதனால் அதிருப்தியடைந்த அரசன் அந்த ரிஷியின் தவறான அபிப்ராயத்தை-அதாவது த்யு வைஸ்வாநர ஆத்மாவாகவிருக்கிறது என்பதை; அகற்றி அவனுக்கு உபதேசித்தார். த்யு (திவ) வைஸ்வாநர ஆத்மாவின் தலையாகவிருக்கிறது. மீண்டும் உபதேசித்தான. அந்த வைஸ்வாநராத்மாவின் தலையாகிற திவ: (ஸ்வர்க்கம்) ஸு-தேஜா (सुतेजा) என்று சொல்லப்படுகிறது. இதனால் அவருடைய குணமாகிற பிரகாசம் சொல்லப்படுகிறது என்றனன். இந்த விதமாக ஸத்யயக்ஞர், மற்ற ரிஷிகள் ஒவ்வொருத்தரும் ஆதித்ய, வாயு ஆகாசம் அப்பு - பிருத்வி (சூரியன்) முதல் ஒவ்வொன்றாக உபாஸ்ய வஸ்துவாகவிருக்கிறது. இப்படி அநேக வஸ்துக்கள் உபாஸிக்கவிருக்கின்றன. அவைகளுக்கு தனித் தனியானபெயர்கள் ஸு-தேஜஸ் (தலை) விஸ்வரூப: (கண்) பிராணன் பிருதக்வர்த்மா, பஹுல:, (தேகமத்யம்) ரயி: (ஆகாசம்) (முகத்தின் ஜலம்) ப்ரதிஷ்டா (தாடை) இந்த பெயர்களைக் காட்ட ஒவ்வொரு குணமுள்ள

தாகவும். ஆதித்யன் வாயு போன்ற உபாஸ்ய வஸ்துக்கள் வைஸ்வாநர விஸ்வரூபத்திற்கு அவயவ அங்கங்களான கண் மூச்சு संदेह (உடம்பின் மத்யபாகம்) மூத்திர கோசம் பாதங்கள் ஆக (அபிமானி தேவதைகளாக) விருக்கிறார்கள். ஸந்தேஹ :- உடம்பின் மத்யபாகம் என்று சொல்லப்படு கிறது. ஆகவே இந்த விதமாக வைஸ்வாநரனின் ரூபம். த்யுதலையாகவும் அதேபடி மற்றவை மற்ற அவயவங்களாக விருப்பதால், परमपुरुषस्यैव रूपमिति वैश्वानर: परमपुरुष एव-வைஸ்வா நரனே பரமபுருஷனேயாகும். இது சித்தாந்தமாகும்.

மீண்டும் சூத்ரக்காரரே மற்ற சங்கைகளைப் போக்கி நிர்ணயம் செய்வதற்கு இவ்விதம் மீண்டும் சொல்கிறார்.

**Sutra - 27 शब्दादिभ्योऽन्त: प्रतिष्टानाच्च नेति चेन्न तथादृष्ट्युपदेशात्; असंभवात्; पुरुषमपि चैनमधीयते (1-2-27)**

*சப்தாதிப்யோ஽ந்த: பிரதிஷ்டாநாச்சநேதி சேந்நததா த்ருஷ்டத்யுபதேஶாத் ஸம்பவாத் புருஷமபி சைநமதீயதே (1-2-27)*

சப்தாதிப்ய:—சப்தம் முதலானவற்றாலும், அந்த: பிர திஷ்டாநாத்ச (சரீரத்தின்) உள்ளிருப்பவனுகையாலும், ந: வைஸ்வாநரன் பரமாத்மாவே எனக் கூறமுடியாது. இதி சேத் (இவ்விதம் கூறுவாயாகில்) ந அது சரியில்லை. ததாத் ருஷ்ட்யுபதேஸாத் - ஜாடராக்னியைச் சரீரமாகக் கொண்ட தாகவே பரம்பொருளைப் பற்றிய உபாஸநம் உபதேசிக்கப் படுவதாலே; அஸம்பவாத் (கேவலம் ஜாடராக்னிக்கு மூவுல கையும் சரீரமாகக் கொண்டிருந்தல்) பொருந்நாது. அதனால் வைஸ்வாநரன் பரமாத்மாவே எனக் கூறமுடியும்; ஏநம் இந்த வைஸ்வாநரனை புருஷம் அபிச அதீயதே - (ஒரு வேத வாக்யம்) புருஷன் என்று மல்லவா ஓதுகிறது. (பூர்வபக்ஷம் வைஸ்வநரன் பரமாத்மாவேயென்று நிச்சயிக்க முடியாது. ஜாடராக்னியாக விருக்கலாம்.)

மேல் ஸ்தாபிதம் செய்யப்பட்டது வைஸ்வாநரன் பர மாத்மாவேயென்று ஆனால் இது சரியல்ல ஏனெனில் शब्दादि.

ऽन्तः प्रतिष्ठितम् சரீரத்தின் உள் இருப்பவன் ஆகையால் ந
வைஸ்வாநரன் பரமாத்மாலல்ல, ஜாடராக்னியையும் குறிக்
கலாமல்லவா ? ஏனெனில் அக்னி: இஹ என்று பிரயோகம்
காணப்படுகிறது. மேலும் சரீரத்தினுள்ளே பிரதிஷ்டிதா
அமர்ந்து விளங்கிறது. இங்கே பிரயோகம் செய்யப்பட்ட
அக்னிஸாமாநாதிகரணத்தினால் வைஸ்வாநரனுடன்ஸாம்யம்
என சுருதியிலிருந்து தெரியப்படுகிறது. வாஜஸேனர்களின்
வைஸ்வாநரவித்யா பிரகரணத்திலே அக்னிரஹஸ்யத்திலே
இதே வைஸ்வாநரனாக விருக்கிறது. சா. உ. 5-18-2 स एषो-
ऽग्निर्वैश्वानरः என்று வைஸ்வாநரனுடன் ஸமானாதிகரணத்தி
னால் ஒற்றுமைகாட்டப்பட்டு अग्निरिति என்று காட்டப்படு
கிறது. இந்த பிரகரணத்திலும் (சா. உ. 5-18-2) हृदयं गार्हपत्-
योमनोऽन्वाहार्यपचन आस्य माहवनीयः इति (வைஸ்வாநரனுடைய)
ஹ்ருதயம் கார்ஹபத்ய அக்னியாகவும் மனம் அன்வா
ஹார்யமாகவும் வாய் ஆஹவனீயமாகவும் இருக்கிறது;
அதில் வைஸ்வாநரன் ஹ்ருதயத்தில் வீற்றிருந்து கொண்டு
மூன்றுவித அக்னிகளின் பிரிவுகளைச் கல்பிக்கிறான் அத
தைன் ஸ்வபாவத்தையடைகிறான். சா. உ 5-16-1 तद्यद्भक्तं
प्रथममागच्छेत् तत् होमीयम्. स यांप्रथमामाहुतिं जुहुयात् तां जुहुयात्
प्राणाय स्वाहा ஆகவே அந்த அன்னம் யாகத்தில் ஆஹூதி
செய்யப்படுவது போல ஆஹூதியாக (நாம் உண்ணும்
போது) அமைகிறது. முதல் ஆஹூதி பிராணாய ஸ்வாஹா
இந்த அன்ன ஆஹூதி முக்ய பிராணனின் அபிமானி
தேவதைக்கு யாகத்தில் ஹோமம் செய்யப்படுவது போல
பிரதம ஆஹூதியாக விருக்கட்டும் என்படும் மந்திரங்
களாலே முக்யபிராணனுக்கு அர்பிக்கப்பட்ட பிரதம
ஆஹூதி அந்த பிராணனைத் தாங்குகிற வைஸ்வாநரனுக்கு
ஸாமாநாதிகரணத்தினாலே அர்ப்பிக்கப்பட்டதாகும். (முக்ய
பிராணனுக்கும் அந்தராத்மாவாக வைஸ்வாநரன் இருக்கிற
படியால்): அதே போலவாஜஸேனயினர்களும் சொல்கிறார்
கள், "இந்த வைஸ்வாநரன் இந்த புருஷனுக்குள்ளே வசிக்
கிறான் பிரதிஷ்டிதம்" स यो ह्येतमेवमग्निं वैश्वानरं पुरुषविधं पुरुषेऽन्तः
प्रतिष्ठितं वेद इति வாஸ்தவத்திலே எவன் இந்தவைஸவாநர
அக்னியை அறிகிறானோ (எப்படியெனில்) புருஷஸ்வரூபம்

கொண்டவனுகவும் புருஷனுக்குள்ளே (அந்த:) பிரதிஷ்டிதம் வீற்றிருந்து நியமிக்கிருனே (இங்கே சொல்லப்படுவது லிங்கம் - அக்னி சப்தத்திலை பரமாத்மசப்தமேவ पुरुषमपि चेति என்பதால் சதபத பிராஹ்மணம் கூறுகிறது. திரைலோக்ய சரீரம் அடையாளம். இதே பதலிங்கம் இந்திரபிராணுதி கரணத்திலும் காட்டப்படுகிறது. அக்னி சரீரபரமாத்மா अग्निशब्दस्य अग्निविशिष्टपरत्वावसायादिति भाव: ।)

ஆகையால் அக்னி சப்தம் ஸாமாநாதிகரணத்திஞல் வைஸ்வாநரனுடன் ஸாம்யம் ஓதப்பட்டு; அதஞல் வைஸ்வாநரன் மூன்று அக்னிகளின் ஸ்வரூபஸ்வபாவங்களை அடைகிருன். அவனே முக்ய பிராணனுக்கு அளிக்கப்படும் பிரதம ஆஹுதியை ஸ்வீகரிக்கிருன். அந்த வைஸ்வாநரனே புருஷனுகிற (ஜீவனுக்குள்) அந்தப் பிரதிஷ்டனுக (எஜமானனுக உள்இருப்பவனுக) ஆகிருன். ஆகவே இந்தக் காரணங்களால் வைஸ்வாநரன் வயிற்றிலிருக்கும் ஜாடராக்னியாக இருக்கிருன். ஆகவே இந்த ஜாடராக்னியாகிற வைஸ்வாநரனே பரமாத்மாவாக முடியாது

(பூர்வபக்ஷி சொல்வது ஸ ஏஷோ அக்னிர் வைஸ்வாநர:- (பிர. உ. 1-7ல்) அக்னியே வைஸ்வாநரன் என்று ஸாமாநாதிகரணத்திஞல் ஒன்ருகிக்ருன். இந்த பிரகரணத்திலும் ஹ்ருதயம் மனம் முகம் ஆகிய மூன்று இடங்களிலிருக்கும் மூன்று அக்னிகளாக கற்பிப்பதாலும்; இரண்டாவது காரணம் ஜாடராக்னியைக் குறித்து பிராணுய ஸ்வாஹா என்று முதல் பிராணுஹூதிக்கு ஆதாரமாக வைஸ்வாநரனை ஓதுவதாலும்; மூன்ருவதாக சுருதி பிரமாணம் வாஜஸேநயநர், ஏதமேவாக்நிம்......புருஷே அந்த: பிரதிஷ்டதம் என்று புருஷ சரீரத்தினுள்ளிருப்பதாக வைஸ்வாநரனை ஓதியிருப்பதாலே, வைஸ்வாநரன் ஜாடராக்னியே ஆக முடியும். பரமாத்மாவல்ல என்பதாம்).

**ஸ்ரீபாஷ்யம் :-** இவ்விதம் வாதிப்பது சரியல்ல. ஏனெனில் तथादृष्ट्युपदेशात् இங்கு பரமாத்மாவை உபாஸிப்பது த்ருஷ்டயுபதேசம் இருக்கிறபடியாலே இங்கு திருஷ்டி

உபாஸனை (ப்ரதீக உபாஸனையைப் போல) பிருஹ்மத்துக்குச் சொல்லப்படுவதாலே, முன்னாலே சொல்லப்பட்ட த்ரைலோக்ய சரீரத்வம் கொண்ட புருஷன் என்று சொல்லப்படுவதாலே, அதாவது மேலான பரபிரும்மமே வைஸ்வாநரனே ஜாடராக்னியைத் தனது சரீரமாகக் கொண்டதாகவே பரம் பொருளைப் பற்றிய உபாஸனம் (ப்ரதீக உபாஸனையைப் போல) உபாஸிக்கப்பட வேண்டியது என்கிற சுருதிபாடம் இருப்பதாலே, ஜாடராக்னிவிசிஷ்ட (கூடச் சேர்ந்த) பிருஹ்மமே உபாஸிக்கப்பட வேண்டியது. இங்கே காட்டப்படும் அக்னி சப்தம் கேவலம் ஜாடராக்னியை மாத்திரம் சொல்லவில்லை. மற்றக் காரணங்களாலும் - (அதாவது திரைலோக்ய சரீரம் இத்யாதி) - இதனாலே சூத்ரத்திலே அஸம்பவாத்-; ஜாடராக்னிக்கு திரைலோக்ய சரீரத்வம் கொண்டிருக்கை பொருந்தாது. இன்னொரு காரணம், வைஸ்வாநரனை புருஷன் என்று ஒரு வேதவாக்யம் கூறுகிறது. அவனுக்கு ஜாடராக்னி சரீரமாக விருக்கிறது. ஸ ஏஷோக்நிர் வைச்வாநரோ யத்புருஷ:; (பகவானைப் புருஷன் என்று ஸஹஸ்ர ஶீர்ஷா: புருஷ:- என்பதைப் போல காட்டுகிறது.)

நீ கேட்கலாம் "எப்படி பரமாத்மா வென்று நிச்சயிக்க முடியும்?" அதற்குப் பதிலாக நாம் சொல்வது—"अस भवात ஜாடாராக்னிக்கு வைஸ்வாநரனுடைய திரைலோக்ய சரீரத்வம் யேற்படாது. திரைலோக்ய சரீரத்வம் கொண்டதால் காட்டப்பட்ட வைஸ்வாநரன் ஸமாநாதி கரணத்தாலே ஜாடாராக்னியையும் சரீரமாகக் கொண்டவனாக ஸாம்யம் (ஒற்றுமை) ஓதப்படுகிறது. அதனால் அக்னி சப்தம் எதைக் காட்டுகிற தென்றால் ஜாடராக்னி சரீரதயா தத்விசிஷ்டம் திரைலோக்ய சரீரமுள்ள ப்ரமாத்மாவே என்று காட்டுகிறது என்று அர்த்தம் (அதாவது பிரதம ஆஹூதி பிராணாயஸ்வாஹா என்று அன்னத்தை ஹோமம் செய்வதால் பிராணனுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவைச் சொல்லுமாப் போலே, இங்கேயும் ஜாடராக்னிக்கு அந்தர்யாமி அதை சரீரமாகக் கொண்ட பரமாத்மா அவனுக்கே திரைலோக்ய சரீரம் உண்டு, அவனையே "ஆத்மாநம் வைச்வாநரம் (சா:

உ. 5-11-2) என்று ஓதுவதாலே அதேபடி ததாத்ருஷ்ட்யுப தேஸாத் - ஜாடராக்னியைச் சரீரமாகக் கொண்டதாகவே பரமாத்மாவைப் பற்றிய உபாஸனம் உபதேசிக்கப்படு வதாலே, இந்த யோக்யதை கேவலம் ஜாடராக்னிக்குப் பொருந்தாதபடியாலே, வைஸ்வாநரனே பரமாத்மா வென்று அக்னிசப்தம் காட்டுவதாகும். அக்னி சரீர பரமாத்மா வென்று அர்த்தம் கொள்ளப்படுவதாகும்). (அதனாலே தான் நாம் சாப்பிடுவதை-அந்தர்யாமி பூஜை ஆகிவிட்டதா? என்று கேட்கிறோம். பாரதத்திலும் ஒரு கதை உண்டு பரமாத்மா திரௌபதியினிடமிருந்து ஒரு அரிசி பருக்கையை யும் கீரையையும் சாப்பிட்டு "ஸர்வம் விஷ்ணவே ஸ்வாஹா" என்று சொன்னபடியால் துர்வாஸாதிகளுக்கு பசி போயிற்று உண்டமயக்கம் ஏற்பட்டது என்று காட்டப்பட்டது).

இதே கருத்துடன் பகவானல் கீதையிலும் காட்டப் பட்டது. கீதை 15-14 अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः, प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् - நான் ஜாடராக்னியாக வயிற்றுக்குள்ளிருக்கிற அக்னியாக ஆகி பிராணிகளின் சரீரத்தினுள் புகுந்தது பிராணன் அபானன் என்கிற காற்றுடன் சேர்ந்து பிராணிகளால் புஜிக்கப்படுகிற (காத்ய சூஷ்ய - லேஹ்ய - பேயாத்மகமான) நான்கு வித அன்ன ரஸங்களை பருகி பக்குவம் செய்கிறேன். இங்கு ஜாடராக்னி பரமாத்மாவிற்கு விபூதியாக (ஐஸ்வர்யமாக) அக்னி பகவா னேடு சரீர ஆத்ம பாவத்தினல் சேர்ந்து ஸாமாநதி கரண் யேந) சொல்லப்பட்டது. இதற்குக்காரணம், அக்னி முதலான தேவதைகளின் (ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட: - அந்தராத்மாவாயிருந்து கொண்டு எல்லோரையும் நியமனம் செய்வதாலே); ஜாடராக்னியைச் சரீரமாகக் கொண்ட பர மாத்மாவென்று அர்த்தம். ஆகையால் ஜாடராக்னி விசிஷ்ட பரமாத்மாவின் உபாஸனமே இங்கு உபதேசிக்கப்பட்ட தாகும்.

மேலும் पुरुषमपि चैनमधीयते वाजसनेयिनः வாஜஸே நாயி யர்கள் (சுக்லயஜுர்வேதிகள்) புருஷனை, எவன் அந்த புருஷ னக விருக்கிருனே, அந்த புருஷனே இதே அக்னியாகிற

வைஸ்வாநராத்மா என்று புருஷசப்தத்தால் வைஸ்வாநராத் மாவை புருஷன் என்றும் ஓதுகிறது. வாஸ்தவமாகவே ஜாடராக்னி இந்த புருஷனுகாது अस्‌ भवात्‌ பரமாத்மாவுக்கே தனிப்பட்ட நிருபாதிக புருஷத்வம் யேற்படும். यथा (புருஷ ஸூக்தத்தில்) सहस्रशीर्षा पुरुषः...पुरुष एवेदं सर्वं பகவானிதிஸப்தோயம் ததா புருஷ இத்யபி, நிருபாதீசவர்த்ததே வாஸுதேவ ஸநாதநே, பகவான் என்னும் சப்தமும், அதேமாதிரி புருஷன் என்கிற சப்தமும் இயற்கையாகவே ஸநாதனன வாஸுதேவரிடம் நிலைநிற்கின்றன (ஸ்மிருதிசுருதிகளில் புருஷ சப்தத்தால் முக்கியமாகச் சொல்லப்படுபவன் பரமாத் மாவான ஸ்ரீமந்நாராயணன் ஆகும்.) இக்காரணங்களால் வைஸ்வாநரன் ஜாடராக்னியைச் சரீரமாகக் கொண்ட பரம புருஷனே ஆகமுடியுமாதலால் கேவலம் ஜாடராக்னியாகாது என்பது சித்தாந்தம்.

### Sutra 28 - अत एव न देवता भूतश्च (1-2-28)
### அத யேவநதேவதாபூதஞ்ச (1-2-28)

அதயேவ - அதே காரணத்தினாலே (அபரிச்சின்னமான த்ரைலோக்ய சரீரத்தைக் கொண்டதாலும், புருஷன் என்று வைஸ்வாநராத்மாவை சுருதி ஓதுவதாலும்) தேவதா— தேவதையும், பூதம் ச (மூன்றாவது) பூதமான அக்னியும் ந வைஸ்வானரனல்ல (இதனால் வைஸ்வாநரன் என்கிற தேவ தைக்கும், வைஸ்வாநரன் எனப்படும் மூன்றாவது பூதமான அக்னிக்கும் பொருந்தமாட்டாதாகையால், வைஸ்வாநரன் இரண்டுமாக முடியாது, அது பரமாத்மாவையே குறிக்கும் என்பதாம். பரமாத்மாவின் லிங்கங்கள் பேசப்படுவதாலே மற்றவைகளுக்குப் பொருந்தாது).

மேல் சொல்லப்பட்ட இதே காரணங்களால் அதாவது த்ரைலோக்ய சரீரகத்வம் இத்யாதி வைஸ்வாநரனை ஆத்மந், பிருஹ்மந், புருஷன் என்று சொல்லப்படுவதாலும், அவனை உபாஸிப்பதாலே பாபங்கள் அழிகின்றன என்றும்; ஓதப் பட்டதாலே, யாதொரு சந்தேகத்திற்குமிடமில்லை, வைஸ்வா நரன் பரமாத்மாவேயாகும். அதனால் வைஸ்வாநரன்

என்ப்படும் சூரிய தேவதையும்; பூதங்களுள் மூன்ருவது பூதமான அக்னியை வைஸ்வாநரன் என்கிறதும் வைஸ்வா நரனுக ஆகமுடியாது. இயற்கையாகவே புருஷனுயிருக் கையும் மூவுலகைச் சரீரமாக கொண்டிருக்கையும் இரண்டு பெருமைகளும் சூரியனுக்கும் அக்னிக்கும் ஒட்டாது பரமாத் மாவுக்கே ஆகமுடியும் என்பதாகும்.

Sutra - 29 साक्षादप्यविरोधं जैमिनि:—(1-2-29)

ஸாக்ஷாதப்யவிரோதம் ஜைமினி: (1-2-29)

ஸாக்ஷாத்அபி(அக்னி சப்தத்திற்கு) நேரேயே(ஸாக்ஷாத் தாகவே) பரமாத்மா பொருள் கொண்டாலும், அவிரோதம் (விரோதமில்லை) என்று ஜைமினி: - ஜைமினி என்னும் ஆசார் யர் கருதுகிருர். (வ்யாஸரின்) அபிப்ராயம் - ஸ: ஏஷோऽக் நிர்வைஸ்வாநர:-(பிர.உ.1-7ல்) வைஸ்வாநரனை அக்னியாகப் பேசிற்று.

மேலே சொல்லப்பட்டது — வைஸ்வாநரன் அக்னி- இரண்டுக்கும் ஸாமானாதி கரணத்திறுல ஒற்றுமை சொல்லி- அக்னியே பரமாத்மாவாகும், ஏனெனில் ஜாடராக்னியை பர மாத்மா சரீரமாகக் கொண்டதாலே, அதன் சேர்க் கையையடைந்த பரமாத்மா வாசகத்வமாக - அக்னி சப்தம் ஆகிறது. அதனுலே பரமாத்மாவை உபாஸனம் செய்ய வேண்டியது என்று ஓதப்படுகிறது. ஆனுல் ஜைமினி ஆசார்யர் அபிப்ராயப்படுகிருர்—வைஸ்வாநர சப்தத்தைப் போல, அக்னி சப்தம் பரமாத்மாவையே ஸாக்ஷாத்தாகக் குறிக்கிறது. அதாவது ஸாமாநதிகரணமின்றியே நேரடி யாகவே குறிப்பதாலே அக்னி சப்தம் பரமாத்மாவேயாகும். இதனுல் தோஷம் ஒன்றுமில்லை. அவிரோத: என்று ஜைமினி ஆசார்யர் எண்ணுகிருர். (அதாவது அக்நிர் வைஸ்வாநர: என்று கூறப்படுவதாலே. இந்த வைஸ்வாநரனை பரமாத்மா வைத்தவிர்ந்த மற்ருெரு தத்வமாக எண்ண வேண்டாம், பரமாத்மாவே ஸாக்ஷாத் என்பதாகும். இவ்வித அபிப்ரா யத்தை மறுக்காமல் விடுகையாலே இது வியாஸருக்கும்

ஷம்மதம் என பின் மூன்று சூத்ரங்களிலும் இப்படியே கொள்வது).

என்ன சொல்லப்பட்டதென்றால் - எப்படி வைஸ்வாநர சப்தம் ஸாதாரண பிரயோகமாகவும் பரமாத்மா விஷயத்திலே அஸாதாரணதர்ம விசேஷங்கள் விசேஷமாகக் காட்டப்படுவதாலே த்ரைலோக்ய சரீரத்வம், புருஷன் இத்யாதிகளாலேயும் வைஸ்வாநரனே அக்னீ சரீர பரமாத்மா என்று சொல்லுவதாலேயும் அதனாலே ஸாமாநதிகரணத்தினாலே அக்னிக்கும் வைஸ்வாநரனுக்கும் ஒற்றுமை காண்பிக்கப்பட்டதாலே பரமாத்மா "விஸ்வேஷாம் நராணாம் நேத்ருத்வாதிநா" எல்லாப் பிராணிகளுக்கும் தலைவனாகவும் பதியாகவும் விருக்கிறான். (எல்லாப் பிராணிகளுக்கும் அவன் புருஷார்த்தமாக அடையப்படுபவனாகவும் உபாஸனை செய்யப்பட வேண்டியவனாகவும் ஆகிறான் என்பதாகும்.) இத்தகைய தலைவனாக விருக்கிற (नराणां नेतृत्वादिना) குணத்தினாலே பரமாத்மாவையே குறிக்கிறது வைஸ்வாநரசப்தம் எனத் தீர்மானம்—பொதுவாகக் கூறப்பட்டாலும். அதே போலே அக்னிக்கும் (அக்னி சப்தத்திற்கும்) நெருப்பைக் குறிப்பதானாலும், ஏனெனில் அக்னிக்கும் எல்லோரையும் அழைத்துச் (செல்கிறான் நல்ல வழியிலே) सुपथा नयति என்கிற குணமும் ஓதப்படுகிறது. இந்த குணத்தினாலே அக்னி யோகத்தினால் ஜ்வலிக்கிறான். (ஆஹுதியினால் வளர்ச்சியடைகிறான்.)

(இங்கு வைஸ்வாநர சப்தத்திற்கும் அக்னி சப்தத்திற்கும் சப்தார்த்தவிஷயத்தில் துல்யத்வம் காட்டப்படுகிறது. பலதத்துவங்களைக் காட்டக்கூடிய वैश्वानर: சப்தம் எப்படி? विश्वान् नरान् नयति, विश्व एवं नरा नयतीति वां, विश्वानर एव वैश्वानर:, அதேபடி .अग्नि: कस्मात? अग्रणी भवति, अग्रं नीयते, अग्रं नयति, नमयति नर: नेवति (கல்பதரு); நேத்ருத்வாதி நேத்யாதி பதத்தினால் நேயத்வம் விவக்ஷிதம். பூர்வபக்ஷத்திலே அக்னி சப்தத்திற்கு தேஜஸ்ஸிலே ரூடி; (அக்னிபரத்வம்), வைஸ்வாநர பதத்திலே யோகம்; சித்தாந்தத்திலே ஜைமினிமதம் இரண்டுமே யோகம் ஆகும்) அதாவது விஸ்வேஷாம்

நராணும் நேதா விஸ்வாநர: ஸயேவ வைஸ்வாநர: என்று கொண்டு ரூடியாகக் கொள்ளாமல் அவயவ வ்யுத்பத்திக் கொண்டு நேராக எல்லா ஜீவன்களேயும் நற்பாதையில் (நல்லகதிக்கு) அழைத்துச் செல்பவர் எம்பிரான். ஆகையால் இதை உத்தேசித்து வைஸ்வாநர:- என்று பரமாத்மாவே ஸாக்ஷாத்தாக் சொல்லப்பட்டான் என்பது ஜைமினியின் கொள்கை; பிர ஸித்தமான அக்னியை அல்ல என்பதாகும்) வைஸ்வாநர:- வ்யுத்பத்தியினாலே பரமாத்மா ஆகிறானே அப்படி அக்னி சப்தம் அக்னி சூரியன் இவைகளைக் குறித் தாலும் பரமாத்மாவையே குறிக்கும் என்பதாகும்.

ஸ்ரீபாஷ்யம்:—ஜ்வலிக்கிற குணம் நிருபாதிகமாக அக்னிக்கு ஏற்பட்டதல்ல, பரமாத்மாவின் சம்பந்தத்தாலே யேற்பட்டதாகும். அதேமாதிரி அக்னி நல்லவழியில் தன்னை உபாஸிப்பவர்களை அழைத்துச்செல்கிறான். இதுவும் பரமாத்மாவின் சம்பந்தத்தால் யேற்படுவதாகும். இந்த குணங்கள் பரமாத்மாவிஷயத்தில் நிருபாதிகமாக யேற்பட் டிருக்கின்றன. ஆகவே இந்த பிரகரணத்திலே சாதாரண பிரயோகம் கொண்ட சப்தம், பொதுவாகச் சொல்லப்பட்டா லும், அதற்கு பரமாத்மாவுக்குரிய அசாதாரண தர்மங்களை விசேஷ்யங்களாக ஓதப்படுவதால் அக்னிர் வைஸ்வாநர:- என்பதால் இந்த வைஸ்வாநரனை பரமாத்மாவைத் தவிர வேறொரு தத்துவமில்லை, பரமாத்மாவே ஸாக்ஷாத் ஆக ஆகும் என்பதாம்.

இப்போது மேலும் கேள்வி கேட்கப்படும். यस्त्वेतमेवं प्रादेशमात्रमभिविमानम् உபாஸகன் வைஸ்வாநரனை உபாஸிக்கிற போது, எப்படி இந்த வைஸ்வாநரன் அபரிச்சின்னனாக விருக்கிறவன்—த்யு முதலான லோகங்களையும் பிருத்வியை யும் மற்றுமுள்ள பிரதேசங்களையும் வியாபித்து, தனது சரீரமாகக் கொண்டவனை ஒரு சிறிய அளவான மாத்திரை யில் பரிச்சின்னத்வத்தை அடையும்படி ஆவான், அளவு பட்டவனாக ஆவான் என்கிற சந்தேகத்திற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார்.

## Sutra 30 अभिव्यक्तेरित्याश्मरथ्यः (1-2-30)

### அபிவ்யக் தேரித்யாஸ்மரத்ய: (1-2-30)

அபிவ்யக்தே:— (உபாஸகனுக்கு) மனதில் தோற்று வதற்காக அளவுபடுத்திப் பேசிற்று இதி என்று; (அதாவது உபாஸகனுக்கு ஸௌகர்யம் செய்வதற்க்காக இப்படி அளவுபடுத்தியது ஆனுற் வாஸ்தவத்திலே அவன் அபரிச் சின்னத்வம் கொண்டவன்) இதி என்று ஆச்மரத்ய:- ஆச்ம ரத்யர் என்னும் ஆசார்யர் எண்ணுகிறார். அதாவது அள வற்ற வைஸ்வானரனே எவன் த்யு முதலான பிரதேசங்களில் மாத்திரம் அளவுபட்டவனுக உபாஸிக்கிறுனே அதேபோல உபாஸகனுடைய நெஞ்சிலே உபாஸிப்பது எவ்விதம் சரி யாகும் ?

உபாஸகனுக்கு எளிதில் தோன்றுவதற்காக அவனு டைய ஹ்ருதய பிரதேசத்தில், மாத்ரத்வம் - ஒரு சிறிய அள வில் பரமாத்மா அடைகிறுன், என்று வியாஸரின் சிஷ்ய ரான ஆஸ்மரத்யர் எண்ணுகிறார். த்யௌ: (ஸ்வர்க்கம்) தலையாகவும், ஆதித்ய சந்திரர்கள் கண்களாகவும், வாயு பிராணனுகவும், ஆகாஸம் தேகத்தின் மத்ய பாக மாகவும், ஜலங்கள் மூத்திரகோசமாகவும், பிருத்வி பாதங் களாகவும் இத்யாதிகளால் த்யு முதலானவைகளுடைய சம்பந்தத்தால் அபரிச்சின்னத்வமாகவிருந்தாலும் அளவு பட்டவனுக இந்த பிரதேசம் ஸம்பந்தம் கொண்டவனுகச் சொல்வது உபாஸனு நிமித்தமாக; மாத்ரையாக சிறிய அள வுடன் அந்த பிரதேச சம்பந்தப் படுத்தி பேசியிருப்பது எப்படி ஒட்டும் ? அதற்குப் பதில் அவன் ஸ்வயமாகவே அளவற்றவனுக விருப்பினும், உபாஸன ஸௌகர்யத்தைச் செய்வதற்க்காகவும், உபாஸகன் அவனை நன்கு அறிந்து பூஜிப்பதற்க்காகவே யேற்பட்டதாகும் (பரிச்சின்னத்வம்). தாரணை ஸௌகர்யத்தாகவும் — அனுஸ்மிருதிக்காகவும் என்று அர்த்தம்.

மேலும் கேள்வி கேட்கப்படும்—ஏன் இந்த மேலான பிருஹ்மம் புருஷனுகவும் தலை கால்கள் போன்ற அவயவங்

கள் கொண்ட விசேஷபதங்களாலே ஒரு புருஷாகாரனுகச் சொல்லப்படுகிறது—எதற்க்காக ? இதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிருர்.

Sutra - 31 अनुस्मृतेर्बादरिः- (1-2-31)

அநுஸ்மிருதேர் பாதரி:- (1-2-31)

அநுஸ்மிருதே:- உபாஸிப்பதற்க்காக (வைஸ்வாநராத் மாவை புருஷாகாரனுகப் பேசிற்று) என்று பாதரி:-பாதரி என்னும் ஆசார்யர் எண்ணுகிருர்.

ஆசார்யரான பாதரி என்பவர் அபிப்ராயப்படுகிருர்—உபாஸனுர்த்தமிதி உபாஸிப்பதற்காகவே. यस्त्वेतमेवमभिविमानमात्मानं वैश्वानरमुपास्ते, स सर्वेषु लोकेषु सर्वेषु भूतेषु सर्वेष्वात्मस्वन्नमत्ति इति (சா.உ. 5- 18-1) எவன் ஒருவன் அளவற்றவனுன வைஸ்வாநரனை இவ்வண்ணமாக த்யுலோகம் முதலான பிரதேசங்களில் மாத்திரம் அளவுபட்டவனுக உபாஸிக்கிருனே இத்யாதி, அவன் எல்லாவுலகங்களிலும் அன்னத்தை (போக்யத்தை) சாப்பிடுகிருன். எல்லா உலகங்களிலும் எல்லாப் பிராணிக்ளிலும் எல்லா ஆத்மாக்களிலும்: இவ்விதமாக பிருஹ்ம பிராப்தியைப் பொருட்டு (மோக்ஷத்திற்க்காக) உபாஸனத்தை புருஷாகாரனுக அவனை உபாஸிக்க வேண்டியது என்பதைச் சொல்லவே, பாதரி: அபிப்ராயப்படுகிருர்—एतमेवमिति இந்த மாதிரி புருஷாகாரனுக முன்பு சொல்லியபடி என்று அர்த்தம்; அன்னம் - போக்யம். எந்த எந்த உலகங்களில் எந்த எந்த பிராணிகள் உண்டோ, எல்லாச் சரீரங்களிலும் உபாஸகன் பிருஹ்மத்தை அநுபவிக்கிருன். அந்த அநுபவம் ஸ்வதயேவ இயற்கையாகவே ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்திபவதி பிருஹ்மாநுபவ ஆனந்தமே, அநவதிகாதிசய பிருஹ்மாநுபவமாக ஆனந்தமயமாக விருக்கிறது. ஆனுல் கர்ம வஸ்யர்களாகிற ஜீவர்கள் தங்களுக்கென்று பிரத்யேகமாக விதிக்கப்பட்ட அன்னத்தை உண்கிருர்கள். ஆனுல் இந்த உபாஸகன் அநுபவிக்கும் அன்னம் (போக்யம்) இதைவிட வேறுனது அது முமுக்ஷீக்களால் த்யாஜ்யம் செய்யப்பட வேண்டியதாகும் — விலக்கப்பட வேண்டிய

தாகும். அந்த அன்னம் இங்கு சொல்லப்படவில்லை. இங்கு சொல்லப்படும் அந்நம் - பிருஹ்மானுபவம் ரஸோவைஸ:... (அதவது மோக்ஷத்தை பெறும் காரணமாக வைஸ்வாநரனை புருஷாகாரனாக உபாஸிக்கப்படவேண்டியது. அதனால் அவன் அடையும் பேரானந்தம் அளவற்ற மகிமை உள்ளது. யத் அந்நம் பரமபோக்யமான பிருஹ்மம் யாதொன்று உண்டோ அதை அனுபவிக்கிறான். ஈத் அத்தி).

மீண்டும் சந்தேகம், சரி வைஸ்வாநரனே பரமாத்மா வானால், ஏன் உபாஸகனுடைய அங்கங்களாகிற (மார்பு-முதலியவை)-அதை பலிபீடமாகவும் சொல்லப்படுகின்றன ? ஆனால் இவ்விதம் உபதேசமிருப்பது சரியாகும், எப்போ தெனில் ஜாடராக்னியைப் பரிகிரஹித்து அக்னிஹோத்ரமாக நிருபிப்பதானால் சரியாகும். அதாவது மார்பு-மயிர் ஹ்ருதயம் ஜாடராக்னி, ஆஹூதி என்று சொல்வதற்குக் காரணம் யாது? இதற்க்காக சூத்ரக்காரர் சொல்கிறார்—ஜைமினியின் அபிப்ராயமாக.)

**Sutra—32 संपत्तेरिति जैमिनि:; तथा हि दर्शयति (1-2-32)**

**ஸம்பத்தேரிதி ஜைமினி:; ததா ஹி தர்சயதி (1-2-32)**

ஸம்பத்தே: (உபாஸகனுடைய அவயவங்களை யாக வேதியாக கற்பிப்பது மயிரைதர்ப்பையாகவும் ஹ்ருதயத்தை கார்ஹபத்யாதியாக கற்பிப்பது) இவ்வைஸ்வாநர வித்யைக்கு அங்கமான பிராணாஹூதியை அக்னி ஹோத்ர மாக்குவதற்க்காகவே இதி என்று; ஜைமினி: எண்ணுகிறார். ததாஹி அவ்விதமே தர்ஸயதி, சுருதியும் காட்டுகிறது.

இங்கே பிராணாஹூதி வைஸ்வாநரனுக்கு ஒரு உபாஸனா வழியாகக் காட்டப்படுகிறது. வைஸ்வாநரன் பரமாத்மா வானபடியாலே, அவனுக்கு த்யு முதலான உலகங்கள் சரீர மானபடியாலே அன்னமாகிற பிராண ஆஹூதி ஸமாராதனம், உபாஸ்கனால் தினமும் செய்யபடவேண்டியதாலே ஜைமினி ஆசார்யர் எண்ணுகிறார்—உபாஸகன் வைஸ்வாநர வித்யைக்கு அங்கமாகத் தினந்தோறும் பிராணாஹூதி

செய்ய வேண்டியது. இப்பிராண ஆஹூதியை அக்னி ஹோத்ரமாக நிருபிப்பதற்காகவே, ஸம்பாதநாய, அவன் எப்படி செய்யவேண்டும் என்பது காட்டப்படுகிறது அथमुर: प्रभृतीनां वेदित्वादि உபதேசம் इति மார்பே பலிபீடமாகவும் (altar) மயிர்கள் பர்ஹிஸ் என்கிற தர்ப்பையாகவும்; ஹ்ருதயம் கார்ஹபத்யமாகவும் என்று தொடங்கி; ஏன் இவை இப்படி கற்பிக்கப்படுகிறதென்றால் அதற்கு ஆசார்யரான ஜைமினி எண்ணுகிறார். तथा हि சுருதியின் ஆதாரத்தையும் காட்டுகிறார். அவ்விதமே சுருதி சொல்கிறது. பிராணாஹூதியை அக்னிஹோத்ரமாக வைஸ்வாநர வித்யைக்கு அங்கமாக அதை நிருபிப்பதற்க்காகவே பரமாத்மாவை உபாஸிப்பது பிராணாஹூதியினால் உசிதம் தான்- அதுதான் பலன், பிராணாஹூதியை அக்னி ஹோத்ரமாக ஆக்குவற்கு அதையே நிருபிக்கிறது. வைஸ்வாநர வித்யைக்கு அங்கமாகக் காட்டப்படுகிறது. சா. உ. 5-24-1 स य इदमविद्वानग्निहोत्रं जुहोति, यथा अङ्गारानपोह्य भस्मनि जुहुयात्; तादृक् तत् स्यात्, अथ य एतदेवं विद्वानग्निहोत्रं जुहोति, तस्य सर्वेषु लोकेषु सर्वेषु भूतेषु सर्वेष्वात्मसु हुतं भवति, तद यथेषीकातूलमग्नौ प्रोतं प्रदूयेत, एवं हास्य सर्वे पाप्मान: प्रदूयन्ते எவன் இவ்விதம் அறிகிறானில்லையோ அதாவது மார்பு வேதியாகவும் மயிர் தர்ப்பையாகவும், ஹ்ருதயம் கார்ஹபத்யமாகவும் அறியாமல் அவன் அக்னிஹோத்ர ஆஹூதி செய்கிறானோ அது எப்படியிருக்குமென்றால் ஒரு மனிதன் எறியும் தணல்களை அப்புறப்படுத்திவிட்டு அவிந்த சாம்பலில் ஆஹூதியைச் செய்ததுபோல விருக்கும். ஆனால் எவன் அக்னிஹோத்ரமாக பிராண ஆஹூதியை வைஸ்வாநரவித்யைக்கு அங்கமாக செய்கிறானோ பிராணாஹூதியாகிற அக்னிஹோத்ர ஹோமத்தைச் செய்கிறானோ, அவன் எல்லா உலகங்களிலும் எல்லா பூதங்களிலும் எல்லா ஆத்மாக்களிலும் ஹோமம் செய்தவனாகிறான். அவனுடைய பாபங்கள் நெருப்பிலிடப்பட்ட பஞ்சைப் போல பஸ்மமாகிவிடும். இந்தவேத வாகியம் பிராணாஹூதியை அக்னிஹோத்ரமாகக் காட்டுகிறது. பரமாத்மாவை உபாஸிப்பதின் பலனாகிற ஸர்வ பாபநாசத்தையும் காட்டுகிறது. அதனால் அக்னிஹோத்ர கற்பனை

ஸம்பத்திஸ்ச தர்ஸயதி இயம் சுருதி: என்பதாகும். ஆகவே மார்பு முதலானவற்றைச் சொல்வதாலே இங்கு சொல்லப் படும் வைஸ்வாநரன் ஜாடராக்னி அல்ல பரமாத்மாவே ஆகும்.

### Sutra 33 आमनन्ति चैनमस्मिन् (1-2:33)

### ஆமநந்தி சைநமஸ்மிந் —(1-2-33)

ஏநம் இந்த பரமாத்மாவை அஸ்மிந் இந்த உபாஸ கனின் உடலில் ஆமநந்தி ச (பிராணக்னிஹோத்ரத்திஞல் ஆராதிப்பதற்க்காகவே) வேத சுருதிகளும் கூறுகின்றன.

ஏநம் பரமபுருஷம் த்யு முதலான லோகங்களை தலை முதலான அவயவங்களாக விசிஷ்ட (சரீரமாகக் கொண்ட) வைஸ்வாநரனை अस्मिन् உபாஸகனுடைய சரீரத்திலே பிரா ணக்னி ஹோத்ரத்திஞல் ஆராதிக்கிருன் என்பதற்கு ஆதார மாக சுருதிகளும் கோஷிக்கின்றன. तस्य ह वा एतस्यात्मनो वैश्वानरस्य मूर्धैव सुतेजा: (இந்த உபாஸகனுடைய தலையே (பர மாத்மாவின் தலையான) ஸுதேஜா:- எனப்படும் த்யு லோகம் என்று தொடங்கும் வேதவாக்யம் உபாஸகனின் தலையை பரமாத்மாவின் தலையாகவும் அந்த அந்த அவ்யவங்களை பரமாத்மாவின் அந்த அந்த அவயவங்களாக கூறி மேலும் சூரியன் வாயு ஆகாசம் பூமி இத்யாதிகளையும் அனுஸந்திக்க வேண்டும் என்று கூறப்பட்டதாலே உபாஸகன் தன்னிடத் திலேயே பரமாத்மா இருக்கிறதாக தியானிக்க வேண்டியது இப்படி வைஸ்வாநர அக்னியாகிற பரமாத்மாவில் பிராணு ஹுதியாகிற அக்னிஹோத்ரத்தைச் செய்ய வேண்டியது என்று காட்டுகிறது. यस्त्वेतमेवं प्रादेशमात्रमभिविमानमात्मानं वैश्वानरमुपास्ते (எவனொருவன் அளவற்றவனை இந்த வைஸ்வா நரனை த்யு பிரபிருதியான பிரதேசங்களில் அளவுபட்டவனாக உபாஸிக்கிருனே (சா. உ. 5-18-1) இதனுல் த்ரைலோக்ய சரீரமுள்ள பரமாத்மாவை உபாஸிக்க வேண்டியது; பிறகு सर्वेषु लोकेषु "எல்லா உலகங்களிலும்" (சா. 2-18-1); உபாஸனை யின் பலனாக போச்யம் (அன்னம்) பிருஹ்மபிராப்தி பலனாக

உபதேசிக்கப்படுகிறது; பிறகு அந்த வைஸ்வாநரவித்யை யின் அங்கமாக பிராண அக்னி ஹோத்ரம் நிரூபிக்கப்படு கிறது. तस्य हवा एतस्य சா. 5-18-1 வாஸ்தவமாகவே இத னுடைய தலையே இத்யாதிகளால் உபதேசிக்கப்படுகிறது, பிராணாஹூதியை அக்னி ஹோத்ரமாக காட்டுகிறது—வித் யைக்கு அங்கமாகவும் சொல்கிறது

மேலும் அக்னி சூர்யன் முதலான தேவதைகள் உபாஸ் யமான வைஸ்வாநரனுக்கு அவயவபூதமாக விருக்கின்றூர் கள் எனவும் இவர்களையே ஸுதேஜஸ் விஸ்வரூபாதி நாம தேயங்களைக் கொண்டவர்களாகவும்; மேலும் இந்த பிரகர ணத்திலே, உபாஸகனுடைய அவயவங்களாகிற தலை கண்கள் பாதங்கள் இத்யாதிகளை; பரமாத்மாவின் தலையான த்யுலோகமாகவும் உபாஸகனின் அவயவங்களை கண் பிராணன் இடை மூத்திரகோசம் பாதங்கள் ஆகியவற்றை பரமாத்மாவின் அந்த அந்த அவயவங்களாகவும்; சூர்யன் வாயு - ஆகாசம் - ஜலம் - பூமி இத்யாதிகளை அந்த அந்த பிரதேசங்களில் வசிக்கும் தேவதைகளாகவும் அதாவது வைஸ்வாநரன் (உபாஸகனே) சூர்யன்; அவனுடைய மூச்சுக்காற்று வைஸ்வாநரனின் பிராணன்; (வர்த்தமாந); அதுவே வாயு; உபாஸகனுடைய இடை வைஸ்வாநரனின் பஹிளம்; இதன் அர்த்தம்—உபாஸகனுடைய இடை ஆகா சம்;-பரமாத்மாவுக்கும் இடையாகவிருப்பது; மூத்திரகோசம் (உபாஸகனுடையது) வைஸ்வாநரனின் மூத்திரகோசம்; பாதங்கள் உபாஸகனுக்கும் வைஸ்வாநரனுக்கும் ஆகும்.— இதன் அர்த்தம் உபாஸகனுடைய பாதங்கள் பூமி பூமியே பரமாத்மாவின் (வைஸ்வாநரனின் பாதங்களாகும்). இவ் விதம் அனுஸந்திக்கப்பட்டால் பரமாத்மா தன்னிடத்தி லேயே யிருப்பதாக தியானம் யேற்படும். இவ்விதம் உபா ஸிக்கப்பட்ட வைஸ்வாநராக்னியாகிற பரமாத்மாவில் பிராணாஹூதியாகிற அக்னிஹோத்ரத்தை (நிஷ்காமமாக) செய்து ஆராதிப்பது வைஸ்வநராக்னியை ஆராதிப்பதாகும். ஆகவே வைஸ்வநராக்னி பரமாத்மாவேதான் எனக்காட்டப் படுகிறது.

உபாஸகனுடைய சரீரத்தில் அவயவங்களில் மூர்த்தேவ ஸுதேஜ:- உபாஸகனுடைய தலை ஸுதேஜஸ் பரமாத்மாவின் தலையாகிற த்யுலோகம் என்று அர்த்தம். சக்ஷுர் விஸ்வரூப: — ஆதித்யன் என்று அர்த்தம். प्राण: पृथग्वर्त्मा வாயு என்று அர்த்தம்; संदेहो பஹுல: உபாஸகனுடையதேகத்தின் மத்யபாகம் பரமாத்மாவின் தேகத்தின் மத்ய காய பூதமான ஆகாசம் என்று அர்த்தம்; वस्तिरेव रयि: உபாஸகனுடைய மூத்திரபை ஜலங்கள் என்று அர்த்தம்; पृथिव्येवपादौ உபாஸகனின் பாதங்கள் பரமாத்மாவின் பாதங்களாகிற பூமியாகும். இவ்விதமாக உபாஸகன் தன் சரீரத்திலே திரைலோக்ய சரீரத்தைக் கொண்ட வைஸ்வாநரனுன பரமாத்மாவை தினமும் பிராணுஹுதியினுல் அக்னி ஹோத்ர ஹோமத்தை அனுஸந்தித்து செய்து வருபவனுகவும் அந்த உபாஸகனுடைய உடம்பிலே மார்பை வேதியாகவும் மயிரை தர்பையாகவும் ஹ்ருதயத்தை கார்ஹபத்யமாகவும் மனத்தில் அந்வாஹார்யமாகவும் முகத்தில் ஆஹவனீயமாகவும் இப்படி மூன்று அக்னிகளாக கற்பிக்கையாலும் அக்னி ஹோத்ர உபகரணமாக பிராணுஹுதியைச் செய்வதாலே இவ்விதம் கற்பிப்பதாலே பிராணுஹுதியை ஸ்வீகரிக்கும் பரமாத்மாவை சந்தோஷிப்பதாகும். வைஸ்வாநரனுகிற பரமாத்மாவை ஆராதிப்பதாகும். उट एववेदि: लोमानि बर्हिर्हृदयं गार्हपत्य: इत्यादिना - மார்பே வேதி மயிர்கள் பர்ஹிஸ் என்னும் தர்ப்பைகள் ஹ்ருதயம் கார்ஹபத்யாக்னி இவைகளைத் தொடங்கி உபாஸகனுடைய ஹ்ருதயம் முதலான அவயவங்களை கார்ஹபத்யம் முதலான அக்னிகளாக ஏன் கற்பிக்கப்படுகிறதென்றால் பிராண ஆஹுதியை அக்னி ஹோத்ரமாக நிருபிப்பதற்க்காகவே அவயவங்கள் இம்மாதிரி கற்பிக்கப்படுகின்றன. ஆகையால் பரமாத்மா புருஷோத்தம ஸ்ரீமந் நாராயணனே வைஸ்வாநரன் என்பது ஸித்தம்.

குறிப்பு:—இந்த அதிகரணத்தில் அக்னி சப்தம் ஸாமாந்யதி கரணத்தாலே வைஸ்வாநரனுக்கு பரமாத்மாவத்த்வத்தை நிர்ணயிப்பதில் விரோதியாகமாட்டாது. தச்

சரீரகத்வேந பரமாத்மா உபாஸனம் இங்கு விதிவிஷயமாகக் கொள்ளக் கடவது.

ஆயினும் ஸாக்ஷாத்தபி அவிரோதம் ஜைமிநிராசார்யோ மந்யதே அதாவது அக்நி சப்தத்திற்கு (அக்ரம் நயதி) என்று வ்யுத்பத்தி கொண்டால் ஸாக்ஷாத்தாகவே பரமாத்மாவைச் சொல்லும் என்பதில் விரோதமில்லை. அபர்யவஸாந வ்ருத்தயாபரமாத்மா பர்யந்தம் சொல்வதைக் காட்டிலும் ஸாக்ஷாத்தாகவே பரமாத்மாவைக் காட்டலாம் என்று சூத்ரக்காரரே இங்கு காட்டியுள்ளார். சசிபதி இத்யாதி விசேஷண யோக மில்லாத இந்திர சப்தம் ஐஸ்வர்யம் கொண்டவன். பரமேஸ்வரனை பரமாத்மாவை அர்த்தமாக கொள்ளுவதில் அஸம்பாவிதம் எப்படியில்லையோ அதுபோல பரமாத்மா நல்ல வழியில் தன் உபாஸகர்களைக் கொண்டு போகிறான், என்பதால் ஸாக்ஷாத்தாகவே கொள்ளலாம் என்பதாகும்.

வைஸ்வாநராதி கரணம்......ஸமாப்தம்

ஸ்ரீபகவத்ராமாநுஜ விரசிதே சாரீரக மீமாம்ஸாத்யாயத்திலே

பிரதம அத்யாயம். 2ம் பாதம் ஸமாப்தம்.



ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே வேதாந்ததேசிகாய நம:

ஸ்ரீமத் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்ததேசிக
யதீந்த்ர மஹாதேசிகாய நம:

# பிரும்ம வித்யை

(3ம் - பாகம்)

இதில் ஸ்ரீபகவத் ராமாநுஜ விரசிதே (ஸ்ரீபாஷ்யே)

ஸ்ரீசாரீரகமீமாம்ஸ பாஷ்யத்தில்

முதல் அத்தியாயம் - 3ம்பாதம்

## த்யுப்வாத்யதிகரணம் (1-3-1)

द्युभ्वाद्यायतनं स्वशब्दात् (1-3-1)

த்யுப் வாத்யாயதநம்-தேவலோகம் - பூமி முதலான வற்றை தனது இருப்பிடமாக கொண்டவன்-பரமாத்மாவே- (ஏனெனில்) ஸ்வசப்தாத் - அவனுக்கே உரிய சப்தங்கள் பேசப் படுகின்றன - (சுருதியில்),

முதல் அத்யாய முதற்பாகத்தில் ஜீவன் அசேதனம் ஆகிய வற்றைப்பற்றிய அடையாளங்கள் மிகத் தெளிவில்லாமலிருக்கும் வேதவாக்யங்களையும்; இரண்டாவது பாதத்தில் அந்த அடை யாளங்கள் சிறிது தெளிவில்லாமலிருக்கும் வேதவாக்யங்களையும் விசாரித்து - அந்த வாக்யங்கள் பிருஹ்மத்தைக் கூறுகின்றவையே

எனக் காட்டப்பட்டது. இந்த மூன்றும் பாதத்திலே அடையா ளங்கள் தெளிவாயிருக்கும் வாக்யங்கள் விசாரிக்கப்பட்டு, அவை யும் பிருஹ்மத்தையே கூறுகின்றன எனக் காட்டப்படுகின்றது. அதாவது பாதங்கள் செல்லச் செல்ல - ஜீவாதி லிங்கங்கள் தெளி வாகின்றன எனக்கருத்து.

சென்ற அதிகரணத்தில் வைசுவாநரன்த்ரை லோக்ய சரீரம் கொண்டவன் - அவன் பரமாத்மாவே என நிரூபிக்கப்பட்டது. தேவலோகம் முதலானவற்றை சரீரமாகக் கொண்டவனும் - ஜீவனே என்று மீண்டும் பூர்வ பக்ஷம் செய்து - பிறகு அவன் ஜீவனாக முடியாது. பரமாத்மாவே ஆக முடியும் என்று உறுதி யாக இங்கு நிச்சயிக்கப்படுகிறது.

அதர்வணிகர்கள் ஓதுகிறார்கள் - மு-(2-2-5) यस्मिन् द्यौः पृथिवी चान्तरिक्षमोतं मनः सह प्राणैश्च सर्वैः। तमेवैकं जानथात्मानमन्या वाचो विमुञ्चथ अमृतस्यैष सेतुः - इति - எவனிடம் தேவலோகமும் பூமியும் அந்த ரிக்ஷமும் மனமும் எல்லா இந்திரியங்களும் சேர்ந் திருக்கின்றனவோ-அந்த ஆத்மா ஒருவனையே அறியுங்கள் यत्र-7ம் வேற்றுமை-எனக்காட்டப்பட்டது. மற்ற வார்த்தைகளை விடுங்கள் இவன் மோக்ஷத்திற்கு வழியாவான் (கூட்டிச் செல்வான்) - இதில் தேவலோகம் பூமி முதலானவற்றுக்கு ஆதாரமானவனாக ஓதப்படு பவன் ஜீவனே ஆகமுடியும் - இதுதான் இங்கு சம்சயம்-ஆயதனத் வேந - இருப்பிடமாக-ஆதாரமானவனாக-; ஓதப்படுபவன் ஜீவனே ஆகும். அல்லது பரமாத்மாவா? எது சரி? ஜீவன்தான். பூர்வ பக்ஷம்.

अरा इव रथनाभौ संहता यत्र नाड्यः स एषोऽन्तश्चरते बहुधा जायमानः—எவனிடத்தில் (யத்ர) ரத்தநாடிகள் கோர்க்கப்பட்டிருக் கின்றனவோ - எதுபோல - ஒரு சக்கரத்தின் ஆரங்கள் (கம்பிகள்) அதன் நாபியில் கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ, அதுபோல - ஆகவே அந்த பிராணியே உள்ளே சஞ்சரிக்கிறார்-அவரே பலவகை களாகப் பிறக்கிறார். அவரே இங்கு ரத்த நாடிகளுக்கு ஆதாரமாக சொல்லப்படுகிறார். यत्रेति पुनरपि सप्तम्यन्तेन परामृश्य - எதில் கோர்க்கப்பட்டதோ அதுவே ஆதாரமாக ரத்த நாடிகளுக்குக் காட்டப்படுகிறது-(மு-2-2-2-6); மீண்டும் சுருதி சொல்கிறது.

स एषोऽन्तश्चरते बहुधा जायमानः-அந்தப் பிராணியே உள்ள சஞ்சரித்துக்கொண்டும் - பல வழிகளால் பிறக்கவும் செய்கிறது. அந்த பிராணியே ரத்த நாடிகளுக்கு ஆதாரமாகக் காட்டப்படுறெது. இதனுல் பல பிறப்புக்கள் எடுப்பதாகச் சொல்லப்டுகிறது. இவ்விதமான நாடி சம்பந்தமும் - பல பிறப்புக்களை அடைவதும் - தேவாதி ரூபத்தை அடைவதும் ஜீவனுக்குத்தகும். பஹீதா ஜாயமாநத்வம் ஏனெனில் இந்த சுலோகத்திலும் "अत्र मनः सह प्राणैश्च सर्वैः-(அந்த ஜீவனுக்கு) மனம் முதலான இந்திரியங்கள் பிராணன்களோடு சேர்ந்திருக்கின்றன. (பிராணபஞ்சகமும் மனத்துடனும் சேர்ந்திருப்பது) ஜீவ தர்மமே ஆகும். ஆகவே ஜீவனுடைய தன்மைகளை அந்தப் பிராணி அடைந்திருப்பதாலே · இவ்விதம் சொல்வது சரியாகும் - த்யுபிருத்வியாதி இருப்பிடமாகக் கொள்வதும்-அதைப்போல இன்னும் சில தர்மங்களும் ஒன்று சேர்த்துச் சொல்லி ஒழுங்குபடுத்த வேண்டியது.

(அதாவது இங்கு சொல்லப்படுவது - நாடிகள் ஜீவனிடம் சேர்ந்திருக்கின்றன - பரமாத்மாவுக்குச் சொல்லமுடியாது. தேவலோகம் முதலானவற்றை (ஆதாரமாக) யிருப்பிடமாகக் கொள்பவன் ஜீவன்-அவனே ஜாயமாந:-பிறப்பு இறப்பை அடைகிறுன். ஆயதநம்-அம்ருத ஸேதுத்வாதி கிரஹணம் - யதா கதஸ்சித்இதி - போகஸ்தானங்கள் - அதாவது ஜீவாத்மாவுக்கு அம்ருதஸேதுத்வம் பொருந்தும் - பிருஹ்மத்தை பிராப்யமாக அடைவதால் பூ சப்தம் ஸர்வ லோகங்களுக்கும் உபலக்ஷணம். ஆகவே ஜீவனேயாகும் என்பது பூர்வபக்ஷம்.)

இல்விதமாகுமானுல் நாம் பதில் அளிக்கிறோம் द्युभ्वाद्यायतनं स्वशब्दात्-த்யு பூலோகங்கள் பரமாத்மாவுச்கே இருப்பிமாக விருக்கின்றன · பிரகரணத்திலே அவனுக்கே உரிய தர்மங்கள், சூத்ரத்திலே காட்டப்பட்ட स्वशब्दात् - என்பதால் சப்தங்கள் காண்கையாலே, அம்ருத ஸேதுபரத்வம் இங்கு சொல்லப்படுகிறது. பரபிருஹ்மத்துக்கே பொருந்தும் – अमृतस्यैष सेतुः इति परस्य ब्रह्मणोऽसाधारणः शब्दः-தேவவோகம் இத்யாதிகளுக்கு ஆதாரமாக விருப்பவன் பரமாத்மாவே அவனுக்கே உரிய அசாதாரண சப்தங்கள் (தன்மைகள்) படிக்கப்படுவதாலே, அவையாவையெனில் -

அம்ருதஸ்யைஷ ஸேது:-அவனேயே ப்ராப்யம் ப்ராபகமாக-உபா யம் உபேயமாக - ஸாதனம் பலனுகக் கூறப்படுவதாகும். புரு.ஸூ. तमेवं विद्वानमृत इह भवति नान्यः पन्था अयनाय विद्यते - அப்பரம புருஷனை இப்படி அறிபவனே முக்தனுகிருன் - மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை - முதலான விடங்களில் இந்த மாதிரி எல்லா உபநிஷத்துக்களிலும் அந்த பரமாத்மாவுக்குந்தான் அம்ருதத்வ ப்ராப்தி (உபாயம்) ஹேது - சொல்லப்பட்டிருக்கிறது. மோக்ஷ ஸாதனமாக உபதேசிக்கப்படுகிருர். அதுமாதிரி ஜீவனுக்கில்லை. अमृतस्य प्रापक என்று அர்த்தம் सेतुरिव वा सेतुः- (இங்கே ஆத்ம சப்தம் நிருபாதிகமாகவே எல்லாவற்றையும் தானுகவே வ்யாபித் திருப்பவன் - பரமபுருஷனுனபடியால் - (வியாபிப்பவன் என்கிற அர்த்தத்தில் - ஆத்மா என்கிற பதம்) பரமாத்மாவுக்குப் பொருந் தும்) மேலும் எவன் பரமாத்மாவை இப்படி அறிகிருனே-அவன் மோக்ஷமடைகிருன் - அவனுக்கு ஸாதனமாக விருக்கிருன் என்கிற அர்த்தம்).

மேலும் ஸேது - ஷி என்கிற தாதுவிலிருந்து வருவதால் - सिनोतेर्वा बन्धनार्थात् - सेतुः-சேர்த்துக்கட்டுவது. ஆகவே பரமாத் மாவே மோக்ஷ ப்ரதன் - பலனை அளிப்பவன். அல்லது - நதிகளைத் தாண்ட பாலத்தைப்போல விருக்கிருன். பகவானே ஸேதுவாத லால் - அவனே உபாயம் - அவனே உபேயம். (ஆதாரம்) சம்சார கடலைத் தாண்ட வைப்பவன். ஆத்ம சப்தம் நிருபாதிகமாகவே பரப்பிரும்மத்தினிடத்தில் - உபாதியினுல் கெடுக்கப் படாதவனுக- முக்யார்த்தத்தில் - எங்கும் தானுகவே வியாபித்திருப்பவன் - சொல்லப்படுகிறது. आप्नोति इति आत्मा स्वेतरसमस्तस्य नियन्तृत्वेन व्याप्तिस्तस्यैव संभवति ("अमृतसेतुपदपरतया - व्याख्याय अस्मत्पक्षे जीवेश्वरपरत्वमपि - (உத்தமூர் ஸ்வாமி)

ஆகவே ஆத்மந் - எல்லா வஸ்துக்களிலும் அந்தர்யாமியாக விருப்பதால் - எங்கும் வ்யாபித்திருப்பதும்— பரமாத்மாவுக்கே பொருந்தும். ஆகவே '' ஆத்மந் '' என்கிற சப்தம் பரமாத்மாவை யும் குறிக்கலாம். आप्नोतीति - आत्मा स्वेतरसमस्तस्य - எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி அந்தர்யாமியாகவிருந்து - எல்லாவற் றையும் நியமிக்கிறவன் - ஸர்வ வ்யாப்தியும் அவனுக்குத் தகும்.

यः सर्वज्ञः सर्ववित्— எவன் எல்லாவற்றையும் இயற்கை யாகவே சாதாரணமாக அறிகிருனே - விசேஷமாக அறிந்தவ ளுகவுமிருக்கிறனே - (மு.2.2.1.7) இம்மாதிரி வாக்யங்கள் மேலே இந்த பிரகரணத்திலே படிக்கப்படுவதால் - பரமாத்மா வுக்குப் பொருந்தும் - இந்த சப்தங்கள். நாட்யாதரத்வம் (ரத்த நாடிகளுக்கு ஆதாரத்வம்) பரமாத்மா விஷயத்திலே யேற்படக்கூடும். தை - நா - सन्ततं सिराभिस्तु - लम्बत्याकोशसन्निभम् - என்று ஆரம்பித்து - (அது எப்பொழுதும் ரத்த நாடிகளுடன் கீழே தொங்கிக் கொண்டிருக்கிறது - அது தாமரை மொட்டு சிறிது திறந்து வெளிப்படுமோ - அது போல-விருக்கிறது. அதாவது சிறிது அலர்ந்த தாமரையை ஒக்கும். அந்த ஹ்ருதயம் எப்பொதும் நாடிகளால் நன்ருக சூழப்பட்டு கீழே தொங்குகிறது ; तस्याः शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः— என்று படிப்பதாலே - அந்த ஹ்ருதய நடுவிலே நுட்பமான ஒரு த்வாரம் இருக்கிறது-அதில் ஸர்வாத்மாவான ஸ்ரீமந் நாராயணன் நன்ருக நிலை பெற்றிருக்கிருன். - (நாராயணவல்லி) ஆகவே நாராயணன் நாடிகளுக்கு ஆதாரமாகவிருக்கிருன் - நாடிக ளோடு சேர்ந்திருப்பதும் அவன் விஷயத்தில் சரியாகும். अजाय मानो बहुधा जायमानः— இதனலேயும் பரமாத்மா பிறப்பற்றவனு யினும் - பல படியாக (தன் இச்சைப்படி) பிறக்கிருன். अजाय-मानो बहुधा विजायते । तस्य धीराः परिजानन्ति योनिम् - இதை அறிவாளிகளே நன்கு அறிவார்கள். தேவர்கள் மற்ற பிராணிகள் பரமாத்மாவை அடைவதற்கு உபாயமாகவும் - எளிதாகவுமிருப் பதால் - (ஸமாஸ்ரயணீயத் வாய) அவன் பல் வேறு ரூபங்களை எடுக்கிருன் - அந்த அந்த ஜாதிக்குரிய ரூப - ஆகாரம் (வடிவம்)- ஸம்ஸ்தானம் (சேர்க்கை) குண கர்ம ஸமந்விதா; - அவரவர் களுக்குத் தகுந்தாற் போல எடுக்கிருன். அவதார காலங்களிலும் பரமாத்மா தனது சொந்த மகிமைகளை இழப்பதில்லை. கர்மவச்ய பிறப்பு ஜீவர்களுக்கு - பகவானுக்கு இச்சை காரணமாக - தன் பக்தர்களை கடாக்ஷிக்க பல அவதாரங்கள் எடுக்கிருர்-அச்சமயங்-களில் அவருடைய இயற்கையான குணங்கள் மாறுவதில்லை.

स्मृतिरपि - கீதை - 4ல் अजोऽपि सन् । अव्ययात्मा भूतानामी-श्वरोऽपि सन्। प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया— பிறப்பற்றவ

ணாகவும் அழிவற்றவனாகவும் பூதங்களுக்கு ஈஸ்வரனாகவுமிருந்து கொண்டே - என் திவ்ய மங்கள விக்ரஹத்தோடு என் ஸங்கல்ப்பத்தாலேயே பிறக்கிறேன் என்று கீதையிலும் பரமபுருஷனுக்கு கர்மம் காரணமன்றி - தன் விருப்பத்தாலேயே பல படி பிறப்பு உண்டு எனக் காட்டப்படுகிறது ஆகவே மன: முதலிய இந்த்ரியங்களோடு சேர்க்கை மனம், பிராணன் முதலிய ஜீவனுடைய உபகரணங்களுக்கு ஆதாரத்வம், எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாக ஓதப்படும் ஸ்ரீமந் நாராயணன் - அந்தர் பஹிஸ்சதத் ஸர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித: என்கிற படியாலே. ஸர்வ ஆதாரத்வம் மனம் முதலிய இந்திரியங்களுக்கும் ஆதாரமா யிருப்பவனே - பரமாத்மா ஆனபடியால் - மந: ஸஹபிராணை: ஓதம் என்று இங்கு ஓதியிருப்பதும் பரமாத்வுக்கே தகும். இக்காரணங்களால் தேவலோகம் முதலானவற்றிற்கு ஆதாரமாகக் கூறப்படுபவன் ஜீவனல்ல - பரம புருஷனான ஸ்ரீமந்நாராயணனே த்யுப்வாத்யாதி - திரைலோக்ய ஆயதனம்— பரமபுருஷனுக்கே தகும் என்பது மீண்டும் இந்தக் காரணத்தினால் காட்டப்படுகிறது.

Sutra 2. मुक्तोपसृप्यव्यपदेशाच्च *(1-3-2)*

*முக்தோபஸ்ருப்ய வ்யபதேசாச்ச (1-3-2)*

முக்தோப ஸ்ருப்ய வ்யபதேசாத் - ச - முக்தி யடைந்தவர்களால் அடையப் படுபவனாகக் கூறுகையாலும்— (இவர் பரமபுருஷனே)

த்யு பிருத்வி முதலிய லோகங்களுக்கு ஆதாரமாக ஓதப்படும் இந்தப் புருஷன் ஸம்சார பந்தங்களிலிருந்து விடுபட்ட முக்தனுக்கும் கூட அடையவேண்டிய புருஷார்த்தமாக விருக்கிறான். மு. உ. 3-1-3 —ல் यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषं ब्रह्मयोनिं । तदा विद्वान् पुण्य पापे विधूय निरंजनः परमं साम्यमुपैति பிருஹ்ம ஞானியானவன்-சம்சாரத்திலிருந்து விடுபட்ட முக்தன் - எக்காலத்திலும் தங்க நிறமானவனும் உலகைப் படைப்பவனும் நியமிப்பவனும் - உலகிற்கு உபாதான நிமித்த காரணங்களாக

விருக்கும் கர்த்தாரம் - ஈசம் பரமபுருஷனை பார்க்கிறானோ - அக் காலத்தில் அவன் புண்யபாபங்களை உதறித்தள்ளிவிட்டு-பிரகிருதி சம்பந்தமற்றவனாக (நிரஞ்சனனாக) பரமபுருஷனோடு ஸாம்யம் (ஒற்றுமையை)யடைகிறான் என்று முக்தனுக்கு அடையபடுபவனாக ஓதப்படுகிறது. (மு. 2, 3.1.4.) यथा नद्यः स्यन्दमानाः समुद्रे ऽस्तं गच्छन्ति नाम रूपे विहाय। तथा विद्वान् नामरूपाद्विमुक्तः परात् परं पुरुषमुपैति दिव्यम्-எப்படி நதிகள் கடலில் சங்கமாகும் போது - தங்கள் நாமரூபங்களை விட்டுவிட்டு, அதுபோல முக்தர்கள் பராத்பரம் மேலான திவ்யமான புருஷனை அடைகிறார்களோ - சம்சாரபந்தம் - அதிலிருந்து விடுதலை (விமுக்தி)யையே-விதூத புண்யபாபா:-பாப புண்யங்களை உதறித்தள்ளிவிட்டு - நிரஞ்ஜன;- பிரகிருதி சம்பந்த மில்லாதவர்களாக (களங்கமின்றி) - நாமரூபங்களை (ஸம்சார தசையிலிருக்கும் நாமரூபங்களை) விட்டவனுக்கே - பத்தஜீவன் சுத்த ஜீவனாக ஆகும் போது - விமுக்தனுக்கு - புண்யபாபங் களின் சம்பப்ந்தத்தால் - அசித்ஸம் ஸர்க்கம் பிரயுக்தமாள நாம ரூப பாக்த்வமேவ - ஸம்ஸாரம் என்பது வேறு ஒன்றுமில்லை. இதுதான் - அதாவது நாமரூப விபாகங்களை தங்கள்தங்கள் கர்மாக்களுக்கு அனுசரணையாக யடைவது - அதனால் போக்ய வஸ்துக்களாகிற அசித் வஸ்துக்களின் சம்பந்தமடைதல் ; அத் தகைய ஸம்சாரத்திலிருந்து விடுதலை பெற்ற விமுக்தனுக்கு புண்யபாபங்களால் யேற்படும் களங்கங்கள் நீங்கப்படுகின்றன. நிரஞ்சனன் - பிரகிருதி ஸம்ஸர்க்கரஹிதன் - அத்தகைய முக்தனுக்கு பரேண ப்ருஹ்மணா - பரமம் ஸாம்யமுபைதி - பரமாத்மாவுடன் ஒற்றுமையை - ஸாம்யத்தை அடைகிறான் - முக்ததசையில் அவன் பரமாத்மாவுடன் போகங்களை அனுப விக்கிறான். ஜகத்வியாபாரம் அவனுக்குவர்ஜம். அது நீங்கலாக பரமாத்மாவுடன் ஸாம்யத்தை யடைகிறான் - தர்மபூத ஞானம் விகாஸத்தை அடைந்து - அபஹத பாப்மத்வாதி குணங்கள் அவனுக்கு ஆவிர்பவிக்கின்றன. அப்பேற்பட்ட முக்தனுக்கு - பிராப்யமாக பரமாத்மா விருக்கிறபடியால் - இங்கு நிர்திஷ்டம் (நன்கு காட்டப்பட்டது) - த்யுபிருத்வியாதி ஆயதனபூதன் புருஷனாகிற பரம் பிருஹ்மமைவ - ஸ்ரீமந் நாராயணனே. (ஜீவனல்ல)

பரபிரும்மம் இவ்விதமாக அசாதாரண சப்தங்களாலும் - மற்றவகைகளாலும் பரமேவ பிருஹ்மமே - த்யுபிருத்வியாதி களுக்கு ஆதாரமாக விருப்பவன்; இம்மாதிரி அசாதாரண சப்தங்கள் ஜீவனுக்கு (பிரத்யகாத்மாவுக்கு) ஒதப்படவில்லை என்பதால் சூத்ரக்காரரர் த்யுபிருத்வீ லோகங்களுக்கு ஆதார மாக விருப்பவன் பரமாத்மாவேயாகும் - ஜீவனல்லன். (அதாவது ஜீவனும் பிரகிருதியும் ஒரேபடியாக சம்சார தசையில் கர்மத்தி னுல் அழுந்திப் போனபடியால், பரமாத்மாவை அறிகிறதில்லை என்பதாம்).

இந்தக் காரணத்திஞலும் ஜீவனல்ல (பிரத்யகாத்மா) வல்ல.

Sutra 3. नानुमानमतच्छब्दात् प्राणभृच्च - *(1-3-3).*

*நாநுமாநம தச்சப்தாத் பிராணப்ருச்ச (1-3-3)*

அதச்சப்தாத் - (இங்கே மூலபிரகிருதியைச் சொல்லும் சப்தமில்லாதபடியால் - ந அநுமாநம் (இங்கு கூறப்படுவது) மூல பிரகிருதியல்ல - (ந) பிராணப்ருத்ச - பிராணனைத்தரிக்கும் ஜீவனு மல்லன்.

எப்படி இந்த பிரகரணத்திலே பிரதானத்தைச் சொல்லும் சப்தங்கள் இல்லாமையாலே - प्रधान (பிருகிருதி) न प्रतिपाद्यम् - த்யுப் ப்ருத்வி ஆயதந புருஷன் மூலபிரகிருதி ஆகமாட்டாது. அதுபோல பிராணனை உடைய ஜீவனைச் சொல்லும் வாக்யங் களும் இங்கு இல்லாமையாலே - அவனுமல்லன்.

அனுமானம் - अनुमीयते इत्यनुमानं அளக்கிறது என்கிற தாதுவிலிருந்து உண்டாகிறது - (சாங்கியன் போன்றவர்களால்) சொல்லப்ப்டும் பிரதானம் ஜகத்காரணம் என்று; அத்தகைய பிரதானம் என்பதை அனுமானம் காட்டுகிறது. இல்லாவிடில் அனுமானத்திஞல் (Inference) ஸித்திப்பது - (சப்தபாவாத் பிரதானபரமாகவில்லை. மோக்ஷம் பிரதானத்தை உபாஸிப்பதால் கிடைக்கிறது - என்பதற்கு சுருதி ஆதாரமில்லை. அதேபடி ஜீவனுக்குமில்லை - ஏனெனில் உபாஸிப்பவன் ஜீவன். பிருஹ்மம்

உபாஸிக்கப்படுவது. ஜீவன் பிராணனை தரிக்கிறான் - பிராண ப்ருத் என்று சொல்லப்படுகிறது - பரமாத்மாவின் ஸங்கல் பத்தாலே - ஜீவன் நினைத்தால் அவன் அதிக நாள் உயிர் வாழ முடியுமா ? முடியாது - அதனால் பரமாத்மாதான் பிரகிருதி ஜீவர்களையும் தாங்குகிறான்.)

சூத்ரத்தில் நா அனுமானம் - அல்லது ந - அனுமானம் - இரண்டு வகையாலும் பிரித்தாலும் பிரகிருதி என்பதாகும். अतच्छब्दात् - இங்கே யாதொரு சப்தமும் பிரதானத்தையோ - ஜீவனையோ குறிக்கிற சப்தங்கள் இல்லை. अर्थाभावे अव्ययम् - அவ்யயீபாவம் - இல்லாமையைக் குறிக்கும்.

ஆகவேத்யு பிருத்வியாதி ஆயதனமுள்ள புருஷன் - ஜீவனல்ல - இந்தக் காரணத்தினாலேயும் பரமாத்மாவே.

Sutra 4. भेदव्यपदेशात् *(1-3-4).*

பேதவ்யபதேசாத் *(1-3-4)*

பேதவ்யபதேசாத் - ஜீவனைக் காட்டிலும் வேறுபட்டவனாகக் கூறுகையாலே-இந்த த்யுபிருத்வி சரீரி பரமாத்மாவே-ஜீவனல்ல.

ச்வே 4 - 7 ; முண், 2-3-1-2 ; समाने वृक्षे पुरुषो निमग्नो अनीशया शोचति मुह्यमानः । जुष्टं यदा पश्यत्यन्यमीशमस्य महिमानमिति वीतशोकः - இத்யாதிகளால் மரம் போல அழிவுள்ள ஒருதேகத்தில் ஜீவன் நிமக்னனாக (அழுந்திப் போனவனாக) - போக்யமாகவிருக்கும் பிருகிருதியினாலே மயங்கியவனாக வருந்துகிறான். இவன் எப்போது (அதே தேகத்திலுள்ள) ஈஸ்வரனைத் தன்னிலும் வேறு பட்டவனாகவும், தன் நற்கர்மங்களால் ப்ரீதி யடைபவனாகவும் கண்டு - அவனுடைய மகிமைகளையும் இந்த விதமாகக் காண்கிறானோ - அப்போது அவன் சோகம் நீங்கப் பெறுகிறான்). இந்த வாக்யத்தினால் ஜீவனுடைய லக்ஷணம் சொல்லப்படுகிறது. अनीशया भोग्य பூதமான பிரக்ருதி. (அநிச என்பதை ஸ்ரீராமானுஜர் பிரகிருதி என அர்த்தம் கொள்கிறார். இதற்கு நிஜ அர்த்தம் - இன்னொருவரின் அதீனத்திலிருப்பது பிரகிருதி ஸ்வதந்தரமாக யிருப்பதில்லை - சேதன அத்யக்ஷம் தேவைப்படும். அது ஜீவனோ - பரமாத்மாவோ ஆகவிருக்கலாம்).

இங்கே போக்யபூத பிரகிருதி அனுபவத்தினுல் ஜீவன் மூழ்கிக் கிடக்கிருன் - அதனுல் வருத்தம் கொண்டவனுக விருக்கிருள். எப்போது அவன் தன்னைவிட வேருன பரமாத்மாவை - ஸர்வஸ்ய ஈஸம் யாவருக்கும் ஈசனுக விருக்கும் பரமாத்மாவைப் பார்க் கிருனே - अस्य ईश्वरस्य महिमानं - இந்த ஈஸ்வரனுடைய பெருமை களைக் காண்கிருனே - இந்த மஹிமாநம் - பெருமைகள் - நிகில ஜகத் நியமந ரூபம் - எல்லாவற்றையும் ஆள்பவனுகப் காண கிருனே, அப்போது அவன் சோகத்திலிருந்து விடுதலை யடை கிருன். (समाने - एकस्मिन् - (ஒரே விருக்ஷம்); பரமாத்மா-ஜீவனை விட வேருனவன் - பேதவ்யபதேசாத்).

இதனுலும் இங்கே ஜீவனல்லன்.

Sutra 5. प्रकरणात् *(1-3-5).*

பிரகரணுத்-பிரகரணத்தினுலேகூட இவன் பரமாத்மாவே (परस्य ब्रह्मणः) சொல்லப்படுகிருன். श्रा ம். 1-2-22ல்.

अदृश्यत्वादि गुणको धर्मोक्तेः = अतः परा यया - என்று தொடங் கும் வாக்யங்களால் - பரமபுருஷனே சொல்லப்படுகிருன் - என்று அத்ருஸ்யத் வாதி குணகாதி கரணத்திலேயே காட்டப்பட்டது. இடையிலும் அந்த பிரகரணத்துக்கு விச்சேதம் ஒன்றும் வரவில்லை, எனவும் கீழே காட்டப்பட்டது நாடி சம்பந்தம் கொண்டதாலும். பஹீதா அஜாயமாநத்வம் - மனம் பிராணன் இவைகளைத் தரிப் பது-எல்லாம் பரமாத்மாவே ஆகும். இவைகளுக்கு இடையிலே அந்தப் பிரகரணத்திற்கு விச்சேதம் வரவில்லை. அதனுலே ஜீவனைப்பற்றிய சங்கை வருவதற்கு பிரஸக்தியில்லை, எல்லாம் பரிஹரிக்கப்பட்டதாகும்.

Sutra 6. स्थित्यदनाभ्यांच *(1-3-6)*

*ஸ்தித்யத நாப்யாம்ச (1-3-6)*

ஸ்தித்யத நாப்யாம்ச-(பரமபுருஷனுக்கு சரீரத்தில் இருப்பு மாத்திரத்தையும், (ஜீவனுக்கு) கர்ம பல போகத்தையும் கூறுவ தால்-த்யுப்வாத்யாயதநம் பரமபுருஷனே ஆகும்.

முு-2-3-2-ச்.வே 4-6ல் **द्वासुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते । तयोरन्य: पिप्पलं स्वाद्वत्ति अनश्नन्नन्यो अभिचाकशीति-** அழகிய (அறிவாகிற) இறக்கைகளை உடையவையும் - ஸமான குணங்களை உடையவையும் துணைவர்களுமான (சகாயா) இரு பறவைகள் **समान** (**एकस्मिन्** = ஒரே விருக்ஷத்தில் (தேகத்தில்) வாழ்கின்றன. அவைகளில் ஒன்று (ஜீவன்) பழுத்த பழங்களைப் புசிக்கின்றது (அதாவது கர்மபலனை-ருதம்) சாப்பிடுகிறது. அந்தக் கனியை உண்ணுத மற்றொன்று - பறவை (பரமாத்மாவைக் குறிக்கும்) மிக பிரகாசித்துக் கொண்டிருக்கிறது - இந்த வாக்யம் இப்பிரகரணத்தில் காணப்படுகிறது. பிப்பலம் - கர்மபலம்: பூத சரீரபலம்; க்ஷௌ - **सर्वावासं** **यासु**... **क्षेत्रज्ञं** **चापि** **मां**... = இதனால் பரமாத்மாபரமாக அர்த்தப் - பைங்கிரஹஸ்யத்தினுல் - புத்தி ஜீவன் சொல்லக்கூடுமானுல் இதில் ஜீவன் பிரதானம் ஆயினும் **ருதம்** பிபந்தாவிதி - இதனுல் ஜீவ பரமாத்மா - எனக்கொண்டு - பூர்வா பரமந்திராணுமபி பிருஹ்ம பரதேதி-சூத்ர நோக்கம் எனக் கொள்ளவும்.

ஜீவன் கர்ம பலத்தைப் புசிக்கிறுன் - பரமாத்மா கர்ம பலத்தைப் புசியாமலே தேகத்தினுள் விளங்கி நிற்கிறுன். சரீரத்தில் இருப்பது மாத்திரம்-ஸ்திதி மாத்திரம் சொல்லப்படுகிறுன் திப்யமான (பிரகாசித்துக்கொண்டு) பிருஹ்மம் அதுவே ஸர்வக்ஞ ஸர்வாத்மா-த்யுப்வாத்யாயதநம் (வசிக்குமிடம்) என்றும் மோக்ஷோபாயமாகவும் சொல்லப்படுகிறது, கர்ம பலத்தைப் புஜித்து வருத்தப்படுகிறவன் ஜீவன் பிரத்யகாத்மா - ஆகவே த்யுபூமி முதலான உலகங்களுக்கு இருப்பிடமாக முண்டகத்தில் ஓதப்படுபவன் ஸ்ரீமந் நாராயணனே ஆகும்.

பூமாதிகரணம் (1 - 3 - 2)

**भूमा संप्रसादादध्युपदेशात्** (1 - 3 - 7)

பூமாஸம்ப்ரஸாதாதத்யுபதேசாத் (1 - 3 - 7)

பூமா-மிகப்பெரியது என்று ஓதப்படுவது பரமாத்மாவே; ஸம்ப்ரஸாதாத் அதி-ஜீவனைக் காட்டிலும் மேலானவனுக - உபதேசாத்-உபதேசிக்கப்படுவதாலே.

முந்திய அதிகரணத்திலே - ப்ரகரணாத் - என்னும் சூத்ரத்தில் பரமாத்மா பிரகரணத்திற்கு விச்சேதம் (இடையீடு) ஒன்றுமில்லாததால் - த்யுவாத்யாயதநம் பரமாத்மாவே எனக்காட்டப்பட்டது. அப்படியானால் சாந்தோக்யத்தில் பூமா என்று ஓதப்படும் தத்வமும் - ஜீவ பிரகரணத்திற்கு விச்சேதம் வராமையாலே ஜீவனே ஆகவேண்டும் - என்கிற வாதம் இதில் தள்ளப்படுகிறது. அதாவது பரமாத்மாவே பிராணனைக்காட்டிலும் வேறுபட்டவனாகவும் மிகச் சிறந்த சுகமாகவும் - ஸத்யபதத்தால் சொல்லப்படுபவனாகவுமுள்ள "பூமா" - பரமாத்மா நாராயணனேயாவான் என்பதாகும். பூமா - பரமாத்மா (ஸம்பிரஸாதனான ஜீவனைவிடப் பெரியவன்) பிராணன் ஜீவபரமாகயிருப்பினும் - பரமாத்மா பரமாகச் சொல்லவேண்டியது என்பது ஸங்கதி. அதற்குக் காரணங்கள் காட்டப்படுகின்றன.

சாந். 2-7-29-1-ல் यत्र नान्यत् पश्यति नान्यच्छृणोति विजानाति-स-भूमा; अथ यत्रान्यत् पश्यति अन्यच्छृणोति अन्यद्विजानाति-तदल्पम्"- இதி-எதை அறியும் போது-வேறு ஒன்றைக் காண்பதும் - கேட்பதும் அறிவதுமில்லையோ-அதுவே பூமா (பெரியது); எதை அறியும் போது வேறொன்றைக் காணவும் கேட்கவும் அறியவும் செய்கிறதோ - அது சிறிது - என்று ஸாமவேத சாந்தோக்யத்தில் வருகிறது.

**பூமவித்யையின் மகிமை:— (சாந். உபநிஷத்)**

(நாரத மஹரிஷி மிக்க அடக்க மரியாதையுடன் ஸநத் குமாரரை அணுகி-சோகம் தாங்காமே தெண்டனிட்டு பிரார்த்தித்தார்-பூம வித்யையை உபதேசித்தருளவேணும் என்று. அதற்கு ஸநத்குமாரர் நாரதரை வினவினார் - "உமக்குத் தெரிந்தவை யாவை? பிறகு வேண்டியதைத் தெரிந்து கொள்ளலாம்" என; நாரதர் தாம் கற்ற எல்லா வித்யைகளையும் கூறி-சொன்னார் - "நான் எல்லா சப்தங்களையும் கற்றிருக்கிறேன். ஆத்மா என்ன என்பது தெரியாது. அதைத் தெரிவதால் சோகம், மோகம் தீரும் எனக்கேட்டிருக்கிறேன். ஆக ஆத்மோபதேசம் செய்யவேண்டும்-" என்றார். ஸநத்குமாரர் "நீர் ஓதியுள்ள சப்தங்களை பிருஹ்மமாக

வைத்து உபாஸனம் செய்தால் - அந்த சப்தங்கள் விளங்குமிட மெல்லாம் சஞ்சரித்து ஆனந்தமடையலாமே - என்று சொல்ல; இதற்குமேல் ஏதேனும் உண்டா-என்று நாரதர் கேட்க - ஸநத் குமாரர் பதில் அளிக்க-ஒவ்வொன்றைக் கூறி அதை பிரும்மமாக உபாஸனம் செய்யலாம் என்றார். இப்படி நாரதர் சப்தராசி (நாமம்) வாக்கு, மனது, ஸங்கல்பம் சித்தம்-தியானம் விக்ஞானம்-பலம்-அன்னம்-தண்ணீர்-தேஜஸ்-ஆகாயம்-நினைவு-ஆசை ஆக 14 நாரதர் சொல்லச் சொல்ல-அதற்குமேல் அடைவாக ஸநத்குமாரர் சொல்லி-கடைசியில் பிராணனை மேலானதாக உபதேசித்தார். இங்கே பிராணனை ஜீவாத்மா என்று அவர் தெரிந்துகொள்ளு மாறு விளக்கினார் ஜீவன் உடலைவிட்டு நீங்கும்போது-பிராணனும் கூடப்போகிறான்-இப்பிராணனை உபாஸிப்பவன் தன்னை அதிவாதி யாக-உயர்ந்த புருஷார்த்தமாய் போக்யமான வஸ்துவை உபா ஸிப்பவனாகச் சொல்லிக்கொள்வான் என்றார்.

இதைக் கேட்ட நாரதர் பேசாமல் இருக்க-ஸந்த்குமாரர் - இந்தப் பிராணனை ஜீவாத்மாவைக் கொண்டு அதிவாதி யாவதைவிட (உயர்ந்த புருஷார்த்தமாய் போக்யவஸ்துவாக உபாஸிப்பதைவிட), ஸத்யம் எனப்படும் பிருஹ்மத்தை (பரமாத் மாவை)க் கொண்டு உபாஸிப்பது தகும் என கருணையினால் உபதே சித்தார். ஸத்யவஸ்து சுகரூபமாகவும் அதிலும் வேறு ஒன்று கேட் கவும் கருதவும் வேண்டாதபடி-எல்லாமே தன்னில் அடங்கின தான பெரியவஸ்து " பூமா " என்று ஸந்த்குமாரர் உபதேசிக்க ; இதற்குமேல் ஒன்று இருக்குமோ - அதைச் சொல்வாரே-என ஐயம் நாரதருக்குயேற்பட - ஸந்தகுமாரர் பதில் கூறி முடித்தார் - பூமா தான் பெரியது சுகரூபமுள்ளது - இதற்குமேல்பட்டது ஒன்றும் கிடையாது - இதுவே மேலும் கீழும் எல்லாத் திக்குக்களிலும் சஞ்சரிக்கிறது. " இதே நான் " என்று நினைக்கவேண்டும் ஏனெ னின் இது எதற்கும் ஆத்மா-இதிலிருந்தே முன் பிராணன் வரையி லாக சொன்னவையாவும் உண்டாகின்றன. பூமாவை உபாஸிப்ப வன் கர்மங்களிலிருந்து விடுபட்டு எங்கும் சஞ்சரிகிறான். சக்தி பெறுகிறான். எல்லாம் இவனுக்கு போக்யம். இத்தகைய உபாஸ னம் மனம் சுத்தியாவதாலும் - மனசுத்தம் சுத்தமான ஆஹா ரத்தை உட்கொள்வதாலும் ஏற்படுகிறது என்று ஸநத்குமாரர்

நாரதருக்கு உபதேசித்து-அவரை ஸம்சாரத்தின் அக்கரையைக் காணவைத்தார் ஸநத்குமாரர். இவரை ஸ்கந்தர் என்றும் சொல்வதுண்டு).

ஸ்ரீபாஷ்யம்:-இங்கே சொல்லப்படும் "பூம" சப்தம் பாவ ப்ரத்யய அந்தமாக - அயமிதி-அதற்கு என்ன அர்த்தம் என்றால் - வியுத் பத்தியினால் தர்மிபரமாக - நிரூபணமாக-சுகசப்த ஸமாநாதி கரணத்தினால் - ஒற்றுமை சொல்லி, தர்மிபரோ ऽयमिति விசிஷ் டார்த்தம் எனவாம். (பஹீ-ப்ரீத்வாதி என்பதுடன் பஹீசப்தம் கூடச் சேர்கிறது. ஆகவே पृथ्वादिभ्यइमा निजवा - ப்ரத்யயம் "இமானிச்" பஹீ என்கிற பதத்திற்கு பின்பு வந்தால் - "பூ" என்கிற சப்தம் "பஹீ"விற்குப்பதிலாக மாற்றிவரும் "பஹீ" "இமாநி" இரண்டையும் ஒன்று சேர்த்தால் "பூ ம்ந்" என்சிற பதம் கிடைக்கும். "பூமந்" என்பது மிகப்பெரியது என்கிற அர்த்தம் (பாணினி 6-4-158). இங்கே "பஹீ" என்கிற பதம் (மிகப்பெரியது என அர்த்தம் கொண்டது) பெரிய தன்மையை குறிக்கிறது - எண்ணிக்கையில் பெரியதல்ல; ஏனெனில் அல்பம் என்கிற பிரயோகம் காணப்படுவதால் - बहोर्लोपो भूबहोः—பிரகிருதி பிரத்யய விகாரத்தினால் பூமா என்று ஆகிறது. भूमा= बहुत्वम् - என்று அர்த்தம். இங்கு பஹீ சப்தத்திற்கு அர்த்தம், வைபுல்ய வாசி (எங்கும் பரவியிருக்கிறது); எண்ணிக்கையால் வாசி (அர்த்த முள்ளது) அல்ல.

(பூம சப்தத்திற்கு சங்கரரின் அபிப்ராயம்)

சங்கரபாஷ்யம் :

பூமாவை அறிய விரும்புகிறேன்-என்று நாரதர் சொல்ல-பிற வொன்றைப் பார்ப்பது என்பது எதில் இல்லையோ - பிறவொன் றைக் கேட்பது என்பது எதில் இல்லையோ-பிறவொன்றை அறிவது என்பது எதில் இல்லையோ - அது பூமாவாகும். அதற்கு மாறாக பிறவொன்றைப் பார்ப்பது என்பதும் - பிறவொன்றைக் கேட்பது என்பதும் அறிவது என்பதும் எதில் இருக்கின்றதோ - அது (பரிச்சின்னமான) அற்ப வஸ்துவாகும். அதில் ஸம்சயம் உண்டா கிறது- அதாவது - பிராணன் பூமாவாக (பூம சப்தப் பொருளாக) ஆகுமா? பரமாத்மா ஆகுமா? என்பதாம். எக்காரணத்தால் சம்சயம் ஏற்படுகிறதுயெனில்-பூமா என்றதால் பஹீத்வம் (வெகு

வாக விருத்தல் - வியாகரண சாஸ்திரத்தில் बहु என்று சப்தத்தின் மேல் பாவரூபமான அர்த்தத்தில் इमनिच (இமநிச்) என்ற ப்ரத்யயம் வைக்கும்போது - बहुर्लोपो भूच बहो:-என்றதால் बहु என்று சப்தத் திற்கு மேலுள்ள இமநிச் பிரத்யயத்தின் ஆதியிலுள்ள இகார மானது லோபத்தை (இல்லாமையை) அடைந்து பஹீ என்ற சப்தத்திற்குப் பதிலாக भू (பூ) என்ற சப்தமும் வரும் எனச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே भू + मन् — பூமந் - பூமா என்ற சப்த ஸ்வரூபம் ஏற்படுகிறது இந்த பூம சப்தம் பாவப்ரத்யயத்தை முடிவில் (அந்தத்தில்) கொண்டிருக்கும் தன்மை பாணினியால் சொல்லப்படுகிறது, அதினின்றும் பூமா என்பதற்கு பஹீத்வம் என்கிற பொருள் கிடைக்கிறது. அந்த பஹீத்வம் எவ்வடிவானது என விசேஷத்தை (தர்மியைப் பற்றிய) ஆகாங்க்ஷை வருவதால் - பிராணன் ஆசையைக் காட்டிலும் வெகு (பல) வானவன் - என்ற ஸந்நிதியை (பிரகரணத்தை)க் கொணடு பிராணன் பூமா என்று தோன்றுகிறது. அவ்விதமே ஆத்மாவை அறிந்தவன் சோகத்தைக் கடக்கிறான்-எனவும்-நான் அந்த சோகத்தை அடைந்திருக்கிறேன் எனவும்-நீங்கள் உபதேசித்து என்னை சோகத்தின் கரையைக் கடக்கச் செய்யவேண்டும்'' என்று நாரதர் பிரகரண ஆரம்பத்தில் சொல்வதால் - பரமாத்மா பூமாவாக ஆகலாம் என்று தோன்று கிறது-ஆகவே எதை, பிராணன் பூமாவா? - அல்லது பரமாத்மா பூமாவா? பிராணன்தான் பூமா-பூர்வபக்ஷம்; குடத்தில் ஆரக்கால் கள் எவ்விதம் கோர்க்கப்பட்டனவோ-அவ்விதமே பிராணனிடம் யாவும் ஸமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது-அதாவது ஸர்வாத்மதத்வம் - ஏற்படுகிறது. சித்தாந்தம் ஸம்ப்ரஸாதத்திற்கும் (பிராணனுக்கும் மேல் உபதேசம் காணப்படுவதால் - பரமாத்மாவே பூமா ஆகும். ஸம்பிரஸாதே:-ஸுஷுப்தமான ஸ்தானம் - இதில் ஜீவன் தெளி கிறான் - பிராணன் அந்த சுஷுப்தியில் விழித்துக்கொண்டு வேலை செய்கிறான். பிராணன் ஸம்ப்ரஸாதனாக எண்ணப்படுகிறான். பிரா ணனே பூமா ஆனால் - மேல் உபதேசமிருப்பதால் - பிராணனைக் காட்டிலும் பூமாவானது வேறு பொருளாக விருப்பது சரியே.

அதிவாதம் பிராணனோடு முடியாமல் - தொடர்ந்து - எவன் ஸத்தியத்தினால் அதிவாதம் செய்கிறானோ - பிராண அதிவாதியை விட - ஸத்திய அதிவாதி ரூப விசேஷம் சொல்லபடுகிறது. ''இவன்

அக்னிஹோத்ரீ - எவன் ஸத்தியம் பேசுகிருனே-என்றவிடத்தில் - ஸத்தியம் பேசுவதால் அவன் அக்னிஹோத்ரீ ஆதல் இல்லை.

ஏஷதுவா அதிவததி - என்ற விடத்தில் பிரகிருதமான பொருளின் விலக்குதலைக் கூறும் து என்ற சப்தமும் பொருத்த மற்றதாகும். ஸத்யேந - என்பதால் பிராணனுக்கு மேல் ஸத்யம் பிரதிக்ஞை செய்யப்பட்டு - அது பூமாவாகிறது. பரமாத்மா தமது மகிமையினுல் நிலைபெறுகிறுர்-என்பதால் பூமவஸ்துக்கே ஸர்வ காரணத்தால்-பரமாத்மாவாகிறது-இது பொருத்தமாக விருக்கிறது.]

ஸ்ரீபாஷ்யம்:—

यत्रान्यत् पश्यति-न - तदल्पम् - என்று அல்ப பிரயேகமிருப்பா தாலே - எண்ணிக்கையில் பெரிதல்ல. அல்ப சப்தம் காட்டுவது - தர்மி பரமாகக்காட்டுவது. அதாவது பஹுத்வத்தை ஒரு குணமாக ஒரு தத்வத்துக்கு ஓதுவீது; ஏனெனில் அல்ப பிரதியோகித்வத் தைக் காட்டுவது. தர்மி பிரதியோகி பிரதிபாதன பரத்வாதேவ தர்மிபரஸ்ச நிச்சயிக்கப்படவேண்டியது-ந தர்மமாத்ரபர: (இங்கே பூம சப்தம்-பிருஹ்மம் - ஸத்யம் என்கிற பதத்தாலும் பிருஹ்மம் என்று சொல்லி - ஸத்யமே பூமாந்-என்கிறது.) ஆகையால் பூமா என்பதால் எங்கும் பரவியுள்ளது (விபுல) என்று அர்த்தம், மிகப் பெரியது; வைபுல்ய விசேஷஸ்சே ஹ आत्मेत्यवगत: - இங்கே வைபுல்யம் (மிகப் பெரியது) என்கிற தர்மம் ஆத்மாவுக்கு ஓதப்படு கிறது - பிரகரணத்திலே - நாரதர் சொல்வது - எவன் ஆத்மாவை அறிகிருனே-அவன் சோகத்தைக் கடக்கிறுன் तरति शोकमात्मवित् - என்று ஆரம்பித்து-வரிசை வரிசையாகச் சொல்லி (சா.உ. 7-1-3)- கடைசியாக பூமவித்யையை - விக்ஞானத்தை உபதேசிக்கிறது. சா.2-7-25-2-ல்- आत्मैवेदं सर्वं इति - இது எல்லாம் ஆத்மாவாக வாஸ்தவத்திலே இருக்கிறது-முடிக்கிறபோதும் (உபஸம்ஹாரத்தி லும்) இவ்விதம் ஆத்மாவாக-பூம சப்தம் குறிப்பிடப்படுகிறது. உபக்ரம உபஸம்ஹாரத்தில் இப்படி ஓதப்படும் ஆத்ம சப்தம்- பூமகுண விசிஷ்ட பிரத்ய காத்மாவா (ஜீவனு) - அல்லது பரமாத் மாவா? இதுதான் சம்சயம்.

(பூர்வபக்ஷி பிராணன் எனப்படும் ஜீவனை பிருஹ்மமாக உப தேசிக்கிறபடியால் அதற்குமேல் பெரியது உண்டா என்று நாரதர் கேட்கவுமில்லை - ஸநத்குமாரர் உபதேசிக்கவுமில்லை. அதற்குமேல் 23ம் கண்டம்வரை பிராண பிரகரணத்திற்கு ஒரு விச்சேதம் (இடையீடு) ஏற்படவில்லை. ஆகவே 24ம் கண்டத்தில் " பூமா " (பெரிது) என்று ஓதப்படுவது பிராணன் என்று ஓதப்பட்ட ஜீவனே ஆகமுடியும் என்பதாம்.)

என்ன சொல்லலாம்-பிரத்யகாத்மா ஜீவனே ஆகும். எப்படி? श्रुतं ह्येव मे भगवद्दृशेभ्यः तरति शोकमात्मविदिति - (சா. 2. 7-1-3) (ஆத்ம ஞானத்தைப் பெறுவதற்கு வந்த நாரதர் ஸநத்குமாரிடம் நான் மந்திரத்தை அறிந்தவனேயொழிய-ஆத்மாவை அறியவில்லை ஆத்மாவை அறிபவன் சோகத்தைக் கடக்கிறான் என்று நான் கேள்விப்பட்டதால் - உம்மிடம் உபதேசம் பெறுவதற்கு வந்திருக்கிறேன்-என்று கூறி ஆத்மாவை அறிவதில் விருப்பம் தெரிவிக்க - ஸநத்குமாரர் நாமத்தை பிருஹ்மமாக உபதேசிக்கிறார். அதற்கு மேல் நாரதர் " நாமத்தைக்காட்டிலும் மேலானது உண்டா? என்று கேட்க; ஸநத்குமாரர் வாக்கைப் பெரியது என்கிறார்-இப்படி வாக்கு-மனம்-சங்கல்பம் ஒவ்வொன்றும் பெரியது என்று சொல்லி-உபாஸிக்கும்படி சொல்கிறார். "நான் சாஸ்திரங்களை அறிவேன். உம்மைப்போல பெரிய ஆசார்யரை அணுகி எவன் ஆசார்ய உபதேசம் பெறுகிறானோ-அவனே மோக்ஷமடைகிறான்-சம்சாரக்கடலை தாண்டுகிறான் ". இவ்விதம் வினவிய நாரதரை ஸநத்குமாரர் சொல்லி - கடைசியாக 14ம் கண்டத்தில் பிராணனோடு கூடியிருக்கையாலே-பிராணன் எனப்படும் ஜீவனைப் பிருஹ்மமாக உபதேசிக்கிறார். ஆகவே ஆத்ம ஜிக்ஞாஸுவான நாரதருக்கு நாமாதி பிராண பர்யந்தம் உபாஸ்யம் என்று ஸந்தகுமாரர் சொல்லி-உபதேசித்தார். अस्ति भगवो नाम्नो भूयः - நாமத்தைவிடப் பெரியது உண்டா என்று நாரதர் வினவ – अस्ति भगवो वाचो भूयः-இதேபடி வாக்கை விட பெரியது உண்டோ? இத்யாதி பிரஸ்னங்களால்-वाग्वाव नाम्नो भूयसि-வாக் நாமத்தைவிட மிகப்பெரியது; मनोवाव वाचो भूयः மனம் வாக்கைவிட பெரியது; இத்யாதி பிரதி (பதில்) வசனங்களால் - பிராணன்வரை பதில் உரைக்கப்பட்டு-பிராண பர்யந்தம் ஆத்மாவாக நினைத்து உபாஸனம் செய் என்று சொல்லப்படுவ

தால் பிராணனுக்கு மேல் கேள்வியோ-பதிலுமில்லை. பிராணன் பர்யந்தம் ஆத்மோபதேசம் சொல்லப்படுவதாகிறது. அதனால் பிராண சப்தம் நிர்திஷ்ட: - பிராணன் எனப்படும் ஜீவனை - பிராணஸஹசாரி - பிரத்யக ஆத்மாவை பிருஹ்ம்மமாக உபதேசிக்கிறார் என்பது தெளிவாகும். அதற்குமேல் பெரியது உண்டா என்று நாரதர் கேட்கவில்லை - பதிலுமில்லை. (ஆத்ம உபதேசம் பிராணன்வரை இருப்பதால்-இங்கே ஆத்மா பிராணனையும் சேர்த்துச் சொல்லும்)-அதனாலே பிராணன் என்பது ஜீவனே - அவன் பிராணனுடன் கூடச்சேர்ந்தவனாக இருக்கிறான். அவன் விசேஷ வாயுமாத்திரமில்லை. (சா.2. 7-15-1) இந்த சுருதியில் - प्राणोह पिताप्राणोह माता - பிராணனே - தகப்பன்; பிராணனே தாய்; இவைகளால் காட்டப்படுவது-பிராணன் சேதனதத்வம் என்பதாகும். पितृहा - मातृहा - இவைகளால் பிதாவைக கொன்றவன் - தாயாரைக் கொன்றவன் இவைகளால் - பிராணனோடுகூட பித்ரு மாத்ருக்களை உபமர்த்தனம் (தீங்கு) செய்வது சொல்லப்படுகிறது. ஹிம்ஸையின் காரணமாக - ஒருவனுக்கு பெயர்கள் அளிக்கப்படுகின்றன. ஆனால் இங்கே இத்தகைய வசவு வசனங்கள் சொல்லப்படவில்லை. ஆகையால் பிராணன் போன வ்யக்திகளுக்கு இந்த வசனங்களை பிரயோகப்படுத்தும்படி - வசவு சொற்கள் இங்கில்லை. பிராண சப்தத்தினால் காட்டப்படுவது - ஒரு சேதனதத்வம். ஹிம்சையை அனுபவிக்கத் தகுந்த வ்யக்தி இல்லை ஹிம்ஸா யோக்யஸ் சேதந ஏவபிராண சப்த நிர்திஷ்ட:); பிராணன் தாவர ஜாதிகளுக்கும் இருக்கிறதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் அவைகளுக்கு ஐந்து விதபிராணங்களில்லை. அதுபோல பாபத்தினால் அசையாப் பொருள்களாகப் 'பிறவி எடுத்த பொருள்களுக்கும் - சேதனத்வம் இருப்பதால் - அவைகளும் திருப்பி உபமர்த்தனம் செய்தல் ஹிம்சை செய்வதற்கோ - சக்தியிருக்கிறதோ இல்லையோ - ஆனால் அவைகளுக்கு பிறர்களால் யேற்படும் ஹிம்சையை அனுபவிப்பதற்கு உணர்ச்சியிருக்கிறதாகவும் - சில சமயங்களில் - இல்லையாகவும் விருப்பதால் இப்படி விதவிதமாக பிராணன் பிரத்யகாத்மாவில் இருக்கிறதாக காணப்படுகிறது. ஆகையால் இந்தக் காரணத்தாலே - சா. உ. नास्मि हन्तानुगन्यासेन प्राणशब्द निर्दिष्टः पर इति न भ्रमितव्यम् - परस्य हिंसाप्रसक्त्यभावात्; जीवादितरस्य तद्भोग्य भोगोप करण

**भूतस्य कृत्स्नस्या चिद्वस्तुनो जीवा यत्तस्थितित्वेन प्रत्यगात्मन्येवार नाभि दृष्टान्तोपपत्तेश्च** - ஒருவன் நம்பக்கூடாது - நாபி ஆரவட்டத்தில் கோர்க்கப்பட்ட கம்பிகள் இத்யாதி உதாரணத்தினால் பிராண சப்தத்தால் காட்டப்படுபவன் மேலான பரபிரும்மமும் ஆகும், என்று சொல்லக்கூடாது. அது ஜீவனேயாகும் ஏனெனில் பிருஹ்மத்திற்கு ஜீவனைப்போல - வலியை உணர்தல் - மேலும் மேல் சொல்லப்பட்ட நாபிசக்கிர உதாரணம் சரியாகும் (எப்போது) ஒரு சேதனவ்யக்தியை குறிக்கிறபோது; ஏனெனில் அசேதன பொருள்கள் எல்லாம் சேதனப் பொருள்களை விட வேறானவை; அவை சேதனப்பொருள்களை தங்கள் ஸ்திதிக்கு நம்பி வாழ்பவை; போக்ய போகோபகரண பூதமாக - ஸம்பூர்ண அசித்வஸ்துக்கள் ஜீவனை நம்பியிருப்பதால் - அவைகளுடைய இருப்பு - எந்த ஸ்திதியில் இருக்கிறதோ - அது ஜீவர்களால் உண்டுபண்ணப்படுவதாலே யேற்படுவதாகும். ஆகவே இந்த சேதன ஜீவனே இங்கு பிராணசப்தத்தால் குறிக்கப்படுகிறான். இருபத்துமூன்றும் கண்டம் வரையில் பிராண பிரகரணத்திற்கு ஒரு விச்சேதம் (இடையீடும்) ஏற்படவில்லை - பூமசப்தத்திற்கும் முன்பு - அதாவது 24 வது கண்டத்தில் பூமா (பெரிது) என்று ஓதப்படுவது, பிராணன் என்று ஓதப்பட்ட ஜீவனே ஆகமுடியும்- (விச்சேதம்-இடையீடு-அதாவது இதைவிட பெரியது உண்டா எனக்கேள்வி-அதற்குப் பதில் இது பிராணனைவிட பெரியது- என்கிற கேள்வி பதில் இல்லாதபடியாலே நாரதரும் கேட்கவில்லை ஸநத் குமாரரும் உபதேசிக்கவுமில்லை. அதனால் பிராணனோடு கூடியிருக்கையாலே பிராணன் எனப்படும் ஜீவனைப் பிருஹ்மமாக உபதேசிக்கிறார்-பிராண பிரகரணத்திற்கு 23ம் கண்டம் வரை விச்சேதம் இல்லை - 24ம் கண்டத்தில் பூமா என்று பிராணனாகிற ஜீவன் என்று முடிக்கிறார்.)

(இங்கு கவனிக்க வேண்டியது. இந்திர பிராண அதிகரணத்தில் கௌ. 2. வாக்யம்- ரதசக்ர ஆரங்களில் நேமி எனப்படும் வட்டம் எப்படி கோர்க்கப்பட்டுள்ளதோ- அவ்வாரங்கள் நாபியில் எப்படி கோர்க்கப்பட்டனவோ அப்படியே இந்த அசேதனப் பொருள்கள் சேதனப் பொருள்களில் கோர்க்கப்பட்டுள்ளன. அச்சேதன பொருள்களும் பிராணன் எனப்படும் பரமாத்மாவிடம்

கோர்க்கப்பட்டிருக்கின்றன - எல்லா சேதன அசேதனங்களுக்கும் ஆதாரமாக விருத்தல் பரமாத்மாவின் தர்மம் இங்கு பிராண னுக்கு ஓதப்படுகிறது. ஆனால் இங்கே பிராணன பிருஹ்மத்தைக் குறித்தாலும் - அதே பிராண சப்தம் இங்கு ஜீவனைக் குறிக்கிற தாகச் சொல்லப்படுகிறது - அதே ரத சக்ர நாபி உதாரணத்தில் - பூர்வபக்ஷ அபிப்ராயம் இது.)

**ஸ்ரீ பாஷ்யம்:-अयमेव च प्राणशब्द निर्दिष्टो भूमा : अस्ति भगवः प्राणाद् भूयः** என்கிற கேள்விக்கு - **अद्दो वाव प्राणाद् भूयः** பதிலாக - பிராணனைவிட இது பெரியது என்கிற பதில் இல்லாதபடியாலே - பிராணனோடு முடிந்துவிடுகிறது பிரஸ்னம்; பிராணபிரகரணத்தில் ஒருவித விச்சேதமும் இல்லாதபடியால், பூமா என்று ஓதப்படும் பிராணன் என ஓதப்பட்ட ஜீவனேயாக முடியும்

மேலும் சொல்லப்பட்டது - எவன் பிராணனை இவ்விதமாக அறிகிறானோ - அவன் சொல்லக்கூடும். **एष तु वा अतिवद्ति** - அவன் உபாஸிக்கிற வஸ்து எல்லாவற்றையும் விட பெரியது - இதனால் பிராணனை அறிந்த - ஜீவாத்மாவைக் கொண்டு பிராணனை அறிந்த அதிவாதி - இங்கே சொல்லப்படுகிறான் - என்கிற பிரத்யபிஜ்ஞையி னால் காட்டப்படுகிறது; **यः सत्येनाति वद्ति** - இந்த பிராணனை - ஜீவாத்மாவைக்கொண்டு அதிவாதியாவதைவிட ஸத்யம் எனப் படும் பிருஹ்மத்தை (பரமாத்மாவை)க்கொண்டு அதிவாதியாக ஆவதுதான் தகும். இதனால் அதன் ஸத்யவதனம்-பிராண உபா ஸனைக்கு அங்கமாக உபதேசித்து-அதாவது அதியாவதற்கு ஸத்யம் எனப்படும் பிருஹ்மத்தைத் கொண்டு அதிவாதியாவது- அதன் உபாஸனம் - அதற்க்காக மனனம்-அதில் சிரத்தை-அதிலே நிலை யிருத்தல்-அதற்குத் தகுந்த செய்கை-அந்த ஸத்ய வஸ்துவை சுகஸ்வரூபமாக அறிதல் - அதிலும் வேறு ஒன்றையும் கேட்கவும் கருதாதபடி-தன் னிலே எல்லாம் அடங்கினதான பெரும் சுகம் - பூமா-என்று அறிதல் அவசியம் என்றார் ஸநத்குமாரர்.

ஆகையால் **एष तु वा अतिवद्ति** - என்று பிரத்யபிஜ்ஞை செய்து- **यः सत्येनाति वद्ति** - என்று ஸத்யவதனம் (பேச்சை) எல்லாருக்கும் செய்யப்படவேண்டியது என்றும் சொல்லி - அது பிராண ஸ்வரூப ஞானத்தில் அடங்கினது என்றும் - அந்த ஞானமே மூன்றால்

சொல்லப்பட்ட நிர்திஷ்ட பிராண யாதாத்மிய விக்ஞானமாகும். यदा वै विजानाति अथ सत्यं वदति என்று உபதேசித்து - அதிவாதி யாவதற்கு - (அதாவது பிராணனின் ஸ்வரூப யாதாம்ய ஞானத்தை அடைவதற்கு - உபாஸனம், மனனம் - சிரத்தை - அதிலேயே நிலைபெற்று இருத்தல் - தகுந்த செய்கை-ஸத்யமான வஸ்துவை (பிருஹ்மத்தை) சுகரூபமாக அறிதல்-இவைகளை உபதேசித்து-பிறகு तस्य च सुखस्य विपुलता - அந்த சுகத்தின் பெரிய தன்மையை தன்னிலே எல்லாம் அடங்கினதான பெரும் சுகமாய் - பூமா என அறிதல் - भूमा त्वेव विजिज्ञासितव्यः - என்று உபதேசித்து - அதைத் தவிர வேறொன்றும் கேட்கவோ கருதவோ இல்லாதபடி - அந்த ஸத்யமான பூமாவே இச்சைப்பட்டு - அறியப்படவேண்டியது - என்ற உபதேசமும் நாரதருக்கு ஸநத்குமாரர் அளித்தார். (இதற்கு மேல் ஒன்றைச் சொல்வாரோ - என்று நினைத்த நாரதருக்கு - பதில் அளித்தார் ஸநத்குமாரர் - இதற்குமேல் ஒன்றுமில்லை - கிடையாது என்றார்.)

ஆகவே அந்த சுகமே அளவிட முடியாதபடி பெரிதாகவுள்ளது. ஆகவே அந்த சுகத்தையே - பிரத்யகாத்மா அடைகிறான். அவித்யையிலிருந்து விடுபட்டு - அதனால் சுகம் பூமகுண விசிஷ்ட ஜீவஸ்வரூபமாக போதிக்கப்படுகிறது. இப்படிச் சொல்வதால் வாக்ய உபக்ரமத்திற்கு விரோதம் யேற்படுவதாகிறது- तरति शोकमात्मवित् - ஆத்மாவை அறிகிறவன் சோகத்தைத் தாண்டுகிறான் - ; ஆகவே பூமகுண விசிஷ்டன் பிரத்யகாத்மா தான்.

எந்தக் காரணம் கொண்டு - ஜீவனை பூமகுண விசிஷ்ட பிரத்யகாத்மா என்று சொல்வோமாகில் - அதே காரணத்தினாலே-अहमर्थ நான் என்கிற பொருளில் விஷயமாகிற நான் - अहमेवाधस्तादहमुपरिष्टात् - என்று ஆரம்பித்து (நான் என்பவனே கீழாகவும்-மேலாகவும் இருக்கிறேன்) என்றும்; முடிக்கிற போது - अहमेवेदं सर्वं - நானே இந்த எல்லாப் பொருள்களாகவும் இருக்கிறேன் - இதில் காட்டப்பட்ட अहं அர்த்தம் ஜீவனைக் குறிப்பது. இவ்விதமாக பிரத்யகாத்மாவின் விபுலத்வம் (பெரியதாகவிருப்பது) வைபவம் ஸ்தாபிக்கப்படுகிறது இதேபடி. பிரத்யகாத்மாவே நிச்சயமாகுமானால் பூமசப்தத்தால் அறியப்படுமானால், இதற்குத் தகுந்தாற்

போல - இந்த பிரகரணத்தில் வரும் இதர பிரகரணசேஷ வாக்யங்களையும் இம்மாதிரி அர்த்தம்-ஜீவபரமாகச் செய்து கொள்ள வேண்டியது (பூர்வபக்ஷம்).

சித்தாந்தம்;— அவ்விதம் சொல்லப்படுமானால்-நாம் பதில் அளிப்போம், भूमा संप्रसादा दध्युपदेशात्— மிகப் பெரியதும்-பிருஹ்மத்தைக் குறிப்பதுமான "பூம" சப்தத்தினால் எது காட்டப்படுகிறதென்றால் - பிருஹ்மமே காட்டப்படுகிறது - ஏனெனில் இந்த பிரகரணத்திலே - பிருஹ்மம் ஸம்பிர ஸாதனுகிற ஜீவனைக் காட்டிலும் மேலானதாக உபதேசிக்கப்படுகிறது. ஆகவே பூம குண விசிஷ்டன் பிரத்ய காத்மா அல்ல. எவ்விதமெனில், संप्रसादादध्युपदेशात्- ஸம்பிரஸாதனைக் காட்டிலும் மேலானவன் என்று சொல்லக்கூடுமானால் - அது பரமாத்மாவே ஆகும் - ஸம்பிரஸாத;- பிரதயகாத்மா அல்லது ஜீவன்-சா-8-12-2 एष संप्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभि निष्पद्यते-ஸம்பிர ஸாதன் எனப்படும் இந்த ஜீவன் இந்த சரீரத்தினின்றும் வெளிக் கிளம்பி ஸ்வஸ்வரூபத்தை அடைகிறான்-என்று வேதவாக்ய மானது பிரஸித்தமாகவிருக்கிறது. संप्रसादात्-அதாவது பிரத்ய காத்மாவைக் காட்டிலும் மேலான பரமாத்மா - பூமா எனப்படும் பொருள்-(மிகவும் பெரியது என்கிற குணத்தினால் பெயரை அடைந்த பிருஹ்மம்)-அது ஸம்பிரஸாதனைக்காட்டிலும் பெரியது என்று சுட்டிக் காட்டபட்டதால-பூம விசிஷ்ட ஸத்யம் என்பது ஜீவனைவிடப் பெரியது என்று மீண்டும் சொல்லப்படுகிறது-எது ஸத்யம் என்று காட்டப்பட்டதோ-அது பிருஹ்மமாகும்—सत्यशब्दनिर्दिष्टं च परं ब्रह्म-

(இதை விளக்கிக் காட்டுவோம் - ஜீவனைக் காட்டிலும் மேலானவனாக ஸத்யம் எனப்படும் பிருஹ்மத்தை பதினாறும் காண்டத்தில் உபதேசித்திருக்கிறபடியால் - பிராண பிரகரணத்திற்கு விச்சேதம் யேற்பட்டுவிட்டது. அதி சப்தம் - உபரி (மேலானது) என்று அர்த்தம். ஆகையால் ஸத்யம் எனப்படும் ப்ருஹ்மமே பூமாவாகும். ஏவம் விஜாநந் அதிவாதி பவதி - (சா.2.7.15 4)-இப்படி பிராணனை (அதாவது ஜீவனை) பிருஹ்மமாக அறிபவன் அதிவாதியாகிறான்-(பிராணுத் அதிகத்வஸ்யோப நிஷத்தோ அநவகமாத்-ஸத்ய சப்தாபி தேயஸ்யேதி பூரிதம்);

அடுத்ததான பதினைறும் கண்டத்தில் ஏஷதுவா அதிவததி யஸ்ஸத்யேந அதிவததி-எவன் ஸத்யம் எனப்படும் பிருஹ்ம விஷயத்தில் அதிவாதியாகிறானே-அவனே (உண்மையில் அதி வாதம் செய்பவன்).

ஸத்யம் எனப்படும் பிருஹ்மமே மிகச் சிறந்தது-என்று அதிவாதம் செய்யும் ப்ருஹ்மோபாஸகன் பிராண உபாஸகனைக் காட்டிலும் (ஜீவன்)-மிகச் சிறந்தவன், என்று சப்தத்தாலே காட்டுகிற படியால்-பிராண பிரகரணத்திற்கு விச்சேதம் (இடை யீடு) யேற்பட்டு விடுகிறது.

மேலும் யோ வைபூமா தத் ஸுகம் நால்பே ஸுகமஸ்தி-பூமைவ ஸுகம்-(7-23-1) பெரிதாயிருப்பதே சுகமாகிறது; சிறிதில் சுகமில்லை-பெரியதே சுகம்-முதலான வாக்யங்களால் ஸத்ய சப்தத் தால் அறியப்படும் பூமா என்கிற பொருள் மிகச் சிறந்த சுகமாக விருக்கிறது. ஜீவனை துக்கத்தில் இருப்பவனாகச் சொல்லப்படுகை யால் - அவனை மிகச் சிறந்த சுகமாகச் சொல்லமுடியாது. ஆகவே பிராணனை (ஜீவனைச்) காட்டிலும் வேறானவனும்-ஸத்யம்-பூமா-என்கிற பதங்களால் காட்டப்படும் ஸ்ரீமந் நாராயணனே ஆகும்).

एतदुक्तं भवति-இதுதான் இதுவரை சொல்லப்பட்டதாகும் - எப்படி நாமத்திலிருந்து - பிராண பர்யந்தம் வரை ஒன்றுக் கொன்று அதைவிட மேலானது என்று ஸநத்குமாரர் நாரதருக்கு சொல்லிப்போக-பின்னால் பெரிதாகச் சொல்லப்படும் தத்வங்கள் முந்தினதைவிட வேறாகவிருக்கின்றன. ஆகவே இந்த பிரகரணத் திலே ஜீவனைவிட பெரியதாக அறியப்படுகிறவன் - பிராண சப்த வாச்யனான ஜீவனைவிடப் பெரியவன் - அதுதான் ஸத்யம் எனப் படும் பரமாத்மா ஆகும். ஆகவே ஸத்யம் என்கிற சப்த நிர்திஷ் டம் - एव भूमेति सत्याख्यं பரம் ब्रह्मैव भूमेत्युपदिश्यते - ஸத்யம் தான் பூம - பூமந் என்பதால் காட்டப்படுகிறது, இப்படியே விருத்திக்கார் (போதாயனர்) சொல்லுகிறார் भूमा त्वेवेति भूमा ब्रह्म - नामादि - परम्परया आत्मन ऊर्ध्वमस्योपदेशात् - ஆனால் மிகப் பெரியதான (பூமந்) - ஆகும். பூமந் பிருஹ்மமேயாகும் ஏனெனில் நாமாதி பரம்பரையாக பிராணன்வரை (அதாவது ஜீவனுக்குப் பின்பு ஜீவன்) அந்த பூமந்தே பெரியதாக ஓதப்படுகிறது.

आत्मन - இங்கே பரமாத்மா ஜீவனுக்கு மேலாகவிருப்பவன். [संप्रसादादधि - प्राणाधिक्तया आत्मन उपदेशात्-என்கிற அர்த்தம் சொல்லபடுகிறது.]

நீ கேள்விகேட்கலாம்-பிராண சப்த நிர்திஷ்டனுக ஜீவனுக்கு மேலாக-ஸத்யத்தைச் சொல்லுகிற உபதேசம்-எப்படி அடையப் படுகிறது. அதற்கு நாம் பதில் அளிப்போம் - स वा एष एवं पश्यन्नेवं मन्वान एवं विजानन्नतिवादि भवति - इति - அதே புருஷன் - மேல் காட்டப்பட்ட புருஷன் இவ்விதமாக பார்த்து - தனக்குள் ஆலோசிப்பவனுக - இவ்விதமாக அறிந்துகொண்டு சொல்கிறுன்-அவனுடைய உபாஸ்ய பொருள் ஸத்யம் என்பது (எல்லாவற்றிற் கும் மேலானது - அதனுல் அவன் அதிவாதியாகிறுன் - (எவன் ஸத்யம் எனப்படும் பிருஹ்ம விஷயத்தில் அதிவாதியாகிறுனே, அவனே-உண்மையில் அதிவாதம் செய்பவன்)-ஏஷதுவா அதிவததி யஸ்ஸத்யோ அதிவததி (சா. 2 7-16-1) இதனுல் பிராண விஷயத் தில் அதிவாதித்வம் சொல்லியபிறகு - एष तु अतिवदति यः सत्येनातिवदति - என்று ஸத்யத்தை அறிவதாலே அதிவாதியாகிறுன் - இங்கு '' து '' சப்தம் - ஏஷயித்யேதச் சப்தஸ்யபூர் வோக்த பரத் வம் வாரயந் - து சப்த:-யச்சப்த ப்ரதி ஸம்பந்திதாம் - தர்சயதி - அதாவது இன்னொருவன் (பிராண உபாஸகனைவிட வேருனவன்) அவன் சொல்கிறுன் - என்னுடைய உபாஸ்யஸத்யம் என்பது எல்லாவற்றிற்கும் மேலானது- அதனுல் அவன் அதிவாதியாகிறுன் என்பதைக் காட்டும், மேலும் பிராண பிரகரணத்திற்கு விச்சேதம்-ஸத்ய பதத்தால் ஏற்பட்டுவிட்டதையும் குறிக்கும் - பிராணனை விட ஸத்யம் பெரிது - என்கிற வாக்யத்தில் ஸத்யம் - பதம் வருவ தாலே - விச்சேதம் ஏற்பட்டுவிடுகிறது. ஸத்யம் எனப்படும் பிருஹ்மமே மிகச்சிறந்தது என்று அதிவாதம் செய்யும் பிருஹமோ பாஸகன் பிராணோ பாஸகனிற்காட்டிலும் சிறந்தவன் என்று 'து' சப்தத்தாலே காட்டுகிறது. ஆகையால் பிராண பிரகரணத்திற்கு விச்சேதம் ஏற்பட்டுவருகிறது. तु சப்தேந पूर्वस्मादतिवादिनो - व्यावर्तयति - ஸத்ய உபாஸகனை மேல்பட்டவனுக பிராண உபாஸ கனிலிருந்துப் பிரித்துக் காட்டுகிறபடியால் - பிராண பிரகரணத் திற்கு விச்சேதம் உண்டாகிறது. அதனுலேதான் - एष तु वा अतिवदति '' எவன் ஸத்யம் எனப்படும் பிருஹ்ம விஷயத்தில்

அதிவாதியாகிருனே-அவனை உண்மையில் அதிவாதம் செய்பவன்-என்று சொல்வதால் - பிராணதிவாதி இங்கு சொல்லப்படவில்லை-ஸத்ய அதிவாதியே சொல்லப்படுகிருன் எனக் கருத்து. அவன் ஸத்யம் எனப்படும் பிருஹ்மமே மிகச் சிறந்தது என்கிறபடியால் - இப்படி அதிவாதம் செய்யும் பிருஹ்மோபாஸகன் பிராண உபாஸகனைவிட மேல் எனக்காட்டப் படுகிருன். ஆகையால் ஸத்ய உபாஸகன் பிராண உபாஸகனைவிட மேலானவன் என்கிற காரணமே - மனம்-ஸங்கல்பம் -முதலானவைகளைச் சொல்லி - பின்னுல் பிராணனையும் சொன்ன அதிவாதிகளையும் விட மேலானவனு கிருன் - எல்லாவற்றிக்கும் மேலான அதிவாதியாக ஸத்யம் எனப் படும் பிருஹ்ம உபாஸகன் காட்டப்படுகிருன்-பிராணத் அதிகமித் விக்ஞாயதே.

மேலே பூர்வ பக்ஷியினுல் சொல்லப்பட்டது-எவனுக்கு பிராணன் மேலானதாகத் தெரிகிறதோ-அவனுக்கு ஸத்யம் (உண்மை) பேசுதல் உபதேசிக்கப்படுகிறது - எதனுலென்றால் அது உபாஸனத்துக்கு ஒரு அங்கமாக பிரகரணத்திலே ஓதப்படுகிறது.

(இங்கு சொல்லப்படுவது - பிராணுதி வாதியைவிட-ஸத்யாதி வாதரூப விசேஷம் சொல்லியிருப்பதே அதன் காரணம்-ஸத்யத்தினுல் அதிவாதம் செய்கிறனே - என்ற இந்த விசேஷவாதமும் பிராணனைப்பற்றியதாகும்-எங்ஙனமெனில் இவன் அக்னிஹோத்ரி யாவன். எவன் ஸத்யம் பேசுகிருனே-என்கிற வாக்யத்தில் ஸத்யம் பேசுதல் அக்னிஹோத்ரிக்கு ஒரு விசேஷம் என எவ்விதம் சொல்லப்படுகிறதோ-அதுபோல இவன் அதிவாதம் செய்கிருன்-எவன் ஸத்யத்தால் அதிவாதம் செய்கின்றனே - என்கிற விடத்தில் அதிவாதித்வம் பிராண விக்ஞானத்திலேயே ஏற்படக்கூடும். ஸத்ய வாதமோ பிராண உபாஸகனுக்கு விசேஷம் எனக்கொள்ளப்படு கிறது. அதாவது பிராண உபாஸகன் மற்றவர்களைக்காட்டிலும்- உண்மையை (ஸத்யத்தைப்) பேசவேண்டும். இதுகூட தவருகும்- ஏனெனின் சுருதியின் அர்த்தமும் விடப்படவேண்டியதாகும். எவன் ஸத்யத்தினுல் அதிவாதம் செய்கிருனே - அவன் அதிவாதி யாகிருன் இதனுல் ஸத்யத்தினுல் அதிவாதித்வம் உண்டாகிறது. இங்கே பிராண உபாஸனம் சொல்லப்படவில்லை. ஆனுல் பிராண

பிரகரணமாயிருக்கிறது. அப்போது பிரகரணத்தை ஒட்டி அர்த்தம் சொன்னால் - மூன்றாம் வேற்றுமை ஸத்யேந - ஸஹார்த்த திருதியை (கூட என்கிற பொருள் உள்ளதாக) ஆகிறது. ஸித்தாந்திக்கு ஸத்யேந - என்கிற மூன்றாம் வேற்றுமை முக்யம் - ஸத்ய என்ற பதத்தால் சொல்லப்படும் பொருளையே முக்யமாகக் கொண்டு மற்ற எல்லாவற்றையும் கடந்த வாதம் செய்கிறான் என்பதாகும்.)

**ஸ்ரீபாஷ்யம்:** — உபாஸனத்துக்கு அங்கமாதலால் - பிராண பிரகரணத்திற்கு விச்சேதமில்லை என ஆகிவிடும். இப்படிச் சொல்வதும் தவறாகும். து சபதத்தால் - பிராண உபாஸகனைவிட வேறானவன் அவன் சொல்கிறான். அவனது உபாஸ்யமான பொருள் (ஸத்யமே) எல்லாவற்றிலும் மேலானது. அதிவாதியைவிட அன்யன்; இவ்விதம் சொல்வதால் - பிராண உபாஸகன் பிராணன் தான் மேலானது என்று சொல்லும்போது அவனிடம் ஒரு நியமம் ஸத்யம் பேசுதல் - ஸத்ய வதனம் அங்க விசிஷ்ட மாத்ரமாக விருக்கிறது. एष तु वा अग्निहोत्री यः सत्यं वदति - அக்னி ஹோத்ரியாக விருப்பவன் - அவன் எவனோ - எவன் ஸத்யம் பேசுகிறானோ - அவனே யாகும் - இதனால் அக்னிஹோத்ரத்வம் ஏற்படுவதற்கு ஸத்யம் பேசுதல் என்பது இல்லை - ஸத்யம் பேசுவதால் அக்னிஹோத்ரியாகுதல் ஏற்படுவதில்லை. இதுவேறு அதுவேறு. ஆனால் ஸத்யம் பேசுதல் அக்னிஹோத்ரிக்கு விசேஷமாகிறது. மற்ற சுருதிகளிலும் அகனிஹோத்ரியைத் தவிர வேறு ஒருவனுக்கும் ஸத்யம் பேசுதல் அவசியம் என்று சொல்லபபடவில்லை. ஆகவே ஸத்யம் பேசுதல் அக்னிஹோத்ரத்திற்கு அங்கமாகச் சொல்வது மிக்க சிரமத்துடன் (கிலிஷ்டகதியாகும்-) சொல்ல வேண்டியதாகும். இங்கேயே மேலான பரபிருஹ்மமே ஸத்ய சபதத்தினால் காட்டப்படுவதால் - அவனே சொல்லப்படுகிறான் - பிராண உபாஸகனைவிட வேறான அன்யனைச் சொல்லச் சொல்கிறான். "என உபாஸ்யப் பொருள் (ஸத்யம்)தான் மிக மேலானது" என்று. ஸத்ய என்கிற சப்தம் தை ஆனு. 1ல் - सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म - இத்யாதிகளால் பரஸ்மீந் (மேலான) பிருஹ்மமே பிரயுக்தம். ஆகையால் ஸத்ய உபாஸகன் - நிஷ்டன் அதிவாதியாகிறான். முன் சொல்லப்பட்ட பிராண அதிவாதிகளைவிட அதிவாதியாகிறான். மிகச் சிறப்புற்றவனாகிறான்.

ஆகையால் अतिवादित्वं - (மேலான வேறு ஒன்று என்பது) (உபாஸனை விஷயத்தில்) பிராண உபாஸகனைவிட வேறானவன் ஸத்யம் எனப்படும் பிருஹ்ம உபாஸகன் வேறானவன் என்பது ஸ்தாபிதம்- புருஷார்த்தத்தின் மேன்மையினால் மிகச் சிறந்த சுகமாகவும் ஓதப் படுவதால் - ஏற்பட்டதாகும். இவ்விதம் அர்த்தம் சொல்வது - இயற்கையானதும். சரியானதாகும், ஆகவே இதை தள்ளிவிட முடியாது.

அதிவாதித்வம் என்கிறதற்கு அர்த்தம் - எவன் எந்தப் பொருளை உபாஸிக்கிறானோ - அது மேலான புருஷார்த்தத்தை அளிக்கும் பொருளாகவும்-மற்ற உபாஸ்ய பொருள்களைவிட மேலானதாகும். இவ்விதம் எவன் பிராண உபாஸனையினால் அதி வாதியாகிறானோ-அவன் சொல்கிறான் பிராணனாகிற ஜீவனே மற்ற உபாஸ்ய பொருள்களைவிட மேலான உபாஸ்ய வஸ்து என்று சொல்வதால் பிராண அதிவாதியாகிறான். இவன் நாமம்-வாக்கு - மனம் இத்யாதிகளில் ஆரம்பித்து-ஆசையில் முடிந்துபோகும் அதிவாதிகளைவிடச் சிறந்தவனாகிறான், பிராணனையே மேலான புருஷார்த்தமாக நினைக்கிறான். ஆகையால் எவன் ஒருவன் - இதே நியாயப்படி - அக்ஷய புருஷார்த்தம் - பிருஹ்ம உபாஸனை - ஸத்யம் எனப்படும் பிருஹ்மோபாஸனை - நிரதிசய புருஷார்த்தமாத லால்-அந்த பரபிருஹ்மமே உபாஸ்ய பொருள்களில் உத்கிருஷ்டமானது அதைவிடச் சிறந்தது வேறு ஒன்றுமில்லை - அதையே அடையவேண்டும்-என்று எவன் சொல்கிறானோ-அவனே உண்மையான அதிவாதியாகிறான் என்று சொல்லலாம். அவனிடமே ஸாக்ஷாத் அதிவாதித்வம் கூடியிருக்கிறது எனலாம். ஆகையாலே சுருதி சொல்கிறது - एष तु वा अतिवदति यः सत्येनातिवदति - (சா. 2. 7 । 6-1) எவன் ஸத்யம் எனப்படும் பிருஹ்மத்தில் அதி வாதியாகிறானோ - அவனே உண்மையில் அதிவாதம்செய்பவன். து சப்தம் எதைக் காட்டுகிறதென்றால் ஸத்யம் எனப்படும் பிருஹ்ம உபாஸகன் பிராண உபாஸகனைவிட மிகச் சிறந்தவன் என்பதை காட்டுகிறது. இது சரியாகும்.

सत्येन इति - திருதீயா (3ம் வேற்றுமை) பிரயோகம் - குறிப் பிட்ட விசேஷ லக்ஷணத்தைச் சொல்கிறது. (பாணினி-2-3-21-).

ஸத்ய பதத்தால் சொல்லப்படும் பொருளையே முக்கியமாகக் கொண்டு-மற்ற எல்லாவற்றையும் அதிவாதம் செய்கிறுன் என்ப தாகும். எவன் ஸத்யமாகிற பரபிரும்மோபாஸனை செய்கிறுனே - அதனுல் மேலான அதிவாதியாகிறுன்-என்று அர்த்தம். அதனுலே தான் நாரதர் எனப்படும் சிஷ்யர் ஸநத்குமார ஆசார்யரிடம் வேண்டுகிறுர் - सोऽहं भगवः सत्येनातिवदानि - பகவந்-பகவந்-நான்-அந்தநானே-நானும் அதிவாதியாக உமது அனுக்ரஹத்தால் ஆக வேண்டும்-(எதனுலே) ஸத்யம் எனப்படும் பிருப்மோபாஸனை யினுல்-அந்த அதிவாதிக்கு ஸத்ய உபாஸனை தர்மம்; ஒரு விசேஷம் காட்டப்படுகிறது தர்மிக்கு. அதற்கு உத்தரமாக ஆசார்யரான ஸநத்குமாரர் சொல்கிறுர் - सत्यं त्वेव विजिज्ञासितव्यम् - ஸத்யம் எனப்படும் பிருஹ்மத்தை அறியவேண்டியது - அதைக்கொண்டு அதிவாதியாக விருப்பது தகும். அதன் உபாஸனம் - மனனம் - அதில் சிரத்தை - அதிலேயே நிலைபெற்றிருத்தல் - அதையே சுக ஸ்வரூபமாக அறிதல் - அதிலே எல்லாம் அடங்கின பூமா எனப்படு வது என அறிதல் அவசியம் என்றுர்.

आत्मतः प्राण :-பிராணன் ஜீவசப்த வாச்யன்-ஆத்மாவிலிருந்து பிராணன் உண்டாகிறது. சா.2·7-26·3·இதில் பிராண சப்தத் தினுல் எதுகாட்டப்படுகிறதோ - அது ஆத்மாவிலிருநது உண்டா கிறது. இதனுல் உபதேசிக்கப்படுவது பிரகரண ஆரம்பத்தில் (நாரத பிரஸ்னத்தில்) சொல்லப்பட்ட ஆத்மா - அதுவே இந்த சுருதியிலும் ஓதப்படுகிறது- तरति शोकं आत्मवित् - என்று பிரகரண அந்தத்திலே (ஆத்மாவை அறிகிறவன் சோகத்தைக் கடக்கிறுன்.) என்று आत्मा பிராண நிர்திஷ்டாத் அன்ய: - பிராண சப்தத்தால் காட்டப்பட்ட (ஜீவனைவிட) வேறுனவன்-அதாவது பிரும்மத்தை அறிகிறவன் சோகத்தைக் கடக்கிறுன் என்பதாகும். ஆத்மாவை அறிவதில் தமது விருப்பத்தைத் தெரிவித்த நாரதருக்கு பூமா என்கிற பரமாத்மாவே உபதேசிக்கப்படுகிறுர்.

மேலே சொல்லியபடி - இந்த கேள்வியினுலே - अस्ति भगवः प्राणाद्भूयः என்கிற கேள்விக - பிராணனைவிட பெரியது உண்டா என்று நாரதர் கேட்கவில்லை-ஸநத்குமாரர் உபதேசிக்கவுமில்லை - அதுவரை பிராண பிரகரணத்திற்கு விச்சேதமில்லை-அதற்கு பதில்

இது பிராணனைவிட மேலானது என்று अस्ति वाव प्राणाद् भूयः- என்கிற பதில் இல்லாத படியாலே நாரதரும் கேட்கவில்லை - ஸநத்குமாரரும் பதில் அளிக்கவில்லை.) இதனால் அறிந்து கொள்ளவேண்டியது-'' ஆத்மந் '' என்கிற உபதேசம் பிரகரண ஆரம்பத்திலே முந்திச் சொல்லியபடி வருவது - அது பிராண உபதேசத்தோடு பர்யவஸானம் சேர்த்துச் சொல்லப்பட்டு-அதற்குப் பின்பு ஒன்றும் இல்லையென ஆகிறது: - அதோடு முடிகிறது என்று கொள்வது அயுக்தம் (தவறாகும்). வாஸ்தவத்திலே - வசனம் பிரதிவசனம் (கேள்வி பதில்) இத்யாதிகளாலே மாத்திரம் ஒரு பொருள் இன்னொன்றைவிட வேறானதாகக் காட்டப்படுவதில்லை - ஏனெனில் அந்த விஷயம் (மேலானது ஒன்று இருக்கிறது) என்பது மற்ற பிரமாணங்களாலும் - வேறு ஸாதனங்களாலும் அறியக்கூடும். இங்கே நாம் காட்டுகிறோம்.

சிஷ்யன் (நாரதர்) கேட்டிருக்கவேண்டியது (ஆனால் கேட்கவில்லை)-பிராணனைவிட - பகவானே-மேலானது உண்டோ? இதில் சிஷ்யனின் எண்ணம் யாதிருக்கக் கூடும்? நாமாதிகளிலிருந்து. ஆசைபர்யந்தம் கேள்வி பதில்களால் கிடைத்த உபாஸனை அசேதன விஷயத்தைப்பற்றி; புருஷார்த்தமாக அடைவதற்கு அந்த அந்த மேலான வஸ்துவை உபாஸிப்பது புருஷார்த்தத்தை அடையவிப்பது-முன்பு சொன்னதைவிட பிறகு பதிலில் சொல்லப்பட்ட உபாஸ்ய பொருள்மேல் எனக் காட்டப்பட்டது-இப்படி மாதிரி உபாஸனை உபதேசங்களில் - ஆசார்யரால் சொல்லப்படவில்லை - ஒவ்வொரு வஸ்துவை அறிகிறவன் அதிவாதின் என்று சொல்லவில்லை; ஆனால் ஆசார்யர் பிராண சப்த நிர்திஷ்ட (குறிக்கப்பட்ட)பிரத்யகாத்மாவை (ஜீவனைச்) சொல்லும்போது - யாதாத்மிய ஸ்வரூபத்தைச் சொல்லும் அந்த உபாஸகன் விஷயத்தில் - புருஷார்த்த மகிமையைக் அதிசயம் என்று கூறி; அதனால் ஆசார்யர் மேலும் உபதேசித்தார் - எவன் பிராணனை உபாஸிக்கிறானோ-அவன் அதிவாதியாகி சொல்கிறான் - स वा एष एवं पश्यन् एवं मन्वान एवं विजानन्नतिवादी भवति (சா. 7-15-4) இப்படி பிராணனை (ஜீவனை) ப்ருஹ்மமாக அறிகிறவன் அதிவாதியாகிறான் - பிராணோபாஸகன் தன்னால் உபாஸிக்கப்படும் ஜீவனை மிகச் சிறந்தது என்று கூறுவதால் அதிவாதியாகிறான். அதிவாதித்வம் இப்படி சொல்வதால் - யுக்தமே.

ஆகையால் நாரதர் நினைத்தார்- ஆத்ம உபதேசம் இத்துடனே ஸமாப்தம்-என்பதால் (?) அவர்மேல் ஒன்றும் கேள்வி கேட்கவில்லை ஆனால் ஆசார்யரோ தனக்குள் எண்ணியவராக - இந்த பிராணனாகிற (ஜீவனுக்கும்) மேலானது ஒன்று இருப்பதாலே - தானே வலுவில் அதை தமது சிஷ்யனாகிற நாரதருக்கு சிக்ஷித்தார் - அது தான் உபதேச முடிவாகும் - அதாவது நிரதிசய புருஷார்த்த பூதமான ஸத்ய சப்தத்தினால் குறிக்கப்படும் பரப்பிருஹ்மமே (ஜீவனாகிற பிராணனைவிட) மேலான உபாஸ்யப் பொருளாகும் - அது இதில் காட்டப்படுகிறது - एष तु वा अतिवदति - यः सत्येनातिवदति என்று ஸ்வயமாகவே உபதேசித்தார். (எவன் ஸத்யம் எனப்படும் பிருஹ்ம விஷயத்தில் அதிவாதியாகிறானே - அவனே உண்மையில் அதிவாதம் செய்பவன் - என்று ஸத்யம் எனப்படும் பிருஹ்மமே மிகச் சிறந்தது என்று அதிவாதம் செய்யும் பிரும்மோபாஸகன் பிராண உபாஸகனைவிடச் சிறந்தவன்-என்பது து சப்தத்தால் காட்டி - இதனால் பிராண பிரகரணத்திற்கு விச்சேதம் ஏற்படும் படி ஆயிற்று. அதைக் கேட்ட சிஷ்யனாகிற நாரதரும் பரமபுருஷார்த்த ரூபத்திலே பரஸ்மிந் பிருஹ்மம்தான்-அதை நன்றாக முழுவதும் அறிவதற்கு-அந்த பிருஹ்ம ஸ்வரூபம் யாது - அதை எப்படி உபாஸிப்பது ? - யாதாத்மிய ஞானத்தை அடைய ஆசை (இச்சை) கொண்டவராக - மீண்டும் நாரதர் ஸநத்குமாரரிடம் கேட்டார் - பகவன்-நானும் ஸத்யத்தினால் அதிவாதியாகலாமா ? सोऽहं भगवः सत्येनातिवदानि - என்று பிரார்த்தித்தார். பிறகு அதிவாதியின் நிலையை அடைவதான பிருஹ்ம ஸாக்ஷாத்கார நிமித்தாதிகளை ஸித்தியடைவதற்கு அதற்கு உபாய பூதமான பிருஹ்ம சாக்ஷாத்காரமாகிற உபாஸனையைப்பற்றிச் சொல்லி - सत्यं त्वेव विजिज्ञासितव्यम् - ஸத்யத்தை விசேஷமாக மநநம் செய்து-அதை அடைய இச்சைகொண்டு, அதை அடையப்படவேண்டும் - என்று போதித்தார். ஆகையால் பிருஹ்ம மநநம்-மனனம் செய்வதற்கு முன்பு ச்ரவணம் - मतिस्त्वेव विजिज्ञासितव्या - பிறகு பிருஹ்மத்தில் விஸ்வாஸம் கொண்டு - சிரத்தை விசாரிக்கப்படவேண்டும் என்று சிரத்தையைப்பற்றிச் சொல்லி - பிறகு அதிலேயே நிலைநின்று ஊன்றியிருத்தல் - அதற்குத் தகுந்த செய்கை-ஸ்ரவணம்-மநநம் - அர்த்த ஸித்தியை அடைய சிரத்தை - श्रद्धा त्वेव विजिज्ञासितव्या என்று சொல்லி- அதற்குப் பிறகு நின்ற நிலை - निष्ठा त्वेव विजिज्ञा

सितव्या - என்று உபதேசித்து - அதற்குத் தகுந்த செய்கை - இது உண்டாகும்படி அந்த ஸத்யத்தை சுக ஸ்வரூபமாக எண்ணுதல் - அதிலும் வேறு ஒன்று கேட்கவும் கருதவும் வேண்டாதபடி - तदुपायभूतं च तदुद्योगप्रयत्नरूपं कृतमपि, कृतिस्त्वेव विजिज्ञासितव्या - என்று உபதேசித்து - ஸ்ரவணத்திலிருந்து ஆரம்பித்து படிப்படியாக உபதேசம் செய்து - ஸித்தியடைவதற்கு - सत्यशब्दाभिहितस्य ब्रह्मणः सुखरूपता ज्ञातव्येति - ஸத்ய வஸ்துவை சுக ஸ்வரூபமாக அறிதல் - सुखं त्वेव विजिज्ञासितव्यम् - என்று உபதேசித்து; கடைசியிலே ஸத்ய உபாஸகன் நிரதி சய விபுல மேவ சுகத்தை-அதாவது பரம புருஷார்த்த ரூபமாக - (இங்கு சொல்லப்படுவது - எல்லாம் அடங்கினதானதும் பெரும் சுகமாகவிருப்பதுமான பூமா எனப்படுவதென அறிதல்-எல்லோருக்கும் அவசியம் '' என்று உபஸம்ஹாரம் ஸநத்குமாரர் செய்தார்;- पुरुषार्थरूपं भवतीति तस्यैव ब्रह्मणः सुखरूपस्य निरतिशय विपुलता - எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிய பெரும் சுகமாகவிருக்கும் பூமா - ज्ञातव्येति - ஸத்யத்தை இவ்விதமாக பூமா என்று அறிய வேண்டும் என்று உபதேசித்து இப்பேற்பட்ட பூமாவிற்கு மீண்டும் லக்ஷணம் சொன்னார் - निरतिशय विपुल सुखरूपस्य ब्रह्मणो लक्षणमिदमुच्यते-यत्र नान्यत् पश्यति नान्यच्छृणोति नान्यद् विजानाति स भूमा - என்று கூறினார். நிரதிசய விபுலத்வம்—நிரதிசய சுகரூபம் - கொண்ட பிருஹ்மத்தின் லக்ஷணம் - இதுதான் பூமா - எதைக் கண்டதும் மற்ற ஒன்றைக் காணானோ - எதைக்கேட்டதும் பிற ஒன்றை கேளானோ - எதை அறிந்ததும் வேறு ஒன்றை அறியானோ - அத்தகைய சுக ரூபமான பூமாவாகிற பிருஹ்மம் யாவருக்கும் அறியப்படவேண்டியதாகும்- சா. 2. 7-24-1-என்றார்.

இந்த சுருதிக்கு அர்த்தம்- அநவதிகாதிசய சுக ரூபத்தையுடைய பிருஹ்மம் - அது உபாஸகனால் அனுபவிக்கப்படும்போது - அந்த உபாஸகன் எந்த வஸ்துவையும், அதைத்தவிர - பார்ப்பதில்லை - ஏனெனில் எல்லாம் அதற்குள் அடங்கினதாகப் பார்க்கிறான் - (ஏனெனில் எல்லா வஸ்துக்களின் ஸ்வரூபம் பிருஹ்ம ஸ்வரூபத்தில் அந்தர்கதமாக-அடங்கியதாகப் பிருஹ்மத்தின் விபூதியாகவே பார்க்கிறான். ब्रह्मस्वरूपतद्धि भूम्न्यन्तर्गतत्वाच्च कृत्स्नस्य वस्तुजातस्य । இதனாலேதான் பிருஹ்மத்திற்கு சுகஸ்வரூபமும் விபுலத்வமும் கூடி

பிரமாத்மாவின் ஆதிக்யமும் பெருமைகளும் நிலைபெற்றதாகவிருக்கின்றன - अत एव ऐश्वर्यपर्याय - विभूतिगुणविशिष्ट - (சுகத்வமே விபுலத்வம்; भूमा वैपुल्य महिमा इति - பர்யாயா।-என்று சொல்லும்படி-ऐश्वर्य - மகிமைகள்-ஐஸ்வர்யாதி கூடின விசிஷ்ட பிருஹ்மம் என்று அர்த்தம்.) யத்ர நான் யதிதி வாக்யத்தினாலே, அத்வைத பக்ஷம் சொல்ல வரவில்லை - பூமா ஞானமாகிற பிருஹ்ம ஞானத்தினாலே ஸர்வ நிவிருத்தி பிருஹ்மத்தைத் தவிர வேறு ஒன்றையும் சிந்தனை செய்வதில்லை - अन्य श्रवणादेराभाव वचना-योगात्-இதனால் பூமாவாகிற பிருஹ்மம் - அதன் அனுபவம்-அதற்குத் தகுந்த செய்கை - तदन्यसर्वं तद्भावः-என்று அர்த்தம். இந்த புருஷார்த்தம் ஸ்ரவணத்தில் ஆரம்பித்து - அதிக சுகபாவத்தில் கொண்டுவிடுகிறது, உபாஸகனை என்று கூறிமுடித்தார்.)

**ஸ்ரீபாஷ்யம்:**—உபாஸகனுக்கு பூமாவைத்தவிர வேறு ஒரு அனுபாவ்யமான வஸ்து ஒன்றுமில்லை. அதுவே நிரதிசய சுகரூபம்-அதைவிட்டு நீங்கி வேறு வஸ்து ஒன்றையும் பார்ப்பதில்லை என்பதால் வேறு ஒன்றையும் வஸ்துவாக காணுகிறானில்லை என்று அர்த்தம். அதனால் அவனுக்கு துக்கமில்லை. அவனுக்கு எல்லா வஸ்துக்களின் சுக அனுபவம் ஏற்படுகிறது. அனுபாவ்யமான सर्वस्य சுகரூபத்தினால் துக்கத்தை அடைகிறதில்லை. எல்லாவற்றையும் பூமாவுக்கு அனுகூலமாகவே பார்க்கிறான் என்று அர்த்தம் - तदेव हि सुखम्—यत् अनुभूय मानं पुरुषानुकूलं भवति - அதனால் பரமாத்மா விபூதிக்கு ஜகத் ஐஸ்வர்ய விசிஷ்டம் என்று அர்த்தம் கொண்டு - அதுவே பூமசப்தார்த்தத்தின் அபிப்ராயமாக இருக்கிறது - என்பதாம்.

மேலும் கேள்வி கேட்கப்படும் - இந்த உலகத்தை பிருஹ்மத்தைவிட்டுத் தனியாக விருப்பதாக - வேறு ஒன்றாக - அன்யதாவாக-அனுபவிக்கப்படும்போது-இந்த உலகம் (ஜகத்) துக்க ரூபமாகவும் - பரிமித (அளவுபட்ட) சுகரூபமாகவும் விருக்கிற ஜகத் - அத்தகைய உலகம் எவ்விதம் மேலான சுகரூபத்தை அடையக்கூடும்?- ஏனெனில் இந்த ஜகத்தே பிருஹ்மத்தை தனது ஆத்மாவாக உடையதாலே-அதுவே சரீரமாகவும் பிருஹ்மத்தின் விபூதியாகவுமிருப்பதாலே - அந்த ஜகத் எவ்விதம் அனுபவிப்பதற்கு சுக

ரூபத்தை அடையக்கூடும்? அதற்கு நாம் பதில் அளிக்கிறோம். இந்த ஜீவர்கள் கர்ம வஸ்யர்கள் அதனுல் இந்த ஜகத் அனுபவிக்கப்படும் போது பிருஹ்மத்தைவிட்டு வ்யதிரிக்தமாக - வேருகவிருப்பதாக (அக்ஞானத்திலுலே - கர்ம பலன்களாலே) அனுபவிக்கப்படுகிறது. அதனுல் ஸம்சாரம் துக்கமயமாகவும் பரிமித சுகத்துடன் (அளவுடன்) கூடியதாக அறியப்படுகிறது. ஆகையால் பிரஹ்மத்தைத் தவிர அந்யதா பரிமித சுகத்தையும் - துக்கத்தையும் அளிப்பதாகவிருக்கிறது. இது கர்ம நிமித்தமாக- அதாவது கர்மரூப அவித்யையினுல் ஏற்படுகிறது. இவைகளிலிருந்து விடுபட்ட முக்தனுக்கு இந்த அனுபவத்திற்குமாருக - அந்த சுத்தமான பூமா ஞானத்தினுல் - ஜகத் விபூதி குண விசிஷ்ட பிருஹ்மானுபவத்தை அந்தர்கதமாகக்கொண்ட நிரதிசய சுகத்தை அளிப்பதாலே - பூமாவே - உபாஸகனுக்கு, சுகரூபமாக இருக்கிறது. அதனுலே உலகமே சுகரூபமாக ஆகிறது.

உதாரணமாக பித்தத்தினுல் தாக்கப்பட்ட ஒருவனுக்கு-பால் புளிப்பை - பித்தத்திற்குயேற்ப - குறைவாகவோ அல்லது அதிகமாகவோ அளிப்பதாக விருக்கிறதல்லவா? அதே பால் ருசி பித்த வியாதியில்லாத சரியான ருசியுள்ளவனுக்கு அதிக சுகத்தையும் ஆனந்தத்தையும் அளிப்பதாக இருக்கிறது. இன்னெரு உதாரணம்-ஒரு ராஜகுமாரன் எந்த வஸ்துவினுல் அவனுடைய பிதா ஆனந்த சுகத்தை அடைகிருரோ-அதை தன் தகப்பன் பார்ப்பது போல பாராமல்-வேறிடத்தில் மனம் கொண்டவனுகவிருப்பதால்- அந்த வஸ்து அந்த ராஜகுமாரனுக்கு திருப்தி சுகம் அளிக்காதோ- ஆனுல் அவ்விதமின்றி தன் தகப்பனைப்போல அதே கருத்துடன் அந்த வஸ்துவில் இருந்தால், அந்த வஸ்து அவனுக்கும் ஆனந்தத்தை அளிப்பதாக விருக்கிறது. அதேபடி இங்கேயும் - நிரதிசய ஆனந்த ஸ்வரூபமுள்ள பிருஹ்மம்-அத்தகைய பிருஹ்மத்துக்கு அநவதி காதிசய அஸங்க்யேய (அளவிட முடியாதபடி) கல்யாண குணங்களுடன் கூடிய பரப்பிருஹ்மம்; அந்த பிருஹ்மத்திற்கு இந்த ஜகத் லீலோபகரணமாக - விளையாடுமிடமாக விருக்கிறது - அதனுலே பிருஹ்மத்திற்கு ஆனந்தத்தை அளிப்பதாக விருக்கிறது. लीलोपकरणं- ; அந்த ஜகத் பிருஹ்மத்திற்கு சரீரமாகவும் பிருஹ்மம் அதற்கு ஆத்மாவாக விருப்பதாலே तदात्मकं-च இப்படி அனுஸந்

திக்கிற பிருஹ்மத்துக்கு ஜகத்நிரதிசய ப்ரீதியை உண்டு பண்ணுவதாவிருக்கிறது. (இரண்டு உதாரணங்களால் காட்டப்படுகிறது - பால் உதாரணம்; அரசகுமாரனுக்கு பிதாவினுடைய லோபகரணம். அதேபடி பூமா உபாஸகனுக்கு பிருஹ்மத்தைப் போல நிரதிசயசுகத்தை ஜகத் உண்டாக்குகிறது.) ஆகையால் ஜகத் ஐஸ்வர்ய (விபூதி) விசிஷ்டமானதும் - அநவதிகாதிசய சுகரூபமான ப்ருஹ்மானுபவம் அந்த பூமா உபாஸகனுக்கு யேற்படுவதால் அதே காரணமாக - அவன் பிருஹ்மத்தைத் தவிர வேறு ஒன்றையும் பார்ப்பதில்லை - இருப்பதாக - வஸ்துவாக பார்ப்பதில்லை. तत् अन्यत् किमपि न पश्यति - அவன் அதனால் சுகத்தைத் தவிர - துக்கத்தையும் दुःखं च न पश्यति - அடைகிறதில்லை (பார்ப்பதில்லை). (चायन्तिरं कण्ठोक्त). ஜகத் ஐஸ்வர்ய விசிஷ்டமிதி - च भूमशब्दार्थे அபிப்ராயம் என்பதாம்). நாரதர் இதனால் தமஸ்ஸைக் கடந்து சுகத்தையடைந்தார்.

இதே கருத்தைத் தான் வாக்யசேஷமும் விளக்குகிறது. स वा एव एवं पश्यन् एवं मन्वान एवं विजानन् आत्मरतिरात्मक्रीड आत्ममिथुन आत्मानन्दः। सः स्वराड भवति: तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति। अथ येऽन्यथाऽतो विदुरन्यः राजानः ते क्षय्यलो का भवन्ति। तेषां सर्वेषु लोके ष्वकाम चारो भवति। इति— சா.2.7.25.2. எவன் இவ்விதமாகப் பார்க்கிறானோ - இவ்விதமாக பூமா என்று நினைக்கிறானோ - (ஸர்வம் பிரும்மாத்மகமாகப் பார்க்கிறானோ - இவ்விதமாக அறிகிறானோ - அவனே ஆத்ம ரதியாகிறான். ஆத்ம க்ரீடை செய்கிறான் எப்போதும் ஆத்மாவுடன் சேர்ந்தவனாக (ஆத்ம மிதுனத்தை) யடைகிறான் - பிரும்மத்துடன் சேர்ந்தவனாகிறான் என்கிற கருத்து. அவன் ஸ்வதந்திரனாகிறபடியால் - ஆனால் பகவானுக்கு அனுகூலனாகவிருந்தாலும், அவனே ஸ்வராட்; அவன் தன் இஷ்டப்படி எங்கு வேண்டுமானாலும் சஞ்சரிக்கிறான். எல்லாப் போகங்களையும் அனுபவிக்கிறான். ஸ்வராட் என்பதால் கர்ம விடுதலையாகிறான். அகர்மவஸ்யனாகிறான். இவனுக்கு अन्यः (வேறொருவன்) பகவானைத் தவிர — राजा (அரசன்) नः - இல்லை. இதனால் ஸ்வராட் - அகர்மவஸ்யன். அப்படியே - अन्य राजानः - கர்மவஸ்யா என்று அர்த்தம். तथा அப்படியே சா.8.7.26. 2ல் ந

**यत्र पश्यो मृत्युं पश्यति, न रोगं नोत दुःखताम् -। सर्वं ह पश्य! पश्यति सर्वमाप्नोति सर्वशः - इति च** - எவன் (அந்த பூமாவாகிற பரமாத் மாவைப் பார்க்கிறுனே) - அவன் ம்ருத்யுவைப் பார்ப்பதில்லே. ரோகத்தை யடைவதில்லே. இவ்வுலகத்தின் சுகதுக்கங்களே அனுபவிப்பதில்லே, வாஸ்தவத்திலே - பார்க்கிறவன் எல்லாவற் றையும் பார்க்கிறவனுக - எல்லா ஆசைகளும் நிறைவேறியவனுக, **सर्वशः** - ஆக ஆகிறுன், **निरतिशय सुख** ரூபத்வம் **च** பிருஹ்மண:- சா.மீ-1-1-13ல் **आनन्दोमयोऽभ्यासात्** — தைத், ஆனந்தவல்லியில் பரமபுருஷனே ஆனந்த மயனுக ஓதப்படுகிறுன் - அப்யாஸாத் தேயே ''தம்'' என்று அவனுடைய ஆனந்தத்தை மேன் மேலும் கூட்டிப் பெருக்கிச் சொல்லியபடியாலே. பல காரணங்களால் பிருஹ்மமே ஆனந்த மயனுகப் பாடப்படுபலன். என்பதாயிற்று. ஏனெனில் ஆனந்தத்தின் வெவ்வேறு தாங்கள் திரும்பிப் திரும்பச் சொல்லி விட்டு - கடைசியில் ஆனந்த மயனில் முடித்து - அதுவே பிருஹ்மம் என்று ஓதினது.

இதனுவ் தேறுவது - பிராண சப்த நிர்திஷ்டனுன பிரத்ய காத்மா (ஜீவன்)- அவனேக்காட்டிலும் மேலான பரமாத்மா - அந்த பிருஹ்மமே ஸத்ய சப்தத்தினுல் காட்டப்பட்டு-அதுவே பரபிரும்ம மாகிற பூமா-பூமா-என்கிற மிகப்பெரியதாகவும் சுகஸ்வரூபமாக வுள்ளது-குணங்களாலும் - அளவினுலும்-மகிமைகளினுலும்-விபூதி களாலும் அளவுகடந்தது என்று. பூமா பரபிருஹ்மம் - என்று ஸம்பிரஸாதனேக் காட்டிலும் பெரியவன் என உபதேசிக்கப் பட்டது. மேலான பரமபுருஷன் ஆகும்.

## ஸூத்ரம் 8 धर्मोपपत्तेश्च (1—3—8)

### தர்மோபபத்தேஸ்ச :-

தர்மோபபத்தேஸ்ச பூமாவுக்குச் சொல்லப்படும் தன்மைகள் (தர்மங்கள்) பொருந்த வெண்டுகையாலே - பூமா பரமாத்மாவே ஆகும்.

எந்த தர்மங்கள் பரமாத்மாவுக்கே உரியவையோ - சுருதி களால் ஓதப்பட்டவையோ - அவை பரமாத்மா விஷயத்திலே தகும். (இங்கே சொல்லப்படும் தர்மங்கள் - அம்ருதத்வம் - எது

அல்பமோ - அது அநித்யம்; சிஷ்யனாகிற நாரதர் ஸநத் குமாரரை வினவினார் - பகவந பூமாந் எதில் பிரதிஷ்டிதம்? (ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது) தனது சொந்த மகிமையினாலோ - அல்லது வேறு ஒன்றின் ஆதாரபலத்தாலோ? அவன் கீழேயு மிருக்கிறான் - மேலேயும் கிளம்புகிறான் - அவன் முன்னும் பின்னு மாக விருக்கிறான் - அவன் தெற்கிலும் வடக்கிலும் இருக்கிறான். வாஸ்தவத்திலே அவன் 'இந்த எல்லாப் பொருள்களாகவு மிருக்கிறான். பிறகு - இந்தக் காரணத்தினால் இந்த உபதேசம் அஹங்கார நினைப்பினால் யேற்படுகிறது-''நான் வாஸ்தவமாகவே கீழேயிருக்கிறேன் - நானே மேலேயுமிருப்பவன். நானே இவை யெல்லாம். பிறகு - இந்தக் காரணத்தினாலே - பூமஉபதேசம் பரமாத்மாவாகச் சொல்லப்படுகிறது. பரமாத்மாவே இவை எல்லாம் ஆகவிருக்கிறார். அந்த உபாஸகனுக்கு - அவன் பூமாவாக எல்லாவற்றையும் பார்க்கிறவனாக, நினைக்கிறவனாக, அறிகிறவனாக - விருக்கிறானே - அவனுக்கு பிராணன் ஆத்மாவி லிருந்து வெளிக்கிளம்புகிறது - ஆகாசம் ஆத்மாவிலிருந்து வருகிறது. இவை எல்லாம் பரமாத்மாவிலிருந்து வெளி வருகிறது - என்கிற உபதேசமிருப்பதால்.

स्वे महिम्नि- தனது சொந்த மகிமையினாலே பெருமையாலே - நிலைநிற்கிறது - என்றும் வேறு ஒன்றையும் ஆதாரமாய் உடைத்த தாயிராமையும்; स एव अधस्तात् - स एवेदं सर्वं इति सर्वात्मकम् - அதுவே கீழும் இருக்கிறது - அதுவே இது எல்லாம் - என்று ஸர் வாத்மாவாக விருக்கையும் - आत्मतः प्राणः ஆத்மாவிலிருந்து பிராணன் உண்டாயிற்று; என்று தொடங்கி - ஸர்வ காரணமா யிருக்கையும் இந்த பூமாவுக்குச் சொல்லப்படுகின்றன. ஸர்வத் துக்கும் உற்பத்தி - ஸ்திதி - இத்யாதி தர்மங்கள் பரமாத்மா வுக்கே உரியன.

மேலும் பரமாத்மாவே எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக - अहमेवाधस्तात्- நானே கீழேயிருக்கிறேன் - மேலேயிருக்கிறேன் (சா. 2' 7.-65-1); அதில் பூமவிசிஷ்ட பிருஹ்மம் (மகிமையுடன் கூடிய பிருஹ்மம்) அஹங்கார தத்வத்தின் கீழே உபாஸனை உபதேசிக்கப்பட்டிருக்கிறது - अथातोऽहङ्कारादेशः- உபக்ரமத்தில்

அஹங்காரம் உபதேசமிருக்கிறது. இங்கு அஹம் என்பதற்கு அந்தர்யாமி அர்த்தம் - பிரத்யகாத்மாவைக்குறிப்பினும் பரமாத்மா அந்தர்யாமி யாதலால் ஆத்மா என்று சொல்வது யுத்தம். ஆகையால் பிரத்யகாத்மாவை சரீரமாகவுடைய பரமாத்மாவரை பர்யவஸாநம் அஹம் சப்தத்திற்கு - இவ்விதம் பரமாத்மாவரை சொல்வதால் - ப்ரத்யகாத்ம சரீரத்வார - பரமாத்மா அனுஸத்திக்கப்பட வேண்டியது - இந்த அர்த்தத்தை अहं ग्रहोपदेशः– பரமாத்மா ஆத்மாவாகவும் - ஸர்வ சரீரதயா ஸர்வாத்மத்வாத் - விருப்பதால் ஜீவனுமாகிற நானே - அதாவது பரமாத்மாவே (அனுப்ரவேசத்தினல்) என்று आत्मा பரமாத்மா வாகிறது, ஆகையாலே अथात आत्मादेशः ஆத்மாவின் ஆதேசம் இத்யாதிகளால் आत्मैवेदं सर्वं- இந்த எல்லாம் பரமாத்மா என்று மூடிவிலே கூறியிருக்கிறது.

இந்த பூமந்-ஸர்வாத்மநி-என்று சொல்லுவதற்காக - பிரத்ய காத்மாவையும் (ஜீவனையும்) தாங்குகிறவனுக - आत्मभूतानि - பர மாத்மா எல்லாவற்றிற்கும் உற்பத்தி காரணம் என்று சொல்லப் படுகிறது. எல்லாவற்றையும் சரீரமாகவுடைய பரமாத்மாவே எல்லாவற்றையும் தாங்குகிறுன். ஜீவன் உள்பட तस्य ह वा एतस्यैवं पश्यत एवं मन्वानस्यैव विजानत आत्मतः प्राण आत्मत आकाशः इत्यादिना பரமாத்மாவே ஆத்மா-இதெல்லாம் பரமாத்மாவே - இதை விளக்குவதற்க்காக - அந்த புருஷனுக்கு - அதாவது எவன் இவை எல்லாவற்றையும் இவ்விதமாக பார்க்கிருனே - நினைக்கி ருனே - அறிகிருனே - அவனுக்கு இந்த பிராணன் ஆத்மாவி லிருந்து (பரமாத்மாவிலிருந்து) உண்டாயிற்று ; ஆகாசம் ஸம்பூத: (உண்டாயிற்று) இத்யாதி (சா. 2-7-26-1) இதனலே ஒவ்வொரு வஸ்துவின் உற்பத்தி பரமாத்மாவிடமிருந்து ஏற்பட்டது. அதே பரமாத்மா ஜீவனைச் சரீரமாகக் கொண்டு அவனுக்கும் ஆத்மா வாகவிருக்கிருன்.

உபாஸகனுக்கு பரமாத்மா அந்தர்யாமியாக விருப்பதாலே - உள்ளிருந்து अवस्थानात् - மேலான நியமனம் செய்வதாலே - பர மாத்மாவே எல்லாவற்றிற்கும் உற்பத்தி காரணமாகிருர். ஆகை யால் பரமாத்மா பிரத்யகாத்மாவைச் சரீரமாகவுடையதாலே -

பேற்பட்டுள்ள **भहं भहोपासनं कर्तव्यम् - अहमिती बुद्धया भहं ब्रह्म-** பிரத்யகாத்ம சரீரகத்வஞான பிரதிஷ்டார்த்தம் इति பிருஹ்மத்தை கிருஹிக்கவேண்டும் என்கிற உபாஸனை - யாவராலும் செய்யப் படவேண்டியதாகும். ஆகவே பூம விசிஷ்ட (மகிமை - பெரியது - இத்துடன் கூடிய) பரமாத்மாவே-பூமா சப்தார்த்தம் என்பது ஸித்தம்-பூமா-பரமாத்மாவே ஆகும்.

## अक्षराधिकरणम्- 1-3-3

### अक्षरमम्बरान्तधृतेः-1-3-9

*அக்ஷரமம் பராந்த த்ருதே : (1-3-9)*

அம்பராந்த த்ருதே: ஆகாசத்துக்கும் காரணமான மூல பிரகிருதியைத் தரித்து நிற்பதாலே - அக்ஷரம் - அக்ஷரம் எனப்படு வது பரமாத்மாவே.

சென்ற அதிகரணத்தில் பூமா-(பரமாத்மா) தன்மகிமையினால் நிலை நிற்பதாக ஓதப்பட்டான். அதற்கு பரமாத்மாவின் தன்மை கள் ஓதப்பட்டன. தன் பெருமையினாலே - என்பதாலே இதே பெருமைகள் பரமாத்மாவைவிட வேறான சிதசித்வஸ்துக்களுக்கும் உண்டு என்கிற வாதம் இந்த அதிகரணத்தில் தள்ளப்படுகிறது - அக்ஷரத்திற்கும் தன் மகிமை ஸித்திக்கிறது - ஸர்வ காரிய ஆதார மான ஆகாசத்துக்கும் ஆதாரமாக அக்ஷரத்தைச் சொல்லி - அந்த அக்ஷரத்திற்கு ஆதாரமாக வேறு ஒரு ஆதாரம் சொல்லாமை யாலே அக்ஷரமும் தன் மகிமையினாலே நிலை நிற்கிறது என்பது ஸ்தாபிதம்.

பிருஹ.வாஜஸே நயர்களால் ஓதப்பட்ட கார்க்கி பிரஸ்னத் தில் இவ்விதம் சொல்லப்படுகிறது-**स होवा चैतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति अस्थूलमनणु अह्र स्वमदीर्घमलोहित मस्नेहमच्छायम् इति**-(பிரு-2-5-8-7) யாக்ஞ்ய வல்கியர் கார்க்கியின் பிரஸ்னத் திற்குப்பதில் அளிக்கையில் -'சொன்னார்-' இதையே அக்ஷரமென்று பிருஹ்ம ஞானிகள் கூறுகின்றனர்-அது பருமனில்லாதது-அணுவல் லாதது - குட்டை நெட்டையாக இல்லாதது - சிவப்பில்லாதது -

பசையில்லாதது - நிழலற்றது - என்கிற ஒருவாக்யம் காணப்படு கிறது. இதில் சம்சயம் இந்த அக்ஷரம் பிரதானத்தைக் குறிக்குமா? அல்லது ஜீவனு-அல்லது பரமாத்மாவா-(எது தன் சொந்தமகிமை யினுல் ஸ்தாபிதமாகும் - இவைகளும் ஸ்தாபிதமாக விருக்கின்ற னவா-என சந்தேகம்) எது சரியாகும் ?

பிரதானம் என்று கூறலாம் அக்ஷரத்திற்கு - எவ்விதம் ? अक्षरात्परतः परः- அக்ஷரத்தைக் காட்டிலும் மேலானதிற்கும் மேலானவன் - (மூலபிரகிருதியைக் காட்டிலும் மேலான புருஷன் (ஸமஷ்டி புருஷன் சதுரானனன் பிரும்மா - அவனுக்கு மேலான பரமாத்மா) இங்கு அக்ஷரம் என்கிற சப்தம் மூலபிரகிருதியைக் குறிக்கிறது. பிரயோக தர்சனமிருக்கிறது. அஸ்தூலம் இத்யாதி குணங்களும் பிரதானத்திற்கு ஓட்டும். பருமனுயிருக்கை-அணுவா யிருக்கை நிஷேதிக்கப்படுகின்றன. பிரதானத்தின் கார்யங்களா கிற பொருள்களில் பருமனுயிருக்கை - அணுவாயிருக்கை முதலிய வற்றை நாம் பார்ப்பதால் - இவை பிரதானத்திலும் உண்டோ - என்கிற ஐயம் எழும் (பூம சப்தத்திற்கு எதிர்தட்டு).

यया तदक्षरमधिगम्यते-(மு.2-11-1-5) பரவித்யை- அதுமேலான தாகும் - எதனுல் அக்ஷரம் அறியப்பட்டதாகுமோ - இங்கேயும் இதுமாதிரி இன்னும் சிலவற்றிலும் பரஸ்மிந் பிருஹ்மமே அக்ஷர சப்தத்தால் காணப்படுகிறது என்று சொல்வோமானுல் ந - அவ் விதமில்லை என்போம் என ஆக்ஷேபிக்கிறுன் - (அத்ருஸ்யத்வாதி கரணத்தில் பரமாத்மா பரமாக நாம் अक्षरात् परतः परः என்பதால் சொன்னேம். இங்கே अक्षर சப்தம் ஜீவனையும் - பிரதானத்தையும் குறிக்கும் என்கிறுன்-பிரதானம் பிரத்யக்ஷத்தினுலும் அனுமானத் தினுலும் ஸித்தம்-அதைவிட மேலான புருஷன் ஜீவன்.) (சங்கரர்- அக்ஷரம் பரமாத்மாவா அல்லது வர்ணமா (ஓங்காரமா) என்று சம்சயம் சொல்கிறுர். ஆனுல் ராமானுஜருக்கு - பிரதானமா ஜீவனு என்று ஆராயப்புகுந்து-பூர்வபக்ஷி ஆகாசம் என்று சொல்லி-மூல பிரகிருதியைச் சொல்லி, அதற்கும் ஆதாரமாக பரமாத்மாவைச் சொல்லப்போகிறுர் - பரமாத்மாவைச் சொன்னுலும் - இங்கு இரண்டு வஸ்துக்கள் சொல்லப்பட்டதாலே - பிரதானம் என்பது அனுமான ஸித்தம். ஆனுல் பிருஹ்மம் சாஸ்திரைக - சாஸ்திரம்

ஒன்றினலே அறியத்தக்கது-ஆகவே இங்கே அக்ஷரம் மூல பிரகிருதி யாகும் - பிரதானமே - (சுருதியைத்தவிர) மற்றவைகளால் (அனுமானம்) அறியப்படும். இன்னொரு காரணமும் சொல்லப்படுகிறது.

வாக்ய பிரசரணத்திலே-பிரு 2-3 8-6 यदूर्ध्वं गार्गि दिवो यदवाक् पृथिव्याः यदन्तरा द्यावापृथिवी इमे यद्भूतं च भवच्च भविष्यच्चेत्याचक्षते. आकाश एव तदोतं प्रोतं च - அந்த அக்ஷரம்-இவ்விதம் சொல்லப்படுகிறது - எல்லா வஸ்துக்களுக்கும் எல்லாக்காலங்களிலும் (இறந்த நிகழ் - வருங்காலங்களிலும் காரணமாகி - அவைகளின் ஆதாரமாக விருக்கிறது - மேல் சொல்லிய சுருதிப்படி- (அதாவது) எதில் - ஓ கார்க்கி - தேவலோகத்திற்கு (த்யு) மேலாகவும் - பூமிக்கு கீழேயும் - அந்தரிக்ஷத்திலும் மூன்று காலங்களிலும் - எல்லாப் பொருள்களும் ஆகாசத்தில் கோர்க்கப்பட்டு - குறுக்கும் நெடுக்குமாக கோர்க்கப்பட்டு ஆகாசத்தையே ஆதாரமாக நம்பியிருக்கின்றன (ஆஸ்ரயித்திருக்கின்றன); த்ரை காலங்களில் ஏற்படும் விகாரங்கள் ஆகிற காரியங்கள் - இவைகளுக்கு ஆதாரமாக ஆகாசம் நிர்திஷ்டம்-(காட்டப்படுகிறது); இதே தீர்மானம் சுருதியைத் தவிர இதர பிரமாணத்தினலும் அறியப்படும் பிரதானமாக ஆகிறது. ஆகவே அக்ஷரம் பிரதானமாகும் எல்லாவிகாரங்களும் ஆகாயத்திலே அடங்கியுள்ளன ஆகவே இங்கே ஆகாச சப்தம் பூத சூக்ஷ்மம் என்பதைக்காட்டுகிறது - பிறகு - அதற்கும் ஆதாரபூதமாக விளங்குவது ஏதோ - कस्मिन्नु खल्वाकाश ओतश्च प्रोतश्च - इति - अन्तरवदाधारतया निर्दिश्यमानमक्षरं न प्रधानं भवितुमर्हति - பிரதானமில்லை - பரமாத்மா என்பதாம்.

(விளக்கம் யாக்ஞயவல்கியரை கார்க்கி இரண்டு கேள்விகள் கேட்டாள்) -

வானுலகுக்கு மேலும் - பூமிக்கு கீழுமுள்ளவைகளோடு சேர்ந்த காரியங்களனைத்தும் - முன்காலம் நிகழ் - வருங்காலம் என்ற அந்தந்த காலத்திலே மட்டுமிருக்கும் வஸ்துக்களும் எல்லாம் எதை ஆதாரமாகக் கொண்டது? எது காரணமோ? அது யாது?

**யாக்:-** ஆகாசம் எனப்படுவது (அவ்யாகிருதம் மூலப்ர கிருதி)

**கார்க்கி:-** இரண்டாம் கேள்வி - என்று அறிவித்து ஸர்வத் துக்கும் ஆதாரமாகச் சொல்லப்பெற்ற ஆகாசத்திற்கும் ஆதாரம் எது?

**யாக்:-** இதனைத்தான் அக்ஷரம் என்கிறார்கள். இது பெரிதுமன்று - சிறிதுமன்று - குட்டை நெட்டையில்லை - நிறம் - ஸ்நேஹம், நிழல் இருள் என்றாற்போல் உள்ளவையில்லாததும் அல்லாததுமானது - வாயு ஆகாசம் கண் காது போன்றவைகளுக் குள்ள வஸ்துவைப்போல அன்றியிருப்பது - உள்ளே மட்டுமிருப்ப தும் வெளியில் மாத்திரமிருப்பதுமன்று. இதனை உண்பவன் எவனு மில்லை. இதனுடைய சங்கல்பத்தினால் உலகம் செயல்படுகிறது. சூரியன் சந்திரன் ஸ்வர்க்கம் - பூமி ஆகியவை தரிக்கப்பட்டிருக் கின்றன. இதன் ஆக்ஞையால் நதிகள் மலையினின்று பிரவர்த்திக் கின்றன. இதனைத் திருப்திபண்ணவே யாகம் செய்வதும் சிரார்த் தம் செய்வதும் - இவை எல்லாம் இதன் சங்கல்பத்தினால் ஆகும். இதற்குமேல்பட்ட பொருளோ - அறியும் சக்தியோ இல்லை - இதன் தன்னிலே ஆகாசம் விட்டு நகராதபடி - பிரியாதபடி - பிணைக்கப் பட்டிருக்கிறது. புனைதலுற்றது. இதனால் திருப்தி யடைந்த கார்க்கி யாகஞ்யவல்கியரை வணங்கினாள், மற்றவர்களும் வணங்கினார்கள்.

**ஸ்ரீபாஷ்யம்:-** ஆகவே ஆகாசமே எல்லாவற்றிற்கும் ஆதாரம்; ஆகாசத்திற்கும் எது ஆதாரம்? இதற்கு அக்ஷரம் என்று பதில் கூறப்படுகிறது. அக்ஷரமே எல்லாக் காரியங்களாகிற விகாரங்களுக்குக் காரணம்; இது சுருதியை நீக்கி - அனுமானத் தினால் அறியப்படுகிறது, அதாவது பிரதானம் - அக்ஷரம் பிரதானமே - பூர்வபக்ஷம். अती अक्षरं प्रधानम् ।

இதற்கு நாம் பதில் அளிப்போம் - அக்ஷரம் இங்கு பரமாத்மாவையே குறிக்கும் - இங்கே கேள்வி அம்பராத் பர : எது? அம்பரமென்றால் ஆகாசம் - அதாவது பிரகிருதி - (சூத் 1-3-9. அம்பராந்தத் த்ருதே: ஆகாசத்திற்கும் காரணமான மூலபிரகிருதியைத் தரித்திருப்பதாலே அக்ஷரம் பரமாத்மாவே); அம்பரம் என்பது ஆகாசம் அதற்குமேல் உள்ளது மூலபிரகிருதி-அக்ஷரம் எல்லாவற்றையும் (மூல பிரகிருதியையும்) தரிப்பதாலே - ஆகாசத்துக்கு அப்பாலுள்ள மூல பிரகிருதியாகும். கேள்வியில் ஆகாசம் எதில் கோர்க்கப்பட்டுள்ளது - இங்கே ஆகாசம் பூதஆகாசமில்லை-இங்கே மூல பிரகிருதியாகும். ஆகவே அக்ஷரம் மூலபிரகிருதியையும் தாங்குகிறதாகச் சொல்லப்படுகிறது - அதனால் அக்ஷரம் மூல பிரகிருதி அல்ல. பூர்வபக்ஷியின் கருத்து இங்கே மூலபிரகிருதி அல்ல என்பதற்கு - அக்ஷரமே தன் மகிமையினால் தன்னைத் தாங்கிக் கொள்கிறபடியால் மூல பிரகிருதியாகிற அக்ஷரமே தனக்கு ஆதாரமாகவிருக்கிறது - எனக்கருத்து. ஆகாசத்துக்கு (அம்பரத்துக்கு) ஆதாரமாக விருப்பதும் - ஆகாசத்திற்குக் காரணமாவதும் - தன் சொந்தமகிமையினால் ஸிளங்குவதுமான மூல பிரகிருதி என்கிறான் பூர்வபக்ஷி. பூதஆகாசம் அழிந்துபோனாலும் - மூல பிரகிருதி அநாதியானபடியால் நித்யம் எனலாம். (அதாவது மற்ற வஸ்துக்களைவிட அதிகநாள் இருப்பது). ஆகவே அக்ஷரம் பிரதானமாகும்.

**ஸ்ரீபாஷ்யம்:**—இவ்விதம் சொல்லப்படுமானால் நாம் பதில் அளிப்போம் अक्षरम् अम्बरान्तधृतेः- அக்ஷரம் பரபிரும்மமே-எப்படி? (பிரதானமில்லை) எப்படி - அம்பராந்தத்ருதே ! - அம்பரஸ்ய (ஆகாசத்துக்கு) अन्तः முடிவான - அவ்யாகிருத அம்பராந்த :- அதைத் தாங்குவதானது - அதைப் பற்றிய உபதேசமிருப்பதாலே - இங்கே இதன் அர்த்தம் - किमन्तु [illegible] [illegible]

प्रोतश्च- இந்த ஆகாசம் எதில் புனைந்து இருக்கிறது - இங்கே ஆகாச சப்தத்தினுல் வாயுசஞ்சரிக்கும் அம்பரமில்லை (ஆகாச மில்லை பூதாகாசமில்லை ; அதைத்தாங்கும் - அதற்கும் முடிவான அவ்யாகிருதம் (மூலபிரகிருதி) அந்த அவ்யாகிருதத்திற்கும் ஆதாரமாக விருப்பதான உச்யமான - சொல்லப்படுவதான அக்ஷரம் - இந்த அக்ஷரம் அவ்யாகிருதமாக ஆகாது. எப்படி ஆகாச சப்தம் வாயு சஞ்சரிக்கும் பூதஆகாசமில்லையோ - அது எப்படி ஸித்திக்கும் என்பதற்கு பதில் அளிக்கிறோம். यदूर्ध्वं गार्गि दिवो यदवाक् पृथिव्याः यदन्तरा। द्यावापृथिवी इमे, यद्भूतं च भवच्च भविष्यच्चेत्याचक्षते, आकाश एव तदोतं च प्रोतं च (என்று சொல்வதால்) - பிரு. 8. 5-8-6 கார்க்கி - தேவலோகத்திற்கு மேலும் – பூமிக்கு கீழும் - தேவலோக பூமிக்கு இடையிலிருக்கும் எங்கும், முக்காலங்களிலுமுள்ள எல்லாப் பொருள்களும் இந்த ஆகாசத்தையே ஆஸ்ரயத்திருக்கின்றன - என்று கூறப்படுவதாலே - பிரஸித்த ஆகாசமன்று - அதற்குக் காரணமான பிரதானமே இங்கு ஆகாசசப்தத்தால் கூறப்படுகிறது. விகாரப் பொருள்கள் எல்லாம் இந்த ஆகாசத்தை ஆஸ்ரயித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆகாசமே ஒரு விகார்யமான கார்யம். அது அழியக்கூடியது - நித்யம் என்கிறதற்கு அர்த்தம் - மற்ற பூதங்களைவிட கொஞ்சம் அதிக நாட்கள் இருக்கும் என்பதே ஒழிய-அநித்யமே. அந்த பூத ஆகாசம் எல்லாப்பொருள்களுக்கும் ஆஸ்ரயமாக முடியாது. ஆகையால் ஆகாசம் எனப்படுவது- அம்பரம் எனப்படும் பிரஸித்த ஆகாசத்துக்கும் அந்தமான (காரணமான) மூலப் பிரகிருதியாகும். அக்ஷரம் பரமாத்மாவே யாக முடியும் மூலபிரகிருதிஆகாது.

ஆகவே இங்கே ஆகாசசப்தம் நிர்த்கஷ்டம் பூதசூக்ஷமம் (மூலபிரகிருதி) ஆகும். ஆகையால் பூதசூக்ஷமத்திற்கு ஆதாரமாக எது சொல்லப்படுகிறதோ அதுவே कस्मिन्नु, खल्वाकाश

ओतश्च प्रोतश्च इति- என்கிற கேள்விக்கு எல்லாப் பொருள்களுக்கும் ஆஸ்ரயமாக விருப்பதாதல்-நிர்திஸ்யமான காட்டுவதான அக்ஷரம் பரமாத்மாவே-பிரதானம் இல்லை என்று தேறுகிறது.

மேலே சொல்லப்பட்டது - யாதெனில், அந்த வஸ்து எதில் - சுருதி பிரஸித்தப் பிரகாரமில்லாததும், - பிரமாணங்களுள் அனுமான ஸித்தமுமானதும், முதலில் வேறுபிரமாணத்திஞல் அறியப்பட்டதுமான பிரதானம் - என்பது சரியில்லை. ஏனெனில் அக்ஷரம் என்கிற பதம் தனது சொந்த சப்தத்தின் வாச்ய சக்தியினுல், தானே தனது அர்த்தத்தைக் காட்டக் கூடும்-அதாவது அதற்கு அன்ய பிரமாண ஆதாரம் அபேக்ஷித மில்லை. ஒருபதம்-அதன் அர்த்தம்-இதற்க்குள்ள சம்பந்தத்திஞல்-இயற்கையான அர்த்த ஸ்வரூபம் எந்த பிரமாணத்திஞல் ஏற்படுகிறதோ - அதே பிரமாணம் உபயோகப்படும் அர்த்தத்திலோ - இருக்கவேண்டியது என்கிற அவசியமில்லை.

(இங்கு முதலாக மற்ற பிரமாணங்கள் சுருதி முதலியவை இல்லாமலேயே) வழியாக பிரதம கிரஹணம் ஏற்படும்போது சப்தத்திஞல் அர்த்தம் - ப்ரதான பரமாக அர்த்தம் செய்து கொள்வதின் பக்ஷம் - இங்கு விரோதம் எனக்காட்டப்படுகிறது. அக்ஷர சப்தத்தை எடுத்துக்கொண்டால் - அதை அனுமான ரீதியாக-கிரஹிக்கும் சக்தி, பிரதானத்தைக் காட்டுவதால் அபேக்ஷிக்கப்படுகிறது. அதாவது முதலில் வேறு பிரமாணத்திஞலும் பிற்பாடு சுருதியிஞலும் அறியக்கூடும்-என்கிற பக்ஷம் சரியில்லை: சப்த போதன சக்தியிஞல் காட்டப்படுகிறது. அக்ஷரம் என்கிற பதம்-அர்த்த போதகத்திஞலே-பரபிரும்மம் எனக்காட்டும்-ஏனெனில் எது அர்த்த ரீதியாக எக்காலத்திலும் அழியாதோ - அது அக்ஷரம். இந்த மாதிரி விஷயத்திலே-விசேஷமான அடையாளம் -

இந்த அர்த்தத்திற்கு விரோதமாகவிருக்க அவசியமில்லை. இங்கு அசாதரண பிரயோகமும் இல்லை. முதலில் ஒருவன் தண்டத்தை உடையவனுகக்காணப்படுகிறுன். அவனைப்பற்றிச் சொல்லும் போது - தண்டிந் - தடியை வைத்திருப்பவன் - அவன் எப்போதும் தண்டத்திஞேடு விருக்கவேண்டிய அவசியமில்லை. அவனை அறிவ தற்கு முதலில் யேற்பட்ட கிரஹணம் (தண்டத்துடன் கூடியவன்) அர்த்த போதகமாகும் அது பிரத்யக்ஷம்-அனுமானத்திஞல் ஸித் திக்கும் ஆனுல் தர்மம்-(அல்லது ஈஸ்வரன்) என்கிற பதம் நமக்கு சுருதியின் சம்பந்தத்தை முதலிலேயே தெரிவிக்கிறது. பிரதா னமோ கண்ணுக்குப் பார்க்கப்படாதது - அதுபற்றி அனுமானமும் சந்தேகமுள்ளது. எந்த அனுமானமும் சுருதிக்கு விரோதப்படின் அது பிரமாணமாக முடியாது. இங்கே வாதிக்கப்படுகிறது, பிர தானம் தன் சொந்தமகிமையிஞல் - தனக்குத்தானே ஆதாரமாக விருக்குமோ? அது அசேதனமானபடியால் இருக்கமுடியாது - அதஞல் பிரதானத்திற்கு தனிப்பட்ட அர்த்தத்தில் பிரயோகம் செய்யப்படுவதற்கு அவசியமோ நிர்ப்பந்தமோ இல்லை. ஆகவே பிரதானம் தனக்குத்தானே ஆதாரம் என்பது பரிசிக்கத்தக்க விஷயமாகும்.)

ஸ்ரீபாஷ்யம்:-இந்த விதமாக அக்ஷரம் பிரதானமாக இருக்கமுடி யாது என்பதாகையால்-நீ சொல்லலாம்-அக்ஷரபதம் ஜீவனைக்குறிக் கலாம்-அக்ஷர சப்த நிர்திஷ்டோ ஜீவோ அஸ்து என்று; ஏனெனில் பூதசூக்ஷம் பரியந்தம்-ஸம்பூர்ண அசித்வஸ்துக்களுக்கும் ஆதார பூதமாகவும் - அதிஷ்டதை (ஆஸ்ரயத்திஞலே) யினுலே - ஜீவன் இருக்கலாமல்லவா? (பூதசூக்ஷ்ம தசையிலும்-மூல பிரகிருதி தசையிலும்கூட காரண தசையிலே - ஏனெனில் அஸ்தூலம் (பருமனுகவிருக்கையில்லாதபடி) என்கிற வாச்யமான விசேஷண மிருப்பதாலே.

சுபலோ. 7 - अव्यक्तमक्षरे लीयते - அவ்யக்தம் (மூல பிரகிருதி அக்ஷரத்தில் அடங்கிவிடுகிறது.) (லயகிரமத்திலே சொல்லும் போது); அதே சுபோ. 2. यस्याऽव्यक्तं शरीरं...यस्याक्षरं शरीरं-என பரமாத்மா (எவனுடையசரீரம் அவ்யக்தமாகவிருக்கிறதோ-எவனுடைய தேகம் அக்ஷரமாக விருக்கிறதோ-என்று (இங்கு பரமாத்மா ஆத்மாவென்றும் மூல பிரகிருதியும் - ஜீவனும் அவனுக்குச் சரீரங்கள் (விபூதிகள்) என்று காட்டப்படுகிறது. கீதையிலும் 15-16- क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते - (க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றும் ஜீவர்கள் பிரஸித்தமாகக் கூறப்பட்டுள்ளனர். பிரகிருதி சம்பந்தமுள்ள பிரும்மாவிலிருந்து புழுவரை - பத்த ஜீவர்கள் க்ஷர ; என்கிற பதத்தினுல் அறியப்படுகிருர்கள். (அதாவது மாறுவதையே ஸ்வபாவமாக உடைய பிரகிருதியின் சம்பந்தத்தால் - தேக மாறுதல்கள் உள்ளபடியாலே க்ஷர: எனப்படுகிருர்கள். இவர்களில் (அதாவது பத்தர்களில்) வேறுபட்ட முக்த ஜீவர்கள் பிரகிருதி சம்பந்த மற்றபடியால் கூடஸ்தன்-மாறுதல் இல்லாத - அக்ஷர எனப்படுகின்றனர். இவர்களுக்கு பிரும்மாதி சரீரங்கள் (பிராகிருதமான சரீரங்கள்) இல்லை. பரமாத்மா பத்த-முக்த ஜீவர்களை விடவேறுபட்டவன். உத்தம புருஷன்-அன்ய:-புருஷோத்தமனுகும். இங்கு அக்ஷர சப்தம் முக்தனை குறிக்கும்.) அதாவது பிரத்யகாத்மாவிலிருந்து - (பத்த ஜீவனிலிருந்து) வேறுபட்ட அன்யன்-அக்ஷர சப்தத்தினுல் சொல்லப்படுகிருன். முக்தன் எனப்படுபவன் இவனும் பரமாத்மாவுக்கு சரீரமாகிருன். அக்ஷரம் பூர்வ பக்ஷப்படி-ஜீவனைச் சொல்லும், அதாவது காரணதசையில் ஜீவன் மூல பிரகிருதியுடன் ஒன்று சேர்ந்து - (பிரிக்கமுடியாதபடி சூக்ஷ்ம தசையில் இருக்கிருன் என்பதாகும்), (அஸ்தூலம்-அணு. இதில் ஜீவன் அணுவாக நாம் (வேதாந்தி) சொல்கிறோம். நையாயிகனும் சாங்கியனும் அணுவாக இல்லாமலிருப்பதே ஜீவனின் தர்மம் என்கிருர்கள். முக்ததசையிலும் ஜீவனின் ஸ்ருபம் அணுவே. தர்ம பூத ஞானத்தினுல் பிரகாசிக்கிருன்.)

## ஸூத்ரம்-10 - सा च प्रशासनात् *(1-3-10)*

*ஸாச-பிரஸாஸ நாத் (1-3-10)*

ஸாச - (மூல பிரகிருதியைத் தரிப்பதாகிற) அதுவும் (பரமாத்மா) ப்ரஸாஸநாத் - உள் இருந்து கொண்டு யாவற்றையும் நியமிப்பதாலே அக்ஷரம் ஜீவனாகமாட்டான் பரமாத்மாவே.

மூல பிரகிருதி - அம்பரமாகிற (ஆகாசத்தின்) அந்த: காரணமான மூல பிரகிருதி - அதைத் தரிக்கிற அக்ஷரம் - (பரமாத்மா) அந்த அக்ஷரத்தின் प्रशासनादेव - பரமாத்மா அந்தர்யாமியாகவும் ஆத்மாவாகவுமிருப்பதாலே-அவனுடைய மேலான கட்டளையினாலே - இங்கு உபதேசிக்கப்படுவது ஜீவனாகவுமிருக்கலாம்-ஜீவன் அதிஷ்டித்து அதை நியமனம் செய்யலாம் என்கிற சந்தேகம் எழ-எல்லா அசேதனப் பொருள்களை ஜீவன் தரிக்கக் கூடியவனாகையாலே-ஜீவன் என்று முடிவு கொள்ளலாமே என்கிற பக்ஷம் தள்ளப்படுகிறது - ஆனால் பூர்வபக்ஷி சொல்வது - यस्याक्षरं शरीरं-முதலான விடங்களில் (அக்ஷரம்-ஜீவனைக்குறித்து) பிரயோகமிருப்பதாலே அக்ஷரம் ஜீவனே என்கிறான்.

एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्य चन्द्रमसौ विधृतौ तिष्ठतः। एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि द्यावापृथिव्यौ विधृते तिष्ठतः। एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि निमेषा। मुहूर्ता अहोरात्राण्यर्धमासा ऋतवः (ருதவ:) संवत्सराः इति विधृतास्तिष्ठन्ति - इत्यादिना. கார்க்கி - இந்த அக்ஷரத்தின் மேலான நியமனத்தாலே சூரிய சந்திரர்கள் தரிக்கப்பட்டு விளங்குகிறார்கள். இந்த அக்ஷரத்தின் மேலான நியமனத்தாலே-கண் இமைத்தல் நிமிஷம்-முகூர்த்தம் - பகல்-இரவு பக்ஷம்-மாதம் - ருதுக்கள் - வருஷம் இத்யாதி காலப் பிரிவுகள் ஏற்பட்டு - இவை எல்லாம் தாங்கப்படுகின்றன. (பிரு.3 3-8-9). இதனால் அக்ஷரமானது மேலான நியமனத்தாலே-மூலபிரகிருதி - காலம் முதலானவற்றைத் தரித்து நிற்பதாகக்

கூறப்படுகிறது. மேலான நியமனம்-ஆத்மாவாகவும் அந்தர்யாமி யாகவுமிருப்பதாலே அனைத்தையும் உள் நுழைந்து நியமிப்பது. இது பரமாத்மாவுக்கே பொருந்தும் - ஸம்சாரி ஜீவனுக்கோ-முக்த ஜீவனுக்கோ (ஜகத் வ்யாபாரம் வர்ஜம் என்பதால்) பொருந்தாது- ஆகவே அக்ஷரம் பரமாத்மாவேயாக முடியும்.

प्रशासनम् - பிரகிருஷ்டம் शासनं ; இதனால் பரமாத்மாவுக்கே ஸர்வ வஸ்து விதரணம்-பத்த முக்த உபய அவஸ்தைகளிலும் பிரத்யகாத்மாவுக்கு இவ்விதம் प्रशासनं - தன் கீழ் எல்லாவற்றை யும் அடக்கி ஆளுதல்-பத்த முக்த ஜிவர்களுக்குப் பொருந்தாதபடி யால்-புருஷோத்தமனான ஸ்ரீமந் நாராயணன்தான் கட்டளையிடும் அக்ஷர புருஷனாகவிருக்கிறான் என்பது தெளிவு.

पुरुषोत्तम एव प्रशासिताक्षरम्,

---

சூத்ரம் II - अन्य भावव्यावृत्तेश्च - (1-3-11)

அன்ய பாவ வ்யாவிருத்தே ஸ்ச (1-3-11)

அன்ய பாவ வ்யாவிருத் தே:ச-அக்ஷரத்திற்கு பரம புருஷனி லும் வேறுபட்ட அசேதனத்தின் தன்மையும் - ஜீவனின் தன்மை யும் கூடாது என்றும் காட்டப்படுவதாலே - அக்ஷரம் பரமாத் மாவே. அது புருஷோத்தமனானபடியால் - அன்ய தத்வமே. அக்ஷ ரத்தைப்போல வேறு ஒன்று இருப்பதை தள்ளுவதால் - அக்ஷரம் பரமாத்மாவே.

अन्य भाव :- அன்யத்வம் - பிருஹ்ம பாவத்திலிருந்து வேறு பட்டது. பிரதானம் முதலியவைகள். பிரதானத்தின் தன்மையை பிரதானத்திற்கே உரியதானபடியால் - அது பரமபுருஷனைவிட

வேருன தத்வமே. இதை வாக்யசேஷம் நன்கு காட்டுகிறது பிரு-2-5-8-11ல் **तद्वा एतदक्षरं गार्ग्यदृष्टं द्रष्टृ अश्रुतं श्रोतृ अमतं मन्तृ अविज्ञातं विज्ञातृ। नान्यदतोऽस्तिद्रष्टृ, नान्यदतोऽस्ति श्रोतृ, नान्यदतोस्ति मन्तृ। नान्यदतोस्ति विज्ञातृ। एतस्मिन्नु खल्वक्षरे गार्ग्याकाश ओतश्च प्रोतश्च-इति**-கார்க்கி, அப்படிப்பட்ட இந்த அக்ஷரம் வேறு ஒன்ருல் காணப்படாததாய், எல்லாவற்றையும் தான் காண்பது வேறு ஒன்ருல் கேட்கப்படாததாய் எல்லாவற்றையும் கேட்பது; இப்படிக் காண்பது இதைக்காட்டிலும் வேறு ஒன்றில்லே. இம்மாதிரி அக்ஷரத்திலே-ஏ கார்க்கி, ஆகாசம் குறுக்கும் நெடுக்குமாக கோர்க்கப்பட்டிருக்கிறது (புனேயப்பட்டிருக்கிறது) பிரு-2-3-8-11 இங்கே சொல்லப்படுவது-காண்பது கேட்பது அக்ஷரத்திற்கு கூறப்படுவதாலே-அக்ஷரமே காண்பது கேட்பதாலே-காணவும் கேட்கமாட்டாத சேதன தர்மங்கள் அசேதனமாகிற மூல பிரகிருதிக்கு ஒட்டாது. ஒருவராலும் (தான்) காணப்படாததாகவும், எல்லாவற்றையும் காண்பதாகவும் - அக்ஷரம் கூறப்படுவதால் - எல்லாவற்றையும் எப்போதும் காணமுடியாதவனும் பரமாத்மாவினுல் எப்போதும் காணப்படுபவனுன ஜீவன் - அவனும் அக்ஷரமாக ஆகமுடியாது. திருஷ்டிருத்வ - ஸ்ரோத்ருத்வாதி உபதேசங்கள் க்ஷர சப்தத்தால் அறியப்படும் அசேதன பூத பிரதானத்தின் தன்மைகளிலிருந்து பிரித்து வேருகக் காட்டப்படுகின்றன. அதேமாதிரி **सर्वैरदृष्टस्यैव सतः सर्वस्य द्रष्टृत्वापदेशाच्च** - தான் காணப்படாமலும் - ஆனல் எல்லாவற்றையும் காண்பதாகவும் இம்மாதிரி உபதேசத்தினுல் - அக்ஷரம் பரமாத்மாவே ஆகும். ஏனெனில் எல்லாவற்றையும் எப்போதும் காண முடியாதவனும் பரமாத்மாவினுல் காணப்படுபவனுமான ஜீவனில் வேறுபட்டவன் ஜீவனில் வேறுபட்ட பரமாத்மாவுக்குத்தான் சரியாகும். முக்த தசையில் முக்தனுக்கு ஏற்படும் ஞானவிகாஸத்தினுல் எல்லாம் அறிபவனுக விருப்பினும் - அவன் பரமாத்மாவைப்போல ஸத்ய ஸங்கல்பாதிகளேயும் - எவராலும்

காணப்படாத தன்மையும் அவனுக்கும் ஒட்டாது. ஆகவே சேதனு அசேதன வஸ்துக்களிலிருந்து வ்யாவிருத்த பரமாஜ- அன்யன் என்று அக்ஷரத்திஞல் சொல்லப்படுவது பரமபுருஷனே ஆகும்.

**एवं वा - अन्य भाव व्यावृत्तिः**- ஸத் பாவம்- மற்றதின் ஸத் பாவம்- எல்லா வஸ்துக்களின் ஸத்பாவம் (இருப்பு - ஸ்திதி) இதலிருந்து வேறுபட்ட நிஷேதம் - அன்யபாவம் - (இல்லாமை) என்பதின் அர்த்தம் - பரமாத்மாவைத் தவிர ஸ்வதந்திரமாக சித்தோ அசித் வஸ்துக்களோ இருக்கமுடியாது. ஸத்பாவம் வஸ்துக்களுக்கு பரமாத்மாவின் அனுப்ரவேசத்திஞல் யேற்படு கிறது. இப்பேற்பட்ட அக்ஷரம் மற்றவர்களால் அதிருஷ்டம்- காணப்படாதது; இது மற்றவர்களை (अन्येषां) द्रष्टृ - பார்க்கிற தாலே- இருப்பதாகிற ஸத்பாவம்- மற்றவை அவனை விட்டு இல்லாமையாகிற (ஸ்வவ்யதி ரிக்தஸ்ய)- ஸத்பாவம்- பரமாத்மாவி ஞலே உண்டாக்கப்படுகிறது- அதாவது இன்னெரு விதமாக அக்ஷரத்தைப்போல அனைத்தையும் காண்பதாகவும் - எவராலும் காணப்படாததாகவும் வேறு ஒன்றுமில்லை- ஸமஸ்த வஸ்துக் களுக்கும் ஆதாரத்வம்- பரமாத்மாவை இன்னென்று எப்போதும் எல்லாவற்றையும் காண்பவனுகவும்- தான் காணப்படாமலிருப்ப தும் இல்லை என்பதால் விலக்ஷணமான தர்மம்- அதிருஷ்டமேதஸ்ய த்ருஷ்ட்ருச- இம்மாதிரிஸர்வத்ர ஆதார பூதமாகஅன்ய வஸ்து நாஸ்தி- இல்லை என்று சொல்வதாலே- नान्यदतोऽस्ति द्रष्टृ இத்யாதி வாக்ய சேஷத்திஞல்- மற்ற வஸ்துக்களின் ஸத்பாவம் இல்லாமை யினுலே- இந்த அக்ஷரத்தின் பிரதான பாவம் அதேபடி ஜீவ (பிரத்யகாத்ம) பாவம்- எல்லாம் நிஷேதிக்கப்படுவதாலே- அக்ஷ ரத்திற்கே உரித்ததான தர்மங்கள் போதிக்கப்படுகின்றன, இந்த சூத்ரத்திற்கு வேறு வகையாக அர்த்தம் கொள்ளப்போமாகில்- नान्यदतोऽस्ति द्रष्टृ- (த்ருஷ்டிரு) என்று அக்ஷரத்தைப் போல அனைத்தையும் காண்பதாகவும்- தான் எவராலும் காணப்படாமை

யாக விருக்கையும்- வேறொன்று இல்லையென்று நிஷேதம் காட்டப் பட்டிருப்பதாலே- இந்த அக்ஷரம் பரமாத்மாவே- அக்ஷரத்திற்கு பிரதானபாவம்- பிரத்யகாத்ம பாவம்- இரண்டுமே தள்ளப்பட்ட தாகும்.

மேலும் இந்த சுருதி அக்ஷரத்தின் மேலான நிலையைச் சொல்லுகிறது. एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि- ददतो मनुष्या प्रशंसन्ति- यजमानं देवाः, दर्वी पितरोऽन्वायत्ताः इந்த அக்ஷரத்தின் மேலான கட்டளையினாலே- கார்க்கி, மனிதர்கள் தானம் கொடுப் பவர்களை புகழ்கிறார்கள்; அக்ஷரத்தின் மேலான ஆக்ஞையினால் யஜமானர்கள் யாகம் செய்தும் ஹோமம் முதலியவற்றாலும் தேவதைகளையும் - பித்ருக்களையும் மற்றவர்களையும் (தர்வியினால் ஹோமம் செய்யப்பட்ட ஆஹூதிகளையும்) புகழ்வதால்-ஸ்ரௌதம் ஸ்மார்த்தம்-யாகதான ஹோமாதிகளுமாகிற ஸர்வ கர்மாக்களும் எந்த அக்ஷரத்தின் ஆக்ஞையினால் நடைபெறுகின்றனவோ அந்த அக்ஷரமே பரபிருஹ்ம பூதமான புருஷோத்தமன் ஸ்ரீமந் நாராய ணன் ஆகும்-என்பது एवेति என்கிற பதத்தால் காட்டப்படுகிறது. மேலும் यो वा एतदक्षरं गार्गि अविदित्वाऽस्मिन् लोके जुहोति, यजते, तपस्तप्यते बहूनि वर्षसहस्राणि, अन्तवदेवास्य तद्भवति, यो वा एतदक्षरं गार्गि अविदित्वाऽस्माल्लोकात् प्रैति, स कृपणः, अथय य एतदक्षरं गार्गि विदि- त्वा ऽस्माल्लोकात् प्रैति स ब्राह्मणः- इति- கார்க்கி-அவன் (எவன்) இந்த அக்ஷரத்தை முன்னிட்டுக்கொண்டு - இந்த லோகத்திலே யாகம் செய்தும்-ஹோமங்கள் செய்தும்-தபஸைச் செய்தும்-இன்னும் பல ஸ்மார்த்த சடங்குகளை பல ஆயிரக்கணக்கான வர்ஷங்கள் செய்து கொண்டிருக்கிறானோ-அவனுக்கு முடிவின்போது (உயிர் பிரியும் சம யத்தில்) இவை அக்ஷரத்தின் ஆக்ஞையினால் செய்யப்பட்டன என்கிற ஞானம் இல்லையே-அவன் அக்ஷரத்தின் மகிமைகளைத் தெரியாமல் உயிர் விடுகிறான். அவன் கிருபணனாகிறான், அவனிடம்

நாம் தலை செய்யவேண்டியது - முக்ய புருஷார்த்தத்தை அவன் இழந்துவிட்டபடியால் - ஸம்ஸார பிராப்தி அவனுக்கு ஏற்பட்டு விடுகிறது. ஆனால் எவன் ஒருவன் கார்க்கி - இந்த அக்ஷரத்தின் மேன்மைகளைத் தெரிந்து கொண்டவனாகவும்-இந்தக் கர்மாக்களை அதை திருப்தி செய்யவேண்டியது என்கிற ஞானத்தினால் செய்கிறானோ-அவன் மரித்தபோது - பிரும்ம பிராப்தியை யடைகிறான். இதனால் அக்ஷரத்தை தெரிந்து கொள்ளாதவன் ஸம்சார பிராப்தியையும்-அதை நன்கு தெரிந்துகொண்டவன் அம்ருதத்வ பிராப்தியையும் அடைகிறான்-என்பதால் (பிரு.2.3.8-10) அடைவதாலே - तदक्षरं (அந்த மேலான அக்ஷரம்) परं ब्रह्मेति सिद्धम् - பரமாத்மாவே ஆகும் என்பது ஸித்தம்.

அக்ஷராதி கரணம் ஸம்பூர்ணம்



ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம:   ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம:

# பிரும்மவித்யா

## (இரண்டாம் பாகம்)

## ஸ்ரீ பாஷ்யம்

## (முதல் அத்யாயம், 3-ம் பாதம்)

## அதிகரணம் - 1-3-4

### ஈக்ஷதிகர்மாதிகரணம்—ईक्षतिकर्मव्यपदेशात् सः—(1-3-12)

ஈக்ஷதிகர்ம - காணப்படுபவனுகச் சொல்லப்படுபவன் ஸ: பரமாத்மாவே (தியானம் செய்யப்படவேண்டியவன் பரமாத்மா. ஸாத்ய நிர்தேஸம் - இப் பாதத்திலுள்ள எல்லா அதிகரணங்களிலும் ஸாத்யத்தை ஸமர்ப்பிக்கும் பதமாகும்) வ்யபதேசாத் - அவ்விதம் - பரமாத்மாவாகச் சொல்லப்படுவதாலே (ஸ்ருதி முதலியவைகளில், முன் அதிகரணத்தில் பரமாத்மா - காணப்படாதவன் என்றபடியால்-அப்படியாகில் காணப்படுபவனுக வேறு ஒரு வாக்யத்தில் சொல்லப்படுபவன் - பரமாத்மா ஆகமுடியாதே- என்கிற வாதம் இதில் தள்ளப்படுகிறது.

அதர்வணிகர்கள் ஸத்யகாம பிரஸ்னத்தில் இவ்விதம் சொல்கிருர்கள் - பிர. 2. 5. 5. यः पुनरेतं त्रिमात्रेण ओमित्येतेनैवाक्षरेण परं पुरुषमभिध्यायीत, स तेजसि सूर्ये संपन्नः यथा पादोदरस्त्वचा विनिर्मुच्यते, एवं ह वै स पाप्मना विनिर्मुक्तः स सामभिरुन्नीयते ब्रह्मलोकम्; स एतस्माज्जीवघनात् परात्परं पुरिशयं पुरुषमीक्षते— மூன்று மாத்திரைகளையுடைய இந்த ஓம் என்னும் அக்ஷரத்தாலேயே இப்பரமாத்மாவை எவன் தியானிக்கிருனே-அவன்

தேஜோமயனை சூரியனில் சேர்ந்தவனும் பாம்பு சட்டையை உரிப்பது போல பாபத்தினின்றும் விடுபட்டு ஸாமகானம் செய்ப வர்களாலே பிரும்மலோகத்தை அடைவிக்கப் படுகிறான். தேஹேந் திரியங்களையும்விட மேலான ஜீவனையும் காட்டிலும் - மேலான ஹ்ருதயவாஸியான புருஷனைக் காண்கிறான். (இது பூர்வபக்ஷப்படி; ஸித்தாந்தத்திற்கு வேறு பொருள் மேலே காட்டப்படும் )

இங்கு சத்யகாமன்-சிபியின் புத்ரன். தன் குருவான பிப்ப லாதரை ஓங்காரத்தைப் பற்றி சில கேள்விகளைக் கேட்கிறான்.

இங்கு த்யாயதி - (தியானம் செய்கிறான்) ஈக்ஷதி (பார்க் கிறான்):- இந்த இரண்டு சப்தங்களுக்கும் விஷயம் (நோக்கம்) ஒன்றுதான் - தியான பலத்தினால் ஈக்ஷணம் (பார்த்தல்) யேற்படு கிறது-அதேமாதிரி சா. உப. 3-24 यथाक्रतु रस्मिन् लोके पुरुषः எப்படி ஒருவன் உபாஸிக்கிறானோ அப்படியே அவன் இறந்ததும் அந்த பலனையே அடைகிறான், என்கிற நியாயத்தினால் - தியான விஷயமே பலனாக அடையப்படுகிறது. பரமபுருஷன் என்கிற பதம் காணப்படுவதாலே இரண்டு பதங்களுக்கும்-தியானம் - ஈக்ஷணம் என்பதால் தியானம் செய்தல் - பார்த்தல் ஆகிய இரண்டு செய்கைகளையும் குறிக்கிறபடியால் பரமபுருஷனே காட்டப்பட்டவனாக ஆகும்—அவனையே தியானிக்க வேண்டியது.

இங்கு ஒரு சந்தேகம். இந்த பரம புருஷன்-என்பது சதுர்முக பிரும்மாவா-அல்லது புருஷோத்தமனா என்பது. சதுர்முகன்-ஜீவர் களில் ஸமஷ்டிரூபன்-பிரும்மாண்ட அதிபதி. யாது சரியாகும்? ஸமஷ்டி க்ஷேத்ரக்ஞனாகிற பிரும்மாதான். (சங்கரரின் படி—பூர்வ பக்ஷி-அபர பிரும்மம்-இது தியானிக்கப்பட வேண்டியது - பர பிரும்மம் காணப்படவேண்டியது. யாதவபிரகாசரின்படி தியா னத்திற்கு விஷயம். பத்தனால் (ஸம்சாரத்தில் அழுந்திப்போன ஜீவன்)-பார்க்கப்பட வேண்டியது - முக்தன், இரண்டு வித்யாஸ மான தியான ஈக்ஷண கர்மங்களும் அதே மாதிரி வித்யாஸப்பட்ட எண்ணங்களும் - இவை முரண்பாடுள்ளபடியால் - ராமானுஜர்- இன்னொரு அபிப்ராயத்தைச் சொல்கிறார் - பிரும்மாவை இரண்டு பதங்களுக்கும் பொருளாகக் கொள்ள வேண்டும். பிரும்மா என் பவர் ஸமஷ்டி ஜீவர்களின் தலைவன்-ஏனெனில் நைமித்திக பிரளய

காலத்தில் ஜீவர்களும் அவர்களுடைய இந்திரியங்களும் பிரும்மா விடமே ஒடுங்குகின்றன. கீதையில் 8 - 17-19ல் ராமானுஜரின் விளக்கத்தை பார்க்கவும்.)

ஸமஷ்டி க்ஷேத்ரக்ஞனுகிற பிரும்மாதான் சரியான தாகும், எப்படி? வாக்ய பிரகரணத்தை நோக்கவும். स यो ह वै तद्भगवन् मनुष्येषु प्रायणान्तमोङ्कारमभिध्यायीत, कतमं वाव स तेन लोकं जयति— என்று ஆரம்பித்து பிர. உப. V-1-இப்போது பகவந்-மனிதர்களுக்குள்ளே எவன் தியானம் செய்கிறானோ-அவன் உயிர் போகும் வரை ஓங்கார அக்ஷர தியானம் செய்கிறானோ அவனுக்கு என்ன உலகங்கள் கிடைக்கும்? அதற்குப் பிறகு, அது உபதேசிக்கிறது, எவன் ஓங்காரத்தின் ஒரு மாத்திரையை தியானம் செய்கிறானோ-அவனுக்கு மனுஷ்ய லோகமும் எவன் இரண்டு மாத்திரைகளை (ஓம் என்பதில்) - தியானம் செய்கிறானோ-அவனுக்கு - அந்தரிக்ஷம் பலனாகவும் அடையப்படுகிறது. மூன்றாவது பிரும்மலோகம் மூன்று மாத்திரைகள் அடங்கிய - பிரணவ மந்திரத்தை தியானிப்பதால் கிடைக்கின்றது. இந்த பிரும்மலோகம் அந்தரிக்ஷத்திற்கு மேலாகவிருப்பதாகவும் சதுர்முக பிரும்மாவிற்குச் சொந்தமாகவும்-அந்த பிரும்மா ஸமஷ்டி ஜீவர்களைச் சேர்த்துச் சொல்லும் பொருளாகவும் இருக்கிறான். சதுர்முக பிரும்மாவே - ஸ்ருஷ்டிகர்த்தாவாகவும் அந்த (பிரும்ம) லோகம் என்ன பெயரால் அழைக்கப்படுகிறதோ - அதற்கு அதிபதியாகவிருக்கிறான்.

एतस्मात् जीवघनात्परात्परम्— (பிர. 2. V-5) இந்த பதம்-எவன் மேலான ஸமஷ்டி ஜீவர்களின் அதிபதியாக யிருக்கிறானோ - என்கிற அர்த்தம் சரியானதாக விருக்கும். எவ்விதமெனில் தேஹேந்திரியாதிகளுக்கு, மேலாக விருக்கும் தேஹேந்திரியங்களுடன் கூட சரீரத்துடன் இருக்கும் தனிப்பட்ட வியஷ்டி (Individual) ஜீவர்கள் இருககிறார்களே-அவர்களைவிட மேலானவர் பிரம்ம லோகவாசியாக விருப்பவர் - அத்தகைய சதுர்முக பிரும்மா, ஸமஷ்டி (புருஷன்) ஜீவர்களின் அதிபதியாகச் சொல்லப்படுகிறார். ஆகவே இங்கு பரமபுருஷன் என்று காட்டப்

புடும் சப்தும் ஸமஷ்டி புருஷன் சதுர்முக பிரும்மாவைக் குறிக்கும். இவ்விதம் சதுர்முக பிரும்மா சொல்லப்பட்டவனாக இருக்குமானால் அவருக்கு அஜரத்வம (மூப்பில்லாமை) போன்ற குணங்கள் இந்த வாக்ய பிரகரணத்தில் சொல்லப்படுகின்றனவே. இவை இவருக்குப் பொருந்தும்படி எப்படி சொல்ல முடியும்? (பிரும்மலோகம்—அது சதுர்முகபிரும்மாவினுடையது. அங்கு போய்ச்சேரும் உபாஸகன் சாக்ஷாத்கரிப்பது பிரும்மாவைத்தான் என்பது பூர்வபக்ஷம்)

அவ்விதம் சொல்லப்படுமானால் நாம்பதில் சொல்வோம்— ईक्षतिकर्मव्यपदेशात्सः — இங்கு ஈக்ஷணம் செய்கிற புருஷன்— வஸ்து—அவன் பரமாத்மா—எப்படி? அந்த மாதிரி பரமாத்மாவென்று உபதேசமிருப்பதாலே— (சூத் 1-3-12) (மூலத்திலெ ஏதஸ்மாத் ஜீவகனாத் பராத்பரம்—என்று இருக்கிறது. ஆக்ஷேபிக்கிறவன் பராத் என்கிற பதத்தை ஜீவகனாத்—என்பதற்கு விசேஷணமாக வைத்து—சதுர்முகன் என்கிறான். வேதாந்தியோ பராத் என்கிற வார்த்தைக்கு— ஜீவர்களைக்காட்டிலும் மேலானவனுக்கும் மேலானவர்—என்று அர்த்தம் செய்கிறான். இங்கு சொல்லப்படும் அஜரத்வம் போன்ற குணங்கள் (மூப்பில்லாமை)—பயமில்லாமை—பிரஸ்னஉபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. பிரும்மாவுக்கு அதிசயிககத் தகுந்த தீர்க்காயுஸ்ஸினால் அவர் நித்யயுவாவாகவும் மரணமில்லாதவராகவும்—ஸம்சாரத்திலிருக்கும் மற்ற ஜீவர்களை ஒப்பிட்டுப்பார்க்கும்போது—அவர் பயமின்றி இருப்பவராகும்).

ஈக்ஷித்கர்மம் மும்மாத்திரையுடையதாக பிரணவத்தை உபாஸிப்பவன் அடையும் பிரும்மலோகத்தில் அவனால் பார்க்கப்படுபவன் — सः— பரமாத்மாவேயாவான். (இது சூத்ரகாரர் சொல்லும் சமாதானம்), (சூத் 1-3-12) உபாஸகன் பார்க்கும் பொருள் பரமாத்மா. ஆகவே சுலொகத்தில் இவ்விதம் சொல்லப்படுகிறது —समोङ्कारेणैवायतनेनान्वेति विद्वान् यत्तच्छान्तमजरममृतमभयं परं च — என்பதில் உபாஸிக்கிறவன் சாக்ஷாத்கரிக்கும் வஸ்து விஷயத்திலே இந்த வார்த்தை—ஓம்காரத்தினால் —உபாஸகன் அவனையடைகிறான்—அவனே சாந்தமாகவும்,

அஜரனாகவும் அம்ருதனாகவும்—பயமில்லாதவனாகவும்—அவனே எல்லோருக்கும் மேலானவனாகவுமிருக்கிறான். (பிர-2-5-7) இங்கு சொல்லப்பட்டிருக்கும் லக்ஷணங்கள் — சாந்தம் — அஜரத்வம்—அம்ருதத்வம்—அபயத்துவம். இவை பரமாத்மாவின் ஸ்வருபமாதலால்—இத்தகைய சுருதிகள் இருப்பதால்— சா. 2 4-15-1— एतदमृतमभयमेतद्ब्रह्म அந்த பரமாத்மா அம்ருதம் அபயம் உடையவனாகயிருக்கிறான். அவனே பரமாத்மா. இங்கு சொல்லப்படும் வாக்யம்—एतस्मात् जीवघनात्परात्परम्— அவன் தனிப்பட்ட ஜீவர்களுக்கும் மேலானவனுக்கும் மேலானவனாக விருப்பவன்—இதுவும் பரமாத்மாவையே குறிக்கும். சதுர்முக பிரும்மாவைக் குறிக்காது—ஏனெனில் அவனையும் ஜீவகனாத் (சரீரமுள்ள தனிப்பட்டஜீவன்)—என்பதில் சேர்ந்தவனாகும். அவனே (சதுர்முக பிரும்மாவை) ஜிவகண என்று அழைப்பதால்— அவனுடைய உத்க்ருஷ்டகர்மத்தினால்—அவனும் தேகமுள்ளவனாகிறான். (கர்மநிமித்தம்—தேஹித்வம்); சதுர்முக பிரும்மா விஷயத்தில்—சரீரமுள்ளவன் என்கிற வ்யபதேசம்—இந்த சுருதியிலிருக்கிறது ஸ்வே—2. 6-18- यो ब्रह्माणं विदधाति पूर्वं— அவன் (பரமாத்மா) முதலில் சதுர்முக பிரும்மாவைப் படைக்கிறார். மேலேயும் சொல்லப்பட்டவிஷயம்—அந்தரிக்ஷ லோகத்திற்கு மேல் இருப்பதாகக் காட்டப்படுவது—பிரும்ம லோகம்—அது சதுர்முக பிரும்மாவின் லோகமாகவிருக்கிறது— அதற்கு அதிபதியாக அவர் இருந்துகொண்டு விளங்குகிறார். இது சரியானதாக ஆகாது. இந்த சுருதியில் (பிரஸ்ன உப 5-7) यत्तच्छान्तमजरममृतमभयम्— என்பதால் ஈக்ஷத்கர்ம புருஷன் சாந்தமாகவும், ஜரைலிருருந்து விடுபட்டவராகவும், மரணம், பயம் இவைகளிலிருந்தும் விடுபட்டவர் மேலானவர். ஈக்ஷித் (பார்த்தல்) என்கிற கர்மாவின் பொருள் பரமாத்மாவுக்கே சரியாகும். ஆகவே ஈக்ஷித்—தியானம் செய்கிறவன் அடைவதும் ஸ்தான விசேஷத்தாலே விளங்குவதான பிரும்மலோகம், அவனால் கடைசியாகப் அடையப்படுவது—அதே பிரும்மலோகம் அழியக் கூடிய சதுர்முக பிரும்மலோகமாகாது. மேலும்—இந்த சுருதிப்படி எப்படி பாம்பு தன் தோல் நீக்கப்பட்டு சுத்தமாகிறதோ—

சாமகீதங்கள் பாடப்பெற்று — அதுபோல் அவனும் பாபங்களி லிருந்து விடுபடுகிறான். அவன் பிரும்மலோகத்திற்கு அழைத்துச் செல்லப்படுகிறான்-அவைகள் அவனைத் தொடர்ந்து செல்கின்றன. (பிர. 2 V-5) இதனால் பாபங்களிருந்து விடுபட்ட உபாஸகன் அடையும் ஸ்தானம் பிரும்மலோகம் சதுர்முகனுடைய ஸ்தான மாகாது. यथापादोदरस्त्वचा विनिर्मुच्यते, एवं हावै स पाप्मना-विनिर्मुक्तः ससामभिरुन्नीयते ब्रह्मलोकम्—ஆகவே இங்கு உதாஹரிக் கப்பட்ட சுலோகத்தில்—இந்தக் காரணத்தினாலே பிரும்மலோகத் தை பற்றி இம்மாதிரி வாக்யமும் காணப்படுகிறது. यत्तत् कवयो वेदयन्ते— கவிகள் (பிரும்மரிஷிகள்) அறிகிறலோகம்தான் இதுவாகவிருக்கிறது. (பிர 2. V-7) कवयः — என்பதால் நித்ய சூரிகள், நித்யசூரிகளால் பார்க்கப்படுவது வைஷ்ணவ பதம். तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः — பிரும்மரிஷிகள் எப்போதும் பார்த்துக்கொண்டிருப்பது அந்த மேலான விஷ்ணு வின் பதமாகும்.

மேலும் அந்தரிக்ஷத்திற்கு மேல் சதுர்முக பிரும்மாவின் லோகமில்லை. ஏனெனில் அதற்கு நடுவில் ஸ்வர்க்கம் போன்ற பல உலகங்கள் உள. ஆகவே சத்ய காமனுக்கு அளிக்கப்பட்ட பதிலில்—''இந்த ஓங்கார சப்தம் - சத்யகாம-பிரும்மமாக விருக் கிறது. அந்த பிரும்மம் பர அபரமாக விருக்கிறது; வித்வான் இதன் மூலமாக இரண்டினுக்குள் ஒன்றை யடைகிறான். एतद्वै सत्यकाम परं चापरं च ब्रह्म यदोङ्कारः तस्माद्विद्वानेतेनैवायतने नैकतरमन्वेति— என்கிற பிரதிவசனத்தினால் (பதிலினால்) இதனால் காட்டப்பட்டது - பிரும்மம் - அபரம் (கீழானது) காரியமாக விருக்கும் கீழான அவனுடைய அவஸ்தை என்று சொல்லப் படுவது; அந்த பிரும்மம் இருவகையானது-ஒன்று இந்த உலகத் தைச் சார்ந்தது மற்றொன்று அடுத்த உலகத்தைச் சார்ந்தது; பிறகு அங்கு சொல்லப்பட்டது. ஓம்காரத்தை ஒரு மாத்திரையாக உபாஸிக்கிறவன் மனுஷ்ய லோகத்தில் நற்பயனையடைகிறான்:

இரண்டு மாத்திரைகளாக உபாஸிப்பவன் அந்தரிக்ஷலோகத்தில் நற்பயனேயடைகிறான்; மூன்று மாத்திரைகளாக உபாஸிப்பவன்—பரபிரும்மவாச்யமான பிரணவ சப்தத்தினால் பரமபுருஷனைத் தியானிப்பதால் பரமேவ பிரும்ம பிராப்தி-மேலான பரபிரும்மமே பலனாக அடையப்படுகிறது, என்பதால் ஸர்வம் ஸமஞ்ஜஸம் எல்லாம் பொருத்த மாகும். ஆகவே ईक्षति கர்ம புருஷன் (பார்க்கப்படுபவனாகச் சொல்லப்படுபவன்) பரமாத்மாவே ஆகும். ஆகவே மும்மாத்ரை ஓங்கார உபாஸகன் வைகுண்டத்தில் பரம புருஷனை அனுபவிக்கிறான் என்பது ஸித்தம்.

---

## அதிகரணம் - 5

### தஹராதிகரணம்—(1-3-5)

### दहर उत्तरेभ्यः (1-3-13)

உத்த ரேப்ய:—மேல் வரும் வாக்யங்களில் காட்டப்பட்ட காரணங்களாலே-தஹர:-தஹராகாசம் எனப்படுபவன் பரமாத்மாவே.

சாந்தோக்ய உபநிஷத்தில்—8-1-1. अथयदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुण्डरीके वेश्म, दहरोऽस्मिन्नन्तराकाशः तस्मिन् यदन्तः, तदन्वेष्टव्यं तद्वावविजिज्ञासितव्यम्— இப்போது ஹ்ருதய புண்டரீகத்தில் (தேகம் எனப்படும்) பிரும்ம பட்டிணத்திலே அதற்குள்ளே ஒரு சிறிய தஹராகாசமிருக்கிறது. அதற்குள் எது இருக்கிறதோ அதை நாம் ஆசைப்பட்டுத் தேடிப் புரிந்துகொள்ள வேண்டும். இங்கு சந்தேகம் ஹ்ருதய புண்டரீகமத்தியிலிருக்கும் தஹராகாசம் பிரஸித்தமான ஆகாசமா (மஹாபூதங்களின் ஒன்றான ஆகாசமா)? (சந்தேகத்திற்குக் காரணம்-தஹராகாசத்தில் ஏதோ ஒன்று இருக்கிறது) அது பிரும்மமாகாது; (அது பிரஸித்த ஆகாசத்துடன் ஒப்பிட்டிருப்பதால் அது ஆகாசமாகாது). அல்லது ஜீவாத்மாவா? அல்லது பரமாத்மாவா? எது சரியாக ஆகும்?

அது பிரஸித்த ஆகாசமாக விருக்கவேண்டும். ஏன்? ஆகாச சப்தம் பூதாகாஸத்தைக் குறிக்கும். மேலும் அதில் சொல்லப் பட்டது "எது அதற்குள் இருக்கிறதோ அதை விரும்பி அடைய வேண்டும் என்பதால் ஆகாசம் என்கிறதால் ஏதோ ஒன்றுக்கு ஆதாரமாக விருக்கிறது—அந்த ஒன்றைத் தேடி அறிய வேண்டும். அந்த தகராகாசத்தையும் அதனுள் இருக்கும் ஒன்றையும் உபாஸிக்க வேண்டும் என்று அர்த்தமாகிறது.

அவ்விதமானால் நாம் பதில் சொல்வோம். दहर उत्तरेभ्यः சிறிய ஆகாசம் (ஹ்ருதயத்திற்குள்) பிரும்மத்தைக்குறிக்கும்— ஏனெனில் பின்னால் சொல்லப்படும் வாக்ய பிரகரணத்தில் காரணங்கள் சொல்லப்படுகின்றன. (அது பரமாத்மாவைக் குறிக்கும்) சூத் 1-3-13. दहर उत्तरेभ्यः— பின்னால் வரும் சுருதி களாலே; एवं आत्माऽपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजि-घत्सोऽपिपासः सत्यकामः सत्यसङ्कल्पः என்பதால் நிருபாதிகமாக விருக்கும் ஆத்மாவிற்கு—பாப மில்லாமை—அஜரத்வம்—அம்ரு தத்வம்; தூக்கமில்லாமை, பசிதாகமில்லாமை, ஸத்ய சங்கல் பத்வம்-இவை உண்டு என்பதால்-கீழ்சொல்லப்பட்ட குணங்கள் நிருபாதிக ஆத்மத்வம் அபஹதபாப் மத்வாதி குணங்கள், ஸத்ய காம, ஸத்ய சங்கல்பாதி; இவைகள் எல்லாம் தஹராகா சத்திற்கு இருப்பதாகச் சொல்லப்படுகின்றன-நிருபாதிகம் என்பதாலே ஆத் மா; பூர்வபக்ஷி சொல்வது ஆத்ம சப்தம். ஆகாசத்தைப் போல எங்கும் பரவியுள்ளது, அல்லது ஞானத்தின் பரவுதலால் ஜீவனாக விருக்கலாம். என்று ஆனால் நிருபாதிக ஆத்மா பிரும்மம். ஹேயப்ரத் யனீகன், கல்யாண குண தாமன். இதனால் தெரியவருகிற ஞானம்— தஹராகாசம் பரபிரும்மமேயாகும். சா 2, 8-1-6 – अथ य इहात्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामान् तेषां सर्वेषु लोकेषु कामचारो भवति— "என்று ஆரம்பித்து, எவர்கள் இங்கிருந்து கிளம்புகிறார்களோ) இந்த பரமாத்மாவை அறிந்து கொண்டு அந்த பரமாத்மாவின் சாஸ்வதமான கல்யாண குணங்களையும் புரிந்து கொண்டிருக்கிறார்களோ—அவர்களுக்கு தங்கள் இஷ்டப்படி சஞ்சரிக்கும் சக்தியும் ஏற்படுகிறது"—அந்த சுருதி முடிக்கிற

போது—அது சொல்கிறது—எந்த ஆசைகளை அவன் (முக்தாத்மா) ஆசைப்படுகிருனே—அவை அவனுடைய சங்கல்பத்தினால் கிடைக்கின்றன—அவை நிறை வேறப்படுகின்றன. இவ்விதம் அவைகளையடைந்து — அவன் ஸம்பன்னனாக ஆகிருன். यं कामं कामयते, सोऽस्य सङ्कल्पादेव समुत्तिष्ठति ; तेन सम्पन्नो महीयते சா. உப 8-1-6 என்று முடிப்பதால்—(எவன் தஹராகாசத்தை அறிகிருனே)—அவனுக்கு ஸத்ய ஸங்கல்பம் முதலிய குணங்களின் ப்ராப்தி சொல்லப்படுகிறது—அதனாலே யேற்படுவது தஹரா காசம் பரபிரும்மமாகும் என்கிற ஞானம்.

மேலும் இந்த சுருதியிலே—यावान् वा अयमाकाशः, तावानेषोऽन्तर्हृदय आकाशः—( இந்த பூதஆகாசத்தின் அளவு எவ்விதமானாலும் அதே அளவுடனிருக்கிறது—இந்த ஹ்ருதய புண்டரத்திலிருக்கும் தஹராகாசமும்) சா. 2 8-1-3—இதில் சொல்லப்பட்டது. தஹராகாசத்திற்கும் பூதாகாஸத்திற்கும் நடுவிலே—ஒருவஸ்துவின் சம்பந்தம்—அந்த வஸ்து இன்னொரு வஸ்துவுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது—அந்த இரண்டுக்கும் உள்ள சம்பந்தம் இருப்பதாலே—தஹராகாசம் என்பது பூத ஆகாசமாகச் சொல்லப்படுமானால் அது சரியாகாது.

மீண்டும் இங்கு சொல்லக்கூடும் — உபமான உபமேய வஸ்துக்களின் சம்பந்தம், சிறிய அளவை நம்பி யிருக்கிறது; அதாவது ஹ்ருதயமாகிற அவயவத்தினால் மூடப்பட்டிருப்பதாக விருக்கிறது. ஹிருதய அளவுள்ள பரிச்சின்ன அளவுள்ளதாக விருப்பதை ஆதாரமாக கொண்டிருக்கிறது. அவ்விதமானால் அந்த ஆகாசம் (தஹராகாசம்) எல்லா வஸ்துக்களுக்கும், பூமி ஸ்வர்க்கம் இத்யாதி உள்பட எல்லாவற்றிற்கும் இருப்பிடம் என்று சொல்வது சரியாகாது. மேலும் ஆட்சேபிக்கப்படும் - தஹராகாசம் பரமாத்மாவே என்று அறியப்பட்டாலும், அந்த ஆகாசம், வெளியிலுள்ள பூத ஆகாசத்துடன் ஒப்பிடப்பட்டிருக்கிற விஷயமாக ஆக முடியாது. ஏனெனின் சுருதியிலே- சா. 2. 3-14 ज्यायायान् पृथिव्या. ज्याया नान्तरिक्षात्-என்பவைகளால் அது ஸர்வஸ்மாத்ஜ்யா யஸ்த்வ ஸ்ரவணத்—அது பூமியைவிடப் பெரியது - அந்த ரிக்ஷத்தையும்விடப் பெரியது - அது அதாவது தஹராகாசம் மற்ற எல்லா வஸ்துக்களை விட பெரிது. (இங்கு

பிரஸித்த ஆகாசம் தஹராகாசத்துடன் ஒப்பிடப்படுவதற்கு அபிப்ராயமில்லை-ஏனெனில் பிரஸித்த ஆகாசம் தஹராகாசமாகிற பிரும்மத்தைவிடப் பெரியதல்ல அது ஒரு காரியம். இவ்விதம் ஒப்பிடப்படுவதின் எண்ணம் தஹராகாசத்தின் சிறிய அளவை நிஷேதிக்கிறது அதாவது அது அளவில் மிகமிகப் பெரியதாம். வெளி ஆகாசத்தைப் போல.)

ஆனால் இவ்விதம் சொல்வது சரியில்லை, ஏனெனில் இந்த சுருதியின் (ज्यायान्...अन्तरिक्षात्) நோக்கம் தஹராகாசம் விஷயத்தில் பந்தத்தில் சிறிய அளவினால் யேற்படும் ஹ்ருதயாகாசத்தின் உள்ளுக்குள்ளே அடங்கிப் போதல் என்பதை நிஷேதிக்க விரும்புகிறது. உதாரணமாக இந்த வாக்யத்தில் - சூரியன் அம்பைப் போல போகிறான் என்று சொல்வோமானால் - அதன் எண்ணம் மெதுவான கதியை சூரியனுக்குச் சொல்லவரவில்லை-ஏனெனில் சூரியனின் கதி அம்பின் கதியைவிட வெகு வேகமாகச் செல்கிற படியால்: (அதன் அர்த்தம் அம்பைப் போல நேராக பாய்ந்து போகிறான் என்பதாகும். அதுபோல் இங்கேயும் அல்ப அளவினால் யேற்படுவதை தஹராகாசத்திற்கு நிஷேதிப்பதாகும். அது ஹ்ருதய அளவிற்குள்ளே அடங்கி யிருப்பினும் அதனால் உண்டாகும் சிறிய அளவை நிஷேதிப்பதாகும்.)

மேலும் சொல்லக்கூடும்—சா 2. 8-1-5—एष आत्माऽपहतपाप्मा அந்த ஆத்மாவுக்கு அபஹதபாப் மத்வாதி குணங்கள்—பாபங்கள் இல்லாமை-பேசப்படுகின்றன. இதனால் இங்கே தஹராகாசம் காட்டப்படுகிறதில்லை. ஏனெனில் வாக்யத்தில் சொல்லப்பட்டதை நோக்கவும்: - दहरोऽस्मिन्नन्तराकाशस्तस्मिन् यदन्तस्तदन्वेष्टव्यम्— என்பதாலே—அதற்குள்ளே (ஹ்ருதயத்திற்குள்ளே) தஹராகாசம் எனப்படும் சிறிய ஆகாசமிருக்கிறது—அதற்குள்ளே எது இருக்கிறதோ—அதை தேடவேண்டும் (சா. 2. 8-1-1-) என்பதால்— எது தஹராகாசத்தில் இருக்கிறதோ—எது அதை விட வேறாக விருக்கிறதோ அதுதான் தேடப்பட வேண்டிய வஸ்து என்று பேசப்படுகிறது ஆகவே இந்த சுருதிப்படி—இங்கு இப்படிச் சொல்வது சரியாகும்—எது அங்கு விவரிக்கப்பட்டிருக்கிறதோ—அபஹதப் பாப்மாவென்று—(குணங்கள்) அதுதான் தேடப்பட வேண்டிய வஸ்துவாகும்.

இப்படிச் சொல்வது சரிதான்—எப்போது சுருதியே தஹராகாசத்தையும் அதற்குள் இருப்பதையும் வித்யாஸப் படுத்தாது போனால், ஆனால். சுருதி இவைகளை வித்யாஸப்படுத்திக் காண்பித்திருக்கிறதே. ஆகவே அந்த சுருதியில்—பிரும்மபுரத்தில்-(தேகத்தில்) ஹ்ருதய புண்டரீகம் எனப்படும் இருப்பிடத்தில்-அந்த சிறிய (சூக்ஷ்மமான) (தஹர) ஆகாசம்—அதற்குள் இருக்கிறது—அந்த சூக்ஷ்ம ஆகாசத்துக்குள் எது இருக்கிறதோ—அது (அதாவது சூக்ஷ்ம ஆகாசத்தையும்—அதற்குள் இருப்பதையும்) தேடப்படவேண்டியது—என்பதாலே—अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्म दहरोऽस्मिन्नन्तराकाशः तस्मिन् यदन्तस्तदन्वेष्टव्यम्—என்பதாலே—பிரும்ம புர சப்தத்தால்—உபாஸ்யமாக (அருகே) ஸந்நிஹிதமாக விருக்கும்—பரபிரம்மம்; புரம் என்பது உபாஸகனுடைய சரீரம் என்று காட்டப்பட்டு; அதற்குள்ளிருக்கும் (மத்தியிலே) அவயவ பூதமாக விருக்கும் புண்டரீக வடிவமுள்ள அல்ப பரிமாணமுள்ள ஹ்ருதயம் அதற்குள் இருக்கும் தஹராகாசம்—பிரும்மத்துக்கு வாசஸ்தலமாக விருப்பது. அப்போது—அந்த உபாஸகனை நன்கு உதவுவதற்கு அந்த பரமாத்மா—ஸர்வக்ஞன் ஸர்வசக்தியுள்ளவன் வாத்ஸல்யமே ஒரு சமுத்திரம்போல ஜலநிதியாக விருக்கிறவன்—அவன் (பரமாத்மா) ஜீவனருகில் இருந்து கொண்டு—உபாஸகனை அனுக்ரஹம் செய்வதற்காக—எவர்கள் அவனைச் சரணமடைகிறார்களோ அவர்களை அனுக்ரஹிக்கவிருப்பதால் அதற்குள் இருக்கும் அந்த பரமாத்மாவை தேட வேண்டியது. அது சூக்ஷ்மமான தஹராகாச சப்தத்தினால் காட்டப்படுகிறது அந்த பரமாத்மாவே தஹராகாசம் என்கிறதால் சொல்லப்படும் அவனே த்யேய:—தஹராகாச சப்தத்தினால் தியானிக்கப்பட வேண்டியவன் என்று அறிவிக்கப்படுகிறான். அவனுக்குத்தான் அந்தர் வ்ருத்தியான அபஹதபாப்மத்வாதி குணங்கள் ஸ்வபாவமாகவே நிரஸ்த நிகில ஹேயத்வம் ஸத்யகாமத்வாதி—ஸ்வாபாவிக—அநவதிகாதிசய கல்யாண குணங்கள் உண்டு-அத்தகைய பரமாத்மா—த்யேயம்—तदन्वेष्टव्यम् அவனைத்தேடி உபாஸனம் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டதாகும். அவனையும் அபஹதபாப்மத்வாதி எட்டு கல்யாண குணங்களையும் சேர்த்து உபாஸிக்கும்படி இப் பிரகரணத்தில் கூறப்பட்டுள்ளது

(தஹரவித்யை மிக முக்கியமானது. இதற்கு அர்ச்சராதி கமனம் பலனுகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஏஷ ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விமிருத்யு. விசோகோ விஜிகத்ஸ அபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப என்று குணுஷ்டகம் சொல்லப்பட்டுள்ளது. இவை பரபிரும்மத்திற்கு இயற்கையாகவே இருக்குமாதலால், தஹர சப்த வாச்யமான வஸ்து பரமாத்மாவே என நிஷ்கர்ஷம். அத்துடன் குணங்களையும் சேர்த்து உபாஸிக்க வேண்டும்.)

[இங்கு தஹரோஸ் மிந்நந்தர ஆகாஸ:—இதனுல் தஹராகாஸம் பரமாத்மாவாக விருக்கமுடியாது. பிரஸித்த பூதாகாசம் அந்வேஷ்டவ்ய:—தேடி உபாஸிக்கத் தகுந்தது. பரமபுருஷன் உபாஸிக்கப்படத் தகுந்தவன் என்று இல்லை-அதற்கு (தஹராகசத்திற்கு) உள்ளே யிருப்பது த்யான யோக்யம். மேலும் தஹராகாசம் தியானிக்கத் தகுந்த பரம்பொருளைவிட வேறுபட்ட பூதாகாசம் - தஹ்ராகாசமாக கருதப்பட்டிருக்கும் வஸ்து - என்கிருன். பூர்வபக்ஷி]

(பரம புருஷன்தான் சொல்லப்படுகிருன் என்பதற்கு பல காரணங்களும் உள. தஹரோஸ்மிந்நந்தர ஆகாஸ-என்று தஹராகாசத்தை பிரஸ்தாபித்து தஸ்மிந்யதந்த ஸ்ததன்வேஷ்டவ்யம்—என்று அதனுள்ளே யிருப்பதாகச் சொல்லி-பிறகு தத் அந்வேஷ்டவ்யம்-என்று "தச்" சப்தத்தாலே-தஹராகாசமென்ன, அதனுள் இருக்கும் வஸ்து என இரண்டையும் எடுத்து உபய உபாஸ்யம் என்று சொல்லி, உள்ளேயிருப்பது குணுஷ்டகமாகிற ஏஷ ஆத்மா அபஹதபாப்மா...ஸத்யஸங்கல்ப-வரை-எட்டு கல்யாண குணங்கள் உபாஸ்யம். தஹராகாசமே அஷ்டகுண யோகத்துடன் கூடியிருப்பது-ஆகாச சப்தம் பூதாகாஸத்தைக் குறிக்காமல்-அதுவும் பரமாத்மாவரை சொல்லும், ஆகாச சரீர பரமாத்மா - என்று சொல்லும்படி ; தஹராகாசசப்தம் நிர்த்ஷ்டம் பரம புருஷனே என்பது சித்தாந்தம்.)

**ஸ்ரீபாஷ்யம்:**—அந்தஹ்ருதய புண்டரீகத்திலே எந்த தஹராகாசமிருக்குமோ, எதற்குள்-அந்தர்வர்த்திக்கும் குணங்களுடன் கூடியதாகவும் இருக்கிறது என்று காட்டி இந்த இரண்டும் உபாஸிக்கப்பட வேண்டியது "அன்வேஷ்டவ்யம்" என்று அர்த்தம்.

இங்கு—तदन्वेष्टव्यम् என்பதில் तत् சப்தத்திஞல் தஹரா காசம்; அதற்குள் எது இருக்கிறதோ-அந்தர் வர்த்தியாகவிருக்கும் அதனுடைய குணங்களைச் சொல்வதற்கும், எண்ணப்படுவதால் ஆகவே இந்த இரண்டையும் (உபயம்) உபாஸனத்திஞல் தேடப் படவேண்டியது என்று அர்த்தம் சொல்லப்பட்டதாகிறது, यदिदमस्मिन् ब्रह्म पुरे दहरं पुण्डरीकम् वेश्म என்பதால் அர்த்தம்-இப் போது சிறிய தாமரையைப்போல வாசஸ்தலம் ஹ்ருதயத்திலே பிரும்மபுரத்திலே (தேகத்திலே) இருக்கிறது. तच्छब्देन தஹரா காசத்தையும் தஹராகாச சப்தத்திஞல் பரபிரும்மத்வமும்— तस्मिन् यदन्तः என்பதால் அதன் குணத்வமும்-இந்த இரண்டையும் (பராம்ருஸ்ய) விளக்கிச் சொல்லி—தத் சப்தத்திஞல் இந்த இரண்டையும் தேடவேண்டிய பொருளாகச் சொல்லப்படுகிறது. அது எவ்விதம் யேற்படுகிறது என்பதற்கு சமாதானமாக கேள்— நான் சொல்கிறேன் என்று குரு ஆரம்பிக்கிஞர். (இங்கு இராமா னுஜரின் அபிப்ராயம்—தஹராகாசம் என்பது பூத ஆகாசமில்லை- ஆகாசத்திற்குள் எது இருக்கிறது என்று சிஷ்யன் கேள்வி கேட்க- ஆசார்யர் பதிலளிக்கிஞர்—தஹராகாசம் என்பது சிறியதில்லை— அதில் எல்லா வஸ்துக்களும் அடங்கியிருக்கின்றன என்பதாம். பிரசித்த ஆகாச உதாரணத்திஞல் குரு விளக்கிஞர். (பிரசித்த ஆகாசம் ஒரு காரியம்) சிஷ்யன் எல்லாக்காரியங்களும் அழிபவை யாகவிருக்கின்றன, இந்த தேகமும் ஹ்ருதயபுண்டரீகமும் அழியும் வஸ்து தானே என்று சொல்ல; குரு பதிலாகச்சொல்வது— தஹராகாசம் அழியாதது-அம்ருதமானது; அதற்கு பல கல்யாண குணங்கள் உண்டு, சத்யகாமத்வம் முதலிய நற்பயன்களும் ஏற் படுகின்றன. அதுவே பரபிரம்மம் என்று போதிக்கின்ஞர்.)

குரு சிஷ்யனிடம் சொல்கிஞர்—"நன்ருகக் கவனி. यावान् वा अयमाकाशः तावानेषोऽन्तर्हृदय आकाशः சா. 2. 8-1-3 பூதாகாசம் எவ்வித அளவாக பெரியதாக விருப்பினும் அவ் விதமே ஹ்ருதயத்துக்குள்ளிருக்கும் தஹராகாசத்தின் அளவும் பெரிதாகவிருக்கிறது. அந்தபூத ஆகாசத்தின்அளவு எவ்விதமா யினும்-அதுதான் அந்த தஹராகாசத்தின் அளவு—(ஹ்ருதயத்தி னுள்ளே யிருப்பது—) (சா. 2. 8-1-3) இதஞல் சொல்லப் படுவது—தஹராகாசம் அளவில் மிகப்பெரியது— அவ்விதம்

சொல்லிய பிறகு **उभे अस्मिन् द्यावा पृथिवी अन्तरेव समाहिते; उभावग्निश्च वायुश्च सूर्याचन्द्रमसावुभौ विद्युन्नक्षत्राणि** இந்த வாக்யத்தில் - பிரகிருதத்தில் தஹராகாசம் अस्मिन्नन्त இதில், அதாவது அதற்குள் உள்ளே யிருப்பது, அதில் ஸ்வர்க்கமும் பிருதிவியும், அக்னியும் வாயுவும் சூரியனும் சந்திரனும் மின்னல்களும் நக்ஷத்திரங்களும் எல்லாம் (அதில்) அடங்கியுள்ளன. अस्मिन् என்பதில் அடங்கியுள்ளன. தஹராகாசம் என்கிற பரமாத்மா விஷயமே இங்கே பேசப்படுகிறது. अस्मिन् (இதற்குள்)—இதனால் சொல்லப்படுவது இந்த தஹராகாசம் எல்லா உலகத்திற்கும் ஆதராமாக விருக்கிறது—என்பதைக் காட்டி பிறகு **यच्चास्येहास्ति यच्च नास्ति सर्वं तदस्मिन् समाहितम्** என்று சுருதியிருப்பதால் மறுபடியும்—அஸ்மிந்நிதி என்பதால் பரமாத்மாவே (தகராகாசமே) என்று சொல்லப்பட்டு, இந்த வாக்யத்திலே "எதுவெல்லாம்—**अस्य उपासकस्य** இங்கே உபாஸகனுக்குச்சொந்தமாகவிருக்கிறதோ-எது சொந்தமில்லாமலிருக்கிறதோ - அவை எல்லாம் अस्मिन् சப்தத்தில் அடங்கியுள்ளது. (சா. 2. 8-1-3) அதே தஹராகாசம் अस्मिन् என்கிற சப்தத்தால் மீண்டும் நினைக்கப்படுகிறது" (இதில்) "மேலும் இதனால் சொல்லப்படுவது — இந்த தஹராகாசம் உபாஸகனுக்கு எது வெல்லாம் (நிரதிசய போக்யத்வம்) போக்ய ஸாதனங்களாக விருக்கிறதோ—எந்த போக்ய வஸ்துக்கள் இங்கு இல்லாமல் ஆனால் (அவனால்) விரும்பப்படுகின்றனவோ—இவை எல்லாம் உபாஸகனுடைய ஆசையில் வேண்டப்பட்டவை என்று சேர்க்கப் பட்டனவோ, அப்பேற்பட்ட எல்லாப் போக்ய ராசிகளின் வஸ்துக்கள் இந்த தஹராகாசத்தின் உள்ளே அடங்கியுள்ளன. பிறகு சொல்லப்படுகிறது—" இந்த தஹராகாசம் தேகத்தின் ஒரு அவயவமான ஹ்ருதயத்திற்குள் இருக்கிறதாகச் சொல்லப்படினும் — இந்த தேகம் ஜனன மரணம் இத்யாதி தோஷங்களுக்கு வசப்படுவதாயினும்—இந்த தஹராகாசம் யாதொரு மாறுதலையும் (விகாரத்தையும்) எந்தக் காரணத்தினால் அடைவதில்லை—ஏனெனில் இந்த தஹராகாசம் எல்லாப் பொருள்களுக்கும் பரம காரணமாக விருப்பதால் அதி ஸூக்ஷ்மமாக விருப்பதாலும்-நிர்விகாரத்வமாகவும் விருக்கிறது—" அதுதான்-**एतत् सत्यं ब्रह्म पुरम्**-இந்தக் காரணத்தினால் இந்த ஸத்யமான தத்வம், பிரும்மாக்யபுரம் (தேகம்) என்று சொல்லப்பட்டு—

அதுவே அந்த தஹராகாசம் ஸத்யமான தத்வம் இந்த சம்பூர்ண உலகத்திற்கு வாசஸ்தலமாக கூறப்பட்டு; பிறகு இந்த வாக்யத்தாலே—अस्मिन् कामाः समाहिताः என்பதில், अस्मिन् இதற்குள் இந்த தஹராகாசத்துக்குள் எல்லாக் காமங்களும் அடங்கியுள்ளன (சா. 2. 8-1-5) இதில் தஹராகாசம் अस्मिन् சப்தத்தினுல் காட்டப்பட்டு எந்த கல்யாண குணங்கள் விரும்பப்பட்டவையோ - அவைகளை காமா: என்கிற பதத்தால் (காம்ய பூத கல்யாணகுண விசிஷ்டத்வம்—இந்த குணங்களுடன் சேர்ந்துவிருப்பதாகக் குணுந்காமா) எனக்காட்டி—மேலும் இங்கு சொல்லப்படுகிறது—தஹராகாசம் காட்டப்படுகிறது அதாவது தஹராகாசம் இத்தகைய விரும்பத்தக்க கல்யாண குணங்களுடன் கூடிய தன்மையைச் சொல்லி, இவை விரும்பத்தக்கதாகவும் என்று சொல்லி, அத்துடன் இந்த தஹராகாசம் ஆத்மாவாக விருப்பதும், एष आत्माऽपहतपाप्मा என்பவைகளால் சுருதி ஆரம்பித்து; सत्य सङ्कल्पः; ஸத்யஸங்கல்பனுகயிருக்கிறுன் என்று முடித்துவிடுகிறுர்) (சா. 2. 8-1-5); பிறகு இந்த வாக்கியத்தினுல் यथा ह्येवेह प्रजा अन्वाविशन्ति— என்று ஆரம்பித்து—எப்படி பூமியிலுள்ள ஜனங்கள் கடைப்பிடிக்கிறுர்களோ......முடிக்கிறபோது — அவர்களுக்கு எல்லா உலகங்களிலும் தங்கள் இஷ்டப்படி சஞ்சாரமில்லை—तेषां सर्वेषु लोकेष्वकामचारो भवति—என்று முடித்து—சா. 2-8-1-6); இதனுல் சொல்லப்படுவது—எவர்கள் இந்தவாக்ய பிரகரணத்தில் தஹராகாசத்தில் குணுஷ்டகம் என்கிற எட்டு குணங்களை அறிகிறுர்களில்லையோ—எவர்களுக்கு இந்த ஆத்மா—தத்விசிஷ்டம்—இந்த அஷ்ட குணங்களுடன் சேர்க்கை பெற்றது பரமாத்மா என்றும் இந்த தஹராகாசம் என்கிற சப்தத்தினுலும் காட்டப்படுகிறது என்பதும் தெரியவில்லையோ-எவர்கள் இந்த ஆத்மாவை உபாஸிக்காமல் தவிர்த்து ஆத்மாவைவிட வேறுன போக்ய வஸ்துக்களை அடைய வைதிக இஷ்டி கர்மாக்களைச் செய்கிறுர்களோ—இந்த இருவகை ஜனங்களும் அஸ்திரமான (நசிக்கக்கூடிய) பலன்களை அடைந்து ஸத்யகாமத்வத்தை அடைகிறுர்களில்லை.

மேலும் இந்த வாக்கியத்தில் अथ य इहात्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामान्, तेषां सर्वेषु लोकेषु कामचारो भवति—என்பவைகளால், எவர்கள் தஹராகாச சப்தத்தினுல் குறிக்கப்படும் ஆத்

மாவை நன்கு தெரிந்து கொண்டவர்களாகவும் तद्विदः அதற்குள் அந்தர்வர்த்திக்கும் கல்யாண குணங்களை அறிந்தவர்களாகவும் இருக்கிறார்களோ—அந்த கல்யாண குணங்கள் அபஹதபாப்மத் வாதி—இத்யாதி (பாபமின்மை இத்யாதி குணாஷ்டகம்) என்று அறிகிறார்களோ, அவர்களுக்கு எல்லா உலகங்களிலும் எங்கும் சஞ்சரிக்கிற சக்தி யேற்படுகிறது—சா. 8. 8-1-6 இதில் தஹராகாசம் என்கிற பதத்தினால் அறிவிக்கப்படும் ஆத்மாவை எவர்கள் அறிகிறார்களோ—அதில் விரும்பத்தக்க கல்யாண குணங்கள் இருப்பதாகச் சொல்லப்படுகின்றதோ (அதாவது அபஹதாப் மத்வாதி முதலிய கல்யாண குணங்களை) அவர்களுக்கு பரம புருஷனுடைய (பகவத்) பிரஸாதத் தினால் ஸர்வ காம (ஆசைகளின்) அவாப்தியும் (நிறை வேறுதலும்) ஸத்ய ஸங்கல்பம் முதலிய சக்திகளும்கிடைக்கப் பெறுகின்றன. ஏனெனில பரமாத்மா உதார குண ஸாகரமாக விருக்கிறார் அன்றோ!

ஆகவே தஹராகாசம் பரபிரும்மமேயாகும் -அதற்குள் அந்தர்வர்த்தியாக (உள்ளே உடையதாக) அபஹதபாப்மத்வாதி கல்யாண குணங்களும் இருக்கின்றன; இந்த இரண்டையும் (அதாவது தஹராகாசம் எனப்படும் பிரும்மத்தையும்—அதனுள் இருக்கும் கல்யாண குணங்களையும்) இரண்டும் அன்வேஷ்டவ்யம்-விஜிக்ஞாஸிதவ்யம்-அறிய இச்சைப்பட்டு அடையப்படவேண்டும் (ஒருவனால்). இதே விஷயத்தை வாக்யக்காரரும் போதாயனர் ஸ்பஷ்டமாகக் கூறுகிறார். तस्मिन् यदन्तरिति कामव्यपदेशः—எதுக்குள்ளே எது வசிக்கிறதாக விருக்கிறதோ—இதில் எது இருக்கிறதோ—அந்த உபதேசம். அந்த விரும்பத்தக்கக் கல்யாண குணங்களையும் சொல்வதாம.

இந்தக் காரணங்களாலே—தஹராகாசம் பரமேவ பிரும்மம் தான் என்பதாகும்.

**ஸூத்ரம் — गतिशब्दाभ्याम् : तथाहि दृष्टम् : लिङ्गञ्च**

*கதிஸப்தாப்யாம்—ததாஹி திருஷ்டம்லிங்கம் ச (1 - 3- 14)*

கதிஸப்தாப்யாம் (தஹராகாசத்திடம்) எல்லோருக்கும் கதியாகச் சொல்லப்படுவதாலே—அதாவது ஜீவாத்மாவின்கதி—

போவதும் திரும்பி வருவதும்—அதனைக் குறித்துப் பிரும்ம லோக சப்தம் உபயோகப்படுத்தப்பட்டதாகையாலே—தஹரா காசம்—பரமாத்மாவே; ததா ஹீதிருஷ்டம் (அப்படியே) ஸ்ருதி களிலும் வேறு வாக்யங்களிலும் காணப்படுகிறதன்றோ! லிங்கம்ச—(இந்த கதி சப்தங்களே) தகுந்த அடையாளங்களாக விருக்கின்றன. (அனுமானிப்பதற்கு தகுந்த காரணங்களாக விருப்பதால்).

மேலும் தஹாராகாசம் மேலான பரபிரும்மமே என்று இந்தக் காரணங்களாலும் காட்டப்படுகிறது:—சா. 2-8-3-2 तद्यथा हिरण्यनिधिं निहित मक्षेत्रज्ञा उपर्युपरि सञ्जरन्तो न विन्देयुः एवमेवेमाः सर्वाः प्रजाः अहरहर्गच्छन्त्य एतं ब्रह्मलोकम् न विन्दन्ति, अनृतेन हि प्रत्यूढाः— பொன் நிதியுள்ளவிடத்தின் தன்மையை அறியாதவர்கள்; அவ்விடத்தின் மேலேயே பல கால் சஞ்சரித்த போதிலும் பொன் நிதியை எப்படி அறிந்து அதை அடையமாட்டார்களோ— அப்படியே இந்த எல்லாச் சேதனர்களும் பிரம்மலோகம் எனப் படும் இந்த தஹராகாசத்திடம் தினந்தோறும் (தூங்கும்போது) சென்ற போதிலும்கூட இதை அறியமாட்டார்கள்; (ஏனெனில்) இவர்கள் அறிவின்மையினுல் (பிரகிருதியினுல்) மறைக்கப் பட்டவர்களன்றோ! அறிவற்ற சேதனர்கள் தூங்கும்போது தினமும் एतम् இந்த தகராகாசத்தை அடைகின்றனர் என்று ஓதப்படுகிறது. ஏதம் என்று முன் பிரஸ்துதமான தஹராகாசத் தைக்காட்டி—கந்தவ்யம் அடையப்படுவதாகவும் (தஹரா காசத்தை) எங்கே அவர்கள் செல்கிறுர்களோ—அதை பிரும்மலோக சப்தத்தாலும் வழங்குகிறபடியால் அதாவது (கதியும் பிரும்மலோக சப்தமும்) அதனுல் இரண்டினுலுமே தஹராகாசம் பிரும்மமே எனக் காட்டுகின்றன.

சுஷுப்தியைப் பற்றி பின்னுல் விரிவாகச்சொல்லப்படும் இங்கே தஹராகாசம் மேலான பரபிரும்மம் என்று சொல்லப் படுவதற்கு மீண்டும் சில காரணங்கள் சொல்லப்படுகின்றன.

(இங்கு தூங்கும்போது) யேற்படும் நிலை சொல்லப்படுகிறது. தஹராகாசத்தை பிரும்மபுரம் என்றும் ஸத் என்றும் இங்கு சொல்லப்பட்டிருப்பது—சா—உபநிஷத்தில் (8-3-2)ல் பிரும்ம லோகம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பிரு-உப-4-3-33 & 4-4-23 ஜீவன் ஆழ்ந்த தூக்கத்தில் பிரும்மத்தில் அடங்குகிருன் என்று சொல்லப்பட்டிருப்பதால் தஹராகாசம் பிரும்மம் என்று சொல்வதற்குப் பிரமாணமாகவிருக்கிறது.

ராமானுஜர் சாங். 8-8-3 வாக்யமாகிற एवमेव खलु···सम्पश्यामहे என்கிற வாக்யத்தை வேறு விதமாக அர்த்தம் செய்கிருர். பிரும்மலோகம் எனபதை அந்தர்யாமி என்கிருர். இங்கு ஒரு உதாரணம் சொல்லப்படுகிறது. அறிவற்றவர்கள் புதையல்மேல் தினமும் நடந்து செல்கிருர்கள் அதுபோல நாமும் ஹ்ருதயா காசத்தில் புதைந்திருக்கும் பரமாத்மாவைத் தெரிந்துக்கொள் ளாமல் நடமாடுகிரோம். ஜீவனுடைய கதி ஆகாசத்தில் இருக்காது; அது ஒரு அவஸ்தையில் பிரும்மமும் ஜீவனும் ஒன்ருகச்சேர்ந்து எளிதில் பிரிக்கமுடியாதபடியிருக்கும். நிலையில் நடமாட்டம்யேற்படும், இல்லாவிடில் ஜீவகதி ஸ்ருஷ்டி காலத்தில் இருக்கிறபடி இருக்கும். அது எக்காலத்திலும் இருப்பது, ராமானுஜர் தங்கப்புதையல் விஷயத்தை விவரமாகச் சொல்லி, அதனுல் ஒரு ஆட்சேபத்தை மறுத்து அதாவது ஆத்மா ஹ்ருதய ஆகாசத்தில் உறங்குகிறது பிரும்மத்தினிடம் அடங்குவதில்லை என்கிற ஆட்சேபத்தை மறுத்துச்சொல் கிருர். அறிவில்லாதவர்கள் புதையல்மீது அதை தெரிந்து கொள்ளாமல், நடப்பதுபோல என்கிருர்.

ஸ்ரீபாஷ்யம்:- நீ கேட்கலாம் கதியும் பிரும்மலோக சப்தமும் எப்படி தஹராகாசத்தைப் பிருஹ்மமாக ஸ்தாபிக்கிறது? அதற்கு நாம் பதில் சொல்வோம் तथा हि दृष्टं (சுருதிகளிலே அவ்விதமே ஓதப்பட்டிருப்பதாலே). மற்ற வேறு சுருதிகளிலும் பிரும்மத்தி னிடத்தில் எல்லா க்ஷேத்ரக்ஞர்களும் (ஜீவர்களும்) ஆழ்ந்த

தூக்க சமயத்திலே, (சுஷுப்தியிலே) மேலான பரமாத்மாவினிடம் செல்கின்றனர் என்று ஓதப்பட்டிருக்கிறதைக்காணலாம். एवमेव खलु सोम्येमाः सर्वाः प्रजाः सति संपद्य न विदुः सतिसंपत्स्यामहे इति। (சா.2 6.9.1) "இந்த விதமாக பிரியனே, எல்லாப்பிராணிகளும் ஸத்தை அடையப்போகிறோமென்றோ; அவர்கள் விழிப்புற்றதும் தாங்கள் ஸத்திலிருந்து திரும்பு வந்திருக்கிறோம் என்றோ தெரிகிறதில்லை." (இங்கு ராமானுஜர் புதையல் உதாரணத்தைக் காட்டி விளக்குகிறார். सत आगम्य न विदुः सत आगच्छामह इति ஸத்திலிருந்து திரும்பிவந்திருக்கிறோம் என்று, ஆகவே பிருஹ்ம லோக சப்தமும் இன்னொருயிடத்தில் பரமாத்மாவைச்சொல்கிறது என்று இதில் காட்டப்படுகிறது (பிரு.2.4.3.3 ; 4.4.23) एष ब्रह्मलोकः सम्राडिति होवाच யாக்ஞ்யவல்கியர் ஜனகரைப் பார்த்து சொல்கிறார் சுஷுப்தியில் ஜீவாத்மாவைத்தாங்குவது இந்த பிருஹ்மலோகம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதமான ஜீவாத்மாவின் பிரும்மத்தினிடம் கதிமற்ற சுருதிகளில் காணப்படவில்லை. அதாவது பிரும்மத்தைவிட வேறானவைகளைச் சொல்லும் சுருதிகளிலே காணப்படவில்லை என்று அர்த்தம். ஆனால் இந்த விஷயமே சுருதிகளில் இவ்விதம் சொல்லப்படுகிறது. சுஷுப்தியில் எல்லா ஜீவர்களும் தஹராகாசத்தில் அடங்குகிறார்கள். எப்படி துக்கங்களிலிருந்து விடுபட்டவர்களாகவும் எப்படி பிரளய காலத்தில் எப்படி ஒடுங்கியிருந்தார்களோ அதுபோல; श्रूयमाणं अस्य परब्रह्मत्वेपर्याप्तं लिङ्गम् இந்தக் காரணத்தினாலே, அடையாளம் சொல்லப்பட்டதாலே தஹராகாசம் மேலான பரபிருஹ்மமே.

அதேபிரகாரம் பிரும்மலோக சப்தத்திற்கும் இந்த பிரகரணத்திலே பிரும்மந்-லோக என்றபடி அர்த்தம் சொல்வதாக ஒற்றுமை (ஸாம்யம்) காண்பிப்பதாகச்சொல்லி அதனாலே தஹராகாசத்தை கதியாக அடையப்படவேண்டிய பிருஹ்ம லோகமாக ஷஷ்டி ஸமாஸத்தினால் ஸமானாதிகரண ஸமாஸ

நியாயத்திஞல் ஸ்வதந்திரமாகவே வேறு பிரமாண உதவியின்றி இவ்விதம் தஹராகாசமே மேலான பிருஹ்மம் என்பது அனு மானத்திஞல் அறியப்படும்.

விளக்கம்:—இந்த அபிப்ராயத்திலே சூத்ரக்காரரும் சொல் கிருர். இவ்விதம் அனுமானிப்பதற்குச்சரியான காரணங்கள் லிங்கம் ச; ததாஹித்ருஷ்டம் இருக்கின்றன. நிஷாதஸ்தபதி நியாயத்தாலே கர்மதாரய பதத்தை இங்கு இருப்பதை ஷஷ்டிதத் புருஷத்தைவிட உபயோகப்படுத்துவதாலே இங்கே சந்தேகம் ஜீவன் சுஷுப்தியிலே உறையும் இடம் ஹ்ருதய ஆகாசத்திலா அல்லது ஹ்ருதயத்தினுள் வீற்றிருக்கும் பரமாத்மாவா? இதற்கு நிதி திருஷ்டாந்தத்திஞல் பரமாத்மா எனச்சொல்லப்பட்டு एषा एष आत्मा हृदि–என்பதால் பரமாத்மா என ஆதார ஆதேய சம்பந் தத்தால் காட்டியது. तेन புண்டரீகம் வேஸ்ம; தஹரோ அஸ்மிந் அந்தராகாஸே என்று ஹ்ருதஆ தாரகம், ஆகாசம் சப்தத்திஞல் ஓதப்படுகிறது. அந்த ஆகாசத்தை ஆகாசசரீர பரமாத்மாஎன்று சொல்லி அந்த பரமாத்மாவின் மகிமையை தரிப்பது एतत् सत्यं ब्रह्मपुरमिति वाक्यमपि परमात्मापरमेति अस्मिन् தஹராகாஸ சூத்ரத்தின் அர்த்தமாகும். தஹராகாசத்தை பரமாத்மாவை சொல்வதற்குக் காரணம் திருத்யா ஆஸ்ரய த்வாதி காரணங்கள். அதஞலே एष सर्वेश्वरः எனக்காட்டப்படுகிறது. பிரளயகால ஸாம்யமாக காட்டப்பட்டிருப்பது லிங்கம். பிரளயத்தில் எல்லாப்பிரஜைகளை யும் தரிப்பதாலே ஸாம்ய திருஷ்டாந்தம் கூறப்பட்டது நிஷா தஸ்தபதிநியாயம் பூர்வமீ 6.1.51-52.

இல்லாதபோஞல் இந்த சுருதி अहरहर्गच्छन्त्यः திஞேதிஞே கதி சுஷீப்தியில் சொல்லப்படுவதாலே (சா. 2. 8. 3. 2) இது ஸத்தினிடம் ஜீவன் சேர்வதை சொல்லவில்லை; அதற்கு மாருக, அந்தராத்மா எப்போதும் விருக்கிறபடியால் அந்த அந்தராத்மாவே பரமபுருஷார்த்தமாதலாலே அடையவேண்டிய

தாலே தஹராகாசத்தின் மேலே சஞ்சரிப்பது என்பது அந்த ராத்மாவாகும். अहरहर्गच्छन्त्यः தினந்தோறும் சுஷீப்தியில் செல்லுகிற இடம் என்பதாலே எல்லாக்காலங்களிலும் இருந்தும், அவ்விதமாயினும் அவனைப்புரிந்துக்கொள்ளாமலிருக்கிற படியால் அவனை சேதன ஜீவன் அடைகிறதில்லை. அந்த பரமாத்மாவை அறிகிறனில்லை. (அடைகிறனில்லை). எப்படி பூமியின்கீழேயுள்ள ஹிரண்ய புதையலை அதன்மேல் பல தடவைகள் நடந்து போனாலும் அதை தெரிந்துகொள்ளாமல் இருக்கிறார்களோ ஜனங்கள் அதே போல அந்தராத்மாவை தஹராகாசம் என்று தெரிந்து கொள்கிறதில்லை. அந்த அர்த்தம் இங்கேயும் கொள்ளவேண்டியது.

எளிதில் புரிபடாத தஹராகாசத்தின் மீது (பரமாத்மாமீது) இவ்விதம் அடிக்கடி நடப்பது ஜீவர்களுக்கு யேற்படுவதாயினும், அவர்களுக்குத்தெரிவதில்லை. நாம் அதே தஹராகாசமாகிற அந்தராத்மாவினால் நடத்தப்படுகிறோம் என்று; இதனால் அந்த தஹராகாசமே பரமாத்மாவாகும். அது எம்மாதிரியிருக்கிற தென்றால் யதா அந்தர்யாமி பிராஹ்மணத்திலே பி. மா. 6-7ல் य आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरो यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो यमयति—என்றும், பரமாத்மா ஆத்மாவினுள்ளே வசிப்பவனாகவும் எவனை இந்த ஆத்மா அறியாதோ எவனுக்கு சரீரம் ஆத்மாவோ எவன் உள் இருந்து ஆத்மாவை ஆள்கிறானோ அவனே அந்தர்யாமி அம்ருதன். (இங்கு ஆத்ம சப்தத்தால் ஜீவனைச்சொல்லியது); பிரு. 2-3-7-23 अदृष्टो द्रष्टा अश्रुतः श्रोता தான் பார்க்கப்படாமலே பரமாத்மா பார்க்கிறான். தான் கேட்கப்படாமலே அவன் கேட்கிறான். ஆகையால் இதை வேறு சுருதிகளாலே சொல்லவேண்டிய அவசியமில்லை. (தேவையில்லை) ஸ்வயமேவ இதைக்காட்டுகிறது. ஆகவே இம்மாதிரி சஞ்சரிப்பது புதையலின்மீது நடப்பதைப்போல உதாரணம்காட்டி மேலும் சொல்லப்படுகிறது. இம்மாதிரி சேதனன் பரமாத்மாவை

அடைவது பரம புருஷார்த்த மாதலால் ஹிருதயத்தின் உள்ளே விருப்பதால் ஆதாரமாக விருப்பதாலே अहरहः தினந்தோறும் சுஷுப்தியில் யேற்படுவதால் ஸர்வதா எல்லாப் பிராணிகளாலும் அறியப்படமுடியாதபடி இம்மாதிரி 'கதி' பரபிருஹ்மத்தை அனுமானிப்பதில் லிங்கமாக அடையாளமாகவிருக்கிறது.

இந்தக்காரணத்தாலும் தஹராகாசம் பரமாத்மாவே.

ஸூத்ரம் धृतेश्च महिम्नोऽस्यास्मिन्नुपलब्धेः (1-3-15)

த்ருதேஸ்ச மஹிம்நோ அஸ்யாஸ்மிந்நுபலப்தே:

அஸ்யமஹிம்ந,—பரமாத்மாவின் மகிமை த்ருதேஸ்ச எல்லா உலகங்களையும் தரிக்கிறபடியால், அஸ்மிந் உபலப்தே:—அதே பெருமை தஹராகாசத்திலேயும் காணப்படுவதால் இந்த தஹராகாசம் பரமாத்மாவே.

अथ य आत्मा-பரமாத்மாவை ஆத்மாவாகச்சொல்லி அவனே தஹராகாசம் என்று சொல்லி स सेतुर्विधृतिरेषां लोकानामसंभेदाय— அவனே உபாயமாகவும் (பாலமாகவும்) எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாகவும், இருப்பதால் அவைகள் கலக்கமடைகிறதில்லை (சா. 2.8.4.1); இதனால் தஹராகாசத்திற்கு ஜகத் விதரணம் (ஜகத்திற்கு ஆதாரமாக விருப்பது) சொல்லப்படுவதாலே தஹராகாசத்தை பரமாத்மா அதை அடைகிற வஸ்துவாகச் சொல்லப்படுவதாலே, ஜகத் விதரணமும் பரமாத்மாவுக்கு மேலான மகிமையாதலாலே (தரிப்பது) தஹராகாசத்தின் பெருமையாகும். இது பிரு. 2. 4. एष सर्वेश्वर एष भूताधिपतिरेष भूतपाल एष सेतुर्विधरण एषां लोकानाम संभेदाय பரமாத்மாவே பூதாதிபதியே அவரே பூதங்களை ரக்ஷிப்பவர், அவரே உபாயம் (ஸேது-பாலம்) ஆதாரம், தாங்குகிறார் இந்த உலகங்களை என்றும் சொல்லப்படுகிறார். இவனே இந்த லோகங்கள் கலங்காதபடி இருக்க இவனே அணையைப் போல தரித்து நிற்பவன்—என்று காட்டப்படுகிறது. மேலும் பிரு. 2. 3-8-9—एतस्य वा अक्षरस्य प्रशासने

(இந்த அக்ஷரத்தின் மேலான நியமனத்தாலே गार्गि सूर्यःचन्द्रम विघृतौ तिष्ठतः சூரியன் சந்திரன் ஆகியோர் தரிக்கப்படுகிறார்கள். தங்கள் தங்கள் ஸ்தானங்களில் அமர்த்தப்பட்டு தரிக்கப்படுகிறார்கள். இதிலும் சொல்லப்படுவதைக்காணலாம்—எல்லோரும் தாங்கப்படுவதாகிற அந்த மகிமை பரமாத்மாவுக்கே பொருந்தும். அவனே தஹராகாச விஷயத்திலும் இருப்பதால் இக்காரணத்தாலும் தஹராகாசமே ஸ்ரீமந்நாராயணனாகும்.

சூத்ரம் प्रसिद्धेश्च—(1-3-16)

பிரஸித்தேஸ்ச (ஆகாச சப்தம் பரமாத்மாவிடம்) பிரஸித்தியுடையதாலும் தஹராகாசம் பரமாத்மாவே.

ஆகாச சப்தம் மேலான பிருஹ்ம விஷயத்தில் சொல்லப்பட்டதாகும் (ஆகாசசரீர பரமாத்மாவென்று); தை. ஆந. 7– कोह्येवान्यात् कः प्राण्यात् यदेव आकाश आनन्दो न स्यात् ஆனந்த மயனாய் எங்கும் பிரகாசிப்பவனாகையால் ஆகாசம் எனப்படும் பரமாத்மா (ஆகாச சரீர பரமாத்மா) இல்லாவிடில் எவன் இம்மை மறுமை பயன்களை அடைய முடியும்? சா.2..1-9-1ல் सर्वाणि ह वा इमानि भूतान्याकाशादेव समुत्पद्यन्ते இந்த எல்லா பூதங்களும் பரமாத்மாவிடமிருந்தே உண்டாகின்றன—தஹராகாசத்திலே, இங்கே அபிப்ராயம் யாதெனில் பிரஸித்தமான ஆகாச சப்தம் அபஹதபாப்மத்வாதி குணங்களால் ஓதப்படுவதாலே இதே அபிப்ராயம் பிருஹ்மந் விஷயத்திலும் பிரஸித்த ஆகாசத்தைவிட ரொம்ப பலியஸ் ஆகும். "அந்தர் ஹ்ருதய ஆகாச" முதலான வேத வாக்யங்களிலும் பரமாத்மாவுக்கே ஆகாச சப்தம் பிரஸித்தியாதலால் இங்கே தஹராகாஸம் பரமாத்மா என்று பலியலான வேதபிரமாணத்தினாலே (அபிப்ராயத்திலே) காட்டப்படுகிறது.

[தஹர ஆகாசத்தை ஜீவன் என்று சொல்லலாமா என ஒரு சங்கை எழும், ஆனால் ஜீவனுக்கு அந்தர்யாமியாக விருப்பவன் பரமாத்மா என்பது அந்தர்யாமி பிராஹ்மணம் இத்யாதிகளால்

காட்டப்பட்டது. இங்கே ஜீவகுணம் ஒன்றுமில்லை. ஏற்கனவே ஆகாசம் என்கிறபதம் பரமாத்மாவைக்குறிக்கும் என்று ஆகாச சரீர பரமாத்மா कामचार एव एष आत्मा என்றும் धृत्याश्रयस्य परमात्मत्वे என்றும், सर्व ஸமன்வயம் एष सर्वेश्वरः என்றும் சொல்லப்பட்டதால் ஜீவனுக்கு ஒட்டாது. மேலும் பத்த ஜீவனுக்கு அபஹத பாப்மத்வாதி குணங்கள் யேற்படாது இதே கருத்து மீண்டும் அடுத்த சூத்திரத்தில் விளக்கப்படும்.]

இவ்விதமாக தஹராகாசம் பிரஸித்த ஆகாசம் இல்லை என்று காட்டப்பட்டது. இப்போது இந்த சந்தேகம் எழுந்ததும் அது ஜீவனாக விருக்கலாமே என்பதற்கு அடுத்த 'சூத்ரத்தில் சூத்ரக்காரரே விளக்குகிறார்.

சூத்ரம்-17 इतरपरामर्शात् स इति चेन्नासंभवात् (1-3-17)

இதர பராமர்ஸாத்ஸ இதி சேந்நாஸம் பவாத் (1-3-17)

இதர பராமர்ஸாத் (பரமாத்மாவைவிட வேறுபட்ட ஜீவனை குறிக்கையால் ஸ:) தஹராகாசமே ஜீவனே இதிசேத் என்றால் ப் பொருந்தாது. அஸம்பவாத் தகராகாச குணங்களாகிற அபஹத பாப்மத்வாதி பத்தஜீவனிடமும் நிருபாதிகமாக (முக்த ஜீவனுக்கும்) இருக்கமுடியாது.

என்ன சொல்லப்பட்டதென்றால் வாக்யசேஷவசாத் (பிரகரணத்திலே) தஹராகாசம் பரபிரும்மம் தான் என்பது அது அயுக்தம். வாக்ய சேஷத்தில் மீதியுள்ள சுருதிவாக்யங்களிலே ஜீவனையல்லவோ காட்டியிருக்கிறது உதாரணமாக अथ एष संप्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परम् ज्योतिरुपसंपद्य स्वेनरूपेणाभिनिष्पद्यते, एष आत्मेति होवाच, एतदमृतमभय मेतद्ब्रह्म என்று சா. 2, 8-3-4ல் இப்போது ஜீவன் தேகத்திலிருந்து உயரக்கிளம்பி மேலான ஜ்யோதிசை யடைந்ததும் முக்தாத்மா அவன் தன் ஸ்வஸவருபத்தை அடைகிறான் அவனே ஆத்மா என்று ஆசார்யா பிரஹஸ்பதி விரோசனன், இந்திரனுக்கும் உபதேசித்தார். அவனே அம்ருதன், அவனே அபயன், அவனே பிருஹ்மம்.

பிரஜாபதி வித்யையில் பிரும்மா இந்த ஆத்மா கண்ணில் தெரிகிறதென்று உபதேசித்தார். அப்போது கண்ணில் நிழல் விழுகிறபடியால் பிரதிபிம்பம்தான் ஆத்மா என்று நினைத்துக் கொண்டு கண்ணைவிட கண்ணாடியிலோ (மடக்கில் ஜலத்திலோ) நன்றாகத்தெரிகிறதே அதுதானே என்று கேட்க அலங்காரம் செய்துகொண்டு பாருங்கள் என்று பிரஜாபதி சொல்ல; அவ்விதம் அலங்காரத்துடனே பார்த்த விரோசனன் இதுதான் ஆத்மா என்று முடிவு செய்து அசுரர்களுக்கு உபதேசித்து தேஹாத்ம வாதியானான். ஆனால் இந்திரன் திருப்தி பெறாமல் அவன் குருவினிடம் வர அவனுக்கு படிப்படியாக ஸ்வப்நாவஸ்தையிலுள்ள ஆத்ம ஸ்வரூபம் உறக்கத்திலுள்ள ஆத்ம ஸ்வரூபத்தைச்சொல்லி இதனால் உறக்கத்திலும் முழு அக்ஞானமிருப்பதாலே திருப்திபெறாத இந்திரனுக்கு குருவான பிரஹஸ்பதி தஹரவித்யையில் எம்பெருமானுக்குச்சொன்ன எட்டு குணங்கள் அபஹதபாப்மத்வாதி இவை ஜீவனுக்கும் உண்டு உடலினின்று கிளம்பி உத்தம புருஷனைச்சேர்ந்து ஸ்வயரூபம் பெற்று சுகமடைகிறான். ஸங்கல்பிக்கிறபடி எல்லாம் கைகூடும் என்று பிரஜாபதி இந்திரனுக்கு உபதேசிக்க இந்திரன் இதை தேவர்களுக்குஓதி ஜீவாத்மா ஸ்வரூபத்தை விளக்கினான் அபஹதபாப்மத்வம் முதலியவை ஜீவாத்மாவுக்கு உண்டு, பரமாத்மாவுக்கும் உண்டு, பரமாத்மாவுக்கு சேஷமாயிருப்பது—இப்படியே ஆத்ம ஸ்வரூபம் இந்த வித்யையாலே சொல்லப்பட்டதாகும்.

அவ்விதமாயினும் दहरोऽस्मिन्नन्तराकाशः—தஹரத்தில் மத்யவர்த்தியில் இருக்கும் ஆகாசத்தினுள்ளேயிருக்கும் இதனாலே ஹ்ருதய புண்டரீகம்; அதில் ஆகாசம் அதினுள் பரமாத்மா எனப்படும் தஹராகாசம் இதில் உபமான உபமேய சம்பந்தமிருக்குமோ என்பதற்கு ஆகாசம் (ஹ்ருதய புண்டரீகத்திலும்) தஹராகாசம் (உள்ளிருக்கும் ஆகர்சத்தினுள்ளிருப்பதால்) உபமான உபமேய

சம்பந்தமில்லை. ஏனெனில் வெவ்வேறு வஸ்துக்கள் வெவ்வேறு தன்மையுடன் ஓதப்படுகின்றன. அவ்விதமிருப்பினும் வாக்ய சேஷம் ஜீவனைச்சொல்வதாலே தஹராகாசத்திற்கு ஜீவத் தன்மை யேற்படலாம். எட்டு குணங்கள் ஆஸ்ரயித்வம் இருப்ப தாலே ஆகாச சப்தம்கூட பிரகாசம் அதுபோன்று மற்ற குணங் களுடன் சம்பந்தம் பெற்றபடியால், ஆகாச சப்தத்திற்கு ஜீவ னார்த்தம் ஏற்படலாம்.

அவ்விதமானால் நாம் பதில் சொல்லுவது नासंभवात् தஹரா காச குணங்கள் ஜீவனிடம் யேற்படுவதற்கு பிரஸக்தியில்லை. ஆகவே தஹராகாசம் ஜீவனல்ல அதனால் அமஹதபாப்மத்வத் குணங்கள் ஜீவனுக்கு (பத்ததசையில்) ஏற்படுவதில்லை.

பூர்வபக்ஷி சொல்வது ஸம்பிரஸாதன் (ஜீவனும்) தஹரா காசமும் ஒன்றுதான் ஏனெனில் ஸம்பிரஸாதனை ஆத்மந் பிருஹ்மந் சப்தத்தால் குறிக்கப்படுகிறது அம்ருதமும் அபயன் என்றும் கூறப்படுகிறது. இப்பேற்பட்ட குணங்கள் பரம் ஜ்யோதிசுக்குத்தான் உண்டு. ஸம்பிரஸாதனுக்கு உண்டு என்று சொல்லவில்லை. எட்டு குணங்களும் நிருபாதிகமாகவே பிருஹ்மத்திற்கு உண்டு; முக்தனுக்கும் ஏற்படுகின்றன. சூத்ரத்தில் இதர பராமத்ஸாத் ச இதி பூர்வபக்ஷம், चासंभवात् சித்தாந்த சூத்ரமாகும்.

சூத்ரம் 18 उत्तराच्चेदाविर्भूतस्वरूपस्तु (1.3-18)

**உத்தராச்சேதாவிர்பூத ஸ்வரூபஸ்து (1.3-18)**

உத்தராத்சேத் மேல் சொல்லப்பட்ட பிரஜாபதி வாக்கியத் தாலே (அதாவது அபிஹதபாப் மத்வாதி குணங்களை உடைய வன் ஜீவனே) என்றால் ஆவிர்பூத ஸ்வரூப: து—பரமாத்மாவின் அருளாலே கிடைக்கப்பெறும் ஸ்வரூபத்தையுடைய முக்தன் அன்றோ (அங்கு சொல்லப்படுகிறான்).

உத்தராத்—ப்ரஜாபதிவாக்யாத்—जीवस्यैवापहत पाप्मत्वादि गुणयोगो निर्णीयते-इति चेत्-பரவித்யைக்கு அங்கமாய் இருக்கும் ப்ரஜாபதிவித்யை; இதில் ப்ரஜாபதி என்பவர் தன் பிள்ளைகளான இந்திரன் விரோசனன் ஆகிற தேவ அசுரர்கள் க்ஷேமப்பட வேண்டுமென நினைத்து கிருபையினால் வாக்யம் ஒன்றை பரவவிட்டார். அதாவது ஆத்மாவை அதன் எட்டு குணங்களோடு (அபஹத பாப்மத்வாதி ஆகிற எட்டு குணங்கள்) அறிந்தவனுக்கு ஸர்வ லோகமும் ஸர்வ சுகங்களும் உண்டு என்பது அவ்வாக்யத்தின் பொருளாகும். அதாவது ஜீவாத்மாவுக்கு இந்த எட்டு குணங்களும் இயற்கையாகவுள்ளன-இப்படியே ஞான ஆனந்த ஸ்வரூபமாயும் பரமாத்மாவுக்கு சேஷமாயிருப்பது இது. ஆக ஆத்ம ஸ்வரூபத்தை இந்த வித்யையாலே ஞானயோக பலத்தாலே உட்கண்ணாற்கண்டு அதன் பிறகு பக்தி யோகத்திலிருந்து அடையும் பெரும்பயன் மோக்ஷமாகும். அதே இவ்வாத்மாவை அறிந்தவனுக்கு முடிவான பலன் ஆகும்.

இந்த வாக்யத்தினால் நிச்சயமாத்தெரிகிறது ஜீவனுக்கு இந்த எட்டு குணங்களும் இயற்கையானதே என்று.

என்ன சொல்லப்பட்டது வென்றால் ப்ரஜாபதிவாக்யம் ஜீவபரமேவ. அதேபடி இந்திரன் ப்ரஜாபதிவாக்யத்தை இவ்விதமாகக் கேட்டான்-(சா. 2. 8. 7-1) य आत्माऽपहत पाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सत्यकाम सत्यसङ्कल्पः सोऽन्वेष्टव्यः स विजिज्ञासितव्यः। स सर्वांश्च लोकान् आप्नोति सर्वांश्च कामान् यस्तमात्मानमनुविद्य विजानाति-அவன் (எவன் ஆத்மாவாகவிருக்கிறானோ அவனுக்கு பாபமின்மை கிழத்தனமில்லாமை பசிதாகமில்லாமை இருக்கின்றன. அவன் ஸத்ய காமனாக (ஸத்யத்தை விரும்புகிறவனாக) ஸத்ய சங்கல்பனாக விரும்புகிறான். அவனை தேடியடையவேண்டியது அதாவது அவன் அறியப்படவேண்டியது மிக்க சிரமத்துடன், இவ்விதம் எவன் அறிகிறானோ (अनुविद्य) சுருதிப்பிரகாரம் அர்த்தம் தெரிந்து கொள்கிறானோ எவன்

விஜானாதி அறிந்ததை மனனம் செய்கிறானோ தியானிக்கிறானோ, விளக்கத்திற்கு முதல் அதிகரணம் லகு சித்தாந்தத்தில் பார்க்கவும் பிருமவித்யாபாகம்-2 (ராமானுஜபாஷ்யம்) அவன் பலனாக எல்லா உலகங்களையும் எல்லா ஆசைகளையும் அடைகிறான்.

(தேவர்களின் பக்ஷத்திற்காக இந்திரனும் அசுரர்களின் பக்ஷத்திற்காக விரோசனனும் பிரஜாபதியிடம் சென்று வினவ விரோசனன் பிரதிபிம்பத்தைப்பார்த்து இதுதான் ஆத்மா என முடிவுகட்டி திருப்தியடைந்து திரும்பிச்சென்று தேகாத்மாவாதியானான். ஆனால் இந்திரனுக்கு திருப்திபெறாமல் பிம்பம் குரூபமாக ஆக்கினால் பிரதி பிம்பமும் குரூபமாகும். ஆகவே சந்தேகம் கொண்டு இந்திரன் பிரஜாபதியிடம் சென்று கேட்க அவனுக்கு பிரஜாபதி ஆத்ம ஸ்வரூபத்தை ஸ்வப்னம் உறக்கம் பிறகு தஹர வித்யையில் எம்பெருமானுக்குச்சொல்லப்பட்ட எட்டு குணங்களையே எடுத்து இந்த எட்டு குணங்களும் இவனுக்கும் உண்டு. உடலினின்று கிளம்பி உத்தம புருஷனைச்சேர்ந்து ஸ்வரூபம் ஆவிர்பவிக்கப்பெற்று முக்தனாகிறான் சுகப்படுகிறான், ஸங்கல்பிக்கிறபடி இவனுக்கு எல்லாம் கிடைக்கின்றன. जक्षत् क्रीडन् रममाण - என்று சொல்லி சரீர ஸத் பாவத்தைச் சொல்லி சிரித்துக்கொண்டும் பக்ஷித்துக்கொண்டும் ரமமாண: என்று சொல்லி இவை எல்லாம் பகவத் அனுக்ரஹத்தால் அனுபவ கைங்கர்யத்தினால்-அடைகிறான்.)

ஆகவே இந்த்ரன் பிரஜாபதியை अन्वेष्टव्यः- அடையப்பட வேண்டிய ஆத்மாவை எவனை विजिज्ञासितव्यः-மனனம் செய்து சாக்ஷாத்காரமாக அடையப்படவேண்டுமோ அந்த ஆத்மாவை விசாரிக்க அணுகினான். அதற்கு பிரஜாபதி இந்திரனுக்கு விளக்கினார்—ஜாக்ரத ஸ்வப்ன சுஷுப்தி தசைகளில் ஆத்ம ஸ்வரூபத்தை. 101 வருஷங்கள் பிரும்ம சர்யமாகவிருந்த பிறகு இவ்விதம் விளக்கினார் (தஹரா வித்யையில் சொல்லப்பட்ட எம்

பெருமானுடைய குணங்களை ஜீவனுக்குச் சொல்வதற்கு முன்பு சொன்னார்) मघवन् मर्त्यं वा इदं शरीरमात्तं मृत्युना, तदस्यामृतस्याशरीरस्याऽऽत्मनोऽधिष्टानम्-(இந்திரனே-இந்த தேகம் அழியக்கூடியது, இறக்கக்கூடியது; அது அம்ருதமாயும் ஆத்மாவாக விருப்பவனுக்கு உடலாகவிருக்கிறது)—(சா. 2-8-12-1) என்று சொல்லி அதனால் விளக்கப்பட்டது—இந்த சரீரம் ஆத்மாவிற்கு வசிக்குமிடமாக அதிஷ்டானமாகவும்; ஆத்மா அதிஷ்டாதா—உள் இருந்து தரித்து நியமிப்பதால் நியமிக்கிறவனாகிறான். अशरीरस्य சரீரமில்லாமல் ஆத்மா இருக்கிறான், அவனுக்கு ஸ்வரூபம் அம்ருதத்வம் (ஆத்மா அழிவதில்லை) என்றும் சொல்லி, न ह वै सशरीरस्य सतः प्रिया प्रिययोर पहतिरस्ति, अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशत:- என்று சொல்லி எவனுக்கு சரீரமிருக்கிறதோ பிரிய அப்ரியங்கள் அழிவதில்லை. இந்த பிரிய அப்ரியங்கள் சரீரமில்லாதவனை ஸ்பர் சிப்பதில்லை (சா.2. 8-12-1) இதனால் சொல்லப்படுகிறது சரீரம் கர்ம பலன்களை அனுபவிக்க யேற்படுகிறது. ஆகவே ஜீவனுக்கு சரீர சம்பந்தத்தாலே சுக துக்க அனுபவங்களை கர்மானுகுணமாக அனுபவித்தல் யேற்படுகிறது. விமுக்த ஜீவன் (முக்த தசையில் கர்மங்கள் அழிந்துபோய் சுக துக்கங்களும் அழிய, அந்த ஜீவன் தேகத்தையும் விடுகிறான் இதனால் மோக்ஷத்திலே तद भावमभिधाय, எல்லாம் அழிய एवमेवैष संप्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परं ज्योति रूपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते—இந்தவிதமாக ஸம்பிரஸாதன் என்கிற ஜீவன் தேகத்தைவிட்டு (மரண சமயம்) மேலே கிளம்பி பரம் ஜ்யோதிஸையடைகிறான்; அப்போது அவன் ஸ்வேநரூபேண-தன்நிஜ ஸ்வரூபத்தை அடைந்து பிரகாசிக்கிறான்-தன்நிஜ ஸ்வரூபத்தினால், ஆகவே ஜீவாத்மாவுக்கு அசரீரத்வம்-என்பதே ஸ்வரூபம் (स्वरूपमेव शरीर वियुक्तमुपदिदेश) என்று பிரஜாபதி விளக்கினார்.

பிறகு இந்த சுருதியினாலே-स उत्तमपुरुषः । स तत्र पर्येति जक्षत् क्रीडन् रममाणः स्त्रीभिर्वा यानैर्वा ज्ञातिभिर्वा नोपजनं स्मरन्निदं शरीरम् என்று

அவனே (பரமாத்மாவே) உத்தம புருஷன் அவன் முக்தன் (ஸஞ் சரிக்கிறான்-ஸ்திரிகளுடன்கூட அல்லது வாகனங்களுடன் அல் லது ஞாதிகளின் சேர்க்கை இவைகளுடன் रममाण:-அத்தகைய முக்தன் (பகவத் ஸந்நிதானத்திலே) பிறப்பை உண்டாக்கிய சரீரத்தை நினைப்பதில்லை. (சா.2.8-12-3) இதனால் பரமாத்மா அடையப்படவேண்டியவன் (ப்ராப்யன்); அந்தபரம் ஜ்யோதிஷை புருஷோத்தமன் பிராப்யன் என்று சொல்லி, இதுவரை ஸம்சார தசையிலிருந்தபோது அந்த ஜீவன் அவித்யாதிகளால் (கர்மாக் களால்) தன் நிஜஸ்வரூபம் மறைக்கப்பட்டு இப்போது அவை களிலிருந்து விடுபட்டு பரம் ஜ்யோதிஷ் ரூபமாகிற பரமாத் மாவை யடைந்து ஜீவாத்மா (பிரத்யகாத்மா) பிரும்மலோகத்தை யடைந்து யதேஷ்டமான போகங்களை அடைகிறான்; அச்சமயம் பிரியங்கள் அப்ரியங்கள் அவனைவிட்டு விலகுகின்றன-கர்ம நிமித்த சரீரங்கள் அபுருஷார்த்தங்களாகிறபடியாலே அந்த சரீரங்களை அப்போது முக்தன் நினைப்பதில்லை. என்று சொல்லி யும்; பிறகு—स यथा प्रयोग्य; आचरणेयुक्त., एवमस्मिन् शरीरेप्राणो युक्त:— எப்படி எருது வண்டியில் கோர்க்கப்பட்டிருக்கிறதோ அதுபோல பிராணன் (முக்ய பிராணன்) இந்த தேகத்துடன் இணைக்கப் பட்டிருக்கிறது. (சா. 2-8-12-3); இந்த உதாரணத்தாலே பிரஜாபதி விளக்கினார்—சரீரம் ஜீவாத்மாவுடன் ஸம்சார தசை யில் இணைக்கப்பட்டிருக்கிறது—மேற்சொல்லியபடி எருதும் வண்டியுமாக பிராணனும் ஜீவனுடன் (எதற்கு ஸ்வபாவமாகவே மேற்சொன்ன எட்டு குணங்கள் உண்டோ-அந்த இயற்கை ஸ்வரூபமுள்ள ஜீவனுடன்) கர்மத்தை அடிப்படையாகக் கொண்ட சரீர சம்பந்தம்-யேற்பட்டிருக்கிறது ஸம்சாரியாக விருக்கும்போது; பிறகு-अथ यत्रैतद् आकाशमनुविषणं चक्षुः, स चाक्षुष: पुरुष: दर्शनाय चक्षु:। अथ यो वेद, इदं जिघ्राणीति, स आत्मा गन्धायघ्राणम्। अथयोवेद इदमभि व्याहराणीति, स आत्मा, अभिव्य हाराय वाक्। अथयोवेदेदं शृणवानीति, स आत्मा, श्रवणाय श्रोत्रं। अथयो वेदेदं मन्वानीति, स आत्मा-मनोऽस्य दिव्यं चक्षुः என்று (சா. 2-8-12-புல்) எங்கு இந்த கண் ஜோதில்

காணப்படும் உருவத்துடன் சம்பந்தப்பட்டுள்ளதோ, அங்கே சாக்ஷீக்ஷ; புருஷன் (கண்ணுக்குள் புருஷன்) இருக்கிறன். (இங்கே சாக்ஷீஷி புருஷன் ஜீவனாகும்-கண் அவனுக்கு ஞான உபகரணமாக விருக்கிறபடியால்-இதே அக்ஷிணிபுருஷன் பிற்பாடு பரமாத்மா வென்று சொல்லப்படப்போகிருன்); அதே மாதிரி-எவன் "நான் முகறுகிறேன்" என்று சொல்கிருனே காதுகளைக் கரணமாக உபயோகப்படுத்தும் ஜீவன்; அதே மாதிரி மூக்கினுல் மோந்து பார்க்கிருன் அந்த ஜீவன்; எவன் "நான் சொல்கிறேன்" என்று சொல்கிருனே-அவன் வாக்கு கரணத்தை உபயோகப்படுத்தும் ஜீவன்-இதேமாதிரி காது-கேட்பிதல் ஜீவனுக்கு ஏற்படும் கரண உபயோகம். "நான் அறிகிறேன்" என்று எவன் சொல்கிருனே-அவன் மனத்தை உடைய ஜீவன் இங்கே மனம் என்பது திவ்ய கண்பார்வையாகும். (உத்கிருஷ்டம்) (சா.2. 8-12-4-5); இதிலிருந்து தெரியவருகிறது. கண் முதலிய இந்திரியங்கள் அதனுல் அறியப்படும் வஸ்துக்கள்; ஜீவன் அறிகிறவனுகிறபடியாலே இந்தக்காரணங்களாலே ஜீவன்தேகத்திலிருந்தும் இந்திரியங்களிலிருந்தும்வேறுபட்டவனுகும். (சரீர இந்திரிய வ்யதிரேகம் என்று சொல்லி); सवा एष एतेन दिव्येन चक्षुषा मनसैतान् कामान् पश्यन् रमते, य एते ब्रह्मलोके மேல் சொல்லப்பட்ட புருஷன் தன் மனத்தினுள் பார்ப்பவனுக, (திவ்ய சக்ஷீஸ் ஆகிற மனம்)—பிரும்ம லோகத்திலிருக்கும் எல்லா சுகங்களையும் அனுபவிக்கிருன்—சா.2.8-12-5 இதனுல் சொல்லப்படுவது—அதே ஜவனே (தன் தேகத்தை உதறியவனுகவும் அதனுல் இந்திரியங்கள் இல்லாதவனுகவும்) அந்த தேகம் கர்மாவை நம்பியபடியால், அது விமுக்த தசையில் இல்லாதபடியால் எல்லா விருப்பங்களையும் அனுபவிக்கிருன் மனம் என்கிற திவ்ய சக்ஷீஸ்ஸினுல்; மனஸ்-இந்த சப்தத்தினுல் திவ்யேந-ஸ்வாபாவிகேந (இயற்கையானதாய்) ஞானம் என்பதாகும். இதனுல் ஸர்வ கர்ம அனுபவங்களையும் சொல்லி பிறகு அந்த சுருதி சொல்கிறது-तं वा एतं देवा आत्मानमुपासते। तस्मात्

तेषां सर्वे च लोका आत्ताः सर्वेच कामाः—அத்தகையவனை முக்த ஜீவனை தேவதைகள் பூஜிக்கிறார்கள்; அதிலிருந்து அவனால் அவர்கள் அடைந்த எல்லா உலகங்களும் அடையப்படுகின்றன, அவனால் எல்லா ஆசைகளும் நிறைவேறப்படுகின்றன என்று தெரிகிறது. சா.2.8-12-6); இதனால் சொல்லப்படுகிறது இந்த விதமாக அந்த முக்தனை ஞானிகள் அறிகிறார்கள் என்று சொல்லிவிட்டு; பிறகு सर्वांश्च लोकान् आप्नोति सर्वांश्च कामान्, यस्तमात्मानमनुविद्य विजानाति-इति च प्रजापति रुवा च—சுருதி இவ்விதம் முடிகிறது (சா.2.8-12-6) எவன் இந்த ஆத்மாவை अनुविद्य; विजानाति என்கிற பதங்களால் அறிந்தவனாகவும் உபாஸிக்கிறவனாகவும் சாக்ஷாத்காரம் பெறுகிறவனாகவும் இருக்கின்றானோ அந்த முக்தன் எல்லா உலகங்களையும் அடைகிறான் எல்லா விருப்பங்களையும் அடைகிறான்; இவ்விதமாக பிரஜாபதி விளக்கினார் என்று சுருதி சொல்வதாலே தெரியப்படுகிறது. ஆத்மாநம் எவன் இந்த ஆத்மாவை இந்த ஸ்வரூபத்துடன் இருக்கிறது என்று அறிகிறானோ அந்த வித்வான் (அறிகிறவனான வித்வான்) பலனாக ஸர்வலோகஸர்வகாமம் அடைகிறான் இதனால் குறிக்கப்படுகிறது. பிருஹ்மானுபவம் பலனாக அடையப்படுகிறது என்று சொல்லி முடித்திருக்கிறார். இதனால் இங்கே சொல்லப்படுவது அபஹதபாப்மத்வாதி குணங்கள் இவைகளையே பிரகரண ஆரம்பத்திலும் ஓதப்படுகின்றன—अन्वेष्टव्यः என்று காட்டிவிட்டு இந்த குணங்களை உடையவன் ஜீவன் எனவும் சொல்லப்படுகிறது, இவ்விதமாக ஜீவனுக்கு இம்மாதிரி இயற்கையாகவுள்ள குணங்களை அடைவதற்கு ஸாத்யம் என (பிரக்ராந்தோ) பின்னால் வரும் சுருதியிலும் சொல்லப்படுவதாலே (தஹராகாசத்தை இந்த எட்டு குணங்கள் உள்ளதாகச் சொல்லப்படுவதாலே) ஜீவனைத்தான் தஹராகாசம் எனச்சொல்லவேண்டும். அவனுக்குத்தான் இந்த எட்டு குணங்களும் யேற்படுகின்றன. அதனால் தஹராகாசம் ஜீவன் என்று சொல்லப்படுமாகில் (பூர்வபக்ஷம்)—

சித்தாந்தம்—அதற்கும் பதில் உரைக்கப்படும் आविर्भूत-स्वरूपस्तु-என்பதால் சூத்ரக்காரர் சொல்கிறபடியால் பரமாத்மா வின் ஸ்வரூபத்தையுடைய முக்தன் அன்றோ பிரஜாபதி வாக்யத் திலே சொல்லப்படுகிறுன்—இதில் முக்த ஜீவன் அடைகிறுன் எல்லா குணங்களையும் அவை இதுவரை (ஸம்சார தசையில் மறைக்கப்பட்டிருந்தன பிற்பாடு ஸம்சாரம் விடுபட்டதும், கர்ம சம்பந்தமும் தேக சம்பந்தமும் விலகி முத்தனுகி பரம்ஜ்யோத்சை அடைகிறுன். அப்போது அவனது நிஜஸ்வரூபம் ஆவர்பவிக் கிறது. ज्योतिरुपसंपन्नः आविर्भूतस्वरूपः இதே மாதிரி தஹராகாசத் திலேயும் ஸ்வரூபமாக எட்டு குணங்கள் சொல்லப்படுவதாலே ஜீவனுக்கு ஸம்பவாத் ஸைவ-ஜீவனே தஹராகாசம் எனச் சொல்லப்படுகிறுன். (இதுவும் பூர்வபக்ஷம் இதற்கும் பதில் அளிக்கப்படுகிறது) இந்த அபஹத பாப்மத்வாதி குணவிசிஷ்ட: பிரஜாபதி வாக்யத்திருல் ஜீவன் அதே மாதிரி தஹராகாச வாக்யத்திலும் அபஹதபாப்மத்வாதி குணவிசிஷ்டயேவ தஹரா காசம் என்று சொல்லப்படுகிறது. ஆவிர் பூதஸ்வரூபமும் யேற்பட்டாலும் முக்தன் பரமாத்மாவாக ஆக முடியாது. ஏனெனில் ஜீவனுக்கு யேற்படாது பரமாத்மாவைப்போல ஸேதுத்வ ஸர்வ லோக விதரணத்வம் உபாயமாகவும் ஆதார மாகவும் அமைவது ஸர்வலோகங்களுக்கும்; அதே மாதிரி மற்ற பரமாத்மாவின் குணங்கள் ஸத்ய சப்தத்திருல் அறியப்படும் ஸர்வ நியந்திருத்வம் (சா.2. 8-3-5 ஸத்யம் என்கிற பதம் ஸத்-தி-யம்-; ஸத் (சேதன) தி (அசேதன) யம் (ஆள்கிறவன்-ஆகவே நிர்வசனேதி-என்பதால் सत् तियम् इति சொல்லி; இரண்டையும் ஆள்கிறவன் பரமாத்மாதான் எனபதாலும்); மேலும் பின்ருல் சொல்லப்படும் சூத் 4-4-17-जगद्व्यापारवर्ज-ஜீவனுக்கு ஜகத் வியாபாரமாகிற ஸ்ருஷ்டிபாலனம் இத்யாதி இல்லாதபடியாலே ஜீவனுக்கு ஒட்டாது. ஸேதுத்வம்—ஸர்வலோக விதரணத்வம் ஜீவனுக்கு ஆவிர்பூதமான ஸ்வரூபம் யேற்பட்டாலும் இவை அவனுக்குப்பொருந்தாது.

அப்படியானால் கேள்வி கேட்கப்படும் ஏன் தஹராகாச வாக்யத்திலே ஜீவனைச்சொல்லியிருக்கிறது இம்மாதிரி ஆரம்ப வாக்யத்தினாலே अथ च एव संप्रसाद: இப்போது இதே ஸம்பிரஸாதனே பரமாத்மாவை அடைகிறான். இங்கே ஜீவபிரஸ்தாவம் எதற்கு என்கிற ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரர் அடுத்த சூத்திரத்தில் பதிலளிக்கிறார். சூத்திரத்திலுள்ள 'து' என்கிற பதத்தால் அதற்கு மாறாக என்கிற அர்த்தம் அதனால் சூத்ரக்காரர் சொல்வது ஜீவனுக்கே ஆவிர்பூதம் தஹராகாசத்திற்கு இல்லை. முக்தன் தஹராகாசமாக நிருபாதிகமாக ஆகமாட்டான் எட்டு குணங்களை உடையவனல்ல.

(ஸத்யம் आकाशशब्दवत्—ஸர்வாதாரத்வம் சொல்லப்படுகிறது. सेतुत्वेमि-सेतुर्विधृतिरिति वाक्ये-सेतुशब्द விவரணம் विधृतिरिति ஆசையால் सेतुत्वरूपविवरणत्व என அர்த்தம். நிர்வசநேதி ஸத்யம்-சித் அசித் இரண்டையும் यम् इति)



சூத்ரம் 19 अन्यार्थश्च परामर्श: (1-3-19)

அந்யார்த்தச்ச பராமர்ஸ: (1-3-19)

பராமர்ச:— (ஜீவனை) இங்கு எடுப்பது—அந்யார்த்தச்ச வேறு பிரயோசனத்திற்காகவே ஆகும்.

தஹராகாசம் ஜீவனல்ல என்று சொல்லப்படுமாகில் ஸம்ப்ரஸாத வாக்யத்தில் இப்பிரகரணத்தில் ஜீவன் எதற்காக எடுக்கப்பட்டான்? என்கிற கேள்வி எழுகிறது.

அதாவது பூர்வ பக்ஷியின் அபிப்ராயம் ஸம்பிரஸாதன் என்று சொல்வதற்குக்காரணம்ஸம்பிரஸாதனே அந்வேஷ்டிவ்ய (தேடப்படத்தகுந்தவன்) அதனால் அதுவே தஹராகாசம் என்கிறார். இவ்விதம் சொல்வது சரியில்லை.

அதாவது தஹராகாசமே அபஹத பாப்மத்வம்—ஜகத் விதரணத்வம்—இத்யாதி குணங்களை உடையதாகச்சொல்லப் படுவதால், முக்தன் தனக்கு யேற்பட்டிருக்கும் கதியாகிற தஹராகாசத்தை அடைவதால் தன் ஸ்வரூபத்தை அடை கிருன். அப்போது அபஹதபாப்மத்வாதி குணங்கள் அவ னுக்கு ஆவிர்பவிக்கின்றன. முக்தன் இத்தகைய கல்யாண குணவிசிஷ்டனுகவும் தனது ஸ்வாபாவிகமானரூபத்தை அடை வதாலே, அதனை அடைவதற்குக்காரணமாகவிருந்த ஹேதுத்வ ரூபம் யாதெனில் பரமபுருஷனுடைய குணத்தை உபதேசிப்ப தாலே பரமாத்மாவே உபாஸனையினுல் திருப்தியடைந்து காரணமாவதாலே பிரஜாபதியின் வாக்யத்திலே அந்த ஹேதுத் வம் சொல்லப்படுவதாலே ஜீவனைப்பற்றிச்சொல்லியது பராமர் சனம் செய்யப்பட்டது யுக்தமாகும். (இங்கு வாக்யம் अथय एष संप्रसादः इति यच्छब्देन ஜீவனைக்காட்டி एष आत्मेति होवाच एतदमृत-मिति एतच्छब्देन तत्प्रति संबन्धिना जीवैक्यमुच्यमानं दुर्निर्वहमिति—சங்கை யேற்படுவதால் அதனுல் பராமர்ஸ பதம் பிரயோகப்பட்டிருக் கிறது).

பிரஜாபதி வாக்யத்திலும் முக்தாத்ம ஸ்வரூபம் யாதாத்மிய விக்ஞானம் அடையப்படுவதாலே அதனுல் தஹரவித்யையின் உபயோகம் சொல்லப்பட்டதாகும். உபாஸனையின் பலனுக பிருஹ்ம பிராப்தி யேற்பட்டு ஜீவாத்மா தன் ஸ்வரூபத்தையடை வதற்கு அதைப்பற்றிய ஞானமும் அடையவேண்டியதாகும். நிருபாதிகமாகவே ஸ்வயமாகவே கல்யாண குணங்களே உள்ள வனுகவும் அநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாணகுண நிதி யாகி விருக்கும் பரபிரும்மானுபவம் ஜீவனுக்கு யேற்படுவதால் உபாசனையின் பலனுக அடையப்படுவதால் அவனுக்கு அவனு டைய ஸ்வரூப யாதாத்மிய விக்ஞானம் யேற்படுகிறது. இந்த ஸ்வரூப ஞானம் பிரும்மோபாஸனையின் பலனுக அந்தர்கதமாக ஓதப்படுகிறது. இந்த சுருதியிலே சா.8.12-6-सर्वांश्चलोकान आप्नोति

सर्वांश्च कामान्—அவன் எல்லா உலகங்களையும் யடைந்தும் எல்லா விருப்பங்களையும் அடைகிறான். சா.2.८-12.3—स तत्र पर्येति जक्षत् क्रीडन्—அவன் அங்கேயும் இங்கேயும் சஞ்சரித்துக்கொண்டும்-பக்ஷித்துக்கொண்டும் விளையாடிக்கொண்டும் रममाण: இருக்கிறான். இதனால் ஸ்வரூபம்—அபஹத பாப்மத்வாதி குணங்கள் அதனை அடைந்து பரமாத்மாவைப்போல அனுபவிக்கிறான். இத்யாதி பிரஜாபதி வாக்யத்தில் புகழப்பட்ட பலன் அதுவே தஹராவித்யையின் பலமாகும். (பிரஜாபதி வித்யையை உபாஸிப்பவனுக்கு தஹரவித்யையின் பலனும் கிடைக்கிறமாதிரி ஏனெனில் இரண்டிலும் அபஹத பாப்மத்வதி குணங்கள் பேசப்படுகின்றன. य एष என்று ஒன்றாகச் சொல்வதால்-து-एष आत्मेत्यत्र एतच्छब्द: एतदन्तर्यामिर्थक इति भाव;—) (உத்தமூர் ஸ்வாமி)

சூத்ரம் 20 अल्प श्रुतेरितिचेत्–तदुक्तम् (1-3-20)
அல்ப ஸ்ருதேரிதிசேத் ததுக்தம் (1-3-20)

அல்ப ஸ்ருதே:-தஹராகாசம் அற்ப பரிமாணமுள்ளதாக ஓதப்படுவதால் அது ஜீவனே ஆகமுடியும் இதிசேத் என்றால் தத் உக்தம்—(இதற்கு பதில் முன்பே கூறப்பட்டது.

दहरोऽस्मिन्—ஹ்ருதயத்தின் உள்ளே ஒரு சிறிய ஆகாசம் இருக்கிறது என்று சுருதி சொல்லியதால் (தஹர) ஆகாசத்தின் அளவு அணுவாகவுள்ளது அல்ப பரிமாணம் ஜீவனுக்குத் தகும், ஏனெனில் அவன் அளவு அங்குசத்தின் முனை आराग्रमात्रस्य என்று ஓதப்படுவதால் பிருஹ்மத்துக்கு இது பொருந்தாது என்று ஆடசேபிககப்படுமானால்—तत्र यत् उत्तरम् वक्तव्यम्, तत् पूर्वमेवोक्तम्—(சா. மீ.1-2-8-) ஏனெனில பிருஹ்மம் பெரிதானபடியால் அலப பரிமாணம் அதற்கு ஹ்ருதயாகாசத்தில் ஓதப்படுவது சரியாகாது என்று ஆட்சேபிககப்படுமானால் முன்னாலே இதற்கு விளக்கம் (சா.மீ.1-2-7ல் கொடுக்கப்பட்டது. அற்ப கௌக ஸ்த்வாத்........என்கிற சூத்திரத்தில்; பரமாத்மா

உபாஸகனை அனுக்ரஹிக்கவும் அவன் உபாஸனைக்கு விஷய மாவதற்காகவும் தன் நிஜ பெரிய ரூபத்தை விட்டு அற்ப ரூபத்தை ஹ்ருதயத்தில் இருப்பிடமாகக்கொண்டவன் என்று கருதப்படுகிருன். அவன் மிகமிகப் பெரியவன் பூமி அந்தரிக்ஷம் இத்யாதிகளை விடப் பெரியவனுனலும் ஜ்யாயாந்பிருத்வி......... லோகேப்ய:- (சா.2. 3-14-3) ; नियाच्यत्वादेवम् —இருதயத்திலுள்ள வனுக உபாஸிப்பதற்காக இப்படி ஓதப்படுகிறது. ஆகாசத்தைப் போலவே பெரியவனுகக்கூறப்படுகிருன். ஆகையால் தஹரா காசம் பரமாத்மாவேயாகும். எப்படிப்பட்ட பரமாத்மா? அநாக் ராத அவித்யாதி அசேஷ தோஷகந்த: ஸ்வாபாவிக நிரதிசய ஞான பல ஐஸ்வர்ய வீர்ய சக்தி தேஜஸ் பிர பிருதி அபரிமித உதாரகுண ஸாகர: புருஷோத்தம ஏவ! யாதொரு தோஷம் லவலேசமில்லாதவனும், கல்யாண குணஸாகரம் எனப்படுபவ னும் நிரதிசய ஞானம் பல ஐஸ்வர்ய வீர்ய சகதி தேஜஸ் ஆகிற ஆறு குணங்களால 'பகவான்' என்கிற சப்தத்தால் அறியப்படுபவனும், உதாரகுண ஸாகரம் புருஷோத்தமனுன ஸ்ரீமந் நாராயணன் ஆகும். ஆகவே பிரஜாபதி வாக்யத்திஞல் காட்டப்பட்டது சா. 2. 10-2 घ्नन्ति त्वेवैनं विच्छादयन्ति- அது அவனை (ஸ்வப்னத்தில் யேற்படும் உருவத்தை) அடிப்பட்டதுபோலவும் அவனைத்துறத்துவது போலவும் என்று ஜீவனை ஸம்ஸாரதசை யில் சொல்லி கர்ம நிமித்தமாக தேகத்தைக்கொண்டவனுகச் சொல்லிய பிறகு அதே ஜீவன் உபாஸனு பலத்திஞல் ஜ்யோதி ரூபஸம்பத்ய அடைந்து அதனுல் யேற்படும் ஆவிர்பூத அபஹதபாப்மத்வாத் குணங்கள் இதே அந்த முக்தனுடைய நிஜ ஸ்வரூபம் என்று ஓதியிருப்பதால் முக்தனுகிற ஜீவன் தஹரா காசமாகமாட்டான்.

ஸூத்ரம் अनुकृतेस्तस्य च (1-3-21)

அனுக்ருதேஸ்தஸ்யச (1-3-21)

தஸ்ய-பரமாத்மாவை அனுக்ருதே; ச (ஜீவன்) ஒத்தவனுக

(சரிசமமாக ஸாத்ருஸ்யமாக எண்ணப்படுவதாலே) தஹராகாசம் ஜீவனில் வேறுபட்ட பரமாத்மாவே:

तस्य தஹராகாசமாகிற பரபிரும்மத்தினிடம் ஸாத்ருஸ்யம் (ஒற்றுமை) अनुकारात् ஓதப்படுவதால் முக்தனுக்கு (तस्य) சொல்லப் படுவதாலே ஜக்ஷத்க்ரீடந்-ஸாம்யம் சொல்லப்படுவதாலே அயம் இந்த அபஹதபாப்மத்வாதி குணங்களிலும் ஸாம்யம் விமுக்த னுக்கு-பந்த நிவிருத்தி யேற்பட்ட ஜீவனுக்கு, சொல்லப்படு மாகில்-ந-அது சரியாகாது—அதனாலே அவன் தஹராகாசமாக மாட்டான். तदनुकार:—பரமாத்மாவுடன் ஒற்றுமை—तत् साम्यं பிரத்யகாத்மா விமுக்த தசையில் பரபிரும்மத்தின் ஸாம்யத்தை அடைகிறதாக ச்ருதி சொல்கிறது. மு 2-3-1-3ல் यदा पश्य: पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषम् ब्रह्मयोनिं, तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जन: परमं साम्यमुपैति—என்று, உபாஸகன் எப்போது அந்த பரமபுருஷனை தங்கநிறமுள்ளவனாகவும் அவரே கர்த்தாரம் ஜகத் காரணம் ஈசன்-புருஷன் என்று நினைக்கிறானோ அப்போது அவன் அந்த சாக்ஷாத்காரத்தின் பலனாக புண்ய பாபங்களை உதறிவிட்டு நிரஞ்சனனாக கலங்கமின்றி பரமாத்மாவுடன் பரம ஸாம்யத்தை அடைகிறான். ஆகையால் பிரஜாபதி வாக்ய நிர்திஷ்டனான अनुकर्ता (ஸாம்ய புருஷன்) அவனே தஹராகாசத்தில் ஓதப்படும் பிருஹ்மமாகும் ஜீவனில்லை என்பதாம். அனுகாரம் எட்டு குணங் களையடையும் ஸாம்யாபத்தி இது முக்தனுக்குயேற்படுகிறது. இங்கு படிக்கப்படும் தஹராகாசம் இப்படி அனுகாரத்தினால் இக் குணங்களை அடைந்ததன்று-ஜீவனும் தன்னை அனுகரிக்க வேண்டும்படியாக இயற்கையாகவே அவற்றை பெற்றிருப்பது ஆகவே அனுகரிக்கும் ஜீவனிலும் வேறுபட்டதாய் அனுகரிக்கப் படுவதான தஹராகாசம் ஜீவனல்ல, பரமாத்மாவே).

சூத்ரம் अपि स्मर्यते (1-3-22)

அபிஸ்மர்யதே (1-3-22)

ஸமர்யதே அபி (இவ்விஷயம்) ஸ்மிருதியிலும் கூறப்படுகிறது.

ஸம்சாரி ஜீவனும் முக்தாவஸ்தையிலே பரம ஸாம்யாபத்தி பிரும்மத்தோடு அடைவதால் இதற்கு லக்ஷணம் பரபிரும்மானு கார: சுருதியிலே சொல்லப்படுகிறது-கீதை 14-2-इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागता: सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च இந்த ஞானத்தை பெற்ற எவர்கள் எனக்கு ஸமமாகை என்கிற மோக்ஷத்தை என்னிடம் வந்து பெற்றவர்கள் ஸ்ருஷ்டி காலங்களில் பிறக்கவும் மாட்டார்கள். பிரளய காலங்களில் ஞான ஸங்கோசாதிகளைப் அடைய மாட்டார்கள்.

சிலர் அபிப்ராயப்படுகிறார்கள்—अनुकृतेस्तस्य च अपि स्मर्यते என்ற முந்திச் சொல்லப்பட்ட சூத்திரமும் இதுவும் இரண்டும் தனியாக வேறொரு அதிகரணமாக (Section) விருக்கவேண்டியது. அதன் உதவியினால் பரபிரும்மத்தின் பரதத்வத்தை ஸ்தாபிப்பது இந்த சுருதி வசனங்களாலே (இதுதான் சூத்ரக்காரரின் அபிபராயங்கள் கூட) மு. 2-2-10—तमेव भान्तमनु भाति सर्वं तस्यभासा सर्वमिदम् विभाति—அந்த பரமாத்மா பிரகாசிக்கிறார் அவருடைய பிரகாசத்தினால் எல்லா வஸ்துக்களும் பிரகாசிக்கின்றன என்பதில் பரபிருஹ்ம பரத்வ நிர்ணயம் செய்து, அதற்கு யேற்ப ஓதுகிறது. அதாவது சா. மீ. 1-2-5—अदृश्यत्वादि गुणको धर्मोक्तेः— (அத்ருஸ்டத்வாதி குணக:—காணப்படாமை முதலானவற்றைக் குணமாக உடையவன் பரமாத்மா; அவனுககே உரிய தர்மங்களை ஓதப்படுவதால்; சா.மீ. 1-3-1ல் த்யுப்வாத்யதிகரணம் இதில் த்யுப் வாத்யாயதநம்-ஸ்வசப்தாத்-என்பதால—இந்த இரண்டு அதிகரணங்களிலும் அந்த பிரகரண விஷயமான பரபிருஹ்ம விஷயத்தைப் பிரதிபாதித்து மீண்டும் சாரீ. 1-1-10 ஜ்யோதிரதிசரணாபி கரணம் - அதில் ஜ்யோதிஸ் சரணாபிதா நாத்என்கிற சூத்ரம் சரணாபிதாநாத் (எல்லாப் பூதங்களையும்) இசம்சாதியின் ஒரு பாகமாகச்சொல்வதாலே ஜ்யோதி: பரமாத்மாவே ஆகும். இதயாதிகளில் பரப்பிரும்மம் பரம ஜ்யோதிசை உடையவனுதலால, அதனால் முன்னால் சொல்லப்பட்ட ஆட்சேபம் இந்த சுருதிக்குச் சொல்லப்படாமையாலே, அந்த

பூர்வபக்ஷியின் வாதம் எடுபடாது. மேலும் இம்மாதிரி நினைப்பு களிலே இந்த சூத்ரத்தின் அக்ஷர வைரூப்யம் யேற்படலாம். ஆகவே இக்காரணத்தாலும் அநுகரிக்கப்படும் தஹராகாசம் அநுசரிக்கும் ஜீவனைக்காட்டிலும் வேறுபட்ட பரமாத்மா என விளங்குகிறது.

பிரமிதாதிகரணம் (1-3-6)

शब्दादेव प्रमितः (1-3-2)

சப்தாதேவ ப்ரமித:- (1-3-2)

ப்ரமித:—கட்டைவிரல் அளவு உள்ளவன் பரமாத்மாவே சப்தாத்யேவ—சப்தத்தினாலேயே அறியப்படுகிறது.

ப்ரமித:— (கடவல்லியில்) பரமாத்மாவே கட்டைவிரல் அளவுள்ளவன்; சப்தாத் ஏவ-சப்தத்தினாலேயே.

(சங்கதி) முன் அதிகரணத்தில் தஹரோऽஸ்மிந்நந்தர ஆகாஸ:—என்று மிகச்சிறிய பரிமாணத்தை உடையதாகக் கூறப்பட்ட தஹராகாசம் பரமாத்மாவே என்று ஸ்தாபிக்கப் பட்டது. அப்படியாகில் அல்ப பரிமாண விசேஷமான கட்டை விரல் அளவுள்ளவனாக வேறொரு வேதவாக்யத்தில் ஓதப்படு கிறவன் பரமாத்மாவைவிட வேறான ஜீவனாகலாமே என்னும் ஆக்ஷேபம் இந்த அதிகரணத்தில் தள்ளப்பட்டு அங்கேயும் பரமாத்மாதான் என ஸ்தாபிக்கப்பட்டு நிலைநாட்டப்படுகிறது.)

கடவல்லியில் ஓதப்படுகிறது (1–4–23) अङ्गुष्ठः मात्रः पुरुषोमध्य आत्मनि तिष्ठति। ईशानो भूतभव्यस्यन ततो विजुगुप्सते, एतद्वै तत् : எந்த புருஷன் கட்டைவிரல அளவு பரிமாண முள்ளவனாகவும், எவன் முக்காலங்களை அறிகிறவனாகவும், ஆத்மாவின் நடுவில் அமர்ந்திருக்கிறானோ அதனால் அவன் அருவெறுப்படையாமல் விளங்குகிறானோ அவனே மேலான புருஷன் அடையத்தகுந்த வன்; அதே கடவல்லியில் 1-4-13ல் अङ्गुष्ठमात्रः पुरुषो ज्योतिरिवाधू-मकः। ईशानो भूतभव्यस्य स एवाद्य स श्वः। एतद्वैतत्—கட்டைவிரல் அளவுள்ள புருஷன் புகையின்றி ஜ்வலிக்கும் ஜ்யோதிஸ்ஸைப் போல பிரகாசிக்கிறான் அவனுக்கு பூத பவிஷ்ய காலங்கள்

தெரியும். அவனே என்றும் இன்றும் நாளையும் இருப்பவன் (நித்யம்) இந்த புருஷனே அடையப்படவேண்டியவன், மேலான புருஷார்த்தம். அங்குஷ்டமாத்திரம் புருஷன் எல்லாப்பிராணி களுக்கும் அந்தராத்மாவாக விருக்கிறான். எப்போதும் ஜனங் களின் ஹ்ருதயத்தில் ஸந்நிவிஷ்டனாக விருக்கிறான். அவனை உபாஸகன் ஒருவன் தன் உடம்பிலிருந்து பிரித்து எடுக்கவேண் டும் எதுபோல வென்றால் தென்னம் ஓலையிலிருந்து ஈர்க்கைப் பிரித்து எடுப்பதுபோல; தைர்யத்தினால் அவனை அவன் அறி யட்டும். சுக்ரம் (மிக்க பிரகாசமுள்ளவனாகவும்) அம்ருதனாகவும் சாகாமல் இருப்பவனாக அறியட்டும்.

(பிரமிதா அதிகரணத்தில் உபாஸனார்த்தமாக அற்ப பரி பரிமாணமுள்ள பரமாத்மா அதே அளவினால் பிரஸித்தமாக அறியப்படும் ஜீவனாக விருக்கக்கூடாது—இருக்கலாம் என்கிற சங்கையைப்போககவந்த அதிகரணம் இது. அற்ப பரிமாண மாதலால் பிருஹ்மமாகாது. அவனே இன்றும் நாளைக்கும் பதி. (இருக்கும் எல்லாப்பொருள்களுக்கும் இனி உண்டாகும் பொருள் களுக்கும் நாயகன்); அத்தகையவன் ஜீவனாக முடியாது. ஆத்மா வுக்குள் ஆத்மா என்பதால் இங்கே ஆத்ம சப்தம் தேகம் என்ப தற்கு அர்த்தம். தேகத்தினுள் ஆத்மா (கட. 4-12) 6-7ல் இத் தகைய ஆத்மாவை நிதித்யாஸம் செய்யவேண்டியது (அவன் இருக்கும் இடத்துடன அதன் சம்பந்தத்துடன் சாக்ஷாத்காரம் செய்யவேண்டியது எனவும் ஓதப்படுகிறது.) (கர்மதாரயமா அங்குஷ்ட மாத்ர ஸ்சஸௌ பிரமிதஸ்சேதிகர்மதாரயோவா); சங்கரர் அங்குஷ்டமாத்ர பரிமாணவுள்ளவன் என அர்த்தம் செய்கிறார். நாம் சொல்வது அங்குஷ்டமாத்ரம் ஹ்ருதய பிரமித என அர்த்தம் கொள்ளலாமா? ஜீவனை ஸ்வேதாஸ்வர உப நிஷத்தில் பிராணதிபன் எனச் சொல்லிற்று.)

இங்கே சந்தேகம் இந்த அங்குஷ்ட மாத்ர அளவுள்ள ப்ரமித! (அளவுள்ளவன்) பிரத்யகாத்மாவா அல்லது பரமாத்

மாவா? எது சரி? பூர்வபக்ஷி பிரத்யகாத்மா என்கிறான் எப்படி? ஜீவன் வேறு சுருதிகளில் அங்குஷ்டமாத்ர அளவுள்ளவனை என்று சொல்லப்பட்டிருப்பதால் ஸ்வே. 5-8 प्राणाधिप: संचरति स्वकर्मभि:— பிராணாதிபதியான ஜீவன் இங்குமங்கும் அலைகிறான்; அவன் கர்மாக்களின்படி; கட்டைவிரல் பரிமாணமுள்ளவன் சூர்யனைப் போல பிரகாசிக்கிற உருவமுள்ளவன்—अङ्गुष्ठमात्रो रवितुल्यरूप: सङ्कल्पाहङ्कारसमन्वितो य:— इति। அவன் சங்கல்பமும் அஹங்காரத்துடன் கூடியவனாக விருக்கிறான். (ஸ்வெ. 5-4) மேலும் சுருதிகளில் வேறிடங்களிலும் சொல்லப்படவில்லை. பரமாத்மா கட்டைவிரல் அளவுள்ளவனாக உபாஸனா நிமித்தமாகக்கூடச் சொல்லப்படவில்லை. ஆகவே இவ்விதம் சொல்லலாம், எது அங்குஷ்ட பரிமாணமுள்ளதோ அது ப்ரத்யகாத்மா (ஜீவன்) அதற்கு ஈசானத்வம் (ஆளும் திறமை) யேற்படும். அவனுடைய தேக அளவிற்கு; இந்திரியங்கள் விஷயபோகங்கள் போகோபகரணங்கள் இவைகளை விரும்பி அடைவதால் ஈசானத்வம் யேற்படலாம். (பூர்வபக்ஷம்) ஈச:—ஸர்வ ஜகத்பிரபு; ப்ராணாதி விஸ்வமுக:—

(தைத்தீரீயத்தில் अङ्गुष्ठस्य मात्र: पुरुष: अङ्गुष्ठश्च समाश्रित: ईश: सर्वस्य जगत् प्रभु: प्रीणाति विश्वभुक इதில் (மந்திரத்தில்) பரமாத்மாவிற்கு மாத்திரம் சொல்லப்படவில்லை-சகாரத்தினால் ஜீவன் பரமாதமாச ப்ரீணீதி என்கிற அர்த்தம் யேற்படும். ஜீவனைச் சொல்லும்போது அங்கு கத்தியின் முனையைப்போல அணுபரிமானமுள்ளவன். அதற்குப் பிறகு யவதானியம் பார்லியைப்போல பரிமாணம். வாலாக்ரே இதனால அத்யந்த அணுஸ்வரூபம்; ஹ்ருதய அளவை (ஒவ்வொரு பிராணியினிடமும்) அங்குஷ்டமாத்ரம் என்றால் அதே தஹராகாசமும் ஸமானமாகலாம்.

பாரதத்தில் சத்யவானின் உயிரை யமன் எடுக்கும்போது பாசத்தை வீசி அங்குஷ்ட மாத்ரபரிமாணமுள்ள ஜீவனைப்பற்றி

ஞன் எனச்சொல்லுற்று. பிராணன் பிரியும்போது ஜீவன் சூக்ஷ்ம தேகபிராணன் பிராணன்இந்திரியம் ஸம்காதம் கொண்டரூபம் அங்குஷ்ட பரிமாணமுள்ளவன் எனவும் சொல்லப்படுகிறது. உத்க்ரமண காலத்திலே தேஜோமயமாக ஜ்யோதியைப்போல புகையில்லாத நெருப்பு ஜ்வாலையைப் போல ஜீவனை இந்த சுருதிகளால் அற்ப பரிமாணம் என ஓதப்பட்டது. அதேபடி பரமாத்மாவுக்கும் ஔபாதிகமாக ஹ்ருதய புண்டரீக ஸம்பந்தம் (புத்தி சம்பந்தமில்லை); ஆத்ம குகையில் வசிப்பவன்; பூதபவ்ய ஈசானத்வம் பரமாத்மாவுக்கும் உண்டு; (அசாதாரண பிரயோகமாக வில்லாவிடில் இங்கே பரமாத்மாவின் கீழுள்ள சதுர் முக பிரும்மா ஈசானன் இவர்களுக்கும் யேற்படக்கூடும். இதனால் ஜீவ லிங்கம் என்றும் கொள்ளப்பட்டால் ஜீவ பக்ஷத்திற்கு சுருதியும் லிங்கமும் தேறும். ஆகவே ஜீவனைச்சொல்வது சரியாகும். சித்தாந்தம் பரமாத்மா பரமாகச் சொல்லப்படுகிறது )

இவ்விதம் ஜீவன் என்று சொல்லப்போமாகில் நாம் சொல்வது—शब्दादेव प्रमितः—சுருதி அவ்விதம் சொல்வதாலே அதாவது அங்குஷ்ட பரிமாணன் பரமாத்மாவே—ஏன்? ईशानो भूतभव्यस्य—(இறந்த நிகழ்காலங்களுக்குட் அதிபதி) என்று சுருதி சொல்வதாலே.

இங்கே கர்ம வச்யனை ஜீவனுக்கு ஈசானத்வம் பூதபவிஷ்ய காலம் ஞானம் ஏற்படாது. ஈசான பதத்தை சப்தம் சொல்கிறது அடையாளம் காட்டுகிறது. பூர்வபக்ஷி பூதபவிஷ்ய பதததை குறுகியகால அளவுடன் அர்த்தம் (இன்றும் நேற்றும் நாளையும்) என கொள்கிறன். அதனல் அந்த ஜீவனுக்கு ஈசானத்வம் குறுகிய நோக்காகும்; லிங்கத்தினல் சொல்கிறன். சித்தாந்தியோ சப்தத்தினல் ஈசானத்வம் பரமாத்மாவின் அசாதாரண பெருமையாகும் சுருதிபலீயஸ் அனுமானதி லிங்கத்தை விட, ஆகையால் இதைககாட்ட एव சப்தயேவ என்று சொல்லி

யும் பூர்வபக்ஷி பரமாத்மாவுக்கும் உபாஸனநிமித்தம் அங்குஷ்ட பரிமாணமுள்ளதாக இருக்கக்கூடும் என்பதை மறந்தும், சுருதி யிலே ஜீவனுக்கு அணுபரிமாணவுள்ளவன் என்று ஓதியபடியால் பரமாத்மாவை மறந்து விட்டான். ஈசான பதம் ரூடி யோகரூடி இதனுல் ईशानेभूतभव्यस्य—நிருபாதிக ஸர்வபூதபவ்ய ஈசானத்வ ரூப பரமாத்மாவிற்கு அசாதாரணதர்மம் என்றும்; சுருதிரூப சப்தஏவ என்பதாலும் (சப்தம் லிங்கத்தைவிட பலீயஸ் என்ப தாலும்); சப்தத்தாலும் மந்திரத்தின் (கடவல்லி மந்திரத்தின்) மகிமையாலும் பரமாத்மா பரத்வம் என சித்தாந்தி சொல்கிருன் சூக்ஷமதேக விசிஷ்டனுக ஜீவன் நிர்யாண கோலத்திலே ஆகி ருன் என்பது மாத்திரம் ஜீவனுக்கு அடையாளமில்லை. பாரதத் தில் சொல்லப்பட்டது அங்குஷ்டமாத்ர ஹ்ருதய நிவிட்டனை ஜீவன் சரீரத்திலிருந்து பிரித்து எடுக்கப்பட்டான்; இங்கே ஹ்ருதய ஸந்நிவிஷ்டன மத்ய ஆத்மநி என்று ஹ்ருதய நிவிஷ் டத்வத்தினுல் யேற்பட்ட அங்குஷ்டமாத்ரத்வம் இதனுல் புத்தியிலிருந்து பிரிக்கப்படவில்லை. ஹ்ருதயத்திலிருந்து இத னுல் ஜீவனின் பக்ஷத்தைவிட பரமாத்மாவின் பக்ஷம் உபபந்நதரம்; தஹர இத்யாதிகளும் பரமாத்மாவுக்கே பொருந்தும். ஆகவே அங்குஷ்ட ஸ்யேவ மாத்ரா பரிமாணும் यस्यहृदयनिविष्टत्वेन सोऽङ्गुष्टमात्र इत्युभय இரண்டும் சாதாரணமாக விருப்பவன் அதேபடி ஸ்வேதாஸ்வரநாம் தைத்தீரீயயாதீ மந்திரங்களில் பர மாத்மா ஓதப்படுவதால், க்லேஸம் இல்லாமல் ஒத்துக்கொள்ள வேண்டியது).

**ஸ்ரீ பாஷ்யம்** :—கர்மவஸ்யனுன ஜீவனுககு பூதபவிஷ்ய ஸர்வஸ்ய ஈசித்ருத்வம் (அதிபதியாக விருததல) ஜீவனுககு நிருபாதிகமாக யேற்படாது. புருஷனின்சரீர நடுவில் இருப்பவ னும் ஈசானனுமாக விருப்பவன் பரமாத்மாதான் சரி. எப்படி பரமாத்மாவுக்கு அங்குஷ்டமாத்ரம்

ஸித்திகரும் அதற்கு சூத்ரக்காரர் சொல்கிருர்.

சூத்ரம் हृद्यपेक्षया तु मनुष्याधिकारत्वात् (1—3—24)

ஹ்ருதய அபேக்ஷயாது மனுஷ்யாதி காரத்வாத் (1—3—24)

ஹ்ருதி மனிதனின் ஹ்ருதயத்தில் இருப்பது; அபேக்ஷியாது அதைப்பற்ற மனிதன் (உபாஸகன்) மனுஷ்யாதி காரத்வாத் மனுஷ்ய ஹ்ருதயத்தைப்பற்ற மனிதர்களுக்கே (குதிரை போன்ற மிருகங்களுக்கு இல்லாமையாலே) உபாஸனு அதிகாரமுள்ள தால் (ஸர்வத்ர பிராணி தேஹே ஹ்ருதயத்தில் அங்குஷ்ட மாத்ரம் பரமாத்மாபரதயா—த்ச்சப்த நிர்வாஹம் என்று சங்கை அதை நிருபணம் செய்வது )

பரமாத்மா உபாஸனுர்த்தம் உபாஸகனுடைய ஹ்ருதய ஸந்நிவிஷ்டனுக இருப்பதால உபாஸக ஹ்ருதய ஸ்தலத்திலே அங்குஷ்ட பரிமாணம் அடைகிருன். அதை அபேக்ஷிக்கப் படுவதால் அங்குஷ்ட அளவுள்ள பரமிதத்வம் யேற்படுகிறது. (ஆனுல் ஸ்வரூபத்தில் ஆகாசத்தைவிட ஜ்யாயாந் பெரியவன்) ஆனுல் ஜீவனுக்கு அங்குஷ்டபிரமிதத்வம் ஹ்ருதய அந்தர் வ்ருத்தியில் இருப்பதால் அதை அபேக்ஷம் எனச் சொல்லலாம் படி விருக்கும் அந்த ஜீவஸ்வருபம் அணுவாக இயற்கையாகவே உள்ளது, வாலாக்ர ஆராக்ர (அங்குசநுணி) சுருதி சொல்வ தாலே. ஆனுல் மனுஷ்யர்களுக்குத்தான் உபாஸகத்வம் சாஸ் திரத்தில சொல்லியபடி மனுஷ்ய அதிகாரத்வம் யேற்படும், அதனுல் மனுஷ்ய ஹ்ருதயமும் அதற்கேற்ப அங்குஷ்ட அளவு டன் கூடியதும், கழுதை, பாம்பு, குதிரை முதலானவற்றிற்கு ஹ்ருதயம் அங்குஷ்ட அளவு இல்லே. மனிதர்களின் ஹ்ருதயம் அவரவர்களின் கட்டைவிரல் அளவேயிருப்பதால் இங்கு மனி தர்களுக்கு அந்த அளவு சொல்வது சரியாகும். (தஹராகாசம் அங்குஷ்ட பரிமாணமுள்ளது மனிதர்களின் விஷயத்தில் சொல்வது சரியாகும்.)

ஹ்ருதயபேக்ஷயா ஹ்ருதயத்தில் இருப்பதாக, இருக்கவேண்டியதாக அபேக்ஷை हृदिह्यात्मा-प्राणेषु हृद्यन्तर्ज्योतिः என்று சுருதி சொல்வதாலே; ரு சப்தம் பிரகாராந்தரேண அங்குஷ்டமாத்ரத்வம் வ்யவச்சேதம். பரமாத்மாதான் அங்குஷ்டமாத்ரனுகும்.

இங்கே இடையிலே இருக்கும் சில சூத்ரங்கள் 24லிருந்து 40வரை. இவை ஒரே அதிகரண விஷயமாகும் என ஸ்ரீராமானுஜர் அபிப்ராயப்படுகிறுர். இதில் 26-30 ஒரு பகுதி; 31-33 இன்னென்று; 34-38 அங்கமாக விருப்பவை; இவை சில நடுவில் எழும் கேள்விகளுக்கு பதிலாக அமைவதால் ராமானுஜர் இவைகளை பிற்பாடுள்ள அதிகரண விஷயங்களாக சூத்ரங்கள் 39-40ல் சொல்லி இங்குள்ள விஷயத்தை மீண்டும் சொல்லி பூர்த்தி செய்கிறுர் அதாவது ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கிறுர். அவை சூத்ரங்கள் 24-25; 26-33; 34-38; 39; 40 ஆக ஐந்து பிரிவுகள் செய்கிறுர். தன்விஷயத்தை தொடர்ந்து சொல்லி ஸ்தாபிப்பதற்கு முன்பே பிராஸங்கிகமாகவுள்ள (இடையில் எழும்) மூன்று அதிகரணங்களை முடித்துவிட்டு பிறகு தன் பக்ஷத்தை பூர்ண நிருபணம் செய்யப்போகிறுர், பிற்பாடுள்ள அதிகரண விஷயங்களால் என்று அர்த்தம் கொள்ளவேண்டியது.

(இடையில் எழும்) அதிகரணம்—7 தேவதாதிகரணம்

சூத்ரம் तदुपर्यपि बादरायणः संभवात् (1—3—25)

ததுபர்யபி பாதராயண: ஸம்பவாத் (1—3—25)

தத் பிருஹ்மோபாஸனம் உபரி அபி (மனிதர்களிலும்) மேற்பட்ட தேவர் முதலானோர்க்கும் (கூடும் என்று) பாதராயணர் (வியாஸா) கருதுகிறுர். ஸம்பவாத (அவர்களுக்கும்) அர்த்தித்வம் கூடுமாகையால் (ஸாமர்த்தியங்கள் கூடுமாகையால்)

(இங்கே ஸ்பஷ்டான்யலிங்க வாக்யங்களிலும் எவை பிரும்ம பரத்வமாக விருக்கின்றனவோ அத்தகைய தாத்ருஸ வாக்ய விசாரம் செய்யும்போது இந்த பாதத்தில் இந்த விஷயம்

விசாரிக்கும்போது மனுஷ்யனுக்கு அதிகாரம் இருப்பதாகவும் (குதிரை-கழுதை இத்யாதிகளுக்கு இல்லாதபடியாலும்) வேறு யாருக்கு அதிகாரி யோக்யதை உண்டு என விசாரிக்கப்போ மளவில் ஸ்தான விசேஷமான ஹ்ருதயம் சொல்லப்பட்டு ஆஸ்ரம தர்மங்களை பிரும்மவித்யைக்கு (உபாஸனைக்கு) அங்க மாகச்சொல்லி அம்மாதிரி அங்கங்களில்லாத சிலர் தேவ தைகள் ஸித்தர்கள் இன்னும் காம்ய கர்மாக்களைச்செய்து அனுக்ரஹம் பெற்றவர்களையும், நாஞஸ்ருஷ்டி பிரளய காலங் களிலும் இருக்கிறதும் அபௌருஷேயமாக விருப்பதான வேத பிரவாத்தக தர்மங்களை ஓதுவதற்கு அருகதையற்ற சூத்ரர் களுக்கும் அதிகாரியோக்யதை உண்டா என சம்சயம்எழ; அதிலும் மனுஷ்யர்கள் என்கிற பதபிரயோகத்திலும் ஜைமினி ஸம்மதமாக தேவதைகளுக்கு அதிகாரமின்மையேற்பட ஸம்மத மாகுமா? அதை விசாரிப்பது தேவதாதிகரணம். சூத்ரவிஷயம் இன்னென்று; இவை இடையில் எழும் அதிகரணங்களாகும். பிற்பாடு ராமானுஜர் தமது கருத்துக்களைத் தொடர்ந்து சொல்ல விரும்புகிறுர் எனபதாகும்.

மேலான பரபிருஹ்மம் அங்குஷ்டபரிமித (ப்ரமித) அள வுள்ளவன் என்பதை ஒத்துக்கொள்ள மேலே சொல்லப்பட்டது சாஸ்திரம் படிப்பதற்கு அதிகாரம், பிரும்மோபாஸனம் செய்வ தற்கு சாஸ்த்திரம் தேவைப்படும் எனசசொல்லப்பட்டது. இந்த பிரஸங்கம் நடந்துக்கொண்டிருக்கும்போது பிருஹ்ம வித்யைக்கு தேவதைகள் அதிகாரியாவார்களா? இல்லையா என்கிற விஷயம் இங்கு விசாரிக்கப்படுகிறது. அதில் எது சரி? பூர்வபக்ஷி இல்லை, தேவதைகளுக்கு அதிகாரமில்லை எனகிறுன். எப்படி? அவர்களுக்கு ஸாமாத்தியமில்லாதபடியால்.

(இங்கு சொல்லப்படுவது வேதம் இருவிதம்; (கட்டளை யைச் சொல்லும் வாக்கியம்); அவிதி (அர்த்தவாதம்-ஆக்யா

இத்யாதி) அவிதி வாக்யங்களும் இருவிதம் மந்திரம் அர்த்த வாதம். மந்திரபாகம் முதலில் விசாரிக்கப்படுகிறது பிரயோக சமயத்தில் வேதார்த்தங்களை நினைவூட்டுபவை); அர்த்தவாதம் விதிவாக்யங்களில் சொல்லப்படும் கர்மாக்களைப்புகழ்ந்து பலன்களை ஓதுவதால் அதனுடைய தாத்பர்ய ஸ்திதியினால் விதிவாக்யங்களைப்போல பிராமாண்யத்தை அடையும் எனக் கருத்து யேற்படும். தேவதைகளுக்கு மந்திரசப்தங்களே பிரி யத்தைக்கொடுக்கும்).

தேவதைகளுக்கு ஏன் அதிகாரத்வம் ஸித்திக்காது? என னில் அவர்களுக்கு ஸாமர்த்தியமில்லாதபடியாலே (தேவதா பதம் பொதுவாக தேவ பித்ரு சுரர்கள் என்பதாகும்). மனுஷ்யர் களுக்கு ஸாமர்த்தியம் எப்படி சொல்லப்படுகிறது? ஹ்ருதயத் திலே அவிச்சின்ன உபாஸனம் செய்யப்படுவதாலே ஸாமர்த்தியம யேற்படுகிறது. இங்கே தேவதைகளுக்கு தேஹமிருப்பதாக பிரமாணமில்லை. தேகமில்லாமையால் தேகசம்பந்தத்தால் யேற்படும் துன்பத்தை நீக்க மனிதர்களுக்கு உபாஸனையில் விருப்பம் அர்த்தித்வம் யேற்படுகிறது. அந்த விருப்பம் தேவதை களுக்கு இல்லாதபடியால் அவர்களுக்கு பிரும்மோபாஸனத்தில் அதிகாரமில்லை. சரீர மிருப்பினும் விமோகம் விவேகம் மனுஷ்யர் களுக்கு யேறபட்டால்தான உபாஸனையில் விருப்பம் யேற்படும். சரீரமில்லாத தேவர்களுக்கு அதிலும் உபாஸனையில் விருப்பம் யேற்படக்கூடுமா? வேதங்களில் தேவதைகள் ஸசரீரத்வம் என்பதற்கு பிரமாணமில்லை. வ்யுத்பத்திபண்ணி அர்த்தம் கொள்ளலாமாதலால், பிரும்மத்தின் ஞானம் யேற்படுகிறது. அதுமாதிரி வ்யுத்பத்திசெய்து மந்திரங்களுக்கும் அர்த்த வாதத் திற்கும் பிரமாணம் யேற்படுவதனால் தேவதைகளுக்கு சரீரம் உண்டா இல்லையா என்பது தெரிந்து கொள்ளவேண்டியதாக விருக்கிறது. (இங்கே தேவதைகள் யாகங்களின் தேவதை களாக விருக்கின்றனர். அவர்களுக்கு திருப்தி யேற்பட்டால்

பலன்கள் கிடைக்கின்றன. நமது ஸித்தாந்தப்படி பிரும்மமே ஸர்வ பல ப்ரதன்; இதனால் நாம் ஏன் கீழுள்ள தேவதைகளைப் பூஜிக்கவேண்டும்? அதாவது ஜைமினியின் கருத்து அவ்வித மில்லை. ஆனால் சிலர் வேறுவிதமாக அர்த்தம் கொண்டு, பலத்திற்காக ஏன் தேவதைகளைப் பூஜிக்கவேண்டும்?—

கர்மாக்களின் விதி சம்பந்தப்பட்ட வாக்யங்கள் தேவ தைகள் யாகசம்பந்தமுள்ளவர்கள் எனக்காட்டுகின்றதே ஒழிய வேறு ஒன்றையும் சொல்லவில்லை. தேவதைகளுக்கு விக்ரஹம் (உருவம்) உண்டா என்பதைக்காட்டவில்லை. மந்திர அர்த்த வாதங்கள் கர்மாக்களின் விதிக்கு உட்பட்டவை சேஷமானவை யானபடியாலே அவை தேவதைகளுக்கு சரீரம் உண்டா அர்தித் த்வம் உண்டா எனக்காட்டவில்லை. அதனால் தேவதைகளுக்கு ஸாமர்த்தியம் யேற்படுவதற்கில்லை. கர்ம விதிகளும் தங்களுக்கு அபேக்ஷிதமாயிருப்பதை உத்தேஸ்யமாகக்கொண்டதால் யாக யக்ஞாதிகளை விஷயமாகக்கொண்டதால் அதை ஒன்றே விஷய மாகக் கொண்டதால் அது ஒன்றே விஷயமாகும். தேவதைகள் விஷயமாக ஒன்றும் இல்லாதபடியால் சப்தமா அர்த்தபூதமாக யாது? சேதன அசேதனமா இவை ஒன்றுமில்லை அதனால் தேவதைகள் அதிகாரிகளாக ஆகமாட்டார்கள்.

இதற்கு பரிகாரம் பதிலில் சொல்லப்படுகிறது. तदुपर्यपि बादरायणः सम्भवात् । तदुपर्यपि பாதராயணரின் அபிப்ராயம் பிரும் மோபாஸனை தேவதைகளிடமும் யேற்படுகிறது तदुपर्यपि-तत् பிரும் மோபாஸனம் उपरि தேவதைகளுக்கும் ஸம்பவிக்கிறது. என்று வியாஸர் அபிப்ராயப்படுகிறார். அவர்களுக்கு அர்த்தித்வம் ஸாமர்த்தியம் இருக்கிறபடியால். அர்த்தித்வம் எப்போது யேற் படுகிறது (தேவதைகளுக்கோ மற்றவர்களுக்கோ?) மூவித ஆதி ஆத்மிக ஆதிதைவிக ஆதிபௌதிக தாபங்கள் யேற்படுவதால் துக்கங்கள் யேற்பட ஆர்த்தித்வம் (இவைகளைப்போக்க உபாயம்

தேடி அலைவதால்) யேற்படுகிறது. அதனால் மக்னப்பட்ட ஜீவன் பரஸ்மிந் பிரும்ம விஷயத்தில் எப்படிப்பட்ட பிரும்மம் நிரஸ்த நிகில தோஷ கந்த (ஒன்றுமில்லாத நிர்தோஷனான பரமாத்மா) (ஹேயரஹிதம்); அநவதி காதிஸய அஸங்கியேய கல்யாணகுணராசிகள் இப்பேற்பட்ட பிரும்மத்தை அடைய நிரதிசய போக்யத்தை அனுபவிக்க ஸாதனமான ஞானத்தினால் யேற்படுகிறது அதனால் ஞானமும்; ஸாமர்த்தியத்தை உண்டாக்குவதற்கு கூர்மையானதும் சுறுசுறுப்பான தேகம் இந்தியங்கள் கொள்வதால் யேற்படுகிறது.

மேலும் தேக இந்திரியங்கள் கூடின தேகம் சதுர்முகபிரும்மா முதலான தேவதைகளுக்கு இருப்பதாக ஸகல உபநிஷத்துக் களும் ஸ்ருஷ்டிபிரகரணத்திலும் உபாஸனை ப்ரகரணத்திலும் கூட சொல்லப்படுகின்றன. அவ்விதமே ஸ்ருஷ்டி பிரகரண வாக்யம் சா. 2-6-2-1. सदेव सोम्येदमग्र आसीत्-तदैक्षत बहुस्यां प्रजाये-येति, तत्तेजोऽसृजत என்று (ஸத் ஒன்றுதான் ஸௌம்ய முதலில் இருந்தது. அது சங்கலபித்தது நான் பலவாக ஆவேன். அது முதலில் தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தது. என்று ஆரம்பித்து எல்லா அசேதனங்களாகிற தேஜஸ் அப்பு அன்ன (பிருத்வி) முதலிய பிரமுக அவஸ்தைகளின் விசேஷங்களை வித்யாஸப் படுத்தி (நாமரூபவ்யாகரணம் செய்து); சா. 2-6-3-1ல் अनेन-जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि என்று சங்கல்பம் செய்து (நான் இந்த ஜீவனுடன் என் ஆத்மாவினால் உள்நுழைந்து நாம ரூபவ்யாகரணம் செய்கிறேன் (வித்யாஸப்படுத்துகிறேன்) என்று சங்கல்பத்தினால் பிரும்மாதி தாவரம் வரை சதுர்வித பூதங்கள் யேற்பட்டதும்; அந்த அந்த (உண்டாக்கப்பட்ட) ஜீவர்களுக்கு (வஸ்துக்களுக்கு) அவரவர்களின் கர்மாவினால் (அதன் பலனை அனுபவிகக) யேற்பட்ட உசிதமான தேகாதிகளை

உண்டாக்கி அவர்களுக்கு பெயர்களை அளித்து வ்யவஹார யோக்யதையை உண்டுபண்ணினுன். இவ்விதம் ஸர்வத்ர ஸ்ருஷ்டிபர வாக்யங்களில் தேவதா திர்யக் மனுஷ்ய ஸ்தாவர ஆத்மநா (தான் படைக்கப்பட்ட வஸ்துக்களுக்கு ஆத்மாவாக விருந்துகொண்டு அவைகளை சரீரமாகக்கொண்டும்) நான்கு வித ஸ்ருஷ்டி ஆரம்பமாயிற்று. தேவாதி பேதங்களும் பரஸ்பரம் யேற்படுவதாகும். அதே மாதிரி அவரவர்களுக்கு அனுகுண மாக பிரும்மலோகம் முதல் பதினுன்கு லோகங்களில உள்ள பல போக்யங்களுக்குத் தேவைப்படும் தேஹ இந்திரியங்கள் கொண்ட சரீரங்கள் யேற்படுவதாக சுருதி ஸித்தம். மேலும் அறியப்படுகிறது—இந்த மாதிரி தேவத்தன்மையோ (தேவாதித் வம்) ஸ்ருஷ்டிக்கு முன்பு மூலபிரகிருதியுடன் சேர்ந்து இருக்கும் சூக்ஷ்ம அவஸ்தையில் அது அவர்களுக்கு யேற்படுவதாக இல்லை. आत्मनां स्वतो देवादित्वम् अभावात्.

இதே போல பிருஹ்ம உபாஸனையைப் பற்றிச்சொல்லும் சுருதி வாக்கியங்களிலும், சா. 2 8-2-3 பிரஜாபதி வித்யையில் तद्धोभये देवासुरा अनुबुबुधिरे, ते होचु···इन्द्रो हैव देवानामभिप्रवव्राज, विरोचनोऽसुराणाम् ; तौ हासंविदानावेव समित्पाणी प्रजापतिसकाशमाजग्मतुः । तौह द्वात्रिंशतं वर्षाणि ब्रह्मचर्यमूषतुः। तौह प्रजापतिरुवाच, தேவர்களும் அசுரர் களும் பிரஜாபதியின் அந்த உபதேசத்தைக் கேள்விப்பட்டனர். அவர்கள் சொன்னுர்கள்.—தேவர்களுள் இந்திரனும் அசுரர் களுள் விரோசனனும் பிரஜாபதியினிடம் ஸமித்பாணியாகச் சென்றனர்—பொருமையினுல் அவர்களில் ஒருத்தர் மற்றொரு வரை அடையாளம் தெரிந்துகொள்ளவில்லை. பிரஜாபதியின் ஆக்ஞையின்பேரில் அவர்கள் 32 வருஷங்கள் பிரும்மசர்யமாக விருந்தனர். பிறகு பிரஜாபதி அவர்களுக்கு உபதேசித்தார். இதனுல் ஸ்பஷ்டமாக சரீர இந்திரியத்தவம் தேவதைகளுக்கு இருக்கிறது என்று காட்டப்படுகிறது. கர்ம விதிகளுக்கு சேஷ

பூதமான அர்த்தவாதங்களிலும்கூட உதாரணம் தை.அ.2-6-7-2 वज्रहस्तः पुरन्दरः இந்திரன் வஜ்ர ஹஸ்தனுக விருந்தான்; தை. ச. 2-4-12-3-8ல் இந்திரன் तेनेन्द्रो वज्रमुदयच्छत् வஜ்ரத்தை ஓங்கினன்; இத்யாதி பிரமாணங்களால் அறியப்படுகிறது தேவதைகள் தேகங்களை உடையவர்கள் என்று (வஜ்ரம்—இந்திரனுடைய முக்யமான ஆயுதம்; ததீசிமஹரிஷியின் எலும்புகளிலிருந்து செய்யப்பட்டது அதற்கு விஷ்ணுவின் சக்தி புகுந்தது); (அர்த்தவாத மந்திரங்கள் விதி (கர்மாவுக்கு கட்டாயமாக செய்யப்படவேண்டிய விதி பிரகாரம்); மந்திரம் என்ன செய்யப் படவேண்டியது என்பதையும், அர்த்தவாதம் அந்தக் கர்மாவை புகழ்வதும் பலனைப்பற்றிச் சொல்வதுமாக விருக்கும் இவைகளினுல் போதிக்கப்படவேண்டியது ஒன்றுமில்லை, ஏனெனில் வேறு ஒன்று அத்தகைய புகழ்ச்சிக்கு உதவுகிறது அந்த ஒன்று இல்லாதபோனுல் புகழ்ச்சி இருக்கமுடியாது. இதனுல் அவைகளுக்கு பிரமாண்மாக சொல்லப்படவேண்டியது ஒன்றுமில்லை. தேவதைகளுக்கு சரீரம் உண்டு என்றும், அதற்கு விரோதமாக தேகத்வம் இல்லையென்று மற்ற பிரமாணங்களால் அறியப்படாமையினுலே இங்கே விக்ரஹங்கள் (சரீரங்கள்) உடையது பிராமாண்யமாகவும் அந்த விஷயத்தில் விருத்த வசனங்கள் இல்லாத படியிலே ஸித்திக்கிறது.

(ஸ்ருஷ்டி வாக்யங்கள் ஸத்வித்யையில் सर्वाः प्रजाः என்றும்; ஸர்வத்ர ஸ்ருஷ்டிவாக்யங்களிலும் வித்யாந்தர சாகாந்தர வேதாந்த வாக்ய ஸ்ருஷ்டி பிராகணங்களிலே என அர்த்தம்)

ஸதுதிபரத்வ வாக்யங்கள் கர்மாக்களை புகழ்ச்சியாக (ஸ்துதி) சொல்பவை அதே மாதிரி அனுஷ்டிப்பதற்காக ஓதப்படும் மந்திரங்களில் அர்த்த பிரகாசத்வம் இவைகளிலிருந்து என்ன அர்த்தாந்தர விவக்ஷை, எது போதிக்கப்படவிருக்கிறது என்பதை தெரிந்துகொள்ள முடியாது. ஸ்துதிகள் உபயோக

மாக விருப்பதும், அதில்லாமல் போனால் (ஸ்துதி இல்லாத போனால்) எது செய்யப்படவேண்டியதோ அதன் ஸ்வரூபமும் இவைகளினால் போதகத்வம் ஏற்படுகிறது என்பது ஒன்று மில்லை. ஸ்துதி வாக்யம் என்றும் ஸ்துதி ரூபத்வமுள்ளம். இதனால் அந்த கர்மம் அர்த்தவாதமாகிற கர்ம விஷய ஸ்துதி, இவைகளினால் தேவதைகளின் குணம், விக்ரஹவர்ணனை இத்யாதிகளை அறிய முடிகிறகில்லை. ஏனெனில் கர்மாவும் அர்த்த வாதமும் தேவதைகளை பிரதிபாதகமான விஷயமாதலால், வாயு தேவதையை உபாஸிப்பதால் பணம் சீக்கிரம் வரும். இதில் இஷ்ட தேவதை வாயு தேவதையைப்புகழ்வதால் கர்மத்தைப் புகழ்வதாகும். இதில் குணங்கள் ஓதப்படுவதில்லை. குணங்களை சொல்வதாலே ஸ்துதித்வம் யேற்படுகிறது. குணங்கள் இல் லாதபடியால் ஸ்துதி மாத்திரத்தினால் பிரயோசனமில்லை. குணங்கள் இருந்தால் ஒருவன் அந்த பலனை அடைவதற்கு தூண்டப்படுவான். அதனால் கர்மானுஷ்டானம் யேற்படுவ தில்லை. ஆகவே கர்மாவைச் செய்வதற்கு குணங்கள் சொல்லப் படவேண்டும். இந்த குணங்களை போதிப்பது அர்த்தவாதங் களாகும். அதனால் உபாஸகனுக்கு கர்மாவில் ருசி உண்டா கிறது. கேவலம் மந்திரங்களில் சப்தமேவ; அவைகளை விளக்க வந்த அர்த்தவாதங்கள் குணங்களைப் போதிப்பதால் தேவதை களின் மகிமைகளைச் சொல்வதால் கர்மாவைச்செய்வதற்கு தூண்டுவதாக விருக்கின்றன. மந்திரங்கள் என்ன கர்மாக்களைச் செய்யவேண்டியது அக்கர்மாககளைச் சொல்வதற்கு உபயோகப் பட்டு அதனால் பலனை அடையப்படுவதைககாட்டி அதற்கு உபாயமாக விருந்து, அதே சமயத்தில் உபாஸிக்கப்பட்ட தேவதையின் ஸ்வரூபத்தையும் சொல்வதாகும். ஆகவே மந் திரங்களுக்கு இந்திரன் அல்லது அதுபோல மற்ற தேவதைகள் இவர்களை காட்டுவதற்கு தகுதியாகாது. மேலும் குணமேயில் லாத தேவதை எங்கும் காணப்படுவதாக இல்லை. ஆகவே மந்திரங்கள் அனுஷ்டிக்கப்படவேண்டிய அர்த்த பிரகாசம் இதனால் தேவதைகளுக்கு விக்ரஹம் குணம் உள்ளவர்கள் என இவைகளை இசைந்தே தீரவேண்டியது இல்லாத போனால் இந்திரன் அக்னி என்று குறிப்பிட்ட தேவதைகளைச்சொல்லாது இதனால் நிர்விசேஷ தேவதையும் இருப்பதாக வில்லை.

அவ்விதமிருப்பதால் மந்திரங்களும் அர்த்தவாதங்களும் மற்ற பிரமாணங்களால் அறியமுடியாத விஷயங்களைச் சொல்வதால், ரூபம் குணம் இத்யாதிகளைச் சொல்வதால், பிராமாண்யத்தை அடைகின்றன. அதனாலே அர்த்த வாதங்கள் கர்மாக்களைச் செய்வதற்கு தூண்டுபவையாகும், விருப்பத்தை உண்டாக்குவதாகும். மந்திரங்கள் அந்த கர்மாவின் குணங்களைக் காட்டுவதாகும். ஆகவே இவை பரஸ்பரம் உதவுகிறபடியாலே இச்சை, சரீரம், இந்திரியரூபம் இவை தேவதைகளுக்கும் உண்டு. குணவிசிஷ்ட தேவதையை பிரகாசம் செய்கிறது. மந்திரமும் அர்த்தவாதங்களும் யேற்கனவேயுள்ள குணங்களைத்திரும்ப ஓதுவதாலே மற்ற பிரமாணங்களால் தெரியவரும் குணவிக்ரஹம் இத்யாதிகளை, மீண்டும் சொல்வதாலே, அதனாலே என்ன கர்மாவைச்செய்யவேண்டியது, எப்படி செய்யவேண்டியது, விருப்பம், எல்லாம் சொல்வதாக விருப்பதாலும்; எப்போதாவது மந்திர அர்த்தவாதங்களில் சொல்லிய பிரகாரத்திற்கும் மற்றவைகளில் சொல்லப்பட்டதற்கும் விரோதம் யேற்படின், அப்போது மந்திரங்கள் கேவலம் சப்த மாத்ரத்தாலே குணங்களையோ, மற்ற அவிரோத குணங்களையோ, காட்டுவதாலே கேவலம் கர்மா செய்யப்படவேண்டியது என்று வற்புறுத்துவதாலே, அந்த சமயங்களில இச்சையையும் பிரேரணையையும் சொல்வதாக அர்த்தம் செய்து கொண்டால், शब्दैरि-न्द्रान् गुणान् लक्षयित्वा—காட்டி பிராமண்யத்தை அடைகின்றன.

ஒரு கர்மாவைப்பற்றிய விதி வாக்யம் அநத கர்மத்தை எந்த தேவதையை உத்தேஸ்யமாக வைத்து செய்யவேண்டியது, அநத தேவதையின் மகிமை, ஐஸ்வர்ய சகதி இத்யாதிகளை அபேக்ஷிதமாகவுள்ளது. அந்த கர்மத்தைச்செய்ய இஷ்டப்படுகிறவன் அதைச்செய்கிறான்; அந்த கர்மம் செய்தவுடனே அழியும் தன்மை உடையதாக க்ஷண க்ஷணமாக அழியப்படுகிறது. பலனோ காலாந்திரத்தில் கிடைக்கிறது. உதாரணம்

ஸ்வர்க்காதி பலன்கள் இவைகளை அளிப்பதற்கு ஸாதகம் ஒன்று வேண்டியிருக்கிறது. (அதன் உதவியினால் பலன் அனு பவிக்கப்படுகிறது). மந்திரங்களோ, அர்த்த வாதங்களோ தை. கா. 2-1ல, वायुर्वै क्षेपिष्टादेवता, वायुमेव स्वेनभागधेयेनोपधावति, स एवैनं भूति गमयति। வாயுதேவதை வேகமாக சஞ்சரிப்பவன்; அவனை தீக்ஷிதர் ஹவிஸ்ஸுடன் அணுகி பிரார்த்திக்கிறார். வாயுதேவதை ப்ரீதியடைவதால் பூதி, பணப்பெருக்கு ஏறபடு கிறது. மீண்டும் தை. அ. 1 சொல்கிறது. यदनेन हविषाऽऽशास्ते। तदश्यात्। तदृध्यात्। दतस्मै देवा रासन्ताम्—அந்த ஹவிஸ்ஸினால் திருப்தியடைந்த வாயுதேவதை எதை அளிக்கவிரும்புகிறானோ அந்த பலன் அனுபவிக்கப்படட்டும், அது அதிகமாக பெறப் படட்டும், அந்த தேவதைகள் இவனிடம் அதிக பிரியம் உள்ள வர்களாக விருக்கட்டும், இத்யாதிகளாலே தேவதைகள் கர்மாக் களால் ஆராதிக்கப்பட்டும், பலன்களை அளிப்பவர்களாகவும், அதற்கேற்ப ஐஸ்வர்யம் சக்தி படைத்தவர்களாகவும் அபேக்ஷித மாகையால் வாக்யார்த்தம் சொல்வதாகிறது. இதனால் காட்டப் படுகிறது அந்த கர்மாவைச்சொல்லும் பிரகரண நோக்கத்திற் கும் அதேபடி கர்மாவைச்செய்வதால் யேற்படும் நன்மைகளுக் கும் அவை முன்கூடியே அறியப்படுவதாகையாலே ஒற்றுமை யேற்படுகிறது. 'யஜாதவபூஜாயாம்'—என்கிற தாதுபாடத் தால், தேவபூஜைக்குத்தான் யாகம் எனப்பெயர் ஸ்பஷ்டமாகக் காட்டப்படுகிறது. இதனால் யஜதேதுவினால் தேவபூஜைக்காக யாகம் (யாகாக்யம்கர்ம) என்பதால், யாகம் ஒரு தேவதையை உத்தேசித்துச்செய்யப்படுகிறது. ஆகவே எல்லா சுருதி வாக் யங்களையும் ஆராய்ந்து பார்ப்பதால் (அதாவது மந்திரங்கள் அர்த்தவாதங்கள் விதிவாகயங்கள) வாக்யங்களாலேயே விதி அபேக்ஷிதம் என அறியப்படுகிறது. (இந்த வாகயங்களே பலமுள் ளவை அதனால் வாக்யங்களால் கர்மாக்களால் சந்தோஷிப்பிரக் கப்பட்ட பகவானே ஸர்வபலப்ரதன் என்பதாகும்); (அதனால் கர்மமீமாமஸகர்கள் சொல்வது பிரகாரம்) "அபூர்வம்" என்பது உண்டாகி அது பலனைக்கொடுககிறது. கர்த்தாவையும் பலனை யும் காலந்தரத்திலே சேர்த்து இணைத்து பலனை அளிக்கிறது.

சுருதி அர்த்தம் செய்யப்படும்போது வ்யுத்பத்தியினல் யேற்படு கிறது அல்லது கல்பிக்கப்படவேண்டியது அது கர்ம வித்யைச் செய்யச்சொல்லி பலனை அளிக்கிறது என்று சொல்வது சரி யில்லை. அபூர்வத்தை முன்கூட்டியே சொல்லவோ அல்லது கல்பிக்கவோ கர்ம விதி சம்பந்தப்பட்டதில் அவசியமில்லை. தேவதையில் அந்தர்யாம்யாகவிருந்து அந்த கர்மாவினல் (இங்கு மீமாம்ஸகர்கள் அபூர்வம் உண்டாகிறது என்கி ருர்கள், அதுவே பலனை அளிக்கிறது என்கிருர்கள். இது அசேதனம் சுருதியிலும் இதைப்பற்றி பிரஸ்தாவமில்லை ஸ்மிருதி களிலும் கற்பிக்கப்படவில்லை. கர்மாவினல் ஆராதிக்கப்பட்ட தேவதையும் தானும் சந்தோஷமடைந்து அந்த தேவதைக்கு கர்மாவின் புலனை அளிப்பதற்கு பகவானே அந்த தேவதைக்கு சக்தி கொடுத்து அந்த தேவதைமூலம் பலன் அளிக்கப்படு கிறது. பரமாத்மாவே ஸர்வ கர்ம ஸமாராத்யனுனபடியாலே, அவன தேவதைகள் மூலமாக பலன் அளிக்கிருன். இவ்விதமே தானம் தபஸ்ஸிற்கும் அர்ததட் கொள்ளவேண்டியது ஆகவே அசேதனமான அபூர்வம் பலனைத்தராது).

அது போல ஸ்மிருதிகளுலும் ஸங்கீர்ண பிராம்மணங் களிலும், மந்திரங்கள் அர்த்த வாதங்கள மூலமாகவும் தர்ம சாஸ்திர இதிஹாஸ புராணங்களிலும், பிரும்மாதிகளும் தேவா சுரர்களும் தேக இந்திரியமுள்ளவர்கள் யென்றும், அவர்களுக் குளளே ஸ்வபாவ பேதஙகள் இருப்பதாகவும், அதேமாதிரி விதயாஸங்கள் ஸ்தானங்களிலும், போகஙகளிலும், அவர்களின சேஷ்டிதஙகளிலும சொல்லப்படுகினறன என்பது தெளிவாகும். ஆகையால் சரீரமிருப்பதாலே, தேவதைகளுக்கும் அதிகாரம் உண்டு ஸாமர்த்தியமுண்டு. தேகமுள்ளதாகையால் துக்கங் களும் (சுகங்களும்) உண்டு. அந்த துக்க நிவிருத்திக்காக பரமாத்மாவின் உபாஸனத்தில் விருப்பமாகிற அர்த்தித்வமும் ஸாமர்த்தியமும் இருக்கக்குறையில்லை. அதனுல் பிருஹ்ம உபாஸனையின் அதிகாரம் உண்டு என்பதாகும்.

முற்றும்.

எவர்களுடைய யாகங்களை தேவதைகள் சென்று அடை கிறார்கள்? பல பேர்கள் யாகங்கள் செய்கிறார்கள் அவர்களில் எவன் அவர்களை முதலில் அழைத்து உபசரிக்கிறார்களோ அவன் தான் அவர்களை உபாஸிக்கிறான்—எப்படி நாளை என்பது சீக்கிரம் வருமோ அதுபோல. ஆகவே சரீரங்களை உடையதற்கு கர்மாக்களோடு விரோதம் இருக்கும். அவ்வித மிருக்குமானால் - அது இல்லை - சூத் 1-3-26 अनेकप्रतिपत्तेर्दर्शनात् ஒரே சமயம் அநேக சரீரங்களை எடுத்துக் கொள்வதற்கு ஸாமர்த்தியம் சில பேர்களுக்கு முடியும். ஸௌபரிரிஷி விஷயத்தில் சக்தியிருந்தது. அதுபோல அவர்களுக்கு ஒரே சமயம் பல சரீரங்கள் எடுப்பதற்குச் சக்தியுண்டு என்று கொள்ளத்தகும்.

(இங்கே மீமாம்ஸகன் ஆடசேபிப்பது विग्रहोहविरादानं युगपत्कर्मसनिधि: । प्रीति: फलप्रदानञ्च देवतानां न विद्यते என்கிற ஆட் சேபத்தை விரோதி இதி சூத்ரத்தால் கர்ம விரோதம் யாதெனில் - பல யாகங்களுக்கு ஆகமனம ஹவிஸ்கிரஹித்தல் பலன் கொடுத்தல் இத்யாதிகளில் அஸமஞ்ஜஸம் அதற்கு பரிகாரம் சொல்லப்பட்டது).

சூத்ரம் शब्द इति चेन्न-अत: प्रभवात् प्रत्यक्षानुमानाभ्याम् । (१-३-२७)

சப்த இதிசேந்நாத: ப்ரபவாத்
பிரத்யக்ஷா நுமாநாப்யாம் (1-3-27)

சப்தே (விரோத:) இந்திராதி சப்தத்தில் விரோதம் யேற்படக் கூடும்). இதிசேத்—என்றால், அத: வேத சப்தங் களிலிருந்தே ப்ரபவாத்—(இந்திராதி தேவர்கள்) உண்டாக் கப் படுவதாலே ந சரீரத்வம் விரோதமில்லை. பிரத்யக்ஷ அநுமாநாப்யாம் - ச்ருதி ஸ்ம்ருதிகளிலிருந்து (இது அறியப் படுகிறது.)

விரோத இதிவர்த்ததே - முந்தின சூத்ரத்தின்படி விரோ தம் யேற்படும்; சரி நீ சொல்கிறபடி (பூர்வபக்ஷி சொல்வது) விரோதம் இல்லை கர்மங்கள் விஷயத்தில் இப்படி ஒரு தேவதை பல தேகங்கள் கொள்வதால் அது அவர்களுக்கு

விசேஷ சக்தியிருப்பதால் முடியும் என்றால்; அநேக சரீர ப்ரதிபத்தி; அவ்விதமானால் சப்தத்துடனே (வேதத்துடனே) விரோதம் ஏற்படக்கூடும். சரீரம் என்பது அநித்யம் அழியக் கூடியது. அதனால் விக்ரஹத்துடன் (ருபத்துடன்) இருப்பது என்பதற்கு அர்த்தம் ஸாவயவத்வே ந என்பதால், இந்திரன் முதலானோர்(இவைவேதங்களில் கூறப்பட்டதாகை யால்) அவர்கள் அழியக் கூடியவர்கள் அவர்களுக்கு அவய வங்களிருப்பதால் தேகங்களிருப்பதால் அவர்கள் அநித்யம். ஆகையால் தேவதத்தன் என்கிற சப்தத்தைப் போல, இந்தி ராதி சப்தங்களுக்கு வேதத்தில் உள்ளபடியால், அவர்கள் உற்பத்திக்கும் நாசத்துக்கும் இடைவெளி உண்டாகுமாகை கையால் இந்திராதி சப்தங்களுக்கு அர்த்த சூன்யத்வம் யேற்படக்கூடும். वैदिकानामर्थशून्यत्वं இல்லாத போனால் அநித் யத்வம் யேற்படக்கூடும். (அதாவது வேத சப்தங்களால் கூப்பிட்ட போது இந்திரன் இல்லாமை யேற்படக்கூடும். அதனால் கர்மாவுக்கு விரோதமில்லை யென்றாலும், வேத சப்தங்களுக்கு விரோதம் உண்டாகும். (இங்கு பூர்வபக்ஷி சொல்ல விரும்புவது, வேதசுருதி அநியத்வமாகி விடும். எப்போது அதன் இந்திரபதம் இறப்பு மரணத்தை அடை யக் கூடிய இந்திரனைக் குறிக்குமானால் அதனால் வேதம் அபிரமாணத்தை அடையக் கூடும்.)

நீ சொல்வது போல இல்லை; (சூத்ரம்) अतः प्रभवात् வேத சப்தங்களிலிருந்தே இந்திராதி தேவர்கள் படைக்கப் படுவ தாலே; இந்த இந்திராதி சப்தத்தாலேயே அடிக்கடி அடிக்கடி இந்திரன் அதுபோன்ற மற்றவர்கள் அடிக்கடி படைக்கப் படுகிறார்கள். ஜைமினி சொல்வார். औत्पत्तिकः शब्दस्यार्थेन संबन्धः इति என்ன சொல்லப்பட்டது என்றால். தேவதத்தன் அது போன்ற பதங்களைப் போல அல்ல இந்திராதி சப்தங்கள். இவை வைதிகசப்தங்கள் — வ்யக்திவிசேஷமாத்திரத்தை ஒரு குறிப்பிட்ட புருஷனைக் குறிக்காது. இந்திர ஜாதியைக் குறிக் கும். எப்படி गवादिशब्दं பசு என்கிற சப்தம் கேவலம் ஒரு பசு வைக் குறிக்காது. அது பசு ஜாதியைக் குறிக்கும் आकृतिविशेष वाचित्वं ஜாதியின் விசேஷ தர்மத்தைச் சொல்லி அந்த தர்மத்

துடன் கூடிய ரூபம்; ஆகையால் ஒரு இந்திரவ்யக்தி நஷ்டமானுல், அந்தக் காரணத்திஞல் வைதிகாத் அந்த சப்தத்தாலேயே இந்திர சப்தத்தாலே பிரும்மா மனத்திற்குள் பூர்வ ஸ்ருஷ்டியின் நினைவு கொண்டு அதே மாதிரி அதே ஜாதி தர்மங்கள் கொண்ட வடிவத்திஞல் இன்ஞெரு இந்திரனைப் படைக்கிருர்; எப்படி குலாலன் (பானை செய்பவன்) கடசப்தத்தை மனத்தில் தாரணம் செய்து கொண்டு அதன் பிரகாரம் ஆகாரம் ரூபம் கொண்டுள்ள பானையை உண்டாக்குகிருஞே அது போல் என்று அர்த்தம். कथमिदमवगम्यते இது எப்படி அடையப்படுகிறது. श्रुतिस्मृतिभ्यामित्यर्थ: சுருதி ஸ்ம்ருதிகளால் நேராகவும் மறைவாகவும் சொல்லப்படுவதாலே. இதைத்தான் சூத்ரத்திலே பிரத்யக்ஷ அநுமாநாப்யாம் என்று சொல்லப்படுகிறது.

முதலில் சுருதி பிரமாணம் தை. ஆ. 2-7-6-2; वेदेन रूप व्याकरोत् सतासतोप्रजापति: – பிரஜாபதி (பிரும்மா) வேதத்தின் உதவியிஞல் ஸத் என்பதையும் அஸத் என்பதையும் பிரித்து வித்யாஸப்படுத்திஞர். அதே பிரகாரம். स भूरिति व्याहरत्, स भूमिमसृजत: स भूव इति व्याहरत्, सोऽन्तरिक्षमसृजत इत्यादि: பிரும்மா பூ; என்கிற சப்தத்தை ஓதிஞர் அதஞல் ப்ருத்வியை உண்டாக்கிஞர்; भुव: என்கிற சப்தத்தைச் சொல்லி அந்தரிக்ஷத்தை உண்டாக்கிஞர். இதஞல் அர்த்தம் யாதெனில் வாசக சப்த பூர்வம் ஒவ்வொரு சப்தத்தை உச்சரித்த பின்பு தன் மனத்திற்குள் ஞாபகப்படுத்திக் கொண்டார் அந்த வஸ்துவின் ஆகாரம் (ரூபம் அந்த சப்தத்திற்கு உள்ளதை ஞாபகம் செய்து கொண்டு பூர்வ ஸ்ருஷ்டிப் பிரகாரம் பல வஸ்துக்களை பல ஆகாரம் (ரூபாதிகளுடன்) அந்த அந்த வேத சப்தங்களுக்கு யேற்ப படைத்தார். (தத்தத் ஸம்ஸ்தான விசிஷ்டம் தம்தமர்த்தம் ஸ்ருஷ்டவாந் - இத்யர்த்த:) இதே பிரகாரம் ஸ்மிருதிகளிலும் சொல்லப்படுகிறது. (பார. சா. 231)

अनादिनिधना ह्येषा वागुत्सृष्टा स्वयंभुवा ।
आदौ वेदमयी दिव्या यत: सर्वा: प्रसूतय: ॥

(வேதத்தின் வசனம் அநாதி நிதனம், தெய்வத்தன்மை பொருந்திய வேதம் ஆதி அந்தமில்லாதது. அதிலிருந்து எல்லாப் பிராணிகளும் உண்டாகின்றனர். அந்த வேத வசனம் ஸ்வயம் புவினால் அனுப்பப்பட்டது (உத்ஸ்ருஷ்டா) மனு 1-21

**सर्वेषां तु स नामानि कर्माणि च पृथक्पृथक् ।**
**वेदशब्देभ्यः एवादौ पृथक्संस्थाश्च निर्ममे - इति ।**

வாஸ்தவமாக வேத பதங்களின் உதவியால், அவர் நாமங்களையும் சேஷ்டிதங்களையும் (கர்மங்களையும்) எல்லாப் பொருள்களுக்கும் தனித்தனியாக ஒவ்வொன்றிலும் பல தரப்பட்ட உருவங்களிலும் உண்டாக்கினூர். संस्था: உருவங்கள் (தேகஸங்காதம் கொண்ட ஜாதி தர்மங்களுடன் கூடிய ரூபங்கள்); ரூபாணி வடிவங்கள் (ஆகாரங்கள்); அவ்விதம் வி. பு. 1-5-63

**नामरूपं च भूतानां कृत्यानां च प्रपञ्चनम् ।**
**वेदशब्देभ्य एवादौ देवादीनां चकार सः ॥**

வேதசப்தங்களின் உதவியாலே, அவர் நாமங்களையும் உருவங்களையும் எல்லாப் பிராணிகளுக்கும் உண்டாக்கினூர் உதாரணமாக தேவர்கள் இத்யாதி. பிறகு அவர்களிடம் அவர்களுடைய கர்மங்களைச் சொன்னூர். ஆகையால் தேவதைகளுக்கு சரீரம் இருப்பதாக ஒப்புக்கொண்டாலும், அதிலிருந்து தெரியவராது — வைதிக சப்தங்கள் அர்த்தமில்லாதவை, வேதங்களுக்கு ஆதிமத்வம் உண்டு (உற்பத்தி ஆரம்பம் உண்டு) என்பதாகும்.

(வேதம் அநாதி; ஸ்வரூபமோ—நித்யத்வம்; உச்சாரணத்தாலேயே அதற்கு ஸ்வரூபஸித்தியேற்படுகிறது. வேதத்தின் அநுபூர்விகளைத்தான் ஞாபகத்தில் வைத்துக் கொண்டு அநுபூர்விமாருமல் எம்பெருமான் நான்முகனுக்கு ஒவ்வொரு தடவையும் உபதேசிக்கிருர். "யோ ப்ரும்மாணம் விததாதி பூர்வம்யோவை வேதாம்ச ப்ரஹிணோதி

தஸ்மை என்கிறபடி. இதனால் வேதத்திற்கு அபௌ ருஷேயத்வம் நித்யத்வம் யத்பூர்வ பூர்வோச்சாரணக்ரம ஜனித ஸம்ஸ்காரேண தமேவ க்ரமவிசேஷம் ஸ்மிருத்வா தேனைவ க்ரமேண உச்சார்யமானத்வம் என்கிறார்).

சூத்ரம் अत एव च नित्यत्वम् (१-३-२८)

அதயேவ ச நித்யத்வம் (1-3-28)

அதயேவ ஆகையால் நித்யத்வம் ச வேதத்தின் நித்யத் வமும் சித்திக்கிறது.

இந்திரன் வசிஷ்டர் ஆகிய பதங்கள் தேவன் ரிஷி அந்த அந்த ஆகாரம் (ரூபம்) கொண்ட ஜாதியைக்கூறும் சப்தங் களாகும். (वाचित्वम्); அந்த அந்த சப்தங்களால் அந்த அந்த வகுப்பு (ஜாதி)க் குரிய அர்த்த விசேஷங்களை (தர்மம் ரூபம் இத்யாதி) முந்தியிருந்தது மாதிரி ஞாபகப்படுத்திக் கொண்டு அந்த அந்த பொருள்கள் (வ்யக்திகள்) படைக்கப் பட்டனர். இவை எந்தக் காரணங்களால் முதலில் யேற் பட்டவையோ அந்தக் காரணங்களால் வேதம் நித்யம் என்ப தாகும். அது உண்டாக்கப்படுகிறது என்று சில ச்ருதி களிலே சொல்லப்பட்டாலும்; அந்த ச்ருதிகளானவை இவை யாகும். मन्त्रकृतो वृणीते (அவன் மந்திரங்களை உண்டாக் கினவர்களிடமிருந்து வரம் வேண்டுகிறான்; தை. அ. 7-1-4 नम ऋषिभ्यो मन्त्रकृद्भ्यः: அவன் மந்திரங்களை உண்டுப் பண்ணின ருஷிகளை நமஸ்கரிக்கிறான்.

தை. அ 5-2-3. अयं सोऽग्निरिति विश्वामित्रस्य सूक्तं भवति விஸ்வாமித்திருடைய சூக்தம் ஆரம்பிக்கிறது — இது அக்னி என்று. இதனால் வஸிஷ்ட விஸ்வாமித்திரர்கள் மந்தி ரங்களை உண்டு பண்ணினதால் (மந்திரங்களை தங்களது ஞான திருஷ்டியினால் கண்டு அறிந்தவர்களாதலால்) அதனால் காண்டங்களை உண்டாக்கியவர்கள்; அதனால் அவர்களுடைய பெயர்களைக் கொண்ட அந்த அந்த காண்ட சூக்தங்கள் என்று சொல்லப்பட்டாலும் வேதம் நித்யம் எனக்

கொள்ளப்படுகிறது. அவர்களே மந்திரங்களை சாக்ஷாத் காரம் செய்துள்ளவர்களாதலாலே. அதே மாதிரி ऋषिकृतो ऋषिर् மந்திரங்களை உண்டுபண்ணின (ரிஷிகளிடமிருந்து) கர்த்தாவிடமிருந்து வரம் வேண்டுகிறான்—என்கிற வேத சப்தங்களாலும் அந்த அந்த காண்ட - சூக்த மந்திரங்களை உண்டு பண்ணின (கண்டு பிடித்த) மஹரிஷிகளின் ஆகாரங்கள் - ஜாதி-சக்தி-இவைகளை ஞாபகம் செய்து கொண்டு பராம்ருஸ்ய பிரும்மா மீண்டும் அதே மந்திரங்களை காண்டங்களை - சூக்தங்களை ஸ்ருஷ்டிக்கிறார். அத்தகைய ரிஷிகளை அவர் உண்டாக்குகிறார். அவர்களுக்கு சக்தியைக் கொடுத்து, அந்த மந்திரங்களை உண்டாக்க அதிகாரிகளாக ஆக்குகிறார். அந்த ரிஷிகள் இவ்விதம் பிரும்மாவினால் அனுக்ரஹிக்கப்பட்டவர்களாக தபஸ்ஸை செய்து அவர்கள் நித்ய ஸித்தமாக விருப்பதும், பூர்வ பூர்வ வஸிஷ்டாதி (விஸ்வாமித்திராதிகளை)க் கண்டு அவர்கள் தாம் இந்த இந்த மந்திர த்ருஷ்டாக்கள் என அறிந்து அவர்கள் ஒரு தப்புமில்லாமல் - உச்சரிப்பு-சப்தம் பதங்கள் இத்யாதிகளை சரிவர அறிகிறார்கள். இதனால் மந்திரதிருஷ்டாவாகிறார்கள். இந்தக் காரணத்தாலும் வேதங்கள் நித்யத்வம் எனச் சொல்லப்பட்டு; இந்தரிஷிகளும் மந்திரகிருத் (மந்திர திருஷ்டாக்கள்) எனச் சொல்லப்படுகிறார்கள்.

மேலும் இவ்விதம் சொல்லப்படும்—நைமித்திக பிரளயம் யேற்படும் போது இம்மாதிரி பூர்வ ஸ்மிருதியினால் இந்திராதிகளும் வேதசப்தங்களும் பிரஜாபதியினால் உண்டாக்கப்படுகிறார்கள். ஆனால் பிராகிருத பிரளயங்களில் (இது பூர்ணமானதும் பிரளயம் இதில் முடிவானதுமான எல்லா பிரம்மாண்டங்களும் நாசமாகும்போது பிரஜாபதியும் அழிந்து போகிறார், பூதாதி அஹங்கார பரிணாம சப்தத்தின் வாச்யமான காரியங்களை அறிவுறுத்தும் வேதசப்தங்களும் அழிந்து போகின்றன. அப்படியாகுமானால் பிரஜாபதி சப்தத்தின் உதவியினாலே முன்னால் இருந்த ஸ்ருஷ்டியை (வார்த்தைகளை) எவ்விதம் உண்டாக்குவார்? (என்று சந்தேகம் எழும்). அதனால் எவ்விதம் ப்ரஜாபதியே அழியும்போது

அவரால் எவ்விதம் சப்த பூர்வி ஞானத்தினாலே ஸ்ருஷ்டியும் வேதமும் உண்டாக்கப்படுகிறது? எப்படி அப்போது வேதத்திற்கு நித்யத்வம் யேற்படக்கூடும்? ஆகையால் வேதம் நித்யம் என்று சொல்பவர்கள் அவர்கள்கட்டாயம் ஒப்புக்கொள்ள வேண்டியது—லோக வ்யவஹாரம் (உற்பத்தி ஸ்திதி நாசம் இத்யாதி) பிரவாஹத்தைப் போல தொடர்ந்து அவிச்சின்ன பரம்பரையாக நதியைப்போல விருக்கிறது.

(பிரவாஹநித்யம் என்பதற்கு சில இடங்களில் வேதம் உச்சரியாமல் இருந்தாலும் ஆங்காங்கு பலர், அதை உச்சரித்துக் கொண்டே யிருப்பார்களாதலால் வேதம் பிரவாஹநோ நித்யம். ஈஸ்வரன் வேதத்தை உண்டாக்குவதில்லை. ஸர்வக்ஞன் ஆனபடியால் ஸர்வேஸ்வரன் வேதத்தின் அனுபூர்விகளைத்தான் ஞாபகத்தில் வைத்துக் கொண்டு மீண்டும் அதே அனுபூர்விகளை மாறாமல் நான்முகனுக்கு உபதேசிக்கிறான் என்று அர்த்தம்) இதற்கு சூத்ரக்காரரே பதில் உரைக்கிறார்—அடுத்த சூத்ரத்திலே.

விளக்கம்: 1. பிரளயம் இருவகைப்படும் நைமித்திகம் பிராகிருத என்று; நைமித்திகத்தில் சதுர்முகன் தூங்குகிறான். அச்சமயம் ஸ்ருஷ்டி தடைப்பட்டு பாதிபிரளயம் உண்டாகிறது. பிராகிருத பிரளயத்தில் வ்யஷ்டிஸமஷ்டி ரூபமுள்ள எல்லாமே (சகல பிரும்மாண்டங்களும்) நாசம். சதுர்முகன் வேதம் யாரும் இல்லை.

**பூர்வபக்ஷி** மந்திரங்களும் அர்த்தவாதங்களும் மந்திரங்களின் திருஷ்டாவை சொல்கின்றன என்கிறான். **சித்தாந்தி** வேதங்கள் ஒரு சமயத்திலே உண்டாக்கப்பட்டவை என்கிறான். மீமாம்ஸகன் கர்மம், பிராதான்யம், மந்திர அர்த்த வாதம் அங்கம் அடங்கி உள்ளது என்கிறான். அதனாலே ராமானுஜர் சூத்ரத்திலுள்ள ஏவ காரத்தினால் அதே சப்தங்களாலே என்று அர்த்தமிடுகிறார். மீமாம்ஸகன் சப்தங்களே பூதாதியிலிருந்து (தமஸ் அஹங்காரம் இதிலிருந்து) உண்டாயிற்று என்கிறான்.

சூத்ரம் समाननामरूपत्वाच्चाऽऽवृत्तावप्य विरोधोदर्शनात् स्मृतेश्च १-३-२९

ஸமாநநாமரூபத்வாச்சா஽஽வ்ருத்தாவப்ய விரோதோ
தர்ஸநாத் ஸ்மிருதேஸ்ச (1-3-29)

ஆவிருத்தௌ அபி (பிராகிருத பிரளயத்திற்குப் பிறகு) மறுபடி ஸ்ருஷ்டிக்கப்படும்போது, ஸமாந நாமரூபத்வாத் ச ஸ்ருஷ்டிக்கப்படும் பொருள்கள் (முந்தின கல்பத்திற் போலவே நாமரூபங்களை உடையதால் அவிரோத: விரோதம் ஒன்றுமில்லை. (ஏற்படுவதற்கில்லை). தர்சநாத் சுருதியிலிருந்தும் ஸ்ம்ருதே: ச ஸ்மிருதிகளிலிருந்தும் இவ்விதம் அறியப்படுவதாலே நாம் இதுவரை சொன்னதிற்கு உபஸம்ஹாரமாக கீழ் சொல்லப்படும். ஜகத் பிராக்ருத பிரளயம் யேற்பட்டதும் மீண்டும் உற்பத்தி ஆகிறது. ஸ்ருஷ்டி முன்னிருந்த நாமரூபங்களுடன் தொடர்ச்சியாக யேற்படுகிறது. (பகவான் ஸர்வக்ஞன் ஆனபடியால் நாமரூபங்களை முன்னிருந்ததை ஞாபகம் செய்து கொண்டு மீண்டும் ஸ்ருஷ்டிக்கிறார் என்கிற கருத்து). அதேபடி வேதங்களும் பூர்வமான அநுபூர்விகளை ஞாபகம் செய்து கொண்டு உண்டாக்கப்படுகின்றன. இதனால் யாதொரு விரோதமுமில்லை. ஏனெனில் உண்டாக்கப்பட்டவைகளுக்கும் நாமரூபங்கள் ஸமானரூபமுள்ளதாலே தொடர்ச்சியான ஸாம்யம் நாமரூபங்களில் இருக்கிறது. ஆகவே பகவான் புருஷோத்தமன் ஸ்ரீமந் நாராயணன் பிராகிருத பிரளயம் யேற்படும் போது ஸர்வ வஸ்துக்களும் நாமாகி மீண்டும் ஸ்ருஷ்டிக்கப்படும்போது, ஜகத்தின் முன் ஸம்ஸ்தானத்தை (நாமரூபங்கள் கொண்டவிடத்தை) அதேபடி ஸ்மரித்துக் கொண்டு வித்யாஸமின்றி மீண்டும் சிருஷ்டிக்கிறார். சா. உ. 6-2-3 बहु स्यां प्रजायेयेति நான் பலவாக ஆவேன் பிரஜைகளாகப் பிறப்பேன் என்று மஹா சங்கல்பம் செய்தவனாக போக்ய (அசேதன) போக்தா (ஜீவன்) என்று அழைக்கப்படும் வஸ்துக்களை தன்னிடம் லயமடைந்த வஸ்துக்களை அவ்விதமானாலும் அவை அவைகளின் ஸ்வரூபஸ்வபாவங்கள் மாறாமல் இருக்க; தன் சங்கல்ப சக்தி விசேஷத்தாலே

இவைகளை லயத்திலிருந்து விடுவித்து மஹதாதி பிரும் மாண்டங்களை ஹிரண்யகர்ப்பர் (வ்யஷ்டிபுருஷன்) பர்யந்தம் முன் இருந்த பிரகாரம் ஸ்ருஷ்டி செய்து அதேபடி அவர்கள் உய்வதற்க்காக வேதங்களையும் (சாஸ்திரங்களையும்) பூர்வ அனு பூர்வி விசேஷ சேர்க்கையுடன் மீண்டும் உண்டாக்கி ஹிரண்யகர்ப்பருக்கு அவைகளை சிக்ஷித்து, அவனை ஸ்ருஷ்டி செய்யும்படி உத்தரவிட்டு, (எப்படி) முன் இருந்த தேவர்கள் மனுஷ்யர்கள் இத்யாதிகளடங்கிய உலக ஸ்ருஷ்டியைப் பண்ணச் சொல்லி அவனால் ஸ்ருஷ்டிக்கப் பட்ட ஒவ்வொரு வஸ்துவிலும் தான் உள்நுழைந்து மேலான நியமனத்தைச் செய்யும் அந்தராத்மாவாக விளங்கு கிறார். ஆகவே சொல்லப்பட்டது எல்லாம் யாவும் உபபந்ந மாகும் (சரியாகும்).

இந்தக் காரணத்தினாலே வேதங்களுக்கு அபௌரு ஷேயத்வம் (மானிடர் போன்றவர்களால் உண்டாக்கப்பட வில்லை) நித்யத்வம் இரண்டும் யேற்பட்டது. எங்கன மெனில் பூர்வ பூர்வ உச்சாரண க்ரமத்தினால் யேற்பட்ட ஸம்ஸ்காரத்தினால் அதேபடி உச்சரிப்பு க்ரம விசேஷங்களை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு அந்த பகவானால் க்ரமமாக (யோ பிரும்மாணம் விததாதி பூர்வை யோ வை வேதாம் ச ப்ரஹிணோதி தஸ்மை - என்கிறபடி - அப்படியே நான்முக னுக்கு உபதேசித்ததால் பகவானே முதல் ஆசார்யராக ஆனார். நமக்கும் ஸர்வேஸ்வரனுக்கும் உச்சரிப்பு வரிசை கிரமம் எல்லாம் ஒன்றும் ஸமானமாகும். ஆனால் ஒரு வித் யாஸம் நமக்கு ஸம்ஸ்காரம் அபேக்ஷை, ஈஸ்வரனுக்கு ஸம்ஸ் காரம் தேவையில்லை, (பூர்வ உச்சாரணக்ரம ஞான அதீன ஸம்ஸ்காரஜன்ய ஸ்ம்ருதிமாத்ராதீந பூர்வக்ரம ஸஜாதீயக்ரம விசிஷ்டோச்சாரணவிஷயத்வம் இதியுக்தம் பவதி. அந்த தாத்ருஸம் நமக்கும் பகவானுக்கும் இருப்பதால் ஸமானம்). பகவானுக்கு ஸம்ஸ்காரம் அவசியமில்லை. அவனுக்கு அனு ஸந்தானத்தினால் இது ஏற்படவில்லை. ஆனால் நித்யபிரத் யக்ஷரூப ஈஸ்வரஞானத்தினால் ஸ்மரணத்வம் யேற்படுவதே காரணமாகும். அதனால் அவனுக்கு அவிச்சின்ன

கிரஹணம் ஸம்பவிக்கிறது. இருள், மருள் மறப்பு—வஞ்சனை எவ்வித குற்றமும் அவனுக்கில்லை. அவிச்சின்ன பரம் பரையாதலால் உச்சரிப்பு மாறுபடவில்லை. ஸ்வரம் அதே படியிருக்கிறது.)

இது எப்படி நேருகிறது என்பதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார். சுருதிகள் தர்சநாத் என்பதாலும்; ஸமிருதேஸ்ச ஸ்மிருதிகளிலும் இந்த விஷயம் சொல்லப்பட்டதாக விருக் கிறது.

ஸ்வே. 6-18 यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै எவன் பிரும்மாவை முதலில் ஸ்ருஷ்டித்தானோ அவனே வேதங்களை அவனுக்கு (பிரும்மாவுக்கு) உபதேசித்தார்; ஸ்மிருதி - மனு 1-5 आसीदिदं तमो भूतम् (பூ மண்டலம் முதலில் தமஸ்ஸில் அடங்கியிருந்தது) என்று ஆரம்பித்து தொடர்ந்து சொல்கிறது.

सोऽभिध्याय शरीरात् स्वात् सिसृक्षुर्विविधाः प्रजाः । अत एव ससर्जादौ तासु वीर्यमपा(वा)सृजत् । तदण्डमभवद्धैमं सहस्रांशुसमप्रभम् । तस्मिन् जज्ञे स्वयं ब्रह्मा सर्वलोकपितामहः என்று; பரமாத்மா தன் உடம்பிலிருந்து பலவகைப்பட்ட பிராணிகளை உண்டாக்க இஷ்டமுள்ளவராக, முதலில் சங் கல்பத்தால் காரண ஜலங்களை ஸ்ருஷ்டித்து அதில் தன் வீர்யத்தை வைத்தார். அது தங்கமயமான முட்டையாக மாறி சூர்யனுக்கு ஒப்பான தேஜஸ்ஸுடன் இருந்தது. அவரே பிரும்மாவாகவும் ஸம்பூர்ண உலகத்தை உண்டாக்கு பவராகவும் ஆனார். இதனால் தானே ஸ்வயம் பிருஹ்மா ஸர்வலோக பிதா மஹரானார்.

அவ்விதமே பௌராணிகர்களும் (நாரஸி. 3-1) சொல் கிறார்கள்.

तत्र सुप्तस्य देवस्य नाभौ पद्ममजायत । तस्मिन् पद्मे महाभाग वेदवेदाङ्गपारगः । ब्रह्मोत्पन्नः, स तेनोक्तः, प्रजाः सृज महा- मते—

யோகநித்திரையை அடைந்த ஸ்ரீமந் நாராயணரிடமிருந்து ஒரு தாமரைப்பூ அவருடைய தொப்புளிலிருந்து உண்டாகியது. மஹாபாக, அந்த தாமரையில் பிரும்மா உண்டானார். அவர் வேதங்களைக் கற்றார்; மற்ற சாஸ்த்திரங்களையும் அறிந்து கொண்டார். பிறகு பகவானால் ஆக்ஞைபிடப்பட்டார். "நீ பூலோக ஸ்ருஷ்டியை ப்ரஜைகளை செய்வாய் மஹாமதி" என்றார். அதேபடி வராஹ. பு. 10ல் परो नारायणो देवस्तस्माज्जात चतुर्मुखः इति எல்லோருக்கும் மேலான ஸ்ரீமந் நாராயணர் — அவரிடமிருந்து சதுர்முக பிரும்மா உண்டானார். இதே விஷயம் மீண்டும் வராஹ. பு. 2-ல் आदिसर्गमहं वक्ष्ये (நான், முதல் ஸ்ருஷ்டியைப் பற்றிச் சொல்கிறேன்); என்று ஆரம்பித்து சொல்கிறது.

सृष्ट्वा नारं तोयमन्तास्थितोऽहं येन स्यान्मे नाम नारायणेति । कल्पे कल्पे तत्र शयामि भूयः सुप्तस्य मे नाभिजं स्यात् यथाऽऽब्जम् । एवं भूतस्य मे देवि नाभिपद्मे चतुर्मुखः । उत्पन्नः, स मया चोक्तः प्रजाः सृज महामते—इति

நாரங்கள் என்கிற காரண ஜலங்களை சிருஷ்டித்து நான் அதற்க்குள்ளே வசித்தேன். அதனால் நாராயணன் என்கிற பெயரை அடைந்தேன். ஒவ்வொரு கல்பத்திலும் நான் யோக நித்ரையை அதில் அடைகிறேன். என் தொப்புளிலிருந்து பத்மம் ஒன்று உண்டாகியது. தேவி, நீ என் தொப்பிளில் அவ்விதமான பத்மமாகவிருக்கிறாய். நான் யோக நித்ரையில் இருக்கும்போது, சதுர்முகன் நாபி பத்மத்தில் தோன்றினான். உத்பன்ந: (உண்டாக்கப்பட்ட அவனிடம்) நான் ஆணையிட்டேன். நீ பிரஜைகளை ஸ்ருஷ்டிப்பாயாக என. (இதனால் காரணபத்மம், தேவி, சதுர்முகன் அவர்களுக்கு புத்ரன். நாரங்களைத் தாங்குவதால் நாராயணன். நாரங்களைத்தன் இருப்பிடமாகக் கொண்டதால் நாராயணன் அந்த அவஸ்தையில் மஹாலக்ஷ்மியுடன் கூடவிருந்ததால் ஸ்ரீமந்நாராயணன் பூதேவி ஸ்ரீதேவியின் அம்சம் எனக்கருதப்படுகிறது.)

ஆகையால் தேவதைகளுக்கு அர்த்தித்வம் (மோக்ஷமடைவதில் விருப்பம்) ஸாமர்த்தியம் இரண்டும் சேர்ந்து இருப்பதால் பிருஹ்ம வித்யையில் அவர்களுக்கும் அதிகாரம் இருக்கிறது என்பது ஸித்தம்.

## மத்வதிகரணம் (1-36)

ஸூத்ரம் मध्वादिष्वसंभवादनधिकारं जैमिनिः १-३-३०

மத்வாதிஷ்வஸம்பவாதநதிகாரம் ஜைமினி: (1-3-30)

மத்வாதிஷ் - மது வித்யை முதலான சில வித்யைகளிற் அஸம்பாவாத் - (அதிகாரம்) பொருந்தாமையாலே (ஏற்படாததாலே) அநதி காரம் (தேவர்களுக்கு) அதிகாரமின்மையை ஜைமினி:—ஜைமினி உரைத்தார்.

இந்த அதிகரணத்தில் மதுவித்யை போன்ற சில குறிப்பிட்ட பிருஹ்ம வித்யைகளில் தேவதைகளுக்கு அதிகாரம் இல்லை என்னும் ஆட்சேபம் தள்ளப்படுகிறது. முதல் இரண்டு ஸூத்ரங்கள் பூர்வபக்ஷம்; மூன்றுவது சித்தாந்தம்.

இதுவரையில் பிருஹ்மவித்யையில் தேவதைகளுக்கு அதிகாரம் உண்டு என ஸ்தாபிக்கப்பட்டது. இந்த அதிகரணத்தில் சிந்திக்கப்படுகிறது—எந்த உபாஸனைகளில் எந்த தேவதை உபாஸ்யமாக விருக்கிறதோ அவைகளில் அந்த வித்யைக்குள்ள தேவதைக்கு அதிகாரம் உண்டா — இல்லையா? என்பதாகும்.

உதாரணமாக சா. உ. 3-1-2ல் மதுவித்யையில் ஸூர்யனை தேவதைகள் உட்கொள்ளும் தேனாகவும், மரத்தில் தேனடையிருக்குமாப் போல மேலுலகில் அந்தரிக்ஷம் எனப்படும் தேனடை இருப்பதாகவும், வண்டுகள் புஷ்பங்களிலிருந்து தேனை சேகரிப்பது போல, அந்த அந்த வேத மந்திரங்கள் தங்களைச் சொல்லிச் செய்யப்படும் யாகம் முதலியவற்றிலிருந்து யசஸ்ஸு தேஜஸ்ஸு, இந்திரியம், வீர்யம் போன்ற

பலன்களை எடுத்து சூர்யமண்டலத்தில் ஒவ்வொரு திசையி லும் ஒருவாறு சேர்த்து வைத்திருப்பதாகவும், வசுருத்ர ஆதித்ய — மருத் — ஸாத்யகணங்கள் என்று ஐந்து வித கணங்கள் நான்கு திக்குகளிலும் மேலேயும் நின்று அதனைக் கண்டு உகக்கிறார்கள். வேதங்கள் உபநிஷத்துக்கள் புரா ணங்கள் தேன் ஈக்கள் - பலவித ஹோமங்கள் புஷ்பங்கள். ஹோம ஆஹுதிகள் அம்ருதத்தை உண்டாக்கி அது சூரிய னின் ஒரு பகுதியில் பாய்ந்து அதை சிகப்பாக ஆக்குகிறது. வசு இத்யாதி கணங்கள் அம்ருதத்தைப் பருகி இன்பமடை கிறார்கள். இத்தகைய தேஜுக சூர்யனை தியானம் செய்வ தோடு அவனுக்கு அந்தர்யாமியான ப்ருஹ்மத்தையும்— உபாஸிப்பவருக்கு முதலில் வசுருத்ராதி லோகங்களின் போகமும் பிறகு யாவருக்கும் அந்தர்யாமியாக விருக்கும் பரமாத்மாவை உபாஸிப்பவர்களுக்கு மோக்ஷமும் உண்டு).

**ஸ்ரீபாஷ்யம்:**—பூர்வபக்ஷி சொல்கிறான் மதுவித்யையில் வசுக்கள், ருத்ர ஆதித்யர்களான தேவர்களை உபாஸித்தால் வசுருத்ர ஆதித்ய பதவிகளையடையலாம் எனக் காட்டப் பட்டது. ஏற்கனவே இந்த பதவிகளை அனுபவித்து வரும் வசுருத்ர ஆதித்யர்களுக்கு இப்பதங்களில் இருப்பதும் இராது—தாங்களே உபாஸ்ய தேவதைகளாக விருப்பதாலே அதனால் இந்த மதுவித்யையில் (அது போன்ற மற்ற வித்யைகளிலும்) தாங்களே தங்களையே உபாஸித்துக் கொள்வதும் ஒட்டாது. ஆகவே அதிகாரம் இல்லை அந்த மது போன்ற வித்யைகளில் அந்த தேவதை களுக்கு இல்லை என ஆசார்யர் ஜைமினி கருதுகிறார். எப்படி? அஸம்பவாத் அதிகாரம் பொருந்தாது. ஆதித்யவசுக்கள் உபாஸ்யமாக தேவதைகளான படியால் பொருந்தாது; இன் னொரு சூர்யன் வசுவாக உண்டாக்கப்படமாட்டாது. அந்த அன்ய தேவதையை (சூர்யனை) இப்போதுள்ள சூர்யன் வசு உபாஸிப்பதற்க்காக; மேலும் ஏற்கனவே இருக்கும் வசு ருத்ர ஆதிதயர்கள் விஷயத்தில், வசுத்வம், ருத்ரத்வம், ஆதித்யத்வம் உபாஸ்யப் பொருளாக ஆகமாட்டாது. ஏனெனில் அது ஏற்கனவே அவர்களின் அனுபோகத்தில்

இருந்துவருகிறது. பிராப்தத்வாத் (அடைந்து விட்டபடி யாலே.)

ஜைமினி அபிப்ராயப்படுகிறார்—இரண்டிலும் அதிகார மின்மை மது வித்தைக்கும் பிரும்மவித்யைக்கும் என்று சொல்கிறார். மது வித்யையில் ஸம்பவிக்க முடியாது ஏனெனில் இரண்டுக்கும் ஒப்ப வேண்டி நேரிடும். மது வித்யையில் மனிதன் சூரியனை மது என அத்யாஸம் கொண்டு உபாஸிப்பது காரணம். சூரியனே உபாஸகனாகி விருப்பானாகில் அவன் எந்த சூரியனை உபாஸிப்பான். ஆகவே இரண்டிலும் ஸம்பவிக்கமாட்டாது.

மதுவித்யையில் ருக் முதலிய வேதங்களின் கர்மங் களைக்காட்டி சூரிய கிரணங்கள் வழியாக அடையப்படும் ரஸங்கள் அம்ருதம் என அழைக்கப்பட்டு அவைகளே (அந்த அம்ருதமே) உபாஸ்யப் பொருளாக அந்த அம்ரு தத்தை தனக்குள் வைத்திருப்பதாகவும், சூரியனை மதுவாக வும், (அம்ருதத்தின் பெயரால் அழைப்பது) அந்த ரஸம் ருக் வேதாதி கர்மாக்களால் உண்டாக்கப்பட்டதாகும். சூர்யனை அனுபவிக்கும் வசுக்கள் அதை உபாஸ்யம் எனக் கருதுபவர்கள் அதனால் வசுவானதலால், சூரியன் அதே சமயம் உபாஸ்யப் பொருளாக ஆகமாட்டாது. (அதாவது உபாஸ்யப் பொருளே உபாஸகனாக மாட்டாது) மதுவித்யை யில் ருக் வேதாதிகளால் பிரதிபாத்ய கர்மம் விதிக்கப் பட்டது ரஸ்மி (கிரணங்களாலே) வழிகளாலே, அடையப் பெறும் ரஸத்தை இருப்பிடமாக ஆதித்யன் கொண்டதால் அதை அடைய வ்யபதேசம் சொல்லப்பட்டது. மது வித்யையில் உபாஸ்யப் பொருள் மதுவாகவும், சூரியனே மது என்கிற பெயரால் அழைக்கப்படுகிறான். அதை உபாஸகன் அவனுடைய ரஸ்மிகள் வழியாக அடைகிறான். ஆதித்ய அம்சங்களான வசுக்களால் அனுபவிக்கப்படும் அந்த்தேனே (மதுவே) உபாஸ்யப் பொருளாக ஆகிறது. அந்த வித்யையின் பலனாக வஸ்வாதித்வம் அடையப்படு கிறது என்று சுருதி சொல்கிறது, சூரியன் வஸ்வாதி

தேவதைகளுக்கு மதுவாக தேனாக பரமபோக்யனாக இருப்பவன். (ருகாதி நான்கு வேதங்கள் உபநிஷத்துக்கள், ஸ்ரீபாஞ்சராத்திரம் முதலிய நூல்கள் ஆகியவற்றில் விதிக்கப்பட்டுள்ள கர்மாக்களை விதிப்படி அனுஷ்டிப்பதால் அக்கருமங்களில் வழங்கப்படும் ஹவிஸ் முதலியவை ரஸமாக (தேனாக) மாறி சூரியனை அடைகிறது. இந்த தேனை முன் சொன்ன ஐந்து தேவகணங்கள் பருகுகிறார்கள் - கண்டே மகிழ்கிறார்கள் இவ்விதம் மது உண்டாகும் கிரமத்தையும், அந்த சூர்யன் வசு முதலியவர்களை உபாஸிப்பவர் யாவராயினும் - அவர்களும் அப்பதவியை அடைகிறார்கள் எனக் கருத்தாகும்—மது வித்யையில்).

சா. உ. 3-1-1ல் असौ वा आदित्यो देव मधु சூர்யன் தேவதைகளின் தேனாக (மதுவாக விருக்கிறான்; என்று ஆரம்பித்து முடிக்கிறதிற்கு முந்தி ஆரம்பத்தில் சா. உ. 3-6-1ல் तद् यत् प्रथममृतं तद्वसव: उपजीवन्ति (अग्निना मुखेन) அதிலிருந்து மேலே கிளம்பி—; என்று ஓதியிருப்பதால் அக்னி முகத்தினால் உயரக்கிளம்பி என்பதை அக்னியை முன்னிட்டு, வசுக்கள் சிகப்பு நிறமுள்ளவர்கள், முதலில் அம்ருதத்தை (தேனைப்) பருகுகிறார்கள். கண்களால் கண்டே மகிழ்கிறார்கள். न पिबन्ति चन्द्रमिबोति என்கிற பாவம்) திருப்தி அடைகிறார்கள்.)

स य एतदेवममृतं वेद वसूनामेवैको भूत्वाऽग्निनैव मुखेनैतदेवामृतं दृष्ट्वा तृप्यति என்பவைகளால் பிருஹ்மமே காரிய காரண அவஸ்தைகளில் இருப்பதாக அதாவது பிருஹ்மமே உபாஸிக்கப்படுகிறது. உண்டாக்கப்பட்ட காரியங்களாகிற சூர்யன் - வசு- இத்யாதி சூர்யனை தியானம் செய்வதால் அவனுக்கு அந்தர்யாமியான பிருஹ்மத்தைத்தியானம் செய்வதாகும். உபாஸகனுக்கு முதலில் வசுருத்ராதிபதமும் பிறகு மோக்ஷமும் ஸித்திப்பதால் பிருஹ்மமே காரிய காரணம் இரண்டிலும் ஒன்றாக இருக்கிறது எனக் கருத்தாகும்.

( மதுவித்யை आदित्यस्य मधुत्वं तद्रश्मिद्वारा - मधुनाडीत्वं - वेदानां पुष्पत्वं - वेदमन्त्राणां भ्रमरत्वं - वेदविध्यर्पित द्रव्यानां पुष्परसत्वं च तत्र रूपितम् ।

ரஸ்மித்வாரா சூரிய பிராப்தி ஏற்படுகிறது. ஜைமினியின் ஆட்சேபம் न देवता देवतान्तरा भावात् என்று; அநதிகாரம் என்றார். அதற்கு பரிகாரம் சொல்லப்படுகிறது).

சூத்ரம் ज्योतिषि भावाच्च १-३-३१
ஜ்யோதி ஷி பாவாச்ச (1-3-31)

ஜ்யோதிஷி—பரமாத்மாவிடம் பாவாத்ச—தேவர்களுக்கு உபாஸனம் உண்டு என்று கூறுகையால், (தங்களையே உபாஸிக்கும் மது வித்யை முதலானவற்றிற்கு வசு முதலானோர்க்கு அதிகாரமில்லை)—பூர்வபக்ஷம் சூத்ரம்.

சங்கதி—பூர்வபக்ஷியின் அபிப்ராயம் மது வித்யையில் பிருஹ்மம் உபாஸிக்கப்படவில்லையென்றால் அதை விஸ்தரிப்பது, இந்த பூர்வபக்ஷ சூத்ரமும், ஜ்யோதி என்பது பரமாத்மா அவன் விஷயத்திலே மது வித்யா உபாஸனம் இல்லாத படியாலே தேவர்களே ஜ்யோதி: என்றும், தேவர்களே ஜ்யோதிரேவ என்றும்; தேவர்களோ ஜ்யோதிர் என்றும் மூன்றும் तं देवा என்கிற வாக்யத்திற்கு அர்த்தம்.)

பிரு. உ. 6-4-26ல் तं देवा ज्योतिषां ज्योतिरायुर्होपा सतेऽमृतम्— என்று தேவர்கள் பரமாத்மாவை உபாஸிக்கிறார்கள். எவ் விதமெனில்) ஜ்யோதிகளுக்கெல்லாம் ஜ்யோதியாகவும்; அப்பரமாத்மாவை ஆயுளாகவும், அம்ருதமாகவும் உபாஸிக் கிறார்கள்—என்பதால் ஜ்யோதிஷி - பரமாத்மாவை தேவர் கள் உபாஸிக்கிறார்கள் எனச் சொல்லப்படுகிறது. அதாவது பரமாத்மாவின் உபாஸனம் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் பொதுவானதாகும்.

முன் சொல்லப்பட்டதில் அதனால் देवा एव ज्योति: என்பது இல்லை; देवा: ஜ்யோதிரு பாஸத யேவ - என்பதில்

अनुपासकानामपि - देवानां सत्वात् । ஆகவே देवा ज्योतिरेव - उपासते ब्रह्मेतरानुपासकत्वसिद्धया अत्राब्रह्मविद्यायामनधिकार एवेत्यर्थः ।

எங்கனமெனில் பிருஹ்மம் என்கிற சப்தம் வேதபர:-மது வித்யையின் பலமுண - வசுவாதி பதம் பிராப்தி யேற்பட்ட பின்பு अथ तत ऊर्ध्वं என்கிற வாக்யத்தினுல் எந்த வஸ்துவை அடைவதினுல் உதயம் அஸ்தமனம் யேற்படுவதில்லேயோ; எந்த தேசத்தை அடைவதாலே स्थितैस्तस्योऽन्वगतत्वेनानुभूयमानत्वात् என்பதால் உதய அஸ்தமனரஹித சூர்யன் दिवसस्य रविर्मध्ये सर्वकालं व्यवस्थितः - नैवास्तमनमर्कस्य नोदयः सर्वदा सतः இதனுலே யேற்பட்டது பதில்.)

**ஸ்ரீபாஷ்யம்:** — இருவருக்கும் பிரும்மோபாஸனம் பொதுவானதாகையால், இங்கு சொலலப்படுவது தேவர்களுக்கு உபாஸகத்வம் உண்டு என்பதாலே, தேவர்கள் பிரும்மத்தை ஜ்யோதிஷ் என்கிற உபாஸனத்தைத் தவிர வேறு ஒன்றையும் அப்யஸிப்பதில்லே என்பது வாக்யார்த்தமாகும். ஆகையால் மதுவித்யையில் வசுக்களுக்கும் மற்றவர்களுக்கும் அதிகாரமில்லே என்பது தேறுவதாகும்.

சூத்ரம் **भावं तु बादरायणः** *(1-3-31)*

பாவம் து பாதராயண: **(1-3-31)**

பாவம் து - மதுவித்யை முதலானவற்றிலும் வசு முதலான தேவர்களுக்கு அதிகாரம் இருப்பதாலே, பாதராயணர்—(வியாஸர்) கருதுகிருர் அஸ்திஹி—வசு முதலானவர்களே சரீரமாகக் கொண்ட பிருஹ்மத்தை உபாஸிப்பதும், வேறு ஒரு கல்பத்தில் வசு முதலான பதங்களே அடைவதும் அவர்களுக்கு) கூடுமன்ளுே.

(स्वावस्थेति-வஸ்வாதி சரீரக:-என்று அர்த்தம். பலனேச் சொல்லும் போது மோக்ஷம் சொல்லவும் படுகிறது. முதலில் விசேஷமில்லாமல் आदित्याः वसवः—என்பதால் பிரும்மாத்மகத்வேந - உபாஸிக்கிருர்கள் என அர்த்தம்.)

ஆதித்யர்கள் வசுக்கள் இவர்களுக்கும் அதிகார ஸத்பாவம் உண்டு என்று வியாஸர் கருதுகிருர். ஆதித்ய, வஸ்வாதிகளுக்கும் தங்கள் தங்கள் உருவங்களில் பிரும்மம்

தங்களுக்கு ஆத்மாவாகவும் தாங்கள் பிரும்மத்துக்கு சரீரமாகவும், பகவான் அந்தர்யாமியாகவும் விருப்பதால் இத்தகைய பிரும்மமோ பாஸனையில் அதிகாரம் உண்டு அதாவது ஆதித்யன் வசு இந்த சப்தங்களுக்கு பிருஹ்மாத் மகத்வோ உபாஸிக்கிறார்கள். அஸ்திஹி என்பதற்கு வஸ் வாதிசரீரகன் பிரும்மம் என்று அர்த்தம் (இந்திரபிராணாதி கரணத்திலும் இந்திர சரீர பிராண சரீர பிருஹ்மம் என்று சொல்வது போல வஸ்வாதி சரீர பிருஹ்மம் என அர்த்தம்). அதனாலே ஆதித்ய வசுக்களுக்கு பிருஹ்மபிராப்தியை அடைவதற்கு முதலில் வசுபதத்தை அடைந்து அநு பவித்துவிட்டு, பிறகு பிரும்ம ப்ராப்தியில் இச்சை கொள் வது சரியானதாகும். இங்கே ஏற்கனவே வசுவாக விருந்த வர்கள் விஷயத்தில் வசுத்வம் வேறு ஒரு கல்பத்தில் அடையப்பட்டு பிற்பாடு அவர்களுக்கு மோக்ஷத்தில் இச்சை யேற்படுமன்றோ?

இங்கே இந்த பிரகரணத்தில் காரியகாரண உபய அவஸ்தைகளிலும் பிரும்மோ பாஸனம் விதிக்கப்படுகிறது. असौ वा आदित्यो देवमधु மதுவித்யையில் சூரியன் தேவதை களுக்கு தேனாகவிருக்கிறார் (சா. உ. 3-11-1) என்று ஆரம் பித்து முடிக்கிறதற்கு முந்தி अथ ततऊर्ध्व उदेत्य (பிறகு மேலே கிளம்பி அக்னி முகத்தினால்) என்பதால் தேனாகவிருக்கும் சூரியன் (ஆதித்யன்) வஸ்வாதி காரிய விசேஷ அவஸ்தை யில் உபாஸிக்கப்படுகிறான்.

**விளக்கம்:**—இதனால் பிரும்ம பிராப்திரூப பலவிசேஷம் அடையப்படுவதற்கு பிரமாணம் சுருதியில் காட்டப்படு கிறது. இங்கே ஆதித்யரூப கார்ய அவஸ்தையில் பிரும்மோபாஸனம் யேற்படுவதால், அதற்கு முந்திவஸ்வாதி காரிய அவஸ்தை பிரும்ம உபாஸனம்; அதே மாதிரி ஆதித்ய அந்தராத்மதயா அவஸ்திதம் இது காரண அவஸ்தை, ஆக இரண்டு அவஸ்தைகளிலும் ஆதித்ய விஷய ஏவ காரண வஸ்தா உபாஸனம், காரிய அவஸ்தா உபாஸனம் என்று அறியப்படும். பிறகு ततऊर्ध्व என்பதால் ஆதித்யன் மாத்

திரம் விஷயத்வம் ப்ரதீதம் என்பது சரியாகும். இன்னொரு விதமாகவும் சொல்லலாம், காரண அவஸ்தை ஆதித்ய னுடைய காரணதசை (அதாவது ஆதித்யரூபத்தில் ஸ்ருஷ்டி பூர்வத்திலே சூக்ஷ்ம ஜீவதசை) என்பதாகும். மொத்தத்தில் காரணாவஸ்தை என்பது பிரளயம் முக்திக்கு சமானம். அதனால் முக்தி அவஸ்தை என்று சொல்லலாம் என சிலர் கருத்து)

**ஸ்ரீபாஷ்யம்**—அதே (வஸ்வாதி ஆதித்ய சரீரகன் பிருஹ்மம்) கார்ய காரண அவஸ்தைகளில் இரண்டிலும் பிரும்ம உபாஸனமாகும்; ஒரு கல்பத்தில் வசு (ஆதித்யனாக) வாக விருந்து அதை அனுபவித்த பிறகு காரணபரமான பிருஹ்மத்தையடைகிறான். சுருதிகள் அவ்விதமே சொல் கின்றன சா. உ. 3-11-1ல்

**न हवा अस्मा उदेति, न निम्रोचति:; सकृद्दिवा हैवास्मै भवति - य एतामेवं ब्रह्मोपनिषदं वेद–**

மேலே கிளம்பி என்று சுருதி ஆரம்பித்து அதே பிருஹ்மம் இரண்டு அவஸ்தைகளிலும் காரண காரிய அவஸ்தைகளி லும் சூரியனுக்கு அந்தராத்மாவாக உபதேசிக்கப்படுவதால் எந்த உபாஸகன் மது வித்யையில் பிருஹ்மத்தை காரண காரிய அவஸ்தைகளில் இருப்பதாக (சூரியனாக வசுவாக) (ப்ரதீக) உபாஸிக்கிறானோ அவன் இன்னொரு கல்பத்தில வசுத்வத்தையடைந்து பிறகு அந்த கல்ப முடிவிலே காரண அவஸ்தையிலிருக்கும் பிருஹ்மத்தை அடைகிறான். பிரும்ம பிராப்திபர்யந்தம் வஸ்வாதி போக்யங்களை ஆதித்ய அம்ச மாக அடைந்து, பிறகு உபாஸனத்தின் பலனாக காரணா வஸ்தை பிருஹ்மத்தை அடைகிறான் அந்த உபாஸகன். இந்தவிதமாக ஆதித்ய வசுக்களுக்கு (ப்ரதீக உபாஸனை மாதிரி) உபாஸனை யேற்படுகிறது.

இந்தக் காரணத்தினாலே பிரும்மமே உபாஸிக்கப்படு கிறது. பிரு. உ. 6-4-26 तं देवा ज्योतिषां ज्योति:

எவன் பிருஹ்மத்தை அறிகிருனே இவ்விதமாக அவனுக்கு சூரியன் உதயமாவதில்லை அஸ்த்தமிப்பதில்லை. அவனுக்கு ஒவ்வொரு நாளும் பகலேதான். (மதுவித்யை யில் தேனுக விருக்கும் சூரியன் பிரும்ம உபநிஷத்தின் ஸ்வரூபத்தை அடையவிப்பதாகச் சொல்லப்படுகிறது அந்த உபாஸனுபலத்தினுல் வசுத்வம் யேற்பட்டு, முடிவிலே பிரும்ம பிராப்தியும் உண்டாகிறது. இந்த இரண்டு காரணங்களாலே ஆதித்ய அம்சத்தில் விதிக்கப்பட்டுள்ள உபாஸனையில் சூரியனே வசுவுக்கு போக்யமாகிறுன், என்பது வசு (சூரிய) அவஸ்தையிலிருக்கும் பிருஹ்மம் என அறியப்படவேண்டியது. ஆகவே இம்மாதிரி பிரும்மோ பாஸனை சூரியனுக்கும் வசுக்களுக்கும் அப்யஸிக்க எற்படக் கூடும். (एवं विधं उपासन आदित्यवस्वादीनामपि संभवति).

ஆகவே பிருஹ்மமே முடிவான பலனுக உபாஸனத் திற்கு இருப்பதால் பிரு. ஹ. 6-4-23 तं देवा ज्योतिषां पतिः என்று சொல்லப்படுகிறது. (தேவதைகள் பிரும்மத்தை ஜோதிஷ் களுக்கெல்லாம் பதி என்று கூறுவது சரியாகும். (இங்கே பூர்வ பக்ஷிக்கு நேரான பதில் (சூத்ரம் 31க்கு) கொடுக்கப் படுகிறது. பூர்வ பக்ஷத்தில் தேவர்கள் பிரும்மத்தை ஜ்யோதிஷ் என்று கூறி உபாஸிக்கிருர்கள். இதற்கு பதிலாக இங்கு ஜ்யோதிஷ் என்பது பரமாத்மாவைக் குறிக் கும். விருத்திக்காரரின் அபிப்ராயமும் இதே தான். இதனுல் முதல் சொன்ன அபிப்ராயத்துக்கு அதாவது மது வித்யை யில் சூரியனை உபாஸிக்கிருர்கள் என்பதற்கு பதில் சொல் லப்படுகிறது. பதில் சூரிய சரீர பிரும்மம் என்று அர்த்தம்)

ஆகவே விருத்திக்காரரான போதாயனர் சொல்கிருர். अस्ति हि मध्वादिषु संभवः । ब्रह्मण एव सर्वत्र निचाय्यत्वात् தேவதை களுக்கு உபாஸனு ரூபத்தில் சூரியனே தேனுகவும் அந்த தேனே உபாஸ்யமாகவும் இருக்கிறது என்று உபாஸிப்பது கூடும். ஏனெனில் (இங்கே சூரிய சரீர பிருஹ்மம் என்பது போல) பிருஹ்மமே இங்கேயும (மதுவித்யையிலும்) ஸர்வத்ர (மற்ற எல்லா) உபாஸனா ரூபங்களிலும் அறியப்

படுகிறது. ஆகையால் இந்த வேதவாக்யத்திற்கு யாதொரு விரோதம் இல்லை, வசு முதலானோர் தங்களைச் சரீரமாகக் கொண்டிருக்கும் நிலையிலுள்ள பரமாத்மாவை உபாஸிக்கிறார்கள் என்பதாகும்.

(சங்கரர் தேவதாதிகரணத்திலே மது வித்யா சூத்ரங்களை ஆராய்கிறார். தேவர்களுக்கு விக்ரஹ த்வத்வத்தை (சரீரத்தை) ஒப்புக் கொண்டால், கிரமமுக்தி உபாஸனங்கள் சொன்னது பொருத்தமாகும். மந்திராதிகளைக் கொண்டு தேவாதிகள் சரீரமுள்ள தன்மையைப் பற்றியதாய் உண்டாகும் அறிவானது பொருத்தமானதே என்கிறார்).

---

## (இடையில் எழும்) அப சூத்ராதிகரணம் (1-3-9)

சூத் :- शुगस्य तदनादरश्रवणात् तदाद्रवणात् सूच्यते हि *(1-3-33)*

***ஸுகஸ்ய தத நாதரஸ்ரவணாத் ததாऽத்ரவணாத்***
***ஸூச்யதே ஹி (1-3-33)***

ஸுகஸ்ய—இந்த ஜான ஸ்ருதிக்கு ததநாதரஸ்ரவணாத் - ஹம்ஸத்தின் நிந்தா வார்த்தையைக் கேட்பதால், ததா - அப்போதே - ஆத்ரவணாத் (ரைக் வரைக் குறித்து) ஓடுகையால் (அதாவது தேடுவதால்) அஸ்ய சுக - ஜாந ஸ்ருதியின் சோகம் ஸூச்யதேஹி உணர்த்தப்படுகிறது.

(தேவதைகளுக்கு அதிகாரத்வம் ஸ்தாபிக்கப்பட்டது. அதேமாதிரி சூத்ரனுக்கும் அதிகாரம் உண்டா (பிரும்ம வித்யையில்) - என்பது ஆராயப்பட்டு சூத்ரனுக்கு அந்த யோக்யதை இருப்பதாலே - அதிகாரம் உண்டு என்கிற வாதம் இதில் தள்ளப்படுகிறது.

இங்கு சாந். உபநிஷத்தில் சொல்லப்படும் இதிஹாஸம் விஷயமாக விருக்கிறது. ரைக்வ வித்யை - ஜாந ஸ்ருதியென்பவன் கிராமம் நகரம் முதலான பலவிடங்களில் எல்லோருக்கும் வீடுகளும் சத்திரங்களும் கட்டி அன்ன பானாதி

களையும் அளிக்க ஏற்பாடுகள் செய்திருந்தான். இதனால் மஹாதர்மிஷ்டனாகவிருந்தான். ஒருநாள் இரவில் அவன் மேல் உப்பரிகையில் படுத்திருக்கும் போது வானத்தில் இரண்டு அன்னங்கள் போய்க் கொண்டிருப்பதையும் அவை களுக்கு நடந்த சம்பாஷணையையும் கேட்டான். முன்னே செல்லும் அன்னத்தை - பின் செல்லும் அன்னம் கூறிற்று. "ஏனப்பா - உனக்குக் கண் இல்லையா? இந்த இரவைப் பகலாக்கும் படி ஜாநஸ்ருதியின் தேஜஸ்ஸின் மேல் நீ துணிந்து செல்கிறாயே - அது உன்னை எரித்து விடப் போகிறது - ஜாக்ரதை-"என; முன் சென்ற அன்னம் பதில் கூறியது. "என்ன, வண்டியின் கீழ் எப்போதுமிருக்கும் ரைக்வரைப் போல, இவன் மிக்கப் புகழ் உள்ளவனா" —

"யார் அவர் வண்டியோடிருக்கும் ரைக்வர்?" என்று வின வினது முன் சென்ற அன்னம்;

சூதாட்டங்களிலே - க்ருதம் என்கிறதிலே மற்ற எல்லா விளையாட்டுக்களும் அடங்குமோ அதுபோல அந்த ரைக்வர் அறிந்ததை ஒருவன் அறிந்தானாகில் அவனிடம் உலகத்தி லுள்ளோர் செய்யும் நற்செயல்கள் அனைத்தும் அடங்கி விடும். (இதனை அறியாத இந்த ஜானஸ்ருதிக்கு அத்தகைய ரைக்வரைப் போன்ற பெருமை கூறத்தகுமோ? - எனக் கருத்து).

அன்னங்களின் பேச்சைக் கேட்ட ஜாநஸ்ருதி ஆட்களை அனுப்பி ரைக்வரைத் தேடிவர நியமித்தான். ஆட்கள் மிக்க சிரமப்பட்டு ஓர் இடத்தில் வண்டியின் கீழ் சிரங்கு சொறிப்புண்களுடன் இருக்கும் ஒருவரை ரைக்வர் என அறிந்து அரசனிடம் சொல்ல; ரைக்வரிடம் பலதடவைகள் ஏராள வெகுமதிகளுடன் சென்று-தனக்குத் தேவதாஞானம் பிறப்பிக்கப் பிரார்த்தித்தான். முனிவர் பல தடவைகள் அவைகளை மறுத்து கடைசியில் "ஓ சூத்ரனே உனக்கே இவை எல்லாம் இருக்கட்டும் பணிவிடைக்குப் பத்னி இல்லாமல் இவையிருந்தும் (பணமும் பசுக்களும்) பிரயோசனம் யாது? என்று சொல்ல; அரசன் தன் பெண்ணைக் கொணர்ந்து

அவருக்கு அவளையும் அளித்து வேண்டினான். பிறகு ரைக்க்வர் அவளை ஸ்வீகரித்துக் கொண்டு ரைக்வவித்யையை அரசனுக்கு உபதேசித்தார். இதையே ஸம்வர்க வித்யை என்பார்.

அக்னி சூர்ய சந்திரன் லயஸ்தானமாக விருப்பது வாயுவென்றும், உடலில் வாக்கு கண் காது மனது என்றவைகளுக்கு லயஸ்தானமாக விருப்பது பிராணன் என்றும்; ஆகவே வாயுவும் பிராணனும் ஸம்வர்கங்கள் என்று உரைத்தார். இதன் மேல் ஒரு உபாக்யானமும் உபதேசிக்கப்பட்டது. காபேயன் அபிப்தாரி என இருவர்கள் போஜனத்திற்கு வீற்றிருக்கும் தருணத்தில் இன்னொரு பிரும்மசாரி வந்து பிக்ஷை கேட்க, யாரும் கொடாமலிருக்க அவன் அப்போது மற்றவர்களை நோக்கிச் சொன்னான் "உலகத்தைக் காக்கும் தேவன் ஒருவன் நான்கு மஹாத்மாக்களை விழுங்கி விளக்குகிறான். பல உருவாக விருக்கும் அந்த தேவதையை "காபேயரே, மனிதர்கள் அறியமாட்டார்கள். இந்த அன்னம் எவனுக்காகவோ அவனுக்கு இதையளிக்கவில்லையே" எனக்கூற; உட்கார்ந்திருந்த காபேயர் அவனிடம் சென்று "தேவதைகளுக்கு ஆத்மாவும் பிரஜைகளை ஸ்ருஷ்டிப்பவனும், அழகிய பற்களுள்ளவனும், அதிகமாக சாப்பிடுகிற இந்த ஸர்வஞ்ஞனுடைய மகிமை மிகப் பெரிது. இவன் ஒருவராலும் தான் புஜிக்காமலிருந்து போசனமாகாததையும் புஜித்து திருப்தி பெறுபவன். இப்படி நாங்கள் பிராணவித்யையை உபாஸிக்கிறோம் என உபதேசித்தான். (நீ சொன்னவாறு அல்ல எனவும் காட்டினான்) இதற்குப் பிறகு அதிதியாக வந்த பிரும்மசாரிக்கும் அன்னம் கொடுக்கப்பட்டது. இப்படிச் சொன்ன ஸம்வர்க்கங்களைத் தெரிந்து கொண்டும், ஐந்தும் ஐந்துமாக கீழ் கூறப்பெற்ற இரண்டு ஸம்வர்க்க வஸ்துக்களான பத்தையும் ஒரு க்ருதமென்றும் அன்னம் என்றும், விராட் என்றும் உபாஸிப்பவன் ஸர்வக்ஞனாய் அன்னத்தைப் பல விடங்களில் (பரப்பிரும்மத்தை) அநுபவிப்பான் என்று கூறி முடித்தது (இங்கே "அட சூத்ரனே, உனக்கே இவையெல்லாம் இருக்கட்டும், எனக்கு வேண்டாம் என்று சொன்ன ரைக்வரின் வாக்யம் முக்கியமானது).

**ஸ்ரீபாஷ்யம்:**—இதில் பிரும்ம வித்யையில் சூத்ரனுக்கும் அதிகாரம் உண்டா இல்லையா என்பது விசாரிக்கப்படுகிறது எது சரியாகும்? உண்டு என்பதே. எப்படி? தேவதாதிகரணத்தில் அர்த்தித்வம் ஸாமார்த்தியம் சொல்லப்பட்டதே அதேமாதிரி இங்கேயும் இருப்பதால், அதிகாரம் உளதே. சூத்ரனுக்கு இவை இரண்டும் இருக்கக்கூடும்.

சூத்ரனுக்கு வேதத்தை ஓதவும் அதன்படியாக யக்ஞங்களை செய்வதும் விதிக்கப்படவில்லை. அக்னி சம்பந்தமில்லாத படியால் அதிகாரமில்லை. வேத ஞானமும் இல்லை ஆயினும் மனோ விருத்தியே உபாஸனமாகும். அதில் அதிகாரம் இருக்கக்கூடும். சாஸ்திரீய க்ரியா உபாஸனத்திற்கு அபேக்ஷமாகிலும், அதேபோல பல வர்ண ஆஸ்ரமதர்மங்களும் வாழ்க்கையின் முக்ய லக்ஷ்யமாவதாலும்; சூத்ரனுக்கு விதிக்கப்பட்ட சுஸ்ரூஷை அது விருக்கக் கூடும். அது சாஸ்திர சம்மதமாக விருப்பதாலே, பூர்வவர்ண சுஸ்ரூஷையே சாஸ்திரக்கிரியை ஆகும்.

தை. ஸம். 7-1-6ல் तस्माच्छूद्रो यज्ञेऽनवक्लृप्तः ஆகவே சூத்ரனுக்கு யாகம் செய்வற்கு யோக்யதை இல்லை. இதனால் சொல்லப்படுவது-அக்னிவித்யா ஸாத்யமான யாகயக்ஞாதி அவனுக்கு அதிகாரமில்லை. என்பதே நியாயஸித்தமானது. கர்மக்களுக்கு அதனால் அவனுக்கு வேத ஞானமும் இல்லை என்பதாகும். (வித்யைகளை அனுஷ்டிக்கவும், அதிகாரமில்லை அதனால் யக்ஞாதி கர்மானதி காரயேவ நியாய ஸித்த-இதி)·

மேலும் கேள்வி கேட்கப்படும். வேதத்தை அத்யயனம் செய்யவில்லை. வேதாந்தங்களையும் கேட்கவில்லை. அத்தகைய (சூத்ரனுக்கு) பிரும்ம ஸ்வரூபம், அதனை உபாஸிப்பது, என்கிற வழிகளைத் தெரியாமலிருக்க; எப்படி அத்தகையவனுக்கு பிரும்மோபாஸனம் யேற்படக்கூடும்? அதற்கு நாம் பதில் கூறுகிறோம் - அவன் வேதம் வேதாந்தம் படிக்காதபோதிலும், இதிஹாஸ புராணங்களைப் படித்துக் கேட்டுமிருக்கிறான். அவைகளில் பிரும்ம ஸ்வரூபம் அதைப்

பற்றிய உபாஸன ஞானம் யேற்படுகிறது. அதே மாதிரி சூத்ரனுக்கு யேற்படலாம். இதிஹாஸபுராண ஸ்ரவணத்திலே அவனுக்கு அவைகளில் அதிகார சம்மதியும் இருக்கிறது. (பார. சா. மோ. 12-335-48) श्रावयेत् चतुरोवर्णान् कृत्वा ब्राह्मणमग्रत: பிராம்மணனை முன் (புரோகிதனை) வைத்து நான்கும் ஜாதி பிரிவுகளும் (நான்கும்) உபதேசிக்கப்படட்டும். நாம் ஸ்மிருதிகளிலும் இதிஹாஸபுராணங்களிலும் விதுரர்களைப் போன்ற மஹனீயர்கள் பிருஹ்மநிஷ்டர்களாக விருந்திருக்கிறார்கள். அதே பிரகாரம் உபநிஷத்துக்களிலும் ஸம்வர்க்க வித்யைகளிலும் சூத்ரனுக்கும் கூட பிரும்ம வித்யையில் அதிகாரம் உண்டென்று சொல்லப்படுகிறது. சுஸ்ருஷைகளைச் செய்த ஜானஸ்ருதி அரசனும் ஆசார்யரான ரைக்வரை வேண்டிக் கேட்க, அவர் பதில் கூறினார், "சூத்ரனே," என்று அவனைக் கூப்பிட்டு, சா. உ. 4-1-5ல் आजहारेमा: शूद्र अनेनैव मुखेनालापयिष्यथा: இந்த உபகாரசாமக்ரியைகளை நீ என்னிடம் ஸமர்ப்பித்து, அவைகளை முகமாக வைத்து - நீ என்னைப் பேசும்படியாக ஆக்கியிருக்கிறாய் - என்று கூறியதால் சூத்ரனே என்பதால் அதிகாரம் உள்ளது எனவாகும். இதனால் சூத்ரனுக்கு பிரும்ம வித்யையில் அதிகாரம் யேற்படலாம்.

(ஸ்ரீ ராமானுஜருக்கு ஜாதிவித்யாஸங்கள் உண்டு. வேத படனம் உபாஸனை இவைகளில் அவனுக்கு அதிகாரமில்லை. ஆயினும் அவனுக்கும் முக்தி உண்டு என்று பலவகையாக மற்ற வழிகளைச் சொல்லியிருக்கிறார்).

**சித்தாந்தம்** அவ்விதமானால் நாம் பதில் கூறுவோம்' சூத்ரனுக்கு அதிகாரம் யேற்படுவதில்லை. அவர்களுக்கு ஸாமர்த்தியம் இல்லாதபடியாலே; எவனுக்கு பிருஹ்மஸ்வரூபமோ அதைப் பற்றிய உபாஸன பிரகாரமோ தெரியவில்லையோ, அதற்கு அங்கபூதமாக வேதானு வசன யாக யக்ஞாதிகளில் அநதிகாரம் (அதிகாரமில்லாமை) இருப்பதால் உபாஸன உபஸம் ஹாரஸாமர்த்தியம் யேற்படுவது அஸம்பவ: (இல்லை), எவனுக்கு இம்மாதிரி ஸாமர்த்தியம்

இல்லையோ அர்த்தித்வத்தின் (விருப்பத்தின்) ஸத்பாவம் அவனுக்கு இருந்திடினும் அவனுக்கு வேத அத்யயனத்தில் அதிகாரம் இல்லாதபடியால், (முதல் மூன்று ஜாதிகளுக்குத் தான் உண்டு நான்காவதான சூத்ர ஜாதிக்கு இல்லை); எப்படி திரை வர்ணிகர்களுக்கு அத்யயன விதி ஸித்தமாயிருக் கிறதே - ஞானத்திற்கு ஸாதனம் வேதபடனம்-அத்யயனம் என இருக்கிறதோ - அதே பிரகாரம் பிருஹ்ம உபாஸனத் திலும் கர்ம விதிகள் இருக்கின்றன (இங்கு ராமானுஜரின் அபிப்ராயம் பூர்வமீமாம்ஸத்தில் சில விதிவிலக்குகள் கூறப்பட்டுள்ளன; நிஷாதஸ்தபதியும் ரதாகாரமும் சில மந்திரங்களை மூன்று வர்ணிக மல்லாத வரையும் ஓதலாம் என்று விதிவிலக்காக காட்டுகின்றன. ஆனால் பிரும்ம மீமாம்ஸத்தில் பூர்வ மீமாம்ஸத்தில் இருப்பது போல விதி விலக்குகள் இல்லை. விதிகள் திரைவர்ணிகர்களை மட்டும் தான் குறிக்கின்றன. இவர்கள் வேத அத்யயனம் செய்த வர்கள் கற்றவர்கள்)

பிரும்ம உபாஸனைக்கு மிக்க அவசியமானது வேத படனம். ஸ்வாத்யாயத்தினால் யேற்படும் ஞானம் தான் பிரும்மோபாஸனத்திற்கு உபாயமாக விருப்பதால் சூத்ர னுக்கு வேத படனம் (அதைச் சார்ந்த வைதிக கர்மாக்கள்) இல்லாத படியால் அஸமார்த்தியம் யேற்படுகிறது.

சரி — இதிஹாஸ புராணங்கள் வேதோப பிரும்மணம் என்பதை விஸ்தரிக்கிறது. அதாவது வேதத்தின் கருத்துக் களை அனுஸரித்து உபாயமாக அனுபவிக்கும்படி செய் கின்றன. ஆனால் அவை ஸ்வதந்திரமாக, வேதத்தைவிட்டு அதன் ஆதாரமின்றி தனியாக விருக்க முடியாது, சூத்ர னுக்கு இதிஹாஸ புராணம் ஸ்ரவணம் செய்வதால் அனு ஞானம் யேற்பட்டு, பாபக்ஷயமாகிறது. அதனால் பிரும்மோபாஸனம் அந்த சிரவணத்தினால் யேற்படுவது என் பதில்லை. விதுராதிகள் பிரும்மஞானத்தை அவர்களால் பூர்வ ஜன்மங்களில் யேற்பட்ட ஞானம் மறக்க முடியாத படி அவர்களுக்கு இருந்ததால் அடைந்திருந்தார்கள்;

ஞானவான்களாகத் திகழ்ந்தார்கள். பிராரப்த கர்ம வசத்தினால் சூத்ரஜன்மத்தையடைந்த போதிலும் பிருஹ்மவித்துக்களாக விருந்தனர். அதனாலே பிரும்ம நிஷ்டர்கள் எனப் போற்றப்பட்டனர்.

இங்கே ஸம்வர்க வித்யையில் (சா. உ. 4-1-3ல்) शुश्रूषे: शूद्रेति संबोधनं शूद्रस्याधिकारं सूचयतीति சூத்ரனே; உன்னிடம் இவை இருக்கட்டும் என்று ரைக்கவர் இரண்டு தடவைகள் ஞான ஸ்ருதியை பார்த்து விளித்துச் சொன்னார். இதனாலே சூத்ரனுக்கு பிரும்ம உபாஸனத்தில் அதிகாரம் உண்டு என்கிற எண்ணம் சூசிக்கப்படுகிறது.

அதற்கு நாம் பதில் அளிக்கிறோம். शुगस्य तदनादरश्रवणात् तदा द्रवणात् सूच्यते हि பிரகரணத்திலே ஹம்ஸத்தின் நிந்தா வாக்யத்தைக் கேட்ட ஜானஸ்ருதி அதனால் மிக்க விருப்பமுள்ளவனாக ரைக்வரைத்தேடி அலைந்து தேவதா ஞானம் ஓதும்படி அவர் யாசிக்க "சூத்ரனே உன் வெகுமானங்கள் (உபகரணங்கள்) உன்னிடமே இருக்கட்டும் எனக்கு வேண்டாம்'' என்றார். அதனால் வருத்தமுற்ற அவன் அப்போதே ஓடினான் ரைக்வரிடம் மீண்டும் மீண்டும். இதனால் ஜான ஸ்ருதி பிறப்பில் சூத்ர வர்ணத்தைச் சேர்ந்தவனவல்ல — ஆனால் நிந்தையினால வருத்தமுற்றவனாக ஓடினதால் சூத்ரன் என அழைக்கப் பட்டான். (அதாவது ஸாமர்த்தியம் என்பது மூன்று விதம் ஞானம், சக்தி, சாஸ்திர அநுமதி. சாஸ்திர அநுமதி திரைவர்ணிகர்களுக்கு ஜைமினியால் அதிகாரம் சொல்லப் பட்டது. சக்தி தான தர்மங்களைச் செய்பவன் சக்தியுளளவனாகவும் ஞானமுள்ளவனாகவுமிருக்க வேண்டும்) (பூர்வ ஜன்மங்களில செய்யப்பட்ட புண்யங்களின் பலனாகும்). (சூத்ரன் என்பது ஸ்ருதந் துரா, சுருதிகளுக்கு வெகுதூரமிருப்பவன் இது நிருக்தப் பிரகாரம் இங்கு வருத்தமுள்ளவன் தன்விருப்பம் நிறைவேறுதலுக்கு அதிக ஆசையுள்ளவன்)

இங்கு ஜானஸ்ருதி ஹம்ஸத்தின் நிந்தா வாக்யங்களைக் கேட்டவன் அவன் பௌத்ராயணன் பிரும்ம ஞான

மில்லாதவன் அதனால் வருத்துமுற்று பிரும்ம ஞானியான ரைக்வரிடம் ஓடினான். இதனால் வருத்தம் அதிகமடைந்து ரைக்வரின் இருப்பிடத்தை ஓடித் தேடச் சொன்னான்; இதனால் शुक अस्य संजातेति हि सूच्यते எவன் வருத்தமடைகிறானோ அவன் சூத்ரனுவான். தாது शुच (வருத்தப்படு) அதில் (உனாதி சூத்ரங்கள் 11-21 பிரகாரம்) பிரத்யயம் (affix) அதனால் தாது நீண்டு போய் ச என்பது த என்று ஆகிறது. ஆகவே சூத்ரபதம் (शुच+रक्+च) ஆகையால் ஜாதி சொல்லப்படவில்லை. வருத்தத்தைச் சொல்லிற்று. शोचतीति हि शूद्रा - शुचेर्दश्च என்று रक् (2) பிரத்யயம் தாது (शुच என்பதுடன் சேர்ந்து தீர்க்கமாகி च காரமும் சேர்ந்து दकारे ஆகி शूद्र என்று யேற்படுகிறது. शोचित्त्वमेवास्य (அவனுடைய வருத்தமே) சூத்ர சப்த பிரயோகத்தினால் யேற்படுகிறது. शूद्रशब्दप्रयोगेन सूच्यते - न जातियोग: என்பதாம்.

ஜானஸ்ருதி பௌத்ராயனர் நிறைய தான தர்மங்களைச் செய்தவன் - திரவியம், அன்னம் யதேஷ்டமாகக் கொடுத்தவன். ஹம்ஸங்கள் இரண்டு ரிஷிகளாவார்கள். அவர்களில் ஒருவன் நல்ல எண்ணத்தோடு ஜான ஸ்ருதிக்கு பிரும்ம ஜிக்ஞாஸம் யேற்படுவதற்கும் அவனை உஜ்ஜீவிப்பதற்கும், ஹம்ஸரூபத்தினால் இரவில் சஞ்சரித்துக் கொண்டு தன் சகாவாகிய இன்னொரு ஹம்சத்தினிடம் சொன்னார் (அவன் (மேலே பறந்து செல்லும் போது சொன்னார்) भो: भल्लाक्ष, भल्लाक्ष பல்லாக்ஷ ஜானஸ்ருதியின் தேஜஸ் பகல் மாதிரி பிரகாசிக்கிறது. जानश्रुते: पौत्रायणस्य समं दिवा ज्योतिराततम् । तन्मा प्रसाङ्क्षी: அவன் அருகே செல்லாதே. அவனுடைய தேஜஸ் உன்னை எரித்து விடும். तत् त्वा मा प्रधाक्षीत् இதற்குப் பதிலாக முன் சென்ற அன்னம் ஏற்கனவே ஜானஸ்ருதியின் கீர்த்தியை நன்கு அறிந்திருந்தும் பதில் அளித்தது. कम्बरे एनमेतत्सन्तं सयुग्वानमिव रैक्कमात्य என்று;நீ அவனை (ஜானஸ்ருதியை) இவ்வளவு பெருமையாகச் சொல்லலாம், ரைக்வர் மாதிரி சொல்கிறாயே, அவருக்கு பிரும்ம ஞானம் தெரியும்; பல நல்ல குணங்களும் உண்டு (ஸயுக்வாக் வண்டியை உடையவன் ஸயுக்தவர்) அந்த ரைக்மர் பிரும்மவித்;

कं सन्तमेनं जानश्रुतिं सयुगवानं रैक्वं ब्रह्मज्ञमिव गुणश्रेष्टमे- तदात्य - (कम्वरे - कं उ अरे - इति छेदः - कं सन्तं कीदृश- महिमयुक्तम्)

அப்பேற்பட்ட ரைக்வருடன் பிரும்ம ஞானமில்லாத ஜான ஸ்ருதியை சமமாகச் சொல்கிருயே அவனிடம் என்ன பெருமை உள்ளது? அவனுக்கு பல நற்பண்புகள் இருப் பினும் தானம் தர்மம் முதலியவையிருப்பினும்? அத்தகைய ஜானஸ்ருதியின் குண மகிமைகள் என்னைக் கொளுத்தாது. அவன் ரைக்வரில்லையே. குணவத்தர: ஜானஸ்ருதியை விட நல்ல குணமுள்ளவன். பெரிய தர்மங்களைச் செய்திருந் தாலும், பிரும்மஞானமில்லாத ஜானஸ்ருதிக்கு என்ன குணங் கள் உசத்தியாகும்? அவனுடைய குணங்களின் தேஜஸ் ரைக்வரின் தேஜஸ்ஸைப் போலவிருக்குமா - என்னை எரிப்ப தற்கு சக்தி இல்லை என்பதாகும். रैक्वतेज इव मां दहेति-इत्यर्थ इதுதான் அந்த நிந்தா வாக்யத்தின் அர்த்தம்.

இவ்விதம் பேசுகையில் ஒரு அன்னம் "அந்த ரைக்வர் யார்?" என்று கேட்க; அதற்குப்பதிலாக மற்ற அன்னம் (ஜானஸ்ருதியின் நன்மைக்காக) இவ்விதம் பதில் சொல்லிற்று

"लोके यत् किञ्चित् साध्वनुष्टितं कर्म यच्च सर्वचेतनगतं विज्ञानं, तदुभयं यदीयंज्ञानकर्मान्तर्भूतम् - सरैक्क इत्याह ।

ரைக்கவரைப் பற்றிச் சொல்லிய வார்த்தை: அவன் (எவ னுடைய கர்மாக்களும் ஞானமும் நல்ல மனிதர்களால் அனுஷ்டிக்கப்படும் கர்மாக்களில் அடங்கியுள்ளதோ, எவரி டம் எல்லா சேதனர்களின் ஞானமும் அடங்கியிருக்கிறதோ அவரே ரைக்வர் ஆவர். (யஸ்தத் வேத - ஸந்தமேநம் என் பதில் எவன் எதைப்பற்றியும் அறிகிருனே அதை ரைக்வரும் அறிவார். இங்கே அவன் (எவன் பிரும்மத்தை அறிந்தும் பிரும்மத்திஞல் அறியப்பட்டும் இருக்கிருனே विदुषमिदं वच

சித்தாந்தத்திலே सन्तमेनं - यत्किञ्च प्रजा: साधु कुर्वन्तिसर्वं तमभिसमेति, यस्तद वेदयत् सवेद என்று சுருதி அர்த்தம் அவன் பிரும்மத்தை அறியமுடியாதது என்று அறிகிருனே அவன் அறிந்தவனு கும். எவன் அறிய முடிந்தது என்பானே அவன் அறியா தவன்.

ஜான ஸ்ருதி இந்த ஹம்ஸத்தின் நிந்தா வாக்யத்தைக் கேட்டதால் பிரும்ம ஞானமில்லாதபடியாலே ஆத்மா நிந்தை யாக விருப்பதாலே, அந்த அவமானச் சொல்லை தாங்க முடி யாமல் அதே மூச்சில் பிரும்ம ஞானமுள்ள ரைக்வரைப் புகழ்ந்து கேட்கப்படுவதாலே அதேக்ஷணத்திலே தன் ஆட் களை அனுப்பி ரைக்வரைத் தேட ஆக்ஞையிட்டான்; அவ ரிருப்பிடத்தை தன் ஒற்றர்களால் அறிந்தவுடனே அவனே ஸ்வயமாகவே ரைக்வரிடம் உபகாரங்களைக் கொண்டு சென் ருன். அவரைப் பிரார்ந்தித்தான்-பசுக்கள் தங்க நாணயங் கள் குதிரை வாகனங்களை ஸமர்ப்பித்து வினவினுன்-"பக வந், எந்த தேவதையை நீர் உபாஸிக்கிறீரோ அவரை எனக்கு உபதேசிப்பீர்." अनु मे एतां भगवो देवतां शाधि, यां देवतामुपास्से; அதாவது இதன் அர்த்தம் "உம்மால் உபாஸிக்கப்படும் பர தேவதையை எனக்கும் உபதேசிப்பீர்." ரைக்வமஹரிஷி தமது யோக மகிமையினுல் முக்காலங்களை உணர்பவராத லால் ஜானஸ்ருதிக்கு ஹம்ஸங்களின் பேச்சைக் கேட்டதால் தாங்க முடியாத வருத்தம் யேற்பட்டிருக்கிறது. சோகமடைந் திருக்கிருன். அதற்குப் பிறகே பிரும்ம ஜிக்ஞாஸையில் ஈடுபட்டவனுக, சூத்ரனுன அவனுக்கு பிருஹ்மவித்யையில் இச்சை, யோக்யதை இருப்பதைக் கண்டு, தன்னிடம் பல காலம் சுருஸ்ருஷை செய்யாமலே, கேவலம் திரவயதானத் தினுல் சுஸ்ருஷையை ஸ்வீகரித்து யாவத் சக்தி அதன்படி கொடுத்தவனாக, அதனுல் அவனுக்கு அனுகிரஹித்தார். அவனுடைய சோகம் ஹம்ஸத்தின் நிந்தா வார்த்தைகளாலும் தனக்கு பிரும்ம ஞானம் இல்லாதபடியாலும் யேற்பட்டது. இதனால் "சூத்ர" சப்தத்தினால் அறியப்படுகிருனே ஒழிய சூத்ர ஜாதியில் பிறப்பை அடைந்தவனல்ல ஜான ஸ்ருதி.

அது இங்ஙனம் ரைக்வரால் சொல்லப்படுகிறது. சா: உ 4-2-3 अह हारेत्वा शूद्र, तवैव सह गोभिरस्तु சூத்ரனே உன்னிடமே இந்த பசுக்கள் இருக்கட்டும் (எனக்கு வேண்டாம் எடுத்துச் செல் என அர்த்தம்). உன் தங்க நைக்லஸ், பசுக்கள் ரதங் கள் யாவும் உன்னிடமே தங்கட்டும். சூத்ரனே, எல்லாம் உன்னிடமே இருக்கட்டும். (அதாவது இதன் அர்த்தம்) இவைகளை இம்மாத்திரம் கொடுத்துவிட்டு, பிரும்ம ஞானத்தை சோக முள்ள நீ அடையக்கூடும் என்று எண் ணுதே "இதைக் கேட்ட ஜானஸ்ருதி தன் மீண்டும் சக்திக்கு யேற்ப பசுக்கள், தனம், கன்னிகை எல்லாம் கொணர்ந்து' பிரார்த்தித்தான். அந்த ரைக்வர் மீண்டும் அவனை பரிட்சை செய்து பிறகு அந்த ஜானஸ்ருதிவிடாமல் தன் நிலையில் நிற்க, அவனை பிரும்ம வித்யைக்கு யோக்யதா பாத்திரம் என அறிந்து, शूद्र (சூத்ர) சப்தத்தினால் கூப் பிட்டு, அடே சூத்ரனே, आजहारेमा: शूद्र, - अनेनैव मुखेनाऽऽलापयिष्यथा: इति - இவைகளை (வெகுமதிகளை) முகமாக வைத்து என்னைப் பேசும்படி செய்கிறாய். எனக்கு சில காலமாவது சுஸ்ரூஷை செய்யாமல் அதற்குப் பதிலாகத் தனம் கொடுத்து என்னை யாசிக்கிறாய் -

## अनेनैव द्वारेण, चिरसेवया विनाऽपि, मां त्वदभिलषितं ब्रह्मोपदेशरूपवाक्यमालपयिष्यसीत्युक्त्वा तस्मा उपदिदेश—

இவ்விதம் சொல்லிக் கொண்டு அவன் இஷ்டப்படி ரைக்வர் ஜானஸ்ருதிக்கு உபதேசித்தார். (பிருஹ்ம வித்யையை). இது ஆக்யா வரலாறு

ஆகையால் शूद्र சப்தத்தினால் வித்யா உபதேச யோக்ய தையுள்ள (ஆக்யா (கதையை)வைச் சொல்வதாலே, சோகம் ஏவ என்கிற காரணத்தினாலே சூத்ரபதத்திற்கு அர்த்தம் சொல்லி (शोक एवाऽस्य सूचित:) காட்டப்பட்டது. न चतुर्थवर्णत्वम् சூத்ர ஜாதியில் பிறப்புள்ளவன் என்கிற அர்த்தமல்ல.

### சூத்ரம் क्षत्रियत्वगतेश्च (1-3-34)

### க்ஷத்திரயத்வகதேச்ச (1-3-34)

க்ஷத்ரியத்வகதே:ச - ஜாநஸ்ருதிக்ஷத்திரியனே - என்று அறியப் படுவதாலும் (சூத்ரனுக்கு பிரும்ம வித்யையில் அதிகாரமில்லை)

**बहुदायि** பணத்தை ஏராளமாகத் தானம் செய்தவன். பஹுபாக்ய: - அதிக பாக்யமுள்ளவன்; सर्वत एव मे अन्नमत्स्यन्ति அதிகமான அன்னக் கூட்டங்கள் அவன் வீட்டில் காணப் படுகின்றன. பலவிதமான சமைக்கப்பட்ட அன்னங்கள் இவைகளைக் கொடுப்பவன் என அர்த்தம். स ह संजिहान एव क्षत्तारमुवाच அவன் வீட்டில் ஏராளமான அன்னங்கள் எல்லாப் பக்கங்களிலும் இருக்கின்றன. அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள். (सर्वदा एवं एतद अन्नं अत्सयन्ति - एवमेव (சா. உ. 4-1-1) என்று ஆரம்பித்து படுக்கையிலிருந்து எழுந்து வாயிற் காப்பானிடம் அவனைத்தேடி வர உத்தர விட்டான். இதனாலேயும் பல கிராமங்களைத் தானம் செய்த தால் அவன் அரசனாகவே இருக்க வேண்டும்; ஆகவே இந்த ஜான ஸ்ருதி க்ஷத்ரியனாக விருக்கவேண்டும், சதுர்த்தவர்ண னாக விருக்க முடியாது என்பதாம். अयं शूद्रसபதம் शोकाश्रयवचन: न जाति वचन:

இவ்விதம் உபக்ரம ஆரம்பத்திலுள்ள கதையிலும் ஜான ஸ்ருதிக்ஷத்திரியனாக விருக்கவேண்டும். உபஸம்ஹாரத்தி லுள்ள ஆக்யாவிலும் க்ஷத்திரியனாக அவன் இருக்க வேண்டும் எனத்தெளிவாகும். (கீழ் சூத்திரம் பார்க்கவும்)

### சூத்ரம் उत्तरत्र चैत्ररथेन लिङ्गात् (1-3-35)

### உத்தரத்ரசைத்ரரதேந லிங்காத் (1-3-35)

**உத்தரத்ர** மேலே கூறப்படும் சைத்ரரதேந சித்ரரத வம்சத்தைச் சேர்ந்த க்ஷத்திரியனைக் கொண்டு, ஜானஸ்ருதி யின் க்ஷத்திரியனாக யிருக்கும் தன்மை அறியலாம். லிங்காத் காபேயனோடு கூடியிருக்கையாகிற அடையாளத்தால்;

அங்கு கூறப்பட்டவன் சைத்ரரத னென்றும், அவன் அரசனேயாகும் - என அறியலாம்.

ஸம்வர்க்க வித்யையின் ஆரம்பத்தில் ஜானஸ்ருதி கதையும், முடிவில் காபேயனுடைய கதையும் வருகின்றன (இதை நாம் முன்பு கூறிவிட்டோம்). காபேய விருத்தாந்தத்தில் பிராம்மண க்ஷத்ரியர்களுக்கே இந்த வித்யையில் சம்பந்தம் உண்டு என்பதும் (காபியகோத்ரத்தைச் சேர்ந்தவன் காபேயன்). பிரும்மசாரியின் பெயர் அபிப்ரதாரி, இருவர்களுடைய சம்பாஷணையினால் தெரியவரும். அபிப்ரதாரி சைத்ரரதனாக சித்ரரதன் வம்சத்தில் சேர்ந்தவனாக) க்ஷத்திரியனாக விருக்க வேண்டும். ஆகவே பிராம்மணன் க்ஷத்திரியன் ஆக இருவர்களும் கூடியிருப்பதாக தெரிகிறது.)

இந்த ஜானஸ்ருதிக்கு ரைக்வரால் ஸம்வர்க்க வித்யை ஓதப்பட்டது. அதில் அபிப்ரதாரி என்கிற பெயருள்ள சைத்ரரதன் (சித்ரரதவம்சத்தைச் சேர்ந்த க்ஷத்திரியன்) அவன் மூலமாக க்ஷத்திரியன் என்று அறியப்படுகிறது. அதாவது ஜானஸ்ருதியும் க்ஷத்திரியனாகும் எப்படி? இந்த சுருதியினாலே சா. உ. 4–3–5

**अथ ह शौनकं च कापेय अभिप्रतारिणं च काक्षसेनिं परिविष्यमाणौ ब्रह्मचारि विभिक्षे -**

ஒரு சமயம் ஸௌனக காபேயனும் அபிப்ராதாரிணி காகஸேனி இருவர்களும் சாப்பிடும் போது ஒரு பிரும்மசாரி அன்னத்தை பிக்ஷையாக கேட்டான். இந்த கதை முடிவில் **ब्रह्मचारिन्नेदमुपास्महे** பிரும்மசாரியே, நாங்கள் (நீ சொன்னபடி) அந்த வஸ்துவை உபாஸிக்கவில்லை - என்பதால் காபேயன் அபிப்ரதாரிணியும் பிரும்மசாரியும் ஆகிய மூவரும் ஸம்வர்க்க வித்யையில் சம்பந்தமுண்டு எனக்காட்டப்படுகிறது. அவர்களில் அபிப்ரதாரி க்ஷத்ரியன் மற்றவர்கள் பிராம்மணர்கள். (காபேய கோத்ரத்தைச் சேர்ந்த காபேயன்) இந்த ஸம்வர்க்க

வித்யையில் பிராம்மணனுக்கும், மற்றவர்களில் (பிராம் மணர்களைத் தவிர மற்றவர்களில்) க்ஷத்திரியன் ஒரு வனுக்கே - சூத்ரனுக்குக் கிடையாது, ஸம்பந்தம் கொண்ட தாகச் சொல்லப்படுகிறது. ஆகவே பிராம்மண ரைக்வரை விட அந்யனான க்ஷத்திரியன் ஜானஸ்ருதியாகும். அவர் களுக்கும் ஸம்வர்க்க வித்யைக்கும் சம்பந்தம் சொல்லப் பட்டிருக்கிறது. (சூத்ரனுக்கில்லை) ஆகவே ஜானஸ்ருதி சதுர்த்த வர்ணி இல்லை. இந்தபிரகரணத்திலே மேலும் ஓதப் பட்டிருக்கிறது, அபிப்பிரதாரின் என்பவன் க்ஷத்திரியன்; அவனே சைத்ரரதன்.

ஆகவே எப்படி அபிப்ரதாரின் க்ஷத்திரியன் என்றும் அவனே சைத்ரரதன் என்றும் தெரியவரும்? அதற்கு சூத்ரக்காரரே பதிலாக लिङ्गात् (அனுமானிக்க அடையாளங் கள் இருக்கின்றன) என்கிறார் சூத்ரத்திலே. अथ ह शौनकं च कापेयमभिप्रतारिणं चकाक्षसेनिम् ஒரு சமயம் ஸௌனக காபேயனும், அபிப்ரதாரின் காகஸேனியும்போஜனம் செய்ய உட்கார்ந்திருக்கும்போது, ஒரு பிரும்மசாரி அன்ன பிக்ஷை கேட்டான். இதிலிருந்து தெரியவருகிறது - அபிப்ர தாரின் காபேயனுடன் சம்பந்தம் கொண்டவன்; மேலும் இன்னொரு இடத்தில் தாண்ட்யபிரா 10-12-5 एतेन वै चि (चै) त्ररथं कापेया अयाजयन् காபேயர்கள்(கபிகோத்ரத்தைச் சேர்ந்தவர் கள்) சித்ரரத வம்சத்தைச் சேர்ந்தவனுக்கு யாகவிசேஷத் தைச் செய்வித்தனர் என்கிற வேதவாக்யத்திலிருந்து காபேயன் அந்தணனோடு சித்ரரதன (அரசன்) சம்பந்த முள்ளவன். சைத்ரரதோ நாம ஏக: க்ஷத்ர பதிர ஜாயத (சைத்ரரதன் எனப்படும் ஒரு அரசன் உண்டானான்- சதபிரா. 11-5-3-13;) என்னும் வாக்யத்தால் சைத்ரரதன் க்ஷத்திரியன்; பிராம்மணனான காபேயனோடு சம்பந்தமுள்ள அபிப்ரதாரி க்ஷத்திரியனாக விருக்கவேண்டும். அதேமாதிரி இங்கேயும் ஜான ஸ்ருதிக்கும் (க்ஷத்திரியன்) ரைக்வருக்கும் (பிராம்மணனுக்கும்) சம்பந்தம் யேற்படலாம். அதனால் க்ஷத்திரியன் பிராம்மணனாக இருவர் ஆகும். அவனை சூத்ர என்று நான்காம் வர்ணத்தினனாக அழைத்து பிரும்ம வித்

யையில் அவனுக்கு அதிகாரம் உண்டு எனக் கூறமுடியாது. அவன் சூத்ரனல்ல என்பதாகும்.

ஆகவே இங்கேயும் நியாய விரோதம் யேற்படவில்லை. அதனுல் சூத்ரனுக்கு அதிகாரம் உண்டு என்று கூறுவதற்கு; லிங்கம் (அனுமான அடையாளம்) காணப்படவில்லை. இதனுல் நியாய ஸித்தமானது நான்காம் வர்ணத்தினை சூத்ரனுக்கு அதிகாரமின்மை ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் அனுக்ர ஹிக்கப்படவில்லை.

சூத்ரம் संस्कारपरामर्शात् तदभावाभिलापाच्च (1-3-36)

ஸ்ம்ஸ்கார பராமர்சாத் ததபாவாபிலாபாச்ச (1-3-36)

ஸம்ஸ்கார பராமர்சாத் - (வித்யையை உபதேசிக்கும் வாக்கியங்களில்) உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்கள் வேத படனத்திற்கு ஓதப்படுகின்றன. ததபாவாபிலாபாத்ச - (சூத்ரனுக்கு) இந்த ஸம்ஸ்காரங்கள் சொல்லப்படவில்லை. (அதனுல் அவனுக்கு பிரும்ம வித்யையில் அதிகாரமில்லை) பிருஹ்மவித்யா உபதேசம் காணப்படும் வாக்ய பிரகரணங் களிலே, உபநயனம் என்கிற ஸம்ஸ்காரம் ஓதப்படுகிறது. சா. உ 4-4-6 उपत्वानेष्ये நான் உனக்கு உபநயனம் செய்விக் கிறேன். तं होपनिन्ये (உத்தாலகர் அருணி) உபநயனம் (சௌகேயனுக்குச்) செய்வித்தார். இம்மாதிரி சூத்ரனுக்கு உபநயனாதி ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டதாக ஸ்ருதி ஸ்மிருதிகளில காணப்படவில்லை. அதற்குப் பதிலாக இம்மாதிரி கடுமையான தடைகள் காணப்படுகின்றன; மனு. 10 - 126ல் न शूद्रे पातकं किञ्चिन्न च संस्कारमर्हति சூத்ரனுக்கு, விதிக்கப்பட்ட கர்மாக்களைச் செய்யாமல் இருப்பதால், அத்தகைய வரைதாண்டிப் போதல் அதாவது எல்லை நிலம் இருக்கக் கூடாது. சூத்ரன் ஸம்ஸ்காரத்திற்கு அருகதை யில்லாதவன். चतुर्थो वर्ण एकजातिर्न च संस्कारमर्हति-நான்காவது வர்ணத்தானுக்கு ஒரே பிறப்புத்தான்- அவனுக்கு ஸம்ஸ் காரம் செய்யப்படுவதற்கு அர்ஹனில்லை. (தகுதியில்லை).

ஸூத்ரம் तदभावनिर्धारणे च प्रवृत्तेः (1-3-37)

ததபாவநிர்த்தாரணே ச ப்ரவிருத்தே: (1-3-37)

ததபாவ நிர்த்தாரணே-சூத்ரத்வமில்லை என்று நிச்சயம் செய்து கொண்ட பின்பு, ப்ரவிருத்தே: - பிருஹ்ம வித்யை உபதேசிக்கப்படுகிறது. அதாவது (யார் என்று கேள்வி மூலம் கோத்ரம்-விபரங்கள் தெரிந்த பின்பே வித்யை உபதேசிக்கப்படுகிறது).

(இங்கு சா. உபநிஷத்தில் ஒரு கதையை அடிப்படை யாகக் கொண்ட விஷயம் சொல்லப்படுகிறது. ஷோடசகல பிருஹ்ம வித்யை. ஸத்யகாமன் என்பவன் ஜபாலை என்கிற பெயருள்ள தாயாரிடம் உத்தரவு கேட்டு பிரம்மசர்யத்துக் காகப் போகிறேன். கோத்ரம் தெரிய வேண்டும் எனக் கேட்டான். தாயார் சொன்னாள்-"நான் பெரியோர்களைச் சேவை செய்து உழைத்தவண்ணமேயிருந்து யௌவனத்தில் உன்னைப் பெற்றேன். இந்த நிலையில் கோத்ரம் அறியா மலே வளர்த்து விட்டேன். நான் என்ன செய்வது? நான் ஜபாலை நீ ஸத்யகாமன். இதையே உன் குருவினிடம் சொல்" என்றாள். ஸத்யகாமன் கௌதமஹாரிதரிடம் சென்று இதனைச் சொல்ல இப்படி உண்மை உரைத்துக் கொண்டு வந்ததாலே 'நீ பிராம்மணனே' என்று அவனைப் புகழ்ந்து பாடம் கற்பிக்க இசைந்து, தன் பசுக்களை மேய்த்து வரச் சொன்னார். ஆயிரம் பசுக்களுடன் நான் வருவேன் என்று சிஷ்யன் சொல்லிப் போனான்.)

சா. உ. 4-4-6 नैतदब्राह्मणो विवक्तुमर्हति । समिधं सोम्याहर எவன் பிராம்மணன் அல்லாதவனோ, அவனுக்கு இப்படி உண்மை உரைப்பது முடியாது. (அதாவது த்ரைவர்ணிகனல்லாத வன் இப்படி நேர்மை உரைக்கமாட்டான்) என்கிற வசனத் தாலே ஆசார்யர் நினைத்தார், தன்னிடம் வந்திருக்கும் சிஷ்ய னை ஜபாலை சூத்ரனல்ல என்று நிச்சயித்து; ஏற்றுக் கொண்டபடியால், பிருஹ்மவித்யையின் உபதேசத்திற்கு

அங்கமாக முழு விபரங்கள் சிஷ்யனைப் பற்றி தெரியப்பட வேண்டும். ஆகையால் நான்காம் வர்ணத்தினனுக்கு அதிகாரமில்லை.

சூத்ரம் श्रवणाध्ययनार्थप्रतिषेधात् (1-3-38)

ச்ரவணாத்யய நார்த்த ப்ரதிஷேதாத் (1-3-38)

ச்ரவணாத்யய நார்த்த ப்ரதிஷேதாத் - (நான்காம் வர்ணத்தினனுக்கு) வேதத்தைக் கேட்பதும் அத்யயனம் செய்வதும் அதன் அர்தத்தைத் தெரிந்து கொள்வதும் வேதத்தில் தடுக்கப்பட்டிருப்பதால் அவனுக்கு அதிகாரமில்லை.

சூத்ரனுக்கு வேத சிரவணம் அதை ஓதுவது அதன் அர்த்த அனுஷ்டானங்களைத் தெரிந்து கொள்ளுதல் தடுக்கப்பட்டிருக்கின்றன. पद्यु ह वा एतच्छ्मशानं यच्छूद्रः । तस्माच्छूद्रसमीपे नाध्येतव्यम् - (சூத்ரனுக்கு அருகிலே அத்யயனம் செய்யக் கூடாது)' तस्माच्छूद्रोबहुपशुरयज्ञीयः சூத்ரன் யாகம் செய்யத்தகுந்தவனல்லன்; என்பதால बहुपशुः என்பதால் அவன் பசுவைப் போல ஸாத்ருஸ்ய முள்ளவன். அவனுக்கு ஸ்ரவணம் அத்யயனம். அர்த்த ஞானம் அர்த்தானுஷ்டானங்கள் இல்லாதபடியாலே வேதத்தில் தடுக்கப்பட்டதால் அவனுக்கு அதிகாரமில்லை.

சூத்ரம் स्मृतेश्च (1-3-39)

ஸ்மிருதேஸ்ச (1-3-39)

ஸ்மிருதியிலிருந்தும் அதிகாரமின்மை தெரியவருகிறது. ஸ்ம்ருதிகளும் - ஸ்ரவணாதி நிஷேதம்: எனச் சொல்கின்றன. கௌ. த. 12-3ல்

**अथ ह्यस्य वेदमुपश्रृण्वतस्त्रपुजतुभ्याम् श्रोत्रप्रतिपूरणमुदाहरणे जिह्वाच्छेदो धारणे शरीरभेदः -**

என்று; அவன் வேதங்களைக் கேட்டால், அவனுக்குத் தண்டனை கொடுக்கப்பட வேண்டும். அவன் உச்சரித்தால்

அதேபடி தண்டனை அடையவேண்டும். அதே மாதிரி न चास्योप दिशेद्धर्मं न चास्य व्रतमादिशेत् அவனுக்கு விரதம் தர்ம சாஸ்த்ரம் மந்திரங்கள் இத்யாதி உபதேசம் கூடாது. இவைகளில் அவனுக்கு அதிகாரமில்லை.

(இப்போது அத்வைதபக்ஷம் வாதிக்கப்படுகிறது). எவர்கள் நிர்விசேஷசின்மாத்ரம் பிரும்மமே பரமார்த்தம், மற்றவை எல்லாம் மித்யாபூதம் சம்சாரபந்தமும் அபரமார்த்தம். அவர்கள் பக்ஷம் யாதெனில் அவர்கள் சொல்வது வாக்ய ஜன்ய ஞானத்தினால் அடையப்படும் வஸ்துவின் யாதாத்மியஞான மாத்திரம் ஒன்றாலே பந்தம் நிவிருத்தியடைகிறது, அவ்வித நிவிருத்தியே மோக்ஷம் எனப்படுகிறது- என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்களால் சொல்லப்பட முடியாது—சூத்ரனும் மற்றவர்களும் பிரும்மத்தை அறியும் ஞானத்திற்கு அநதிகாரிகள் என்று சொல்ல முடியாது,ஏனெனில் எவனுககு உபநயனம் செய்யப்படவில்லையோ, வேதபடனம் இல்லையோ, வேதாந்தங்கள் பாடமில்லையோ, அவனுக்கு ஞானம் உண்டாயிருக்கக்கூடும் - வேதாந்த வாக்ய ஜன்ய ஞானத்தாலே निर्विशेषचिन्मात्रं ब्रह्मैव परमार्थ: (நிர்விசேஷ சின்மாத்திரபிரும்மமே பரமார்த்தம்) अन्यत् सर्वं तस्मिन् परिकल्पितं मिथ्याभूतम् மற்றது எல்லாம் பிரும்மத்தில் பரிகல்பிதம் (ஆரோபிக்கப்பட்டு) மித்யாபூதம்; ஏனெனில் இந்த பந்தமும் இந்த வாக்ய ஜன்ய ஞானத்தினாலே போக்கப்படும். அதாவது பிரும்ம ஜீவ ஐக்ய ஞானத்தினாலே வஸ்துவின் யாதாத்மிய ஞானம் ஏற்பட்டதும் (ஸ்வரூப ஐக்ய ஞானம் ஏற்பட்டதும்) அப்போதே பந்த நிவ்ருத்தியேற்படுகிறது என்கிறார்கள் தத்வமஸ்யாதி (நீ பிரும்மமாக விருக்கிறாய்) என்கிற வாக்யத்தினாலே ஞானத்தின் உற்பத்திக்கு அந்தக்காரியத்துக்கு வாக்யாந்தரத்தினால் மாத்திரம் ஏற்படுத்துவது ஸாத்யமில்லை. ஞானம் புருஷதந்திரமில்லை, முயற்சியினால் அடையப்படுவதில்லை, அதுவஸ்துதந்திரமாகும்.மனிதனுக்கு ஒருவித சூழ்நிலை ஏற்பட்டால், அவனுக்கு அதை அடைய இச்சையில்லாவிடினும் ஞானம் ஏற்படுகிறது. ஸத்யாம் ஸாமக்ர்யாம் அநிச்சதோऽபி ஞானோத்பத்தே:(அவ்விதமில்லை

பக்தி அது முயற்சியால் யேற்படுவதாகும்) வேதவாக்யத் திருலே வஸ்துவின் யாதாத்ம்ய ஞானம் அடையப்படுகிற தில்லே. அதனுல் பந்தமும் நிவ்ருத்தியாகிறது என்று சொல்லக் கூடாது, ஏனெனில் பிரும்ம ஞானம் இம்மாதிரி வாக்யங்களைத் கேட்டதும் அவித்யை நீங்குகிறது, வஸ்துவின் யாதாத்மிய ஞானம்உடனேஏற்படுகிறது,அதனுல் பந்த நிவிருத்தியும் யேற்படுகிறது, பிராந்தி நிவிருத்தியாகிறது என்பது முடியாது - ஏனெனில் இவ் வித ஞானமும் பொய்யான ஞானத்தினுலே தான் ஆகும்படி நேரிடும்; ஏனெனில் நீ சொல்கிருய், பிரும்மமாத்திரம் உண்மை;மற்றது மித்யை. முயற்சியினுல் அடையப்பட்டது புருஷதந்திரம் என்றுலும் உன் வாதப்படி நிர்விசேஷ சின்மாத்திரம் பிரும்மமே பரமார்த்தம் (மற்றது யாவும் மித்யை) அன்யத் எல்லாம் மித்யாபூதமாதலால். நீ சொல்கிருய் வாக்யத்தினுலே ஞான உற்பத்தி யேற்படுகிறது பிரம நிவிருத்தி ஏற்படுகிறது—எப்படி புருஷனுடைய நம்பிக்கையான சப்தத்தினுல் (Testimony) இது வெள்ளி அல்ல முத்துச்சிப்பியே (ஆப்தவாக்யத்தினுல்)சுக்தி கார ரஜதாதி பிரமை விலகுகிறதோ அதேபோல என்றுல் நாம் சொல்வது அந்த ஞானம் சூத்ரத்தினிடத்திலும் நிவர்த்தக ஞானமாக ஏற்படலாம். அதனுல் வேதங்களைப் படித்த வேத வித்துக்களின் வார்த்தைகளைக் கேட்பதாலே. அவனுடைய பிராந்தி ஞானமும் நிவர்த்தியாகும் அத்தகைய வாக்யத்தினுலே வஸ்துவின் யாதாத்மிய ஞானம் உண்டாகி ஜகத் பிரமம் கூட நிவிருத்தியாகலாம் — யேற்படலாம். (உன்பிரகாரம்)

**न चास्योपदिशेद्धर्मम्** (இவனுக்கு தர்ம சாஸ்திரமோ உபதேசமோ கூடாது-மனு ஸ்மி) இந்த தடையினுலே அவனுக்கு உபதேசம் இல்லே. வேதவித்துக்கள் அவர்களிடம் பேசுவது கூட இல்லே; தத்வமஸ்யாதி வாக்யத்தினுல் யேற்படும் பிரும்மாத்மகம் என்கிற ஞானத்தினுல் ''நானே பிரும்மம்'' (ஜீவனே பிரும்மம் என்கிற ஞானத்தினுல்)என்று தங்களைச்சொல்பவர்கள் அவர்கள் வேதங்களின் உச்சியிலே வேதாந்தத்திலே) (முடியின்மீது) அமர்ந்திருப்பதாகவும், அதனுல் வேத கர்மங்

களுக்கு அதீதர்கள் (அவர்களால் நித்ய நைமித்திக கர்மாக்கள் ஒன்றும் செய்யப்பட வேண்டாம் என்கிற கொள்கையுள்ளவர்கள்) वेदशिरसि இருப்பதாலே அவர்களுடைய பாபங்கள் முழுவதும் எரிந்து சாம்பலாகிவிட்டன என்று निषेधशास्त्रकिङ्करत्वाभावात् இந்த வேதவிதிகளுக்கு நாம் கட்டுப்பட்டவர்களல்லர் என்கிறார்கள்.

(இங்கு ராமானுஜர்-சுரேஸ்வராச்சாரியரின் நைஷ்கர்ம்ய ஸித்தியில் காணப்படும் வாக்யத்தை மனத்தில் கொண்டு அதை பரிகரிக்கிறார். அதில் சொல்லப்பட்டது—ரிஷி தனது ஞான நெருப்பினால் எல்லாவித இருள்களை நாசம் செய்து விட்டு, வேத முடியின் மீது அமர்ந்திருக்கிறான். அத்தகையவன் வேதங்களுக்கு எப்படி பணியாளாக விருக்க முடியும்? (அதாவது விதி நிஷேதங்கள் அவனைப் பாதிக்காது. வேதத்திற்கு காட்ட வேண்டிய மதிப்பு அந்த ஸ்திதியில் இல்லை, நைஷ் கர்ம்யஸித்தி).

இம்மாதிரி ஞானம் (வாக்ய ஜன்ய ஞானம்) இம்மாதிரி வேதங்களுக்கு அத்தராக விருப்பவர்களின் வார்த்தைகளினால் (அந்த வாக்ய ஜன்ய ஞானம்) யேற்படலாம். அதனால் பிரமம் நிவிருத்தியாகிறது, நம்பத்தகுந்த புருஷனுடைய வாக்யத்தினாலே, தத்வ ஞானம் யேற்படுகிறது என்று சொல்வாயாகில்-நாம் சொல்வது அம்மாதிரி சூத்ரனுக்கும் அத்தகைய வாக்யங்களைக் கேட்டஉடனே ஞானம் உண்டாகலாம். ஆனால் நாம் சொல்வது ஜகத் பிரமம் நிவிருத்தியாகிறதில்லை. ஏனெனில் தத்வமஸ்யாதி வாக்யத்தை ஸ்ரவணம் செய்வது மாத்திரத்தால் பந்தநிவிருத்தியேற்படாது. (முதலில் அப்பேற்பட்ட ஞானம் மித்யை, அவ்விதமாயினும் அத்தகைய வாக்ய ஜன்ய ஞானத்தினால் பிரமம் நிவிருத்தியாகாது). நிதித்தியாஸநத்தினாலே த்வைத (பேத) வாஸனை அழியக்கூடும். (எவ்விதமெனில் அத்வைதி சொல்வது तत्त्वमसि என்கிற வாக்யத்தை அடிக்கடி ஓதுவதால் நிவர்த்தக ஞானம் யேற்படுகிறது என்றால் (நாம் பதில் சொலவது) புருஷனால் சொல்லப்பட்ட சப்தவாக்யத்தினாலும் (Testi

mony) அவ்விதமே நிவர்த்தக ஞானத்தை சூத்ரனிடமும் மற்றவர்களிடமும் உற்பத்தி செய்யக்கூடும். இதில் ஒரு விசேஷமுமில்லை. निदिध्यास (யோகஜன்யமான சாக்ஷாத்காரம்) றீ (என்பது) நாம பெயர் எதற்குயேற்படும் ? பிருஹ்மாத்ம பாவத்தை உண்டாக்கும் வாக்யம், எதற்கு பிருஹ்மாத்மகம் என்கிற அர்த்தத்தை விளக்க பிரதிபாதன யோக்யதை உள்ளதோ அதைத்தான் அர்த்தம் கொள்ளும், அதாவது பேதநிருத்தி நிதித்யாஸனத்தினுல்யேற்படுகிறது; அதனுலே நீ சொல்கிருய்(அத்வைதியைநோக்கி)நிதித்யாஸத்தின் விதி ஒரு நிவிருத்தி ஞானத்தை உண்டாக்குவதில் நோக்கமுள்ளது. வேத அத்யயனம் செய்வது அதனுல் நிதித்யாஸம் யேற்படுவது "பிரும்மமாக நீ இருக்கிருய்" என்பதாகிற வாக்யத்தாலே தவருன பேதவாசனைகளை அழித்து, பிரும்மத்தை அறிவதில் இச்சையை உண்டாக்குகிறது என்கிருய். (நாம் சொல்வது) இம்மாதிரி இச்சை சூத்ரனிடமும் யேற்படலாமே அதனுல் அவன் நிதித்யாஸத்தினுல் இம்மாதிரி யேற்பட்ட விவிதிஷாயாம் ஜாதாயாம் பௌருஷேய வாக்யாத் நிதித்யாஸனுதிபி:, அவனுக்கு விபரித வாசனைகள் அழிந்து போகின்றன, ஞானம் உற்பத்தியாகிறது என்று சொல்வதாலே, யாருடைய வசனங்களைக் கேட்டு, எவர்களுக்கு வேதத்தின் தடை விதிகளை அதிக்ரமிக்கும் சில பேர்களுக்கு (அத்வைதிகளுக்கு அந்த வசனங்களைக் கேட்டு, பொய்யான ஸம்சார பந்தமும் நிவர்த்தியாகிறது என்று சொல்லக்கூடுமே (அதாவது நீ சொல்கிறபடி இவ்விதம் யேற்படாது. நிவர்த்தக ஞானம் சூத்ரனுக்கோ அல்லது மற்ற திரைவர்ணிகனுக்கு நீ சொல்கிறபடி யேற்படாது, வாக்ய ஜன்ய ஞானம் மோக்ஷத்தைத்தராது. உபாஸனம் தான் தரும் என்பது ஸ்ரீமத் ராமானுஜரின் கருத்து (இங்கு ராமானுஜரின் பரந்த உள்ளத்தை நோக்கவும் — ஜாதி வித்யாஸத்தினுல் வேத படனம் கூடாது என்று சொன்னவர்—சூத்ரனுக்கும் எல்லோருக்குமே முக்தி உண்டு என்ருர். ஜாதிக்கும் முக்திக்கும் யாதொரு தடையில்லை என்பதாம்) (அதாவது நீ சொல்கிறபடி இந்த சம்சாரபந்தம் பொய்யல்ல; நிஜமானதே. அது பகவத் உபாஸனத்தினுல்—பகவத் கருணையினுல் தான் அழியும்).

இல்லாத போனுல்—சூத்ரனும், மற்றவர்களும், பிரும் மத்தை அறிகிறவர்கள். தர்க்கத்திஞல் அனுமதிக்கப்பட்டதும் பிரத்யக்ஷ அநுமானம் இத்யாதி பிரமாணங்களால் நிர்விசேஷ ஸ்வபிரகாச சிந்மாத்திர ப்ரத்யக் வஸ்துக்கள் அக்ஞானத்திற்கு சாக்ஷியாக விருகிக்கிறபடியால், அந்த அக்ஞானத்திஞல் உண்டாக்கப்பட்ட விவித விசித்ரஞாத்ருஞேயவிகல்பரூபம், (அறிகிறவன், அறியப்படும் வஸ்து என்கிற பேதம் எனப்படும் ஸம்சாரம்). (இங்கு சொல்லப் படுவது பிரமாண அநுபபத்தி, ப்ரமேய அநுபபத்தி பிரத்யக்ஷம் நிர்வேசேஷ பிரும்மத்தை அறியவைக்கிறது. (பேதத்திஞல் அல்ல); (வித்யாஸம்பேதம்)எளிதில் சொல்லப்படாதது. அது வஸ்துவின் நிஜஸ்வரூபமா அல்லது அது ஒரு வஸ்துவுக்குத் தர்மமா?); அத்தகைய விகல்பரூபமாகிற ஸம்பூர்ண ஜகத் (ஸம்சாரம்) அத்யஸ்தம்(பிரும்மத்தின்மேல் நித்ய சுத்த பிரும்மத்தின் மேல் ஆரோபிதம்) என நிச்சயித்து, அப்பேற்பட்ட பிரும்மம் ஜகத் சாக்ஷியாகவிருக்கிறது)இவை ஆத்மாவில் அத்யஸ்தம் அந்த ஆத்மா ஸ்வபிரகாசமாய் அந்தர்யாமியாகவிருக்கிறுன். இம்மாதிரியேற்பட்ட பரிசுத்த பிரத்யக் வஸ்துக்களை அநவரதம் சிந்திப்பதால்(பிரும்மம் ஒன்றுதான் ஸத்யம் மற்ற வஸ்துக்கள் யாவை மித்யா பூதம் என்று சிந்திப்பதால்), அவர்களுடைய (சூத்ரன் முதலாஞேர்களுடைய) வீபரீத வாசனைகள் அழிந்து போய் அதனுலேயே அவர்கள் பிரத்யக் வஸ்துவை (அந்தர்யாமியை) ஸாக்ஷாத் கரிக்கிறுர்கள். இப்படிச் சொல்வதாலே சூத்ரர்களும், மற்றவர்களைப்போல மோக்ஷத்தை அடையக்கூடும். பந்த நிவிருத்தியை அடையக்கூடும் என்று நீ சொல்கிருயே; (வேடிக்கைதான் பரிகசிக்கத் தகுந்தது தான் எங்கனமெனில்).

மித்யாபூத விசித்திர ஐஸ்வர்ய விசித்திர ஸ்ருஷ்டியாதி—லௌகிக உலகம் அனந்த (முடிவில்லாத) விசேஷங்களை அடிப்படையாகக் கொண்டதால்—அவை எல்லாம் மித்யை. இந்த மித்யையைக் கூறும் வேதாந்த வாக்யங்கள் அவைகளால் ஏதும் பிரயோசனமில்லை என்று காட்டப்படுகிறது; அதெப்படி இம்மாதிரி மித்யாஞானத்திஞல் சூத்ரனும்

மற்றவர்களும் பிரும்மவித்தையில் அதிகாரியோக்யன்தயை அடைந்து மிக்க சோபிதமாக விளங்குகிறார்கள்—என்று சொல்கிறாயே (அத்வைதியை நோக்கி); இந்த நியாயத்தினால் பிராம்மணர்களுக்கும் கூட, பிருஹ்ம வேதனம் ஸித்திக்கக் கூடும். ஆனால் பாவம், பரிதாபத்திற்குரிய (தபஸ்வினீ) இந்த உபநிஷத்துக்கள், அவைகளின் பிரயோசனமில்லாமையினாலே இறந்து விட்டவர்களைப் போலக் கருதப்பட்டு அவர்களுக்கு திலதர்ப்பண ரூபேணஜலாஞ்சலியைத் தரத்தக்கவர்களாக விருக்கட்டும்.

(अनेनैव न्यायेन ब्राह्मणादीनामपि ब्रह्मवेद न सिद्धेरुपनिषञ्च तपस्विनी दत्तजलाञ्जलिस्यात् -)

(லௌகிகம் தத்வ மஸ்யாதிவாக்யங்களின் அத்யயன விதி விஷய புருஷயேவ கார்ய கரத்வே அபிவா - லௌகிகம் என அர்த்தம்) (உத்தமூர் ஸ்வாமி).

மேலும் இப்படிச் சொல்லமுடியாது. இயற்கையாகவுள்ளதும், லோக வ்யவஹாரத்தினால், அலைந்து திரிகிற ஒருவன் தவறான எண்ணங்களை உடையவன். (எப்படித் தவறான எண்ணங்கள் அதற்கு விளக்கமாக) இந்த உலகத்தில் யேற்படும் வ்யவஹாரங்கள் எல்லாம் மித்யை—பிரமம்தான் பரமார்த்த வஸ்து இப்படி பட்ட ஸ்வரூபமுள்ளது. அத்தகைய பிரமம் உள்ள புருஷன் இன்னொருவனிடப் சொல்லும் போது மேற்சொல்லியபடி வஸ்துக்களும் ஜகத்தும் மித்யை, சுத்த பிரும்மத்தின் மீது ஆரோபிதம், அந்த பிரும்மம் ஒன்றே ஸத்யம் - மற்றது எல்லாம் அத்யஸ்தம் என்று சொல்கிறானே, அந்த பிரும்மம் நித்ய சுத்த பிரும்மமாக விருக்கிறது. ஸத் என்கிற நித்ய சுத்த ஸ்வப்ரகாச அத்வீதிய கூடஸ்த சைதன்யமேவ என்று சொல்வானாகில், அப்போது கேட்கிறானே அந்த மனிதனிடம் உண்மையான ஞானத்தை அடைவதற்கு இச்சை யேற்படுகிறது, அந்த ஞானம் பிரத்யக்ஷ அநுமானாதிகளின் உதவியினாலே அறியப்படுகிறது, அதனாலே (பிரத்யக்ஷ அநுமானாப்யாயாம்

வஸ்து நிருபணம் அதனாலே) அறியவேண்டியது பிரத்யக்ஷ அனுமானங்களின் உதவினாலே தான்). அதனாலே, பாவம் இந்த பரிதாப தசையை அடைந்த சுருதிகள், வேதாந்த வசனங்கள் எல்லாம் இருந்துவிட்டுப் போகட்டும், அதையும் நாம் ஒப்புக் கொள்கிறோம், ஏனெனில் அவைகளும் உண்மையான ஞானத்தைப் போதிக்கிறது—என்கிறபடியால். இதற்குக் காரணம் நாம் சொல்வோம் (ராமானுஜர் சொல்கிறார்.)

இப்படி நேர்ந்துள்ள ஸ்வபிரகாச வஸ்துவிற்கு சுருதி ஸம்மதி யேற்படுகிறதே அதனாலே அது விசேஷத்தை அடைவதற்கில்லை; இந்த ஜகத் அத்யஸ்த மாதலால் அத்யஸ்தரூப ஜகத் நிவர்த்தகம் செய்யப்பட வேண்டியதால், ஸ்ருதியும் கூட அதைச் சொல்வதாலே, சுருதியும் உபயோகமாகிறது. இதற்குக் காரணம் ஸம்சாரபயங்களைக் கண்டு பயந்துள்ளவர்கள் இவர்களில் சாங்கியன் நையாயிகன் ஜைனன் உள்பட அவரவர்களுக்குத் தோன்றிய அபிப்ராயங்களை பிரத்யக்ஷ அனுமானங்களின் உதவிக் கொண்டு உண்மை வஸ்துவின் ஸ்வரூபம் இதுதான் என்கிறார்கள்; அத்தகையவர்களிடமும் ஆசையேற்படும் பிரும்மத்தின் நிஜஸ்வரூபத்தை அறிவதற்கு; அந்த ஆசை பிரத்யக்ஷ அனுமானாதிகளால் யேற்பட்டதாகும்; அப்போது மனிதர்களிடமும் அந்த ஆசை தோன்றவும் அது அதே பிர்த்யக்ஷ அனுமானாதிகளாலே கண்டு அறியப்படும்; அறியப்படும்போது தனிப்பட்ட வழியினால் நித்ய சுத்தஸ்வபிரகாச அத்வீதீய கூடஸ்த சைதன்யமேவ ஸத், அதுதான் ஸத்யம் அதுதவிர மற்றது எல்லாம் (ஜகத் எல்லாம்) அதன்மேல் ஆரோபிதம் எனக் கொள்ளப்படும்.

இப்படிப்பட்ட ஸ்வபிரகாச ஸத்யமான ஆத்மாவிற்கு அதற்கு யாதொரு தர்மம் (குணம்) ஒப்புக் கொள்ளப்படமாட்டாது. ஏனெனில் (அத்வைதியை நோக்கி உன் அபிப்ராயத்தில்) சுருதியின் நோக்கம், பிரும்மத்தின் மேல் ஆரோபிதமான வஸ்துக்களின் ரூபங்களை அகற்றி அந்த

வஸ்துவை மற்ற வஸ்துக்களிலிருந்து வ்யா வர்த்த பரமாக தனிப்பட்டதாக குணம் தர்மம் யாதுமில்லாதபடிக் காட்டு வதற்க்காக, அதாவது சுத்த பிரும்மத்தை ஸகலேதரவ்யா விருத்தயா என அறியவும், மேலும் உபநிஷத்துக்களை, நாம் ஒத்துக் கொள்ள முடியாது, அந்த ஸத்தாகவிருக்கும் ஆத்மா வின் ஆனந்த ரூபத்தைப் பற்றிய ஞானத்தை அடைவதற்கு ஸாதனமாக விருக்கிறது என்பதை ஒத்துக்கொள்ள முடியாது, ஏனெனில் ஆத்மாவின் ஸ்வரூபம் சித்ரூபம் ஏவ சித்தாவாக விருக்கிறதனாலே அதனாலே அதைத் தவிர மற்ற வஸ்துக்களிலிருந்து - இந்த மாதிரி ஆனந்த ஸ்வரூபமில்லாததாக விருக்கும் வஸ்துக்களி லிருந்து பிரித்துக் காட்டுகிறபடியாலே, அந்த சித்ரூபமே தான் அதன் ஆனந்தரூபத்திற்கு ஸ்வரூபமாகவே உள்ளது.

**விளக்கம்:**—(அத்வைதி ஆனந்தமே சித்தின் ஸ்வரூபம் என்கிறான், குணமாக ஒத்துக் கொள்ளவில்லை. அது ஸ்வரூப மாதலால் மற்ற வஸ்துக்களிலிருந்து சித் பிரித்துக் காட்டப் படுகிறது. வ்யாவர்த்தமாக ஆனந்தத்திற்கு எதிராகவுள்ள ஆனந்தமில்லாமையிலிருந்து பிரித்துக் காட்டப்படுகிறது. பிரும்மம் ஆனந்தமே அதனால் வ்யாவர்த்தகம் அதுவே சித்தாகவும் இருக்கிறது—ஸத் சித் ஆனந்தம் இதனால் பிரும் மமே ஆனந்தம் என்பதற்கு வேறு ஒரு நியாயம் (வாதம்) தேவையில்லை என்பதாகும். இதுவரை அத்வைதபக்ஷம்.)

(நமது சித்தாந்தம்) ஆனால் நம்மைபோன்றவர்களின் அபிப்ராயம் - மோக்ஷஸாதனத்திற்க்காக வேதாந்த வாக்யங் களால் உபதேசிக்கப்படுவது ஞானம் என்பது உபாஸன ரூப முள்ளதாக விருக்கிறது. அதனால் பரமபுருஷனை சந்தோஷப் படுத்தி அவனை அனுக்ரஹ சித்தமுள்ளவனாக ஆக்குவ தாகும். அதை நாம் சாஸ்திரம் ஒன்றினால் தான் தெரிந்து கொள்ள முடியும். உபாஸன சாஸ்திரமும் தனது நிறைவிற்க் காக உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்களையும் ஸ்வாத்யாய ஜனிதமான ஞானம்; விவேகம், விமோகம் ஆதி ஸாதனங் களால் அனுக்ரஹிக்கப்பட்டதாகும். இவைகள் உபாயமாகி

பரம புருஷன் அவனை ஸ்வீகரிக்கிருன் இம்மாதிரி ரூப முள்ள உபாஸனையினுல் ப்ரீதியடைந்த பரம புருஷன் புருஷோத்தமன் தனது உபாஸகனுக்கு ஸ்வாபாவிக ஆத்ம யாதாத்மிய ஞானத்தை அளித்து அதாவது தத்வ த்ரய ஞானத்தை அளித்து அந்த ஞானத்தினுல் கர்ம ஜனித அக்ஞானத்தை நாசம் செய்து ஸம்சார பந்தத்திலிருந்து விடுவிக்கிருன் என்கிற (நமது ஸ்ரீவைஷ்ணவ) பக்ஷம் யுக்திக்கும் நியாயத்திற்கும் ஒத்ததானபடியால் எமது அபிப்ராயம் சூத்ரனுக்கு அதிகாரமின்மை என்பது உபபந்நம்—சரியாகும்.

பிரமிதாதி கரணம் (சேஷம் - பாக்கியுள்ளது) 1-3-6

முன் சொல்லப்பட்ட விஷயம் மீண்டும் தொடரப்படுகிறது. இவ்விதமாக இடையில் எழுந்த தேவதாதிகரணம் மத்வதிகரணம் அபசூத்ராதி கரணம் ஆகியவை முடிந்ததும் அவைகளும் நன்கு முடிக்கப்பட்டு மேல் சொல்லப்பட்டபடி பிருகிருதமான ப்ரமிதாதி கரணம் இதில் அங்குஷ்ட பரிமித (அளவுள்ள) புருஷன் ஜீவனு அல்லது பரமாத்மாவா) என்கிற விஷயம் மீண்டும் இங்கு ஆராயப்படுகிறது. இதில் சூத்ரக்காரர் இன்ளெரு காரணத்தையும் அங்குஷ்ட பரிமித புருஷன் பரமாத்மா தான் என்பதற்குக் கொடுக்கிருர் அதாவது பரமபுருஷன் பூத (இறந்த) பவ்ய (வரப்போகும்) காலத்திற்கு ஈசன் என்பதால் அங்குஷ்டமாத்ரன் பரமாத்மாவே.

சூத்ரம் कम्पनात् (1-3-40)

கம்பநாத் (1-3-40)

கம்பநாத் தேவர்களுக்கு நடுநடுக்கம்-பயம் அங்குஷ்ட மாத்ர புருஷனிடம் ஏற்படுவதால் அங்குஷ்டமாத்ரன் பரமாத்மாவே.

கடவல்லி 2.4-12 अङ्गुष्ठमात्रः पुरुषो मध्य आत्मनि तिष्ठति; அங்குஷ்டமாத்ர அளவுள்ள புருஷன் அவனுடைய ஆத்மாவினுள்ளேயிருக்கும் நடுவில் இருக்கிருன்; கட. 2-6-16 अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा அங்குஷ்ட புருஷன் எல்லோருக்கும்

அந்தராத்மா என்று; இவ்விதமாக இருவாக்யங்களின் மத்தியில் கட. வ. உ. 2-6-2 வருகிறது.

**यदिदं किञ्च जगत् सर्वं प्राणएजति निस्सृतम् । महद्भयं वज्रमुद्यतं य एतद्विदुरमृतास्ते भवन्ति । भयादस्याग्निस्तपति भयात् तपति सूर्यः । भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः-**

(பிராணன் எனப்படுவது அங்குஷ்டமாத்ரனிடம் தோன்றி வாழும் உலகங்கள் எல்லாம், உயரத்தூக்கின இந்திரனுடைய வஜ்ரத்தைப்போல, (இந்த பிராணனைக் கண்டு)பெரும் பயத்தாலே நடுங்குகின்றன. இவனிடமுள்ள பயத்தால் நெருப்பு சுடுகிறது. சூரியன் தினமும் உதித்து காய்கிறுன் இந்திரனும் வாயுவும் தம் தமது கடமைகளைச் செய்கின்றனர். ஐந்தாவதான யமனும் அவ்விதமே பயந்து தன் காரியத்தைச் செய்கிறுன் என்னும் மந்திரங்களில் பிராணன் எனப்படும் இந்த அங்குஷ்டமாத்ரனிடமுள்ள பயத்தால் எல்லாத் தேவதைகளும் பயந்து தங்கள் காரியங்களைச் செய்கிறுர்கள். ஸம்பூர்ண ஜகத் அக்னி சூர்யன் ஆகியோரும் கூட இந்த அங்குஷ்டமாத்ரனிடம் (பிராணனிடம்-பிராண சப்த புருஷனிடம்) எல்லோருடைய ஆத்மாவின் நடுவிலே இருப்பவனிடம், பயந்து இயங்குகிறுர்கள். அவனிடமிருந்து உண்டான மஹாபயநிமித்தம் ஏஜனம் कम्पन (நடுநடுக்கம்) என்று ஓதப்படுகிறது. இதன் அர்த்தம் இம்மாதிரி மஹத்தானபயம் - அவனுடைய ஆக்ஞையை மீறி நடந்தால் என்ன நடக்குமோ அதனுல் அந்த மஹாபயத்தினுல் - எப்படி உயரத் தூக்கப்பட்ட இந்திரனுடைய வஜ்ராயுதத்தைக் கண்டு யாவரும் பயப்படுவார்களோ அது போல உக்ரதேஜஸ்ஸுள்ள சாஸனத்திற்கு ஸம்பூர்ண ஜகத் நடு நடுங்குகிறது என அர்த்தம். கட. 1-6-3-भयादस्याग्निस्तपति அவனிடமுள்ள பயத்தினுல் அக்னி சுடுகிறது, என்கிறதிலும் ஏக அர்த்தம் (ஒரே பொருள்) महद्भयं वज्रमुद्यतम् உயரத்தூக்கின வஜ்ராயுதம் போல் இந்த இரண்டு வாக்யங்களும் முதல் வேற்றுமையில் இருப்பினும் ஐந்தாம் வேற்றுமையின் அர்த்தம் ஸித்திக்கிறது (அதனிடமிருந்து மஹத்பயம்) (மஹத்பயம் வஜ்ரம் உத்யதம் வேற்றுமையாக பிரயோகம். ஆயி

னும் இதை முதல் வேற்றுமையாக பிரயோகம் யிருப்பினும், ஐந்தாம் வேற்றுமையில் அர்த்தம்; எங்கனமெனில் மஹத: பயாத் வஜ்ராத் உத்யாத் இதனுல் அர்த்தம் யாதெனில் அவன் ஒரு மஹத்தான பயம் உயரத்தூக்கின வஜ்ரம் (போல்); ராமானுஜர் இதை (இம்மாதிரி அர்த்தத்தை) மறுக்கிருர்—ஐந்தாம் வேற்றுமையில் சொல்கிருர். (எவனிட மிருந்து)—எவனிடமுள்ள பயத்திஞல்.

இந்த மேலான பிரும்மத்தின் ஸ்வபாவம் பிரு. உ. 5-8-9ல் एतस्य वा अक्षरस्यप्रशासने गार्गी सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्टत: கார்க்கி இந்த அக்ஷரத்தின் மேலான நியமனத்தால் சூரியன் சந்திரர்கள் ஆகாயத்தில் நிலை நிற்கிருர்கள் (தரிக்கப்பட்டு விளங்குகிருர்கள்) இங்கே அக்ஷரம் மூலபிரகிருதி முதலான வற்றை தரித்து நிற்ப்பதாக ஓதப்படுகிறது. प्रशासनं உள் நுழைத்து நியமிப்பது தை. ஆ. 8ல்.

भीषाऽस्माद्वात: पवते भीषोदेति सूर्य: ।
भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चम: ॥

இந்த பரமாத்மாவினிடமுள்ள பயத்தாலே காற்று வீசுகிறது. சூரியன் உதிக்கிருன் அக்னியும் இந்திரனும், ஐந்தாமவனுன யமனும் இவனிடமுள்ள பயத்தாலே தம் தம் காரியங்களைச் செய்கின்றனர். இதில் தேவதைகளின் நடுக்கத்தை விளைவித்தல், சொல்லபடுகிறது இந்த பயத்தை உண்டு பண்ணுவது பரமாத்மாவுக்கே முடியும். ஆகவே புருஷோத்தமனுன நாராயணனே இம்மாதிரியான நியமன ஐஸ்வர்யத்தைப் பெற்றவனுனபடியால் அங்குஷ்டமாத்ரன் ஸ்ரீமந்நாராயணனே ஆகும்.

இன்னொரு காரணத்தாலும் அங்குஷ்டமாத்ர புருஷன் புருஷோத்தமனுகிற ஸ்ரீமந்நாராயணனுகும்.

ஸூத்ரம் ज्योतिर्दर्शनात् (1-3-41)

ஜ்யோதிர்தர்சனத் (1-3-41)

ஜ்யோதிர்தர்சநாத் - அங்குஷ்டமாத்ரனுக்கு மிகச் சிறந்த சோதியுள்ளதாகச் காண்பதாலும் அவன் பரமாத்மவே.

மேல் சொன்ன இரண்டு உபநிஷத் வாக்யங்களுக்கு நடுவிலே—(கட. 4-12&6-17ல்) அங்குஷ்டமாத்ரன் சொல்லப் பட்டிருப்பதிலே, இன்னொரு சுருதி வாக்யம் இருக்கிறது. (இந்த இரண்டு வாக்யங்கள் முன் ஸூத்ர ஆரம்பத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதற்கு நடுவிலே வரும் வாக்கியம். அதன் அர்த்தம் யாதெனில், பரப் பிரும்ஹத்திற்கு அஸாதாரணமாக ஸர்வ-தேஜஸ் ஒளிகளுக்குக் காரணமான தாய், எப்போதும் தன்னை விட மிகச் சிறந்த ஒளி ஒன்றும் இல்லாததாய், அந்த ஒளி பரமாத்மாத்மாவாகிற அங்குஷ்ட மாத்திரனுக்கே உள்ளதாக அங்குஷ்ட அளவுள்ளவனுக்கு ஜ்யோதிஸ் சொல்லப்படுதால்—(கட் 2-5-15)

**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्नि: । तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति -**

என்பதால், அந்தப் புருஷனிடம் சூர்யனும் சந்திரனும் நக்ஷத்திரங்களும் மின்னல்களும் ஒளி விடமாட்டா. அக்னியைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஒளி விடும் அப்புருஷனைப் பின் பற்றியே எல்லாம் ஒளி விடுகின்றன. அவனுடைய ஒளியாலேயே இவை எல்லாம் ஒளிவிடுகின்றன. (सर्वमिदं विभाति அதனுடைய அனுக்ரஹத்தாலே எல்லா வஸ்துக்களும் ஒளியிடுகின்றன.) (இங்கு சொல்லப்படுவது- तस्य भासा सर्वमिदं विभाति - பிரத்ய காத்மா கூட அவனுடைய அனுக்ரஹத்தால் தன் சொந்த தர்ம பூத ஞானத்தினுல் பிரகாசிக்கிறுன். கேவலம் ஞான மாத்திரமல்ல; ஞானத்தை உடையவனும் பிரகாசிக்கிறுன். இதேபடி, சூரியனும்

பிரகாசத்தை தனது குணமாகவும், ஒளியானது ஸ்வரூப மாகவும் இரண்டு விதமாக பிரகாசிக்கிருன் என அர்த்தம். இதி - इतश्चेति - என்கிற பதத்தால் - மேல் சொல்லப்பட்ட அர்த்தத்துடன் சூத்ரம் ஆரம்பமாகிறது. ज्योतिर्दर्शनात्).

இந்த மாதிரியே ஆதர்வணத்திலும் ஒரு ஸ்லோகம் இருக்கிறது. மு. 2-4-11-परं ब्रह्माधिकृत्यश्रूयते । परज्योतिष्टपवं च सर्वत्र परस्य ब्रह्मण: श्रूयते பிரும்மத்தைப் பற்றி இவ்விதமே சொல்கிறது.

மேலும் சா. 2-8-12-1-ல் परंज्योतिरूपसंपद्य स्वेन रूपेणाभि निष्पद्यते மேலான பரம் ஜ்யோதிசையடைந்து, (அந்த பிருஹ்மத்தை அடைந்து) முக்தாத்மா (அவன்) தன் ஸ்வயரூபத்தில் பிரகாசிக்கிருன். பிரு. 2-6-4-26) तं देवा ज्योदिषां ज्योतिरायुर्होपासतेऽमृतम् வாஸ்தவத்திலே, அந்த தேவதைகள் உபாஸிக்கிருர்கள்—பரமாத்மாவை (எவ்விதமெனில்) ஜ்யோதிஷ் களுக்கெல்லாம் ஜ்யோதி என்றும் அவரே அம்ருதம் என்றும் உபாஸிக்கிருர்கள். சா. 23-13-7 अथ यदत: परो दिवो ज्योतिर्दीप्यते இப்போது அந்த வெளிச்சம் மேலான திவோ லோகத்திற்கும் மேலே பிரகாசிக்கிறது. ஆகையால் अङ्गुष्टप्रमित: परं ब्रह्म பரமாத்மாவே என்பது சித்தாந்தம்.

अर्थान्तरत्वादिव्यपदेशाधिकरणम् (1-3-10)

आकाशोऽर्थान्तरत्वादिव्यपदेशात् (1-3-42)

ஆகாஸோ அர்த்தாந்தரத்வாதிவ்யபதேஸாத் (1-3-42)

அர்த்தாந்தரத்வாதி வ்யபதேஸாத் - நாமரூபங்களையுடைய ஜீவனைக் காட்டிலும்) வேறுபட்டவனுகவிருக்கை - முதலான தன்மைகளைக் கூறுவதாலே - ஆகா ஸ: - ஆகாசம் எனப் பட்டவன் பரமாத்மாவே (ஆகாச சரீர பரமாத்மாவே). (நாம ரூபயோர்நிர்வஹிதா என்பதாலேயும்) சாந். உ. 8-24-1ல்

आकाशो वै नाम नामरूपयो निर्वहिता, ते यदन्तरा । तद् ब्रह्म तदमृतं स आत्मा - इति ।

வாஸ்தவத்திலே ஆகாசமே நாமரூபங்களை வித்யாஸம் செய் பவன் (கர்த்தா-நிர்வஹிப்பவன்); இந்த நாமரூபங்களுக்குள் எது நடுவில் இருக்கிறதோ, அவையில்லாமலிருப்பது எதுவோ) அதுதான் பிருஹ்மம் - அது அம்ருதம் - அது ஆத்மா. இங்கே சம்சயம் ஆகாச சப்தத்திஞல் எது காட் டப்படுகிறது? முக்தாத்மாவா அல்லது பரமாத்மாவா? எது சரியாகும் முக்தாத்மா என்பதால் எப்படி? சா. உ. 8-13-1

## अश्व इव रोमाणि विधूय पापं चन्द्र इव राहोर्मुखात् प्रमुच्यय धृत्वा शरीरमकृतं कृतात्मा ब्रह्मलोकमभि संभवामि -

(குதிரை மயிர்களை உதறுவது போலும், சந்திரன் ராஹுவின் முகத்திலிருந்து விடுபடுவது போலும், சரீரத்தை உதறி விட்டு கிருதார்த்தஞய் நித்யமான பிருஹ்ம லோகத்தை அடையக் கடவேன். இதில் முக்த ஜீவனைப் பற்றிய ப்ரஸ் தாவம் உள்ளது. அதற்கடுத்தாற்போல ते यदन्तरा எது நாம ரூபங்களுக்கு நடுவிலிருக்கிறதோ என்பதால் முக்தஜீவனை முந்தி ஸம்சாரதசையிலிருந்த பத்தஜீவன் இப்போது நாம ரூபங்களை விட்ட முக்த ஜீவன் சொல்லப்படுகிருன். மேலும் ஓத்ப்படுகிறது - नामरूपयो निर्वहिता நாமரூபங்களை வித்யாஸப் படுத்துவது நிர்வஹிப்பது ஆகாசம்; இதஞல் முக்தனையே (முந்தியிருந்த பத்தனை-இப்போதுள்ள முக்தனையே) இங்கு சொல்லப்படுகிறது. இப்போது அந்த ஜீவன் முக்தன், நாம ரூபங்களை விட்டபடியால் (நாம ரூபயில்லாமலிருப்பது எதுவோ - அதுவே பிரும்மம் அம்ருதம், ஆத்மா என்று சொல்லப் படுகிறது - आकाशो वै नामनामरूपयोर्निर्वहिता-ते यदन्तरा। तद्ब्रह्म तदमृतं स आत्मा - என்கிற வாக்யத்தின் பின்பகுதியில் அந்த முக்தனே தேவாதி ரூபங்கள் நாமங்களை விட்டு விட்ட படியால் அவனுக்கே நாமரூபங்களற்ற அவனுக்கே - ஸாம் ப்ரதிகி அவஸ்தா யேற்படுகிறது (மிக மிக ஜ்யோதிஸ் உள்ள குறைவுபடாத வெளிச்சம் ஏற்படுகிறது. தர்மபூத ஞானத்திஞல் எங்கும் பிரகாசிக்கிருன். அதஞல் तद्ब्रह्म तदमृतं என்று கூறப்படுகிறது. ஆகாசசப்தமும் அதிலேயும்கூட, குறைவுபடாத பிரகாசயோகம் (சேர்க்கை) யேற்படுகிறது.

இப்படிச் சொல்லலாம்—இந்த வாக்யம் தஹராகாஸ வாக்ய சேஷத்துடன் ஒத்து வருகிறது. (சா. உ. 8-1 to 6) அதே தஹராகாசம் இந்த ஆகாசமே தான் (முக்தாத்மா) அங்கே தஹராகாசத்தை பரமாத்மாவென்று முன்னுலே நிச்சயிக்கப்பட்டதே என்று சொல்வாயாகில், அதற்கு நாம் பதில் சொல்வது, அவ்விதம் சொல்வது சரியில்லை. பிரஜா பதியின் வாக்யம் நடுவிலே இந்த சுருதிக்கும் தஹராகாசத் திற்கும் நடுவே வருகிறது. அந்த பிரஜாபதி வாக்யத்திலே, பிரத்யகாத்மாவிற்கு முக்தி அவஸ்தை முடிவிலே யேற்படு படுகிறது. அந்த முக்ததசையில் அவன் பாபங்களை உதறி விட்டு (विधूय पापं) முக்தனுகிருன் ஆகையால் ஆகாசம் என் பது முக்தாத்மாவாகும்.

இவ்விதம் சொல்லப்படுமாகில் பதில் நாம் சொல்கிறும் आकाशोऽर्थान्तरत्वादिव्यपदेशात् பிரு. சூத்ரம் (1-3-42) நாம ரூபங் களை வகிக்கிற ஜீவனைக் காட்டிலும் வேறுபட்டவனுயிருக்கை முதலான தன்மைகள் ஒதப்பட்டதால் ஆகாசம் பிரஸித்த ஆகாசமல்ல பரமாத்மாவே ஆகும். आकाश: பரபிரும்மம் என்பது எப்படி अर्यान्तरव्यपदेशात् வேறுபட்டவன் பத்தஜீவ-னுக்கு நாமரூபங்கள் உண்டு அந்த ஜீவனைக் காட்டிலும் வேறுபட்டவன் அது என்ன வ்யபதேசம்? आकाशो ह्वै नाम रूपयोर्निर्वहिता நாமரூபங்களை வித்யாஸப்படுத்துபவன் ஆகா சம்; ஆகவே அந்த ஆகாசம் ஜீவனைவிட வேறுபட்டவன்; பத்த முக்த உபய அவ்ஸ்தைகளில் இருக்கும் பிரத்யகாத் மாவைவிட (ஜீவாத்மாவைவிட) வேறுபட்டவன். இங்கு பேதம் காட்டப்படுகிறது. ஜீவனைவிட வேறு என்றும் அதறகு நாம ரூபங்களை வித்யாஸப்படுத்தும் சக்தி ஒதப்படு கிறது. பத்த அவஸ்தையில் ஜீவன் கர்மாவினுல் நாமரூபங் களை அடைகிருன், அவனுக்கு நாமரூபங்களை வித்யாஸப் படுத்தும் சக்தியிராது, அதனுலே முக்தி அவஸ்தையில் ஜகத் வ்யாபாரம் அஸம்பவம் (யேற்படாது.) ஈஸ்வரனுக்குத்தான் இது உண்டு, ஸகல ஜகத் நிர்மாண துரந்தரன் உலகங்களை உண்டாக்குவதில் மிக்க பலமுள்ள கர்த்தா); அதனுல் நாம ரூபங்களை வித்யாஸப்படுத்தல் கர்மானு குணமாக சுருதி

யிலே யேற்பட்டிருக்கிறது. எங்கனமெனில் சா. உ. 6-3-1 अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य-नामरूपे व्याकरवाणि (இந்த ஜீவனுடன் ஆத்மாவாகிற நான் உள் நுழைந்து நாமரூப வ்யாகரணம் செய்கிறேன். மு. உ. 1-1-9ல் यः सर्वज्ञः सर्ववित् यस्य ज्ञानमयं तपः। तस्मादेतद् ब्रह्मनामरूपमन्नं च जायते எவன் எல்லாவற்றையும் பொதுவாக அறிகிருனே எவன் விசேஷமாக எல்லாவற்றையும் தெரிகிருனே; எவனுடைய ஞானம் தபமாகவிருக்கிறதோ அவனிடமிருந்து உண்டாகியது வித்யாஸப்படுத்தப்படாத ஸ்ருஷ்டியும் அன்னமாகிற பிருதிவியும்; ஆத்மாவாகிற ஜீவன் நாமரூபத்தை வகிப்பவன் புரு. சூக்தம் सर्वाणि रूपाणि विचित्य धीरो नामानि कृत्वाऽभिवदन् यदास्ते இத்யாதிகளில் ஸர்வக்ஞுன பரமாத்மா எல்லாப் பிராணிகளையும் ஸ்ருஷ்டிக்கிருன் அவைகளுக்கு நாமரூபங்களைக் கொடுக்கிருன். அந்தப்பெயர்களால் அழைக்கப்பட்டு விளங்கிக் கொண்டிருக்கிருன், ஆகவே நாமரூபம் வ்யாகரணம் பிரும்மத்துக்கு தான் சரியாகும், ஏனெனில் ஜீவனை விட வேருனபடியால். அதாவது ஜீவன் நாமரூபங்களை வகிப்பவன்—அவன் நிர்வஹிப்பவனுவதில்லை. முக்ததசையிலும் அவன் நிர்வாஹகன் இல்லை. பரமாத்மாவே புருஷ சூக்த வாக்யத்திஞல் நாமரூபம் செய்பவஞக ஓதப்படுகிருன், ஆகையால் பரமாத்மா என்பது ஸித்தம்.

மேலும் நாம் விளக்குகிறோம் ते यदन्तरा நாமரூபங்களுக்கு நடுவிலே यत् तो अन्तरा யத் ஆகரசம்; யஸ்மை காரணுத் ஆகாசம்; ஸ்ரீபாஷ்யத்திலே வேறு ஒன்று காட்டப்படுகிறது யஸ்மாத் (காரணுத்) ஸ: ஆகாச: தே அந்தரா;) இந்த விஷயத்தை விளக்குகிறது. यस्मात् अयं आकाशोनामरूपे अन्तरा ஆகாசம் நாமரூபங்களின் நடுவில் இருந்து கொண்டு யாதொரு மாறுதலுமின்றி அவைகளில் வேறுபட்ட தனியானதத்வமாக விருக்கிறது. அதன் காரணத்தால் ஆகாசம் (அல்லது பிருஹ்மம்) காமரூப வ்யாகரணம் செய்பவன். (அர்த்தாந்தர பூதன்)-तस्माद् तयोः (நாமரூபங்களை) निर्वोढा (நிர்வஹிப்பவன்) (நாமரூபங்களின் ஸ்பர்சம் இல்லை. இவன் ஜீவனை விட வேருனவன்). அவனுக்குத் தான் இயற்கையிலேயே

அபஹத பாப்மத்வாதி குணங்களும் ஸத்ய சங்கல்பத்வத்திஞல் யேற்படும் நிர்வஹிக்கும் தன்மை என்று அர்த்தம். ஆதி சப்தத்திஞல் (அர்த்தாந்தரத்வாதி) பிருஹ்மத்வம் எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவாகவிருக்கும் ஆத்மத்வம், அம்ருதத்வம்-காட்டப்படுகிறது. பிருஹ்ம சப்தம் நிருபாதிகமாகவே தானும் பெரியது (बृहत्त्वं); தன்னை அண்டினவரையும் பெரியவஞக் குகையும் காட்டும் சப்தமாகும். இந்த சப்தம் பரமாத்மாவுக்கு சரியாகும். இவைகளால் இங்கே आकाश - பரமேவ பிருஹ்மமாகும்.

மீண்டும் சொன்னதைச் சொல்வோம் - धूत्वाशरीरम् - சா. 2-8-14-1) இந்த தேகத்தை உதறித்தள்ளிவிட்டு முக்தன் இங்கு அடுத்துவரும் பிரகரணத்திலே (பிரகிருதத்திலே) சொல்லப்படுகிருன் - என்பது சரியில்லை - ब्रह्मलोकमभिसंभवामि - நான் பிரும்ம லோகத்தை அடைகிறேன். (சா. 2-8-14-1) என்பதால் பரமாத்மாவே அநந்தர பிருகிருத்தில் சொல்லப்படுகிருன். முக்தனுக்கு பரபிரும்மமே அடைய வேண்டியவன் என்று காட்டப்பட்டாலும், அடைகிறவன் ஜீவஞகவும் சொல்லப்பட்டதாலே, அடைகிற ஜீவனுக்கு நாமரூப நிர்போடத்வம் (நிர்வஹிக்கும் தன்மை) ஏற்படாத காரணத்திஞலே பர பிரும்மமே இந்த பிரகிருதத்தில் விஷயமாகும் - ஜீவனல்ல. (முக்தனுமல்ல).

ஆயினும் பிருகிருதத்திலே ஆகாசசப்தம் தஹராகாச சப்தத்தை அறிவுறுத்துமாகில் பிரஜாபதி வாக்யத்திஞலே (இந்த வாக்யம் தஹராகாசத்தை உபாஸிப்பவனின் ஸ்வரூபத்தைச் சொல்லி அதையொட்டியுள்ள தூத்வா சரீரம் பிருஹ்ம லோகம் அபிஸம்பவாமி (சரீரத்தைவிட்டு பிருஹ்ம லோகத்தை அடையக் கடவேன் என்கிற வாக்யமும் வருகிறது. இதஞல் பிரஜாபதி வாக்யத்திஞலே உபாஸக ஸ்வரூபத்தை தஹராகாசத்தை உபாஸிப்பவனின் ஸ்வரூபத்தைச் சொல்லி, அதஞல் தஹராகாஸமே உபாஸ்யம் அது தான் அடையப்பட வேண்டிய வஸ்துவாக ஓதப்படுகிறது. இவ்விதம் சொல்வதுதான் சரியாகும் (முக்தனைச்

சொல்லவில்லை) ஆகாசசப்தமும் எங்கேயும் பிரத்யகாத் மாவைச் சொல்லுவதாகக் காணப்படவில்லை. अतोऽत्र आकाश: பரபிரும்மமே என்பது சித்தாந்தமாகும்.

மேலும் சொல்லப்படும் பிரத்யகாத்மாவாகிற ஜீவனை அவனைவிட ஆத்மா வேறு ஒன்று என்பது தனித்து இருப் தாகவில்லை. அதாவது ஆத்மா வேறு ஜீவன் வேறு என்று சொல்லப்படவில்லை. வேதாந்தங்கள் சொல்வது ஐக்ய உபதேசம்—ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும்; மேலும் அது த்வைதத் தன்மையை நிஷேதிக்கிறது (இங்கு ஐக்ய உப தேசம் ஸ்வரூப ஐக்யமா சரீர ஆத்மபாவமா?); பிரத்யகாத்மா சுத்த (முக்த) தசையில் பரமாத்மா, பரமேஸ்வரர் என்றும் காட்டப்படுகிறான். ஆகையால் பிருகிருதத்திலே முக்தாத் மாவுக்கு யேற்படக்கூடிய வேறுபட்ட தன்மை (அர்த்தாந் தரம்) அதனுல் கிடைப்பது பிரும்மலோகம் அந்த அடைய வேண்டிய உலகம் அடைகிறவனைவிட (முக்தனைவிட) வேறல்ல. ஆகவே அவனே பிரும்மம் அதாவது பிரும்ம லோகமாகிறபடியால் அந்த முக்தாத்மாவே ஆகாஸம் என்று அழைக்கப்படத் தகுந்தவன் நாமரூப வ்யாகரணம் செய் பவன். இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே பதில் அளிக் கிறார் அடுத்த சூத்ரத்தில்.

(இங்கு சொல்லப்படுவது உபாஸக ஜீவனைக் கூறி அவனுல் அடையத்தக்க பிரும்மம் (அல்லது பிரும்மலோகம்) எனக் கூறுகிறது. ஆகையால் முன் வாக்யத்தில் பிருஹ்ம மத்தின் பிரஸ்தாவம் உள்ளது. ஜீவனையும் அங்கே கூறி யிருந்தாலும் முற்கூறியபடி நாமரூப வ்யாகரணம் ஜீவனுக்கு வர்ஜமாதலால், இந்தப் பெருமைகள் புருஷசூக்த பிரதிபாத்ய நாராயணனுக்கு ஒட்டும், அவனே தான் ஆகாசம் என விளங்குகிறான்)

(ராமானுஜருக்கு பூர்வபக்ஷி-இங்கு அத்வைதி, ஸ்வரூப ஐக்யம் சொல்பவன் தத்வமஸி இத்யாதி வாக்யங்களில்; இதை மறுக்கும் த்வைத பரவாக்யங்களும் உள. (பலவாக

வும் - பலவகைப்பட்டதாகவும் இங்கே ஒன்றுமில்லை பிரு. உ. 4-4-19; ராமானுஜர் சூத்ரங்களின் அர்த்தத்தாலே அத்வைத வாதத்தைக் கண்டிக்கிறார். (தர்மங்களைப் பரமாத்மாவுக்கு உபதேசிப்பதாலே). பூர்வபக்ஷி சொல்வது பிருஹ்மம் அல்லது பிருஹ்ம லோகம் என்பதும் முக்தனும் ஒன்றே - ஸ்வரூப ஐக்யம் என்கிறான். முக்த தசையில் சுத்தஜீவன் பரமாத்மா பரமேஸ்வரர் மேலான பிரும்மம் என்று கருதப் படுகிறான், நித்ய சுத்தபுத்த சச்சிதாநந்தம் இது அத்வைதி சொல்வது இந்த ஆட்சேபத்தை மறுக்கிறது அடுத்த சூத்ரம் சூத்ரக்காரரால் சொல்லப்படுகிறது.

सुषुप्त्युत्क्रान्त्यो र्भेदेन (1-3-43)

சூத்ரம் ஸுஷுப்தியுத்க்ராந்தியோர் பேதேந (1-3-43)

ஸுஷுப்தி உத்க்ராந்தயோ: - (ஜீவன் ) தூங்கும் நிலையிலும் மரணத்தின் போதும் வெளிக்கிளம்பும் நிலையிலும் பேதேந - வெவ்வேருகவே (ஜீவனையும் பரமாத்மாவையும் கூறப்படுவதால் ஆகாசம் ஜீவனாகாது. பரமாத்மாவே ஆகும்.)

வ்யபதேசாதிதி வர்ததே - முந்தின சூத்ரத்திலுள்ள வ்யபதேச என்கிற பதம் இதில் சேர்த்துக் கொள்ள வேண்டியது. சுஷுப்தி-மரணம் இந்த தசைகளில் வெளிக்கிளம்பும் ஜீவன் வேறுபட்டவனாயிருக்கை अर्थान्तरत्वेन - (நாமரூபங்களை உடைய ஜீவனை விட வேறுபட்டவன் என்பதால் பரமாத்மா காட்டப்படுகிறான். எங்கனமெனில் பிரத்யகாத்மாவிற்கு நடுவில் (அந்தராத்மாவாக) அர்த்தாந்தரபூதனாக சொல்லப் படுகிறான்.

(यत् यस्मात् कारणात् ते नामरूपे अन्तरा मुक्तवान् भवति । तत् तस्मात् ब्रह्मभवतीत्यर्थ इह विविक्षित:)

சித்தாந்தத்தில் இந்த அர்த்தம்).

வாஜஸேனக (பிரு. உ. 6-3-7)ல் कतम् आत्मेति योऽयं विज्ञानमयः प्राणेषु ஆத்மா என்பது யாது? அவனே அந்த புருஷனே யாகும் – எவன் பிரகாசமயமாக பிராணனுக்கு அருகேயிருக்கிறானோ என்று ஜீவனைச் சொல்லிற்று. இந்த பிரகிருதத்தில் ஜீவனே சுஷுப்தி அவஸ்தையில் ஒன்றையும் அறியாதவனாகவும் ஸர்வக்ஞனான பரமாத்மாவினால் தழுவப் படுகிறான், ஒருவகையான சேர்த்தி பெறுவதாகவும் என்றும் சொல்லப் படுகிறான். (பரிஷ்வங்கம் आम्नायते); பிரு. உ. 3-12ல் प्राज्ञेनाऽऽत्मना संपरिष्वक्तो न बाह्यं किञ्चन वेद, नान्तरं - ஸர்வக்ஞனான பரமாத்மாவினால் தழுவப்படும்போது, அவன் ஒன்றையும் வெளி விஷயமோ - உள்விஷயமோ ஏதும் அறிவதில்லை அதே படி உத்க்ராந்தி தசையிலும் பிரு. உ. 6-3-35)ல் प्राज्ञेनाऽऽत्मनाऽन्वारूढ उत्सर्जन् याति - ஸர்வக்ஞனான பரமாத்மாவினால் மேல் ஏறிச் செல்லப்பட்டவனாக அந்த ஜீவன் வெளிக்கிளம்பி - தேகத்தை விடுகிறான். அந்த ஜீவன் ஒன்றையும் அறிவதில்லை என்று இருதசைகளில் சொல்லப்பட்டதால், சுஷுப்தி மரண தசைகளில் அவனே எப்படி தழுவப்பட்டவனாகவும் - மேல் ஏறப்பட்டவனாகவும் ஆகிறான்? அதனால் ஸர்வக்ஞனாகும் போது தன்னைத் தானே தழுவிக் கொள்வதும் - தன்னோடே சேர்த்தி கூறுவது ஏற்படாது, ஏனெனில் இன்னொரு ஆத்மாவிற்கும் (க்ஷேத்ரக்ஞாந்தரேண விருக்கும்) பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் ஸர்வக்ஞத்வம் யேற்படாது.

ஆகவே ஆகாசம் பரமாத்மாவே

அடுத்த சூத்ரத்தில் சூத்ரக்காரரே பிரத்யகாத்மாவில் அர்த்தாந்தர பூதனாகவிருப்பது பரமாத்மா தான்—என்று சொல்கிறார்.

சூத்ரம் पत्यादिशब्देभ्यः (1-3-44)

பத்யாதி சப்தேப்ய: (1-3-44)

பத்யாதி ஸப்தேப்ய: - பதி முதலான சப்தங்களால் பரமாத்மாவே வழங்கப்படுகிறான். ஆகவே பரமாத்மா ஜீவனிலும் வேறானவனே.

இந்த சுஷுப்தி - மரணதசைகளில் ஜீவன் பரமாத்மா விஞல் தழுவப்படுகிருன் - இங்கே பரமாத்மாவை பதி (ஆள் பவன்) என்கிற சப்தத்தால் காட்டப்படுகிறது. பிரு. 6-4-21

**सर्वस्य वशी सर्वस्येशान: सर्वस्याधिपति:-स न साधुना कर्मणा भूयान्, नो एवा साधुना कनीयान् । एष सर्वेश्वर एव भूताधिपतिरेष भूतपाल: एष सेतुर्विधरण एषां लोकानामसंभेदाय । तमेतं वेदानुवचनेन ब्राह्मणा: विविदिषन्ति...एतमेव विदित्वा मुनिर्भवति । एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्त: प्रव्रजन्ति —**

எல்லோருக்கும் பதியாக பரமாத்மாவிருக்கிருர் - அவர் யாவரையும் அடக்குபவராகவுமிருக்கிருர். தன் வசத்தில் யாவரையும் வைத்திருப்பவராகவும் இருக்கிருர். ஸர்வருக்கும் அதிபதி அவர்ஸாது கர்மத்திஞல் பெரிதாகிறதில்லே. கெட்ட செய்கையால் தாழ்வையும் அடைகிறதில்லே. எல்லோருக்கும் எல்லா பூதங்களுக்கும் பதி. அவரே காப்பாற்றுபவர்; அவரே ஸேதுலாகவும் (உபாயமாகவும்) ஆதாரமாகவுமிருப்பவர். அதஞல் ஒருவரும் கலக்கமடைகிறதில்லே. பிராம்மணர்கள் வேதங்களே ஓதி அவரை அறிவதில் இச்சை கொள்கிருர்கள். அவரை அறிவது மாத்திரத்தாலே - ஒருவன் முனியாகிருர். அவரை அடைவ்தற்கு இச்சைப் படுவதால் - ஸந்யாஸிகள் தங்கள் தங்கள் உலகப்பற்றெல்லாம் விடுகிருர்கள் (4-4-22 பிரு. உப.) பிரு. 3—4—24 सवा एष महान् अज आत्माऽन्नादो वसुदान: அவரே பெரியவர் பிறப்பில்லாதவர் அன்னம்தனம் கொடுப்பவர், எவன் மூப்பிலிருந்து விடுபட்டும் மரணத்திலிருந்து விடுபட்டும் பயத்திலிருந்தும் விடுபட்டவரோ அவரேபிருஹ்மம் अजरोऽमृतोऽभयो ब्रह्म என்று (பிரு. உ. 4-25);இத்தகைய லக்ஷணங்களாகிற ஸர்வாதிபதித்வம் ஜகத் ஆதாரத்வம் ஸர்வேஸ்வரத்வம் இவை பரமாத்மாவுக்குப் பொருந்தும். முக்த அவஸ்தையிலும் கூட ஜீவனுக்குப் பொருந்ாது. ஒரு பொழுதும் யேற்படுபடுவதில்லே. ஆகவே முக்தாத்மாவைவிட வேறுபட்டவன் अन्तरभूतो பரமாத்மா நாமரூபங்களே நிர்வஹிதா ஆகாச சப்தத்திஞல் காட்டப்படு

கிறார். (அதாவது ஆகாச—நாமரூபங்களை உண்டுபண்ணு வதால் முக்தாத்மாவைவிட வேறானவன் அவன் தனிப்பட்ட தத்வமாகிற பரமாத்மா நாமரூப நிர்வஹிதா.)

ஆகவே ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் ஐக்ய வ்யப தேசம் ஸர்வஸ்ய (எல்லா) சித் அசித் வஸ்துக்களுக்கு ஆத் மாவாகவும் அவைகளைச் சரீரமாகவுடைய பிரும்மம்; கார்யத் வேந எல்லா சேதன அசேதன வஸ்துக்கள் (எல்லா உலகங் களும்) பரமாத்மாவின் காரியமாதலால் அதற்கு பிரும்மமே காரணமாதலால் तदात्म्यकत्वायत्त इति பிரும்மமே எல்லாவற்றிற் கும் ஆத்மாவாதலால் (அவை அவனுக்கு சரீரமாதலால்) நமது சித்தாந்தத்திலும் ஐக்ய வ்யபதேசம் காரிய காரண ஐக்யமாகிறது. तदात्म्यकत्वायत्त इति இந்த விஷயம் முன்பு சூத்ரம் 1-2-1ல் ஸ்தாபிக்கப்பட்டது. ஸர்வத்ர பிரஸித்தோப தேஸாத் என்பதில் விளக்கப்பட்டது. ஜகத் காரணத்வம் ஸர்வாத்மகத்வம் பரபிருஹ்மமே என்பதாயிற்று.

சா. உ. 3-24-1ல் सर्वं खल्विदं ब्रह्म तज्जलान् इत्यादि (இது எல்லாம் பிருஹ்மமே எதனால் இவை தோன்றி வாழ்ந்து மறைகின்றதாய்; சாந்தியுடையவனாக ஒருவன் அவனை உபா ஸிக்கக்கடவன். இம்மாதிரி வாக்யங்களால் முன்னமே காட் டப்பட்டது. இதனாலே த்வைதமும் நிஷேதிக்கப்பட்டது. இதற்கு முக்ய காரணம் காரண காரிய ஐக்யம் (சரீர சரீரி. சரீர ஆத்மபாவம்) பிரும்மம் காரணம் ஜகத் காரியம். (அத் வைதி பிரகாரம் பிரும்மத்துக்கும் ஜீவனுக்கும் ஸ்வரூப ஐக் யம்) நமக்கும் सत्य सः பிரும்மமும் ஜகத்தும் ஐக்யம் இந்தவித மாக நமது பக்ஷம் ஒன்று இரண்டு மூன்றும் பாதங்களில் தோஷமில்லாதது அநவத்யம் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் சுருதிகளால் ஓதப்படுவதாலும், ஜீவன் பரமாத்மாவுக்கு சரீரமாகி பரமாத்மா ஆத்மாவாகிறான் என்கிற எமது பக்ஷம் அநவத்யம் (அர்த்தாந்தரத்வாத் பேதம், நாமரூப நிர்வாஹத் வம் என்பதாம்)

(ராமானுஜர் வ்யபதேசதி என்பதை பூர்வ சூத்திரத்தி லுள்ளதை இங்கு சேர்த்துக் கொள்ளச் சொல்வதின் நோக்கம்

இங்கு பூர்வபக்ஷி அத்வைதி சுருதி பிரமாணம் காட்டுகிறுன். பிரும்மத்திற்கும் ஜீவனுக்கும் ஐக்யம் தத்வமஸ் யாதி வாக்யங்களால் காட்டுகிறுன்; (2) த்வைத நிஷேத வாக்யங்கள் இங்கு ஒன்றுமில்லை பலவாகவும் பலவகைப்பட்டதாகவும் ஒன்றுமில்லை (பிரு. உ. 4-4-19); ராமானுஜர் அத்வைதபக்ஷத்தை இரண்டு சூத்ரங்களாலே கண்டிக்கிறுர்.

ஸர்வஸ்ய அதிபதி—பதி என்கிற சப்தம் சூத்ரத்தில் உள்ளது. பஹூவ்ரிஹி ஸமாஸத்தால் பத்யாதி என்பதற்கு அர்த்தம் சொல்கிறுர். பஹ்வ்ரிஹியினுல் பதிக்கு பின்னுல் வரும் எல்லாம்; தத்புருஷத்தினுல் பதிக்கு முன்னுல் வரும் எல்லாமும்; பதிம் விஸ்வஸ்ய—மஹாநாராயண சூக்தம் பரமாத்மா; என்கிற பதத்தால் ஆரம்பிக்கப்படுகிறது.

तदेवं विस्पष्टजीवलिङ्गक - जगत्कारणविषयवाक्यानामपि
सिद्धं तद्विलक्षणब्रह्मपरत्वम्

ஸ்ரீபாஷ்யம் முதல் அத்யாயம், மூன்ரும் பாதம் முற்றிற்று.

சுபமஸ்து.

ஶ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம:

ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்த தேசிக

யதீந்திர மஹா தேசிகாய நம:

பிரும்மவித்யா - 3-ம் பாகம் தொடர்ச்சி

ஸ்ரீ பகவத்ராமாநுஜ விரசிதே ஸ்ரீ பாஷ்யயே

முதல் அத்யாயம் 4-ம் பாதம்

ஆநுமானிகாதிகரணம் (1-4-1)

**अनुमानिक मप्येकषामिति चेन्न—शरीररूपक विन्यस्त गृहीतेः दर्शयति च— (1 4-1)**

**ஆநுமானிகப்யே கேஷாமிதி சேந்ந—சரீர ரூபக விந்யஸ்த க்ருஹீதேர் தர்ஸயதி ச- (1-4-1)**

ஏகேஷாம் - கட வல்லியில் ஆநுமாநிகம் அபி - அவ்யக்தம் எனப்படும் மூல ப்ரகிருதியும் (ஜகத் காரணம் எனச் சொல்லப் படுகிறதே) இதிசேத் என்னில், ந - அவ்விதம் ஜகத் காரணம் சொல்வது சரியில்லை - சரீர ரூபக விந்யஸ் தக்ருஹீதே:— (தேர் தேர்ப்பாகன் என்கிற) உருவகத்தில் தேராக) உருவகப் படுத்தப் பட்ட சரீரத்தையே (அவ்யக்த மென்று) எடுக்கப்படுவதாகை யால், தர்சயதி-ச (கடவல்லியின் வாக்ய சேஷமும் காட்டுகிறது).

(அநுமானிக - பிரதானம். அவ்யக்தம் - பிரதானமில்லை. அது உருவகதமக சரீரத்தைச் சொல்வதாக; அதற்கு சுருதி பிரமாண மும் காட்டப்படுகிறது).

ஸ்ரீ பாஷ்யம் :—

முதல் அத்யாயம் - முதல் அதி கரணத்தில் (ஜிக்ஞாஸாதி கரணத்தில்) சொல்லப்பட்டது. பரம புருஷனே பரம புருஷார்த்த மாக - மோக்ஷ ஸாதனமாக அடைய வேண்டியது. அதற்கு ஜிக்ஞாஸ்யம் (விசாரிப்பதற்கு) யேற்பட வேண்டும். இரண்டாவது அதிகரணத்தில் ஜகத் ஜன்மஸ்திதி லய காரணம் பிருஹ்மம் என்று லக்ஷணம் சொல்லப்பட்டது, (1-3) பிறகு அசித் வஸ்துக்களான பிரதானம் போன்றவைகளிலிருந்தும், சேதனர்களாகிற ஜிவர்களிலிருந்தும் விலக்ஷணமான (வேறான) பரம புருஷன் நிரஸ்தஸமஸ்த ஹேயகந்தம் (யாதொரு ஹேய வஸ்து ஸம்பந்தமில்லாதவனும்-தோஷமற்றவனும்) அதே படி ஸர்வக்ஞ, ஸர்வசக்தி ஸத்ய ஸங்கல்பாதி ஸமஸ்த கல்யாண குணத்கமுனை வும் 1-4)ல் அந்த பிருஹ்மம் எல்லாப் பிராணிகளுக்கும் ஸர்வ அந்த ராத்மாவாக விருப்பவனும், நிரங் குசமான ஐஸ்வர்ய - கல்யாண குண சம்பத் பெற்றவன் என்று காட்டப்பட்டது. இந்த அதி கரணத்தில் கபில மஹரிஷியினல் தந்திர ஸித்த அப்பிரும்மாத்மக (நிரீஸ்வர சாங்க்யன்) பிரதானம் புருஷாதி - இவர்களை விஷய மாகக் கொள்வதாலே - பிரதானம் ஜகத் காரணம் என்று சொல்வதாலே - சில வேத வாக்யங்கள் பிரதான புருஷர்களை விளக்குவதாகவும் - இந்த பிரதானம், புருஷன் அப்ருஹ்மாத்மக மக விருப்பதாயும், இந்தவிதமாக கபில மஹரிஷியினல்ஸ்தாபிக் கப்பட்ட சாங்கிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருப்பதால்-சந்தேகம் ஜகத் காரண விஷயத்திலே ஏற்படுகிறது. இந்த சங்கை பரிகரிக் கப்பட்டு – மீண்டும் பிருஹ்மம் ஒன்றே ஜகத் காரணம் என ஸ்தாபிக்கப்படுகிறது.

(இங்கு சொல்லப்படுவது - முதல் பாதத்தில் மிகவும் தெளி வில்லாத ஜீவாதி லிங்கங்களை உடைய வாக்யங்களும்; இரண்டா வது பாதத்தில் தெளிவில்லாத ஜீவாதி லிங்கங்களையுடைய வாக்யங்களும்; மூன்றுவது பாதத்தில் தெளிவான ஜீவாதி லிங்கங்களை உடைய வாக்யங்களும் விசாரிக்கப் பட்டன. இந்த நான்காம் பாதத்தில், மிகத்தெளிவான ஜீவாதி லிங்கங்களை யுடைய வாக்யங்கள் ஆராயப்படுகின்றன. ஆகவே இந்த நான்கு பாதங்களிலும், ஜீவன் - அசித் இவற்றின் லிங்கங்கள் (அடை-யாளங்கள்) (மேன் மேலே தெளிவாயிருக்கும் வேத வாக்யங்கள் ஆராயப் படுகின்றன என்ற கருத்து).

இப்படி மிகத் தெளிவான ஜீவாதி லிங்கங்களை யுடைய வாக்யங்களை விசாரிக்கையாலே - முன் இரண்டு பாதங்களிற் போல இப்பாதத்திலும் ப்ருஹ்ம லக்ஷணம் கூறப்படுவதால் - சித் அசித்களிடம் அதி வியாப்தி யேற்படாது எனக் காட்டப்படு கிறது.

மேலும் முந்தின அதி கரணத்தில் ஜீவ (ஜகத்) பிரும்ம ஐக்யம் சொல்லப்பட்டு - ஜீவனை விடவேறானவன் பரமாத்மா எனக் காட்டப்பட்டது. அதனால் பரமாத்மா இல்லை என்கிற வாதம் தள்ளப்பட்டது. இதில் ஜீவனில் வேறுபட்ட பரமாத்மா கிடையாது என்கிற வாதம் தள்ளப்படுகிறது. ஜகத் எல்லாம் பிருஹ்மாத் மகம் - என்று சொல்லி முடிகிறது.

கடவல்லியில் ஓதப்படுறது. 3-10 & 11. इन्द्रियेभ्यः परा ह्यर्था

अर्थेभ्यश्च परं मनः । मनसस्तु परा बुद्धिर्बुद्धेरात्मा महान् परः । महतः परमव्यक्तमव्यक्तात् पुरुषः परः । पुरुषान्न परं किञ्चित् साकाष्ठा सापरागतिः ।

இந்திரியங்களுக்கு மேற்பட்டவை அர்த்தங்களாகிற விஷயங்கள், விஷயங்களைவிட மனம் மேற்பட்டது: மனத்திலும் மேலானது அறிவு (புத்தி), புத்தியை விட பெரிது ஆத்மாவான மஹான், மஹானைவிடப் பெரிது அவ்யக்தம். அவ்யக்தத்திலும் பெரியவன் புருஷன். புருஷனைவிடப் பெரியது ஒன்றுமில்லை, புருஷனே எல்லை நிலமாகவும்—முடிவாகவும்—மேலான கதியாகவுமிருப்பவன். இங்கு "அவ்யக்தம்" என்று சொல்லப்படுவது சாங்கியர்களால் சொல்லப்படும் ஜகத்காரணமாகிய மூல பிரகிருதியே. ஸாங்கியர்கள் மஹான் என்றும் அசேதனதத் வத்தைக் காட்டிலும் பெரிதும்—அதற்கே காரணமான அவ்யக்தம் எனப்படும் மூல பிரகிருதி—அதை விடப் பெரியது புருஷன் என்பதால் ஈஸ்வரன் என்னும் தத்வம் இல்லையென்று சொல்கிறார்கள்.

இங்கே சந்தேகம் பிரதானம்—என்று கபிலதந்திரத்தில் ஸித்தமானதும்—அப்ருஹ்மாத்மகம்—(ஈஸ்வரன் இல்லையாதலால்

அப்ருஹ்மாத்மகம்) பிரதானம்—இங்கே அவ்யக்த சப்தத்தால் சொல்லப்படுகிறது. அதை ஜகத்காரணமாக ஏன் சொல்லக் கூடாது. அவ்விதமானல் நாம் சரியில்லை என்போம்.

( இங்கே அவ்யக்தம் - என்பதற்குப் பொருள் யாது ? பிருஹ்மமா அல்லது பிரதானமா ? எது ஜகத் காரணம்-பூர்வபக்ஷி (நிரீஸ் வரசாங்கியன்) அவ்யக்தம் - பிரதானம் என்கிறன். ராமானுஜர் அவ்யக்த பதத்திற்கு தேகம் என்று அர்த்தம் சொல்கிறர். பூர்வபக்ஷியின் கருத்து - அவ்யக்தம் பொதுவாக பிரதானத்தைக் குறிக்கும் -2) இங்கே சுருதியில் அவ்யக்தம் மஹத்தை விடப் பெரியது - சாங்யனின் அபிப்ராயத்தை ஒத்திருக்கிறது - ஏனெனில் அவன் சொல்கிறன் மஹத்தைவிடப் பெரியது அவ்யக்தம்- பிரதானம் அதை உண்டாக்குகிறது - 3) நிரீஸ்வர சாங்கியன் சொல்வது புருஷன் எனப்படும் ஜீவாத்மாதான் எல்லாவற்றிலும் (பிரதானத்தையும் விடவும்) பெரியவனுகும்.

ஸ்ரீபாஷ்யம் :—

எப்படி— பிரதானம் என்பது எப்படி ? महतः परमव्यक्तमव्यक्तात् पुरुषः परः - என்பதால் மஹதத்தை விடப் பெரியது அவ்யக்தம் அவ்யக்தத்தை விட பெரியது புருஷன் - அவனே மேலானவன்; पराकाष्टा என்பதால் கபில தந்திர ஸித்த தத்வமாகிய ப்ரக்ருதி - அதற்குமேல் காட்டப் பட்டதாலே - புருஷனே இருபத்தைந்தாம் தத்வம் - அவனைவிட மேலானவன் யாருமில்லை இங்கே சாங்கியனின் அபிப்ராயம் - மேலிருந்து கீழாக வரும் வரிசை (அவரோஹணவரிசை) கொடுக்கப்படுகிறது. 1) புருஷன் 2) பிரதானம் - 3) மஹத் (புத்தி 4) அஹங்காரம்; 5) தன்மாத்திரைகள் ஐந்து - சப்த ஸ்பர்ச, ரூப, ரஸ கந்தம் ; 10, 6) ஸ்தூல தத்வங்கள் - (ஆகாசம் வாயு - தேஜஸ் - அப்பு (ஜலம்) - பிருத்வி (ஐந்து பூதங்கள்) (15) ஞான இந்திரியங்கள் - (5) (16)மனம் -17) கர்மேந்திரியங்கள் 5) ஸ்ரோத்ரம் (காதுகள்) 18) த்வக் (சரீரம் -19) கண்கள் 20) ரஸம் (சுவை) 21) முகருதல் - இதற்குள்ள உருப்புக்கள் கர்ம இந்திரியங்கள் (22,) வாய் 2 ) கைகள் 24) கால்கள் 25) விஸர்ஜன உருப்புக்கள் - (பிரஜாபதி). சாங்கியன் 25) தத்வங்களை ஒப்புக் கொள்கிறன் நாமோ (வேதாந்தி) பிருஹ்மத்தை 26 வது தத்வமாகவும் புருஷனுக்கு (ஜீவனுக்கு) மேலான அதிகாரியுமாகச் சொல்கிறேம்).

புருஷனே சாங்கிய பக்ஷத்திலே - முடிவான எல்லையாக ஓதப் படுகிறான் - पुरुषान्नपरं किञ्चित् सा परागतिः-மேலானது, அடையப்பட வேண்டிய (கதி) ஒன்றுமில்லை (புருஷனைத் தவிர) 25 தத்வங்கள் - புருஷனைவிட மேலானது ஒன்றுமில்லை யென்று சொல்கிறான். ஆகவே அவ்யக்தம் ஜகத் காரணம் என்பது சரியாகும்:- இவ்விதம் சொல்லப்படும் - अनुमानिकमप्येकेषामितिचे त् इति - கடவல்லி யில் (ஏகேஷாம்) அவ்யக்தம் எனப்படும் மூலபிரகிருதியும் ஜகத் காரணம் என்றால் - एकेषा (கடவல்லி) சாகைகளில் பிரதானமும் காரணம் என்று ஓதப்படுகிறது-என்றால் (பூர்வ-பக்ஷம்).

இதற்கு நாம் பதில் அளிப்பது அவ்விதம் இல்லை. இங்கே அவ்யக்த சப்தத்தினால் (அப்ரும் மாத்மக) பிரதானம் காட்டப் படுவதில்லை. ஏன் ? இந்த பிரகரணத்திலே

## शरीररूपकविन्यस्तगृहीतेः—

(கடவல்லியில் உருவகமாக தேர் தேர்ப்பாகன்-எனக்காட்டப் பட்டதால்-அவ்யக்தம் சரீரத்தையே குறிக்கும். சரீரத்தினால் காட்டப்பட்ட ரூபகம் (உருவகம்) அவ்யக்த சப்தத்தினால் அறியப் படுகிறது. அதாவது ஆத்மா சரீர புத்தி-மன-இந்திரிய விஷயங் களில்-ரதியை (ஜீவாத்மா) ரதம் (சரீரம்) என்கிற பாவங்களால் (உருவகத்தால்) காட்டப்பட்டது. சரீரத்தை தேராகவும்-அதில் அவ்யக்தம் சரீரம் என்பதைக் காட்டும். பிரதானத்தை சொல்ல வில்லை.—என்று கிரஹிக்கப்பட வேண்டியது.

(புலன்கள்), (இந்திரியங்கள்), விஷயங்கள், மனம், புத்தி, ஜீவாத்மா, சரீரம், பரமாத்மா என்பதாகும். பேறு பரமாத்மா வாதலால், அவனே சிரேயஸ். ஜீவாத்மாவுக்கு உடல் ஒரு தேர் (ரதம்) புத்தி ஸாரதி. மனம் கடிவாளம், புலன்கள் - குதிரைகள் விஷயங்கள் அவற்றின் புலன்கள். இவற்றைக் கொண்டு ஜீவன் சுகதுக்கங்களை அனுபவிக்கிறான். இந்திரியக் குதிரைகளை வசப் படுத்தி-அறிவு பெற்று-விஷ்ணுவின் பதம் அடைகிறான். அது பரமபதம் எனச் சொல்லப்பட்டது.

(இந்திரியங்களை உள்நோக்காகக் கொள்ள வேண்டும்). சரீரமே "அவ்யக்த" சப்தத்தால் காட்டப்படுகிறது. சாங்கியனின் பிரதானமில்லை-என்பதாகும். இதற்கு அர்த்தம்-அவ்யக்தமாகிற சரீரம். புருஷன்-சரீரம்-புத்தி-மனம்-இந்திரியகள் விஷயங்கள் எல்லாம் உருவகமாகப் படைக்கப்பட்டு-ரதம், சாரதி, என்று காட்டப்பட்டன. சூத்திரத்திலுள்ள சரீரரூபக விந்யஸ்த-என்பதில் சரீரத்தை விசேஷணமாகவும்-ரூபக விந்யஸ்த-விசேஷ்யமாகவும் ராமானுஜர் அர்த்தம் சொல்வதால்-உருவகத்திற்கு சரியாகும்).

आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव च। बुद्धिं तु सारथिंविद्धि मनः प्रग्रहमेव च। इन्द्रियाणि हयानाहुः विषयां स्तेषु गोचरान्—

என்பதால், ஆத்மாவை ரதியாகவும் (எஜமானனாகவும்) சரீரத்தை ரதமாகவும், அறிவாயாக: புத்தியை ஸாரதியாகவும் மனதை கடிவாளமாகவும், இந்திரியங்களைக் குதிரைகளாகவும் சப்தம் முதலான விஷயங்களை அக்குதிரைகள் செல்லும் பாதைகளாகவும் கூறுகின்றன. (கட -1-3-9)-முடிவில்-ஸம்சார வழியின் அக்கரை விஷ்ணுவின் பரமபதம் என்று சொல்லப்பட்டு:

सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्—

என்று சொல்லி, வைஷ்ணவ பதத்தைச் சொல்லி, உபாஸகன் இந்திரியங்களை உள்நோக்காக விஷயங்களிலிருந்து திருப்பி அறிவினால் மேலான விஷ்ணுபதத்தை அடைவதால்-ரதியாகிறான். (எஜமானன்-தேருக்கு)

यस्यैते रथादयो वशे तिष्ठन्ति, स एवाध्वनः पारं वैष्णवं पदमाप्नोति ॥

என்று சொல்லி அந்த ரதாதி ரூபகத்திலே-சரீரம் முதலியவற்றையும்-சொல்லி-இவை உபாஸகனுக்கு வசப்படுவதால் அவையும் इन्द्रियेभ्यः परा: என்று விஷயங்களை இந்திரியங்களுக்கு

மேலாகவும் சுருதி ஓதிற்று. அங்கே குதிரைகள் ரூபகமாக இந்தி-ரியங்களையும்-விஷயங்களையும் சொல்லி-அறிவினுல் இந்திரியங்களை வசப்ப்டுத்த வேண்டியது-என்றும் சொல்லிற்று. விஷயங்களைச் சொன்னதால்-ஆனுல் தேகத்தை ரதமாகக்காட்டப்பட்டு-அதை விஷயமாகச் சொல்லவில்லை. குதிரைகளாகிற இந்திரியங்கள் விஷய சம்பந்தம் கொண்டால்-அதை அடக்குவது மிகச்சிரமம். அவைகளை அடக்கும் மனம்-இந்திரியங்களைவிட வேருன மனம் என்பதைக் கடிவாளம் என்று ரூபகமாகச் சொல்லி-அந்த மனத்தை உள்நோக்காகக் கொண்டால் விஷய சம்பந்தங்கள் இரா-அந்த மனத்தை புத்தி என்கிற ஸாரதியினுல் கட்டுப்படுத்-தல் யேற்படும். இதுவும் ரூபகமாகும்). புத்தியைவிட மேலான வன்-ஆத்மாவான ஜீவன்-புத்தியை உடைய ரதி (எஜமானன்) ரூபித-ஆத்மா-கர்த்ருத் வேந மேலானதாகச் சொல்லப்படுடுறது. ஆத்மாவை 'மஹாந்'.-என்று சாங்க்யன் சொல்வதாக விருப்பது-அதாவது எல்லாவற்றிற்கும் ஆத்மாவே மஹாந்-என்று விசேஷித்துச் சொல்கிருன் சாங்க்யன்-அது சரியில்லை. மஹாந் என்பது ஜீவனைக் குறிக்கும்-மஹானைவிட அவ்யக்தம். அவ்யக்-தத்தைவிட புருஷன்; உருவகத்தில் என்ன என்ன விஷயங்கள் (வஸ்துக்கள்) சொல்லப் பட்டனவோ-அப்படித்தான் அறிய வேண்டும்-அவைகளை, அவர்கள் தத்வத்திற்கு இந்த இந்த தத்வங் களுக்கு இவை சமம் என்று சொல்வது சரியில்லை.

(உதாரணமாக-விஷயங்கள் இந்திரியங்களை உண்டாக்குவ தில்லை. மனம் விஷயங்களுக்கு காரணமாகாது. இந்திரிய ஸாந்நித்யம் விஷயங்களுக்கு யேற்படுவதால்-விஷயங்கள் மேல் என அறியவேண்டும். புத்தி மனதைவிடப் பெரியது-சாங்க்யன் புத்தியை மஹத் என்று சொல்லி-அதுவே மனத்திற்குக் காரண மாகிறது-ஸாத்விக அஹங்காரம் யேற்பட்டு-அதனுல் புத்தியே மஹத்தாகப் பரிணமிக்கிறது-என்கிருன். நாம் சொல்வது-ஒன்று இன்னென்றுக்கு காரணமாகாது. உருவகமாக சித்தரிக் கப்பட்டதால்-அப்படியே அதை தெரிந்துகொள்ள வேண்டும். ஆத்மந்-என்கிற சப்தம் சாங்கியனுல் எங்கும் பரவியிருப்பது-அதனுல் மூல பிரகிருதியே-வித்தியாஸப் படுத்தப் பட்ட மஹத்-தில் வியாப்தி-பரவியிருக்கிறது என்கிருன். ஆகவே அவ்யக்தம் என்பது அனுமானிகம்-பிரதானம் என்கிருன்).

**விளக்கம் :—**

இங்கு சொல்லப்படுவது யாதெனில் महत: पर: मव्यक्त मव्यक्तात् पुरुष: पर: - மஹத்தைக் காட்டிலும் அவ்யக்தம் மேலானது. அவ்யக்தத்தை காட்டிலும் புருஷன் மேலானவன்·என்பது பொருள். ஸாங்கியன் சொல்லும் பிரதானத்தை-கடோபநிஷத்-அவ்யக்தம்-என்கிற பதத்தால் சொல்வதால் பிரதானமும் உபநிஷத் சப்தத்தால் சொல்லப் பட்டதாக ஆகிறபடியால்-பிரதானம் உபநிஷத் பிரதிபாதனம்-என்றும் பிரும்ஹம் ஒன்றே தான்-உபநிஷத் பிரதிபாத்ய மென்று சொன்னது—எவ்விதம் பொருந்தும். என்கிற ஆக்ஷேபம் பிராப்தமாகவே—அதற்கு 7 சூத்திரங்கள் கொண்ட இந்த அதிகரணமாகும். முதல் சூத்திரத்திலுள்ள "அபி" பிரயோகம் - சில (கடவல்லி போன்ற) சாகைகளிலும் சில சாகிகளுடைய சப்தமுள்ளதாக. (பிருஹ்மத்திற்குப் பதிலாக) பிரதானமும் கூறப்பட்டதாகும். என்கிற கருத்து ஆகும். இவ்விடத்தில் உபமானங்களான ரதி-ரதம்-என்பதை உபமேயங்களான ஆத்மா-சரீரம் முதலியவற்றால் ஆத்மா சரீரம்முதலியன ரூபக என்ற சப்தத்தால் அறியப்படும். சரீரம் என்று பெயரியயாதொன்று கூறப்பட்டதோ-அது அவ்யக்த சப்தத்தால் கிரஹணமேற்படுதால் - பிரதான காரணமில்லை: மேலும் மஹத்துக்குப் பிறகு அவ்யக்தம்·அதற்குப் பின்பு புருஷன்-என்பது ஸாங்கிய ஸ்மிருதியின் கிரமம். கடவல்லியிலும் மஹத. பரம அவ்யக்தம்-அவ்யக்தாத் பர: புருஷ: என்பதாம்-கிரமம் இருக்கிறது. (வஸ்துவை உபதேசிக்கும் முறையானது)-ஒத்திருப்பதாக-அதுதான் இது-என்ற நிச்சிதமான பிரத்யபிஞை (ஐக்ய·வ்யப தேசம்) யேற்படாமலிருக்கும்போது-இரண்டும் ஒன்றே என எவ்விதம் சொல்ல முடியும் ? கிரமம் இருப்பினும் ஸமானப் பொருளைப் பற்றி அறிவு யேற்படுவதற்கில்லை. ரூபகமாகச் சொல்லப் பட்டவைகளுள் சரீரம் என்கிற ரூபகம் பொருளைப் பற்றிய அறிவுஎவ்விதம் யேற்படும் ?) இது அத்வைதியின் பாஷ்ய ஸாரம்).

**ஸ்ரீபாஷ்யம் :-**

அவ்விதம் சரிசமம் என்று சொன்னாலும்-ரத ரூபியான சரீரம் மேலானதாகவும்-அந்த சரீரத்தில் இருக்கும் ஜீவாத்மாவுக்கு ஸகல புருஷார்த்த ஸாதன பிரவிருத்திகளுக்கு மூலகாரணமாகும்·

ஜீவாத்மா சரீரத்தை நம்பியல்லவோ முயற்சிக்கிறன். அந்த சரீரத்தையும் விட மேலானவன் பரபிருஹ்மமாகிற ஸ்ரீமந்நாராயணன்—ஸர்வாந்தராத்மாவாகவும்—அந்தர்யாமியாகவும் யாவருக்கும் அடைய வேண்டிய கதியாகவும், விருக்கிறன்; ஏனெனில் மேலே சொல்லப்பட்ட தத்வங்கள் ஒவ்வொன்றும்—ஜீவாத்மா பர்யந்தம்—ஸமஸ்த சேஷ்டிதங்களும் பரமபுருஷனுடைய சங்கல்பத்தினுல் யேற்படுகின்றன. அந்த பரமாத்மாவே அந்தர்யாமியாக விருப்பதால் உபாஸனுதிகளுக்குப் பலன்களை அளித்து பூர்த்தி செய்கிறன். சா. மீ. 2-3-40ல் परात्तुतच्छ्रुते; ஜீவனுடைய கர்த்ருத்வமோ பரமாத்மாவினுல்—ஏற்படுகிறது-சுருதி அவ்விதம் சொல்வதாலே.—பரமாத்மாதீனம். பரமாத்மாவே அடையப்படவேண்டியவனுகவும்—அவனே உபாயமாகவும் ஸர்வ கர்ம ஸமாராத்தியனுகவும் அவனை வசப்படுத்து வதற்க்காகச் செய்யப்படும் உபாஸனுதிகளுக்கு விஷயமாகவிருக்கிறன். அதே விஷயம் இங்கு இப்படி சுருதியில் சொல்லப்படுகிறது

पुरुषान्न परं किञ्चित् सा काष्ठा सा परागतिः—

பரமபுருஷனைவிட மேலானது ஒன்றுமில்லை. அவனே எல்லாவற்றிற்கும் மேலானவன் - முடிவான இடம். (கடவல்லி)

இந்த விஷயம் அந்தர்யாமி பிராம்மணத்திலும் (பி. மா-8-6) यः आत्मनि तिष्टन् -ஆத்மாவிலிருந்து கொண்டு—யாராலும் பார்க்கப்படாதவனுக உள் இருந்து யாவரையும் நியமிக்கிறன். அவன் எல்லாவற்றையும் நேராகப் பார்க்கிறன்—(ஸாக்ஷாத் கர்த்து)—எல்லாவற்றையும் நியமனம் செய்கிறன்—என்று சொல்லிய பின்பு—नान्योऽतोऽस्ति स्ति द्रष्टा—அவனைத் தவிர பார்க்கிறவன் வேறு ஒருவனுமில்லை.—இதனுல் ஓதப்படுவது நியந்தரந்திரம் (நியமிப்பது) (அவனைத் தவிர—வேறு ஒருவனுமில்லை).

பகவத் கீதையிலும் 18-14.

अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।

विविधा च पृथक् चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ।

(ஆத்மா தங்குமிடமான உடலும்—கர்த்தாவாகிற ஆத்மாவும் (ததா கர்த்தா)—வெவ்வேறு வகையான கர்மேந்திரியங்களும் மனமும், பிராணவாயுவின் சஞ்சாரமும்—இவற்றிலே ஐந்தா

வதான பரமாத்மாவும்—காரணங்கள் - இவற்றுள் பரமாத்மாவே அந்தர்யாமியாக கர்மங்களைச் செய்வதற்கு பிரதான கர்த்தா வாகிறான். ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட:—என்றும் காட்டப் பட்டது. இங்கே தெய்வம் என்பது புருஷோத்தமனான ஸ்ரீமந் நாராயணனே - கீதை 15-14.

सर्वस्य चाहं हृदिसंनिष्टे । मत्तः स्मृतिर्ज्ञान मपोहनं च—

என்கிற வசனத்தையும் நினைக்கவும்—எல்லாப்பிராணிகளின் ஹ்ருதயத்தில் இருந்து கொண்டு—என் சங்கல்பத்தினால் நியமிக்கிறேன், என்னிடமிருந்தே எல்லா ப்பிராணிகளுக்கும் ஸ்மிருதி—நினைவு ஞானம் யேற்படுகிறது. நான்தான் வேதங்களையும் நன்கு அறிந்தவன்.

அப்பேற்பட்ட பரமாத்மாத்மாவை வசீகரிப்பது சரணாகதியாகும். கீதையிலும் இதே சொல்லப்படுகிறது—

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति, भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया, तमेवंशरणं गच्छ—

எல்லா வற்றையும் நியமிக்கிற வாசுதேவன்—அர்ஜுனா—ஹ்ருதயத்தில் இருக்கிறான். தன்னாலே செய்யப் பட்ட சரீரம் இந்திரியங்களாகிற பிரகிருதி என்ற பெயர் பெற்ற யந்திரம் போன்றவற்றிலே யேறியிருக்கும் அந்தப் பிராணிகளை முக்குணங்களுடைய மாயையால்—அவரவர்களுக்குத் தக்க குணப்படி பிரவர்த்திக்கச் செய்து ஆட்டி வைக்கிறேன். ஆகவே இந்த மாயையை நிவிருத்தி செய்வதற்கு तमेव (புருஷோத்தம ஸ்ரீமந் நாராயணனை) சரணம் அடைவாய். அதே விஷயம். आत्मानं रथिनं विद्धि —(ஜீவனை) ஆத்மாவை சாரதியாக நினைப்பாயாக என்பதால் ரதம் முதலிய ரூபகமாக அறியப்படும் இந்திரியங்கள்- इन्द्रियेभ्यः पराह्यर्थाः । இந்திரியங்களை விட மேலானது விஷயங்கள். (ஆத்மாவை சாரதியாகவும் கொண்டு என்பதில் "ஆதித்வாத்"- வருகிறது—அதற்கு இந்திரியாணாம் आदित्वात् एव—முக்தி:) இவ் விதமாக அந்த அந்த சொந்தமான வஸ்துக்களைச் சொல்லி—ரத ரூபம் சரீரமில்லை—மீதியிருப்பதினால்—அதை (சரீரத்தை)அவ்யக்த

சப்தத்தினால் உச்சரிக்கப்படுகிறது. ஆகவே கபில தந்திரத்தின் ஸித்தமாகிற பிரதானத்திற்கு இங்கே பிரசங்கமில்லை (கூறப்படவில்லை).

அதேமாதிரி இங்கே கபிலரின் தந்திர ஸித்தமான பிரத்யபிக்ஷை இருக்கிறதே—அதாவது அவ்யக்தம் என்பது பிரதானத்தைக் குறிக்கிறது—அதுவுமில்லை—எங்கனமெனில் इन्द्रियेभ्यः परा ह्यर्थाः—இந்திரியங்களை விட விஷயங்கள் மேலானது என்கிறதில் சப்தாதி விஷயங்கள் பேசப்படுகின்றன—; இதனால் சப்தாதி விஷயங்கள் இந்திரியங்களை உண்டுபண்ண காரண பூதமாக இல்லை. अर्थेभ्यश्च परं मनः—மனது அர்த்தங்களை (விஷயங்களை) விடப் பெரியவை; இம்மாதிரி ஒவ்வொரு தத்வத்தைச் சொல்லி—அதைவிடப் பெரியது என்று சொல்லுவது சரியாகாது—அஸங்கதம்: ஏனெனில் அவை அவை அவைகளின் உற்பத்திக்குக் காரணமாகாது. அவ்விதமே புத்தியை விட ஆத்மாவாகிற மஹான் மேலானது என்று சொல்வதும் சரியில்லை. மஹான் என்கிற சப்தம் ஜீவனைக் குறிக்கும். அவனை விட பரமாத்மா மேல்.—புத்தி சப்தத்தினால் அவர்களாலே ஒப்புக்கொள்ளப் பட்டது.—மஹத் என்கிற தத்வம்—அது ஜீவனாகாது. (ஆத்மா வாகாது). ஆகவே மஹத் தத்வத்திற்கு மஹத் தத்வமே மேல் என்று சொல்வதும் சரியாகாது—மஹத் தத்வத்தை "ஆத்மந்" என்று விசேஷித்திருப்பதும் சரியாகாது. ஆகவே ரூபகமாகச் சொல்லப்பட்ட எந்த வஸ்துக்களோ—அந்த வஸ்துக்களே இந்த சுருதியில் சொல்லப் பட்டவை. சாங்கியனின் சொற்கள் இதில் வரவில்லை—அவர்கள் காட்டும் ஸமத்வமும் பொருந்தாது (ஆத்மந் என்கிறதற்கு அவர்கள் சொல்லும் வ்யாப்தி என்பதுமில்லை—மஹத்தில் ஆத்மா பரவியிருக்கிறது என்கிறபடி அர்த்தம் சொல்வது சரியில்லை).

தர்சயதி ச—இந்த விஷயங்களையே சுருதிகளும் காட்டுகின்றன

एष सर्वेषु भूतेषु गूढोत्मा न प्रकाशते। दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः।

இந்த ஆத்மா எல்லாப் பூதங்களின் உள்ளே அறியப்படாத வனாக வசிக்கிறான். அவன் தன்னை யாருக்குக் காட்டுகிறான்— சூக்ஷ்மதர்சிகளால் அவர்களின் சூக்ஷ்மமான புத்திக்கு—அதாவது அவர்களால் பார்க்கப்படுகிறான்.

यच्छेद्वाङ्मनसि प्राज्ञः तद्यच्छेत् ज्ञान आत्मनि। ज्ञानमात्मनि महति नियच्छेत् तद्यच्छेच्छान्त आत्मनि - इति—

ஆகவே ஞானி தன் வாக்கு மனம் இத்யாதிகளைக் கட்டுப் படுத்தி—மனத்தை புத்தியிலும் புத்தியை ஆத்மாவிலும் அடக்க வேண்டும். ஆத்மாவைப் பரமாத்மாவிலும் அடக்கவேண்டும். அதாவது - அவனிடம் ஸதாவிருக்க வேண்டியது. வெல்லப் படாத (அடக்கப்படாத) இந்திரியங்கள் அடக்கப்படாத குதிரை களைப்போல தன் இஷ்டப்படி சஞ்சரிப்பவை. அடக்கப்படாத பாஹ்ய அந்தக்கரணங்கள் பரமாத்மாவைக் காணமுடியாது— துர்தர்ஸத்வம்; என்று சொல்லி விட்டு, அவை தன் இஷ்டப்படி குதிரைகளைப் போலச் செல்பவை என்று சொல்லி விட்டு; அவைகளை உள் நோக்காக கொண்டு அடக்கினால் பரமாத்மா வைக்காணலாம் என்கிற அர்த்தமாகும்—அதாவது உபாஸனா மார்க்கமாக. இங்கே வசிகார்ய பரம்பரையே கூறப்படுகிறது— காரண பரம்பரை இல்லை, यच्छेद्वाङ्मनसि - வாக்கு மனஸ் என்கிற இரண்டையும் ப்ராக்ஞன் அடக்குகிறான். வாசம் மனஸி— அடக்குதல்—; முதலில் வாக்கு முதலிய கர்மேந்திரியங்கள். பிறகு ஞானேந்திரியங்கள் அதன் பிறகு மனது ஆக படி ஞான்று அடக்கப்பட வேண்டும் என்கிற அர்த்தம் वाङ्मनसे-2வது வேற்றுமை பன்மை; பாணின். 7-1-39ல் सुपां सुलुक् - इति लुक्— Su என்கிற ப்ரத்யயம் (affix)சேர்க் கப்பட்டால்—வேற்றுமையை பத அர்த்தங்கள் காட்டுவது போல சில சமயங்களில் பிரத்யயம் மறைந்து போகிறது - உதாரணமாக மனஸி-7 - ம் வேற்றுமை— சரியாகத் தெரிகிறது. ஆனால் "வாக்" என்பதில் மறைந்து விட்டிருக்கிறது (இலக் கணப்படி).

तद्यच्छेत् ज्ञान आत्मनि—மனதை ஆத்மாவினுள்ள ஞானத்தில் அடக்க வேண்டும் என்கிற வாக்யம்; तत्-மனோ-(மனம்) புத்தியில் அடக்க வேண்டியது; ஆகவே முந்தி சொல்லப்பட்ட புத்தியையே இங்கு ஞான சப்தத்தால் அறியப்படுகிறது. ज्ञान आत्मनि ஞானத்தை

ஆத்மாவில் அடக்க வேண்டியது என்று 7-ம் வேற்றுமையில் சொல்லப்படுகிறது. நாம் ஏற்கனவே சொல்லி விட்டிருக்கிறோம் புத்தி என்பதை ஞானம் என்கிற சப்தத்தால் அறிய வேண்டியது—ஆகவே ஏழாம் வேற்றுமைகளில் உள்ள ஞான (புத்தி)-ஆத்மநி (तद्यच्छेत् ज्ञान आत्मनि)—இரண்டும் தனித்தனியான தத்வங்கள்—இரண்டும் கர்த்தரியாக ஆகாது. (ஒன்றாக ஆக மாட்டாது); இங்கே மனம் புத்தியிலும் புத்தி ஆத்மாவிலும் அடங்க வேண்டியது. வசிகார்ய பரம்பரை சொல்லப்பட்டதாகும்.

ज्ञानमात्मनिमहति नियच्छेत्—புத்தியை ஆத்மாவில் அடக்கி-என்பதற்கு ஜீவனுகிற கர்த்தாவில் புத்தி தத்வம் அடக்கம் என்பதாகும். तद्यच्छेत् शान्त आत्मनि—அந்த ஜீவனை (கர்த்தாவை) பரஸ்மின் (மேலான) பிருஹ்மத்தில் அடக்க வேண்டியது-எத்தகைய பிருஹ்மம்—ஸர்வாந்தர்யாமி சாந்தஸ்வரூபி என்கிற அர்த்தம். இங்கே நபும்ஸ லிங்கம் பிரயோகம் - तत् என்பதற்கு (तदिति); - तत् என்பதாகிற ஆத்மாவுக்கு (புல்லிங்ம்) லிங்க பரிவர்த்தனை (புல்லிங்கம் - நபும்ஸ லிங்கம்) ஒத்துக் கொள்ளப்பட்டதாகும், இதனால் அர்த்தம் யாதெனில் - ரதத்திலுள்ள ரதி (எஜமானன் - ஜீவன்) மேற்சொன்ன உருவக அலங்காரத்தில் வைஷ்ணவ பதத்தை அடைகிறான். (உபஸனுமார்க்கமாக) அந்தர்முக இந்திரிய வ்ருத்தி-புத்தி ஆத்மாவிலும் - ஆத்மா பரமாத்மாவிலும் சேர்க்கப்பட்டால் - அடைகிறான் என்கிற அர்த்தம் தேறும். மேலும் கேள்வி கேட்கப்படும்—அவ்யக்த சப்தம் - எப்படி வ்யக்தமான சரீரத்தைக் காட்டும் - என்பதற்குச் சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார்.

சூத்ரம் सूक्ष्मं तु तदर्हत्वात् (1-4-2)

ஸூக்ஷமம் து ததர்ஹத்வாத்—1-4-2)

ஸூக்ஷமம்—து (பஞ்ச பூதங்களுக்கு) சூக்ஷ்ம நிலையான மூல பிரகிருதியே (சரீரமாகிறது) ததர்ஹத்வாத்—(ஸ்தூலமான சரீர நிலையிலேயே) காரியம் செய்யத்தகுந்தபடியால்.

(இங்கு சரீரம் என்பதற்கு இன்னொரு காரணம் சொல்லப்படுகிறது. அவ்யக்தம் என்பதற்கு இந்திரியங்களால் கிரகிக்கப்படாததாகையாலே—மூலபிரகிருதியே, ஸ்தூல தசையில் சரீரமாகிறது—

அது ரதத்தைப்போல் (உருவகத்தில்) சொல்லப்பட்டபடி) புருஷார்த்த ஸாதன முயற்சிகளுக்கு ஸாதனமாகிறது—சரீரத்தை அவ்யக்தம் எனலாம்)

ஸ்ரீபாஷ்யம் : –

பூத சூக்ஷ்மம் அவ்யாகிருத (பிரளய) தசையில் இருப்பது—ஸ்தூல தசையில் விகாரத்தை யடைந்து—சரீரமாகிறது. விசேஷத்தன்மையை யடைகிறது. இந்த அவ்யாகிருதமான மூலப்பிரகிருயே சரீர அவஸ்தையை அடைந்தபோது அதாவது ஸ்தூல தசையில், அவ்யக்தம் என்கிற சப்தத்தினுல் அறியப்படுகிறது. तदर्हत्वात्—இந்த அவ்யாகிருதமாகிற சரீரம் கார்யம் செய்வதற்கு யோக்யதை பெற்றிருக்கிறது—அதாவது—அவ்யாக்ருதம் என்கிற அசேதனமே ஸ்தூலதசையில் விகாரத்தை யடைந்து—உருவகத்தில் சொல்லப்பட்ட ரதத்தைப் போல் - எஜமானனுக்கு புருஷார்த்த ஸாதனங்களை உண்டு பண்ணுவற்கு ஸாதனமாக அமைகிறது. அதனுல் காரணதசையைச் சூத்ரத்தில் சொல்லும்போது—சூக்ஷ்மம் என்று ஓதப்பட்டு, அவ்யக்தம் எனவும் காட்டப்பட்டது ஒரு சம்சயம் எழலாம் - அவ்யக்தம் சரீரம் என்று சொல்லப்பட்டமாகில்—சரீரத்தையே ஏன் அவ்யக்தம் எனச் சொல்லக் கூடாது? அது அசேதனமான படியால், அவி பாகம் ஆகாத தசையில் ஒன்றும் செய்வதற்கு அருஹதை யில்லை. பிரகிருதி சம்பந்தத்தின் காரணமாகவும், அந்த பிரளய தசையில் ஸத்வ ரஜஸ் தமஸ் ஸாதிகுணங்கள் லயமடைந்து — அதிசூக்ஷ்மமாக, அவ்யக்தமாக (எளிதில் காணப் பட முடியாதபடி) - பிரக்ருதி ஒடுங்கியிருப்பதாலே — ஆத்மா செயலற்று சும்மா விருக்கிறது என்று அர்த்தம். அசேதனமாகிற பூத சூக்ஷ்மம் ஸ்தூல தசையில் விகாரத்தை அடைகிறது. அதனுல் சரீரமாகிறது ஆத்மாவுக்கு; செயல் படுவதற்கு உதவுகிறது.

பூத சூக்ஷ்ம மாகிற மூலப் பிரகிருதி இவ்விதமாக ஒடுங்கியிருக்கிறது – என்று ஒப்புக்கொள்ளப்படுமாகில், கபில ஸித்தாந்தத்தை – பிரதானமே அவ்யக்தம்—என்பதை ஏன் ஒத்துக் கொள்ளக் கூடாது? அங்கேயும் பூத காரணமே—அவ்யக்தம் என்கிற சப்தத்தால் கூறப்படுகிறது. அதற்குப் பதில் சூத்ரக் காரரே அடுத்த சூத்ரத்தில் சொல்கிறுர்.

சூத்ரம் :— तदधीनत्वादर्थवत् । (1-4-3)

ததநீநத்வாத்—பரம புருஷனுக்கு வசப்பட்டிருக்கையால் அர்த்தவத் (மூல பிரகிருதி) பயனுள்ளதாக ஆகிறது.

(இது முக்கியமான சூத்ரம்—நமது சித்தாந்தம் சாங்கியத் திற்கு (நிரீஸ்வர சாங்கிய பக்ஷத்திற்கு) எவ்விதம் விரோதம் எனக் காட்டப்பட்டு - வைதிக மதத்தின் பெருமையைக் கூறு கிறது).

பரம காரண பூத பரம புருஷனுடைய அதீனத்தினால் பூத சூக்ஷ்மம் ஸபிரயோஜனமாகிறது - அவனுக்கு சரீரமாகி சரீரத்வார - பிருஹ்மத்தை மாறுதலற்ற பிருஹ்மமாக சொல்லும் படி. ஆகிறது. என்ன சொல்லப்பட்டதென்றால் - எங்களால் அவ்யக்தமும் - அதனுடைய பரிணாம விசேஷணங்களும் ஸ்வரூபத் துடன் ஒப்புக்கொள்ளப்படுகிறது - அதை நாங்கள் மறுக்க வில்லை - எதை நாங்கள் ஒப்புக் கொள்ள வில்லை யென்றால் அவ்யக்தம் பரமாத்மாவுடன் சம்பந்தமில்லை யென்று சொல்கிறீர் களே - அதில்தான் எங்கள் சம்மதம் இல்லை. இந்த மூலப்பிரகிருதி பரமபுருஷனுடைய சரீரமாதலால் பரமாத்மா அதற்கு ஆத்மா வாதலால், பரிணாமம் சரீரத்திற்கு யேற்படுவதால், சரீரம் பரமாத்மாவின் அதீனமாகவும் அப்ரதிக்ஷித்த சம்பந்தமாகவுமிருக் கிறது. அதனாலே பிருஹ்மத்தை ஆத்மாவாகக் கொண்ட பிரக்ருதி முதலிய தத்வங்கள் அவை அவைகளுடைய காரியங்களைச் செய்து - ஸ்ருஷ்டியில் ஸ்வபிரயோசனத்தை சாதித்துக் கொள் கின்றன. இல்லாவிட்டால் அவைகள் சம்பந்தப்பட்ட ஸ்வரூ பத்திலோ - ஸ்திதியிலோ, பிரவிருத்திகளிலோ - பேதங்கள் ஏற் படாது. அவைகள் தொடர்ந்து வாழ்வதற்கோ, செயல்படு வதற்கோ முடியாது; எல்லாம் பரமாத்மாவின் ஸங்கல்பத்தால் யேற்படுகிறது. இந்த பரமாத்மாவின் அதீனத்தை ஒப்புக் கொள்ளாதபடியால், கபிலரின் ஸித்தாந்த பிரகிரியா (அவர்கள் வழி - ஸம்பிரதாயம் நிரஸனம், செய்யப்பட்டதாகும் (கபிலர் பிரகிருதியை ஸ்வதந்தரமாக எண்ணுகிறார் - பரமாத்மா சம்பந்த மில்லை என்கிறார். ஸ்ருதிகளும் ஸ்மிருதிகளும் ஜகத் உற்பத்தி ஸ்திதிலயங்களைச் சொல்லும் பிரகரணத்திலேயு, பரம புருஷ னுடைய மகிமைகளை ஓதுவதிலும் - பிரகிருதியைப்பற்றியும் அதனுடைய மாறுதல்களைப்பற்றியும். புருஷர்களான ஜீவாத்மாக்

களையும் சொல்லி விவரிக்கும்போது - இவைகளுக்கு பரமாத்மா ஆத்மாவாகவும், இவைகளைச் சரீரமாகவும், சொல்லியுள்ளன. எப்படியெனில், சுபால உ - ல் पृथिव्यप्सु लीयते—பிருத்வி அப்பில் (ஜலத்தில்) லயமடைகிறது என்று ஆரம்பித்து,

तन्मात्राणि भूतादौ लीयन्ते, भूतादिर्महति लीयते । महानव्यक्ते लीयते । अव्यक्तं अक्षरे लीयते । अक्षरं तमसि लीयते । तमः परे देवे एकीभवति—

தன்மாத்திரைகள் பூதாதிகளுள் லயமடைகின்றன - (பூதாதிகள் என்பவை தாமஸ அஹங்காராதிகளைக் குறிக்கும் – ராஜஸ - ஸாத்விக அஹங்காரங்களும் சேர்க்கப்படலாம்). பூதங்கள் மஹத்திலும், மஹத் அவ்யக்தத்திலும், அவ்யக்தம் அக்ஷரத்திலும் அக்ஷரம் தமஸ்ஸிலும் (மூலபிரக்கிருதியிலும்) மூலப்பிரகிருதி பரமாத்மாவிடமும் ஒன்றாகி விடுகின்றன. அதனால்,

तमः परेदेवे एकी भवति—; அவ்விதமே - சுபால. 7-1-ல் यस्य पृथिवी शरीरं यस्यापश्शरीरम् यस्य तेजश्शरीरं यस्य वायु शरीरं यस्याकाशश्शरीरं यस्य अहङ्कारश्शरीरं यस्या बुद्धिश्शरीरं यस्याव्यक्तं शरीरं यस्याक्षरं शरीरं यस्य मृत्युः शरीरम्, एष सर्वभूतान्तरात्माऽपहतपाप्मा दिव्यो देव एको नारायणः—

என்பதாலே, எவருடைய சரீரம் பிருத்வியோ எவருக்கு ஜலங்கள் சரீரமோ, எவருக்கு தேஜஸ் சரீரமோ, வாயு சரீரமோ எவருடைய சரீரம் ஆகாசமோ, எவருடைய சரீரம் அஹங்காரமோ எவருடைய சரீரம் புத்தியாக விருக்கிறதோ, எவருக்கு அவ்யக்தம் சரீரமோ—எவருடைய சரீரம் அக்ஷரமாக (மூல பிரகிருதியாக) விருக்கின்றதோ, எவருடைய சரீரம் மருத்யுவாக விருக்கிறதோ அந்த பரமாத்மாவிற்கு - இவை எல்லாம் சரீரமாக விருப்பதால் - ஸர்வ பூதாந்தராத்மா, அபஹத பாப்மா (பாபங்களால் பற்றப் படாதவர்) திவ்யோ தேவ ஏகமான ஸ்ரீமந் நாராயணராகும். அதே பிரகாரம் கீதையிலும் (7-4-6)

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च । अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा । अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मेपराम्

जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत्। एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय। अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा, मत्तः परतरं नान्यत् किञ्चिदस्ति धनञ्जय। मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव॥

இந்த பிரகிருதி எட்டு பாகங்களாக-அதாவது பூமி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம், மனம், புத்தி (மஹத்), அஹங்காரம் என்று பிரிக்கப்பட்டிருக்கிறது. அஹங்காரம் பிரகிருதியிலிருந்து பின்னமாக உண்டு பண்ணப்பட்டது. என்னுடைய மேலான பிரகிருதியிருக்கிறதே—அது பின்னமான இந்த பிரகிருதியைவிட வேறானதாகவும், அமிதமாகவுமிருக்கிறதும் அது ஜீவாத்மாக்களைக் கொண்டதாக விருக்கிறது. இந்த ஜீவ பூதர்களை தாங்குவதான—ஜகத் (சேதன அசேதன பொருள்களைக் கொண்ட உலகம்). அதுவும் என்னால் தாங்கப்படுகிறது—மஹாபாஹோ—அர்ஜுனா! நானே இந்த ஸம்பூர்ண ஜகத்திற்கு—அதாவது அதன் உற்பத்தி, ஸ்திதி லயம் இத்யாதிகளுக்குக் காரணம். என்னைவிட பெரியது வேறு ஒன்றும் இல்லை. நான் இந்த ஸம்பூர்ண ஜகத்தாகிற எல்லாவற்றையும் என் ஸங்கல்பத்தால் தரிக்கிறேன்—எவ்விதம் சூத்ரம் (நூல்) மணிக்கூட்டங்களைத் தாங்கி ஆதாரமாக விருக்கிறதோ—அதுபோல எல்லாவற்றிற்கும் ஆதாரமாக என் ஸங்கல்பத்தினால் இருக்கின்றன.

(இதனால் சொல்லப்பட்டது—எல்லாப்பிராணிகளின் இருப்பு என் அதீனம்; ஆனால் என் இருப்பு அவைகளின் ஆதீனமில்லை. என் ஸங்கல்பமே எல்லாப் பிராணிகளின் உற்பத்தி—இருப்புக்கும் காரணமாகவிருக்கிறது. நானே தரித்துக் கொண்டும், என் ஸ்வரூபம் நிலைப்பதற்கு அவற்றால் ஒருவித உபகாரமும் இல்லை. அரூபமான பகவத் ஸங்கல்பத்தால்—ரூபவித்தான சேதனா சேதனங்கள் தரிக்கப்படுகின்றன. எனக்கு மேலான பொருளோ—ஸமமானதோ ஒன்றுமில்லை)

விபுரா. 1-2-28ல் व्यक्तं विष्णुस्तथाऽव्यक्तं पुरुषः कालएव च —விஷ்ணு: இந்த உண்டாக்கப்பட்ட பிரகிருதியாகவும்-ஸூக்ஷ்ம தசையில்

இருக்கும் பிரகிருதியாகவும் இருக்கிறார். அவரே புருஷனாகவும் (ஜீவனாகவும்) காலமாகவும் இருக்கிறார். இதே மாதிரி இன்னும் சில சுலோகங்களும் உள. வி. பு 6-4-39 & 40.

प्रकृतिर्या मयाऽऽख्याता व्यक्ताव्यक्त स्वरूपिणी । पुरुषश्चाप्यु भावेतौ लीयते परमात्मनि । परमात्मा च सर्वेषामाधारः परमेश्वरः ॥

இந்த பிரகிருதி—என்றால் வ்யக்தம் அவ்யக்தம் என்று சொல்லப்பட்டு—அதற்கு ஸ்வரூபம் இருக்கிறது—என்று யாது சொல்லப்பட்டதோ-அதேமாதிரி - புருஷன் (எனப்படும்) ஜீவன்-இவை இரண்டும் மேலான பரமாத்மாவில் அடங்குகின்றன. பரமாத்மாவோ - எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் பரமேஸ்வரனாகவும் விளங்குகிறார். விஷ்ணு என்று அழைக்கப்படுகிறார்.

[நாம் வைதிகர்களாகிறபடியால் - சாங்கியன் சொல்லுகிற ஸ்வதந்திர பிரகிருதியை ஒப்புக் கொள்ளவில்லை. மூல பிரகிருதியையும் - அதன் பரிணாமங்களையும் ஒப்புக் கொள்கிறோம். அவை பரமாத்மாவுக்குச் சரீரமாகி - அவனுக்கு வசப்பட்டதாகையாலே-பயனுடையதாகின்றன. அவ்யக்த சப்தத்தாலே - மூல பிரகிருதியின் காரியமான சரீரத்தைச் சொல்வதால் மாத்திரம் சாங்கிய மதத்தை (வழி) சொல்லபட வில்லை, அதாவது இந்த வேத வாக்யம் கூறுவதாக ஒப்புக்கொள்ளப் படமாட்டாது].

ஸூத்ரம் ज्ञेयत्वा वचनाच्च । (1—4—4)

ஜ்ஞேயத்வா வசநாச்ச (1-4-4)

ஜ்ஞேயத்வா வசநாத் ச - முமுக்ஷுவுக்கு அறிய தக்கதாக அவ்யக்தத்தை) சொல்லாமையாலே - இங்கு ஸாங்கிய தத்வ பிரகிருயா (வழி) சொல்லப்படவில்லை.

இங்கே கபில தந்திர ஸித்தமான அவ்யக்தம் சொல்லப்படுமாகில் அதை மோக்ஷமடைவதற்கு அறியப்பட வேண்டும் எனச் சொல்லப் படவேண்டும்; [சாங்கியர்கள் சொல்லுகிறார்கள்—மோக்ஷம் பிரகிருதி - புருஷனை நன்கு அறிவதால் யேற்படுகிறது

என்று. பிரகிருதியை - மூல பிரகிருதியாகவும் - அதன் பரிமாணங்களாக ஆவதையும் சேர்த்து அறிந்து கொள்ள வேண்டும். இதனால் அவ்யக்த (பிரதான) அறிவும் (மூல பிரகிருதியையும்) பற்றிய அறிவும்; அது மாதிரி வ்யக்தம் (பரிணாமங்கள்); க்ஞன் (சேதனனாகிற ஜீவன்) எல்லாம் விதிக்கப்பட்டதாகும். (ஈஸ்வர கிருஷ்ண சாங்கிய காரிகையும் வாசஸ்பதி மிஸ்ராவின் விரிவுரையும் பார்க்கவும்].

அத்துடன் புருஷனைப் பற்றியும் அறியப்பட வேண்டும். ஏனெனில் வ்யக்த அவ்யக்த விக்ஞானத்தினாலும், ஜீவனைப் பற்றிய அறிவினாலும் மோக்ஷம் யேற்படுகிறது என்கிறார்கள் சாங்கியர்கள்; ஆனால் அவர்கள் காரிகையிலே இந்த அவ்யக்தத்தை ஞேயத்வம் (அறியபட வேண்டியது) என்று சொல்லவில்லை. ஆகவே இங்கே கபிலரின் சாங்கிய பிரக்ரியையை சொல்லப்படவில்லை. (அவ்யக்தத்தை அறிவதால் மோக்ஷம் உண்டாகிறது என்று சாங்கியர்கள் சொல்வதும் - வேதவாக்யத்தில் அப்படி கூறவில்லை என்றும் காட்டப்பட்டு - சாங்கியதத்வமில்லை என முடிக்கப்படுகிறது).

சூத்ரம் वदतीति चेन्न प्राज्ञो हि प्रकरणात् । (1-4-5)

வததிதி சேந்ந ப்ராஜ்ஞோ ஹி ப்ரகரணாத் (1-4-5)

வததி இதி சேத் - அவ்யக்தத்தை அறியதக்கதாகச் சொல்லுகிறதேயெனில், ந-இல்லை. ப்ரகரணாத் - பிரகரணத்தை ஆராயும் போது - பிராஜ்ஞோஹி - அங்கு சொல்லப் படுபவன் பரமாத்மா அன்றோ ?

கட. 1-3-15ல் अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत् । अनाद्यनन्तं महतः परं ध्रुवं निचाय्य तं मृत्युमुखात् प्रमुच्यते ॥

சப்தம் ஸ்பர்ஸம் ரூபம், ரஸம் கந்தம் ஆகியவை ஐந்தும் அழிவற்றதும் ஆதியந்த மற்றதும் மஹானுக்கு மேற்பட்டதும் நிலையானதுமான அந்த தத்வத்தை தியானிப்பதால் சமசாரத்தினின்றும் விடுவிக்கப்படுகிறான் என்று சொன்னதும் - பிற்பாடு

உடனேயே அவ்யக்தத்தை ஜ்ஞேயத்வம் (அறியப்பட வேண்டிய ஒரு தத்வம்) என்று கூறுகிறபடியாலே - (யாரால் அறியப்பட வேண்டியது - முமுக்ஷுக்களால் மோக்ஷத்திற்காக அறியப்பட வேண்டியது) என்று சுருதி சொல்லியிருக்கிறது என்கிறான். நாம் - அது அவ்விதமில்லை என்போம். प्राज्ञः - பரம புருஷனே இந்த ஸ்லோகத்தில் தியானிக்கப்பட வேண்டியவன் - பிரதானமில்லை என்பதாகும்; (நிஷேதிக்கப்பட்டதால்) எங்கனமெனில் निचाय्यत्वेन प्रतिपाद्यते தியானிக்கப்பட வேண்டியது; புருஷார்த்த புத்தியா - மூல பிரகிருதி இல்லை. (பூர்வ பக்ஷியின் கருத்து) இங்கு மூல பிரகிருதியை முமுக்ஷுக்களால் அறியத்தக்கதாகக் கூறவில்லை. எனச் சென்ற சூத்திரத்தில் சொன்னது சரியில்லை என்பதாகும்).

சுருதியில் विज्ञानसारथिर्यस्तु मनः प्रग्रहवान् नरः । सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम् ॥ (கட. 1-3-9)

விக்ஞானம் சாரதியாகவும், மனத்தைக் கடிவாளமாகவும் கொண்டு - அந்த உபாஸகன் ஸம்சார அக்கரையை யடைகிறான் அதாவது மேலான விஷ்ணுவின் பதத்தை அடைகிறான்;

அதேமாதிரி இன்னொரு சுருதி — एषु सर्वेषु भूतेषु गूढोऽऽत्मा न प्रकाशते । दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ॥

எல்லாப் பொருள்களிலும் மறைந்து உறையும் இந்த பரமாத்மா பொதுவாக எவர்க்கும் எளிதில் புலப்படுகிறதில்லை. நுண்ணிய அறிவுள்ளவர்களாலே. தங்களது அறிவினாலேயே காணததகுந்தவர் - என்று இரண்டு மந்திரங்களிலும் - இந்த ப்ரகரணத்தில் "அஸப்தம்" என்று தொடங்கும் மந்திரத்திற்கு முன்னால் பரமாத்மாவே விஷயமாகிற படியாலே - இந்த இரண்டு மந்திரங்களிலும் பிராக்ஞனாகிற பரமாத்மாவே அடையத் தக்கவனாக உத்கோஷிக்கப்பட்டிருக்கிறான். ஆகையினால்தான் पुरुषान्न परं किञ्चित् - புருஷனைவிட மேலானவன் ஒன்றும் இல்லை - இதிலே புருஷ சப்தம் சாங்கியன் சொல்வது ஜீவனை; நாம் சொல்வது பரமாத்மாவாகும். இந்த மந்திரங்களுக்கு நடுவில் இது வருகிறது—புருஷ சப்தத்தால் படிக்கப்பட்டவன் சாங்கியன்

இருபத்தைந்தாவது தத்வம் என்கிறான். அது சரியில்லை இருபத்தாறுவது தத்வமான பரம புருஷனே ஆகும். அவனை உபாஸிப்பதால் - பலன் விஷ்ணுவின் பதம் ஓதப்படுகிறது.

அஸப்தம் அஸ்பர்ஸம் – இம்மாதிரி தர்மங்கள் பரம புருஷனுக்குத்தான் உண்டு என்பதை முண்டக சுருதி यत्तदद्रेश्यमग्राह्यम्— (மு. 2–1–6) அந்த பரமாத்மா காணப்படாதவன் – ஸ்பர்சிக்கப்பட முடியாதவன் அந்த பரம புருஷனுக்கு சப்த ஸ்பர்சாதி குணங்கள் இல்லை என்று ஓதப்பட்டிருப்பதை அத்ருஸ்யத் வாதிகுணகாதி கரணத்திலே நாம் கண்டுள்ளோம் அதே மாதிரி இங்கும் அஸப்தாதி குணங்கள் இல்லை என்று சொல்லப்படும் தத்வமும் பரமாத்மாவே.

மஹத: பரம் - என்கிற சுருதியிலும் (அது மஹத்தை விடப் பெரியது). (மஹத் - ஜீவன் - புருஷன்) (கட. 2-3-10): என்றும் बुद्देरात्मो महान् परः — புத்தியைவிட (மஹான்) – ஜீவன் - பெரியது என்று சொல்லியிருப்பதாலே. மஹான் என்று ஓதப்பட்ட ஜீவனைக்காட்டிலும் மேலான ஆத்மா - பரம புருஷன் என்பதாகும். (ஆத்மந் - அனுக்தம் மஹத் என்பதற்கு மஹத் தத்வமே). அதனால் இந்தப் பிரகரணத்தில் மூல பிரகிருதியை முமுக்ஷுக்களால் அறியத்தக்தாகக் கூறவில்லை என்கிறது - அசைக்க முடியாதது. (மூல பிரகிருதியை உபாஸிப்பதால் போகம் ஐஸ்வர்யம் - அணிமாதி ஸித்திகள் கிடைக்கலாம். ஆனால் மோக்ஷம் கிடைக்காது என்பது வைதிகர்களின் கருத்து. சாங்கியன் சொல்வது - மோக்ஷம் என்பது பிரகிருதி - புருஷனுக்குள்ள வித்யாஸத்தை நன்கு அறிவதால் யேற்படுவது. சூக்ஷ்மதசையில் அவ்யக்தமாகிற மூல பிரகிருதிக்கு அஸ்பர்சம் இருக்காது. விகாரங்களாகிற காரியங்களால் - மஹத்திலிருந்து உண்டு பண்ணப்பட்ட வைகளுக்கு யேற்படுவது).

ஸூத்ரம் :— त्रयाणामेव चैवमुपन्यासः प्रश्नश्च—(1-4-6)

த்ரயாணாமேவ சைவமுபந்யாஸ: ப்ரஸ்நஸ்ச - (1-4-6)

த்ரயாணாமேவ - (உபாயம் - உபேயம் - உபேதா ஆகிய) மூன்றைப் பற்றியே - ஏவம் (இப்படி முமுக்ஷுக்களால் அறியத்தக்கதாக உபந்யாஸ: — பதில் கூறப்பட்டிருக்கிறது — ப்ரஸ்நஸ்ச — அந்த மூன்றைப் பற்றியே - கேள்வியும் உள்ளது).

இந்த பிரகரணத்திலே மூன்று விஷயங்களைப்பற்றியே பிரஸ்தாபிக்கப் பட்டிகின்றன - அவை உபாயம், உபேயம், உபேதா (அதாவது முமுக்ஷு அனுஷ்டிக்கும் உபயமாகிற உபாஸனம்), உபேயம் (அடையப் படும் பரமாத்மா) உபேதா (அடைகின்ற ஜீவன்) ஆகிய மூன்றைப் பற்றியே கேள்வியும் பதிலும் இருக்கின்றன. அதை விவரிப்போம் - க்ஞேயத்வ உபந்யாஸம் - அறிய வேண்டியதை - கேள்வி பதில் மூலம் காணப்படுகிறது. ஆனால் சாங்கியனின் அவ்யக்தத்தைப் பற்றி (மூல பிரக்ருதியைப் பற்றி) அப்படி கேள்வியோ பதிலோ இல்லை. முமுக்ஷுவான நாசிகேதஸ் என்கிற பிரும்ம ரிஷியினால் யமனிடமிருந்து மூன்று வரங்கள் யாசிக்கப்பட்டு – அடையப் பெற்றன - முதல் வரத்தினால் - திரும்பப் போகும் தன்னைப் பிதா மனக்கலக்கம் நீங்கி - தன்னைக் கண்டதும் கனித்தருளும்படி - என்றும்; புருஷார்த்த யோக்யதை அளிப்பதற்குத் தகுதியை - அதாவது பிதா தன்னிடம் சந்தோஷமாக விருத்தல்; இரண்டாவது வரமாக, மோக்ஷ உபாய பூதமாக. விருப்பதும் - நாசிகேதஸ் என்கிற பெயரைச் கொண்ட அக்னி வித்யையும் கேட்டான். (கட. 1-1-26)

स त्वमग्निं स्वर्ग्यमध्येषि मृत्यो प्रब्रूहि तं श्रद्दधानाय मह्यम् ।
स्वर्गलोका अमृतत्वं भजन्ते एतद् द्वितीयेन वृणे वरेण ॥

மிருத்யு தேவதையே - நீ சொல்வாய் - இரண்டாவது வரமாக. மிக்க அறிவுள்ள நீ ஸ்வர்க்கம் (மோக்ஷம்) இது பற்றிய அக்னி உபாசனையைப் பற்றிச் சொல் - எதனால் மேலான புருஷார்த்தம் அடையப் படுகிறதோ - எதில் சிரத்தையை உடைய எனக்கு அதை உபதேசிப்பாய். ஸ்வர்க்க லோகம் (மோக்ஷம்) சென்றவர்கள் அம்ருதத்தையடைகிறார்கள். (ஜரா மரணங்களுக்கு இடமில்லாததான் - ஸ்வர்க்கம் (மோக்ஷத்தை) பெற அக்னி விஷயமாக - 2வது வரம் (இது பிராகிருத ஸ்வர்க்கம் இல்லை - மோக்ஷம் ஆகும்); அம்ருதத் வத்தைப் புகழ்கிறார்கள் - என்றும் ஜனன மரணமில்லாமையும் சொல்வதினால் அம்ருதத்வமே ஆகும். ஏனெனில் பிற்பாடுவரும் சுலோகத்தில். (கட. 1-26ல்)

त्रिणाचिकेतस्त्रिभिरेत्य सन्धिं त्रिकर्मकृत् तरति जन्ममृत्यू ॥

என்கிற பதிலிலிருந்து தெரியவரும் (யாகங்களைச் செய்வதால் அஸ்திரமான பலம் கிடைக்கிறபடியால். அதனாலே மோக்ஷ உபாயத்தை உபதேசிப்பீர் - என்று நாசிகேதஸ் கேள்வி கேட்க - யமன் பதில் உரைத்தான் - எவன் நாசி கேதஸ்ஸாக்னியின் மூன்று அனுவாகங்களை ஓதுகிறானோ, இந்த அக்னி உபாஸனையினால் மூன்று அக்னிகளைத் திருப்தி செய்கிறானோ-அதனால் மோக்ஷத்தை யடைந்து ஜரா மரணங்களைத் தவிர்க்கிறானோ என்கிற பதில் மூன்றாவது வரமாக மோக்ஷ ஸ்வரூபத்தைப் பற்றியது. அதை அடைவிக்கும் உபாயம், அடையப்படும உபேயம் (ஸ்வரூபம்) உபேதா (அடைகின்ற ஜீவனுடைய ஸ்வரூபம்); இப் மூன்றையும் விளக்கும் உபாஸன ஸ்வரூபத்தை யமனிடமிருந்து கேட்டான். (கட. 1-1-20).

येयं प्रेते विचिकित्सा मनुष्ये अस्तीत्येके नायमस्तीति चैके ।
एतद्विद्या मनुशिष्टस्त्वयाऽहं वराणा मेव वरस्तृतीयः ॥

ஒருவன் இறந்த பின்பு - அவனைப்பற்றிய சந்தேகம் - இறந்தவன் இருக்கிறானா, இல்லையா என்று ஐய முறுகின்றனர். உன்னால் சிக்ஷிக்கப்பட்டு - நான் தெளிவடைய வேண்டியது - இதுதான் என் மூன்றாவது வரம். உண்மையில் ஆத்ம தத்வம் எப்படி இருக்கிறது என்று கேட்டான். யமன் பல வழியில் வேறு பலன்களை அளித்து - நாசிகேதஸ்ஸின் கேள்வியை மாற்ற முயன்றான் - நாச்கேதஸ் சிறிதும் மாறவில்லை - இதனால் சந்தோஷித்து யமன் பதிலாக உரைத்தான் - மோக்ஷத்தைப் பற்றி உபதேசித்தான். உபாய - உபேய - உபேதா - மூன்றையும் பற்றிக் கேட்டான். உபதேச யோக்யதை நன்கு அறிந்து கொண்ட பிறகு, யமன் உபதேசம் செய்தான் - (கட. 1-2-12).

तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं गुहाहितं गह्वरेष्ठं पुराणम् । अध्यात्म
योगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति ॥

எவராலும் காண முடியாதவனும், (கர்மத்தினால்) மறைக்கப் பட்டவனும், எல்லா ஜீவராசிகளிலும் உள் நுழைந்து வியாபித்திருப்பவனும், ஹ்ருதய குஹையிலிருக்கும் அந்தர்யாமியாக விருப்பவனும், அநாதியாக விருப்பவனுமான தேவனை (பரமாத்வாவை) ஆத்மாவினிடத்தில் நிலைத்த மனம் உள்ளவர்களாக,

ஜீவாத்ம ஞானத்தாலே அறிந்து, அறிவாளியான உபாஸகன் இன்ப துன்பங்களை விடுகிறான் - இதனால் உபேயமான (ப்ராப்ய) ஸ்வரூபமான பரமாத்மாவைப் பற்றியும் - உபாயமான (பிராபகமான) உபாஸனத்தையும், உபேதா (பிராப்தாவான) முக்த ஜீவனின் ஸ்வரூபத்தையும் பொதுப்படையாக உபதேசிக்க; மீண்டும் அவைகளின் ஸ்வரூபத்தை நன்கு அறிவதற்கு - கேள்வி கேட்டான் - देवं मत्वा - அவன் அவனை (தேவனை) (பரமாத்மவை) அறிகிறான் - இதுவே உபேயம் - உபாயமாகிற உபாஸனையினால் காட்டப்பட்ட பிரும்ம ஸ்வரூபம் - பிராப்ய பூதனை பரமாத்மா (தேவன்); அத்யாத்ம யோகாதி கமேந - உபாஸகனின் ஸ்வரூபம் - எந்த ஆத்ம ஞானத்தினால், அந்த ஞானம் யோக முறையினால் ஆத்மநியான யோகத்தினால் அடையப்படுகிறது - இதுதான் முதலில் தெரிந்து கொள்ள வேண்டியது - பிரும்மோபாஸனையின் நிஜ ஸ்வரூபம்; அடைகிறவனான உபாஸகனின் (ஜீவனின்) ஸ்வரூபம் - मत्वा धीरो हर्षशोको जहाति - பரமாத்மாவை அறிந்தவுடனே - தீரனாகிற அறிவாளி ஹர்ஷ சோகங்களை விடுகிறான், என்று யமன் பதில் உரைத்தலும் - மீண்டும் நாசிகேதஸ் மூன்றும் கேள்வி கேட்டான், (கட. 1-2-24).

எதை விரும்பி பிரும்மசர்யம் அனுஷ்டிக்கப்படுகிறதோ, அதை நான் உனக்குச் சுருக்கமாகச் சொல்வேன் - அதுதான் ஓம் என்கிற பிரணவம் (கட. 2-11-15). இவ்விதமாக அவனுக்கு உபதேசித்து - இம்மாதிரி பிரணவத்தைப் புகழ்ந்து பேசியும், மீண்டும் உபேதாவின் (முக்த ஜீவனின்) ஸ்வரூபத்தையும் சொல்லி இம்மாதிரி சொல்லி - न जायते म्रियते वा विपश्चित् - அவன் பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை என்று பிரத்யகாத்மாவின் ஸ்வரூபத்தையும் சொல்லிற்று. அடைய வேண்டிய இடமோ - பிராப்யமோ - மேலான விஷ்ணுவின் பரமபதம் - ஸ்வரூபத்தையும் சொல்லி - अणोरणीयान् - அணுவை விடச்சிறியவன் - என்று ஆரம்பித்து - முடிக்கிறபோது - क इत्था वेद यत्रसः - எவன் அவனுடைய மகிமைகளை எவ்விதம் அவன் இருக்கிறான் என்று - அறிய முடியும் ? (கட. 2-2-20-25). அந்த சுருதியில் नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन - இந்த ஆத்மா பிரவசனத்தினாலும், மேதையினாலும் பலவிதமாகக் கேட்பதாலும் அறியப்பட முடியாதது. (2-11-23) என்று ஆரம்பித்து, மேலும் சொல்லப்படுகிறது - உபாய பூதமாகிற உபாஸனத்தினால் பக்தி ரூபமாக பரிமளிக்கிறது. (2-3-2)

[பக்கம் 24-ல் கடைசி பாராவை விட்டு விட்டு - நாசிகேதஸ் மூன்றும் கேள்வி கேட்டான். (கட 1-2-24). அதற்கு விளக்கம்:—

ஜீவாத்மா தன் ஞானத்தைக் கொண்டு பரமாத்மாவை உபாஸித்து இன்பதுன்பங்களை நீங்கப் பெறுகிறான். இதில் தேவம் பரமாத்மாவைக் குறிப்பதால்—விசேஷ்யமாயும் மற்ற த்விதீயாந்த பதங்கள் இதற்கு விசேஷணங்களாயும் நிற்கின்றன. குஹாப்ரவேசம் பரமாத்மாவுக்குச் சரீரமாகும் அத்யாத்ம யோகம் என்றால் வெளி விஷயங்களிலிருந்து மனத்தை திருப்பி - தன் ஆத்ம ஸ்வரூபத்தில் நிலை நிறுத்தல். முதலில் ஜீவாத்மாவின் அனுபவம்; பிறகு அவனுக்கு அந்தராத்மாவாக விருக்கும் பரமாத்மாவின் அனுபவம். முதலில் யமன் பொதுப்படையாக உபதேசிக்க—அந்த மூன்றின் ஸ்வரூபத்தையும் பற்றி மேலும் தெளிய விக்க—உபதேசித்தான்.

அவன் "தேவம் மத்வா" (பரமாத்மாவை அறிந்த பிறகு) —தீரனுகிற அவன் ஹர்ஷ சோகங்களைக் கடக்கிறான். இவ்வாறு பொதுப்படையாக (ஸாமாந்யேந) உபதேசித்ததும், நாசிகேதஸ் ப்ரீதியடைந்தவனாக— देवं मत्वा —அந்த பரமாத்மாவை அறிகிறான் —என்பது யோகியனுடைய தியான யோகத்தினால்—ஆத்ம ஞானத்தை அடைந்தவனாக-அதைத்தான் முன்பு அவன் தெரிந்து கொண்டிருக்க வேண்டும்-அந்த ஞானத்தை அடைந்தவனாக-அதாவது ப்ராப்தா (உபாஸகனுடைய ஆத்ம ஸ்வரூபத்தை—உபேயம் (அடையப்படும் பலன்—புருஷார்த்தம் இதனை அறிந்தவனாக—

उपास्यतया निर्दिष्टस्य प्राप्य भूतस्य देवस्य --

திருப்தியடைந்தான் (நாசிகேதஸ்) அதாவது (மீண்டும விளக்கப்படுகிறது.

अध्यात्मयोगादिगमेन—

அத்யாத்மயோக சாஸ்திரத்தினாலே—பரபிரும்ம உபாஸனையின் ஸ்வரூபம் எத்தகையது — என்பதாகும்; இதனால் உபாஸகன்—உபாஸ்யப் பொருள் - இவைகளின் ஸ்வரூபம், உபாயமாகிற உபாஸனை—உபேயம்—பலனாகிற விஷ்ணுவின் பதம்—எல்லாம் சொல்லப்பட்டதாகும்.

मत्वा धीरो हर्ष शोकौ जहाति—

*தீரனுகிற அறிவாளி அந்த பரமாத்மாவையும் (மற்றவைகளை யும்) அறிந்து ஹர்ஷ சோகத்தைக் கடக்கிறுன் :—*

இந்த மூன்று கலேயும் மறுபடி தீர விசாரிக்க-நாசிகேதஸ் மீண்டும் தர்மராஜனை மூன்ருவது வரத்தையும் கேட்டான்—இத ஞல் காட்டப்படுகிறது. பிரும்மோபாஸநம்—ஸ்வரூபவிசோதநாய —மீண்டும் கேள்வி கேட்டான்-என்பதாகும்.

ஸ்ரீபாஷ்யம் :— अन्यत्र धर्मा दन्यत्रा धर्मा दन्यत्रा स्मात् कृता कृतात् । अन्यत्र भूताद्भव्याच्च यत्तत् पश्यति तद्वद

யமதர்மராஜா—மனித முயற்சியால் சாதிக்கப்பட வேண்டிய தும் பூதபவ்ய காலங்களில் உள்ளதும், தர்மாத் (அல்ப பலன்களை அளிக்கும்) தர்மம்—புண்யம்; அதர்மம் பாபம் ஆகிய வற்றைக் காட்டிலும் மேலான ப்ராப்யம் (உபாயம்) லோகபிரஸித்தமான உபாயத்தைக் காட்டிலும்; அந்யத்ரபஸ்யஸி—எந்த உபாயத்தை நீர் அறிவீரோ—அதை எனக்கு உபதேசிக்கக்கடவீர் இங்கு ஜீவாத்மாவை விட அந்யத்ர எந்த பிராப்தாவை அறி கிறீரோ—அதைச் சொல்வீர், உபாயம் என்பது உபாஸனம். பிருஹ்மமே உபேயம் (அடைய வேண்டிய புருஷார்த்தம்-மோக்ஷம்) உபேதா ப்ராப்தாவான ஜீவனுகிற உபாஸகன்; அந்யத்ர— என்பதற்கு விலக்ஷணம் எனப் பொருள் கொள்ளலாம், உபாயம் பலம்—உபேதா ஆகிய மூன்றுமாகும், மோக்ஷோபயம்—பலனுக மோக்ஷம். இதைப் பெறுகிற ஜீவன் ஆகிய மூன்று விஷயங் களாகும்.

இவ்விதமாக கேள்வி கேட்கப்பட்ட யமன்—ஸகலேதர (விலக்ஷண) அதீத (காலாதீத) அநாகத வர்த்தமான ஸாத்ய— ஸாதன—ஸாதக—விலக்ஷணே—த்ரயே பிருஷ்டே—என்கிறுர் பக வத்ராமானுஜர்). இதற்குப் பதிலாக, முதலில் யமன் நாசி கேதஸ்ஸுக்கு ஓம் என்கிற பிரணவத்தை உபதேசித்தான். அதைப்புகழ்ந்தான். அதன் அர்த்தவாச்யமான பிராப்யஸ்வரு ரூபம், (உபாயம்), அதில் உள்ளடங்கினதும் - பிராப்த்ரு ஸ்வரு பம் (ஜீவஸ்வரூபம்) இந்த இரண்டும் வாசக ரூபமான உபாயம்

அந்த பிரணவத்தின் சப்த (மும்மாத்திரைகளடங்கிய) ஸ்வரூபம், ஸாமாந்யமாக (பொதுவாக) அறியப்படும். எல்லாவற்றையும் உபதேசித்து மீண்டும் யமன் உபதேசித்தான்.

सर्वे वेदा यत् पद मामनन्ति तपांसि सर्वाणि च यद्वदन्ति।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत् ते पदं संग्रहेण ब्रवीमि।

ओमित्ये तत् — என்கிறான். 24-ம் பக்கம் கடைசி பாராவையும் பார்க்கவும்).

ஓம் என்பதை - விளக்கிச் சொல்லி - எல்லா வேதங்களும் எந்த புருஷார்த்தத்தை உத்கோஷிக்கிறதோ - எதை எல்லாம் தவங்களும் பலனாக உடையவை என்று கோஷிக்கின்றனவோ - எதை விரும்பி மனிதர்கள் பிரும்மசர்யத்தை அனுஷ்டிக்கிறார்களோ அவைகளை நான் உனக்குச் சொல்கிறேன்: அதுதான் பிரணவமாகிற ஓம் என்பதாகும், இவ்விதம் உபதேசித்த பிறகு யமன் மீண்டும் சொன்னான் - பிரணவத்தை இவ்விதம் புகழ்ந்த பிறகு - ஜீவனுடைய நிஜஸ்வரூபத்தைச் சொல்லிய பிறகு இவன்தான் பிராப்தா-அடைகிறவன் என மேலும் சொன்னான்- பிரத்யகாத்மாவின் ஸ்வரூபத்தை - न जायते म्रियते वा विपाश्चित् என்பதாகும். (விபஸ்சித் - முக்த தசையில் இருக்கப்போகும் ஸர்வக்ஞத்வம் - அத்தகைய ஜீவன் பிறப்பதுமில்லை மரிப்பதுமில்லை என்பதாகும் - (கட. 11-18) ஆத்மா நித்யம் - தேகவியாகத்தினால் மரணமும். தேக சம்பந்தத்தால் பிறப்பும் ஏற்படுகிறது என்கிற அர்த்தம்.

பிராப்யனை பரம புருஷன் - ஸ்ரீமந் நாராயணனுடைய வைகுண்டலோகம் - அந்த விஷ்ணுவின் ஸ்வரூபம். अणोरणीयान कட 1-2-20 அணுவைக் காட்டிலும் அணுவானவன்; क इत्था वेद यत्र (கட. 1-2-25) அவன் இருக்கும்படியை யார் அறிவார்?; இன்னும் பலவற்றை - इत्यन्तेनोपदिशन् मध्ये - முடிக்கிறதிற்கு முன்பு மத்தியிலே - இவ்விதம் கூறினான்.

नायमात्मा प्रवचेनेन लभ्यो न मेधया न ब्रह्मना श्रुतेन वा—

இந்த ஆத்மா (இங்கே பரமாத்மா) ப்ராபகமான உபாஸனைத் யும் - இந்த பரமாத்மா. ப்ரவசனத்தினாலோ, மேதையினாலோ பலதடவைகள் பலபேர்களிடமிருந்து கேட்பதாலோ அறியப்பட

மாட்டான். (எவனை அவன் (பரமாத்மா) வரிக்கிறானோ - அவனால் (உபாஸகனால்) அவன் (பரமாத்மா) அடையப் பெறுகிறான். இம்மாதிரி வாக்கியங்களாலே - யமன் நாசிகேதஸ்ஸுக்கு உபாய பூதமும் உபாஸனையாகிற பக்தி ரூபத்தையும் உபதேசித்தான், இந்த சுருதியிலே, ऋतं पिबन्तौ - கர்ம பலன்களைப் புசிக்கிற இந்த இரண்டு என்பதில் உபாஸ்யப் பொருளான பரமாத்மா உபாஸகனாகிற ஜீவனுடன் சேர்ந்து இருப்பதாக ஓதப்படுவதால்) உபாஸ்ய உபாஸக ஸஹாவஸ்தை - உபாஸனை செய்வதற்கு எளிது—எனக் கூறப்படுவதால். आत्मानं रथिनंविद्धि - ஆத்மாவை சாரதியாக நினைத்துக்கொள் - என்பவைகளால் சொல்லி முடிக்கிற போது दुर्गं पथस्तत् कवयो वदन्ति - (கட. 1-3-14) கவிகள் (மேலான அறிவாளிகள்) இந்த ஆத்ம வழியை மிகக்கடினம் என்றுசொல்கிறார்கள் - என்று ஓதுவதால் முடிவில் உபாஸன பிரகாரம்—. (नायमात्मा - என்கிற மந்திரம் பிராபகமான உபாஸனத்தையும்; ஆத்மாநம் ரதினம் வித்தி – என்பதால் உபாஸகனையும்) நடுவிலே வரும் துர்க்கம் பதஸ், தத் கவயோ: வதந்தி - உபாஸனம் செய்யும் வழியையும்) தத் விஷ்ணோ; பதம் - உபாஸனத்தால் அடையப் பெறும் வைஷ்ணவ பரமபதம் - மோக்ஷபிராப்தி ஸ்வரூபம் எல்லாம் சொல்லப்பட்டதாம், இப் பிரகரணத்தில் முமுக்ஷுக்களால் அறியப்படும் கேள்வியும் பதிலும் இருக்கிறதே ஒழிய - மூலபிரகிருதியைப் பற்றி யாதொரு பிரஸ்தாவமில்லை.

இவ்விதம் சொல்லிவிட்டு — अशब्दमस्पर्शम् — இத்யாதிகளால் உபஸம்ஹாரம் செய்யப்படுகிறது. (அந்த பரமாத்மாவுக்கு-சப்தமில்லை. ஸ்பர்சமில்லை - இந்த குணங்களை உடையவர்) - என்று முடிகிறது சுருதி. ஆகவே இந்த அதிகரணத்தில் மேல் கூறப்பட்ட மூன்றுமே (த்ரயாணாமேவ) அறியத்தக்கதாக உபந்யாஸிக்கப்படுகிறது—கேள்விகள் பதில்களாலே. ஆகையாலே அவ்யக்தம் கபில தந்த்ரத்தினர்களால் அறியப்படும் பிரதானமாக வில்லை. மூல ப்ரகிருத்யைப் பற்றி அவ்விதம் பிரஸ்தாவம் இல்லாதபடியால் அவ்யக்த சப்தத்தினால் சாங்கியர்கள் கூறும் மூல பிரகிருதியில்லை என்பதாகும்—அது சரீரத்தைக் குறிக்கும்.

ஸூத்ரம் महद्वच्च (1-4-7)

மஹத்வச்ச (1-4-7)

மஹத் வத் ச (புத்தேர் ஆத்மா மஹாந் பர:— என்கிற சுருதியில்) எப்படி மஹான் கிரஹிக்கப்படவில்லையோ அப்படியே மஹத: பரமவ்யக்தம் - என்ற விடத்திலும் மூல பிரகிருதி க்ரஹிக்கப் படவில்லை.

எப்படி புத்தேராத்மா மஹாந்பர:—என்ற விடத்தில் ஆத்ம சப்தம் ஸாமாநதி கரண்யத்திலுலே கபில தந்திர ஸித்தமான மஹத்தத்வம் என்பதோடு ஸாம்யம் ஓதப்பட்டாலும் அதாவது மஹானை ஆத்மாவென்று படித்ததினுல் – அதேபோல

एवमव्यक्तमप्यात्मनः परत्वेनाभिधानाच्च —

அவ்யக்தமும் ஆத்மாவுக்கு மேலானதாகச் சொல்லு வதால் - இந்த அவ்யக்தம் கபிலரின் சாங்கிய மத சித்தமான அவ்யக்த மன்று என்று விளங்குகிறது (பிரதானமில்லை. என்பதாகும்).

चमसाधिकरणम् (1-4-2) (ஸ்வே-4)

ஸூத் :— चमसवदविशेषात् (1-4-8)

சமஸ வத விசேஷாத் (1-4-8)

சமஸ வத் - சம ஸத்தைப்போல, அவிசேஷாத் - விசேஷிக்கப் படாமையால் (அஜா எனப்பட்டது அப்ரஹமாத்மக மூல பிர கிருதி யன்று)

முன் அதிகரணத்தில் கபில தந்திர ஸித்தமான அவ்யக்தம் எனப்படும் மூலப்ரகிருதி ஸ்வதந்தரமாயுள்ளது - என்பது தள் ளப்பட்டது, "அஜாமேகாம்" - என்று தொடங்கும் ஸ்வேதாஸ் வர உபநிஷத் மந்திரத்தில் மூல பிரகிருதிக்கு ஸ்வதந்தர காரணத் வம் கூறப்பட்டதாலே - அதனுல் ஆட்சேபம் எழ - இந்த ஆக்ஷே பம் இங்கு தள்ளப்படுகிறது.

இங்கேகூட கபிலதந்திர ஸித்த பிரகிரியா - வழி - நிரஸிக்கப் படுகிறது: ஆனுல் பிரகிருதியின் நிஜஸ்வரூபம்-மறுக்கப்படவில்லை

*அதாவது பிரும்மத்தை ஆத்மாவாகக் கொண்ட பிரகிருதி - மஹத் அஹங்காரங்களின் ஸ்வரூபம் - மறுக்கப்படவில்லை; ஏனெனில் சுருதி ஸ்மிருதிகள் அவைகளை பிரும்மத்தை ஆத்மாவாக உடையவை என்று சொல்கின்றன.*

*அதர்வணிகர்கள் ஓதுகிறார்கள்—(மந்த்ரி (1)*

**विकारजननीमज्ञामष्टरूपामजां ध्रुवाम् । ध्यायतेऽध्यासिता तेन तन्यते प्रेर्यते पुनः । सूयते पुरुषार्थं च तेनावाधिष्टिता जगत् । गौरनाद्यन्त वती सा जनित्री भूतभाविनी । सिताऽसिता च रक्ता च सर्वकामदुघा विभोः । पिवन्त्येनाम विषमामविज्ञाताः कुमारकाः । एकस्तु पिवते देवः स्वच्छन्दोऽत्रवशानुगाम् । ध्यानक्रियाभ्यां भगवान् भुङ्क्तेऽसौ प्रसभं विभुः । सर्वसाधारणीं दोग्ध्रीं पीड्यमानां तु यज्वभिः—**

*பிரகிருதி எல்லாவித காரியங்களுக்கும் (மாறுதல்களுக்கும்) மூலம் - அது காரியங்களை உண்டுபண்ணுகிறது - அசேதனம்.*

*அக்ஞாம் - எட்டு ரூபங்களாகிற மஹத், அஹங்காரம் தன் மாத்திரைகள் பஞ்சபூதங்கள் - அஜாம் (பிறப்பில்லாதவள் த்ருவாம் (அழியப்படாதவள்); அத்தகைய பிரகிருதி தியானிக்கப் படுகிறது - அத்யஸிக்கப்படுகிறது. அவளால் பலவிதமாக விரியும் படி உண்டாக்கப்படுகிறது. அந்தப்பிரகிருதி புருஷனுடைய புருஷார்த்தங்களை நிறைவேற்றுகிறது - அவளால் அது அத்யஸிக் கப்பட்ட இந்த ஜகத் - இருக்கிறது, அதுவே அந்தமில்லாத பசு வாகவிருக்கிறது — அதுவே எல்லாவற்றையும் உண்டாக்கும் ஜனித்ரீ - பூதபாவனீ - அது வெளுப்பாயும் - கருப்பாயும் சிவப் பாயும் ஒரே சமயத்தில் விளங்குகிறது. அதுதான் பரமாத்மா வின் காமதேனு - ஸர்வ இஷ்டங்களைப் பூர்த்தி செய்கிறது. அறிவில்லாத சிறுவர்கள் அந்த பசுவின் பாலைப் பருகுகிறார்கள். அவரவர்களின் கர்மானுஸாரமாக அது வித்யாஸம் பாராட்டா மல் பாலை சுரக்கிறது, ஆனால் தேவனே அந்தப் பாலை தன் இஷ்டப்படி பருகுகிறார் - அவளைத் தன் அதீனத்தில் வைத்து, கொண்டு; மேலான பிரபு - பகவான் தன் நினைவிலும் - காரி யங்களாலும் (ஸ்ருஷ்டியிலும்) அந்தப்பசுவை நன்கு உபயோகப்*

படுத்திக் கொள்கிறார் – அவளே யாவருக்கும் இன்பம் அளிப்பதற்க்காக - பாலை சுரக்கிறாள். யாகயக்ஞம் செய்தவர்களும் அதனை அனுபவிக்கிறார்கள். (சூலிகா 2-3-7); இருபத்து நான்காவதாக எண்ணப்பட்டுள்ள இந்த அவ்யக்தம் - அது வ்யக்தம் என்கிற பெயரால் ஸ்ருஷ்டியில் – அழைக்கப்படுகிறது, (சூலிகா 2-14 இங்கே பிரகிருதியின் நிஜஸ்ருபம் சொல்லப்பட்டிருக்கிறது.

மேலான பரம புருஷனை பிரகிருதி முதலிய தத்வங்கள் தங்களது ஆத்மாவாகக் கொண்டால் - அப்போது பரமபுருஷன் இவ்விதம் சொல்லப்படுகிறான்.

**तं षडविंशकमित्याहुः सप्तविंशमथापरे । पुरुषं निर्गुणं साङ्ख्य-मथर्वशिरसोविदुः—**

சிலர் சொல்கிறார்கள் - அவன் 26வது தத்துவம்; இன்னும் சிலர் அவனை 27வது தத்துவம் என்கிறார்கள் - அதர்வசிரஸை அறிந்தவர்கள் புருஷனை நிர்குணம் என்றும் அறிவினால் அறியத் தக்கவன் என்கிறார்கள். (நிர்குணம் - ஸத்வர ஜஸ்தமஸ் ஸாதிகளால் வசீகரம் படாதவன் - சாங்கியம் - ஜீவன் என்கிற தத்வ எண்ணிக்கை கொண்டவன், ஷோடச பஞ்ச பூதங்கள் மனத்துடன் சேர்ந்த பத்தொன்று இந்திரியங்கள் பிரும்ம பவதி முக்தோ பவதி) 24 தத்துவங்கள் - முந்தியே கூறப்பட்டன, 25வது புருஷன் என்கிற ஜீவன்; 26வது – காலம் என்பதாகவும் 27வது பிரும்மமாகவும் சொல்கிறார்கள் ).

இன்னும் சில அதர்வணிகர்கள் (கர்போ ப) சொல்கிறார்கள் अष्ठो प्रकृतयः षोडश विकाशः—பிரகிருதியின் ஆதி ஸ்திதி எட்டு விதமாக விருந்தது - அதன் கார்யங்கள் பதினாறாக விருக்கின்றன— என்கிறார்கள்,

(ராமானுஜரின் அபிப்ராயம் - சாங்கியனின் பக்ஷத்திற்கு சுருதி ஸம்மதமில்லை என்கிறார். முதலில் சாலிகா உபநிஷத் (மந்திரிகோபநிஷத்); அதுபோல கர்ப்ப உபநிஷத் – இரண்டும் கூறப்பட்டிருக்கின்றன, பிரகிருதி - எட்டு ஸ்திதி என்பது பிரகிருதி - மஹத் - அஹங்கார - ஐம்பூதங்கள்)— இதை பகவத் கீதை 7-4 வுடன் ஒப்பு பார்க்கவும் இதற்குப் பிறகு ஆரம்பிக்கும்

ஸமஷ்டி ஸ்ருஷ்டியில் ஜீவர்களுக்கு தேகங்கள் ஏற்படுகின்றன- அப்போது ஸ்ருஷ்டி வயஷ்டி ஸ்ருஷ்டியாகிறது. சதுரானனன் (பிரும்மா) முதல் வ்யஷ்டி ஸ்ருஷ்டி ஆவார். மூன்று நிறங்களாகிற வெள்ளை கருப்பு சிகப்பு - முக்குணங்களாகிற ஸத்வரஜஸ்தமஸ் ஸைக் குறிக்கும.

ஸ்ரீபாஷ்யம்:—

ஸ்வேதாஸ்வரர்கள் (உபநிஷத்) சொல்கிறார்கள் - பிரகிருதி புருஷன் - ஈஸ்வரன் இவர்களின் ஸ்பரூபம் இத்தகையது - பரமாத்மா (தேவன்) க்ஷரம் அக்ஷரம் கொண்ட எல்லா உலகத்தையும் தாங்குகிறன் - அந்த உலகம் வ்யக்தம் யென்றும் அவ்யக்தம் என்றும் கூறப்படுகிறது - க்ஷரம என்பது பிரகிருதி (அழியும் தன்மை – விகார ஜன்யம் - மாறுதலை யடையக்கூடியது) அக்ஷரம் - ஜீவன் என்பவன் தனக்குத்தானே எஜமானன் அல்ல (அநீஸன்), அவன் பந்தமாகிறன் – ஏனெனில் போக்தாவாக விருப்பதால் - பரமாத்மாவை அறிந்ததும் - எல்லாப் பந்த பாசங் களிலிருந்து விடுதலை யடைகிறன், க்ஞா அக்ஞா (இரண்டு பேர்கள் அறிவுள்ளவன் - அறிவில்லாத அசேதனம்) இருவர் களுள்ளே ஒன்று எஜமானனுகவும் மற்றொன்று அடங்கினவாக வும் இருக்கிறார்கள் (ஈச: - அநீச:) அவர்களுள் அஜ (பிறப் பில்லாத பிரக்ருதி) மற்றொருவனுடைய போக்யதுக்காக விருக் கிறபடியால; ஜீவன் போக்தாவாகவும - பிரக்ருதி போக்யமாகவு மிருக்கிறது) ஆத்மா அனந்தாத்மா என்று பெயா கொணடது - அது விஸ்வ ரூபத்தை உடையது – அது அகர்த்தாவாகவும் இருக்கிறது - எப்பொழுது இவ்விதமான மூன்றையும் அறிகி றரோ - அப்போது அவன் பிரும்மத்தை அடைகிறன், ஸ்வே - 1-7 க்ஷரம் பிரதானம்; அக்ஷரம் (அழிவில்லாதது) அம்ருதம் அதுவே ஹர (ஜீவன்) என்றும்; தேவன் (பரமாத்மா) ஒன்று என்றும் - அவரே க்ஷரமான பிரதானத்தையும் அக்ஷரமான ஜீவனையும் ஆள்கிறர்; அந்த பரமாத்மாவையே அடிக்கடி தியானிப்பதாலும், யோகத்தை அப்யஸிப்பதாலும் இந்த சேதன அசேதன தத்வங்களோடு கூடினவராக விருக்கும் அந்த பரமாத் மாவை அடைவதால் அக்ஞானம் என்பது முழுவது - அழிகிறது.

(क्षरं प्रधानम मृताक्षरं हरः क्षरात्मनावीशते देव एकः । तस्या-भिध्यानात् योजनात् तत्त्व भावाद् भूयश्चान्ते विश्वमायानिवृत्तिः—

இதே படி ஸ்வே 4-1-10-ல்

छन्दांसि यज्ञाः क्रतवो व्रतानि भूतं भव्यं यच्च वेदा वदन्ति । अस्मान्मायी सृजते विश्वमेतत् तस्मिंश्चान्यो मायया । संनिरुद्धः ।

ஸ்வே. 2-4-9ல்

मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तं महेश्वरं । तस्यावयव भूतेषु व्याप्तं सर्वमिदं जगत् ।

வேதங்கள், யக்ஞங்கள், க்ருதுக்கள், (வைதிக சடங்குகள்) விரதங்கள் ஸம்ஸ்காரங்கள் - பழங்காலத்து வஸ்துக்கள் - நிகழ் காலம் - வருங்காலம் வஸ்துக்கள் — இவை எல்லா வற்றையும் சொல்லுகிற வேதங்கள் - இவைகளிலிருந்து மாயிந் - பரமாத்மா (மாயையை - தன் வசம் வைத்திருப்பவன்) இந்த விஸவத்தைப் (உலகத்தைப்) படைக்கிறார். இந்த உலகத்தில் அன்ய (இன்னொரு வஸ்து - அதாவது ஜீவன் மாயையினால் கட்டப்படுகிறான் - (ஸ்வே. 4 - 9) இந்த பிரகிருதி மாயையாக விருக்கிறது என்பதையும பரமாத்மாவை "மாயிநம்" பரமேஸ்வரர் - என்றும் சொல்லப்படுபவர். (மாயிந் - மாயையை தன் வசம் வைத்திருப்பவர்) ஆகவே இந்த ஸம்பூர்ண உலகம் முழுவதும் அவருடைய அவயவ பூதங்களால் நிறப்பப் பட்டிருக்கிறது. பிற்பாடு இந்த சுருதியும் காணப்படுகிறது. ஸ்வே 6-16

प्रधान क्षेत्रज्ञपतिर्गुणेशः संसारमोक्षस्थितिबन्धहेतुः —

அந்த பரமாத்மா பிரகிருதிக்கும் க்ஷேத்ரக்ஞனாகிற ஜீவனுக்கும் பதி (ஈஸ்வரர்); அவரே ஸத்வரஜஸ் ஸாதி குணங்களை ஒழுங்கு படுத்துகிறவர். அவரே ஸம்ஸார மோக்ஷத்திற்கும் — ஸ்திதி பந்தத்திற்கும் காரணமாகிறார்.

(இங்கே அவ்யக்தம் - ஜீவனையும், வ்யக்தம் பிரதானத்தையும் குறிக்கும். 1-9ல் சேதனாகிற தேவன் (பரமாத்மா) — அறிவில்லாத அசேதனம், ஜீவன்; அதற்கு அடுத்த மந்திரத்தில் ஆத்மாவை

(ஜீவனை) ஹரன் என்றும் - ஏனெனில் அவன் பிரகிருதியைத் தன் போகத்துக்காக வைத்திருப்பவன். 4-9ல் மாயா என்பது பிரகிருதி - அது பல விசித்ர மாறுதல் களடங்கிய ஸ்ருஷ்டிக்குக் காரணமாகிறது. 4-10ல் பரமாத்மாவின் அவயவங்கள் - பலஜீவர்களாகும்.

ஸ்மருதியும் இவ்விதமே சொல்கிறது - (கீதை 13-19-22).

**प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि । विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृति संभवान् । कार्य कारण कर्तृत्वे हेतुः प्रकृति रुच्यते । पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते । पुरुषः प्रकृतिस्थोऽपि भुङ्क्ते प्रकृतिजान् गुणान् । कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ।**

அர்ஜுனா, நீ அறிவாய். ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற பிரகிருதி ஜீவாத்மா என்ற இவை இரண்டையும் அநாதி - ஆதி அந்த மில்லாதது என்று; ஸம்சார பந்தத்திற்குக் காரணங்களாகிற ஆசை த்வேஷம் முதலியவைகளையும் மோக்ஷத்திற்குக் காரணங்களாகிய அமாநித்வம்-(கர்வமில்லாமை முதலிய ஆத்ம குணங்களையும்) பிருகிருதியிலிருந்து உண்டானவை என்று அறி. (அதாவது) அநாதி காலமாக ஜீவாத்மாவுடன் சேர்ந்தே விருக்கிற - சரீரமாக மாறியிருக்கிற பிரகிருதி - தன் விகாரங்களாகிய ஆசை த்வேஷம் முதலியவற்றினால் ஜீவாத்மாவின் ஸம்சார பந்தத்திற்குக் காரணமாகிறது. அதனால் பிரகிருதியே ஜீவனுக்கு அமானித்வம் முதலிய குணங்களால் (விகாரங்களினால்) - ஜீவனின் ஸம்சார விடுதலைக்குக் காரணமாகிறது - என்பது பொருளாகும்). (அதாவது) அமாநித்வம் முதலியயவை ஆத்மாவிற்கு - ப்ருகிருதியைச் சரீரமாகவுடைய ஆத்மாவிற்கு - காமக்ரோதாதிகளை உண்டு பண்ணுவது - அவை நம்மைக் கெடுக்கிறபடியால் – எவ்விதம் சரீரம் தியாஜ்யமோ - அமாநித்வ குணங்களை உண்டு பண்ணுவதனால். இந்தச் சரீரம் உபாதேயமாவும் - ஏற்கத் தக்கதாயுமிருக்கிறது— பிரகிருதியின் விகாரங்கள் - அமாநித்வம் என்கிற குணமே மோக்ஷஸாதனமாகிறது - (பிரகிருதி சம்பந்தத்தினால் ஆத்மாவிற்கு யேற்படும் காமக் க்ரோதாதிகளை அமாநித்வாதி குணங்களையுமே சொல்கிறது - ஸத்வரஜஸ் தமஸ் குணங்களைக் குறிக்க வில்லை).

கீதை-14-5 सत्त्वं रजस्तमस् इतिगुणाः प्रकृतिसंभवाः निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥

ஸத்துவம், ரஜஸ் தமஸ் என்னும் மூன்று குணங்களும் பிரகிருதியின் ஸ்வரூப நிரூபக தர்மங்களானபடியால் - இந்த மூன்றும் எப்போதும் பிரகிருதியோடு சேர்ந்து விருக்கும். இவைகளை பிரத்யக்ஷமாக அறிய முடியாத போதிலும், பிரகாசம் முதலிய காரியங்களைக் கொண்டு நிரூபிக்கக் கூடியவையாகும். அதாவது பிரகாசம், பிரவிருத்தி மோஹன ரூபங்களான காரியங்கள் நேரில் காணப்படுகின்றன காரியங்களைக் கொண்டே காரணங்கள் ஊகிக்கப்படுகின்றன. பிரகிருதி ஸூக்ஷ்மதசையில்- நன்கு அறியப்படாமலும் அதுவே மஹத்தாக பரிணமிக்கும் போது - பிரகாசத்தை அடைகிறது. முக்குணங்கள் ஜீவனைக் கட்டுப் படுத்துகின்றன.

அதேபடி கீதை 9-7 (முதல்) (11) வரை.

सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् । कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् । (2) प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः । भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् । (3) मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् । हेतुनाऽनेन कौन्तेय जगद्धि परिवर्तते । इति :—

அர்ஜுனா, ஸ்தாவர ஜங்கமங்கள் என்ற ஸர்வ பிராணிகளும் என் சங்கல்பத்தினால் பிரமனின் ஆயுள் முடியும் காலத்தில்— எனது சரீரமாயும் நாமரூப விபாக அனர்ஹமாயும், தமஸ் எனப் படும் என் பிரகிருதியை யடைகின்றன. கல்பத்தின் ஆதியில்- (ஆரம்பத்தில்) அவைகளை நான் பலவிதங்களாக ஸ்ருஷ்டிக் கிறேன்.

விசித்ர பரிணாமியான - என்னுடையதான பிரகிருதியை அதிஷ்டானம் செய்து, எட்டுவிதமாகப் பரிணமிக்கும்படி செய்கிறேன். அவற்றைக் கொண்டு தேவன் - மனுஷ்யன் – பசு – ஸ்தாவரம் என நான்கு வகையான ஜீவராசிகளை அதனதன் காலங்களில் உண்டாக்குகிறேன்.

இந்தப் பிராணிக் கூட்டங்கள் ஸத்வ ரஜஸ்தமஸ் ஆகிய முக்குணங்கள் நிறைந்ததாயும் - மோகத்தை உண்டு பண்ணுவதாயும் இருக்கிற என் பிரகிருதியின் வசர்களாய் - பராதீனர்களாக விருக்கிறார்கள்.

(3) பிரத்யக்ஷமாய் பார்க்கக் கூடியவனும், ஸத்ய சங்கல்பனுயும் இருக்கிற நான் ஜீவாத்மாவின் புண்ணிய பாப ரூப கர்மங்களுக்குத் தக்கப்படி பிரகிருதி பலவாறாகப் பரிணமிக்க வேண்டும் என்று சங்கல்பித்து அதைக் கடாக்ஷிக்கிறேன். அத்தகைய பிரகிருதி ஜங்கம ஸ்தாவரங்களுடன் கூடிய உலகத்தை உண்டாக்குகிறது. பிரகிருதி பரிணமித்தாலும் - என்னாலே அத்யக்ஷிக்கப்பட்டு - என் ஸங்கல்பப்படி - அவரவர்களின் கர்மானு குணமாக ஸம்சாரம் ஏற்படுத்தப் படுகிறது. (பாப புண்யங்) களாகிற கர்மாக்களும் பிரகிருதியும் அசேதனங்கள். மாயா ப்ரேரகன் பரமாத்மா - மாயா (பிரகிருதி) எல்லாம் ஈஷ்வர கடாக்ஷத்தினல் யேற்படுகிறது).

ஆகையால் அபிருஹ்மாத்ம கத்வோ - கபிலருடைய தந்திர ஸித்தமான பிரகிருதி - என்பது நிரஸிக்கப் படுகிறது. (அதாவது) நிரீஸ்வர (சாங்கியன் பக்ஷம் தள்ளப்பட வேண்டியதாக விருக்கிறது).

(இங்கே பூர்வ பக்ஷி) சொல்வது, பிரகிருதி ஸ்வதந்திரமாகவே ஸ்ருஷ்டிக்கிறது - பிருஹ்மாத்மக மில்லாத ஸ்வதந்ர பிரகிருதியையே காரணமாகக் கூறுகின்றது – என்பது தவறு என்று காட்டப்படுகிறது. மூல பிரகிருதி அஜா என்றாலும் (பிறப்பற்றது) என்பதால் மாத்திரம் - அது பிருஹ்மாத்மகமல்லாதது என்று ஸித்திக்காது. என்பதாலும் - சுருதி ஸ்மிருதி உதாரணங்களால் பிரகிருதி அப்ருஹ்மாத்மக மாகவில்லை. பிரும்ம அதிஷ்டானத்தினாலே தான் - அது செயல் படுகிறது எனச் சொல்லப்படுகிறது).

ஸ்வேதாஸ்வர உபநிஷத்திலும் ஓதப்படுகிறது—4-5.

अजामेकां लोहित शुक्लकृष्णां बह्वीः प्रजाः सृजमानां सरूपाः ।
अजो ह्येको जुषमाणोऽनुशेते भुक्त भोगा मजाऽन्यः - इति ॥

சிவப்பு (ரஜஸ்) வெளுப்பு (ஸத்வம்) கறுப்பு (தமஸ்) என்னும் மூன்று நிறங்களை (குணங்களை) உடையதாய் தன்னைப்போன்ற பல பிரஜைகளை உண்டாக்குவதாய் பிறப்பற்றதான ஒன்றோடு (மூல பிரகிருதியோடு) பிறப்பற்ற ஒருவன் (ஸம்சாரி ஜீவன்) உகப்புடன் கூடியிருக்கிறான். அவனால் அனுபவிக்கப்பட்ட மூல பிரகிருதியை பிறப்பற்ற மற்றொருவன் (முக்த புருஷன்) விட்டுச் செல்கிறான் - என்று படிக்கப்படுகின்றது.

(இங்கு அஜா (பிறப்பற்றது) என்று மூல பிரகிருதியைப் படிப்பதாலும் பல பொருள்களைத் தானே ஸ்வதந்திரமாக ஸ்ருஷ்டிப்பதாகக் கூறுப்படுவதாலும்-இந்த மந்திரம் பிருஹ்மாத்மக மல்லாத ஸ்வதந்திர பிரகிருதியையே காரணமாகக் கூறுகின்றது எனத் தெளிவு).

இங்கே சந்தேகம் - இந்த மந்திரத்திலே - கேவலம் (மாத்திரம்) கபிலரின் தந்திர ஸித்தமான பிரகிருதி சொல்லப் படுகிறதா - அல்லது பிருஹ்மாத்மகமான பிரகிருதியா? எது சரியாகும்? கேவலம் ஸ்வதந்திரமான பிரகிருதி. காரணம் अजामेकां - பிறப்பற்ற ஒன்று என்று (ஸ்திரி லிங்கம் - அஜாம் - இந்த பிரகிருதி - தானே கார்யமாக வில்லாமல் (அதாவது இன்னொன்றால் படைக்கப் படாமல்); மேலும் அதுவே बह्वीः प्रजाः सृजमानां सरूपाः - பல பிரஜைகளை தன் சொரூபத்திற்கு யேற்ப (ஸ்வதந்திரமாக) படைப்பதாலே - அதற்கு ஸ்ருஷ்டிக்கும் சக்தி ஓதப்படுகிறது. (இங்கே முன் சொல்லியபடி - இரு காரணங்கள் - அஜாவான பிரகிருதி - அது ஒரு காரியமல்ல - அநாதியானபடியால். அதனால் அஜாவான பிரகிருதி பிருஹ்மத்தின் காரியமல்ல. (2) இரண்டாவது सनच - பிரத்யயம் (suffix) - ஸ்ருஜமாநா என்பதில் உள்ளது. பாணிணியின் இலக்கணப்படி - ஸ்வதந்திர ஸ்ருஷ்டி கர்த்தாவைச் சொல்லும். - மாயாவின் ஸ்ருஷ்டிக்கும் சக்தி தேஜஸ் முதலானவற்றிற்குக் காரணமாகும்.

இவ்விதம் சொல்லப்படுமானால் - அதற்கு பதில் நாம் சொல்வோம் - चमसवदविशेषात् - சமஸவத் - சமஸத்தைப் போல. அவிசேஷாத் - விசேஷிக்கப்படாமையால் - அஜா என்பது அப்ருஷ்மாத்மக மூல பிரகிருதியன்று).

இங்கே கபிலதந்திர ஸித்தமான பிரகிருதி சொல்லப்படவில்லை. பிறப்பில்லாதது - என்பதால் அஜாத்வ மாத்திரத்தினால் சொல்லக்கூடாது - பிறப்பற்றது என்பதால் மாத்திரம் அப்ருஷ்மாத்மகம் எனச் சொல்லக் கூடாது என அர்த்தம் ஸித்திப்பதில்லை. - அம்மாதிரி இருக்க வேணுமென்னும் நிர்ப்பந்தமில்லை சமஸவத் - யாகங்களிலே ஸோமபானம் செய்வதற்கு உபயோகப்படும் பாத்ரம் - "சமஸம்" - எனப்படும். அது கீழே த்வாரமுள்ளதாயும் - மேலே பெருத்தும் இருக்கும். சாப்பிடுவதற்கு இது ஒரு ஸாதனம் (Spoon மாதிரி). அஜா - பிறப்பற்றது அதனாலே அஜத்வம் விசேஷிக்கப்படுகிறது. இதைத் தவிர வேறு ஒரு ஹேதுவும் சொல்லப்படவில்லை - அது ஸ்வதந்தந்திரமான பிரதானம் (கபில ஸித்தாந்தப்படி - அது அப்ருஷ்மாத்மகமாகவிருக்கிறது என்று சொல்வதற்கு) ஒன்றும் சொல்லப் படவில்லை;

சமஸ் என்பதற்கு மந்திரம் ஓதப்படுகிறது.

பிரு-2. (4-2-3) अर्वाग्बिलश्चमस ऊर्ध्व बुध्नः —

(கீழே துவாரம் உள்ளதாகவும் மேலே பெருத்தும இருக்கும் கரண்டி - சமஸம் - இது சாப்பிடுவதற்கு ஸாதனம்.

இதனாலே ஸாதனத்வம் மாத்திரம் சொல்லப்படுகிறதே ஒழிய, இந்த மாதிரியான கரண்டி (சமஸா) இருக்கவேண்டியயது என்று சொல்லப்படவில்லை. விசேஷ ப்ரதீதி ஒன்றுமில்லை. பதங்கள் யோகரூடியான சப்தங்கள் - குறிப்பிட்ட அர்த்த பிரகரணங்களை பிரகரணங்களின் உதவியின்றி - தாமே அர்த்தத்தைச் சொல்லும் சக்தி பெற்றவை - அதே மாதரி அர்த்த விசேஷங்கள் (குறிப்பிட்ட தர்மங்களால் காட்டப்படும்). குறிப்பிட்ட வஸ்துக்களைக் காட்ட சக்தி பெற்றவையாக விருக்க முடியாது. இங்கே இந்த உதாரணத்தில் - இன்னொரு வாக்ய சேஷத்தின் உதவியினாலே—

## इदं तच्छिरः एष ह्यर्वाग्बिलश्चमस ऊर्ध्वबुध्नः —

பிரு. 2-4-2-3ல் இப்படியிருப்பது தலையேயாகும் - சாப்பிடுவதற்கு ஸாதனமானதையாலே, சமஸம் எனப்படும். இதுவேயன்றோ கீழே த்வார முள்ளதாயும் - மேலே பெருத்தும் இருக்கிறது - என்னும் அடுத்துள்ள வாக்யத்திலிருந்து சமஸம் தலையே என்று விளங்குகிறதே எனில் - அந்த இடத்தில் சமஸம் எனப்பட்டது தலையே என்று வாக்ய சேஷத்தில் விசேஷக்கப்பட்டது போல - இந்த அஜா வாக்கியத்தில் அர்த்த பிரகரணத்தை ஒட்டி அஜா என்று கூறப்பட்ட மூல பிரகிருதி நிர்ணயிக்கப்பட வேண்டியது - அது (மூல ப்ரகிருதி) அப்ரஹ்மாத்மகமானது என்று வாக்யத்தில் விசேஷிக்கப் படவில்லை - ஆகவே இது அப்ருஹ்மாத்மக பிரகிருதியன்று. கபில தந்திர ஸித்த ஸ்வதந்திர பிரகிருதி (அஜா) அர்த்த பிரகரணங்களில் காணப்படவில்லை. மேலும் அதற்கு ஸ்வதந்திரமாக ஸ்ருஷ்டிக்க சக்தி பெற்றது என்றும் காட்டப்படவில்லை – இந்த வாக்ய சேஷத்தில்.

## बह्वीः प्रजाः सृजमानाम् —

பல பதார்த்தங்களை - மஹத் முதலிய தத்வங்களை ப்ரகிருதி ஸ்ருஷ்டிக்கிறது என்று மாத்திரமே கூறப்படுகிறது ஒழிய - அது ஸ்வதந்திரமாக ஸ்ருஷ்டிக்கிறது என்று கூறப்படவில்லை. ஆகவே இந்த மந்திரத்தினால் அப்ருஹ்ம மாத்மகமான அஜா - என்று சொல்லப்படவில்லை.

(வாக்ய சேஷத்திலே சொல்லப்பட்டிருந்தால் சரி. அவ்விதம் சொல்லப்படாததாகையால் - ஸாங்கியர்கள் கூறும் அப்ருஹ்மாத்மகமான மூலப் ப்ரகிருதி இந்த வாக்யத்தில் கூறப்படவில்லையென்று விளங்குகிறது). பிறப்பற்றது என்பதைத் தவிர வேறு ஒன்றும் அதனை மற்ற பிறப்பற்ற தத்வங்களிலிருந்துப் பிரித்துக் காட்டுவதற்கு ஒன்றுமில்லை என்பதாகும்).

ஸூத்ரக்காரர் மேலும் சொல்லுகிறார் - இன்னும் சில காரணங்கள் இருக்கின்றன - இந்த வாக்ய பிரகரணத்தை நன்கு அறிவதற்கு - அதாவது 'அந்த' அஜா (பிரக்ருதி) - பிரும்மாத்மகமாகவுள்ளது என்று கூறுவதற்கு - பலகாரணங்கள் உள.

## சூத்ரம் ज्योतिरुपक्रमात्तु तथा ह्यधीयत एके (1-4-9)

ஜ்யோதிரு பக்ரமாது ததா ஹ்யதீ யத ஏகே (1-4-9)

ஜ்யோதிரு பக்ரமாது-அஜா எனப்படும் இந்த மூல பிரகிருதி பரம் ஜ்யோதியான பிருஹ்மத்தைக் காரணமாகக்கொண்டதே ஆகும் - ஏகே - ஒரு சாகையைச் சேர்ந்தவர்கள் ததாஹி அதீயதே அவ்விதமே ஓதுகிறார்கள்.

து என்கிற சப்தம் ஒரு குறிப்பிட்ட கருத்தை வலியுறுத்த வதற்கு (அவதாரணார்த்தம்) (இங்கே) பிரயோகிக்கப்பட்டது

ஜ்யோதிருபக்ரமாது - பரம் ஜோதியைக் காரணமாகக் கொண்ட இந்த அஜா (பிறப்பற்றது) என்பதாகும். இங்கே ஜ்யோதி: என்பது பிருஹ்மத்தைக் குறிக்கும். (முந்தின சூத்திரத் தில் அப்ருஹ்மாத் மகமாக மூல பிரகிருதி இராது என்று கூறப் பட்டது. ஆனால் இந்த சூத்திரத்தில் அதையே காரணமாகக் கொண்டது என்கிற கருத்து வலியுறுத்தப்படுகிறது) - ஜ்யோதி: பிரும்மத்தைக் காட்டுகிறது என்பதற்கு— சுருதி ஆதாரம்.

ஜ்யோதிஸ் என்றும்;

तं देवी ज्योतिषां ज्योतिः—பிரு-2-4-4-16

अथ यदतः परो दिवो ज्योतिर्दीप्यते—

பிரு. 4-4-16.

தேவர்கள் பரமாத்மாவை ஜ்யோதிஸ்களுக்கெல்லாம் ஜ்யோதிஸ் என்று சொல்கிறார்கள்; அந்த ஜோதிஷ் மேலான ஸ்வர்க்க லோகத்திற்கும் மேலே இருக்கிறது. சுருதிகள் இம் மாதிரி சொல்வதால் பிரஸித்தி. ஜ்யோதிருபக்ரமா அஜா அல்லது பிரகிருதி பிரும்மத்தைக் காரணமாகக் கொண்டது. तथा ह्यधीयत एके - அவ்விதம் ஒரு சாகையைச் சேர்ந்தவர்கள் ஓதுகிறார்கள். யஜுர் வேதத்தைச் சேர்ந்தவர்கள் - தை-2.

சாகைக்காரர்கள் (சிலர் என்பதற்குப் பொருள்); அவர்கள் (அஜா - என்கிற பிருகிருதி பிருஹ்மாத்மகம் என்று) ஓதுகிறார்கள்- தை-நா-12-

अणोरणीयान् महतो महीयान् आत्मा गुहायां निहितोऽस्य जन्तोः ।

அணுவைக் காட்டிலும் அணுவாய், பெரியதைக் காட்டிலும் பெரியதாயிருக்கும் ஆத்மா - அது எப்பொழுதும் ஒரு ஜந்துவின் ஹ்ருதய குஹையில் இருக்கிறது; குஹையில் உபாஸனைக்காக பரமாத்மா ஸம் நிஹிதனாக விருக்கிறார் என்று காட்டி; सप्त प्राणाः प्रभवन्ति तस्मात् - பரமாத்மாவினிடமிருந்து ஏழு பிராணன்கள் கிளம்புகின்றன. என்பவைகளால் எல்லாலோகங்களும் பிரும்மா முதற் கொண்டு யாவரும் பிருஹ்மத்தினிடமிருந்து உற்பத்தியா கின்றனர்; என்று அந்த சாகை சொல்லி விட்டு,

अजामेकां लोहित शुक्लकृष्णां बह्वीं प्रजां जनयन्ति सरूपाम् ।
अजो ह्येको जुषमाणो अनुशेते जहात्येनां भुक्त भोगामजोऽन्यः—

(மஹா நா-9-2); ஒரு பிறப்பற்ற பெண் (அஜா) சிகப்பு நிற முள்ளவள் - வெள்ளை கருப்புடனும் கூடியவள். அவள் தன்னைப் போல பல பிராணிகளை உண்டாக்குகிறாள்; அதே மாதிரி இன்னொரு ஆண் - அதுவும் பிறப்பற்றது (அஜா); அவன் அவளை அனுபவித்து விட்டு - அவளை விட்டு விடுகிறான். இவைகளிலிருந்து அஜா என்கிற பிரகிருதி எல்லாப் பிராணிகளுக்கும் தான் காரண மாக விருந்து கொண்டு - அத்தகைய அஜா. பரமாத்மாவினிட மிருந்து உண்டானவள்.

இதற்கு அர்த்தம் யாதெனில், பரமாத்மாவைத் தவிர மற்ற எல்லாப் பொருள்களும் பரமாத்மாவினிடமிருந்தே தோன்றி யுள்ளன. பரமாத்மாவையே ஆத்மாவாகக் கொண்டன என்று சொல்லும் வாக்ய பிரகரணத்திலே - அஜா என்கிற பதம் காணப் படுகிறது. இப்பேற்பட்ட அஜா - அது தன்னைப் போல பல வஸ்துக்களுக்குக் காரணமாகவுமிருக்கிறது - அதுவே கர்ம வஸ்யனான ஜீவனால் அனுபவிக்கப் படுகிறது; அதுவே பிற்பாடு போக்தாவான ஜீவனால் பரித்யாகம் செய்யபடுகிறது: (முக்தனால்) விடப்படுகிறது - அப்பேற்பட்ட அஜா - பிராணன்களைப் போல வும் சமுத்திரங்கள், மலைகள் - இன்னும் இதர வஸ்துகளைப் போலவும் பிரும்மத்தினிடமிருந்து உண்டாகி பிருஹ்மத்தையே

ஆத்மாவாகக் கொண்டன. ஆகையால் வாக்ய சேஷத்திலுல் அறிவிக்கப்பட்ட சமஸம் (கரண்டி) விசேஷவத் – தலையே என்று வாக்ய சேஷத்தில் விசேஷிக்கப்பட்டது போல - (ஒரு குறிப்பிட்ட ஸாதனம் - சமஸம் என்பது போல) இங்கேயும் அஜா - எந்த அஜா வாக்ய சேஷத்தில் உள்ளதோ - அடக்கப்பட்டு என்கிற அர்த்த முள்ளது - அதேபடி இன்னொரு சாகையில் - அதே அர்த்தத்துடன் விருப்பது - இது நம் மனத்திற்குக் காட்டுகிற படியால் (தை – சாகை) - அதனாலே இந்த அஜாவும் (பிரகிருதியும்) பிருஹ்மத்தை ஆத்மாவாக கொண்டது என்பது தீர்மானிக் கப்படலாம்.

(அதாவது பரமாத்மாவிடமிருந்து எல்லாம் தோன்றின· மலைகள் - சமுத்ரங்கள் பிராணன்கள் இத்யாதி - என்று படிக்கும் மந்திரங்களிடையே "அஜா மேகாம்" என்று தொடங்கும் மந்திரமும் படிக்கப்படுவதாலே - மூலபிரகிருதியும் பிரும்மாத்மக மாகவுள்ளது என விளங்குகின்றது),

(ராமானுஜர் மஹா - நாராயண உபநிஷத்தில் சிறிது மாறுதலுடன் கூடிய இம்மந்திரத்திற்கு - ஸவே. 2, ( 4 - 5 - ) - பஹ்வீந் ப்ரஜாந் ஜநயந்தி ஸரூபாந்; மஹா நா. உ பஹ்வீ ப்ரஜா ஸ்ரஜமாநம் ஸ்ரூபா; ஸ்ருஷ்டியைச் சொல்லும் பிரகரணம் - அதில் பரமாத்மா ஸ்வரூபம் - அவன் அணுவைக் காட்டிலும் சிறியவன் - பெரியதைக் காட்டிலும் பெரியவன்; - பிறகு ஸப்த பிராணன்களைச் சொல்லி (பஞ்சேந்திரியங்கள் - மனம் புத்தி) இவை பிரும்மத்தினிடம் தோன்றின என்று சொல்லி - ஏழு அக்னிகள், யாகங்களின் அங்கங்கள், உருப்புக்கள் ஏழு நாக்குக்கள் ஏழு உலகங்கள் கடல்கள், மலைகள், நதிகள், ஓஷதிகள் எல்லாம் அவனிடமிருந்து உண்டாயின. பரமாத்மா அந்தராத்மா. அவரே பிரும்மா, இத்தியாதிகளைக் கூறிவிட்டு - மஹா நாரா. உ. அஜா என்பவளைச் சொல்லி, அவளுக்கு மூன்று வர்ணங்கள் உண்டு என்று சொல்லியும், பிறகு பிருஹ்மத்தை கோடைகால சூரியன், காற்று எனப் பலவாறு சொல்லியதால் இந்த பிரகரணம் - அஜா என்பவளுக்கும் பிருஹ்மமே ஆத்மாவாகவிருக்கிறது என்று தெளிவு - என்று கூறி முடிக்கிறார்),

ஸ்வேத. உப. 1-1-ல் **किं कारणं ब्रह्म** - பிருஹ்மா காரணம் - எதற்கு ? என்று ஆரம்பித்து; ஸ்வே. 1-3ல் **ते ध्यानयोगानुगता**

**अपश्यन् देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम्** - மஹரிஷிகள் தியான யோகத்திலுல் கண்டு அறிந்தார்கள் - (எதை) பரமாத்மாவின் சொந்த சக்தியை (அதாவது பிரகிருதியை); அந்த சக்தியோ தன் முக்குணங்களாகிற ஸத்வரஜஸ் ஸாதிகளால் மூடப்பட்டிருக்கிறது - என்று ஓதுவதால் பரபிரும்மத்தின் சக்தி அஜா என்று யேற்படுகிறது - பிற்பாடு, அதே வாக்ய பிரகரணத்திலே'

ஸ்வே. 4-10-11 **अस्मान्मायी सृजते विश्वमेतत् तस्मिंश्चान्यो मायया संनिरुद्धः। मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम्। . . . . . यो योनिं योनिमधितिष्ठत्येकः —**

அதிலிருந்து பரமாத்மா - மாயையை தன்வசம் வைத்திருப்பவன் - அவன் இந்த உலகத்தைப் படைத்தான் - அதில் இன்னொரு பிராணியை (அதாவது ஜீவனை) மாயையினுல் கட்டினுன்.

நீ அறிந்துகொள் - இந்த பிரகிருதி மாயையாக விருக்கிறது பரமாத்மா மாயீ - மாயையைத் தன்வசம் வைத்திருப்பவன்.

(ஸ்வே. 2-4-10) योयोनि . . . . . எவன் உலகத்தின் ஒவ்வொரு காரணத்திற்கும் அதிஷ்டாதாவாக விருக்கிறானே; இவைகளினுல் அதே அஜா (பிரகிருதி) தான் சொல்லப்படுகிறது.

இந்தக் காரணங்களாலே - இந்த மந்த்ரம் கபில தந்திர ஸித்தமான ஸ்வதந்திர பிரகிருதி சொல்லப்படவில்லை.

மேலும் கேள்வி கேட்கப்படும் - இந்தமாதிரி சந்தர்ப்பங்களிலே, இந்த பிரகிருதி - ஜ்யோதிசாகிற பரமாத்மாவைக் காரணமாகக் கொண்டது-அது (அந்த பிரகிருதி) சிகப்பு வெள்ளை கருப்பு நிறங்களுள்ள ரூபங்களை உள்ளது - அது எப்படி பிறப்பற்றது - அஜாத்வம்; யேற்படும்; மேலும் பிறப்பற்ற அது ஜ்யோதிசைக் காரணமாகக் கூடும் - பிரும்மாத்மக மாகக் கூடும்? இதற்கு சூத்ரக்காரர் பதில் அளிக்கிறார்.

சூத்ரம் **कल्पनोपदेशाच्च मध्वादिवदविरोधः** — (1-4-10)

**கல்பனோபதேசாச்ச மத்வாதி வத விரோத:** (1-4-10)

கல்பநோபதேஸாத் ச - இங்கே ஸ்ருஷ்டியைச் சொல்லுகிற உபதேஸமிருப்பதாலே - மத்வாதி வத் (ஆதித்யன்) மதுவாவது கார்யமாவது ஆகியவற்றைப்போல, அவிரோத: - பிரகிருதிக்கும் அஜாத்வமாகிற பிறப்பின்மைக்கும் பிருஹ்மத்தால் ஸ்ருஷ்டிக்கப் படுகிறது என்பதற்கும் விரோதமில்லை.

ச என்கிற பதத்தாலே - இங்கே ஏற்பட்டிருக்கும் சந்தேகத்தை நிவர்த்தி செய்வதாகும். இந்த பிரகிருதத்திலே - அஜாத்வம் (பிறப்பற்றது) என்பதற்கும் - ஜ்யோதிருபக்ரமாத்வம் (ஜ்யோதியான பரமாத்மாவைக் காரணமாகவுடையது) என்பதற்கும் விரோதமில்லை - எப்படி ? कल्पनोपदेशात् - இங்கே உபதேசம் - ஸ்ருஷ்டியைச் சொல்வதாலே, கல்பநம்-உண்டாக்குதல். ஸ்ருஷ்டி-க்லிருப்தி: - ஜகத் ஸ்ருஷ்டியைப் பற்றிய உபதேசமிருப்பதாலே; எப்படி ?

தை-நாரா. 1-13- सूर्याचन्द्रमसौ धातायथापूर्वी मकल्पयत् — என்பதால் கல்பநம் என்பதற்கு ஸ்ருஷ்டி பொருள்; சதுரானன பிரும்மா சூரியனையும் சந்திரனையும் अकल्पयत् படைத்தார்.

இங்கேயும் ஸ்வே. 2-4-9 अस्मान्मायी सृजते विश्वमेतत् — உலக ஸ்ருஷ்டி சொல்லப்படுகிறது - இதிலிருந்து மாயையை தன் வசம் வைத்திருக்கும் மாயிந் - பரமாத்மா - இந்த உலகைப் படைக்கிறார்.

இதற்கு அர்த்தம் - பரமாத்மா மாயிந் என்று சொல்லப்படுபவர் - தன்னிடம் (அவிபக்தாத்) - ஸூக்ஷ்மமான காரண தசையில் தன்னை விட்டுப் பிரியாமலிருக்கும் இந்த பிரகிருதியிலிருந்து - ஜகத்தைப் படைகிறார் என்று அர்த்தம் - நாம ரூப வியாகரணமில்லாத ஸூக்ஷ்மதசையில் இந்த மூல பிரகிருதி அவருடன் ஒட்டிக் கொண்டிருக்கிறது. அதுவே காரியதசையில் (ஸ்ருஷ்டியில்) பரமாத்மாவின் சங்கல்பத்தால் பரிணமிக்கிறது - அதினுள்ளே பரமாத்மா நுழைந்து - ஒவ்வொன்றையும் வஸ்துவின் யோக்யதையை அடையவிக்கிறார். இதனால் பரமாத்மா ஸர்வேஸ்வர: - ஸர்வம் ஜகத்தை உண்டாக்குகிறார். என அர்த்தம். இந்த ஸ்ருஷ்டி உபதேசமிருப்பதாலே, பிரகிருதியினுடைய காரிய காரண ரூபத்தினால் பரமாத்மாவுடன் கூட இரண்டு தசைகளிலும் காரிய காரண தசைகளில் இருப்பதாக அறியபடுகிறது. அந்த பிரகிருதியோ பிரளய வேளையில் பிரும்மத்தினுள்

நுழைந்து - அவிபக்த பிரிக்கப்படாத - நாம ரூபங்களால் வித்யா ஸப் படுத்தப்படாத நிலையில் - சூக்ஷ்ம ரூபத்தினால் இருக்கிறது. ஸ்ருஷ்டி வேளையில் அந்த பிரகிருதிக்கு யேற்பட்ட ஸத்வாதி குணங்களால் - நாம ரூபங்களால் வித்யாஸப் படுத்தப்பட்ட ஸ்தூல அவஸ்தை (ஸ்ருஷ்டியில் - காரிய தசையில்) யேற்படுகிறது- வ்யக்தாதி சப்த வாச்யமாகிறது. (அது போல மற்ற பதங்களுக் கும் ஆகிறது); அதனாலே தேஜஸ், அப்பு பிருத்வி இத்யாதி ரூபங்களாக பரிணமிக்கிறது (பிரும்மாத்மகமாக); அதனாலேயே பிரகிருதி சிகப்பு, வெள்ளை, கருப்பு, நிறங்களை யடைகிறது ஆனால் அது காரணதசையிலே பரமாத்மாவுக்குச் சரீரமாக விருந்துகொண்டிருப்பதால்—பிறப்பற்றது - அஜா என்று அழைக் கப்படுகிறது, ஆகையால் காரண அவஸ்தையில் அஜா; அதே மூலபிரகிருதியான அஜா காரியாவஸ்தையில் ஜ்யோதிருபக்ர - மேதி - பரமாத்மாவைக் காரணமாகக் கொண்டது என்கிறபடி ஆகிறது. ஆகவே இதில் யாதொரு விரோதமில்லை.

(இங்கே முக்கியமான விஷயம் ஒன்று—கல்பநா என்கிற பதத்திற்கு சங்கரர் கற்பனை என்கிற அர்த்தத்தில் ஒன்றை இன்னொன்றாக கற்பிப்பது—அஜா என்பது பிரக்கிருதி—அது வெள்ளாட்டின் உருவத்தில் இருக்கிறது என்று கல்பனை ராமானுஜர் சூத்ரத்திலுள்ள கல்பநா உபதேசாத்ச—என்று அர்த்தம் கொள்வதால் ஸ்ருஷ்டியைச் சொல்கிறார்—வேத படனம அதிகமாக விருப்பதாலே—அதிலிருந்து எடுத்து அர்த்தம் சொல் கிறார், பூர்வ பக்ஷி சொவல்து—பிரகிருதி பிரும்மமாக ஆக மாட் டாது—லோஹித சுக்லகிருஷ்ண-ரஜஸ்தமஸ்ஸத்வாதி குணங்கள் என்கிறான், சித்தாந்திசொல்வது—கற்பித்தான் என்பதற்கு படைத்தான் - படைக்கும்போதும் அதற்கு முந்தியும் பிந்தியும் பிரகிருதி பரமத்மாவுக்குச் சரீரமாக விருந்தது, பிரும்மாத்மகமாக விருந்த படியாலே - கல்பநா என்பது ஸ்ருஷ்டியாகும் - மூல பிரக் ருதி பிறப்பற்றதாயும் - காரிய காரண தசைகளில் சரீரத்வாரா பரி ணாம மடைகிறது. பிரும்மத்தில் சங்கல்பத்தினால் - பிரும்மத்தை ஆத்மாவாகக் கொண்டு இதனாலே தானும் பரிணமித்து, பிரும்மத்தைக் காரணமாக கொண்டு - இப்படி ஸ்ருஷ்டியாகிற கல்பநா - பேசப்படுகிறது.

मध्वादिवत्—மது வித்யையில் சூரியனைத் தேனாகவும் அதுவே காரியமாவது ஆகியவற்றைப்போல; எப்படி ஆதித்யன் காரண

தசையிலே பரமாத்மாவுடன் ஒன்ருகவே இருந்துகொண்டு (சரீரத்வாரா); அதே சூரியன் தேஜை காரியதசையில் மாறி உபாஸகர்களுக்கு (வசுவாதிகளுக்கு) போக்யமாக விருக்கிருனே - அம்ருதமாக விருக்கிருனே - அந்த காரிய அவஸ்தையில் ருக் யஜுஸ் ஸாமா அதர்வண பிரதி பாத்ய கர்மங்களால் உண்டாக்கப்பட்ட இருப்பிடமாக விருக்கிருனே - அந்த ஆதித்யனே உதய அஸ்தமன காலங்களில் காரியமாகவும் இருக்கிருனே! ஆயினும் அவன் விஷயத்தில் எப்படி விரோதமில்லையோ - அதுபோல. இங்கேயும் விரோதமில்லை).

(அதாவது மத்வாதி கரணத்தில் விளக்கப்பட்ட விஷயம் இது- ஆதித்ய உபாஸனை காரிய காரண தசைகளில் இருப்பதாக விருக் கிறது. காரண தசையில் சூரியன் பிரும்மத்துக்குச் சரீரமாக விருப்பதாலே ஒன்ருக விருக்கிருன்; அதே சூரியன் காரிய தசை யில் உதய அஸ்தமன விஷயமாகிருன் - காரண தசையில் உதய மாவதுமில்லை. " அஸ்தமிப்பதுமில்லை. இதனுல் விரோதம் என்கிருன் பூர்வபக்ஷி.

பாவந்து பாதராயணே அஸ்திஹி என்கிற சூத்திரத்தில் 1-3-32ல் விளக்கம் பார்க்கவும்; இங்கேயும் அஜா காரண தசையில் பரமாத்மாவுடன் ஒன்ருகவும், காரிய தசையில் அது சிகப்பு வெளுப்பு கருப்பாக ஆகிறது என்று அர்த்தம்).

ஸ்ரீபாஷ்யம் :-

மதுவித்யா பிரகரணத்தில் இது நன்கு விளக்கப்பட்டது - இந்த சுருதியின் அர்த்தத்தாலே - சா. 2. ?-1- असौ वा आदित्यो देव मधु (சூரியனே தேவர்களுக்குத் தேஜை விருக்கிருர்);

என்று ஆரம்பித்து - சா-2. 3-11-1 अथ तत् ऊर्ध्वे उदेत्य नैवो- दिता नास्तमेता एकल एव मध्ये स्थाता - என்று முடிக்கிறது.

(பிறகு - கார்ய தசையிலிருந்து எழும்பி; அந்த சூர்யதேவதை காரண தசையில்) உதயமாவதில்லை - அஸ்தமிப்பதில்லை, ஏகதா. (பரமாத்மாவுடன் ஒன்ருக ஈக்ஷிக்கொண்டு - சரீரத்வாரா பிரளய தசையில் ஒடுங்கியிருக்கிருன் - ஏகல (एकल) என்பதற்கு ஏக ஸ்வபாவத்துடன் இரு தசைகளிலும் இருக்கிருன். ஆகையால் இந்த மந்திரத்தால் பிரும்மாத்மக அஜா தான் இந்தமந்திரத்தால்

சொல்லப்படுகிறது. கபில ஸித்தாந்தப்படி ஸ்வதந்த்ர பிரகிருதி சொல்லப்பட வில்லை — என்பது ஸித்தம்.

இங்கே அத்வைதிகள் சொல்கிறார்கள் - अजा मेकां என்கிற மந்த்ரத்திலே- तेजावन्नलक्षणाऽजैका भिधीयते - என்று ஓதப்படுகிறது - அதாவது — அஜ என்பது ஒரு தனி தத்வம் - அதற்கு தேஜஸ், அப்பு ப்ருத்வி ஆகிற அம்சங்கள் (லக்ஷணங்கள்) இருக்கின்றன. நாம் அவர்களைக் கேட்க வேண்டியது - தேஜஸ் பிருத்வி அப்பு. என்பவைகளைக் கொண்டே ஒரே தத்வத்தை அஜா என்கிறது குறிக்கின்றதா ? அதாவது பூதங்களாகிற தேஜஸ் அப்பு பிருத்வி யாகிற மூன்றும் ஒரே தத்வமாகிற அஜா (பிரகிருத்யை) க்குறிக் கிறதா ? (பிரகிருதிக்கு இம் மூன்றும் உண்டு); அல்லது பிருஹ்மமே கார்ய தசையில் தேஜஸ் அப்பு பிருத்வி என்று (அஜாவாக) விருக்கிறதா ? அல்லது (அஜா) அது இன்னொன்று - மூலபிரகிருதியா - எந்த பிரகிருதி தேஜஸ் அப்பு பிருத்விக்குக் காரணமாகிறதோ - அதைச் சொல்கிறதா இம்மாதிரி அவர்களைக் கேட்கவேண்டியது. முதல் கேள்வியில் - சுருதி சொல்லுகிறது. தேஜோவந்நாநாமநேகத்வாத் - अजामेकाम् - ஒரே ஒரு அஜா இருக் கிறாள் - என்பதுடன் விரோதம் யேற்படுகிறது. ஏனெனில் ஐம் பூதங்களாகிற தேஜஸ் அப்பு பிருத்வி மூன்றாக விருப்பதால் (ஒன்றாக வில்லை); நாம் சொல்வது விரோதமில்லை என்போம். திருவிருத் கரணத்தால் மூன்று தத்வங்களும் ஒன்றாகி ஏகதா பத்தி நிலையை அடைகிறது—திரி விருத்கரணத்திலே, அவை களில் பஹுத்வம் மறைகிறதில்லை; சுருதியும் அவ்விதம் சொல் கிறது - इमास्तिस्रो देवताः—மூன்று தேவதைகள் இருக்கின்றனர்

(சா. 2 உ. 6-2-2); சா. 2-6-2-3;

## तासां त्रिवृतं त्रिवृत मेकैकां करवाणि—

நான் ஒவ்வொன்றையும் மூன்று கூறாக ஆக்குவேன்; இதனால் ஒவ்வொன்றுக்கும் பிரத்யேகமாக திரி விருத் கரணம் உபதேசிக் கப்படுகிறது.

இரண்டாவது கேள்வியில் இரண்டு பக்ஷங்களிருக்கின்றன. அதாவது - ஒரே தத்வமான அஜா பிருஹ்மமே யாகும். அதுவே

தேஜஸ் அப்பு பிருத்வி ஆகிற மூன்று ரூபங்களை - அடைகிறது; (கல்ப); விகல்ப :—இல்லாதபோனுல் ஸ்வரூபத்திலே மாறு படாத பிரும்மமே தன் ஸ்வரூபத்தினுலே - அந்த ஸ்வரூபமே அஜா என்று அழைக்கப்படுகிறது.

**(द्वितीयो कल्पः विकल्पो किं तेजाबन्न रूपेण विकृतं अजामेवाजेका किं वा स्वरूपेणा वस्थितमधिकृतमिति ?)**

முதல் பக்ஷம் இல்லை என்று சொல்லலாம ஏனெனில் பஹு"த்வம் மறைவதில்லை, இரண்டாவதில், சுருதிக்கு விரோதம் யேற்படுகிறது – अजामेकां - लोहित शुक्लकृष्णां - ஒரே ஒரு அஜா இருக் கிறது – சிவப்பு வெள்ளை கருப்புடன் கூடியது; அதனுலே சொல்ல முடிகிறதில்லை – பிரும்மம் தன் ஸ்வரூபத்திலேஇருக்கிற படியாலே அதுவே மூன்று தத்வங்களான தேஜஸ் அப்பு பிருத்வி ஆகிய லக்ஷணங்களால் காட்டப்படுகிறது.

மூன்ருவது பக்ஷம் - நாம் ஒத்துக்கொள்ள வேண்டியது - அஜா என்கிற பதத்தினுல் - பூதங்களாகிற தேஜோ அப்பு பிருத்வி முதலில் காட்டப்பட்டு; அந்த மூன்று பூதங்களாலே அவைகளின் காரணதசை அறியப்பட வேண்டியது - அதனுல் இவ்விதம் சொல் அது சரியாகும் - அஜா அந்த பிரகிருதியைக் குறிக்கிறது - எது சுருதிகளில் ஓதப்பட்டிருக்கிறதோ - அது தேஜோ அப்பு பிருத்வி களுக்குக் காரண அவஸ்தையாக ஆகிறது என்று சொல்லும்படி - அஜா பிருகிருதியைக் குறிக்கிறது.

விளக்கம் :—(இரண்டாவது பக்ஷம் - அஜா என்பது ஒன்று தான் என்பதற்கு காரணமாகிறது - ஆனுல் பிறப்பற்ற அது சிகப்பு வெள்ளை கருப்பாக எப்படி இருக்கக்கூடும். (இதற்குப் பதில் கூற முடியாது - மேலும் முந்தின சூத்திரத்திற்கு அத்வைதி களால் சொல்லப்பட்டதுடன் விரோதிக்கிறது - அங்கே ஜ்யோதி ரூபக்ரமா - ஜ்யோதி முதலான பூதங்கள் என்று ஸமுச்சயமாகச் சொல்லப்பட்டது. இல்லாத போனுல் தேஜஸ் அப்பு - ப்ருத்வியாகிற பூதங்கள் எனலாம் - பிறப்பற்ற ஒன்று அது - மூன்று பூதங்களை அங்கே அர்த்தமாகக் சொல்லாது. இங்கே பிரும்மமாக அர்த்தம் சொல்லாது).

ஆகவே - अजा शब्देन तेजावन्नकारणावस्थाया;
श्रुति प्रसिद्धायः एवाभिधानम् :—,

ஸ்ரீபாஷ்யம் :—

மேலும் அத்வைதிகள் சொல்லுகிறார்கள் - அஜா என்கிற சப்தத்தினால் - பிரகிருதி ஒரு பெண் ஆட்டின் பிம்பத்தில் பரிகல்பனம் என்று; இது அஸங்கதம். ஏனெனில் இம்மாதிரி பிம்பம் உபயோகமற்றது. (நிஷ் ப்ரயோஜனம்).

கௌணமாக கொள்வது இப்படி அத்வைதிகள் சொல்வதற்கு - அஜா ஏக - என்பது ஆகும்; ஆனால் இவ்விதம் சொல்வதால் - பிறப்பற்ற அது சிகப்பு வெள்ளை கருப்பாக ஆகும் என்பதற்கு விளக்கம் கொடுக்கப்படவில்லை. முந்தின ஸூத்ரத்திற்கு அத்வைதிகள் சொன்ன விளக்கத்திற்கு இது ஒத்து வராது. முந்தினத்தில் ஜயோதிருபக்ரமா - தேஜா முதலிய பஞ்ச பூதங்களை ஸமுச்சயமாகச் சொல்லியது - தேஜஸ் அப்பு - பிருத்வி இத்யாதி. பிறப்பற்றது என்பதற்கு அங்கே மூன்று பூதங்களை அர்த்தமாகக் கொள்ளாது - அதேபடி இங்கே பிருஹ்மம் என்பதாகாது.

உதாரணமாக, கட. 1—3—3— आत्मानं रथिनं विद्धि - ஆத்மாவை ரதியாக (எஜமானனாக) நினைப்பாயாக - என்பவைகளில், உருவகமாக, தேகத்தை ரதமாகவும், எஜமானனை ரதியாகக் கொள்வதால், பிரும்ம பிராப்திக்கு உபாயமாக அவை காட்டப்படுகின்றன; எவ்விதம் சூரியனை மதுவாக சித்தரிப்பதால் (மதுவித்யையில்) - வசுவாதிகளுக்கு போக்யத்வமாக விருக்கிறதோ - மது வித்யையில் மதுத்வகல்பனத்தைப்போல - இங்கேயும் அஜா என்பதை (பிரகிருதியை) பெண் ஆட்டைச் சொல்வதாம். (பதில்) - இப்படி பிரகிருதியை பெண் ஆட்டிற்கு கல்பனை செய்வதால் யாது பிரயோஜனம் ? மேலும் அது இந்த ப்ரகரண வாக்யங்களுக்கு விரோதமாக விருக்கிறது. ஸம்பூர்ண ஜகத்திற்கும் காரணபூதமான பிரகிருதி இருக்கிறது; சேதனர்களுக்கும் காரணமாக விருக்கிறது. இவர்கள் அநாதிகாலமாக ஸம்சாரத்தில் கட்டுப்படுவதற்கு பிரகிருதி காரணமாகவும், அதுவே நிகில சுகதுக்கங்களுக்கும் மோக்ஷமாகிற அபவர்க்கத்திற்கும் ஸாதனமாக விருப்பதாலும், அந்த பிரகிருதி அசேதனமாக விருப்பதால், அதன் ஸ்வரூபம் இம்மாதிரியிருக்கிறது என்று நினைப்பதும் தவறாகும் - அதை ஒரு வெள்ளாட்டின் தன்மையாகச் சொல்லுவது - அதி அல்பமாகவும்

ஒரு சில பிரஜை களை உண்டு பண்ணத்தக்க சக்தி பெற்றதாயும் அது ஒரு சங்கர்ப்ப விசேஷத்தாலே யதேச்சையாக ஒரு சேதனனு டன் சம்பந்தப்பட்டு - அதனால் சிறிய அளவு பாலை ஒரு அற்ப பிரயோசனத்துக்காக உபயோகப்படும் ஸாதனமாக, பிற்பாடு அந்த வெள்ளாடு (பிரகிருதி) சேதனனால் போக்யத்திற்குப் பிறகு அதன் சம்பந்தத்தை பரிதியாகம செய்வதற்கு யோக்யதை பெற்ற தாக விருக்கிறது - அதுவே சேதன விடுதலைக்குக் காரணமாகிறது என்று சொல்வது - அதற்கு உருவகமாகக் கல்பனை செய்வது விருத்தமேயாகும். (இங்கு சொல்லப்படுவது - ராமானுஜர்) பிரகிருதியை - வெள்ளாட்டிற்கு உருவகமாகக் கொள்வதற்கும் - அதன் அயோக்யதையை விளக்க ஒரு திருஷ்டாந்தம் கூறுகிறார் - பிரகிருதி இந்த உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் அதே மாதிரி பிராணிகளையும் உண்டு பண்ணுகிறது. அதை ஒரு வெள்ளாட்டிற்கு உபமானமாகக் கூறுவது சரியில்லை - ஏனெனில் வெள்ளாடு ஒரு சில பிரஜைகளை உண்டு பண்ண சக்தி பெற்றது. பிருகிருதியே ஜீவர்களை சுக துக்கங்களை அனுபவிக்க உதவுகிறது. ஆனால் வெள்ளாட்டின் பிரயோசனம் ஒரு சிறிது அளவுள்ள பால் கொடுப்பது. பிரகிருதி அசேதனம் - வெள்ளாடு ஒரு சேதனம். அசேதனம் தன்வசமுள்ள ஜீவர்களைவிடத் துணியாது. வெள்ளாடு சேதன மட்டுமன்றி - அது அதன் போக்யத்திற்குப் பின்பு பரித் யாகம் செய்யப்பட வேண்டிய யோக்யதையைப் பெறவேண்டும். அது சேதனமானபடியால் அதுவே ஓடிப்போய்விடும் - அதற்கு இஷ்ட மில்லாவிடில் - அதனால் பரிதியாகம் செய்யபட மாட்டாது என்கிறார் இராமானுஜர்).

ஸ்வே 2-4-5 अजामेकां - अजो ह्येकः - अजोऽन्यः -

ஒரே ஒரு அஜா; ஒரு அஜ; இன்னொரு அஜ - இருக்கிறது என்று அஜா சப்தத்திற்கு விருபார்த்தமாக - பலவகைப்பட்ட பொருள்கள் கற்பிப்பது சரியில்லை - இந்த எல்லா விஷயங்களிலும். பெண் ஆட்டின் ஸ்வரூபங்கள் கற்பிக்கப்பட வேண்டும் என்றால் - அது நியாய விரோதமாகும் - அவ்விதம் அந்த பிரகிருதி ஒரு வெள்ளாடு - அது ஒரு சேதனனுடன் சம்பந்தம் பெறுவது - மீண் டும் சேதனம் சம்பந்தம் பெறுவது இந்த கருதி பிரகாரம -

महात्मेनां हुक जोगामजोऽन्यः — ।

இன்னொரு ஆண் பிராணி - அஜ - என்று இருக்கிறது - இந்த அஜா பெண்ணான அஜாவை அனுபவித்து விட்டு அவளை பரித்யாகம் செய்கிறது - என்று சொல்வதால், மீண்டும் சம்பந்தம் பெற்று அந்த மனிதனே அறிவுள்ளவனாகவும் முக்தனுமாகிறான். இதில் பிரக்ருதியைப் பரித்யாகம் செய்யும் முக்தனைச் சொல்வதாகும். அத்தகைய சம்பந்த யோக்யதையை ஒரு வெள்ளாட்டிற்குக் கொடுத்து - அஜா என்பதை இவ்விதம் பரிகல்பம் செய்வது அத்யந்த விருத்தமானது.

இங்கே ஆட்சேபம் - மூன்று பிறப்பற்றவை - ஒன்று பெண் ஆடு - மற்ற இரண்டு ஆண் ஆடுகள் - இவ்விதமாகில் பெண் ஆடு எப்படி இறுதியாக விடப்படக்கூடும் - எங்கனமெனில் - பிரகிருதி நன்கு அனுபவிக்கப்பட்டுவிட்டு - முக்தனால் விடப்படுவது போல.

(சங்கரபாஷ்யத்தில் - சமஸாதி காரணம் - ஸ்வே. உபநிஷத்

**अजामेकां लोहितशुक्लकृष्णां . . . . . भुक्तभोगामजाऽन्यः -**

என்று சித்தாந்தப்படி - இதன் பொருள் லோஹித (தேஜஸ்.) சுக்ல (ஜலம்) கிருஷ்ண (பூமி) மான உருவமுள்ளதும், ஸமானவுருவமுள்ள பலவகு பிரஜைகளை (காரியங்கள்) ஸ்ருஷ்டிக்கின்றதும், ஏகமுமான அஜையை (அவித்யையை) ஸேவிக்கின்ற ஒரு அஜமானது (ஜீவன்) திருப்தி படுகின்றது. அனுபவத்திற்குப்பின்பு - இந்த அஜையை (அவித்யையை) வேறு முக்த ஜீவன் விட்டு நீங்குகிறான்-என்பதாம். இந்த மந்திரத்தில் அஜாம் என்ற பதத்தால் ஸாங்கியர்கள் சொல்லும் ஸ்வதந்திரமான மூலபிரகிருதி (பிரதானம்) சொல்லப்படுகிறதா ? அல்லது தேஜஸ் அப் அன்னம் - ரூபமான அவாந்தர (இடையிலுள்ள) பிரகிருதி (உண்டாக்கப்பட்ட காரியங்கள்) சொல்லப்படுகிறதா ? சாங்கியன் மூல பிரகிருதியே என்று சொல்ல (பூர்வ பக்ஷம்) சித்தாந்தம் அவாந்தரபிரகிருதிதான் தேஜஸ் - அப் - அன்னம்) சொல்லப்படுகிறது - இதற்கு மூன்று சூத்ரங்கள்.

சமஸம் - யாகத்தில் உபயோகப்படும் மரத்தாலாகிய ஒரு பாத்திரம் - வயிற்றில்பெருத்தும் மேலே ஒட்டையுடனுமிருக்கும் இதில் ஸோமலதையின் ஸாரம் வைக்கப்படுகிறது - இங்கே சமஸ் சப்தம் அவிசேஷாத் - பொதுவாக (விசேஷணமின்றி) ஒரு பொருளை உபதேசிப்பதாக எடுத்துக் கொள்ளப்படவேண்டியது;

ஆனால் சமஸ் சப்தம் மட்டும் கீழ்பாகத்தில் (இடையில்) ஓட்டை யுள்ளதாகவும், மேல்பாகத்தில் மூடியுள்ளதாக விருக்கிற - விசேஷத்தை - கொண்டது - இது இங்கே (லக்ஷணம் வாய்ந்த பொருள் பொதுப்பட உபதேசிப்பதாக) எவ்விதம் கொள்ளப் படுகிறதோ - அவ்விதமே ஸாங்கியன் சொல்லுக்கு (பிரதானமே) என்று சொல்லும்படி விசேஷம் ஏதுமில்லை - இம் மந்திரத்தில் அவாந்தர பிரகிருதியைக் குறிப்பது எவ்விதம் சரியோ - அஜை யாகக் கற்பித்து - சூரியனை மது (தேனைக்) கூறினது போல.

அஜா சப்தம் ரூடியாக ஆட்டில் பிரயோகம். எவ்விதம் உல கில் ஒரு அஜையையானது (ஆடு) தைவவசமாகச் சிகப்பு வெள்ளை கருப்பு என்ற நிறமுள்ள தனக்கு ஸமான உருவமைந்த குட்டி ஆடுகளை உடையதாக ஆகுமோ, அந்த அஜையை (ஆட்டை) ஒரு அஜம் ஸேவிக்கின்றதாய் - இவ்விதம் அனுபவிக்கப்பட்ட அஜத்தை (ஆட்டை) வேறு அஜமானது (ஆணடானது) பரித் யாகம் செய்யுமோ, இவ்விதமே இந்த தேஜோ பன்ன ரூப மான பிரகிருதியும் மூன்று வர்ணமுள்ளதாயும் - ஸமான ரூப முள்ளதும் சராசர வடிவமானதுமான காரிய ஸமூஹத்தை உண்டு பண்ணுகிறது. அவித்வானை க்ஷேத்ரக்ஞனால் அனுப விக்கப்படுகிறது. வித்வானால் பரித்யாகம் செய்யவும் படுகின்றது. ஒரு க்ஷேத்ரக்ஞன் அனுஸரிக்கிறான் - இன்னொருத்தன் விடு கிறான் - இதனால் ஜீவபேதம் சொல்லவரவில்லை. பிரகிருதி பந்த மோக்ஷத்திற்குக் காரணமாகிறது சூரியனுக்கு மதுத்வம் ஏற்படுவது கல்பனையினால். அதுபோல அஜையாக இல்லாத வற்றிற்கு அஜாத்வம் கல்பிதமாக விருக்கிறது. ஆகவே தேஜஸ் அப்பு அன்னம் - இவைகளில் அஜா சப்த பிரயோகம் விரோத மில்லை என்பதாம்.

—o—

# அதிகரணம் 1-4-3

## ஸங்க்யோப ஸங்க்ரஹாதிகரணம் (1-4-3)

ஸூத்ரம் न संख्योपसंग्रहादपि नानाभावादतिरेकाच्च (1-4-11)

ந ஸங்க்யோபஸங்க்ரஹாதபி நாநாபாவாததிரேகாச்ச (1-4-11)

ஸங்க்யோபஸங்க்ரஹாத்அபி - இருபத்தைந்து தத்து வங்களையே (பஞ்சபஞ்சஜநா: என்னும் சுருதி) குறிக்கின்ற தாலும், ந ஸாங்கியமதமாக தத்வங்கள் இங்கு கூறப்படு வதாக யேற்படாது. நாநாபாவத் – ஸாங்கிய தத்வங்களைக் காட்டிலும் வேறுபட்டிருப்பதால் அதிரேகாத்ச—இருப தைந்தாவது தத்வத்திற்கு மேற்பட்டிருக்கையாலே.

முன் அதிகரணத்தில் 'அஜா' வாக்யத்தில் கூறப்படும் மூலபிரகிருதி அப்ரஹ்மாத்மகமானது என்று விசேஷிக்கப் படாமையினாலே, அது ஸாங்கியதந்திரஸித்த அப்ருஹ்மாத் மக மூலப்பிரகிருதியாகாது, என்று நிரூபிக்கப்பட்டது. இதில் யஸ்மிந்பஞ்ச என்று தொடங்கும் மந்திரத்தில் அப்பிருஹ்மாத்மக மூலபிரகிருதியின் அடையாளமுள்ளது, என்கிறவாதம் தள்ளப்படுகிறது.

வாஜஸனேயர்கள் ஓதுகிறார்கள் பிரு.உ. 6-4-17ல் यस्मिन पञ्च पञ्चजना आकाशश्च प्रतिष्टित: । तमेवमन्य आत्मानं विद्वान् ब्रह्मामृतोऽमृतम् (எந்த ஆத்மாவிடத்தில் ஐயைந்து (இருபத்தைந்து) தத்வங் களும் ஆகாசமும் நிலை நிற்கின்றனவோ, பெரிதாய், அழி வற்றதான அந்த ஆத்மாவை இந்தவிதமாக அறியும் மனிதன் முக்தியடைகிறான்)இந்த தத்வங்கள் தங்கும் ஆத்மா (புருஷன்). அதனை அறிவதால் முக்தி உண்டாகும் எனக் கூறப்படுகிறது. இதில் பஞ்சஜநா: என்கிறபதம் ஐந்து தத்துவங்களின் ஸமூஹத்தைக் குறிக்கிறது. பஞ்ச பஞ்சஜநா: என்பதாலே இப்படிப்பட்ட சமூஹம் ஐந்து உள்ள தென விளங்குகிறது. ஆகஐயைந்து (இருபத்தைந்து)

தத்வங்களே பஞ்சபஞ்சஜநா: - என்கிற தொடரால் குறிக்கப் படுகின்றன என்பது தெளிவு). பஞ்ச சப்த விசேஷத்தாலே பஞ்சஜனசட்தாத் இருபத்தைந்து தத்துவங்கள் சொல்லப்படு கின்றன. இது சாங்கியனின் பக்ஷத்திற்கு ஒத்திருக்கிறது. அதனால், இதில் இந்த மந்திரம் கபிலதந்திரஸித்ததத்தவங் களைப் பிரதிபாதிக்கின்றதா அல்லது இல்லையோ (இல்லை யெனில் அது யாது?) என்கிற சந்தேகம், எது சரியாகும்?

என்ன சொல்லப்பட்டதென்றால், पञ्चजनाः என்பது ஸமாஸம் ஸமாஹார விஷயம்—மொத்தம்—சமூஹத்தைக் குறிக்கிறது. (சாங்கியன் நிர்வஹிப்பது ஐயைந்து சமூஹங்கள் ஒவ்வொரு சமூஹத்திற்கு ஐந்து; ஆக 25 1) ஞான இந்திரியங்கள் 2) கர்மேந்திரியங்கள் 3) ஐம்பூதங் கள் 4) ஐந்து தன் மாத்திரைகள். 5) மனது அஹங்காரம் புத்தி, பிரகிருதி, புருஷன், ராமாநுஜரின் அபிப்ராயம், பஞ்ச ஜநா:—ஐந்து கர்மேந்திரியங்களைக் குறிக்கும்—சரீரம், கண், காது, மூக்கு நாக்கு.)

पञ्चानां जनानां समूहः पञ्चजनाः - पञ्चपूल्य इतिवत् पञ्चपूल्यः பல சமூஹங்களைக் குறிக்கும்; அதில் ஒவ்வொன்றும் ஐந்து வைக்கல் மூட்டைகளைக் குறிக்கும் ஐயையைந்து என்பதைப் போல. இங்கே पञ्चजनाः - லிங்கத்தில் வித்யாஸமிருக்கிறது. पञ्चजनी என்று ஸ்திரிலிங்கத்தில் இருக்க வேண்டியது. இங்கே புல்லிங்கமாக விருக்கிறது. பஞ்சஜநா: என்கிற புல்லிங்கம் வேதந்தின் பழக்கத்தினாலே யேற்பட்டதாகும்.

எப்படி அத்தனை ஸமூஹங்களைக் குறிக்கும்? அந்த ஸமூஹம் ஐந்து என்றும் ஒவ்வொன்றும் ஐந்து பொருள் களைக் குறிக்கும் - முதலிலே ஐந்து, பஞ்சஜநா: என்பதிலுள்ள ஐந்து அதேமாதிரி பஞ்ச பூலய: ஐந்து வைக்கல் (ஸமூஹம்) கட்டுக்கள் ஒவ்வொன்றும் ஐந்துக்கட்டுக்களைக் கொண்ட தால் ஐயையைந்து ஆக இருபத்தைந்து தத்துவங்கள் இதில் எப்படி பஞ்ச பஞ்சபூலய: (ஐயையைந்து வைக்கற கட்டுக்களை இருக்கின்றனவோ அதுபோல பஞ்ச பஞ்சஜநா: (இருபத்தைந்து தத்துவங்கள் पञ्चविंशत् இருபத்தைந்து

த்த்துவங்கள் சொல்லப்படுகின்றன. இந்த 25 தத்வங்கள் யாவை என்றால் மோக்ஷத்திற்க்காக முமுக்ஷுக்களாலே பிரகிருதியும் அதனுடன் இருபத்தைந்து தத்துங்வகள் அறியப்படவேண்டியவை என்றும் ஸ்மிருதிகளில் பிரசித்தி யாகச் சொல்லப்பட்டவை ஆகும். இவை கபிலரின் சாங்கய தந்திரத்தில் உள்ளவை. ஸா. காரிகை मूलप्रकृतिविकृतिर्महदाद्याः प्रकृति विकृतयः सप्त षोडशकश्च विकारो न प्रकृतिर्न विकृतिः पुरुषः என்று கபிலரின் ஸித்தாந்தத்தில் பிரஸித்தியாகும். (சாங்கியன் சொல்வது அவ்யக்தத்தின் (மூலபிரகிருதியின்) ஸ்வபாவத் தையும் அது காரியமாக பரிணமிக்கும்போது அதன் காரி யங்களையும் (வ்யக்தத்தையும்) ஜீவனையும் (க்ஞ) எல்லாம் அறியப்பட வேண்டியது மேக்ஷத்திற்காக).இங்கே சாங்கிய காரிகை மூலபிரகிருதி எல்லாவற்றிற்கும் அடிப்படையாக விருக்கிறது, அது அவ்யக்தம் (உற்பத்தியை செய்யாமல் மாறுதபடி அப்படியே இருக்கிறது.) மஹத்திலிருந்து ஆரம்ப மாகும் ஏழுதத்துவங்கள் (பிரகிருதி விக்ருதயம் ஏழு) அவை உண்டாக்கப்படாமலும் உண்டாக்கப்பட்டவையாகவுமிருக் கின்றன. विकारेन प्रकृतिः न विकृतिः உண்டாக்கப்பட்டவை பதினாறு; புருஷன் உண்டாக்கவுமில்லை உண்டாக்கப்பட்ட தாகவுமில்லை. पुरुषः என்பது கபிலதந்திரபிரஸித்தி. ஆகவே இவை கபலரின் 25 தத்துவங்களைக் கூறுவதாகும் तन्त्रसिद्ध तत्त्वप्रतिपादनपरः என்பதாகும்.

(பூர்வபக்ஷம்) (சா. காரிவை மூலபிரகிருதி இது உண்டாக்கப்படாதது அதிலிருந்து உண்டாக்கப்பட்டவை ஏழுதத்துவங்கள், இந்த ஏழுதத்துவங்களிலிருந்து மற்ற தத்துவங்கள் உண்டாகியவை. ஏழு-மஹத் அஹங்காரம் ஐந்து தன் மாத்திரைகள் அவைகளிலிருந்து ஐம்பூதங்கள் ஐந்து ஞான ஐந்து கர்மேந்திரியங்கள்மனஸ். இவை மீண்டும் மாறுபடாதது. புருஷன் உண்டாக்கப்படவுமில்லை உண்டாக்குபவனுகவுமில்லை. ஆக 25 தத்வங்கள்.)

இவ்விதம் சொல்லப்படுமாகில், (சித்தாந்தி) சரி, நாங் களும் எண்ணிக்கையை ஒப்புக்கொள்கிறும் (சூத்ரம் 1-4-11).

(பஞ்ச பஞ்சஜநா: என்னும் சுருதி) இவை 25 தத்துவங்களைக் குறிப்பினும், இதனால் கபிலரின் 25 தத்துவங்கள் எங்கள் மனத்திற்கு உண்டாகவில்லை; அதாவது எண்ணிக்கையில் 25 ஆனாலும் அவை கபிலதந்திரஸித்தமான தத்துவங்களல்ல எப்படி? नाना भावात् ஸாங்கியதத்வங்களைவிட வேறாகயிருப்பதாலே. ஏனெனில் பஞ்சஜநா: பஞ்ச என்கிற விசேஷத்தால் காட்டப்பட்டிருக்கிறபடியாலே பஞ்ச பஞ்ச ஜநா: என்று இவை கபிலரின் ஸித்தாந்தினின்று வேறு பட்டவை (அத்ரேகாத்ச இருபத்தைந்துக்கும் மேல் பட்டிருப்பதாலேயும்); சுருதியில் சொல்லப்பட்டதை விசேஷித்துச் சொல்லப்பட்ட पञ्चजनाः என்பதை நோக்கவும். यस्मिन् पञ्च पञ्चजना आकाशश्च प्रतिष्ठतः (பிரு. உ. 6-4-17) எந்த ஆத்மா விடத்தில் ஐயைந்து (25) தத்வங்களும் ஆகாசமும் நிலை நிற்கின்றனவோ பெரியதாய் அழிவற்றதான அவ்வாத் மாவை तमेव मन्य आत्मानं विद्वान् ब्रह्मामृतोऽमृतम् இவ்வண்ணமாக அறியும் மனிதன் முக்தியடைகிறான். இதில் "யத்" (यस्मिन्) என்கிற சப்தத்தினால் காட்டப்பட்டது, பிருஹ்மத்தை ஆஸ்ர . யம் செய்வதாலே இவை பிருஹ்மாத்மகம் பிருஹ்மத்தை ஆத்மாவாகவுடையது.

மேலும் तमिति (அவனை) என்று பராமர்சிப்பதாலே, யச் சப்தம் நிர்திஷ்டம் तम् ஆகிற பிரும்மத்தைக் குறிக்கும் (ब्रह्मेति) ஆகையால் तेभ्यः (பஞ்சஜநா.) சாங்கியனின் தத்துவங்களை விட வேறானதாகவுமிருக்கின்றன அதனால் தந்திரஸித்த மான தத்துவங்களில்லை என்பதாகும். अतिरेकाच्च இருபத்தைந் துக்கு மேற்பட்டிருக்கையாலும் தந்திரஸித்தமான இருபத் தைந்து தத்வங்கள்; இந்த விடத்தில் அவைகளை விட அதிக மாக விருப்பதாலே; "யத்"—சப்த நிர்திஷ்டமான பரமாத்மா வும் பூதாகாஸமும் இவை இரண்டும் அதிகமாக விருக்கின் றன. (அதாவது இரண்டு காரணங்களால் இங்கு ஸாங்க்ய தத்வங்களை ஓதப்படவில்லை. முதல் காரணம், வைதிக மதத்தில் பிருஹ்மாத்மகமானது, ஆனால் ஸாங்கிய பக்ஷத்தி லுள்ள இருபத்தைந்து தத்வங்களும் பிரும்மாத்மகமாக இல்லாதவை. இரண்டாவது யஸ்மிந் பஞ்சபஞ்சபஞ்சஜநா:

**ஆகாஸஸ்ச பிரதிஷ்டித: த மேவமந்ய ஆத்மாநம் பிருஹ்மம்** என்னும் மந்திரத்தில் இந்த தத்வங்கள் பரமாத்மாவை எப் போதும் ஆஸ்ரயமாகக் கூறப்படுகின்றன. தத்வங்களுக்கு ஆஸ்ரயமாகக் கூறப்படுவது ஜீவனு அல்லது பிருஹ்மமா? ஸாங்கியன் பக்ஷம் இருபத்தைந்து தத்துவங்களில் அடங் கிய ஜீவாத்மாவாகிய ஆஸ்ரயம், (ஜீவாத்மாவே ஜீவாத் மாவுக்கு ஆஸ்ரயமாகும். வைதிகமதத்தில் பரமாத்மா ஆஸ்ரயமாகும்).

ஆகையால் மந்திர तं षोडशविंशकमित्याहु: सप्तविंशमयापरे சிலர் சொல்கிறுர்கள் தத்வங்கள் 26 என்றும்; பரமாத்மா 27வது தத்வம் என்கிறுர்கள் (சூலிக உபநிஷத்), இதனுல் பரமாத் மாவே ஸர்வேஸ்வரனுகவும் பரம புருஷனுகவும், எல்லாத் தத்துவங்களுக்கும் ஆஸ்ரயபூதனுகவும் சொல்லப்படுகிறுன். न सङ्ख्योपसंग्रहादपि (சரி - இந்த எண்ணிக்கையை நாம் ஒத்துக் கொண்டாலும் (சூத் 1-4-11); अपि என்கிற பதம் பஞ்சபஞ்ச ஜநா: (ஐயைந்து) இருபத்தைந்து தத்துவங்களேயே காட்டு கின்றன என்று சொல்லமுடியாது.

(சாங்கியனின் இருபத்தைந்து தத்வங்களே ஐயைந்து கூறுக (5 ஆக - 5 ஆக) சொல்லமுடியுமா? பார்ப்பேம். முதலில் 1) ஐந்து கர்மேந்திரியங்கள் 2) ஐந்து ஞானேந்திரி யங்கள் 3)ஐந்து தன்மாத்திரைகள் 4) பஞ்சபூதங்கள் 5)ஐந்து தத்வங்களாகிற (a) மூலபிரகிருதி (b) மஹத் (c) அஹங்கார (d) மனஸ், (e) புருஷன். இங்கே சுருதியிலே ஆகாஸத் திற்கும் ஆஸ்ரயமாக விருக்கிறது என்று ஓதப்படுகிறது, ஆத்மந் என்றும் இருபத்தைந்துக்கு மேற்பட்டிருக்கை என்று சொல்லப்படுகின்றன. இதற்கு சாங்கியனின் சமா தானம்—இவை முக்யமாகவிருப்பதால் தனித்துச் சொல்லப் படுகின்றன—அவைகளுக்குத் தனிப்பட்ட தர்மங்கள் இருக்கிறபடியால். சுருத பிரகாசிகையில் இவ்விதமாகவும் தத்வங்களே வேறுபடுத்தலாம் மூலப்ரகிருதி ஸத்வரஜஸ்த மஸ்ஸாதிகளால் ஆக்கப்பட்டது. இதனுல் 25 தத்வங்கள் 27 ஆகும். இதில் ஆகாசத்தையோ அல்லது ஆத்மாவையே

சொல்ல வேண்டியதில்லை. ஆகவே இவைகளைச் சொல்லாமே 27 ஆகலாம் அல்லவா? சுருதபிரகாசிகையில் காட்டிய ஐந்து கூறுகள். (1) ஸத்வரஜஸ்தமஸ், மஹத் அ ஹ ங் கா ர ம் (2) 4 பூதங்கள் (ஆகாசத்தைத்தவிர) நுகரும் (Smell) இந்திரியம் (3) மற்ற 4 இந்திரியங்களும் மனதும் (4) ஐந்து ஞானேந்திரியங்கள் (5) ஐந்து கர்மேந்திரியங்கள் இப்படி பிரித்தாலும் சரிப்பட்டுவராது.)

ஆகவே பஞ்சபஞ்சஜநா: இருபத்தைந்து தத்துவங்களையே காட்டுகின்றன என்று சொல்லமுடியாது எப்படி? ஏனெனில் ஐந்து ஸமுஹங்களையும் ஒவ்வொரு ஸமூஹமும் ஐந்து தத்துவங்களால் ஆக்கப்பட்டது எனக் கூற முடியாது. (மேல் பாராவில் பார்க்கவும்) வாஸ்தவத்திலே கபிலதந்திரத்தில் பஞ்சபஞ்ச என்பவைகளுடன் கூட ஜாத்யாதி தர்மங்களும், இதர விஷயங்களும் (இந்த ஐந்து பொருள்களுடன் ஒரு சமயத்தில் சேர்ந்திருப்பதாகவும்) அதனால் 25 தத்துவங்களுடன் இன்னும் ஐந்து எண்ணிக்கை கூட்டப்படும் என்று சொல்வதற்கு) "பஞ்ச" என்கிற வாச்யமுமில்லை ஸாங்கிய பக்ஷத்திலே இவ்விதமாக பஞ்சகர்மேந்திரியங்கள் பஞ்ச ஞானேந்திரியங்கள் பஞ்ச மஹா பூதங்கள், பஞ்சதன்மாத்திரைகள், மீதியுள்ளவை ஐந்து என்று சொல்லும்படி பஞ்ச வாச்யமில்லை. ஏனெனில் இதற்குக் காரணம் இந்த மந்திரத்தில் आकाश: என்று தனிப்படச் சொல்லியிருக்கிறது. இதனால் பஞ்ச பூதங்கள் ஸமூஹ என்று சொல்லும்படி ஸமூஹமாக ஐந்து என்று சொல்வதற்கில்லை. (ஆகாசம் தனித்து சொல்லப்பட்டதாலே). ஆகையால் पञ्चजना: என்கிற இந்த ஸமாஸத்தில் ஸமாஹாரவிஷயம் ஸமூஹவிஷயம் என்பதில்லை; ஆனால் அது இலக்கணரீதியாக ஒரு குறிப்பிட்ட பெயரைக் குறிக்கும் அஷ்டா 2-1-10 பாணிணி சூத்ரம் दिक्संख्याम् (திக் எண்ணிக்கையில்); எண்ணிக்கையும் மற்றபதங்களுடன் சேர்க்கப்பட்டு அதனால் உண்டாக்கப்பட்ட (Compound) சேர்க்கைப்பதம் ஒரு பெயரைக் குறிக்கும் போது அந்த (திக்கைக் குறிக்கிற) பதம் இப்படியாகலாம். இல்லாதபோனால் பஞ்சஜநா:

என்கிற பதம் லிங்கத்தை மாற்றும்படியாகும், அதனால் பஞ்சஜனி (புல்லிங்கம் ஸ்திரிலிங்கமாகலாம்) "பஞ்சஜநா நாம" என்று சொல்லும்படி சில விருக்கின்றன; அவைகளும் ஐந்து என்கிற விசேஷணத்தாலே பஞ்சஸங்க்யா ஐந்து எண்ணிக்கை - பஞ்சபஞ்சஜநா: என்று சொல்லும்படியிருக்கும். இன்னொரு உதாரணம் सप्तसप्तर्षय: ஏழு ஏழு ரிஷிகள் என்பதைப் போலிருக்கும்.

(இங்கு சொல்லப்படுவது — ஆகாசத்தை தனியாக எடுத்து கூறியதாலே பஞ்சபூதங்களாகிற ஒரு ஸமூஹம் ஸித்தியாது. ஆகையால் ஸப்த ஸப்தர்ஷய: (ஸப்தரிஷிகள் ஏழுவர்) என்பது போல பஞ்சபஞ்சஜநா: என்று பஞ்ச ஜனங்கள் என்கிற பெயரையுடைய ஐந்து பொருள்கள் (ஸமூஹ கங்களன்றியே) இங்கு குறிப்பிடப்படுவதாகக் கொள்வதே பொருந்தும்.)

ஸூத்ரம் प्राणादयो वाक्यशेषात् (1-4-12)

பிராணுதயோ வாக்யசேஷாத் (1-4-12)

வாக்யசேஷாத் (முன்வாக்கியத்தை விவரிக்கும்) வாக்ய சேஷத்திலிருந்து பிராணுதய! பிராணன் முதலியவை (पञ्चपञ्चजमा:) ஐந்து பஞ்ச ஜனங்கள் என்று அறியப்படுகிறது. பிரு. உ. (மா. 7-2) प्राणस्य प्राणमूत चक्षुषश्चक्षु: श्रोत्रस्य श्रोत्रमन्नस्यान्नं मनसो ये मनो विदु: பஞ்சபஞ்சஜநா: என்று குறிக்கப்பட்ட ஐந்து பஞ்சஜனங்கள் எவை எனில் இந்த மந்திரத்தை விவரிக்க யேற்பட்ட மந்திரம் இதுவாகும்-பிராணஸ்ய பிராணபூத...விது: (6-4-18) பிராணன் எனப்படும் ஸ்பர்ச இந்திரியத்திற்கு பிராணனுகவும், கண்ணுக்குக் கண்ணுகவும் காதுக்குக் காதாகவும் அந்நத்துக்கு (மூக்கும் நாக்கும்) அந்நமாகவும் எதை அறிகிறுர்களோ, என்று பிருஹ்மத்தால் ஸத்தைப் பெறுவனவாக குறிக்கப்பட்ட பிரராணன் (த்வக் இந்திரியம்) கண், காது, அந்நம். மனம் என்னும் ஐந்துமே முன்மந்திரத்தில் பஞ்சஜநா: என்று கூறப்பட்டவையாகும்.

வாக்ய சேஷத்திலே பிரும்மத்தை பிராணன்களுக்குப் பிராணனுகவும், (பிராணன் என்பதற்குத்வக் இந்திரியம் என அர்த்தம்) கண்ணுக்குக் கண்ணுகவும் காதுக்குக் காதாக வும், அங்கத்துக்கு அங்கமாகவும், மனத்திற்கு மனமாகவும் அறிகிருர்கள் (மாத். பிரு. உ. 4-4-18); இதில் பிராணனும் மற்ற பொருள்களும் பிரும்மத்தை நம்பியிருப்பதாலே (ஆஸ்ரயமாகக் கொண்டதாலே) அவைகளே பஞ்சபஞ்சஜநா:— என்று ஓதப்படுகின்றன,

அவ்விதமாஞல் காண்வ மாத்யந்தினசாகையில் यस्मिन् पञ्च पञ्चजना: என்கிற மந்திரம் ஸமமானதால் प्राणस्य प्राणम् என்கிற வாக்ய சேஷத்திலே இந்த பதங்கள் (6-4-18) अन्नस्य चान्नं அங்கஸ்ய அங்கம் என்று காண்வசாகையில் காணப்பட வில்லை. அதனுல் சொல்ல முடியாது—அவர்கள் விஷயத் திலே பஞ்சபஞ்சஜநா: என்று சொல்லி அது பிராணனும் மற்ற பொருள்களும் என்று சொல்லும்படி இங்கு முடியாது. (காண்வசாகையில் முடியாது. இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக் காரரே பதில் அடுத்த சூத்ரத்திலே சொல்கிருர்.

சூத்ரம் ज्योतिषैकेषामसत्यन्ने (1-4-13)

ஜ்யோதிஷைகேஷாமஸத்யங்நே (1-4-13)

ஏ கேஷாம் - காண்வபாடத்திலே அஸதி அங்நே-அங்ந மில்லாதபோது ஜ்யோதிஷா (முன் மந்திரத்திலுள்ள) ஜ்யோ திஸ் சப்தத்திஞல் (பஞ்சஜநங்கள் இந்திரியங்கள் என அறியப் படுகின்றன) இதற்கு வாக்யசேஷம் சொல்வதாக சொல்லப்படுகிறது. एकेषां காண்வபாடத்திலே, असति अन्ने அங்நமில்லாதபோது, ஜ்யோதிஷா (முன் மந்திரத்திலுள்ள) பஞ்சஜநா: பஞ்ச ஜனங்கள் இ ந் தி ரி ய ங் க ள் என) என அறியப்படுகின்றன. (இங்கே ஜ்யோதிஸ் சப்தம் பிரு. உ. 4-4-16ல் 2 தடவைகள் வருகிறது. முதலில் வரும் போது, நான்காவது வேற்றுமையிலும் மீண்டும் ஆரும் வேற்றுமையிலும் வருகிறது. இந்த பதம் 6ம் வேற்றுமை யில் சொல்லப்படுகிறது சங்கரரின் அபிப்ராயம் இன்ஞெரு

பதத்தின் 4 வது வேற்றுமையிலிருப்பதைக் குறிக்கிறது. அதனுல் பிருஹ்மம் காட்டப்பட்டதாகும். அவருடைய சமாதானம் அங்கத்திற்குப் பதிலாக காண்வசாகையில் பிரும்மத்தைச் சேர்த்து அதை பஞ்ச பஞ்சஜநா: என்று சொல்லும்படி என்கிருர். ராமானுஜர் வேறு அபிப்ராயம் கொள்கிருர்).

என்ன சொல்லப்பட்டதென்ருல் **यस्मिन् पञ्च पञ्चजना:** எதில் இந்த மந்திரத்தில் தேவதைகள் பரமாத்மாவை உபாஸிக்கிருர்கள், ஜ்யோதிஷ்களுக்கு ஜ்யோதிஷ் என்றும், அம்ருதம் என்றும் **तद्देवा: ज्योतिषां ज्योतिरायुर्होपासतेऽमृतम्** இந்த மந்த்ரம் இந்த மந்திரத்திற்கு முந்திவருகிறது—**यस्मिन् पञ्च पञ्चजना:** எந்த பரமாத்மாவிடத்தில் ஐந்து பஞ்சஜநா: பிரதிஷ்டிதா: ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றனரோ (பிரு. உ. 4-4-17) இதில் பிருஹ்மத்தை ஜ்யோதிஷ்களுக்குள் ஜ்யோதிஷ் என்று காட்டியதால் பிரும்மத்திற்கு அதீனமாக சில ஜ்யோதிஷ்கள் இருப்பதாகவும், தங்கள் காரியங்களைச் செய்வதாகவும் சொல்லப்படுகின்றன. இவைகள் இந்திரியங்கள் என்றும், வெளி விஷயங்களை இந்திரியங்களுக்கு பிரகாசப்படுத்துகின்றன எனவாகும். ஏனெனில் இந்த வாக்யத்திலே **यस्मिन् पञ्च पञ्चजना:** (எதில் பஞ்சஜநா: ஸ்தாபிதமாயிருக்கின்றனரோ) இதில் ஐந்து என்று குறிப்பிட்ட ஸங்க்யை விசேஷம் சொல்லப்பட்டிருக்கிறது. (இல்லாத போஞல் அது குறிப்பிடப்படாமல் இருக்கும்).

இந்த சுருதியிலே **प्राणस्य प्राणे** (அவர்கள் பரமாத்மாவை) பிராணன்களுக்குள் பிராணன் என்று அறிகிருர்கள். இதில் பிராண சப்தம் சரீரமான த்வக் இந்திரியத்தைச் சொல்லும்; இந்த த்வக் வாயு பூதத்துடன் சம்பந்தம் கொண்டது; மேலும் முக்யபிராணனை ஜ்யோதிஷ் என்கிற சப்தத்தால் காட்ட முடியாது. "கண்" என்கிற பதம் "கண்ணுக்குக் கண்" **चक्षुष** என்று இந்திரியம் சொல்லப்படுவது. **श्रोत्रस्येति** இதில் ஸ்ரோத்தர இந்திரியம். **अन्नस्येति** அந்நஸ்யம் (க்ராணரஸனம்)—ரஸம்-பிருத்வி கந்தம் இத்யாதி இரண்

டையும் குறிக்கும் (இங்கே அங்கம் — இரு வித பொருள்களைக் குறிக்கும் பூர்வமீமாம்ஸத்தில் தந்த்ரம்—என்று சொல்லப் படும் பூர்வம்மா. சூத்—11 பார்க்கவும்). கிராணரஸம் ப்ருத்விதத்துவத்துடன் சம்பந்தம்-ப்ருத்வியை அங்கமாகவும் சொல்லலாம். இதனுல் ரஸம் சுவைக்கப்படுவது. இதனுல் அன்னம் சாப்பிடும் அன்னத்தையும் குறிக்கும். மனம் என்கிற பதம் மனத்துக்குள் மனம்—இதில் மனம் பிரும்ம மாகச் சொல்லப்படுகிறது. ஆகவே அன்னத்தினுல்— அன்னமும் ரஸன இந்திரியமும் – மனத்தை மனம் என்றும் சொல்லி—க்ராண ரஸனயோ:—தந்திரத்திருல்—பஞ்சத்வம் —ஐந்து என்கிற எண்ணிக்கை விரோதமில்லாமல் காட்டப் பட்டதாகும். ஞானத்தைப் பிரகாசப்படுத்தும் மனம் வரை யிலுள்ள இந்திரியங்களை பஞ்சஜன சப்தத்தால் காட்டப் பட்டதாகும். இதில் விரோதம் ஒன்றும் இல்லாமலிருப்பதற் கும், (அவிரோதம் யேற்படாமலிருக்க) க்ராண (நுகருதல்) ரஸன (சுவைத்தல்) இரண்டும் ஒரே பதமாகிற अन्न (அங்கம்) —ஒரே தடவை சொல்லப்பட்டதாகும்—தந்த்ரேண நிர்திஷ்டம்."

ஆகவே - இந்த சுருதியில் यस्मिन् पञ्च पञ्च जना: आकाशश्च प्रतिष्ठित:—(எந்த பிரும்மத்தில்) எதில் இந்த ஐந்து பஞ்ச ஜனங்கள் ஸ்தாபிதமாயினரோ—எதில் ஆகாசமும் ஸ்தா பிதமோ—(பிரு. உ. 4.4-17)—சொல்லப்பட்டது. பிரும்மத் தினிடம் பிரதிஷ்டிதம் (ஸ்தாபிக்கப்பட்டது பிரும்மம் ஆஸ்ரயமாக வ்ருக்கிறது.) எல்லாத் தத்வங்களும் பிரும் மத்தை ஆஸ்ரயிப்பதால் நம்பி வாழ்கின்றன என்று காட்டப் படுவதால்—கபிலதந்திர 25 தத்வங்கள் இங்கு சொலலப் படவில்லை என்பதாகும். மேலும் எல்லா தத்வங்களும் பிரும்மாத்மகமாகவுள்ளவை. ஆகவே எல்லா வேதாந்தங் களிலும் தத்வங்களின் எண்ணிக்கை சாங்கியனின் கணக் குப்படி இருப்பினும் இல்லாவிடினும் சரி, ஸங்கியோப ஸங்க்ரஹேறததபாவேவா—கபிலதந்திர ஸித்தமான தத்வங் களை ஒப்புக் கொள்ளுகிறேமில்லை—ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது. (அதாவது சாங்கியன் சொல்லும் 25 தத்துவங்

களை பஞ்சபஞ்சஜநா:- என்றுஇங்கு குறிப்பிட்டாலும் அவை பிரும்மாத்மகமாகவே உள்ளது. அவன் சொல்வது போல ஸ்வதந்திரபிரகிருதி என்பது இல்லை. இல்லாத போழுல் 25 தத்வங்கள் சொல்லப்படவில்லை என்றே சொல்வோம். இங்கே யாதவபிரகாசரின் பக்ஷமும் நிர ஸனம். மஹா நாராயண உபநிஷத்தில் ஐந்து ஸமூஹங்கள் காணப்படுகின்றன. அத்தகைய பிரகாரமும் சாங்கி யனுக்கு உதவாது-இங்கு பிரும்மாத்மகம் இத்யாதி காரணங் களாலே-என்பதாகும். ஆகவே இங்கு ஸாங்கிய தத்வங் களைச் சொல்வதாக எண்ண இடமில்லை என்பதாகும்.)

### காரணத்வாதிகரணம் 1-4-4

சூத்ரம்-31 कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्तेः (1-4-14)

காரணத்வேந சாகாஸாதிஷு யதா வ்யபதிஷ்டோக்தே:

ஆகாஸாதிஷ் - ஆகாசம் முதலான காரியங்களுக்கு காரணத்வேந ச-காரணமாக யதாவ்யபதிஷ்டோக்தே: — ஸர்வக்ஞத்வம் முதலான பெருமைகளோடு கூடியதாக முன் கூறப்பட்ட பிரும்மத்தையே சொல்லுகின்றதாகையால் பிருஹ்மமே ஜகத்காரணமென்று வேதாந்த வாக்யங்கள் கூறுகின்றன.

முன் அதிகரணத்தில் பிரக்ருதி அபிருஹ்மாத்மக காரணத்வம் ஸித்திப்பது அவைதிகம் என நிரூபிக்கப் பட்டது. அந்த ஸ்வதந்திரமான பிரகிருதியையே ஜகத் காரணம் என வேதங்கள் ஒருமிடறாகக் கோஷிக்கின்றன என்னும் (சாங்கியனின்) வாதம் இதில்தள்ளப்படுகிறது.

மீண்டும் பிரதானகாரணவாதி (சாங்கியன்) ஆக்ஷேபிக் கிறான். வேதாந்தங்களில் ஒரே ஒரு பொருளிலிருந்துஜகத் உற்பத்தியாகிறது—என்று சொல்லப்படவில்லை. அதனால் பிருஹ்மமே தான் ஜகத்யேககாரணம் என்று சொல்லமுடி யாது. சா. உ. 6-2-1 सदेव सोम्येदमग्र आसीत् ஸௌம்ய, இது முதலில் ஸத்தாகவே (நித்ய ஸ்வரூப வஸ்துவாக) விருந்தது என்பதால் ஸத்தாகவிருந்ததை நம்பி, (ஆதாரமாக)

ஸ்ருஷ்டி ஓதப்படுகிறது; தை.ஆர-7-असद्वा इदमग्र आसीत् அஸத், இது முதலில் அஸத்தாக இருந்தது இதனால் அஸத் தான் ஸ்ருஷ்டிக்கு முன்பு இருந்ததாக சொல்லிற்று. (இங்கே ஸத் என்பதற்கு நாம ரூபவிபாகவித் அது ஒன்றாகவேயிருந்தது. அஸத் என்பதற்கு பரிணாமமுடையது எனப்பொருள்." அஸத்திலிருந்து ஸத் உற்பத்தி; பிறகு ஜகத்காரணமானது-அஸத் என்றும் கூறப்பட்டது. இன்னொருசுருதியில் சா. 2-3-19-1ல் असदेवेदमग्र आसीत् । तत् सदासीत् । तत् समभवत् இது முதலில் அஸத்தாகவேவிருந்தது. பிறகு அது ஸத்தாக ஆனது அது உற்பத்தியையடைந்தது (பரிணாமமுடையதாக ஆனது) இந்த வேதாந்த வாக்யங்களாலே ஸ்ருஷ்டிக்குக் காரணமாக யார் ஒருத்தன் காரணமாகும். அது பிருஹ்மம்தான் ஜகத்யேககாரணம் என்று தீர்மானிக்கப்படுவதற்கு அஸக்யம் - முடியாதது. ஆனால் பிரதான விஷயத்திலே பிரதானம் தான் ஜகத்யேக காரணம் என்று நிச்சயிப்பதற்கு முடியும். பிரு. உ. 3-4-7 तद्धेदं तर्ह्यव्याकृतमासीत् வாஸ்தவத்திலே, இது அப்பொழுது அவ்யாகிருதமாக விருந்தது. இந்த வாக்யத்தில் காரணப் பொருள் அவ்யாகிருதம் (நாம ரூபவ்யாகரண மற்றது) என்று படிக்கப்பட்டது. அவ்யாகிருதம் என்பது மூலபிரகிருதியின் பிரஸித்தமான பெயரோடும் ஜகத்தின் காரணம் அதுதான் என்று சொல்கிறான் சாங்கியன். ஜகத்திற்கு பிரளயம் யேற்பட்டதைச் சொல்லி तन्नामरूपाभ्यामेव व्याक्रियत பிறகு (ஸ்ருஷ்டியில்) அது நாம ரூபங்களினால் வ்யாகரணம் செய்யப்பட்டது. (பிரு.உ. 1-4-7) இதலிருந்து (அதே அவ்யாகிருதத்திலிருந்து) ஜகத்தின் உற்பத்தி சொல்லப்படுகிறது.

अव्याकृतं என்பது अव्यक्तं நாம ரூபங்களால் பிரிக்கப்படவில்லை. (ஒன்றாக ஈஷிக் கொண்டு இருந்தது.) அவ்யாகிருதம் விரிவாக்கப்படவில்லை. अव्यक्तं என்பது பிரதானமே. பிரதானமே ஜகத்யேக காரணம் என்பதற்கு காரணங்கள் சொல்லப்படுகின்றன. அதாவது இந்த பிரதானத்தின் ஸ்வரூபம் நித்யம்—பரிணாமமடைகிறது. பிரளயத்தில் ஸத் என்றும் ஸ்ருஷ்டிகாலத்தில் அஸத் (பரிணாமத்தை உடைய

னாகையாலே) என்று கூறத்தக்கதும், பிரளய காலத்தில் நாமரூப வ்யா கரண மற்றதாகையால் அவ்யாகிருதம் என்கிற பிரஸித்தி பெற்றதான மூலபிரகிருதியே ஜகத் யேக காரணம் என்று இந்த வேதாந்த வாக்யங்களில் சொல்லப் படுகின்றன. பிரதானத்தின் स्वरूपं नित्यत्वेन; परिणामा श्रयत्वेन, மேலும் ஜகத் காரணத் வாதி வேதாந்த வாக்யங்கள் "ஸத்'' சப்தத்தினலும் "அஸத்'' சப்தத்தினலும் சொல்லுவதால் பிரதானத்திற்கு யாதொரு விரோதமுமில்லே. ஆனல் அவை பிரும்மத்திற்கு விரோதமாகவு மிருப்பதாகவு மிருக்கிறது என்கிற படியால், பிரதானம் ஜகத் யேக காரணமாகும் (பூர்வபக்ஷம்.)

**விளக்கம்:—**

இங்கு சொல்லப்படுவதைக் கவனிக்கவும். முதலிய பிர தானம் ஸ்வதந்திரமாக உற்பத்தி செய்யக் கூடியது என்று சொன்னன்—முந்தின சூத்ரத்தில். அது தள்ளி விட்டபடி யால், இப்போது சுருதி ஆதாரத்தைக் கொண்டு ஸ்தாபிக்க முயல்கிருன். ஜகத்காரணவாக்யங்கள் ஒரே விதமாகவில்லே ஒரு வஸ்துதான் ஜகத்காரணம் என்பது பிரும்மத்திற்கு எப்படி பொருந்துமோ அதுபோல பிரதானத்திற்கும் பொருத் தமாகும். ஆகவே சூத்ரக்காரரின் அபிப்ராயம் யாது? சுருதி வாக்யங்களுக்கு ஐககண்டயத்தை எவ்விதம் காட்டுகிருர். அது பிரும்ம விஷயத்தில் தான் பொருந்தும்—பிரதான விஷயத்தில் எவ்விதம் பொருந்தாது என்பதாகும். முதலில் அப்ருஹ்மாத்மக பிரதானமில்லே என்ருர். இப்போது ஸ்ருஷ் டிக்குத் தேவைபடக்கூடிய சாமர்த்தியம் குணங்கள், எல்லாம் பிரும்மத்துக்குப் பொருந்தும். பிரதானத்திற்கு ஒட்டாது என்பது சொல்லப்படுகிறது. பிரதானத்தைச் சொல்வ தற்கு மூன்று காரணங்கள் கொடுக்கப்பட்டன. நித்யமான ஸ்வரூபம், பரிணமமுடையதாக விருத்தல். நித்யமாதலால் ஸத் என்றும், பரிணமமுடையதால் அஸத் என்றும் கூறத் தக்கது. பிரளயகாலத்தில் நாமரூப வ்யாகரண மற்றதாகை யாலே மூலபிரகிருதியான அவ்யாகிருதமே சுருதிகளில்

ஜகத் காரணமாகக் கூறப்படுகிறது என்று கொள்வதே பொருத்தமுடையது என்கிருன்).

அவ்யக்தம் என்பது பிரதானமேயாகும். நாம் மேலே சொல்லியபடி அவ்யாகிருதம் இவ்விதம் ஜகத்காரணமாகும். என்று, நிச்சயிக்கப் படுமாகில், ஸ்ருஷ்டிக்குத் தேவையான ஈக்ஷணம் முதலிய சேஷ்டிதங்கள் (ஸத்ய ஸங்கல்பம் ஸர்வக்ஞத்வம்—ஸர்வசக்தித்வம், இத்யாதி குணங்கள் யாரிடம் சரியாக அமையக்கூடும்?

(சா. உ. 6-2-3ல் ஈக்ஷணம் பிரும்மத்திற்கு ஸ்ருஷ்டிக்கு முன்பு சொல்லப்படுகிறது. அதேமாதிரி தைத். வாக்யமும் பிரும்மத்திற்கு நான் பலவாக ஆவேன் बहुस्यां प्रजायेय பிறகு தபஸ் செய்தது பிறகு ஸ்ருஷ்டித்தது. பிரு. உப. (1-4-7ல்) பார்த்தல் கேட்டல் நினைத்தல் என்கிற சேஷ்டிதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவை ஈக்ஷணத்துடன் கூடச் சேர்க்கப்படவேண்டியவையாகும்.

மேலும் - பிருஹ்மம் - ஆத்மா என்கிறபதங்கள் (ஸ்ருஷ்டிக்குக் காரணமாக உபயோகப்பட்டுள்ள சப்தங்கள்) பிரதானத்தையும் குறிக்கும் ஏனெனில் பிருஹத்வம் (மிகப் பெரியது) வ்யாப்த (எங்கும் பரவியுள்ளது.) இவை பிரதானத்திற்கும் பொருந்தும். ஆகையால் ஸ்மிருதி நியாய பிரஸித்தமான பிரதானமே ஜகத்காரணம் என்று வேதாந்த வாக்யங்களிலும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.—என்கிருன்

(இங்கு பூர்வபக்ஷியின் கருத்து பிரும்மம் உபாதான காரணமாகாது. பிரதானம் ஆகலாம். எங்கனமெனில் பிரும்மம் பிரிக்கப்படாத அவ்யாகிருதத்திலிருந்து நாமரூப வியாகரணம் உண்டாக்க முடியாது; ஆனல் பிரதானம் ஆகலாம்—ஸ்ருஷ்டி என்பது என்ன? பரிணமம்தானே அவஸ்தா ஸ்திதிமாறுதல்தானே. பிரும்மமோ நிர்விகாரம் பரிணமத்தை அது எப்படி அடையும்? பிரதானம் ஆகக் கூடுமே? ஸ்மிருதி (அதாவது கபிலரின் ஸமிருதி) நியாயம் தர்க்கத்திறல் சம்மதிக்கப்பட்டது. சுருதிபக்ஷமும் அது

கூலமாகும் என்கிற கருத்து. வேதாந்தி சொல்வது இவ் விதம் சொல்வது சரியல்ல. அதாவது பிரதானம் உபாதாந காரணமாயும், பிரும்மம் நிமித்த காரணமாகவும் உள்ளது. என்பது சரியல்ல. ஸ்ரீராமானுஜரின் அபிப்ராயம் ஸ்ருஷ்டி என்பது சித் அசித் வஸ்துக்களின் ஸ்வரூப, ஸ்வபாவங்களில் மாறுதல், இந்த மாறுதல்கள் சரீரத்வாரா பிரும்மத்துக்கு யேற்படுவதால் பிரும்மத்திற்கு நிர்விகாரம் என்பது பொருந்தும். அவ்யாகிருதமான மூலப்பிரகிருதி அவஸ்தா பேதங்கள் அடையக்கூடும். ஈக்ஷணம் சேதனனின் செய்கை நிமித்தகாரணம்; நாமரூபவிபாகமாகிற ஸ்ருஷ்டி பிரகார மாகிய சரீரத்திற்குயேற்படுவதாலே, பிரும்மம் உபாதான காரணமாவதற்கு தடங்கல்—ஆட்சேபம்யிருக்க முடியாது. அந்தர்யாமியாகவுமிருப்பதால் ஸர்வநியந்திருத்வம் பிரும்மத் திற்கு யேற்படுகிறது.)

ஸ்ரீபாஷ்யம்:—இவ்விதம் பூர்வபக்ஷி சொல்லக் கூடுமாகுல் நாம் பதில் அளிப்போம். **कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्तेः** ஆகாசம் முதலான காரியங்களுக்கு காரணத்வேந ச காரணமாக; யதாவ்யபதிஷ்டோக்தே: ஸர்வக்ஞுத்வம் முதலான பொருமைகளோடு கூடியதாக பிரும்மம் சுருதிகளில் சொல்லப்படுகிறது. **च** சப்தம் து சப்தத்தின் அர்த்தத்தைச் சொல்லி, ஆட்சேபத்தை நிராகரிக் கிறது. ஸர்வக்ஞாத் ஸர்வேஸ்வராத் - ஸத்யஸங்கல்பாத் நிரஸ்தநிகில தோஷகந்தாத் இத்தகைய பரமாத்மா பரஸ் மாத் (எல்லாவற்றிலும் மிகப் பெரிய) பிருஹ்மண: பிரும்மமே (ஏவ) ஜகத் உத்பத்திக்குக் காரணம் என்று நிச்சயிக்கக்கூடும். எப்படி? **आकाशादिषु** ஆகாசங்களுக்கும் பிரும்மமே உற்பத்திக்காரணம் என்று சுருதி சொல்லுகிற படியால் ஸ்ருஷ்டிக்குத் தேவையான ஸர்வக் ஞாதி குணங் களுடன் பிரும்மம் இந்த உலகுக்கு ஜன்மாதி (ஆக்கல் அளித்தல் அழித்தல் ஆகிற காரியங்கள்) யத: எதனிட மிருந்து தோன்றியதோ அது பிருஹ்மம் என்று வேத வாக்யம் லக்ஷணம் சொல்வதாலும் **जन्माद्यस्य यतः** (1-1-2) இவைகளில் பிரதிபாதிதம் பிரும்மமே. இது மாதிரி மற்ற

சூத்ரங்களிலும் ஸ்ருஷ்டிக்கு வேண்டிய ஸர்வக் ஞத்வம் ஸத்யஸங்கல்பம், ஸர்வசக்தித்வம். இத்யாதி சொல்லப் படுவதாலே.

மேலும் பிருஹ்மமே ஆகாசம் முதலிய கர்ரியங்களுக் கும் காரணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தை. ஆ. (2-1-1) तस्माद्वा एतस्मादात्मन आकाश: संभूत: அதே பிரும்மத்தினிட மிருந்து ஆகாஸம் உண்டாயிற்று. சா. உ. 6-2-3 அது தேஜஸ்ஸை உண்டாக்கியது. तत्तेजोऽसृजत இத்யாதிகளில் ஸர்வக்ஞம் பிரும்மமே காரணம் என்று ஓதப்பட்டது. அவ்விதமே सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म...सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चिता பிரும்மமே மீண்டும் ஜகத்காரணமாக இந்த சுருதிகளினும் ஓதப்பட்டிருக்கிறது. பிருஹ்மம் ஸத்யம் ज्ञानं अनन्तं ब्रह्म விகாரமற்றதாகவும், தானே பிரகாசிப்ப தாகவும் தேசகால வஸ்துக்களாலே அளவுபடாதபடி அபரிச் சின்னமாகவிருப்பது பி ரு ஹ் ம ம் सोऽश्नुते: ஸர்வக்ஞன் பிரும்மத்தோடு கூட முக்தன் எல்லாக் கல்யாணகுணங் களையும் அனுபவிக்கிறுன்—என்று ஸர்வக்ஞமான பிரும் மத்தைச் சொல்லி, அடுத்தபடியாக (அதாவது விபஸ்சி தேவ பிரும்மம் என்று சொல்லி) तस्माद्वा एतस्मात् ஆத்மந் ஆகாஸ: ஸம்பூத: என்றும் (அப்படிப்பட்ட இந்த ஆத்மா விடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று) என்று தொடங்கி, பிரும்மத்தையே ஜகத் காரணமாக்கி அதையே "அஸத்" என்றும் குறிப்பிட்டது— (பரிணுமமுடையது என்று ஒதியது). அவ்விதமே तदैक्षत बहुस्याम् அது நினைத்தது நான் பலவாக ஆவேன் என்று சங்கல்பித்து); ஸர்வக்ஞம் என்று பிரும்மத்தைச் சொல்லி, सर्वज्ञ ब्रह्मैव என்று காட்டி; பிறகு तत् तेजोऽसृजत தேஜஸ்ஸை உண்டாக்கியது என்று ஜகத் காரணமாகக் கூறி அப்பரம் பொருளையே ஸத் என்றும் அஸத் என்றும் பராமர்ஸித்தது. இவ்விதம் எல்லா விடங்களிலும் ஸ்ருஷ்டி வாக்யங்களிலே பிருஹ்மமே காரணத் தகுந்தது. (அதாவது ஜன்மாத்யஸ்ய யத: என்பதிலும் மற்ற சூத்திரங்களிலும் ஸர்வக்ஞன், ஸத்யஸங்கல்பன், இன்னும் விபஸ்சித் முதலான குணயோகத்துடன் கூடிய

பிருஹ்மமே ஆகாசம் முதலிய எல்லாப் பொருள்களுக்கும் காரணமாக வேதாந்த வாக்யங்களில் சொல்லப்படுவதாலே பிருஹ்மமே ஜகத் காரணம். ஆகையால் ब्रह्मैककारणं जगत् इति நிச்சயிக்கப்படுகிறது.

மேலும் ஆட்சேபிக்கப்படலாம். असद्वा इदमग्र आसीत् இது முதலில் அஸத்தாக விருந்தது அது தான் ஜகத் காரணம் என்று காட்டுகிறதே எனில், அதனுல் பிரும் மத்தை ஜகத்யேக காரணம் என்று எவ்விதம் சொல்லக் கூடும்? அந்த பிருஹ்மம் ஸர்வக்ஞ ஸத்யஸங்கல்ப குண யோகத்துடன் கூடிய அந்த பிரும்மம் தான் காரணம் என் பதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிருர்.

சூத்ரம் समाकर्षात् - (1-4-15)

ஸமாகர்ஷாத் (1-4-15)

ஸமாகர்ஷாத்-ஸர்வக்ஞ இத்யாதி குணயோகத்துடன் கூடிய பிருஹ்மமே ஸத் அஸத் முதலான பதங்களால் எடுக்கப்படுகையாலே, (பிரும்மமே எல்லா வாக்யங்களிலும் ஜகத்காரணமாகக் கூறப்படுகிறது.)

असद्वा इदमग्र आसीत् இது முதலில் அஸத்தாக விருந்தது என்று விபஸ்சித் ஆனந்தமய ஸத்யஸங்கல்ப (இத்யாதி குணயோகத்துடன் கூடிய) பிரும்மமே ஸத் அஸத்பதங் களால் எடுக்கப்பட்டிருக்கிறது. எப்படி ? तस्माद्वा एतस्माद्विज्ञा- नमयात् अन्योऽन्तर आत्माऽऽनन्दमय: सोऽकामयत (இங்கே விக்ஞான மயன் முக்தி பெற்ற ஜீவனைக் குறிக்கும். அவனைவிட வேருன பரமாத்மாவை, ஜீவனையும் தரிக்கும் பரமாத் மாவையே ஆனந்த மயனுக ஓதிற்று. முக்தன் விதவித மாக பிரும்மத்தோடுகூட எல்லா விருப்பங்களையுமடை கிருன். . விபஸ்சித்குணம் உள்ளதாகச் சொல்லிற்று. सोऽकामयत...बहुस्यां प्रजायेय ஆனந்தமயன் ஸங்கல்பித்தான் நான் பலவாக ஆவேன். (பிறக்கக்கடவேன்) இதனுல் காமம் எனப்படும் ஸத்ய ஸங்கல்பம் ஓதப்படுகிறது.

(இதனுல் பிரும்மத்துக்கு ஸ்ருஷ்டிக்க சரீர இந்திரியங்கள் தேவையில்லை ஜீவனுக்குப் பாவனையை ஸ்ருஷ்டிக்க அவயவம் தேவை, நிமித்த காரணம், இங்கே பிரும்மமே உபாதான காரணமாதலால் நிமித்தமாகவும் இருப்பதால் சரீரத்தை பரிணமமுடையதாகச் சொல்வதாம் பிரும்மமாகிற ஆத்மாவை அல்ல.

स इदं सर्वमसृजत् - यदिदं किंच । तत् सृष्ट्वा । तदेवानुप्रविशत् । तदनुप्रविश्य सच्चत्यच्चाभवत् அந்த ஸ்ருஷ்டி பிரகரணவாக்யத்திலே அஸத்தான் இருந்தது என்பதில் (தை. 2-2-7ல்) ஆனந்த மயனுன பிரும்மம் விக்ஞானமயனுன, ஜீவனைவிடவேருன வன்; அந்த பிருஹ்மம் சங்கல்பித்தது நான் பலவாகப் பிறக்கக்கடவேன் அது இந்த உலகமனைத்தையும் ஸ்ருஷ்டித்தது அதை உண்டாக்கியதும் அது அதற்குள் நுழைந்து அது "ஸத்" ஆகவும் "த்யத்" ஆகவும் ஆயிற்று (சித்-அசித்தாக ஆயிற்று) (ஜீவாத்மாவை ஸத் என்றும்; மூலபிரகிருதியை விகாரமுள்ளதாலே அசித்(த்யத்)என்றும் ஓதிற்று இதில் ஆனந்தமயனுன பிருஹ்மம் ஸத்ய சங்கல்ப குணத்துடன் கூடிய பிருஹ்மம் அவனே எல்லாப் பொருள்களுக்கும் ஸத் த்யத்திற்குக் காரணம் அவனே எல்லாப் பொருள்களைத் தன் சரீரமாகக் கொள்வதாலே ஆத்மாவாகவும் எல்லாப் பொருள்களிலும் உள் நுழைந்ததாலே ஸர்வ நியந்தாவாகவும், ஸர்வ ஆத்மபூதமுமாயும் ஆகிருன், என்று காட்டி அதற்குப் பின்பு சுருதி சொல்கிறது (தை. 2-7-1) तदप्येष श्लोको भवति இதற்கு உதாரணமாகக் கூறியது.

முதலில் இது அஸத்தாக விருந்தது; அந்த பிருஹ்மம் ஒவ்வொன்றுக்கும் சாக்ஷியாக விருந்தது என்கிறதனுல் சாக்ஷித்வத்தை ஆதரிக்கும்படி இந்த சுருதியிருக்கிறது असद्वा इदमग्र आसीत् (இவ்வுலகம் முற்றிலும் அஸத்தாக (பரிணமமுடையதாக) இருந்தது. (இங்கே சூக்ஷ்ம தசையிலே அவ்யாகிருதம். ஸத் அஸத் சப்தங்களாலே காட்டப் படுவதாலே சேதன அசேதன வஸ்துக்களைக் குறிக்கும்.) மேலும் பிற்பாடுவரும் இந்த சுருதி ஆரம்பத்திலே, भीषा:

ऽस्माद्वात: पवते எவனிடமுள்ள ப்யத்திஞல் காற்று வீசுகிறது என்பதால் இந்த பிரகரணத்தில் ஓதப்படுகிறது— அந்த பிரும்மமே என்று முடிவு கட்டி அதற்கு எல்லாப் பொருள் களுக்கும் ஆணையிடுதல் (நியந்திருத்வம்) प्रशासितृत्वं (உள்ளி ருந்து மேலான ஆக்ஞையிடுதல்) சொல்லி அதஞல் நிரதிசய ஆனந்த தத்வத்தையும் உடையதாகவும் சொல்வதாக விருப் பதால் இந்த தைத்ரிய மந்த்ரம் பரமாத்மா விஷயமே ஆகும். இது முதலில் அஸத்தாகவிருந்தது என்கிற சுருதி)

அப்போது ஸ்ருஷ்டிக்கு முன்பு நாமரூபவிபாகம் இல் லாதபடியாலே, பிரும்மத்திற்கு ஸத் என்பது அவைகளுடன் சம்பந்தம் இல்லை பரிஞமமில்லை; அவ்யாகிருத சரீரம் என்று அர்த்தம்.) அதஞலே, (तत्सम्बन्धितया अस्तित्व-अभावात् நாமரூப வியாகரணமில்லாதபடியாலே பிருஹ்மத்தை அஸத் என்கிற சப்தத்தால் கூறப்பட்டது. (ब्रह्मैवासच्छब्देनोच्यते) இம்மாதிரி யாக அர்த்த நிர்ணயம் செய்து கொள்ள வேண்டியது இந்த சாந்தோக்ய சுருதிக்கும் சா. உ. 3-19-1 असदेव मग्र आसीत् இங்கேயும் இப்படியே நிர்வாஹம் செய்ய வேண்டியது.

इदं ஜகத் अग्रे (முன்பு) असत् அவ்யாக்ருத நாமரூப மாஸீத் । तत् सदासीत् तत् அவ்யாக்ருத நாமரூபம் ஜகத் । सदासीत् ईषन्नामरूपकार्याभिमुखमासीत् तत् समभवत्-अल्पतरनामरूप व्याकर-णेन, अङ्कुरीभूतमिव बीजं क्रमेण स्थूलमभवदित्यर्थः (உபநிஷத்பாஷ்யம்) (ஸர்வக்ஞனை ஜகத்காரண புருஷனே பிறகு असद्वा...आसीत् இவ்வுலகம் முதலில் அஸத்தாக விருந்தது என்று அஸத் என்னும் சப்தத்தாலே எடுக்கப்படுகிருன். (பிருஹ. உ. 3-4-7ல்) தத்தேதம் தர்ஹ்ய்வ்யாகிருதமாஸீத் அப்போது இந்த உலகம் அவ்யாகிருதமாக விருந்தது, அப்படிப்பட்ட அஸத் என்றும், அவ்யாகிருதம் என்றும், நாமரூப பிரிவற்ற மூலபிரகிருதியைச் சொல்வதாகும்.)

என்ன சொல்லப்பட்டதென்ருல், तद्धेदं तर्ह्यव्याकृत मासीत् வாஸ்தவத்திலே அந்த உலகம் அப்போது அவ்யாகிருதமாக (நாமரூப பிரிவுயற்றதாக) விருந்தது. பிரு. உ. 1-4-7; இதில் பிரதானமே ஜகத் காரணம் என்று காட்டப்பட்டது.

என்று பூர்வபக்ஷி சொல்கிருனே—அது சரியில்லை என்பதாகும். (பதில்) (नेत्युच्यते) அங்கேகூட, அவ்யாகிருத சப்தத்திருல் அவ்யாகிருத சரீரம் கொண்ட பிருஹ்மம் என்று அறியப்படவேண்டியது. ஏனெனில் இந்த சுருதியிலும் (பிரு. உ. 3-4-7) स एषइहप्रविष्ट आनखाग्रेभ्यः पश्यंश्चक्षुः शृण्वन् श्रोत्रं मन्वानोमनः । आत्मेत्येवोपासीत இந்த மேலே சொல்லப்பட்ட பிருஹ்மம் நகத்தின் நுணி முதல் காரியப் பொருள் முழுவதிலும் வியாபித்திருக்கிருன் — என்று உன்நுழைந்து நியமிக்கும் ஸர்வக்ஞ ஸர்வ நியந்தாவாகச் சொல்லப்படுகிருன்; அவனே பார்த்தல் என்பதைச் செய்கிருன் அவனை கண் என்றும் அழைக்கிருர்கள். அவனே கேட்கவும் செய்கிருன், அவனையே காதாகவும் அழைக்கிருர்கள்; அவனே நினைக்கவும் செய்கிருன். அவனையே மனஸ் என்றும் அழைக்கிருர்கள். அப்பேறப்பட்ட, பரமாத்மாவை உபாஸகன் ஆத்மாவேயென்று உபாஸிக்கட்டும், இதனுல் அவன்(அது)स एषः இந்த பிரும்மமே எனப்படுகிருன்.

மேலும் सः एषः इति அந்தப் பரம் பொருளே तच्छब्देनाव्याकृतशब्दनिर्दिष्टस्यान्तः प्रविश्यप्रशासितृत्वेनानुकर्षात् இப்படிப்பட்ட அந்த பரமாத்மாவே ஸ்ருஷ்டிக்கு முன்பு அவ்யாகிருத சப்தத்திருல் காட்டப்பட்டு, அவனையே ஸர்வநியந்தாவாகவும் ஸர்வாந்தர்யாமியாகவும் (அனுப்ரவேசத்திருல்) அந்தப் பிரவிஸ்ய பிரஸாஸித்ருத்வேந சொல்லப்படுகிருன். மேலும் இந்த சுருதியிலே சொல்லியபடி तत् सृष्ट्वा तदेवानुप्राविशत् அந்த பிரும்மம் ஸ்ருஷ்டிக்குப் பின்பு அந்த உலகத்தின் உள்ளே प्राविशत् உள்நுழைந்தது. சா.உ. 6-3-1ல் अनेन जीवेनात्मनाऽनु-प्रविश्य नामरूपे व्याकरवाणि நான் இந்த ஜீவாத்மாவுடன் உள் நுழைந்து நானே என்று சொல்லும்படி நாமரூபத்தை வ்யாகரணம் (வித்யாஸப் படுத்துவேன்) செய்வேன். இதனுல் ஸ்ருஷ்டி செய்கிற பரமாத்மாவை ஸர்வக்ஞன் என்று சொல்லி, ஒவ்வொரு படைக்கப்பட்ட பொருளிலும் (காரியத்திலும்) அனுப்ரவேசம் செய்து, நாமரூப வ்யாகரணம் செய்ததாக பிரஸித்தி.

தை. ஆ. *1-3-21*ல் अन्तः प्रविष्टःशास्ता जनानां सर्वात्मा என்று ஒவ்வொரு வஸ்துவிலும் உள்நுழைந்து ஒவ்வொன்றையும் மேலான நியமனத்தினுல் ஆளுபவனுகவும் எல்லோருக்கும் ஆத்மாவாயும் இருக்கிருன். இதில் நியமனுர்த்தமாக அனு ப்ரவேசம் (உள்நுழைந்திருப்பது) சொல்லப்படுவதால் பிர தானம் அசேதனமாதலால் அதற்கு சைதன்ய குணமாகிற நுழைதலும் எல்லோரையும் ஆளுவதற்க்காக அந்தர்யாமி யாகவிருப்பது, இந்த மாதிரி ஸ்வரூபம் பிரதானத்திற்கு ஏற்படாது—அசேதனுமானபடியாலே.

ஆகையால் अव्याकृतम् अव्याकृतशरीरं ब्रह्म அவ்யாக்ருதம் என்பது பிரும்மமே அந்த பிரும்மம் அவ்யாகிருதமான மூல பிரகிருதியை சரீரமாகவுடையதாலே பிரும்மமே ஆத்மா வாகவிருப்பதால் என்கிற அர்த்தம் யேற்படுகிறது. तन्नाम-रूपाभ्यां व्याक्रियत அது (உலகம்) இப்பொழுது நாமரூப வியாகரணத்தினுல் வித்யாஸப்படுத்தப்பட்டது. (பிரு. 2. 1-4-7); இதில் சொல்லப்பட்டதாகும்—அந்த (அவ்யாகிருதமான) அதே பிரும்மம் (முன்பு நாம ரூப வியாகம் இல்லாதபடியிருந்தது). அது अविभक्तनामरूपं ब्रह्म ஸர்வக்ஞம், ஸத்ய ஸங்கல்பம்-இத்யாதிகளுடன் கூடிய பிரும்மம்-தானே(स्वेनैव)स्वयमेव (தன் மூலமாகவே-தானுகவே) विभक्तनामरूपं பிரிவுள்ள (வித்யாஸப்படுத்தப்பட்ட) நாம ரூபங்களுடன் தன்னையே காண்பித்துக் கொண்டது-*சரீரத்வாரா*. स्वयमेव व्याक्रियते-தானே ஆக்கிக் கொண்டது-*சரீரத்வாரா*: (*சித் அசித்துக்கள் அடங்கிய சரீரம் ஸூக்ஷ்ம சித் அசித்விசிஷ்ட பிருஹ்மம் காரிய தசையில் ஸ்துல சித் அசித்விசிஷ்ட பிரும்மமாக மாறியது. சரீரத்திற்குத்* தான் மாறுதல்-பிரும்மம் ஆத்மாவான படியால் நிர்விகாரம் என்பது ஸித்தம்.

இப்படியிருக்கும் போது ईक्षणादयो ஸ்ருஷ்டிக்கு வேண்டிய பார்த்தல் (*சங்கல்பித்தல்*) முதலிய சேஷ்டிதங்கள் உண்மையான அர்த்தத்தை வகிக்கின்றன. இந்த பதங்களாகிற பிருஹ்மம், ஆத்மா நிரதிசய பிருஹத்வ (மிக மிகப்

பெரியதாக விருக்கும் தன்மை) நியமனார்த்தம் (உள் நுழைந்து ஒவ்வொரு வஸ்துவையும் கட்டளையிடுதல்) व्यापित्वा எங்கும் எல்லாவஸ்துக்களிலும் வ்யாப்தி (நியமனார்த் தம்)—இந்த குணங்கள் அசேதனமாகிற பிரதானத்திற்கு ஒட்டாது. ஆகவே பிரும்மைக காரணம் பிரும்மமே ஜகத் யேக காரணம் (பிரதானம் இல்லை) என்பது ஸ்தாபிதம் ब्रह्मैककारणं जगदिति स्थितं என்பதாம்.

பூர்வ பக்ஷியின் வாதம் நாம ரூபவ்யா கரணம் பிரும் மத்திற்குக் கௌணமாகவும் பிரதானத்திற்கு முக்கிய அர்த்தமாகவும் கொள்ளலாம் என்றால் அதி நேரான அர்த்த மாகாது. க்லிஷ்ட வாக்யார்த்தமாகும். ஆகவே வேதாந்தி யின் அபிப்ராயமே சரியாகவும் இயற்கையானதுமாகும்.

### அநுபந்தம்

இந்த அதிகரணத்தில்-பல சுருதி வாக்யங்கள் ஸ்ருஷ்டி பரமானவை எடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை ஸ்ருத பிரகாசிகையில் சொல்லப்பட்டவைகளை நாம் கீழே தரு கிறோம். सर्वतत्त्वानां यस्मिन्निति-ब्रह्माश्रयत्व प्रतीत्या स्वातन्त्र्येण प्रधानस्य कारणत्वं निरस्तं, अथ स्वातन्त्र्येणकारणत्वं प्रतीयते ब्रह्मा श्रयत्वा - प्रतीतेरिति शङ्कया सङ्गतिः ।

स एष-इह प्रविष्ट इति प्रशासितुरनुकर्षणाव्याकृत शब्दस्य ब्रह्मपरताम-वगमयति...अव्याकृतशब्दयोः अव्याकृतनामरूपावस्थब्रह्मपरत्वात्-जगत्कारण-वाक्यप्रतिपाद्यं ब्रह्मेति सिद्ध्यति, वेदान्तेषु कारणवाक्यानां ऐककण्ठ्येन हि ब्रह्मकारणत्वमुक्तं ।

एवं सर्वेति இந்த அதிகரணத்தில் பல சுருதி வாக்யங் களின் உதவியினால் ஸ்ருஷ்டி பரவாக்யங்களானவை அவை களில் பிரதானத்தை ஜகத்காரணம் என்று காட்டுகின்றன. இந்த இடங்களெல்லாம் ஜகத் உற்பத்தி செய்யும் பரமாத்மா வின் ஸர்வக்ஞ பெருமைகளை முதலில் கூறுகின்றன. அதிலி ருந்து பிரதானத்திற்கு ஸ்ருஷ்டிக்கு வேண்டிய ஈக்ஷணசக்தி

ஆலோசனை ஸர்வக்ஞத்வம் இல்லாதபடியாலே பிரதானம் ஆகாது. முதலில் இந்த குணங்களுடன் கூடிய பிருஹ்மம் என்று சொல்லப்படுகிறது. பல சுருதிகள் ஆதாரமாகக் காட்டப்படுகின்றன.

आत्मा वा इदमेक एवाग्र आसीत् । सईक्षत लोकान्नु-सृजे इति । स इमान् लोकानसृजत, यः सर्वज्ञः सर्ववित् । यस्य ज्ञानमयं तपः तस्मादेतद्ब्रह्म नाम रूपमन्नञ्चजायते — एको हि वै नारायण आसीत् । என்று ஆரம்பித்து, स एकाकी न रमेत... तत्र ब्रह्मा चतुर्मुखोऽजायत - अथ पुरुषो हवै नारायणोऽकामयत...प्रजा स्रजेयमिति, नारायणात् ब्रह्मा जायते - इत्यादिषु सृष्टयुक्तैः पूर्वमेव परमचेतनतदसाधारणे-क्षणादिकमवगन्तव्यमित्यर्थः ।

समाकर्षात् (சூத்ரத்தில்)— असद्वा इदं - इत्यादिना समाकर्षः प्रतिज्ञातः - ब्रह्मणा विपश्चिता, अन्यो अन्तरात्मा-नन्दमयः, सोऽकामयत - இந்த வாக்யங்களினால் विपश्चित्वा-दिकमुक्तम् । (तदप्येष इत्यत्र तच्छब्दः सोऽकामयतेत्युक्त-सत्यसंकल्पत्वस्यापि परामर्शक इत्याशयेन भाष्ये पूर्वं सत्य-सङ्कल्पपदप्रयोग इति भावः । )

असदव्याकृतादिशब्दा ईक्षणादयश्च ब्रह्मण्युपपन्नाः प्रधानेत्वीक्षणादयोऽनुपपन्ना इति वैषम्यं दर्शितं भवति ।

அதிகரணம் – 5 ஜகத்வாசித்வாதிகரணம் (1-4-5)

சூத்ரம் जगद्वाचित्वात् (1-4-16)

ஜகத்வாசித்வாத் (1-4-16)

– ஜகத் வாசித்வாத் (கர்ம சப்தம்) உலகை சொல்லு மாகையால் இங்கு கூறப்படுவது பிருஹ்மமே ஒழிய ஜீவ னலலன்.

முன் அதிகரணத்தில் அறிவுடைய சேதனன் ஒருவனே ஜகத்கரணம் என்று சுருதிகளில் ஸித்தம். இதில் அந்த சேதனன் கர்மவசப்பட்ட ஜீவனே ஒழிய பரமாத்மா அல்ல அந்த ஜீவனால் அதிஷ்டிக்கப்பட்ட பிரதானமே ஜகத்காரண மாகலாம் என்கிற ஸாங்கிய வாதமும் தள்ளப்படுகிறது.

[ஸங்கதி यद्यपि வேதாந்த வாக்யங்கள் கூறிடினும்; स वै वेदितव्य: இதன் முடிவிலே விஷயவாக்யம் தர்ஸிதம்] காரண வாக்யத்தினால் காட்டபட்டது— பிரகிருதி அதிஷ்டாதா புருஷனா அல்லது பரமாத்மாவா? இதன் அர்த்தம பாலாகி அஜாத சத்ரு ஸம்வாதத்திலே வேதிதவ்யம் பிருஹ்மமா ? அல்லது ஜீவனா ?]

**ஸ்ரீபாஷ்யம்:-** மீண்டும் சாங்கியன் ஆட்சேபத்தை எழுப்பு கிறான். சரி வேதாந்த வாக்யங்கள் ஒரு சேதனன் ஒருவனே ஜகத்காரணம் எனக் கோஷித்தாலும் [சாங்கிய பக்ஷத்தில் இருக்கும்] புருஷன் பிரதானத்தைக் காட்டிலும் வேறு ஒன்றும் ஜகத்காரணம் என்று சொல்வதற்கில்லை. அவ் விதமே பாலாகி அஜாதசத்ருஸம்வாதத்திலே [கௌ. உப] புருஷன் போக்தாரம் ஏவ பிருகிருதியை அனுபவிக்கும் புருஷனே ஜகத்காரணம் என்று சொல்லலாமே; அந்த புருஷனே அறியப்படவேண்டியவன். அந்த ஸம்வாதத்திலே பிரகரண ஆரம்பத்திலே சுருதி இவ்விதம் ஓதுகிறது. கௌ. 4-4 ब्रह्म ते ब्रवाणि உபக்ரமித்து यो वै बालाके एतेषां पुरुषाणां कर्ता, यस्य वैतत् कर्म, स वै वेदितव्य: என்று முடிக்கிறது. "நான் உனக்கு பிரும்மத்தை உபதேசிக்கிறேன்" என்று உபக்ர மித்து முடிக்கிறபோது இவ்விதம் சொல்கிறது. "பாலாகி எவன் இந்த புருஷர்களை உண்டு பண்ணுகிறவனாகிறானோ, எவனுடைய கர்மம் வாஸ்தவத்தில் இதுவாக விருக்கிறதோ அவனே அறியத்தக்கவன் (எவன் இப்புருஷர்களுக்குக் கர்த்தாவோ, எவனுக்கு இந்த புண்ய பாபரூப கர்மம் உள் ளதோ, அவனே அறியத்தகுந்தவன் (இது பூர்வபக்ஷத்தின் பொருள் சித்தாந்தியின் அபிப்ராயம் வேறு)

**பாலாகிவித்யை .—(கௌஷீதகி உபநிஷத்)**

பாலாகி என்கிற பிராம்மணன் ஒரு சமயம் காசி ராஜனான அஜாதசத்ருவினிடம் வந்து, "நான் உனக்கு பிரும்மத்தைப்பற்றி உபதேசிக்கிறேன்". என்று சொல்ல, அரசன் அவனை மரியாதை செய்து மீண்டும் கேட்க பாலாகி சொன்னான், "ஆதித்யனிடமுள்ள புருஷனை நான் உபாஸிக்கிறேன்" என்றான். அஜாதசத்ரு—"இதில் எனக்கு சம்மதியில்லை. இது பிரும்மமன்று. ஆதித்ய புருஷனிவன் வெண்மை நிறமான கிரணங்களால் வஸ்திரமுடையவன், ஸர்வ பிராணிகளுக்கும் சிரஸ்ஸு; எல்லாவற்றிற்கும் மேலுள்ளதாய் அதிஷ்டா எனப்பட்ட இவனை நானும் உபாஸிக்கிறேன். இவ்வாறே சந்திரன், மின்னல், இடிமின்னல், மேகம், ஆகாயம், வாயு, அக்னி, தண்ணீர் கண்ணாடி பிரதித்வனி, பிரதிவார்த்தை, நிழல், சரீரபுருஷன், சொப்பனம் காண்பவன், வலக்கண்ணில் இருப்பவன், இடக்கண்ணில் இருப்பவன் என்று பல புருஷர்களை பாலாகி சொன்னான். அப்போது அஜாதசத்ரு "இதுவும் பிரும்மம் அன்று" எனக் கூற பாலாகி மேலே பேசாமல் நிற்க, அஜாதசத்ரு பாலாகிக்கு உபதேசித்தான். "இவர்கள் பிரும்மமாகா."

"இந்த புருஷர்களுக் கெல்லாம் கர்த்தாவாகிறவனே அவ்வளவேயல்ல, இந்த உலகு எவனால் படைக்கப்பட்டதோ அவனே பிரும்மம் எனப்படுபவன். உபாஸிக்கப்பட வேண்டியவன். அவனே அறியப்படவேண்டிய பிரும்மம் எனப்படுபவன்." அப்போது பாலாகி என்கிற பிராம்மணனை அரசன் க்ஷத்திரியனான படியாலே முறை தவறக் கூடாது என்கிற அபிப்ராயத்திலே ஆசார்யனாக விராமல், ஆனால் உபதேசிக்க இசைந்து, அரசன் பாலாகியை ஒரு உறங்குகிறவனாகிற ஒரு புருஷனிடம் அழைத்துச் சென்று "பெரியோனே, வெள்ளை வஸ்திர மணிந்தவனே, ஸோம ராஜனே" என்று கூவியும் அவன் எழுந்திருக்கவில்லை. சுவாஸ ப்ரச்வாஸங்களாக வேலை செய்து விழித்திருக்கும் பிராணவாயுவே ஆத்மாவாகவிருந்தால், அழைத்த நிமிஷத்திலே எழுந்திருக்கலாமே ஆனால் எழுந்திருக்கவில்லை ஆகவே பிராணனே ஆத்மாவல்ல எனக்

கூறி, பிறகு தடியினுல் தூங்குகிறவனை எழுப்ப, அவன் எழுந்திருந்தான். அஜாதசத்ரு, "இந்தப் புருஷன் எங்கே படுத் திருந்தான், தெரியுமா" என்ருன் ? பாலாகி அறிந்தானில்லை பிறகு அரசன் ஹ்ருதயத்திலுள்ள புரீதத் என்ற மாம்ஸ பிண்டத்தில் போய்ச் சேரும் ஹிதை என்ற நாடிகள் ஒரு மயிரை ஆயிரமாகப் பிரித்தால் எத்தனையோ அத்தனை சூக்ஷ்மங்கள்; அங்கே சொப்பனம் அனுபவிக்கும் போது இருப்பான் (அந்த புருஷன்) நன்ருக உறங்கும் போது எல்லா இந்திரியங்களும் விஷயானுபவங்களிலிருந்து விலகி பிராணவாயுவை ஏவிவரும் பரமாத்மாவிடம் லயிக்க அங்கு தங்குகிருன். அங்கிருந்து வெளிக்கிளம்புகிருன், இந்திரியங் களும் புறப்படுகின்றன. கத்தி உரைக்குள்ளேயும், அரணிக்கட்டையில் அக்னி போலவும், இவ்வுடலில் மயிர் கால்கள் நகங்கள் வரை இந்த ஆத்மா புகுந்திருக்கிறது. இப்படிப்பட்ட பரமாத்மாவை எல்லா ஜீவாத்மாக்களும் அண்டி ஆஸ்ரயித்து வாழ்கின்றன; எவ்விதம் ஞாதிகள் ஒரு வைசியப்பெரியோனை ஆஸ்ரயித்து வாழ்கிருர்களோ அது போல என்ருன். இந்த பரமாத்மாவும், ஜீவாத்மாக்களும் கலந்து பரிமாறுகிருர்கள். அந்த பரமாத்மாவே அறியப்படத் தக்கவன் என்று உபதேசித்து ஸர்வ சேதனர்களுக்கும் மேலான மோக்ஷஸாம்ராஜ்யத்தைப் பலமாக, வித்யையின் பலனுகச், சொன்னுன் அஜாதசத்ரு பாலாகியிடம்).

**ஸ்ரீபாஷ்யம்:**—இதிலிருந்து தெரியவருகிறது பிரும்மமே स वेदितव्य; அறியத்தக்கவன்; அந்த பிருஹ்மமே போக்தாரம் (அனுபவிக்கிறவன்) புருஷன், அந்த புருஷனே பிரகிருதியை தன் கர்மபந்தத்தால் அனுபவிக்கிருன. கர்மஸம்பந்தத்தி ருல यस्य वैतत्कर्म எவனுடைய கர்மம் இதுவாக விருக்கிறதோ இதனுல் கர்மஸம்பந்தத்திருல் பிரகிருதியை அத்யக்ஷிக்கும் புருஷன் அனுபவிக்கும் (भोक्ता) புருஷன் அவனே அறியப் படத்தக்கவனாகும். இங்கே பிரும்மம் என்பதற்கு கர்மசம்பந்த மில்லை. ஆதலால் அந்த புருஷனுக்கே புண்யபாபரூபமாகிற கர்மாவே படுகிறது; ஆகவே அறியத்தக்கவனுகும.

கர்மம் என்பது புண்ய பாபலக்ஷணம், க்ஷேத்ரக்ஞுகிற ஜீவனிடம் யேற்படுகிறது. பரமாத்மாவுக்கு யேற்படாது. கர்மம் न च वाच्यम् ஸித்தாந்தி கூறுகிறது. பரிஹாரமாக. க்ரியத இதிகர்மா என்கிற வ்யுத்பத்தி, எது உண்டாக்கப்படுகிறதோ அதற்கு ஏதத்கர்மா. (இந்த கர்மாவிஞல்); பிரத்யக்ஷாதி பிரமாணங்களுக்கு விஷயமாகிறதும் ஸ்தாபிக்கப்பட்டதுமான இந்த ஜகத் (உலகம்) என்பதை ஏதத் கர்மா (இந்த கர்மா) காட்டுகிறது. எவனுடைய கர்மாவிஞல் இந்த ஸம்பூர்ணஜகத் விருக்கிறதோ. எவன் वेदितव्यः அறியத் தக்கவஞக விருப்பானே அத்தகையவன் க்ஷேத்ரக்ஞுனை ஜீவாத்மாவை விடவேருன ஒரு தத்வமாக விருக்கிறனே, அவனையே குறிக்கும், என்பது அர்த்தமாகும். यो वै वालाके एतेषां पुरुषाणां कर्ता, यस्य वैतत्कर्म (இங்கே இரண்டு விளக்கங்கள் [இருதத்வங்களைப் பற்றி] இருக்கின்றன.) ஓ பாலாகியே, அவன் அந்த புருஷர்களுக்கெல்லாம் கர்த்தா என்றும்; எவனுடைய கர்மம் வாஸ்தவத்திலே இதுவாக விருக்கிறதோ—இந்த இரண்டும் அர்த்தமில்லாமல் போய் விடும். கர்ம சப்தத்திற்கு லோக வழக்கத்திலே வேதங்களிலும் கூட புண்ய பாபரூப ஏக கர்மா இது பிரஸித்தியானது. இந்த உலகம், கர்மாவின் நிமித்தமாக ஏற்படும் போக்த்ரு (அனுபவிக்கப்பட வேண்டியவை) காரணமாக, உண்டாக்கப்பட்டதாகும். एतेषां पुरुषानां कर्तेति-भोक्तुरेवोपपद्यते—இந்த அனுபவிக்கிற புருஷர்களை எவன் படைக்கிருனே – அவனுக்கே போக்த்ரு பதம் சரியான பிரயோகமாகும். அதாவது அனுபவிக்கும் ஜீவாத்மாவுக்கு.

(கிரியதே இதி கர்ம என்கிற வ்யுத் பத்தியாலே கர்ம சப்தம் உலகைக் குறிக்கிறது என்று கொண்டு—எவனுக்கு இந்த உலகம் காரியமோ என்று இவ்வாக்யம் உரைப்பதாகக் கூறலாமெனில்—புண்ய பாபங்களிலேயே ரூடியை உடைய கர்ம சப்தத்தை உலகமாகக் குறிப்பது அஸ்வாரஸமாகும். கர்ம ஸம்பந்தம் ஜீவனுக்கு உண்டு. ஏதேஷாம் புருஷாணும கர்த்தா என்பதோடு—உலகை குறிப்பது புநருக்தி ஏற்படும். கர்மியாகிற ஜீவனே இங்கு கூறப்படுகிருன். அவனுல்

அத்யக்ஷிக்கப்பட்ட பிரதானமே ஜகத்காரணம் என்கிற ஸாங்கிய மதமே வேத (சுருதி) ஸம்மதம் என்கிறுன் பூர்வ பக்ஷிசாங்கியன்.)

**ஸ்ரீபாஷ்யம்** : ஆகவே இதன் அர்த்தம்—ஜீவாத்மாவே இந்த புருஷர்களுக்குக் காரணம். एतेषां இந்த ஆதித்ய மண்டலம் முதலியவைகளில் வசிக்கிற க்ஷேத்ரக் ஞர்கள் (ஜீ வா த் மா க் க ள்) — இந்த புருஷர்களுக்கு போக்ய போகோப காரணங்களாக விருப்பவர்களோ, எவன் இந்த புருஷர்களுக்குக் காரண பூதனே, எவனை இந்த ஜகத்திற்குக் காரணம் என்று சொல்லலாமோ, எவனுக்கு புண்ய பாபரூப கர்மா ஏற்படுகிறதோ, எவனுக்கு கர்மா அத்தகைய காரணத் திற்கு ஸாதனமாக அமைகிறதோ, அந்த புருஷனே (ஜீவாத் மாவே) सर्वं वेदितव्यः- அறியத் தக்கவன் — அவனுடைய (சுத்த) ஸ்வரூபம் பிருக்ருதியிலிருந்து வேறுபட்டதாக விருக்கிறது.

(இங்கே சாங்கியனின் அபிப்ராயம்—ஜீவர்களே அநு பவிக்கப்படும் வ ஸ் து க் க ளா க (भोगोपकरण) இன்னொரு போக்தாவகிற ஜீவனுக்கு—அவரவர்களின் கர்மா பிரகாரம் அமைகிறர்கள். உலகம் உற்பத்தியாதல் இவ்வாறு உண் டாக்கப்பட்ட கர்மாக்களின் பலன்களை அநுபவிப்பதற்க் காகவே. ஆகவே ஜீவனுகிற (புருஷனின்) சுத்த ஸ்வரூபம் பிரக்கிருதியிலிருந்து வேறுபட்டதாக அறியப்பட வேண்டி யது. (புருஷனுக்கு-தன் விடுதலைக்காக) சாங்கியன் இதற்கு கர்மா என்கிற லோக வழக்கத்திலுள்ள புண்யபாபங்களை மனதில் கொண்டு, ஜீவனுக்கு கர்ம ஸம்பந்தம் யிருப் பதாலே அவனுடைய சுத்த ஸ்வரூபம் (கர்மவிமுக்த ஸ்வரூபம்) அறியத்தக்கது என்கிறுன்) அதனுலே तत्स्वरूपं (சுத்தமான ஜீவஸ்ரூபம் பிரகிருதியிலிருந்து வேறுபட்டது அதுதான் वेदितव्यम् என்கிறுன்)

இதேபோல பின்னுலே (கௌ. 30) ஓதப்படுகிறது तौ ह सुप्तं पुरुषमीयतुः....तं यष्टया विक्षेप இரண்டுபேர்களும் அதாவது

பாலாகியும் அஜாதசத்ருவும் ஒரு உறங்கும் புருஷனிடம் சென்றனர்...பிறகு (அவன் எழுந்திராமையால்) அரசன் தூங்குகிறவனை ஒரு தடியால் அடிக்க; இதில் தூங்குகிற வனிடம் இருவரும் செல்லுதலும் தூங்குகிறவனை அடித் தலும் இம்மாதிரி செய்கைகள் போக்த்ரு (அனுபவிக்கும் புருஷனை) பிரதிபாதனலிங்கங்களாகும் (அடையாளங் களாகும்.) மேலும் இந்த பிரகரணத்திலே, அனுபவிக்கிற போக்தாவே பிரதிபாதிக்கப்படுகிறுன். तद्यथा श्रेष्टिस्वैर्भुङ्क्ते यथा स्वाः श्रेष्टिनं भुजन्ति (भुञ्जते) எப்படி ஒருதனவானை வைஸ்யன் தன் ஞாதிகளுடன் அனுபவிக்கிருனே, அல்லது எப்படி அவனுடைய ஞாதிகள் அந்த தனவானை அனுபவிக் கிருர்களோ அதேபடி ஜீவாத்மா இந்த புருஷர்களுடன் அனுபவிக்கிருன், அதேபிரகாரம் இந்த புருஷர்களும் அந்த ஜீவனை அனுபவிக்கிருர்கள்.

அவ்விதமே இந்த கேள்வியில் கேட்கப்பட்ட விஷயங்கள் (அஜாத சத்ரு-பாலாகி ஸம்வாதத்திலே) क्वैष एतद्बालाके पुरुषोऽशयिष्ट? क्व एतद्भूत्-कुत एतदागात् பாலாகி, எங்கே அந்த புருஷன் படுத்திருந்தான்? அவன் எங்கே யிருந்தான்? அவன் எங்கிருந்து வந்தான்? (கௌ. 2-4-18) இந்தவிஷயங்கள் பாலாகிக்குத் தெரியவில்லை, அதனுலே அஜாத சத்ருவே தானே ஸ்வயமாக மீண்டும் பேசினுன். ஹ்ருதயத்திலே ஹிதா என்கிற பெயருடைய நாடி ஒன்று யிருக்கிறது அதில் அவன் அப்போது இருந்தான். நன்ருக தூங்குகிற வனுக (ஆழ்ந்த நித்திரையில்) விருந்தபோது; அப்போது அவன் சொப்பனங்களைக் காண்பதில்லை. அந்த சமயத் தில் அது பிராணனேடு ஒன்ருகக் கலந்து விருக்கிறது. अस्मिन् प्राण एवैकधा भवति; அப்போது வாக்கு எல்லாச்சப்தங் களுடன் லயமடைகிறது. மனதும் அதில் புகுந்து எல்லா எண்ணங்களுடன் லயமடைகிறது. எப்போது அந்த புருஷன் விழிக்கிருனே, அப்போது (எப்படி நெருப்புப் பொரிகள் தீயிலிருந்து சிதறுமோ, அதுபோல) பிராணன்களும் ஆத்மாவிலிருந்து கிளம்பி தங்கள் தங்கள் ஸ்தானங்களை யடைகின்றனா. பிராணன்களிடமிருந்து தேவர்கள் இந்திரி

யங்கள், கிளம்புகின்றன (இந்திரியங்களாகிற தேவர்களிடமிருந்து லோகங்களாகிற (விஷயங்கள்) உண்டாகின்றன. (கௌ. 14-19).

அதாவது அஜாத சத்ரு சொல்கிறுன், "இந்த ஜீவன் ஸுஷுப்தி அவஸ்தையில் (நன்ருக தூங்கும் சமயத்தில்) லயமடைந்திருக்கிருேே அவனே சொப்பனங்களையும் காண்பவனுகவும், விழித்தவுடன் இருக்கிருேே அந்த ஜீவாத்மாவே வாக்கு முதலிய கரணங்கள் நுழைவதற்கும் லயமடைவதற்கும் இடமாகவிருக்கிருன்; அவனிடமிருந்து தான் ஜாக்ரத தசையில் அவை கிளம்புகின்றன; அந்த ஜீவாத்மாவே अयास्मिन् प्राण एवैकधा भवन्ति எவனிடத்தில் பிராணன் ஒடுங்கி ஒன்ருகிவிடுகிறதோ என்று சொல்லும்படி अस्मिन् ஜீவாத்மாவினிடத்தில்; இங்கே "பிராண" என்கிற சப்தம் பிராணனைத்தாங்குகிறவனை பிராணப்ருத் என்பதைக் காட்டும், ஏனெனில் அவன் விழிக்கும்போது, பிராண சப்தத்தாலே स यदाप्रति बुध्यते (விழிக்கும்போது); பிராணனே முழித்திருக்கிறதுஎன்று சொல்லப்படுவதால் (प्राणशब्दनिर्दिष्टस्य प्रबोधश्रवणात्); மேலும் முக்கிய பிராணனும் பிராணப்ருத்தான பரமாத்மாவும் தூக்கமில்லாத அவஸ்தையில்) இருப்பதாகவும் ஜாக்கிரதை (விழிப்புணர்ச்சி உள்ளவர்களாகவும்) சொல்லப்படமாட்டார்கள் அன்ருே? (அதாவது தூங்கும் போதும் விழிப்பிலும் முக்யபிராணன் செயல்படுகிறது. அந்த முக்ய பிராணனைத் தாங்கும் பரமாத்மாவும் அவ்விதமே; அதனுலே இருவர்களுக்கும் சுஷுப்தியும் ப்ரபோதமும் அஸம்பவம் இல்லாத போனுல், अस्मिन् (7ம் வேற்றுமை) என்பதும் प्राणे (7ம் வேற்றுமை) இவை இரண்டும் வெவ்வேறு ஸ்தானங்களைக் குறிக்கும் (இப்படிச் சொல்லும்படி பிராணனில்; அந்த பிராணன் "இதில்", என்று இருவேருன ஸ்தானங்களைக் குறிப்பதாக கூறப்படும் வாக்கு முதலியவைகளும், மனத்தின் இதர உறுப்புக்களும் அந்த பிராணனுடன் ஒன்று சேர்ந்துவிடுகின்றன அது இந்த இதில் (अस्मिन्) இந்த ஆத்மாவில் अस्मिन् आत्मनि वर्तमाने प्राण एवैकधा भवति, वागादिकरणग्राम इति ஆகையால் प्राण சப்தம்

முக்கிய பிராணனைக் காட்டுவதனாலும், இந்த பிரகரணத்திலே ஜீவனைத்தான் குறிக்கும், ஏனெனில் முக்யபிராணன் ஜீவனுக்கு உபகரணமாவதாலே.

(**விளக்கம்:** சாங்கியபக்ஷம் அஜாத சத்ருவின் கேள்வி புருஷனாகிற ஜீவாத்மாவின் நிலையைப்பற்றியது - ஆழ்ந்த நித்திரையிலும் விழித்தபோதும், ஆழ்ந்த நித்திரையில் எல்லா இந்திரியங்களும் ஜீவனிடம் லயித்து ஒடுங்குகின்றன. இதில் பிராணன் ஜீவனுடன் ஏக்கவா ஒன்றாகவே கூடி விடுகின்றது. பிராணன் அதனுடன் சம்பந்தப்பட்ட வாக்காதி கரணங்களும்). முதலில், பிராணன் என்பது ஒருமையில் சொல்லப்படும் போது ஜீவாத்மாவைக் குறிக்கும். இரண்டாம் தடவை (கரணங்களுடன்) சொல்லும் போது பிராணன் பன்மையாக உபயோகம் அதனால் ஐந்து பிராணன்களைக் குறிக்கும்.) ராமானுஜரின் அபிப்ராயம் வேறு. அது பின்னால் சொல்லப்படுகிறது. ராமானுஜருக்கு பிராணன் ஜீவனைக் குறிக்கும் என்பதாகும்).

இவ்விதமாக இந்த பிரகரண ஆரம்பத்திலே விஷயமாக, "அறியத்தக்கவன்" என்பது பிருஹ்மமே என்று சொல்லப்பட்டு, இங்கே அந்த பிருஹ்மமே புருஷனாகிறான். (ஜீவனாகிறான்), அதனாலே பரமாத்மா ஜீவனைவிட வேறானவன் இங்கு பிரகரண விஷயமாகவில்லை. ஈக்ஷணம் முதலிய சேஷ்டிதங்களும் ஜகத்காரண வஸ்துவுடன் சம்பந்தப்பட்டிருப்பதால் அந்த ஜீவனைக்குறிக்கும்; எந்த ஜீவன் பிரதானத்தை அதிஷ்டிக்கிறதாலே, பிரதானமே ஜகத்காரணம் என்கிறான் பூர்வபக்ஷியான சாங்கியன்.

இவ்விதம் சொல்லப்படுமாகில், நாம் பதில் அளிக்கிறோம். **जगद्वाचित्वात्** (கர்ம சப்தம்) உலகைச் சொல்லுமாகையாலே இங்கு கூறப்படுவது பிருஹ்மமே ஜீவனல்லன். இங்கு புண்யபாப பரவசமான க்ஷேத்ர ஜீவன் (க்ஷேத்ரக்ஞன்) சொல்லப்படவில்லை. (பரமாத்மாவே ஆகும் ஏன்? இந்த ஜீவன் பிரகிருதி தர்ம அத்யாஸத்தினாலே பிரகிருதிக்த பரிணாமங்களை (மாறுதல்களை) உண்டாக்கு

வதற்குக் காரணமாகிறுன். அப்பேற்பட்ட ஜீவன் (புருஷன்) இங்கு சொல்லப்படவில்லை. ஆனுல் எவன் சொல்லப்படு கிறுன் யெனில் ஜகத்வாசித்வாதி என்றுல் பரமாத்மாவே ஆகும். (எப்படி) நிரஸ்த ஸமஸ்த அவித்யாதி தோஷகந்த: (யாதொரு தோஷமுமில்லாத பரமாத்மா); அநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாணகுணநிதி; நிகில ஜகத்யேக காரண பூதன்; அப்பேற்பட்ட புருஷோத்தமனே இங்கு கூறப்பட்ட தாகும். எப்படி ? यस्य वैतत् कर्म (கர்ம ஸம்பந்தம் இங்கு கூறப்படுததாலே) கர்ம என்கிறபதம் ஏதத் (இது) என்ப துடன் சேர்ந்திருப்பதாலே உலகத்தை பகவானுடைய காரியமாகக் காட்டுகிறது. பரம புருஷ, புருஷோத்தமனு டைய கார்ய பூதஜகத்வாசித்வாத் என்பதாகும். ஏததி சப்தம் இங்கு அர்த்த பிரகரணுதிகளில் அஸங்குசித (குறைக்கப் படாதவிருத்தி:) விஷயமாக அவிசேஷேண பொதுவாக, உல கத்தை ஜகத்தை பிரத்யக்ஷாதி பிரமாணங்களால் உபஸ்தா பிதமானதும், நிகில சித் அசித் வஸ்துக்களடங்கிய மிஸ்ர மான ஜகத்தைப் (உலகத்தைப்) பற்றியதாகும். அதனுல் பாப புண்யலக்ஷணமான கர்மம் இங்கு சொல்லப்படவில்லை. (ஆகவே பூர்வபக்ஷத்தின் அர்த்தம் எவனுக்கு இந்த புண்ய பாபரூபகர்மம் உள்ளதோ அவனோ அறியத்தக்கவன் यस्यवैतत्कर्म स वेदितव्य: என்பது தவறுதம்) (न च पुण्यपापलक्षणं कर्मात्र कर्मशब्दाभिधेयम् ।

ब्रह्म ते ब्रवाणि நான் உனக்குப் பிருஹ்மத்தை உபதேசிக்க கடவேன் என்று ஆரம்பித்து பிருஹ்மத்தைப்பற்றிய ब्रह्मत्वेन பாலாகி முதலில் அஜாதசத்ருவிடம் சொன்னுனே ஆதித்யனிடமுள்ள புருஷனை நான் உபாஸிக்கிறேன், இதே போல சந்திரன் மின்னல் இடிமேகம் இத்யாதிகளில் அதிஷ்டா எனப்பட்ட புருஷர்களை பிருஹ்மம் என்றுனே அது தவறுதும். அவர்கள் பிருஹ்மமில்லை; मृषा वैखलु मा संवादयिष्ठा: இவை அனைத்தும் சரியில்லை, வாதாடாதே, நான் உபதேசிக்கிறேன்'' என்று சொல்லிய அஜாதசத்ரு அந்த புருஷர்களை பிருஹ்மம் இல்லை என்று சொல்லி, यो वै बालाके பாலாகி, நீ சொல்வது போல இல்லை என்று சொல்லி, மேலும்

கூறினன் ஆதித்யனிடமுள்ள புருஷனும் மற்ற விடங்களிலுமுள்ள புருஷர்களும் கர்ம ஸம்பந்தம் கொண்டவர்கள் அந்த கர்மம் புண்யபாபலக்ஷணங்களுடன் கூடியது; இந்த இதர புருஷர்களும் அவ்விதமே; ஸஜாதீய புருஷர்களே அவர்களைச் சொல்லி, இவர்கள் எல்லோரும் பாலாகிக்குத் தெரியுமாதலால், அவனுக்குத் தெரியாத வேறு ஒரு புருஷனை அவனுக்கு அறிவுறுத்த நினைத்தான். ஆகவே கர்ம சப்தம் புண்யபாபத்தை குறிக்கவில்லை; எப்படி அது முக்கிய பிராணனின் சேஷ்டிதத்தை மாத்திரம் கூறுதோ அதுபோல **क्रियामात्र वाचीव** இந்த உலகத்தை பரமாத்மாவின் காரியமாக **अपि तु कृत्स्नस्य जगतः कार्यत्वाच्च** இந்த உலகமே பரமாத்மாவின் காரியம் என்று பாலாகிக்குத் தெரியாதபடியாலே—அந்த புருஷனுடைய காரியமாகச் சொல்லப்படுகிறது — கர்ம என்கிற சப்தம்.

**விளக்கம்:**—பாலாகி முதலில் தனக்குத் தெரிந்த ஆதித்ய புருஷனையும் ஸர்வ பிராணிகளுக்கு சிரஸ்ஸு—அதிஷ்டா என்று சொல்லி இவனை உபாஸிக்கிறேன்; அதேபடி சந்திரன் மின்னல் மேகம் ஆகாயம் இத்யாதிகளைச் சொல்லிவர அஜாதசத்ரு இவன் பிரும்மமன்று என்று சொல்லி பாலாஜீ ஒய்ந்துபோன அளவில் அஜாதசத்ரு விளக்க ஆரம்பித்தான். இந்தப் புருஷன் சுஷீப்தியில் விஷயானுபவத்திலிருந்து விலகி, பிராணவாயுவை ஏவிவரும் எம்பெருமானிடம் தங்கினன்; விழித்ததும் அந்த பரமாத்மாவிடமிருந்தே பிராணன்கள் வெளிக்கிளம்பி தங்கள் தங்கள் ஸ்தானத்தை நோக்கிச் செல்கின்றன என்றுன். பிறகு இந்திரியங்களும் புறப்படுகின்றன. இப்படிப்பட்ட பரமாத்மாவை அரணிக்கட்டையில் அக்னி பதுங்கியிருப்பது போல, உடலிலும் பரந்து நகநுனி, மயிர்க்கால் வரை பரவியிருக்கிறன். அந்த பரமாத்மாவே அறியத்தக்கவன், அவனை எல்லா ஜீவாத்மாக்களும் ஒருதனவானை ஞாதிகள் ஆஸ்ரயிப்பது போல, ஆஸ்ரயித்து அனுபவிக்கிறார்கள். பரமாத்மாவும் அவர்களுடன் கலந்து அனுபவிக்கிறன். அந்த பரமாத்மாவே பாலாகியினுல் சொல்லப்பட்ட புருஷர்களை உண்டாக்

கினவன். இந்த உலகம் அவனுடைய காரியமாகும். அது பிரும்மமே, ஜீவாத்மாவல்ல.

**ஸ்ரீபாஷ்யம்:**—ஏவமேவ இந்தவிதமாக பாலாகியினுல் அறியப்படமாட்டாத விஷயம் அவனுக்கு முன்பே தெரியாத பிருஹ்மம் இங்கு விளக்கப்பட்டது. மேலும் இங்கு உபதேசம் அவனுல் அறியப்படாதபுருஷனை அவனுடைய ஸ்வரூபம் கர்ம ஸம்பந்தம் யதேச்சையாக யேற்படுவதின் காரணமாக, அதனுலே அமுக்யமான அர்த்தம் கர்மா சப்தத்திற்கு சொல்லியாக வேண்டியது. மேலும் கர்ம சம்பந்தம் (கர்ம வாஸனை) எந்த பொருளை அறிய வேண்டியதோ அதன் உண்மையான ஸ்வபாவம் என்று சொல்லியாக வேண்டும் அதனுல் "அவன் எவனுக்கு கர்மம் இருக்கிறதோ அவன் அறியத்தக்கவன்; ஆகவே "ஏதத்" எனகிற பதம் (இது) அவன் (எவனுடைய கர்மம் இதுவாக விருக்கிறதோ,) அவன் உபயோகமில்லாமல் ஆகிறுன்."

**விளக்கம்:**—அந்த புருஷனை அறியத்தக்கவன் என்கிற வாக்யத்தாலே அவன் (எவன்) இந்த புருஷர்களை உண்டாக்கியவனே எவனிடம் கர்மம் இதுவாக விருக்கிறதோ இதனுல் சாங்கியனின் அபிப்ராயம் ஜீவனின் சுத்த ஆத்ம ஸ்வரூபம்) (பிரகிருதியிலிருந்து விடுபட்ட ஜீவனின் சுத்த ஸ்வரூபம்) சொல்லப்படுகிறது. கர்மாவுடன் அவனுக்கு சம்பந்தம் ஏற்படினும், இங்கே இம்மாதிரி சுத்தஸ்வரூபம் சொல்லப்படுவதால் கர்மாவுடன் முந்தியிருந்த அவனுடைய சம்பந்தம் இங்கு கண்டிக்கப்படுகிறது எனக் கொள்ளலாம்).

**ஸ்ரீபாஷ்யம்:**-மேலும் கர்ம ஸம்பந்தமாத்திரமே அறியத்தக்கது என்கிற ஸ்வரூப லக்ஷணத்தாலே எவனுடைய கர்மம் இந்த உலகமாக விருக்கிறதோ அந்த புருஷன் (பரமாத்மாவே) அறியத்தகுந்தவன் यस्य वैतत् कर्म இதில் एतत् சப்தம் உபயோகமில்லாததே य एतेषां कर्ता यस्य वैतत् कर्म "எவன் இவைகளுக்குக் காரணமோ (படைத்தானே) எவனுக்கு இது காரியமோ கர்ம சப்தம் ஏதத் என்பதால் விசேஷிக்கப்பட்டிருக்கிறது. அவன் (எவன் இவைகளைப் படைத்தானே

இங்கே தனியாகக் காட்டப்பட்டதால் அந்த புருஷனே (பரமாத்மாவே) எந்த ஆதித்ய புருஷன் மற்ற புருஷர்களை யும் படைத்தவனுகவும் ஆகிருன். तेषां यः कर्ता - तेयत्कार्यंभूताः- किं विशिष्याभिधायते அந்த புருஷனே என் மேலும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்? அதற்குச் காரணம் कृत्स्नं जगद यस्य कार्यम् இந்த ஸம்பூர்ண உலகம் எவனுடைய காரியமோ என்ப தைக் காட்டுவதற்குக்காகும். அவனிடத்தில் (அதாவது அந்த புருஷனிடத்தில்) உத்கிருஷ்ட (மேலான) அபகிருஷ்ட (கீழான) சேதன வர்க்கங்களும், அசேதனவர்க்கங்களும் சொல்லப்போனல் எல்லாப்பதார்த்தங்களும்; எவனிடம் எலலாமும் உண்டாக்கப்பட்ட காரியங்களுக்குச் சமமாகவும் விருக்கின்றனவோ அந்த எல்லாவற்றிற்கும் அவனே பரம காரணபூதனுக விருக்கிற புருஷோத்தமனுன ஸ்ரீமந் நாராய ணனே वेदितव्यः அறியப்படத்தக்கவன் (அதாவது புருஷோத் தமனே அந்த ஆதித்யாதி புருஷர்களை உண்டாக்கியவன் அவனே அறியப்படத்தக்கவன்) என்பதாகும்.

இந்த ஜகத்தின் உற்பத்தி, ஜீவனுடைய கர்மாவினுல் அதாவது ஜீவர்களின் கர்மவாஸனைகளின் பலனுக்காக ஏற் படுவதாக விருந்தாலும் அதாவது ஜீவகர்மங்களை நம்பியிருந் தாலும், அந்த ஜீவன் தனக்கு வேண்டிய போக்யபோகோப கரணங்களை ஸ்வயமாக உற்பத்தி செய்ய சக்தி அற்றவன். ஆனுல், அந்த ஜீவன் தனது கர்மானு குணமாகவுள்ளதும் ஈஸ்வரனுல் ஸ்ருஷ்டிக்கப்பட்டதுமான எல்லா வஸ்துக்களை யும் அனுபவிக்கிருன். ஆகையால் அந்த அற்பசக்தி படைப் புள்ள ஜீவனுக்கு ஆதித்ய புருஷர்களையும் உண்டாக்க சக்தி பெற்றவனல்ல. ஆகவே எல்லா வேதாந்தங்களிலும் பரம காரணத்தினுல் (யாவற்றையும் உண்டாக்கும் சக்தி காப் பாற்றுவது லயமடையும் போது தன்னிடம் வைத்திருப்பது இத்யாதிகளால் பரமகாரணமாகிறது பிருஹ்மம்) பிர ஸித்தம் பரம் (மேலான) பிருஹ்மமே இங்கே वेदितव्यः அறியப்பட வேண்டியவன் என்று உபதேசிக்கப்படுகிறது.

(லிங்கத்தினுல் கர்ம சப்தங்களால் இந்த அதிகரணத் தில் ஜீவனுடைய தர்மங்கள் ஒதப்படுகின்றன எனச்

சொல்லக் கூடும். ஆனால் முதற் சூத்ரத்தினாலே ஜீவன் எனச் சொல்லி பிற்பாடு அந்த வாதம் நிராகரிக்கப்பட்டு பரமாத்மாவென்று சித்தாந்தப்படுத்துவதால், அதாவது (பாலாகியை நோக்கி அஜாத சத்ரு சொல்கிறான். நீ சொன்ன இந்த புருஷர்களை எவன் ஸ்ருஷ்டிப்பவனோ, இவர்கள் மாத்திரமல்லாமல் இந்த எல்லா உலகும் எவனுக்குக் காரியமோ, என்று பொருள் கொண்டு (அதாவது ஜீவனுடைய கர்மம் ஜகத் ஸருஷ்டிக்குக் காரணமாகிறது. என்பதினால் அவனை உலகத்திற்குக் கர்த்தா என்று நிர்தேசிப்பது ஸ்வரஸமாகாது. ஆகையால் எந்த பரமாத்மா இவ்வுலகனைத்துக்கும் காரியப் பொருளனைத்துக்கும் (பாலாகியினால் சொல்லப்பட்ட) ஆதித்ய புருஷன் மற்றவர்களுக்கும் கர்த்தா என்று நிர்தேசிப்பது ஆகின்றதோ, அந்த ஸ்ரீமந்நாராயணனை இங்கு அறியத்தக்கவனாகக் கூறப்படுகின்றான் என்பதாகும்).

சூத்திரம்—जीवमुख्यप्राणलिङ्गान्नेति चेत् तद्व्याख्यातम् । (1-4-17)

ஜீவமுக்ய பிராண லிங்காந்நேதி சேத்தத்வ்யாக்யாதம் (1-4-17)

ஜீவமுக்ய பிராணலிங்காத் - ஜீவனுடையவும் முக்கிய பிராணனுடையவும் அடையாளங்கள் இங்கு காணப்படுவதால், ந இவன் பரமாத்மா ஆகமாட்டான் - இதிசேத் எனச் சொல்லப்படுமாகில், தத் - அந்த வாதம், வ்யாக்யாதம் ஏற்கனவே பதில் உரைக்கப்பட்டது.

இப்போது ஏற்கனவே சொல்லப்பட்டது ஜீவாத்மாவின் லிங்கங்களும் (அடையாளங்கள்) முக்யபிராணனின் அடையாளங்களை (லிங்கங்களை) ஓதுவதின் மூலமாக போக்தாவாகிற ஜீவனே இந்த பிரகரணத்தில் ஓதப்படுகிறான்; பரமாத்மா வல்ல என்று சொல்லப்படும் அந்த வாதத்திற்கு ஏற்கனவே பதில் உரைக்கப்பட்டது. (तद् व्याख्यातम्) அதை எப்படி, நிர்வஹித்தமோ அது பிரதர்தன வித்யையில் ஏற்கனவே காட்டப்பட்டது.

(இங்கு ராமானுஜர் சொல்வது முக்கிய பிராணனின் லிங்கங்களை இந்த சூத்ரம் குறிப்பதாகாது; ஆனால் அது ஜீவலிங்கங்களையே சொல்லும், எப்படியென்றால் முக்ய பிராண சரீர பிரும்மம் என்று சொல்லி, பிராணனை ஜீவனுக்கு ஒரு உபகரணமாகச் சொல்லிற்று; அதனால் அது ஜீவனுடைய லிங்கமாகும். சூத்ரம் 1-1-32 பார்க்கவும். மூன்று வகையாக உபாஸனம் பிரும்மத்துக்குச் சொல்லப்பட்டது. இந்திரபிராண சரீரபிரும்மம் எனக் காட்டிற்று; என்ன சொல்லப்பட்டதென்றால் பிரதர்தன வித்யையில் உபக்ம உபஸம்ஹாரங்களை ஆலோசித்துப் பார்த்து அவை பிரும்ம பரம் ஜீவபரமில்லை; பரமாத்மா தர்மங்களைக் கொண்டும் வேறிடங்களிலும் மூவகை உபாஸனங்களும் பரமாத்மாவைப் பற்றியதாலே அங்கே பரமாத்மா பரமாக நிர்ணயிக்கப்பட்டது. அங்கே அதே பிரகரணத்தில் சொல்லப்பட்ட வேறு சில அடையாளங்களும் அவ்விதமே முன் நிச்சயிக்கப்பட்ட பரமாத்மா பரமாகவே அர்த்தம் சொல்ல வேண்டியதாகும். இங்கு கூட உபக்ரமத்தில் பாலாகி அஜாதசத்ருவிடம், "நான் உனக்கு பிரும்மத்தை உபதேசிக்கிறேன். ब्रह्म ते ब्रवाणि "என்று சொல்லப்பட்டதால் பிரும்மமே விஷயமாகும். பிரகரணமத்யத்திலே यस्य वैतत्कर्म எவனுடைய கர்மம் இதாக விருக்கிறதோ என்பதால் புருஷனாகிற ஜீவாத்மாவின் விஷயம் மாத்திரம் சொல்லப்படவில்லை. கர்ம என்பதை உலகமாகக் கொண்டு பரமாத்மாவும் இங்கு விஷயமாகிறான். ஸர்வ வஸ்துக்களுக்கும் பிருஹ்மமே ஜகத்யேக காரணம் என்றும் சொல்லப்பட்டது. உபஸம்ஹாரத்திலே, सर्वान् पाप्मनोऽपहत्य सर्वेषां भूतानां श्रैष्ठ्यं स्वाराज्यमाधिपत्यं पर्येति, य एवं वेद என்று எவன் இதை அறிகிறானோ அவன் எல்லா பாபங்களினின்றும் விடுபட்டு ஸர்வ சேதனர்களுக்கும் மேலாய் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைப் பெறுகிறான். ஸ்வராஜ்யம் தானே தனக்கு எஜமானன். மோக்ஷ ஸாம்ராஜ்யமாகும். ஆகையால் இந்த வாக்யத்தினால் பிருஹ்மத்தின் மேலான பரத்வத்தை நிச்சயித்து ஜீவன் முக்ய பிராணன் இவர்களைக்காட்டும் லிங்கங்களை பிரும்ம பரமாக நிச்சயிக்க வேண்டியது (ஜீவபரமாக இல்லை என்பதாகும்).

**விளக்கம்:**—இங்கே ஜீவன் மோக்ஷம் பெறுதலைப் பலனாக ஓதியது. பாபங்களை ஒழித்து அபஹதபாப்மத்வம் போன்ற கல்யாண குணங்களை முக்தன் அடைகிறபடியால் அவன் மற்ற ஜீவர்களை விட மேலானவனாகும். பிருஹ்மத்தைப் போல உலகங்களுக்குப் பதியாக ஆகிறான் அவனுக்கு பந்தங்கள் விலகி ஸத்ய சங்கல் பாதி குணங்கள் யேற்படுகின்றன) (சா. 2. 8-1-5 பார்க்கவும்) பிரதர்த்தன வித்யையில் மூவகை பிரும்மோபாஸனம் ஒதப்பட்டது. எப்போது ஜீவனோ அசேதனமோ பிரும்மத்தின் தனிப்பட்ட தர்மங்களோடு சம்பந்தம் கொண்டதானால், அல்லது ஸாமானாதிகரண்யத்தால் ஒரே தத்வம் பேசப்படுமாகில், அந்த பிரும்மோபாஸனம் ஜீவனையோ அசித்தையோ தன் சரீரமாகக் கொள்ளக் கூடும். பிராணனுடன் ஏகி பவதி ஜீவன் ஆகிறது. சுஷீபதியிலே பிரும்மம் தான் லயஸ்தான மாகுமாகையால், பிராணசரீர பிரும்மமே உபாஸ்யம் என்பதாகும்.

பிரதர்தன வித்யையில் சொல்லப்பட்டது — பிருஹ்மத்தை மூவகையாக உபாஸிக்கப்பட வேண்யது. அதில் ஜீவமுக்யபிராணன் ஜீவர்களின் லிங்கங்கள் பிரும்மபரமாகச் சொல்ல வேண்டியது. அதனால் மூவகை பிரும்ம உபாஸனம் ஸித்திப்பதற்க்காக இங்கேகூட अयास्मिन् प्राणे एकधा भवति ஜீவன் சுஷீப்தியில் பிராணனுடன் சேர்ந்து ஒன்றாகி விடுகிறான் இங்கே ஸாமாநாதிகரணத்தினால் ஸாம்யம் अस्मिन् என்பதற்கும் பிராணன் என்பதற்கும் யேற்படும். அதனால் வெவ்வேறான ஸ்தானங்களைக் காட்டுவதாக எடுத்துக் கொள்வது தவறாகும். அதனால் பிராணனைக் காட்டும் லிங்கமும் (அடையாளமும்) அந்த அடையாளம் பிரும்மோபாஸனைக்கு உதவுகிறதாக நினைக்கப்படுகிறது - எங்ஙனமெனின், பிருஹ்மத்தை பிராணனை அதாவது முக்ய பிராண சரீரக பிரும்மம்; என்பது இங்கு சொல்லப்படுவது சரியாகும். பிராண சரீரக பிரும்மோ பாஸா நார்த்தம் பிராண ஸங்கீர்த்தனம் லிங்கம் யுஜ்யதே.

(இங்கே மூவகை உபாஸனம் பிரும்ம ஸ்வரூபத்தைத் தியானிப்பது; பிரும்மத்தை அந்தர்யாமியாக வைத்து

போக்தாபோக்யம் என ஜீவசரீர பிரும்மம்; அதேபடி பிரகிருதி சரீர பிரும்மம் அதாவது அசேதன ஸ்வரூபத்துக்கு அந்தர் யாமியாக (ஜீவ முக்ய பிராண லிங்காந்நேதி......யோகாத் அதிகரணத்தை 1-1-32 பார்க்கவும்).

இந்த பிரகரணம் முழுவதும் ஜீவனுடைய அடையாள மும் முக்ய பிராணனுடைய அடையாளமும் காணப்படுவ தால் ஜீவனே அறியத்தக்கவன் ஆகும். ஜீவனுக்குள்ள அடையாளங்கள் பிராணனுடன் சுஷுப்தியில் ஜீவன் ஒன்றுகி விடுகிறுன். எழுந்ததும் இந்த ஆத்மாவிடமிருந்து பிராணன்கள் வெளிக்கிளம்பி தம் ஸ்தானத்தை அடைகின் றன. எப்படி செல்வந்தனை யாவரும் அண்டி வாழ்வார் களோ அதுபோல இந்த ஆத்மா மற்றவர்களோடு அனுப விக்கிறுன் (பூர்வபக்ஷம்)

**சித்தாந்தம்** ஜீவமுக்ய பிராண (1-1-32)ல் உபக்ரம உபஸம்ஹாரம் ஆகியவைகளைக் கொண்டு பிருஹ்மபரமாக நிச்சயிக்கப்பட்டது. இங்கேயும் அவ்விதமே சொல்ல வேண் டியது "நான் பிரும்மத்தை உபதேசிக்கிறேன்" என்பது உப கிரமம்; நடுவிலும் யஸ்யவைதத் கர்ம உலகைப் படைக்கும் பிரும்மமே என்று சொல்லி; முடிவிலும் ஸர்வாத்பாப்மாநோऽ பஹ......வேத என்பதால் வித்யையின் பலன் மோக்ஷமடை தலைக் கூறியது. ஆகவே பிருஹ்மமே அறியத்தக்கதாகும். அதனுல் பிரும்மபரமாக அர்த்தம் ஸித்தம். ஆனுல் பூர்வ பக்ஷத்தில் எடுக்கப்பட்ட ஜீவபிராண லிங்கங்களை இதற்கு விரோதமில்லாமல் பொருள் கொள்ள வேண்டும். முன் 1-1-32 சூத்ரத்தில் பிரும்மோபாஸனம் மூவகை என்று ஒப்புக் கொள்ளப்பட்டு ஜீவமுக்ய பிராண லிங்கங்களை அவ்வவற் றைச் சரீரமாகக் கொண்ட பிரும்மோபாஸனம் என்று ஸமா தானம் கூறப்பட்டது. அதுபோலவே இங்கும் கொள்ள வேண்டியது. அதாஸ்மிந் ப்ராணஏவ ஏகதாபவதி (4-39) என்னும் மந்திரத்தில் अस्मिन् प्राणे ஸாமாநாதி கரணத்தின் பொருள் கொள்வது பொருந்துமே ஒழிய, இந்த ஜீவனிடத்தி லுள்ள பிராணனிலேயே என்று வ்யதிகரணமாக பூர்வ

பக்ஷத்தில் பொருள் கொண்டது பொருந்ாது. பிராண சரீர பரமாத்மா என்று ஸமாநாதிகரணமாகவே பொருள் கொள்ள வேண்டும். ஆகவே அறியத்தக்கவன் பிராணனைச் சரீர மாகக் கொண்ட பிரும்மம் அதுவே உபாஸிக்கத் தகுந்தது என்பதாகும். இதற்க்காகவே பிராணன் எடுக்கப்பட்டது எனத் தேறுகிறது.)

சரி கேள்வி கேட்கப் படலாம் எப்படி ஜீவலிங்கங்கள் மீண்டும் பிருஹ்ம பரமாகச் சொல்லக்கூடும்? என்பதற்கு சூத்ரக்காரரே அடுத்த சூத்ரத்தில் பதிலளிக்கிறார்.

சூத்ரம் अन्यार्थन्तु जैमिनि: प्रश्नव्याख्यानाभ्याम् अपि चैवमेके । (1-4-18)

சூத்ரம்: அந்யார்த்தம் துஜைமிநி: ப்ரஸ்நவ்யாக்யாநா
ப்யாமபிசைவமேகே (1-4-18)

ப்ரஸ்நவ்யாக்யாநாப்யாம் - கேள்வி பதில்களிலிருந்து அந்யார்த்தம் து (ஜீவலிங்கமோவெனில்) வேறொன்றுக்காகப் (படிக்கப்பட்டுள்ளது என விளங்குகிறது என்று) ஜைமிநி மஹரிஷி ஜைமிநி கருதுகிறார். அபிச - மேலும், ஏகே மற்றொரு சாகையைச் சார்த்தவர்கள், ஏவம்-இவ்வண்ணமே படிக்கிறார்கள்.

பிராணனையும் பரமாத்மாவையும் ஸாமாநாதிகரணத்தி னால் ஒரே வேற்றுமையில படித்தது போல, ஜீவனையும் பிரும்மத்தையும் ஒரு வேற்றுமையில் இப்பிரகரணத்தில் படிக்காமையாலே, இங்கு ஜீவசரீரக பிரும்மோபாஸனம் கூறப்படுகிறது, என்று சொல்ல முடியாதையாலே, ஜீவ லிங்கங்களை எப்படி நிர்வஹிப்பது எனில், ஜைமிநி பின் வருமாறு நிர்வஹித்தார்; அதாவது இப்பிரகரணத்தில் தூங்கியவனைத் தடியால் எழுப்புவது முதலானவற்றால் தேகத்தைக் காட்டிலும் வேறுபட்ட பிருஹ்மமும் இருக் கிறது - என்று காட்டுவதற்காகவே. இது கேள்வி பதிலி லிருந்து தெரியவருகிறது. எப்படியெனில், தூங்கியவனை தடியால் எழுப்புவதால் தேஹம், பிராணன் முதலான

வற்றைக் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன், ஜீவனில் வேறுபட்ட ஒன்றை (பரமாத்மாவை) காட்ட ஜீவலிங்கங்கள் படிக்கப்பட்டு, தூங்கும் நிலையில் அந்த ஜீவனுக்கு ஆதார மாக விருப்பது. பரமாத்மா அவனே அறியத்தக்கவன். (ஜகத்காரணம் மோக்ஷம் அளித்தல் இத்யாதிகளாலே). து சப்தம் ஜீவனைச் சொல்வதால் அவனைப்பற்றிச் சொல்லு கிறது - சுருதி வாக்யம் (இந்த பிரகரணத்திலே) என்கிற பக்ஷம் தள்திப்படுகிறது. अन्यार्थं வேறு ஒருவனைப் பற்றிய தாகும். (ஜீவலிங்கம் வேறு ஒன்றுக்காக படிக்கப்பட்டது) அதாவது ஜீவனைக் காட்டிலும் வேறுபட்ட பிருஹ்ம ஸ்வ ரூபத்தை அறிவிப்பதாக மஹரிஷி ஜைமினி எண்ணுகிருர். எப்படி प्रश्नव्याख्याना भ्याम् கேள்வி பதில்களிலிருந்து प्रश्नतावत् கேள்வியோ யெனில் तौ ह सुप्तं पुरुषमीयतुः அஜாத சத்ருவும் பாலாகியும தூங்குகிற புருஷனிடம் சென்றனர். அவன் சுஷிப்தியிலிருந்தபடியால் இந்திரியங்கள் ஒடுங்கி பிராணன் மாத்திரம் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தது; அப்போது பிரா ணனே என்று அழைக்கப்பட்டவன் அவன் எழுந்திருக்க வில்லை. தடி கொண்டு அடித்ததால் அவன் எழுந்திருக்க அவனை அஜாத சத்ரு வினவினுன் "இந்தப் புருஷன் எங்கு படுத்திருந்தான்? எங்கே உறங்கினுன்? எங்கிருந்து வந்தான்? தெரியுமா" பாலாகி அறிந்தானில்லை. அதன் பின் அரசன் விளக்கினுன், ஹிருதயத்தில் புரீதத் என்கிற மாம்ஸபிண்டத் தில் இருந்தான், சொப்ன தசையில், நன்ருக உறங்கும்போது எம்பெருமானிடம் தங்கினுன் என்ருன். இதனுல் ஜீவனைவிட வேருன பரமாத்மா வைக்காட்ட क्वैष एतद्बालाके, पुरुषोशयिष्ट क्वा एतद्भूत् कुतएतदागात्; அஜாத சத்ரு மூன்று கேள்விகள் கேட் டான்? சொப்பனத்தில் இந்த புருஷன் எங்கே தங்கினுன் சுஷீப்தியில் எங்கே தங்கினுன் ? விழித்ததும் அவன் எங்கிருந்து வந்தான் ? இவை எல்லாம் பிரும்மத்தைப் பற்றியவை, ஜீவபரமல்ல.

இக் கேள்விகளுக்குப் பதிலாக பிரதி வசனமாக—

**यदा सुप्तः स्वप्नं न कथञ्चन पश्यति - अथास्मिन् प्राण एवैकधा भवति । एतस्मादात्मनः प्राणाः यथायतनं**

**विप्रतिष्ठन्ते; प्राणेभ्यो देवा: देवेभ्यो लोका: —इति जीवाद-र्थान्तरभूत परमात्मापरमेव ।**

ஒருவன் ஆழ்ந்த நித்ரையில் அவன் சொப்பனம் காண்பதில்லை. ஏனெனில் அவன் பிராணனோடு ஒன்றாகி விடுகிறான். பிராணன் பிரும்மத்துடன் என்பதாகும்; (எழுந்ததும் பிராணன்கள் (ஜீவர்கள்) ஆத்மாவிடமிருந்து தங்கள் தங்கள் ஸ்தானங்களை அடைகிறார்கள்; பிராணன்களிலிருந்து தேவர்கள் (இந்திரியங்கள்) கிளம்புகிறார்கள்; தேவர்களிடமிருந்து லோகங்கள் (விஷயங்களைப் பற்றிய ஞானம்) கிளம்புகின்றன. கௌ. 4-19;) இந்த பதில் பரமாத்மாவைப் பற்றியதாகும். அவன் ஜீவனை விட வேறானதாகும்.

**விளக்கம்:**—ராமானுஜர் இந்த அஜாத சத்ருபாலாகி ஸம்வாதத்திற்கு விளக்கம் கொடுத்து, பரமாத்மா பரமாகச் சொல்லி, சாங்கிய பக்ஷத்தை ஜகத் வாசித்வாத் என்கிற 16-ம் ஸூத்ரத்தின் பொருளைச் சொல்கிறார். அஜாத சத்ருவின் அபிப்ராயத்தில் பிரும்ம ஸ்வரூபம் எத்தகையது? அது ஜீவனைவிட வேறானது; ஜீவன் முக்ய பிராணனைவிட வேறானவன்; தூங்குகிறவனிடம் இவர்களும் சென்று, சுஷுப்தியிலிருந்து அவனை எழுப்ப முடியாதபோது அஜாத் சத்ரு காண்பிக்கிறான் பிராணனை விட ஜீவன் வேறு. சொப்னத்தில் புரிதத்தில் இருக்கிறான்; புரிதா நாம ஹ்ருதயத்தின் நாடியில்; இது சொப்னத்தின் ஸ்தானம் எனப் பூர்வ பக்ஷி சொன்னதுபோல, ஸுஷுப்தி (தூங்கும்) ஸ்தானத்தைப் பற்றியதல்ல. சுஷுப்தியில் அவன் ஸத் எனப்படும் பிரும்மத்தோடு ஒன்றி இருக்கிறான். விழித்த போது எங்கிருந்து வருகிறான். அதற்குப் பதில் பிருஹ்மத்தைப் பற்றியதே, பதிலில் பிராணா: என்று பன்மையிருப்பதால் பூர்வ பக்ஷத்தில் சொல்லப்பட்ட பிராணன் மாத்திரம் குறிப்பதல்ல, பிராணனோடு கூடிய ஜீவர்களைச் சொல்கிறது. பிரும்மத்திலிருந்து பிராணனோடு கூடிய ஜீவர்கள் வருகிறார்கள் என்பதாகும். ஆகவே நாடிகளில் இருப்பது (கனவில்); தூங்கும்போது பிராண சரீர பிரும்மத்தினிடம் ஜீவன் இருக்கிறான்; விழிக்

கும்போது, பிரும்மத்தினிடமிருந்தே (எங்கே சுஷீப்தியில் இருந்தாரோ அந்த பிரும்மத்திலிருந்தே) கிளம்புகிருன் என்பது பதில். ஆகவே ஜீவலிங்கங்கள் ஜீவனைக் காட்டி அவனிலும் வேறுபட்ட பிருஹ்மத்தைத் தெரிவிக்கவே படிக்கப்பட்டுள்ளன என்பது ஜைமிநியின் கருத்து).

சுஷீப்தியில் இந்த ஜீவன் பரமாத்மாவினுள் தங்குகிருன். சுக துக்க அனுபவங்கள் ஒன்றுமில்லை. இந்த சுக துக்க அனுபவங்கள் விழித்ததும், அதுமாதிரி சொப்னத்திலும் யேற்படுகின்றன. சுஷுப்தியில் ஸம்பிரஸன்னனுக (கலங்காமல்) விருக்கிருன். பிறகு விழித்ததும் போகார்த்தம் வெளிக்கிளம்புகிருன். இப்படிப்பட்ட ஒருவன் பரமாத்மாவே सोऽयं परमात्मा ஜீவலிங்கங்கள் அந்த ஜீவனை விடவேருன பரமாத்மாவைக் காட்டுகின்றன என்பதாகும்.

அவ்விதமே சா. 2. 6-8-1ல் सता सोम्य तदा संपन्नो भवति (ஸௌம்ய (அவன்) ஆழ்ந்த நித்ரையில் சுஷீப்தியில் ஸத்தோடு சேர்ந்து விருக்கிருன் பிரு. 2.4-3- 21 प्राज्ञेनाऽऽत्मना संपरिष्वक्तो न बाह्यं किञ्चन वेदनान्तरं எப்போது அவன் (ஜீவன்) பிராக்ஞனுகிற (ஆத்மா) விஞல் தழுவப்படும்போது அவன் ஒன்றையும் அறிவதில்லை. வெளியிலேயும் உள்ளேயும்; இவைகளிலிருந்து தெரியவருவது சுஷீப்தியின் ஆதாரமாக ஜீவனுக்கு இருப்பது; அதனுல் பிரஸித்தமானதும் ஜீவனில் அந்தர்யாமியாக அந்தர் பூதனுக பிராக்ஞன் எனப்படும் பரமாத்மா வேறு, ஜீவனைக் காட்டிலும் வேறு என்பது காட்டப்பட்டது. இங்கே கேள்வி பதில்களிலிருந்து ஜீவ ஸம்கீர்த்தனம் ஜீவனைப் பற்றிய லிங்கங்கள் அந்த ஜீவனைவிட வேருனவனும் அவனுக்கு அந்தர் பூதமாகவிருக்கும் பரமாத்மாவைப் பற்றியது என்று நிச்சயிக்கப்படும் (வேறு என்பதற்க்காகவே உபாஸனைக்காகவே ஜீவ பரமாத்மா பேதம் என்பதாகும்).

மேலே சொல்லப்பட்டது, கேள்வி பதில்களிலிருந்து ஜீவபரே; ஜீவனைப் பற்றியது ஸுஷீப்தி ஸ்தானம் நாடி

களே; அச்சமயம் கரணங்கள் ஒடுங்கி, ஜீவனுடன் ஒன்ருகி விடுகிற படியால், "பிராணன்" என்கிற சப்தம் ஜீவனைக் குறிக்கும். ஏனெனில், ஜீவன் ஏவ என்பதால் ஒன்ருகி விடுகிறது என்பது அயுக்தம் (சரியல்ல); நாடிகளிலே ஸ்வப்ன ஸ்தானமாகவிருப்பது; சுஷீப்தியில் பிரும்மம் ஆதாரமாக விருக்கிறபடியால் பிரும்மம் தான் ஸ்தானமாகும். பிராண சப்த நிர்திஷ்டமான பிருஹ்மம் ஆகும். ஜீவனும் அவனுடைய வாக்கு முதலிய கரணங்களும் தனித்தனியாக பிரும்மத்துடன் ஏகதாபத்தி பிரும்மத்துடன் ஒன்ருகக் கலந்து விடுகிறபடியால் பிரும்ம பரமாக அர்த்தம் கொள்ள வேண்டியது ஜீவ பரமல்ல. (சுஷீப்தியில் பிரும்மமே ஆதாரம் ஜீவனும் வாக்காதி கரணங்களும் ஜீவனுடைய உபகரணங்கள் யாவும் தனித் தனியாகச் சொல்லப்பட்டு (பிரும்மத்துடன்) ஏகதாபத்தி அடைவதாக ஓதப்படுகிறது.

अपिचैवमेके மேலும், ஏகே மற்ெருரு சாகையைச் சேர்ந்தவர்கள் ஏவம் இவ்வண்ணம் படிக்கிருர்கள். இந்த அஜாதசத்ருபாலாகி-ஸம்வாதத்திலே வாஜஸேங்யர்கள் சுஷீப்தியில் விக்ஞான மயமுன ஜீவனை விட வேருனவனும் சுஷீப்தியில் அந்த ஜீவனுக்கு ஆஸ்ரயமாக விருப்பவனுமான பரமாத்மாவை ஒதுகிருர்கள் இந்த சுருதிகளிலே பிரு.உ. 4-1-16-27ல்

य एव विज्ञानमय: पुरुषक्वैष तदाश्रयभूतं परमात्मानमामनन्ति, பிரு. 2-4-1-26-2ல்

य एष विज्ञानमय: पुरुष: क्वैष तदाऽभूत कुत एतदागात्...यत्रैषु एतत् सुप्तोऽभूत् । य एव बिज्ञानमय: पुरुष: तदैषां प्राणानां विज्ञानेन विज्ञानमादाय य एषोऽन्तर्हृदय आकाश: तस्मिञ्च्छेते इति । आकाशशब्द-परमात्मनि प्रसिद्धि: ।
இந்த புருஷன் எங்கு இருந்தான்? (இங்கு புருஷன் அல்லது ஜீவன்); இந்த புருஷன் விக்ஞானமயன் (விக்ஞானத்தை, அறிவைவுடையவன்) அவன் எங்கிருந்து வந்தான்?—; அவன் அந்த புருஷன் விக்ஞாமையமுகவிருப்பவன் கன்ருகத் தூங்கும் போது, அவன் தன்னுடன் மனத்துடனும்,

இந்திரியங்களால் யேற்பட்ட விக்ஞானத்தையும் எடுத்துக் கொண்டு ஹ்ருதயத்துக்குள் இருக்கும் ஆகாசத்தில் நன்ருகத் தூங்குகிருன். (பிரு.உ. 2-1-17) இங்கே ஆகாச சப்தம் பரமாத்மாவையே குறிக்கிறது என்பது பிரஸித்தம், எங்கனமெனில் சா. உ. 8-1-1ல் दहरोऽस्मिन्नन्तराकाश:—ஹ்ருதயத்தினுள்ளே சிறிய ஆகாசம் இருக்கிறது.

(போக்திருத்வம் அனுபவித்தல் என்பது ஜீவனுடைய அடையாளம் என்று பூர்வபக்ஷக் கருத்து தவறு. கர்மத்திஞல் யேற்படாத போக்த்ருத்வம் பரமாத்மாவுக்கும் உண்டு ஏதே ஆத்மாந ஏநம் புஜ்ஜந்தி (4-44) என்னும் பரஸ்மை பத பாடத்தில் ஜீவர்கள் பரமாத்மாவை ரக்ஷிப்பதாகச் சொன்னது, அதஞல் பரமாத்மாவுடன் சம்பந்தத்தைச் கூறியதாகும். பிரு உ. தூங்குகிறவன் ஹ்ருதயத்தினுள்ளிருக்கும் ஆகாசத்தினிடம் பரமாத்மாவினிடம் படுத்திருக்கிருன். தஹரோ...ஆகாச: என்பதில் ஆகாசசப்தம் பரமாத்மாவைக் குறிக்கும். ஆகவே ஜீவனைக்காட்டிய பிறகு பரமாத்மாவைக் காட்டுவதற்கு ஜீவலிங்கங்கள் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே ஜீவஞே அவஞல் அதிஷ்டிக்கப்பட்ட பிரதானம் அறியத்தக்கதல்ல, ஜகத்காரணமல்ல என்பதாகும்.

(சாங்கியன் புருஷன் புரீத நாடியில் சுஷிப்தியில் இருக்கிருன் என்கிருன். சுஷிப்தியில் பரமாத்மாவிடம் இருக்கிருன் என்பது ராமானுஜரின் கருத்து. சொப்னத்தில் நாடியில் இருக்கிருன் என்கிருர்.

பிருஹ. உபநிஷத்தும் பாலாகிவித்யையும் இதைச் சொல்கிறது-சுஷிப்தியில் பிரும்மத்துடன் புருஷன் (ஜீவன்) தூங்குகிருன், இதஞலும் சாங்கியனின் அபிப்ராயம் தள்ளப்படுகிறது).

இந்த விதமாக நாம் காண்பது ஜீவலிங்கங்கள் பரமாத்மாவைக் காட்டுவதற்க்காக எடுத்துக் கொள்ளவேண்டியது. प्राज्ञस्य परस्य ब्रह्मण: बोधनार्थम् । ஆகவே இந்த வாக்யத்தில்

ஜீவனை விட வேறானவனும் பிராக்ஞனும் ஜீவனுக்கு அந்தர் யாமியாகவிருக்கும் பரஸ்ய பிரும்மண: (பிரும்மமே) நிகில ஜகத்காரணம் அவனையே அறிய வேண்டியது, என்று சொல்வதால், கபிலதந்திரத்தின் புருஷனும் அவன் அதிஷ் டிக்கும் பிரதானமும் ஜகத்காரணமாகாது; எந்த வேதாந்த வாக்யங்களிலும் (எங்கேயும்) ஜகத்காரணம் ஜீவனுக்கோ பிரதானத்துக்கோ சொல்லப்படவில்லை—என்பது ஸித்தம்.

## வாக்யான்வயாதிகரணம்

சூத்ரம் वाक्यान्वयात् (1-4-19)

வாக்யாங்வயாத் (1-4-19)

வாக்யாங்வயாத் - சுருதி வாக்யங்கள் எல்லாம் பரமாத் மாவினிடமே பர்யவஸானம் செய்ய வேண்டியபடியால் பொருந்துகிறபடியால் இங்கு காணத் தகுந்தவன் பரமாத் மாவேயாகும்.

இந்த அதிகரணத்திலேயும் கபிலதந்திர ஸித்தபுருஷன் அறியத்தகுந்தவன் என்று இந்த வாக்ய பிரகரணத்திலே சிலவிடங்களில் காணப்படுகிறதே என்று சூத்ரக்காரரே சந்தேகம் எழுப்ப; அதற்கு சமாதானமாக அவ்விதம் சொல்ல முடியாது, எதனால் ஈஸ்வரன் என்கிற பெயருடன் ஒருவரும் ஏற்படுவதில்லை என்கிற சங்கையை சூத்ரக்காரரே நிரா கரிக்கிறார்.

முன் அதிகரணத்தில் யஸ்யவைதத் கர்ம என்னுமிடத் தில் கர்ம சப்தம் கார்யமான உலகைச் சொல்லுகிறபடியால் அந்த கர்மம் பகவத்காரியம் என்கிறபடியால் அவ்வாக்யம் கர்மாதீனமாக போக்தாவான ஜீவனைச சொல்லுகிறது என்கிற பக்ஷம் தள்ளப்பட்டது. இதில் கர்மபலத்தை அனு பவிக்கும் ஜீவனையே நேரே சொல்லுகிறபடியால் ஆத் மாவா அரேத்ருஷ்டவ்ய: ஸ்ரோத வ்யோமந்தவ்யோ நிதித் யாஸிதவ்ய: —(பிரு.உ. 6-5-6) இந்த ஆத்மா கேட்கத்தக்கது நினைக்கத்தக்கது தியானிக்கத்தக்கது காணத்தக்கது என்

வாக்யத்தில் சொல்லப்படுகிறவன்—ஜீவனே என்கிற பக்ஷம் தள்ளப்படுகிறது. இங்கே பத்தமுக்த ஸாதாரண ஆத்ம சப்தம் என்பதால், முக்தலிங்கம் சொல்லப்படுவதால் சுத்த ஸ்வரூப பரத்வம் யுக்தம் என்கிற சங்கையாகும். ஆனால் ब्रह्मकर्मशब्दस्य - क्रियत இதி வ்யுத்பத்தியினால் பிரகரணம் பிரும்ம பரத்வமாக விருக்கிறது என்று சொல்வது யுக்தம் (சுருத பிரகாசிகை) நீரீஸ்வரசாங்கியன் பூர்வபக்ஷி இங்கே அவனே அடக்கி அடுத்த அதிகரணத்தில் ஸேயீஸ்வரசாங்கியன் பூர்வபக்ஷியாகும்.)

பிருஹதாரண்யகத்திலே, மைத்ரீயிபிராம்மணத்திலே சொல்லப்படுகிறது. பிரு.உ. 2&4 அத்யாயங்களில் (6-5-6); न वा अरे पत्यु: कामाय पति: प्रियो भवति-என்று ஆரம்பித்து, பிரியே கணவன் மனைவிக்கு பிரியமாகிறான் கணவன் ஆசைப் படுகிறான் என்கிற காரணத்தின் படியினாலல்ல; ஆனால் கணவன் மனைவிக்குப் பிரியமாகிறான் பரமாத்மாவின் ஸங்கல்பத்தாலே என்று ஆரம்பித்து— न वा अरे (பிரு. 2-4-5 & (4-5-6); பிரியே ஒவ்வொன்றும் (ஒருவனுக்கு பிரியமாகிறது. அந்த வஸ்து இஷ்டப் படுகிறது என்பதால் அல்ல; ஆனால் ஒவ்வொன்றும் பிரியமாகிறது, ஆத்மா இஷ்டப்படுகிறது என்கிற காரணத்தினாலே என்பதாம். அந்த ஆத்மா கேட்கப்படவேண்டியது, தியானிக்கப்பட வேண்டியது; சாக்ஷாத்காரம் வரும்வரை ஸதா சிந்திக்கப்பட வேண்டியது. மைத்ரேயி, அப்பேற்பட்ட ஆத்மா இவ்விதமாக கேட்கப்பட்டு, தியானிக்கப்பட்டு சாக்ஷாத்காரம் யேற்படும் வரை சிந்திக்கப்பட்டுவிட்டால், இந்த எல்லாம் பிரியே அறியப்பட்டதாகும். (அதாவது பிருஹதாரண்யக உபநிஷத்தில் பதியின் காமத்திற்க்காக பதி (கணவன்) பிரியனாவதில்லே, என்று தொடங்கி, யாக்ஞயவல்கியர் மைத்ரேயியிடம் பதியின்கு லௌகிக ஆசை பரியாயங்களை இதே ரீதியில் படித்தார். பதிஸ்தானத்தில் ஜாயா (மனைவி) புத்ரன் வித்தம் (பணம்) பசுக்கள் பிராம்மணர்கள், க்ஷத்ரியர்கள், லோகங்கள் தேவர்கள் வேதங்கள், பூதங்கள் ஸர்வம் ஆகிய ஒவ்வொன்றையும் வைத்துச் சொன்னார். ஆத்மாவா

அரேதிருஷ்டவ்ய: என்பதற்கு மைத்ரேயி, ஆத்மாவே காணத் தகுந்தது. கேட்கத்தகுந்தது. பிரேமேயம் ஸித்திக்கும் வரை சிந்திக்கத்தக்கது; அவ்விதம் ஒருவனுக்கு சாக்ஷாத் காரம் யேற்பட்டு விட்டால், அவன் அறியவேண்டியதை அறிந்தவனுகிருன். இவை அனைத்தும் (சம்சாரம் அனைத் தும் பகவான் வரை) எல்லாம் அறியப்பட்டதாகிறது. இவ் விதம் யாக்கிய வல்கியர் தன் மனைவி மைத்ரேயியிடம் "நான் இல்லற வாழ்க்கையை விட்டு விலகுவதாக விருக் கிறேன். உனக்கும் காத்யாயனிக்கும் ஏராளமான சொத்துக் கள் வைத்திருக்கிறேன் என்று சொல்ல; மைத்ரேயீ இப்பூமி முழுவதும் பணம் நிறையப்பெறப் பட்டாலும், அதனுல் மோக்ஷம் பெறமுடியுமா? என்று கேட்க, யாக். முடியாது. சொத்துள்ளவர் சௌக்யமாக வாழலாம், மோக்ஷமடைய முடியாது.

**மைத்ரே** மோக்ஷத்திற்கு உபயோகமில்லாததைக் கொண்டு செய்வது என்ன? மோக்ஷத்திற்கு உபாயம் உப தேசிக்க வேண்டுமென்று கேட்க;

**யாக்ஞ** புருஷன் மனைவிக்குப் பிரியனுவது மனைவியின் இஷ்டத்திஞலோ புருஷன் நினைப்பதினுலோ இல்லை. வஸ்து சுகதுக்கத்தை அளிக்கக்கூடியது. ஒரே வஸ்து ஒரு சமயம் இன்பத்தையும் மற்றொரு சமயம் துன்பத்தையும் விளை விக்கக் கூடும். அதுபோல பிள்ளை பெற்ருேருக்குப் பிரிய ருவது பிள்ளையின் நினைவு அவ்விதம் ஆசைப்படுவதாலா இல்லை? பரமாத்மாவின் சங்கல்பத்தால் அந்த அந்த வஸ்து ஒவ்வொருத்தனுக்கும் அவனது நல்ல கர்மம் தீய கர்மம் அனுஸரணையாக பிரியத்தையோ அப்ரியத்தையோ கொடுப் பதாகும். ஆகவே ஆத்மாவாகிற பரமாத்மாவிடம் எப்பொழு தும் அன்பை செலுத்தி ஆத்மாவையே உபதேச மூலமாக கேட்டு ஆராய்ந்து தியானம் செய்யவேண்டும். ஆகவே இங்கு ஆத்மா என்பது பரமாத்மாவாகும். யாக்ஞ்யவல்கியர் சொன்னர், "எங்கும் வியாபித்த ஆத்மாவாகவே எல்லாவற் றையும் பார்ப்பவன் அதாவது எல்லாம் பிரும்மாத்மகமாகப்

பார்ப்பவன் மோக்ஷமடைகிருன், உபாஸகன் அவனை இந்திரியங்களை அடக்கி அறிய வேண்டியது என்று தன் மனைவிக்கு உபதேசித்தார்).

இங்கு "ஆத்மாவையே" காணத்தகுந்தது. நிதித்யாஸிதவ்ய: என்ருர் பிரும்ம ரிஷியாக்ஞ்யவல்கியர். இதில் சம்சயம் இந்த வாக்யத்தில் த்ருஷ்டவ்ய: மந்தவ்ய: என்கிற உபதேசித்திஞலே கபிலதந்திரஸித்தமான புருஷனே (என் கிருன் சாங்கியன்) அல்லது ஸர்வக்ஞ: (பரமாத்மா) ஸத்ய ஸங்கல்ப:—ஸர்வேஸ்வரன் யாது சரியாகும்? புருஷன் என் கிருன் பூர்வபக்ஷி (சாங்கியன்). எப்படி?

ஏனென்ருல், ஆதி மத்யம முடிவிலே, இந்த பிர கரணத்திலே, புருஷன் (எனப்படும் ஜீவாத்மாவே) விஷய மாகும். அவனுக்குத் தானே பதி, ஜாயா (மனைவி) புத்ரன் வித்தம் (பணம்) பசு இவைகள் எல்லாத்துடன் சம்பந்தமும் ப்ரீதியும் ஆகும், மத்யத்திலே, பிரு. உ. 4-4-12 विज्ञानघन एवैतेभ्यो भूतेभ्य: समुत्थाय तान्येवानुविनश्यति न प्रेत्य संज्ञास्ति இதே பிர கரணமத்தியிலே பிறப்பு இறப்பு சம்பந்தம் கொண்டதாக சொல்லப்படுகிறது. இந்த சுருதி "அந்த ஜீவன் விக்ஞான கனஏவ (ஞானத்தையே குணமாகவும் ஸ்வரூபமாகவும் உடையவன்) அவன் இந்த பஞ்சபௌதிக தேகமாகிற பூதங்களிலிருந்து வெளிக்கிளம்பி பிற்பாடு அவைகளுடன் அழிந்து போகிருன். இறப்பிற்குப் பின்பு, அவனிடம் தனிப்பட்ட (ஜீவனுடைய) ஞானமில்லை. (அதாவது தேக உற்பத்தி விநாஸம் வர்ணிக்கப்படுகிறபடியால் ஜீவ ஞகும்). அந்த சுருதியின் முடிவிலே, (பிரு. உ. 6-5-12) विज्ञातारमरे केन विजानीयात् "பிரியே எதன் உதவியிஞல் ஒருவன் அறிகிறவனை (ஜீவனை) (ஆத்மாவை) அறியக்கூடும்?" இதஞல் ஞாதா (அறிகிறவன்) ஸஏவ அந்த ஜீவாத்மாவே யாகும்; அவனை க்ஷேத்ரக்ஞன் என்றும் அறியக்கூடும். (இங்கே விஜாநீயாத் என்கிற செய்கையிஞலே விக்ஞாதா (அறிகிறவனை) விக்ஞாத்ரு பதத்திஞல் அறியவேண்டியது

என்கிற பாவம்). ஆகையால் கபிலதந்திரஸித்த புருஷனே இந்த வாக்யத்தில் பிரதிபாதனம் என நிச்சயிக்கப்படுகிறது.

**பதில்** அவ்விதமில்லை. अमृतत्वस्य तु नाऽऽशास्ति वित्तेन பிரகரண உபக்ரமத்திலே "பணத்தினாலே மோக்ஷம் அடையப் படமாட்டாது" என்று சொல்லி, அம்ருதத்வம் என்கிற பல பிராப்தி உபதேசப்படுகிறது. இந்த வாக்யத்திலிருந்து அம்ருதத்வ உபதேசம் அறியப்படுகிறது. அவ்விதமிருப்பதால் கபிலதந்திர புருஷன் எப்படி விஷயமாகக்கூடும்? என்று கேள்வி கேட்கப்படும். அதற்குப் பதிலாக இந்தக் காரணத்திற்க்காகவே (கபிலதந்திரஸித்த) புருஷன் (ஜீவாத்மா) இங்கு அறியத்தக்கவனாகும். (சாங்கியன் மீண்டும் சொலகிறான்) அசித் (பிரகிருதி) தர்மங்களை அத்யாஸிக்கப்பட்ட புருஷன் பிரகிருதியிலிருந்து விடுபடும் போது விழுக்தனாகி பிரகிருதியைவிட்டு விடுகிறான். அந்த முக்த ஸ்வரூபமே யாதாத்மிய விக்ஞானமே அம்ருதத்வ ஹேது என்று இங்கு உபதேசிக்கப்படுகிறது. அந்த ஆத்மா அறியப்பட வேண்டியது அதனால் जीवात्मनः प्रकृतिवियुक्तं स्वरूपमिहातत्वाय आत्मा वा अरे द्रष्टव्यः அந்த ஆத்மா காணத் தகுந்தது என்பவைகளால் உபதேசிக்கப்படுகிறது. (இது பூர்வபக்ஷம்) சாங்கியன் பிரகிருதியை அறிந்து விடுகிற போது மோக்ஷம் யேற்படுகிறது என்கிறான்.

எல்லா ஆத்மாக்களின் ஸ்வரூபம் பிரகிருதியிலிருந்து விடுபட்டபோது ஒரே ரூபத்துடன் இருக்கிறது; அதனால் பிரகிருதியிலிருந்து விடுபட்ட ஒரு ஜீவனின் யாதாத்மிய விக்ஞானத்தினால் எல்லா ஜீவர்களும் அறியப்பட்டவர்களாகிறார்கள். ஆகவே அந்த ஜீவனின் ஆத்மவிக்ஞானத்தினால் ஸர்வ ஜீவர்களுடைய விக்ஞானம் யேற்படுகிறது. தேவாதிகளிலிருந்து தாவரம் வரை எல்லாப் பூதங்களிலும், ஆத்மஸ்வரூபம் ஞானத்தையே பிரகாரமாகக் கொண்டது. அதனாலே ஏகாத்மா (ஒரே ஆத்மா) உபதேசம் इदं सर्वं यदयमात्मा (இது எல்லாம் (ஜகத்) எது எது இருக்கின்றதோ அது இந்த ஆத்மாவாகும்) என்பதாக விருக்கிறது.

மேலும் தேவாதி அநாத்ம ஸ்வரூபத்தை உடையவர்களாக விருக்கிறார்கள் அதனால் தங்கள் ஸ்வரூபத்தைத் தவிர வேறு ஒரு ஸ்வரூபத்தை உடையவர்களாக விருக்கிறார்கள் என்பது நிஷேதிக்கப்பட்டுருக்கிறது இந்த சுருதியிலே सर्वं परादात् எல்லோரும் அவனை விட்டுவிடுகிறார்கள் (அதாவது நிந்திக்கிறார்கள்) (பிரு. உ. 2-4-6; 4-5-7); மேலும் यत्र हि द्वैतमिव भवति எங்கே த்வைதமிருக்கிறதோ (பேதம்) (அது இருக்கிறதுபோல); என்பதால் ஆத்மாவின் (நாநாத்வம்) பஹுத்வம் ஜீவனின் நிஜஸ்வரூபத்தை நிஷேதிப்பதாலே ஆத்மாவின் ஏகஸ்வரூபம் தேவாதி பிரகிருதி பரிணாமபேதத்தினால் யேற்பட; நானாத்வம் என்பது மித்யை (தோற்றமே) எனச் சொல்லப்படும் (நானாத்வம் தேவ மனுஷ்யாதி தேகங்களினால் யேற்படுகிறது. அது மித்யை என்று நிஷேதிக்கப்படுவதால் ஆத்மாவின் ஏகஸ்வரூபம் ஸித்திக்கிறது) अस्य (तस्य हवा एतस्य) महतो भूतस्य निश्वासितमेतत् यदृग्वेदः ருக்வேதத்திலும் இம்மாதிரி ஒரு வாக்யம் இருக்கிறது, அது (எது) இந்த ருக்வேதமாக விருக்கிறதோ, அதுவே தான் மறைத்தான பூதத்தின் உட்சுவாஸம் ஆகும். இந்த வாக்யம் இந்த வாக்ய பிரகரணத்துக்குப் பொருத்தமாகும் ஏனெனில் ஜகத்தின் உத்பத்திக்கு பிர கிருதியை அதிஷ்டிக்கும் (மேல் பார்வை பார்க்கும்) புருஷன் நிமித்த காரணமாகிறான். (அதாவது ருக்வேதத்தில் ஜீவன் பிரக்ருதியை அதிஷ்டிப்பதால் ஸ்ருஷ்டி யேற்படுகிறது என்று சொல்லப்படுகிறது).

இந்த வாக்யத்திலே, புருஷன் பரமாக நிச்சயிக்கப்படுமாகில், அந்த புருஷனே நிமித்த காரணம் என்று இங்கு நிச்சயிக்கப்பட்டால், அதேமாதிரி எல்லா வேதாந்தங்களிலும் ஒரே மாதிரி இம்மாதிரி வாக்யங்களுக்கு அர்த்தம் சொல்லப்படவேண்டும் — அதனால் கபில தந்திரஸித்த புருஷனே பிரகிருதிக்கு அதிஷ்டாதாவாக விருக்கிறான் - கபில தந்திர ஸித்த புருஷனே பிரகிருதியுடன் சேர்ந்து, ஜகத்திற்கு உபாதானகாரணமாகும்; ஈஸ்வரன் அல்ல; (புருஷன் நிமித்த காரணம் பிரகிருதி உபாதானகாரணம் என்கிறான் அதனால் ஈஸ்வரன் அல்ல என்றால்).

இவ்விதம் சொல்வாயாகில், நாம் பதில் சொல்வோம் — वाक्यान्वयात् வாக்கியங்கள் முழுவதும் பரமாத்மாவிடமே பர்யர்வஸானம் ஆவதால் (பொருந்துகிறபடியால்); (அதாவது காணத்தகுந்தது பரமாத்மாவே) ஸர்வேஸ்வரனே இந்த வாக்யத்தில் சொல்லப்படுகிறான். எப்படி? இந்த சுருதி வாக்யங்களை இம்மாதிரி வாக்ய அவயங்களை அன்யோன்ய சமரஸம் செய்வதாலே ஸமஞ்சஸமாகும் - பொருந்தும் ஒரே அர்த்தம் கிடைக்கும். யாக்ஞ்யவல்கியர் மைத்ரேயியிடம் சொன்னார் अमृतत्वस्य तु नाशास्ति - மோக்ஷத்தைப் பணத்தால் பெற விரும்பவும் முடியாது - என்று தொடக்கத்திலிருக்கையால் இவ்வாக்யம் மோக்ஷோபாயத்தைச் சொல்வது என்று கூறுகையாலே, येनाहं नामृता स्याम्, किमहं तेन कुर्याम् । यदेव भगवान् वेद तदेव मे ब्रूहि - அப்போது மைத்ரேயி சொன்னாள், "எந்த பணத்தினால் மோக்ஷம் கிடைக்கப் படாததோ நான் அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது? நாதனே, எதனால் மோக்ஷமடையக் கூடுமோ அதையே எனக்கு உபதேசிப்பீர்," என்று வேண்டினாள். அதனால் பணத்தை அநாதரம் செய்து அம்ருதத்வத்தின் பிராப்திக்கு உபாயத்தை வேண்டினாள், "அந்த உபாயமே ஆத்மா த்ரஷ்டவ்யம் நிதித்தியாஸிதவ்யம்" என்று சொல்லி "அந்த ஆத்மா பரமாத்மாவே ஆகும்," என்றார் யாக்ஞ்யவல்கியர் மைத்ரேயிக்கு உபதேசித்தார்.

अयमात्मा परमात्मैव; ஸ்வே. உப. 3-8 तमेव विदित्वा अतिमृत्युमेति - அந்த பரமாத்மாவையே எவன் இவ்விதம் அவனை அறிகிறானோ அவனே ம்ருத்யுவை (சம்சாரத்தை) தாண்டுகிறான். புருஷ. சூத் तमेव विद्वानमृत इह भवति; नान्यः पन्था அவனை (பரமாத்மாவை) இவ்விதம் எவன் அறிகிறானோ - அவனே இங்கேயே அம்ருதமாகி விடுகிறான். அம்ருதத்வத்தை அடைவதற்கு (அவனை அறிவதைத்தவிர) வேறு ஒரு உபாயமில்லை. இந்த சுருதிகளாலே அம்ருதத்வம் பரமபுருஷனை அறிவதாகிற உபாயத்தினால் பிரதிபாதனம் செய்யப்படுகிறது. பரமபுருஷனுக்கு விபூதியாக (ஐஸ்வர்யமாக) விருக்கும் ஜீவாத்மா அந்த ஜீவாத்மாவின் ஸ்வரூப யாதாத்மிய ஞானமே (அதாவது பரம புருஷனுக்கு சேஷத்வஞானத்தி

ளுல்) அபவர்க்கம் (மோக்ஷம்) ஸாதனமாக (உபாயமாக) விளங்குகிறது; परमपुरुष वेदनोपयोगितया - अवगन्तव्यम् ஜீவாத்மா ஸ்வதமாக தானுக (ஸ்வதந்திரமாக) ஸாதனமாக அபவர்க் கத்திற்கு அமையாது. अतोऽत्र परमात्मैवामृतत्व उपायतया பரமாத் மாவே உபாயமாக அமைவதால் - द्रष्टव्यः (அவனையே காணத்தகுந்தவன்) என்றும் உபதேசிக்கப்படுகிறது. (அப வர்க்கத்திற்கு ஜீவன் உபாயமாவதில்லை. பரமாத்மாவே உபாயம் உபேயமாகிருன். ஜீவாத்மாவின் ஸ்வரூபம் சேஷத்வமே. உபாஸனமே உபாயம்).

அவ்விதமே अस्य (तस्य हवा एतस्य) महतो भूतस्य निश्वसितमेतत् यदृग्वेदः - எது இந்த ருக்வேதமாக விருக்கிறதோ அது மஹா பூதத்தின் மூச்சுக் காற்ருகும் என்பதால் இந்த ஸம்பூர்ண ஜகத்தின் காரணத்வம் சொல்லப்படுவதால் புருஷோத்த மனைத் தவிர வேருன ஜீவன் கர்மபரவஸ்யன் கர்மத்திற்கு வசப்பட்டவன்; முக்தனுக்கோ ஜகத் வியாபாரம் வர்ஜம் என்று சுருதி ஓதுவதாலும், கேவலம் புருஷன் மாத்திரம் யாதொரு சேஷ்டிதமும் அவனுக்கு யேற்படுவதில்லை. (சாங் கியன் சொல்கிறபடி யேற்படுவதில்லை.) அவ்விதமே பிரு.உ. 4-4-5 आत्मनो वा अरे दर्शनेन ஜீவ ஆத்மாவைப் பார்ப்பதாலே ஏக விக்ஞானத்திஞல் ஸர்வ விக்ஞானம் யேற்படுகிறது என்று சொல்லமுடியாது) எப்போது யேற்படும்? ஸர்வாத்ம பூதனுக விருக்கும் பரமாத்மாவை அறிவதாலே தான் ஏற்படக்கூடும்.

(இங்கு சொல்லப்படுவது ஜீவனின் தன்மை ஆராயப் படுகிறது. அவன் பத்தனுகவோ அல்லது முக்தனுகவோ விருக்க வேண்டும். அல்லது சாங்கியன் சொல்கிறபடி பிர தானத்தின் சேஷ்டிதமும் இல்லாமல் போக்தாவாக விருக்க வேண்டும். அத்தகைய புருஷன் ஜகத்காரணமாகாது.)

இதுவரை என்ன சொல்லப்பட்டது என்ருல், ஜீவாத் மாவுக்கு ஏகருபத்வம் விருப்பதால், ஏகவிக்ஞானத்திஞல் ஸர்வாத்ம விக்ஞானம் யேற்படுகிறது. என்கிற வாதமும் அயுக்தம் (சரியில்லை), ஏனெனில் அசேதன பிரபஞ்ச ஞான

பார்வத்திஞல் ஸர்வ விக்ஞானம் யேற்படாது (இங்கு சொல்லப்படுவது முதலில் ஜீவனின் நிஜஸ்வரூபத்தை மாத்திரம் அறிவதால் ஸர்வ விக்ஞானம் யேற்படாது; அதுமாதிரி அசேதன வஸ்துக்களின் ஞானத்திஞலும், ஸர்வ வஸ்துக்களின் விக்ஞானமும் யேற்படாது. இங்கே பிரதிக்ஞை ஏக விக்ஞானத்திஞல் ஸர்வவிக்ஞானம் யேற்படக்கூடும். பரமாத்மாவை அறிவதஞலே அதை நிரூபிக்க इदं ब्रह्मेदं क्षत्रम् என்று உபகிரமித்து (இது பிரும்ம ஜாதி இது க்ஷத்திரிய ஜாதி) என ஆரம்பித்து-इदं सर्वं यदयमात्मा-இங்கே இதெல்லாம் இருக்கிறதோ அது இந்த ஆத்மாவாகும். (பிரு உ 2-4-6 & 4-6-7) இதில் इदं என்கிற பதம் (இது இந்த பிரபஞ்சம் ஜகத்) பிரத்யக்ஷாதி ஸித்த சித் அசித் வஸ்துக்களின் மிஸ்ரமாக விருக்கிறது.

மேலும் புருஷன் அசித் வஸ்துக்களின் சேர்க்கையுள்ளவன், அந்த பிரதானமாகிற அசித் வஸ்துவின் பிடியிலிருந்து விடுபட்டவன் முக்த புருஷன் தன் நிஜஸ்வரூபத்தை அடைகிறன். அத்தகைய ஜீவனுடன் ஜகத் ஸாம்யத்தையோ ஐக்யத்தையே அடையாது. (அதாவது ஜகத் (சித் அசித் வஸ்துக்கள் அடங்கிய ஜகத்தும்) பிரும்மமும் ஐக்யமாகலாம் கேவலம்சித்திஞல் மாத்திரமல்ல). एतत् अयमात्मा (இதில் एतत् பாஷ்யக்காரரின் சொந்த வார்த்தையாகும்). ஆகையிஞல் த்தான் सर्वं तं परादात् योऽन्यत्राऽऽत्मनः सर्वं वेद என்று வியதிரக்தத்தால் பகவானே விட்டு ஸ்வதந்திரமான எந்த ஸர்வ வேதனமும் நிந்திக்கப்படுகிறது. (இந்தக் காரணத்திஞல் அதாவது பிரும்மம் எல்லாப் பொருள்களுக்கும் (சித் அசித் வஸ்துக்களுக்கு) ஆத்மாவாக விருப்பதால் எல்லாம் பிரும்மாத்மகவாக விருக்கிறது.

(அவ்விதம் பிரும்மாத்மகம் என்று ஒப்புக் கொள்ளாவிடில் ஸம்சாரத்திலேயே அழுந்திக் கிடக்கவேண்டியது தான் மோக்ஷம் யேற்படாது) இது வ்யதிரிக்தம், சாங்கியனின் பக்ஷத்தைவிட வேறுனது என்று அர்த்தம். சாங்கியனுக்கு புருஷனுடைய ஸ்வரூபம் ஒரே மாதிரி ஞானஸ்வ

ரூபமே அதனல் தேவ மனுஷ்யாதிகளுக்கு வெவ்வேருன தேகங்கள் இருப்பினும் எல்லாம் ஞானஸவரூபமே இது சரியாக விருப்பினும் ராமானுஜருக்கு இது இந்த விடத்தில் சொல்லபடவில்லை என்கிருர்).

ஆகவே பரமாத்மாவைவிட்டு எவ்விதமான ஸ்வதந்திர மான ஜீவனைப் பற்றிய ஞானமோ அதே போல அசேதனத் தைப் பற்றிய ஞானமோ, எல்லாம் நிஷித்தமேயாகும். இது இந்த சுருதியில் சொல்லப்படுகிறது अत एव सर्वं तं परादात् योऽन्यत्रात्मनः सर्वं वेद என்று வ்யதிரேகத்திஞல் (முந்தினபாராவில் எல்லாம் பரமாத்மா பரம் என்று அந்வயமாதிரி சொல்லியது போல இங்கே) மற்ற எல்லாப் பொருள்களின் ஞானம் நிந்திக்கப்படுகிறது. न हि इदं शब्दवाच्यम् இங்கே இந்த முதல் மைத்ரேயி பிராம்மணத்திலே (பிரு. உ. 11-4) பகவா னுடைய மஹத்வம் (பிருஹத்வம் மிகப்பெரியது என்கிற கல்யாணகுணம்) महद्भूतमनन्तमपारम् பரமாத்மா மஹத்தான வர் (மிகமிகப் பெரியவர் அனந்தம் அபாரம் (ஆழமுள்ள தாயும் அளவிடப்பட முடியாத மகிமை பெற்றவர்); என்ப தால் பரமாத்மாவே இங்கு இந்த வாக்ய பிரஹரணத்திலே சொல்லப்படுகிறர் என்கிற கருத்தாகும். ஆகையால் ஜீவனே பிரதானமோ இங்கு சொல்லப்படவில்லை என்ப தாகும்.

என்ன சொல்லப்பட்டதென்ருல், பதி ஜாயா (மனைவி) புத்ரன், வித்தம் (பணம்) பசுக்கள் ஆகிய பதினன்கு ஈஷணைகள் (ஆசைகள்) மைத்ரேயியாக்ஞயவல்கிய ஸம் வாதத்திலே முதலில் ஒதப்படுகின்றனவோ பிரியமா கின்றனவோ அவை பற்றிய ஞானமே அந்வேஷ்டவ்ய: (அந்த ஞானமே சிரமபட்டு அடையப்பட வேண்டியதாகும்) (அதாவது ஜீவாத்மாவைப்பற்றிய ஞானம் இருந்தால் போதாது பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் முள்ள சம்பந்த ஞானமே அறியப்பட வேண்டியது)

(விளக்கம்:—ஒரு வஸ்து ஒரு சமயத்தில் பிரியமா வதும் இன்னெரு சமயத்தில் பிரியமில்லாமல் போவது

மிருப்பதால் ஒரு வஸ்துவே சுகதுக்கத்திற்குக் காரணமல்ல. அதேபடி ஜீவன்தன் மனைவியிடமோ புத்ரனிடமோ பிரிய மாவதற்கு அந்த அந்த ஜீவனின் கர்மபலனாகும். இதை பகவான் பலப்ரதனாக எல்லா கர்மங்களுக்கும் பலன் அளிப் பதால் பகவத் சங்கல்பமே காரணமாகும்.

**कर्मानुसारादितिवक्तव्यम् कर्म च परमात्मसंकल्प एव । एवं परमात्मन: संकल्पवशात् सर्वं प्रियं भवतीति कर्मानुगुणाऽल्पास्थिर प्रियत्वार्हं सर्वं विहायानल्पस्थिरं प्रियमेवादर्तव्यम् । तच्च तदेतत् प्रेयपुत्रात् प्रेयो वित्तात् प्रेयोऽस्मात् सर्वं स्यात् - इति श्रुतं ब्रह्मैकमेवेति भवति**

(உத்தமூர்ஸ்வாமி). பகவானுக்கு எதனால் எவன்பிரிய தமனாக ஆகிறானோ அந்த பரமாத்மாவின் தர்சனம்தான் அந்த விஷயமே அறியத்தக்கதாகும். அதற்கு உபாய சிந்தனை செய்ய வேண்டியது पत्यादिप्रियत्वमपि हि तत्समाराधनफलमेव.

(ஆகவே பகவத் உபாஸனையே உபாயமும் அதனால் பகவானே உபாய உபேய பூதனாகிறான். பிராபகம் பிராப்தி இவைகளே द्रष्टव्यम् சேஷத்வபுத்தியும் ஸர்வத்துக்கும் பகவத் நியந்திருத்வமும் பகவானுடைய கல்யாண குணங்களும் தாஸ்ய பக்தியும் அறியப்பட வேண்டிய, அடையப்பட வேண்டிய புருஷார்த்தமாகும்). இங்கே ஆத்மா என்கிற சப்தத்தாலே பரமாத்மா சொல்லப்படுகிறான். ஜீவாத்மா அல்ல. நிருபாதிக பிரியத்வம் பகவானிடம் தான் யேற்பட வேண்டியது. அவனைவிட்டு மற்ற எந்த ஞானமும் பிரயோ சனமில்லை. அபுருஷார்த்தமாகும். ஆகவே परमात्मा एव द्रष्टव्यो मन्तव्यो श्रोतव्यो इति विवक्षितार्थः என்பதாகும்).

ஆகவே வாக்ய உபக்ரமத்திலே ஜீவாத்மா தான் என்று சொல்ல படுகிறான் அதனால் அவனே வாக்ய பிரகரண விஷயமாகிறான் என்று சொல்வது அயுக்தம். आत्मनस्तु कामाय ஆத்மாவின் விருப்பத்தினாலே (எல்லா பதார்த்தங்களும் ஒருவனுக்குப் பிரியமாகின்றன)—இங்கே ஆத்ம சப்தத்

தாலே ஜீவாத்மா சொல்லப்படுகிறான் என்று கொள்வதால் आत्मा वा अरे द्रष्टव्यः (ஆத்மாவே தேடப்பட வேண்டியது) என்பதாகும். आत्मनस्तु कामाय ஆத்மாவின் இஷ்டத்தினாலே விருப்பத்தினாலே என்பதற்கு அர்த்தம் பரமாத்மாவின் இஷ்டத்தினாலே அவனுடைய ஸங்கல்பத்தினாலே அதாவது (பகவானுடைய) ஆத்மாவினுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்க்காக எல்லா வஸ்துக்களும் பிரியமாகின்றன. काम्यत इति कामः—விரும்பப்படுவதாலே காமம்.

**आत्मान इष्टसंपत्तय इति; न च जीवात्मन इष्टसंपत्तये पत्यादियः प्रिया भवन्ति तस्मादपत्यादिप्रियं परित्यज्य तत्वियुक्तमात्मस्वरूपमन्वेष्टव्यमित्यसङ्गतं भवति—**

மேலும் இவ்விதம் சொல்லப்படுமாகில், கணவன் முதலிய ஈக்ஷணங்கள் ஜீவாத்மாவின் இஷ்டத்தினாலே (விருப்பத்தினாலே) பிரியமாகிறது என்று சொல்லப்படுமாகில், அந்த ஜீவனின் ஸ்வரூபம் தேடப்படவேண்டியது என்பதாகும். பிரியமே தான் தேடப்படவேண்டிய விஷயமாகும். எது பிரியமாக விருக்கிறதோ அதுவே தேடத்தகுந்ததாகும். ஆனால் இந்த பிரியம் முக்யமான வஸ்துவின் ஸ்வரூபம் (ஸ்வபாவம்) எதுவோ (அந்த ஜீவனின் விஷயத்திலே) அது தேடப்படாதபடி ஆகிவிடும், வஸ்து அமுக்யத்தையடையும். பிரியமான வஸ்து இல்லாவிடில் பிரியமும் இல்லாமல் போய்விடும். வஸ்துவின் ஸ்வரூபமும் அறியப்படாமல் போய்விடும். பிரியம் ஒவ்வொருத்தனுக்கும் எப்போது ஏற்படும், வஸ்துவின் ஸ்வரூபம் அறியப்பட்டால். ஆகவே ஏதாவது ஒருகாரணத்தினாலோ கணவன் முதலியோர் ஜீவனுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதற்க்காக பிரியமாகிறான். அதே காரணத்தினாலே கணவனை விடுவதோ பதிதியாகமோ அது போல மற்ற பிரிய வஸ்துக்களையும் விட்டுவிடுவதோ அந்த ஜீவனின் நிஜஸ்வரூபம் எப்போது அந்த வஸ்துக்கள் அவனை விட்டுப் பிரியமாகின்றதோ தேடப்படவேண்டியது ஆகும் என்று ஆவதால் இதுவும் அயுக்தம் (சரியானதல்ல) तद्युक्त-

मात्मस्वरूपं अन्वेष्टव्यं इति असङ्गतं भवति । प्रस्तुत ஆனால் இதற்கு எதிராக நாம் சொல்வது, கணவனுடைய பிரியம் (தன்மனைவியிடமுள்ள அன்பு) கணவனுக்கு அடங்கி நடப்பதால் அல்ல; ஆனால் கணவனிடம் யேற்பட்டுள்ள பிரியம் கணவனாகிற ஆத்மஞ் என்கிற ஆத்மசப்தத்திற்கு அடங்கி நடப்பதாலே எற்படுவதாகும்; அப்போது கணவன், மனைவி இத்யாதி வஸ்துக்களே அந்த ஆத்மாக்களுக்கு அடங்கினதாக ஒத்துக் கொள்ளப்பட வேண்டியது (எல்லா வஸ்துக்களையும் பரிதியாகம் செய்து ஜீவாத்மாவை - தேடவேண்டியது காணத்தகுந்தது என்பது முரண்பாடாகும் - சுருத பிரகாஸிகை) இந்த வாக்யத்திற்கும், அடுத்துவரும் வாக்யத்திற்கும் சரியான சம்பந்தம் யேற்படாது போனால், आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति ஆத்மாவின் (ஜீவனின்) இஷ்டத்தால் பிரியமாகின்றன, அதற்கும் அடுத்துவரும் வாக்யம் आत्मा द्रष्टव्यः என்பதற்கும் முரண்யேற்படாமலிருக்க, இந்த சுருதியையே பிரித்து அர்த்தம் சொல்ல வேண்டியது. அவ்விதம் வாக்யங்களைப் பிரித்து இங்கு அர்த்தம் சொல்லவேண்டுமானால், முந்தின வாக்யத்தினால் யாதொரு பிரயோனம் உண்டு என்று காணப்படவில்லை. ஆகவே, எந்த விதத்திலும் சரி ஜீவாத்மாவே தேடப்படவேண்டியது என்றால் அதாவது கணவன் இத்யாதிகளிலுள்ள பிரியத்தை விட்டுவிட்டு ஜீவாத்மாவின் ஸ்வரூபமே தேடப்படவேண்டியது என்றால், அது இந்த மாதிரி சுருதிக்கு நாம் சொல்வதால் யேற்படக் கூடும்.

அந்த சுருதிக்கு இம்மாதிரி அர்த்தம் சொல்ல வேண்டியது - பத்யாதி ஸர்வ வஸ்துக்களுக்குமுள்ள பிரியத்தைப் பரிதியாசம் செய்துவிட்டு ஆத்மாவாகிற ஜீவாத்மாவையே அன்வேஷ்டவ்யம் எப்படி யேற்படுகிறதோ அவ்விதமே வாக்யார்த்தம் சொல்ல வேண்டியது. அதாவது अमृतत्वस्य तु नाशास्ति वित्तेन பணத்தினால் அம்ருதத்வம் அடையப்படமாட்டாது என்று பணம் முதலியவைகளுக்கும் ஒரு நித்யமான ஸ்வபாவம், நிர்தோஷ, நிரதிசய ஆனந்தருப அம்ருதத்வத்தின் பிராப்தி அடையப்படுகிறது என்று சொல்லி,

वित्तपुत्र पतिजायादीनां सादिशयदुःखमिश्रकादाचित्कप्रित्वमनुभूयमानं न पत्यदिस्वरूपप्रयुक्तं, अपि तु निरतिशयानन्दस्वभावपरमात्मप्रयुक्तम् । अतो य एव स्वयं निरतिशयानन्दस्सन् अन्येषामपि प्रियत्वलेशास्पदत्वमापादयति, स परमात्मैव द्रष्टव्यः ।

என்று உபதேசிக்கப்படுகிறது. மேலும் சொல்லப்படுகிறது பணம், புத்ரன், கணவன், மனைவி முதலியவற்றின் பிரியம் ஙிரதிசயமாகவும், துக்கமிஸ்ரமாயும், அது அநித்யமாயும் விருக்கிறபடியால் இந்த பிரியம் அந்த அந்த வஸ்துக்களின் (அதாவது கணவன், மனைவி, பணம் இத்யாதி) ஸ்வரூபத்தினுல் யேற்பட்டது அல்ல; அது ஙிரதிசய ஆனந்தத்தை தன் ஸ்வரூபமாகக் கொண்ட பரமாத்மாவினுல் யேற்படுகிறது. ஆகையால் இந்த வாக்யபிரகரணத்திலே உபதேசிக்கப்படுகிறது—யாராவது விருந்தாலும் அவனுக்கு இம் மாதிரியான ஙிரதிசய ஆனந்தம் ஙிருபாதிகமாகவே ஸ்வரூபமாக விருக்கிறதோ அவனே மற்றவர்களுக்கும் ஆனந்தத்தை உண்டாக்குகிருன். அவன் ஒரு அவஸ்தையை அதில் ஒரு திவலை (லவலேசமான) பிரியத்தை உடைய இடத்தை (ஆஸ்ரயத்தை) உண்டாக்குகிருன், அந்த பரமாத்மாவே ஙேராகக் காணத்தகுந்தவன் என்று தேறுகிறது.

இதற்கு அர்த்தம் இதுதான் - न वा अरे पत्युः कामाय पतिः प्रियो भवति - கணவன் தன் மனைவியிடம் பிரியமாக விருக்கிருன். அது கணவனின் (காமத்தினுல் - இஷ்டத்தினுல்) யேற்படுவதல்ல (பிரு. உ. 11-4-5 & 4-5-6) வாஸ்தவமாக கணவன் மனைவி புத்ரன் பணம் முதலியவை அவைகளின் இஷ்டப் பிரகாரம் ஒருவனுக்குப் பிரியமாவதில்லை. அதாவது न वा अरे पत्युः कामाय पतिः प्रियोभवति - நான் இந்த (அல்லது அந்த வஸ்துவுக்கு என் சொந்த நன்மைக்காகப் (மத்ப்ரோயோஜன நாய) தன் சொந்த ஸங்கல்பத்தால் பிரியமாகிறேன் என்பதில்லை. ஆனுல் अपित्वात्मनः कामाय அவை ஒருவனுக்குப் பிரியமாகின்றன பரமாத்மாவின் சங்கல்பத்தாலே என்று அர்த்தம், அதாவது பரமாத்மா இஷ்டப்படு

கிருன்; அவனுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதற்க்காக அதாவது பரமாத்மா தன்னை ஆராதிக்கும் உபாஸகனை அனுக்ரஹிக்க அவரவர்களுக்கு இஷ்டமான (பிரியமான) பலனை அளிக்கிருன்.

(இங்கே "காம" என்கிற பதத்திற்கு பகவத் ஸங்கல்பம் என அர்த்தம் ஆனுல் சாங்கியனின் பக்ஷத்திலே இஷ்டம் (ஈக்ஷணை) (சுகாதிஸம்பத்துக்கள்) என்று அர்த்தம் கொண்டு அவைகளை ஜீவன் விரும்புகிருன், அதனுல் அவை அவனுக்கு பிரியமாகின்றன. ஆனுல் வேதாந்தியாகிற நாம் சொல்வது பகவத் சங்கல்பத்தால் அந்த வஸ்து அவனுக்குப் பிரியமாகிறது. பகவத்சங்கல்பம் அந்த அந்த ஜீவனின் பாபபுண்ய கர்மாக்களை நம்பியது).

வாஸ்தவத்திலே, பரமாத்மா வைதிக கர்மாக்களால் ஆராதிக்கப்படுவதால், அந்த அந்த கர்மாக்களுக்கு அனுகுணமாக இந்த சுப பலன்களை அந்த அந்த வஸ்துவினுல் அவர்களுக்கு அனுக்ரஹிக்கிருன். (எவ்விதமெனில்) தேச கால ஸ்வரூப், பரிமாண (எத்தனை ஆழமுள்ள பிரியம் என்பதைப் போல); இம்மாதிரி சுருதி ஓதுகிறது एष ह्येवा-ऽऽनन्दयाति பரமாத்மாதான் ஆனந்தத்தை உண்டு பண்ணுகிருன் அளிக்கிருன். (தை. 2-11-7); ஆகவே எந்த ஒரு வஸ்துவும் தன் ஸ்வரூபத்தினுலே ஒருவனுக்கு பிரியமோ அப்ரியமோ ஆவதில்லை. இம்மாதிரியே சுருதி சொல்கிறது (வி. பு. உ. 6-46-47)

तदेव प्रीतये भूत्वा पुनः दुःखाय जायते। तदेव कोपाय यतः प्रसादाय च जायते। तस्माद् दुःखात्मकं नास्ति न च किञ्चित् सुखात्मकम्

ஒரே வஸ்து ஒரு சமயம் சுகத்தையும் இன்னொரு சமயத்தில் துக்கத்தை அளிக்கிறது. ஏனெனில் ஒரே வஸ்து கோபத்தை ஒரு சமயத்திலும் சாந்தத்தை இன்னொரு சமயத்திலும் உண்டாக்குகிறது. ஆகையால் ஒரு வஸ்துவும் சுகாத்மகம் என்று சொல்லும்படி சுகத்தை உண்டாக்குகிறது என்று சொல்வதற்க்கில்லை. (அதுமாதிரி துக்கம்)

आत्मनस्तुकामाय ஆத்மாவின் விருப்பத்திற்காக, இது ஜீவாத்மாவின் பரமாக (விஷயத்தைப் பேசியதாக) விருந்தாலும் आत्मा वा अरे द्रष्टव्य: ஆத்மாவே காணத்தகுந்தது என்பது பரமாத்மாவே காணத்தகுந்து என்பது பரமாத்மா விஷயமே பொருத்தமாகும். அங்கே அர்த்தம் இதுதான் எதனுலே பதி, மனைவி முதலியவர்களின் இஷ்டம் நிறைவேறுவதற்குக்காக, அவர்களின் இஷ்டப்படி வசமாவதால் (அவர்களுக்கு இஷ்டம் செய்வதால்) பதி முதலியவர்கள் பிரியமுள்ளவர்களாக ஆவதில்லையோ, ஆயினும் ஆத்மாவின் இஷ்டத்தைப் பூர்த்தி (ஜீவாத்மாவின்) அபிலாஷங்களை பூர்த்தி செய்வதாக ஸ்வதந்திரமாக ஒப்புக் கொள்ளப்படுகிருர்கள். ஆகையால் எந்த பரமாத்மாவே ஆத்மாவுக்கு (ஜீவாத்மாவுக்கு) நிருபாதிகமாக, (தங்கு தடையின்றி) நிர்தோஷ, நிரவதிக பிரியமாக விருக்கிருனே, அவனே (அந்த பரமாத்மாவே) காணத்தகுந்தவன் துக்கமிஸ்ர அல்பசுக துக்க சம்பந்தம் கொண்டவனும், பரமாத்மாவை எதற்கும் நம்பி வாழ்பவனுமான ஜீவனல்ல அந்த ஜீவாத்மாவுக்கு சுகதுக்கங்களுக்கு விஷயமாகிற பதி மனைவி புத்ராதிகள் பணம் முதலியவை ஆவதல்ல என்பதாகும்.

(இங்கே आत्मनस्तु कामाय என்கிற வாக்யமும் आत्मा वा अरे द्रष्टव्य: ஐக்கண்ட்யம் சொல்லப்பட வேண்டும். பத்யாதி சப்தங்கள் கணவன் மனைவி புத்ரன் பணம் ஆகிய விஷயங்களைக் குறிக்கும்; அத்துடன் ஸம்பந்தப்பட்ட ஜீவாத்மா விஷயமாகவிருக்கும். அதனுல் ஆத்ம சப்தம் பொருத்தமாகும் ஜீவனுக்கு; அதனுல் आत्मनस्तु कामाय என்பது சரியாகும். (சாங்கியன்); ஆனுல் இங்கே ஆத்மா காணத்தகுந்தது என்று आत्मा वा अरे द्रष्टव्य: என்பதால் புருஷார்த்தம் சொல்லப்படுகிறது. பிரத்யகாத்மா (ஜீவன்) புருஷார்த்தமாகாது. அவன் சம்சாரத்தில் துக்கமிஸ்ர சுகத்தை அனுபவிப்பவன் பரமாத்மாவை எதற்கும் நம்பினவன். ஆத்மசப்தார்த்தம் ஐக்யகண்டம் சொல்ல வேண்டுமானுல், நிரதிசய புருஷார்த்தத்தை அடைய ஜீவன் பத்யாதி ஆசைகளை விட்டு பரிதி

யாகம் செய்து தானே ஸ்வயமாக அதிசய புருஷார்த்தமாக விருக்கும் பரமாத்மாவை ஆராதிக்கிறுன் அவனே அந்தர் யாமியாக விருந்து ஜீவனைத் தனது ஸ்வ (தன்னுடைய) ஆத்மக புருஷார்த்தத்தை அடைவதற்கு ஜீவனைத் தூண்டு கிறுன். பக்தி பிரபத்தி உபாஸன மார்க்கங்களில் அவனே பிரேரணை செய்கிறுன். ஆகவே உபக்ரமத்தில் ஆத்மசப்தம் ஜீவாத்மாபரமாகச் சொல்லி பிறகு பரமாத்மா விஷயமாக ஆத்மசப்தம் (காணத்தகுந்தது இத்யாதிகளால்) நிர்வஹிக் கப்படுகிறது. அதனாலே இந்த பிரகரணத்திலேயோ வெனில் (अस्मिंस्तु प्रकरणे इति) என்று ஓதப்படுகிறது.

एवं वा अरे अयमात्मा இங்கே ஆத்ம சப்தத்திருல் விக்ஞான கன சப்தம், பிரக்ஞான கன சப்தம் என்று மேல் சொல்லப் பட்ட வாக்யங்களில் நிருபணம். आत्मनस्तु कामाय இங்கே கூட ஜீவாத்மாவையும்விட்டு, பரமாத்மா விஷயமாகவே சொல்வதும் யுக்தம், அர்த்த பௌஷ்கல்யம் இருக்கிறது. ஆத்ம சப்தம் ஆத்மாவாகிற (ஜீவ) விசிஷ்ட பரமாத்மா வென்று அர்த்தம் சொல்வதால் பரமாத்மா இஷ்டப்படு கிறுன். அவன் இஷ்டப்படாவிடில் பரித்யாகம் ஏற்படு வது அஸம்பவம். (அவன் அந்தர்யாமியாக விருப்பதால் இவ்விதம் நிர்வஹிப்பதால் உபக்ரம உபஸம்ஹாரத்திலே பொருத்தமாகும் (உத்தமூர்ஸ்வாமி)

இந்த பிரகரணத்திலே ஜீவாத்மாவாசி சப்தங்களால், பர மாத்மாவையே குறிக்கும்படிநிரவஹிப்பது. आत्मनस्तु कामाय; आत्मा वा अरे द्रष्टव्यः என்று உபக்ரம உபஸம்ஹார பிரகிரியை யினுல் இரண்டு இடங்களிலும் ஆத்ம சப்தம் பரமாத்மா விஷயமாகவே ஏக விஷயமாகச் சொல்லக் கூடும் (அதாவது பரமாத்மாவே ஜீவவாசி சப்தத்தினுல் குறிக்கப்படுகிறுன் ஆகையால் आत्मनस्तु कामाय என்பதிலும் आत्मा वा अरे द्रष्टव्यः என்பதிலும் இரண்டு ஆத்மந் ஆத்மா இரண்டும் மேல் காட்டியபடி ஒரே விஷயமான பரமாத்மாவைக் குறிக்கும்).

(இங்கே ராமானுஜர் முதலில் சொல்கிறுர், பதிஜாயா வித்தம் இத்யாதி ஜீவனுக்குப் பிரியமாகின்றன. ஜீவன்

விரும்புவதால்; ஜீவனுக்கு விருப்பு வெறுப்பு யேற்படு வதற்கு ஸ்வதந்திரமுண்டு. இதனால் ஆத்மாவின் நிஜஸ்வ ரூபம் ஆனந்தம் கொடுப்பதால் ஆனந்த மடைகிறான். அதனாலே பரமாத்மாவே ஆனந்தத்தைக் கொடுப்பதால் ஜீவனுக்குப் பிரியமாகிறான் என்பதாகும்.)

விக்ஞான கன, பிரக்ஞான கன இவைகளில் ஆத்மந் சப்தம் பிரயோகம் ஜீவனைக் குறிக்கும். அதனால் ஆத்மா விற்கு ஜீவனைச் சொல்வதால் சரியாகும். இந்த விதமாக நிர்வஹிப்பதற்கு பரிகாரம் அடுத்த ஸூத்ரத்தில் சொல்லப் படுகிறது. மூன்று கருத்துக்கள் அடங்கிய மூன்று மதாந் தரங்கள் சொல்லப்படுகின்றன; அவைகளின் உதவியினால் பரமாத்மாவே आत्म சப்தத்தால் சொல்லப்படுகிறான் என்ப தாகும்).

ஸூத்ரக்காரர் இன்னும் இரண்டு ஸூத்ரங்களை சொல்லி தன் பக்ஷத்திற்கும் மற்ற இதர பக்ஷங்களுக்கும் கருத்தாக பரமாத்மாவே ஜீவாத்ம சப்தத்தினால் சொல்லப்படுகிறான். எங்கு எங்கு ஜீவபதம் வருகிறதோ அங்கு பரமாத்மாவே சொல்லப்பட வேண்டியதாகும்.)

ஸூத்ரம் प्रतिज्ञासिद्धेर्लिङ्गमाश्मरथ्य: (1-4-20)

பிரதிக்ஞாஸித்தேர் லிங்கமாஸ்மரத்ய: (1-4-20)

பிரதிக்ஞாவிஷயம் ஏகவிக்ஞானத்தினால், ஒன்றை அறி வதால் எல்லா பதார்த்தங்களும் அறியப்பட்டதாகும். இது பற்றிய பிரதிக்ஞை விஷயமாகும். ஜீவனைச் சொல்லும் சப்தங்களாலேயே பரமாத்மாவை இப்பிரகரணத்தில் சொல்லுவது பிரதிக்ஞாஸித்தே: பரம்பொருள் ஒன்றை அறிந்தால், எல்லாம் அறிந்ததாகும் என்கிற பிரதிக்ஞை சித்திப்பதற்கு லிங்கம் அடையாளமாகும் என்று ஆஸ்மரத் யர் என்கிறவர் கூறினார். आत्मनि खल्वरे दृष्टे श्रुते मते विज्ञाते इद सर्वं विदितम् என்கிற வாக்ய ரூபத்தின் விஷயம்).

(இதுவரை ராமானுஜர் எல்லா எதிர்வாதங்களுக்கும் பதில் சொல்லி இப்போது பிரு. உ. 2-4-12 & 4-5-13ல் உள்ள

விக்ஞானகன பிரக்ஞானகன என்கிற பதங்களை விவரிக்கப் புகுகிறார். இங்கேயும் ஆத்மந் சப்தமே விளக்கத்திற்கு எடுக் கட்படுகிறது இன்னும் இரண்டு சூத்ரங்களிலும்; அதாவது ஜீவாத்மா வாசிசப்தங்கள் பரமாத்மாவைக் குறிக்கும் என்று சொல்லி அதன் காரணத்தை இரண்டு மதஸ்தர்கள் இரண்டு விதமாகக் கூறுவதை இந்த சூத்ரத்தாலும் அடுத்த ஸூத்ரத் திலும் உரைத்து மூன்றாவது சூத்திரத்தில் பாதராயணர் தமது ஸித்தாந்தத்தைக் கூற அதற்கு அடுத்தாற் போல இன்னும் ஒரு சூத்ரமில்லாதபடியாலே அதுவே பரம ஸித்தாந்தமாகும்.

ஆஸ்மரத்யரின் அபிப்ராயத்தை யாதவபிரகாசர் எடுத்துக் கொண்டும் அதற்கடுத்தாற்போல வரும் ஔட லோமியின் அபிப்ராயத்தை பாஸ்கர பக்ஷத்தினரும் சங்கர ரும் ஆதரிக்க; இதனால் உபாதி ஸத்யம் என்றும், உபாதி மித்யை என்றும் இரு வகை பக்ஷத்தினர்களும் எடுத்துக் கொள்ள, ராமானுஜர் மூன்றாவது அபிப்ராயம் கொண்ட காசு கிருத்ஸர் அபிப்ராயத்தை ஆதரித்து அதுவே சூத்ரக் காரருக்கும், (தமக்கும்) சம்மதம் என்று முடிக்கிறார். இங்கு ஜீவனானவன் பிரும்மத்தின் காரியமாகவேயிருப்பவன் அத னாலேயே பிரும்மத்தை அறிவதால், ஜீவனையும் அறிந்ததாக ஆகிறது ஜீவன் பிரும்மத்தினிடமே உண்டாகி காப்பாற்றப் பட்டு பிரும்மத்தினிடமே லயமடைகிறான் என்றும் வேத வாக்யங்களால் கூறப்பட்டதை தெரிவதால், இருவரும் ஒன்று என விளங்குகிறது. ஆகையால் ஏக விக்ஞானமா கிற பிரும்மத்தை அறிந்தால் அதன் காரியமாகிற எல்லாம் அறிந்ததாகும் என்பதாம். ஆத்மாவானது காணவும் கேட்கவும் நினைக்கவும் அறியவும்பட்டதாகில் இது எல்லாம் அறியப்பட்டதாகிறது. आत्मनि खल्वरे दृष्टे श्रुते मते विज्ञाते इदं सर्वं विदितम् ஏக விக்ஞான (பரமாத்மாவை அறிவதால்) ஸர்வ விக்ஞான விஷயமாகும். இந்த ஐக்யகண்டம் காரியகாரண பாவமூலம் ஐக்யம் ஏற்படுகிறதா இல்லையா? இங்கே பிர திக்ஞையும் ஸித்திக்கிறதில்லை, ஏனெனில் ஜீவ பரமாத்மாக் களுக்கு இடையே பேதமிருப்பதாலே என்கிற சங்கை எழ

இந்த சந்தேகம் போக்கப்படுகிறது. ஜீவ பிருஹ்ம ஐக்யம் ஸமானுதி கரணத்தினுல் நிர்தேசிக்கப்பட்டு இது அனுமானத்தினுலுமா என்கிற சந்தேகமும் பரிஹறிக்கப்பட்டு, காட்டப்பட்ட (நிர்தேசரூபம்) इदं இந்த காரணகாரிய ஐக்யம் லிங்கத்தினுலும் ஸித்திக்கிறது; என்கிற அர்த்தமாகும். பிரதிக்ஞையும் பூர்த்தியாகிறது எங்கனமெனில்

**येन कार्यकारणभाव मूलकैक्येन, प्रतिज्ञया वा सिद्धिः अवगमो यस्य तादृशैक्यस्य तस्येदमभिधानं साधकमित्यर्योपि भवितु मर्हति ।**

**ஸ்ரீபாஷ்யம்:**—ஏக விக்ஞானத்தினுல் ஸர்வ வஸ்துக்களின் விக்ஞானம் அடையப்படுவதால் பிரதிக்ஞை பூர்த்தியாகிறது, என்கிறபடி இந்த லிங்கம் (அடையாளம்) எந்த ஜீவாத்ம வாசி சப்தங்களால் பரமாத்மாவே சொல்லப்படுகிறுர் என்று ஆஸ்மரத்யர் என்கிற ஆசார்யர் எண்ணுகிறுர். இந்த ஜீவன் பரமாத்மாவினுல் உண்டாக்கப்படுவதால் அவனுடைய கார்யமாகிறுன். அவ்விதமின்றி அந்த ஜீவாத்மா அவனே பரமாத்மாவாகுமானுல் எனெனில் காரியம் பரமாத்மாவினிடமிருந்து வேருக விருப்பதாலே, அத்தகைய வேறுபட்ட ஜீவாத்மாவின் ஞானம் ஏற்படாது. பரமாத்மாவை அறிவதாலே (அந்வய) வ்யதிரேகத்தால் பரமாத்மாவை அறிவதாலே ஜீவாத்மாவின் விக்ஞானம் யேற்படாது. இங்கே இந்த சுருதியிலே ஐத். 2. 1-1-आत्मा वा इदमेक एवाग्र आसीत् ஆத்மா-ஏகமான ஆத்மாவாகவே முதன்முதலில் இருந்தது. (அதாவது இவ்வுலகு ஸ்ருஷ்டிக்கு முன்பு ஆத்மா ஒன்றுகவேயிருந்தது. வேறு வ்யாபரிப்பது ஒன்றுமில்லை.) அந்த ஆத்மா உலகங்களை ஸ்ருஷ்டிக்க எண்ணி, அம்பஸ்ஸு, மரீசி, மரம் அப்பு என்ற லோகங்களை ஸருஷ்டித்து, அம்பஸ் ஸ்வர்க்க லோகம் தொடக்கமாய் மேலுள்ள உலகம். மரீசி, அந்த ரிக்ஷலோகம், மரமாவது பூலோகம், அப்பு, பாதாளம் எனப்படும் கீழே உள்ள லோகம். இதற்குப் பின்பு லோக பாலர்களை இத்யாதி ஸ்ருஷ்டித்தது).

இதனால் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஏகத்வம் (எல்லா வஸ்துக்களும் பரமாத்மாவுடன் சேர்ந்து) ஒன்றாகவே யிருந்தது. இது ஐத்ரேய உபநிஷத் வாக்ய அர்த்தம். மு. உ. 2-1-1-

**यथा सुदीप्तात् पावकाद् विस्पुलिङ्गाः सहस्रशः प्रभवन्ते सरूपाः । तथाऽक्षरात् विविधाः सोम्य, भावाः प्रजायन्ते तत्र चैवापियन्ति -**

(எவ்விதம் நன்றாக கொளுத்தப்பட்ட அக்னியிலிருந்து பொறிகள் ஆயிரக்கணக்காகப் பிறந்து, வெளி வருகின்றதோ, அதுபோல, ஸௌம்ய, பலவகைப்பட்ட வஸ்துக்கள் அக்ஷரமான (பரமாத்மாவிடமிருந்து) உண்டாகி, முடிவில் (நாசத்தின் வேளையில்) அவனிடமே லயமடைகின்றன. இதனால் ஜிவர்களின் உற்பத்தி பரமாத்மாவிடமிருந்து யேற்படுகிறது என்று சொல்லப்பட்டு அந்த ஜீவர்களின் லயமும் பரமாத்மாவிடவே என்று ஒதுவதால், ஜீவர்கள் பிரும்மத்தின் காரியமாகிறார்கள் (உண்டாக்கப்பட்டவர்களாகிறார்கள்). இதனால் ஜீவ பிரும்ம ஐச்யம் காரிய காரண ஐக்யம் பிரும்ம ஜீவ ஐக்யத்தினால் பரமாத்மாவே ஜீவ சப்தத்தால் அறியப்படுகிறார். (இது ஆஸ்மரத்யரின் அபிப்ராயம்).

ஸூத்ரம் — उत्क्रमिष्यत एवंभावादित्यौडुलोमिः (1-4-21)

உத்க்ரமிஷ்யத ஏவம் பாவாதித்யௌடுலோமி: (1-4-21)

ஔடலோமி என்பவர் இவ்விதம் அபிப்ராயப்படுகிறார் உத்க்ரமிஷ்யத சரீரத்திலிருந்து வெளிக்கிளம்பி முக்தி (ஆத்மா) அடையும் போது ஏவம் பாவாத் ஜீவன் பிருஹ்மமாகவே ஆவதால் (ஜீவனைச் சொல்லும் சப்தங்கள் ஜீவவாசி சப்தங்கள்) பரமாத்மாவைச் சொல்லும் இதி என்று ஔடலோமி என்பவர் கூறினார்.

(ஆஸமரத்யர் பக்ஷத்திலே தோஷமிருப்பதாலே, ஔடலோமி வேறு அபிப்ராயம் கொண்டார் (இது அத்வைத பக்ஷமாகும்).

என்ன சொல்லப்பட்டதென்றால், ஜீவன் பரமாத்மாவின் காரியமாதலால், பிரும்மத்துடன் ஐக்யம் என்பதினால், அதாவது பிரும்மத்தை அறிவதாகிற ஏகவிக்ஞானத்தினால், எல்லா வஸ்துக்களும் (ஸர்வ விக்ஞானம்) அறியப்பட்டதாகும். என்று சொல்லுவதால் பிரும்மமே ஜீவசப்தத்தால் பிரதிபாதிக்கப்படுகிறது என்கிற பக்ஷம் (ஆஸ்மரத்யபக்ஷம்) தவறாகும். எங்கனமெனில் கட. 2-18 न जायते म्रियते वा विपश्चित् ஜீவன் பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை (எல்லாம் அறிகிறவனாக) என்பதால் ஜீவனுக்கு பிறப்பு இறப்பு அற்ற அஜத்வம் ஓதப்படுகிறது. (தேகம் தான் நசிக்கிறது ஆத்மா அழிவதில்லை) ஜீவாத்மாக்கள் அவர்களின் முந்தின கர்மபலன்களை அனுபவிப்பதற்கு ஜகத் ஆகிற இந்த உலகம் ஸ்ருஷ்டிக்கப்படுகிறது. ஏனெனில், விஷம ஸ்ருஷ்டி (ஏற்ற தாழ்வுள்ள தேகங்கள்) யேற்படுவதற்கு வேறு காரணமில்லை. (கர்மாக்கள் தான் காரணம்) ஆகவே பிரும்மத்தின் காரியமாகிற ஜீவனுக்கு மோக்ஷம் எனப்படும் முக்தி நிலை பிரும்மத்துடன் (ஒன்றாகுவது பிருஹ்மதாபத்தி லக்ஷணம் மோக்ஷம்) என்பதை விலக்க முடியாது எவ்விதம் ஆகாசாதிகளான பிரும்மத்தின் காரியங்கள் அதுபோல மற்ற காரியங்களும் பிரும்மதாபத்தி அடைவதை விலக்க முடியாதோ அது போலவாகும். இவ்விதமடைவதற்கு உபயோகப்படும் உபாயம், உபாஸனமாகிற அனுஷ்டானம் எல்லாம் அர்த்தமில்லாமல் போய்விடும். மேலும் பிரும்மமாகிற காரணத்துடன் ஐக்யம் — பானை உடைந்து (கடாகாஸம் மடாகாஸமாக ஆவது போல களிமண்ணாகிற காரண நிலையையடைவது (அதாவது மோக்ஷம்) இது அபுருஷார்த்தமாகும் - அந்த அசேதன வஸ்துவுக்கு. ஆகவே சேதனனாகிற ஜீவனுக்கு உற்பத்தி பிரளய காலத்தில் லயமடைவது இந்த விஷயங்கள் பிற்பாடு விரிவாக சொல்லப்படும். ஆகையால் சா. உ. 8-3-4 एष संप्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते (ஸம்பிரஸாதனாகிய ஜீவாத்மா தேகத்திலிருந்து வெளிக்கிளம்பி பரம் ஜ்யோதிஷான பரமாத்மாவை அடைகிறான். அப்போது அவன் தன் ஸ்வ (சொந்தமான) ரூபத்துடன் (स्वेन रूपेण)

பிரகாசிக்கிறான் காட்டப்படுகிறான். முண். உ. 3-2-8

यथा नद्यः स्यन्दमानाः समुद्रे अस्तं गच्छन्ति नामरूपे विहाय ।
तथा विद्वान् नामरूपादिविमुक्तः परात् परं पुरुषमुपैतिदिव्यम्

எவ்விதம் நதிகள் கடலில் சங்கமமாகும் போது தங்கள் நாம ரூபங்களை விட்டு ஒன்றாகுமோ—அவ்விதமே முக்தன் தன் நாம ரூபத்தை விட்டு—மேலானவருக்கும் மேலான பரமாத்மாவை யடைகிறான் பரமாத்மாவை அடைந்ததும் ஜீவசப்தம் இல்லாமல் அழிந்து போகிறது, அந்த ஜீவசப்தத்தால் பரமாத்மாவே காட்டப்படுகிறார் என்று ஔடலோமி எனப்படும் ஆசார்யர் எண்ணுகிறார்.

சூத்ரம்—22 अवस्थितेरिति काशकृत्स्नः (1-4-22)

அவஸ்திதேரிதி காஸக்ருத்ஸநர் (1-4-22)

அவஸ்திதே:—பரமாத்மா ஜீவனுக்குள் நிற்கையாலே ஜீவனைச் சொல்லும் சப்தங்களாலே பரமாத்மாவே சொல்லப் படுகிறான் என காஸக்ருத்ஸநர் அபிப்ராயப்படுகிறார்.

மோக்ஷமடையும் பொது ஜீவன் பிரும்மமேமாகிறான் என்று ஔடலோமி கருதுவதும் தவறாகும் இப்படி, ஒப்புக் கொள்வதில் பல தோஷங்கள் இருக்கின்றன. சில ஆட் சேபங்களும் எழுகின்றன. பிரும்மத்தை அடைவதற்கு மூந்தி (மோக்ஷமடைவதற்கு முன்) ஜீவன் பிரும்மமல்லாம லிருப்பது இயற்கையானதா அல்லது உபாதியினாலா (ஒரு காரணத்தாலா?) செயற்கையாய் யேற்படுவதா? இரண்டா வது (ஜகத்மித்யை) பிரும்மம் தவிர எல்லாம் மித்யை அதனால் ஜீவன் பிருஹ்மமல்லாமலிருப்பது உண்மை யானதா அல்லது பொய்யானதா? இக் கேள்விகளுக்கு எப்படி பதில் உரைத்தாலும், பல தோஷங்கள் உண்டாகின் றன. உதாரணமாக ஜீவனின் ஸ்வரூபம் சம்சாரதசையில் பிரும்மமல்லாமலிருப்பது இயற்கையானது என்றால்—ஜீவ னுக்கும் பிருஹ்மத்திற்கும் பேதம் இயற்கையாக விருப்ப

தால் ஜீவ ஸ்வரூபம் இருக்கும் வரை பேதம் நீங்காது. சரி மோக்ஷ தசையில் ஜீவ ஸ்வருபம் அழிந்து போகிறது; அழி வடையும் ஜீவன் பிருஹ்மமாகிறது என்பதும் சரியில்லை. தன் அழிவுக்கு எவனும் முயற்ச்சிக்கமாட்டான். உபாதி யினால் (ஒரு காரணத்தினால்) பிரும்மமல்லாமலிருப்பது என்று சொல்லக் கூடுமானால்; ப்ரும்மம் தவிர வேறு ஒரு பொருளும் இல்லை; நிரவயவமான பிரும்மத்தை உபாதி யானது வெட்டியும் பிரித்தும் வேறு பொருளாக்க முடியாது ஆகையாற் ஜீவ பிருஹ்ம பேதம் உபாதியிலேயிருக்க வேண்டும். இவ்விதமாக முக்திக்கு முன்னம் ஜீவன் பிருஹ்ம மாகவேயிருக்கிறான் என்றால் முக்தியடையும் போது அவன் பிருஹ்மமாகிறான் என்று சென்ற சூத்ரத்தில் கூறியது ஒட்டாது. பிரும்மமல்லாமலிருப்பது ஒரு உபாதியினால் மித்யை என்று இராண்டாம் கேள்விக்குப் பதில் உரைத் தால், அப்போது பிருஹ்ம பேதமே பொய்யாகும் அப்போது முக்தியில் பிருஹ்மமாவது யார்? பிரும்மத்தை உபாதி யாகிற அக்ஞானம் மறைப்பது பொருந்தாதே, ஸ்வரூப நாசம் தான யேற்படும் இதை தவிர்க்க வேண்டில் திரோதா னம் (மறைபடுவது இல்லை) என்றாவது கொள்ளவேண்டும். ஆகவே முக்தி தசையில் ஜீவன் பிரும்மமாகிறான் என்று சொல்வது இங்கு பொருந்தாது). (சாரீரக காரிகாவளி, கோழியாலம் ஸ்வாம்).

**ஸ்ரீபாஷ்யம்:**—இது வரை சொல்லப்பட்டது ஜீவன் மரிக்கும் போது தேகத்தைவிட்டுக் கிளம்பி பிரும்மபாவத்தை (பிரும்மமாகவே) ஆகிறான், அடைகிறான் (ब्रह्मैव भवति) என்ப தால் பிரும்மம் என்று சொல்லப்படும் அந்த சப்தத்தினால் ஜீவன் பிரும்மத்துடன் ஐக்யமாகிறான் பிரும்மம் என்று சொல்லப்படுகிறான்; ஸ்வரூப ஐக்யம் சொல்லப்படுகிறது என்கிற இந்த அபிப்ராயம். அயுக்தம் ஏனெனில் **विकल्पासहत्वात्** அதன் ஸ்வரூபத்திலே வேறு ஒரு அபிப்ராயத்தை பிரும்மம் ஒத்துக்கொள்ள முடியாது என்கிறபடியாலே

(संभावितविविधकल्पान्तर्गतैककल्परूपत्वस्याप्यभावेन विक-ल्पसहनाननुगुणत्वात्);

இந்த ஜீவாத்மா பிரும்மமல்லாமலிருப்பது, முக்தி முன்பு, இயற்கையா அல்லது உபாதியின் காரணத்தாலா? ஔபாதிகத்தினாலே (அதாவது அவித்யையினால் பிரும்ம ஸ்வரூபம் மறைக்கப்படுகிறது) என்றால் ஜீவன் பிரும்மமல்லாமவிருப்பது உண்மையானதா அல்லது பொய்யானதா? (எப்படி பதில் உரைத்தாலும் மேல் காட்டியபடி தோஷங்கள் ஏற்படுகின்றன)

ஜீவன் பிரும்மமல்லாமலிருப்பது முக்திக்கு முன்பு ஸ்வாபாவிகம் (இயற்கையானது) என்றால் ஜீவனுக்கும் பிரும்மத்துக்கும் உள்ள ஸ்வரூப ஸ்வபாவ பேதங்கள் இயற்கையானதால், ஜீவஸ்வரூபம் இருக்கும் வரை அவை அழியாது. மோக்ஷத்தில் பேதம் அழியுமென்றால் ஜீவ ஸ்வரூபமே அழிய வேண்டிவரும். ஒருவனும் ஸம்சார தசையில் தன் ஸ்வரூபம் அழிவதற்கு முயற்சி செய்யமாட்டான். பேதம் அழியும் போது ஜீவனின் நிஜஸ்வரூபமும் அழிந்து விடுகிறது. அவ்விதமாகில் ஸ்வரூபம் ஐக்யமடைகிறான் என்றால், அப்போது பிரும்ம பேதம் உபாதியிலேயே இருக்க வேண்டும், ஏனெனில் பிரும்மம் உபாதி இரண்டைத் தவிர வேறு பொருள் இல்லை. நிரவயவமான பிரும்மம் வேறு பொருளாக ஆகமாட்டாத படியால், பேதம் உபாதியில் இருக்க வேண்டும். மீண்டும் ஒருவன் ஸ்வரூபம் முக்த தசையில் நாசமாகுமானால் மோக்ஷத்திற்கு எவனும் (ஸ்வரூப நாசத்தை அளிக்கும் மோக்ஷத்தை) விரும்பமாட்டான் அபுருஷார்த்தமாதலால். ஸ்வரூபம் நாசம் பிரகாசமில்லாமற் போவது பிரும்மம் பிரகாசரூபமாக விருப்பது, அது மறைக்கப்படும் போது அதன் ஸ்வரூபமும் மறைக்கப்பட்டதாகும், நாசமாக்கப்பட்டதாகும். இத்தனை தோஷங்கள் ஜீவன் முக்திக்கு முன்பு பிரும்மமல்லாமலிருப்பதினால் ஏற்படுகின்றன. ஆகவே ஜீவன் முக்தி என்பது சரியாகாது.

சரி ஜீவனுக்கு பிரும்மபாவம் (முக்திக்கு முன்பு) இல்லாமலிருப்பது உண்மையானதும் (இயற்கையானதும்) ஆனால் உபாதியினால் ஏற்பட்டது என்று சொல்லப்படுமாகில், அந்த

ஜீவன் பிரும்மமாகவே முந்தியே ஆவான்; (முன்னமே பிரும்மம் தான் என்றால்) उत्क्रमिष्यत एवम्भावात् என்று முன் சூத்ரத்தில் சொல்லப்பட்ட சரீரத்திலிருந்து வெளிக்கிளம்பும் ஜீவன் முக்தியடையும் போது பிருஹ்மமாகவே ஆகிறான் (ஸ்வரூப ஐக்யத்தை அடைகிறான் (ஔடலோமி); என்பதில் விசேஷத்தைப் பொருத்துவது சரியில்லை. ஏனெனில் இந்த பக்ஷத்தில் பிரும்மத்தையும் உபாதியையும் தவிர வேறு ஒன்றுமில்லை; நிரவயவமான பிரும்மத்தை உபாதி வெட்டியும் பிரித்தும் வேறு பொருளாக ஆக்க முடியாதபடியால், பிரும்ம பேதம் உபாதியிலே தங்கவேண்டும். இவ்வண்ணமாக முக்திக்கு முன்பு ஜீவன் பிரும்மமாக விருக்கிறான், உபாதி நீங்கினதும், முக்தியடையும் பொது பிரும்மமாகவே ஆகிறான் என்று சென்ற சூத்ரத்தில் கூறியதும் ஒட்டாது. (உபாதிகத ஏவ பேத இதி, உத்க்ராந்தே: பிராகபி (முந்தியே) பிரும்மைவ என்பதும் சரியாகாது).

(பாஸ்கர பக்ஷம்) உபாதியினால் பேதம் விளைவிக்கப்பட்டது. அக்ஞானத்தினால் பிரும்மம் தன் ஸ்வரூபம் மறைக்கப்பட்டதாகிறது. ஜீவன் ஒரு உபாதியினால் பிரும்மமல்லாமலிருப்பது பொய்யானது என்று (மித்யையா—இயற்கையான ஸ்வரூபமா) என்கிற கேள்வி; அதற்குப் பதிலாக இவ்விதம் பொய்யானது என்று சொன்னால் कस्यायमुत्क्रान्तौ ब्रह्मभाव ஜீவன் பிரும்மமாகிறான் முக்தியடையும் போது என்று சென்ற சூத்திரத்தில் சொன்னது ஒட்டாது.

(சங்கரரின் பக்ஷம்) உபாதி தோற்றமே என்றால் ஆட்சேபிக்கிறவன் சொல்லவேண்டியது யாருக்கு முக்தியடையும் போது, உத்கிராந்தி யேற்படும்போது, உபாதியேற்படுகிறது? பிரும்மத்துக்கா, அவித்யா உபாதி யேற்படுவதனால், சம்சார தசையில் யேற்படுமானால், எப்போதும் மறைக்கப்படாத ஸ்வரூபம் ஸ்வயம் பிரகாசம் அது மறைக்கப்படுவதால், பிரகாசமில்லாமற் போவது அதன் ஸ்வரூப நாசமாகும். அதன் ஸ்வரூபமே அழிய நேரிடும். ஏனெனில் - பிரும்ம ஸ்வரூபம் எத்தன்மையது ? நித்யமுக்த ஸ்வபிரகாச ஞான

ஸ்வரூபம் அது அவித்யை என்கிற உபாதியினுல் திரோ தானம் செய்யப்படுகிறது என்பது அஸம்பவம் (யேற் படாது). திரோதனம் என்பதால் வஸ்து ஸ்வரூபத்தை இருக்கச் செய்தே பொருள் மறைக்கப்படுகிறது. பிரகாச மில்லாமற் போவதேயாகும். ஸ்வபிரகாசமான பிரும்மத் திற்கு ஸ்வரூப நாசம் யேற்படும். அது மறைக்கப்படும் போது. तत्प्रकाशनिवृत्ति: பிரகாசமே வஸ்துவின் ஸ்வரூபம் என்று பிரும்மத்திற்கு அங்கீகரித்தால், திரோததா பாவம் அதன் ஸ்வரூப நாசமாகும். ஆகையால் நித்ய பிரகாசமா யும் ஸ்வதந்திரமாக ஸ்வபிரகாசமாகவும், சேதனத்வமாகிற ஞான ஸ்வரூபமேயாதலால் திரோதானம் உபாதியினுல் (அவித்யையினுல்) யேற்படாது. ஸ்வபிரகாசமான பிரும் மத்திற்கு திரோதானம் இல்லாமலிருப்பது அல்லது ஸ்வரூப நாசமாவது - (இது சங்கரரின் பக்ஷம்.) பிரும்மம் சுத்த தசையில் நித்ய சுத்த முக்தச் சச்சிதானந்த ஸ்வபிர காசம் அது ஜீவனுகிறபோது அவித்யையினுல் அதன் நிஜ ஸ்வரூபம் மறைக்கப்படுகிறது) அவ்விதமானுல் ஸ்வரூப நாசம் தான் யேற்படும். இவ்விதமாக ஜீவனின் ஸ்வரூபம் நித்யமாக விருப்பதால் முக்தியடையும் போது அவனுக்குப் புதிதாக ஒன்றும் யேற்படுவதில்லை. உபாதி நஷ்டமாகிறது, ஜீவனே பிரும்மமாகிறது. உத்க்ராந்தியிலே பிரும்ம பாவம் அதற்கு இயற்கையானதால் புதிதாக ஒன்றும் விசேஷம் ஏற்படுவதில்லை. அவ்விதமானுல் उत्क्रमिष्यत முக்திக்காக ஜீவன் புறப்படும்போது, இந்த விசேஷணம் வ்யர்த்தமே பிரயோசனமில்லை.

अस्मात् शरीरात् समुत्थाय சா. உ. 7-3-4ல் அவன் (ஜீவன்) தேகத்திலிருந்து கிளம்பி பரம் ஜ்யோதிசை அடைகிருன். இந்த சுருதிக்கு முன்னுல் ஜீவனுக்கு இல்லாத பிரும்ம தாபத்தி (ஜீவபிரும்ம ஐக்யம்) இப்போது முக்தியடையும் போது அது அடையப்படுகிறது — என்கிற அபிப்ரா யத்தை (கற்பனேயே) முன் கூட்டியே சொல்லாது. ஆனுல் பூர்வஸித்த ஸ்வரூபம் யாது உண்டோ அந்த ஸ்வரூபம் முக்தியில் ஆவிர்பவிக்கிறது, மீண்டும் ஏற்படுகிறது.

என்றால்; சூத்ரக்காரரும் இதையே சொல்கிறார். சா. மீ.4-4-1ல் संपद्याविर्भावः - स्वेनशब्दात् என்பதால் முக்தன் தன் நிஜஸ்வரூபத்தை அடையப் பெறுகிறான் அதனால் स्व (தனக்குச் சொந்தமான) ஸ்வரூபம் என்பதாலே உபாதி நஷ்டமாகிறது ஸ்வ ஸ்வரூப பிராப்தி யேற்படுகிறது.

ஆகையால் சா. உ. 3-6-2 अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य (இந்த ஜீவனுடன் உள்நுழைந்து நானே தான் என்று சொல்லும்படி நான் நாமரூபங்களை உண்டுபண்ணுவேன். (பிரு. 21-7-21-22)

**य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरो यमात्मा न वेद यस्याऽऽत्मा शरीरं य आत्मानमन्तरोयमयति, स त आत्माऽन्तर्याम्यमृतः**

எவன் (பரமாத்மா) ஆத்மாவில் விருப்பவனாகவும் ஆத்மாவின் உள்ளேயிருப்பவனாகவும் எவனை அந்த ஆத்மா அறியாதோ, எவனுக்கு இந்த ஆத்மா சரீரமோ, எவன் உள்ளிருந்து கொண்டு ஆள்கிறானோ அவனே அந்தராத்மாவாகும், அந்தர்யாமியாகவும் அம்ருதனாகவுமிருக்கிறான். சுபோ. உ. 7-1

**योऽक्षरमन्तरे सञ्चरन् यस्याक्षरं शरीरं यमक्षरं न वेद, एष सर्वभूतान्तरात्माऽपहतपाप्मा दिव्यो देव एको नारायणः ।**

அவன் (பரமாத்மா) அக்ஷரத்தினுள்ளே சஞ்சரிப்பவனாகவும் எவனுக்கு அக்ஷரம் சரீரமோ எவனை அக்ஷரம் அறிகிறதில்லையோ, அவனே (பரமாத்மாவே) ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மத்வாதி குணங்கள் அவனுக்கு உண்டு அவனே திவ்யமான தேவன் ஏகன் (ஒருத்தனான) ஸ்ரீமந்நாராயணன். தை. அ. 1-3-21ல் अन्तः प्रविष्टः शास्ता जनानां सर्वात्मा அவன் (பரமாத்மா) உள்ளே நுழைபவனாக, எல்லாப் பொருள்களுக்கும் இறைவனாகவும், பிறக்கும் எல்லாப் பிராணிகளையும் ஆள்பவனாகவும், அவனே ஸர்வாத்மாவாக விருக்கிறான். (எவனுக்கு ஆத்மா சரீரமோ பிரு. உ., எல்லா பூதங்களுக்கும் அந்தராத்

10—A

மாவாகவும் பாபமற்றவனுய், அப்ராகிருதனுன் ஸ்ரீ மந்நாரா யணன் என்னும் தேவன் ஒருவனே); இப்படி அந்தர்யாமியாக விருப்பதாலே, பரமாத்மா ஜீவனுக்கு ஆத்மாவாயும், ஜீவன் பரமனுக்குச் சரீரமாயும் இருப்பதாக பலவிடங்களில் சுருதி களில் சொல்லப்படுவதாலே, ஜீவனிடம் ஆத்மாவாக பரமன் நிற்பதே ஜீவனைக் குறிக்கும் சப்தங்கள் பரமாத்மாவைக் குறிக்கும், அதற்கு உண்மையான காரணம் என விளக்கு கிறது — அவஸ்திதே: ஜீவசப்தேந ப்ருஹ்மப்ரதிபாத னம் என்று காசகிருத்ஸனர் என்கிற ஆசார்யர் நினைக் கிருர். ஜீவசப்தமும் ஜீவனுக்கு அந்தர்யாமியாக விருக்கும் பரமாத்மா வரை வாசகசப்தமாகும். ஜீவனைமட்டும் குறிப்பது அல்ல என்று முன்னுலே சொல்லப்பட்டதாகும். அதாவது பிரகாரவாச்ய சப்தம் பிரகாரி வரை சொல்லும், சரீர ஆத்ம பாவத்தினுலே, பரமாத்மாபிரகாரி ஜீவன் சரீரம் (பிரகாரம்) சா. உ. 6-3-2ல் नामरूपे व्याकरवाणि நாமரூபங்களை நான் செய் கிறேன். என்பதில் சரீர வாச்யசப்தம் சரீரி வரை சொல் லும். (ஜீவனைக் குறிக்கும் சப்தம் அவனை ஆத்மாவாக வுடைய பரமாத்மாவையும் குறிக்கும்)

இந்த விதமாக சரீர ஆத்ம பாவத்தினுல் பிரும்மத் திற்கும் ஜகத்திற்கும் உள்ள ஐக்யம் (தாதாத்மியம்) சொல்லப்படுவதால், எல்லா சுருதிகளும் பிரும்மத்தை விஷயமாகக் கொண்டவை. अपहतपाप्मत्वादि பாபமின்மை ஸர்வக்ஞுத்வம் முதலிய குணங்கள், அதேபடி ஜீவாத்மாவை பற்றிய குணங்கள் அவித்யையினுல் கவரப்பட்டவனும் துக்கமடைபவனும் அவனுக்கு பிரும்மோபாஸனத்தினுல் மோக்ஷம் யேற்படுவதும்; அதேபடி ஜகத் ஸ்ருஷ்டி, பிரளயத் தைச் சொல்லும் சுருதிகள்—அதே பிரகாரம் ஜகத்திற்கும் பிரும்மத்திற்கும் தாதாத்மியம் (ஐ க் ய வ் ய ப தே ச ம்) உபதேசிப்பவைகள் ஆகிய இந்த நான்கு விஷய பரமாக விருக்கும் எல்லா சுருதி வாக்யங்கள் ஸம்யக் (வெகுநன்ருக) ஸ் தா பி த ம், விளக்கப்பட்டதாகும். (இப்படி ஜீவவாசி சப்தம் பரமாத்மாவைக் குறிப்பதால்); இவ்விதம் அபிப்ராயம் கொண்ட காசுகிருத்ஸநரின் பக்ஷமே சூத்ரக்காரரும் அங்கீ

கரித்தார், சரி என்றும் ஒப்புக் கொண்டார். (ஸ்வீக்ருத வாந்).

ஆகவே இங்கே வாக்யார்த்தம் இதுதான் - மைத்ரேயி யாக்ஞ்யவல்கியரிடம் அம்ருதத்வம் அடைய யாதுவழி எனக் கேட்டாள். आत्मा वा अरे द्रष्टव्यः ஆத்மா காணத் தகுந்தது என்கிற பதிலினுல் யாக்ஞயவல்கியர் பரமாத்மாவை அடையும் வழி அவனது உபாஸனமேயாகும் அதுவே உபாயம் என்று சொல்லி, आत्मनि खल्वरे दृष्टे (பிரு. உ. 2-4-7 4-5-8) என்கிற சுருதி வசனம் தொடக்கமாக, எப்போது அந்த ஆத்மா காணப்பட்டால் (சாக்ஷாத்கரிக்கப்பட்டால்) எல்லா வஸ்துக்களும் அ.றியப்பட்டதாகும். என்று உபாஸ்ய பொருளான பரமாத்மாவின் லக்ஷணத்தைச் சொல்லி; மீண்டும் உதாரணங்களாக துந்துபி முதலான திருஷ்டாந்தங்களால் உபாஸன உபகரண பூதமாக விருக்கும் மனம் முதலிய இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி, பஹிர் முகமாக விருக்கும் விஷயங்களிலுருந்து ஆத்மாவை அந்தர் முகமாய் திருப்பி, அவைகளைப் பொதுவாகச் சொல்லி, स यथाऽऽर्द्रैधाग्नेः ஈணைந்த விறகிலிருந்து நெருப்பைத் தூண்டி விட்டால் எப்படி புகை கிளம்புமோ அதுபோலவும்; (பிரு. உ. 2-4-10 & 4-5-11) என்பதாலும்; स यथा सर्वासामपां समुद्र एकायनम् எவ்விதம் கம்பிரமான சமுத்திரம் எல்லா ஜலங்களுக்கும் இருப்பிடமாக விருக்கின்றதோ என்பதால் (பிரு. உ. 2-4-11 & 4-5-12) உபாஸிக்கப்படும் மேலான பரமாத்மாவே நிகில ஜகத்யேக காரணம் என்று யாக்ஞ்ய வல்கியர் தன் மனைவிக்குக் காட்டி, பிறகு அவர் அருளினுர்.

ஸகல விஷயங்களிலும் பிரவிருத்திப்பதற்கு மூல காரணமாகிற கரணங்களை (இந்திரியங்களை) அடக்குவதாலும், மோக்ஷம் ஸித்திக்கிறது என்று விஸ்தாரமாக படிப்படியாகச் சொன்னுர் என்று கருத்து; அது எங்கனமெனில், स यथा सैन्धवघनः (உப்புக்கட்டி வெளியிலும் உள்ளிலும் உப்பு மயமாக விருக்கிறதோ—அதுபோல) தன்னையும் தன் இந்திரியங்களையும் அடக்கிக் கொண்டால் புலங்களிலே

பற்றுதல் பிறவாது உப்புக்கட்டி நீரில் கறைந்து கலந்து பரந்திருப்பதுபோல அளவிடவொண்ணுதமகிமை பெற்ற அந்த ஜீவாத்மா விஞ்ஞான ஆத்ம (ஜீவாத்ம) ஸ்வரூபனுய்—பஞ்ச பூதங்களோடு கலந்து பிறந்து இறந்தும் வருகிறது—விஞ்ஞான ஆத்மா இறந்தபோது ஸம்ஜ்ஞையை இழக்கிறது அதற்கு மறுபடி பிறவாதபடி இறக்கவேண்டுமானல் அந்த ஜீவாத்மாவுக்கு தேக ஆத்ம பிரமம் போன்ற ஸம்ஜ்ஞைக்கு இடமில்லை—என்றும்; எல்லா வஸ்துக்களையும் ஆத்மாவே என்று அறியாதவன், வெவ்வேருக அறிகிறவன், அறியும் கருவி, அறியப்படுவது, இவைகளை வெவ்வேருகப் பார்ப்பான், எங்கும் வியாபித்த ஆத்மாவாகவே பார்க்கிறவன் அவனுக்கு வேறுபாடு தோன்ருது. எதைக் கண்டாலும் அவனுக்கு ஆத்மாவாகவே தோன்றும் அத்தகைய ஆத்மாவைக் கொண்டுதான் எதையும் அறியவேண்டும். அதாவது இந்திரிய அடக்கத்தால் முயலவேண்டும் என்று யாக்ஞ்யவல்கியர் தன் மனைவிக்கு உபதேசித்தார்.

இதனுல் அவர் அவளுக்கு அம்ருதத்வ உபாயத்தைக் கூறி, அதற்குரிய யத்னங்களைச் செய்யவேண்டியது என்றும்; மேலும் சொன்னுர், ஜீவாத்ம ஸ்வரூபத்திலே பரமாத்மா உள் இருப்பதாலே (அவஸ்திதே:-என்பதற்கு ஒரு பொருளில் இன்னெரு வஸ்து இருப்பதைச் சொல்லக் கடவது). அப்படி வீற்றிருக்கும் பரமாத்மா அபரிச்சின்ன ஞானைக (ஞானமே வடிவெடுத்தவனுக) ஆகாரம் (ரூபம்) கொண்டவனுக, உபபாதித்து (விளக்கி); அப்பேறபட்ட அபரிச்சின்ன (அளவிடமுடியாதபடி) ஞானத்தையே ஆகாரமாக (வடிவமாகக் ஸ்வரூபமாகவும் குணமாகவும்) அவன் (பரமாத்மா) ஸம்சார தசையில் பூதபரிணுமங்களை அடைபவனுக ஆகிருன். இதற்கு சுருதி பிரமாணம் காட்டப்படுகிறது. பிரு, 22-4-12 & 4-5-13)—**विज्ञानघन एवैतेभ्यो भूतेभ्यः समुत्थाय तान्येवानुविनश्यति** அவன் விஞ்ஞான கனமாக (விஞ்ஞான ஆத்ம ஸ்வரூபனுய்) இந்த பூதங்களிலிருந்து வெளிக்கிளம்பி, பிறகு அவைகளுடன் அழிந்து போகிருன்

என்று காட்டி; பிறகு யாக்ஞ்ய வல்கியர் न प्रेत्य संज्ञास्ति (கடைசி சரீரம்) விழும்போது மரித்தல் ஏற்படும் போது, ஒருமைப்பட்ட (தனிப்பட்ட ஜீவனுடைய) ஞானம் என்பது இல்லை; அதாவது மோக்ஷ தசையில் தனது ஸ்வாபாவிக மான அபரிச்சின்ன ஞான ஸங்கோசம் இல்லாத படியால், பூர்ணமாக பிரகாசிக்கிறவனுக, பூதஸங்காத சேர்க்கை யினுல் ஏற்படும் ஏகி (ஒன்றுன தன்மை) பாவம். அதனுல் உண்டாகும் ஞானம் என்பதும் இல்லை. அதனுல் யேற் படும் தேவாதிரூப (சரீர) ஞானம் இல்லாத படியாலே, पुनरपि (மீண்டும் யாக்ஞ்ய வல்கியர் மைத்ரேயியிக்குச் சொன்னுர். यत्र हि द्वैतमिव भवति எங்கே இரட்டையாகிற த்வைதம் இருக்கிறதோ என்கிற உபதேசத்தால் அப்ருஹ் மாத்மகமான் (பிரும்மத்தை ஆத்மாவாகவும் தான் சரீரமாக விருப்பதையும் கொள்ளாத) வஸ்துச்கள் இல்லையென்றும் சொல்லி அது அவித்யையினுல் உண்டாகிறது என்று உப தேசித்து யாக்ஞ்யவல்கியர் மீண்டும் நிஷேத்தார்—பேத தர்சனத்தை; எவ்விதமெனில் நிரஸ்த நிகில அக்ஞானத் தினுல் இந்தப்பொருள்கள் எல்லாம் பிரும்மாத்மகம் பிரும் மத்தை ஆத்மாவாகக் கொண்டது அதனுல் யேற்படும் அவனுடைய ஜகத் அனுபவங்கள். (அதாவது ஞான முள்ள வன் எல்லாவற்றையும் பிரும்மாத்மகமாகப் பார்ப்பான் என்று சொல்லி) எல்லாவற்றையும் சொல்லி, பிரும்ம வ்யதி ரிக்த (பிரும்மத்தை ஆத்மாவாகக் கொள்ளாத வஸ்துக்களே இல்லையென்றும் காட்டி) அதாவது வஸ்துக்கள் தனிப்பட்ட முறையில் (ஸ்வதந்திரமாகவே) இருக்க முடியாது.

இத்தகைய பேததர்சனத்தை நிரஸித்து - பிறகு சொன் ஞர். येनेदं सर्वं विजानाति, तं केन विजानीयात् (அபேத ஞானம் வந்த பின்பு அபேத ஞானம் என்பதற்கு பிரும்ம ஜீவ ஐக்ய ஞானம் வந்ததும் எனப்பொருள்) அவன் யாரால் இதை அறிகிருன் - எதனுல் ஒருவன் (பரமாத்மாவை) அவனை அறி கிருன் (பிரு. உ. 2-4-14 & 4.5-15) இதற்கு அர்த்தம் யாதெ னில் केन (எவனுல்) (அதாவது பரமாத்மாவினுல்) ஒருவன் இதை அறிகிருன்-; எதனுல் அவன் அவனை (பரமாத்மாவை)

அறிகிறான் (सर्वाणि) என்று சொல்லி, பரமாத்மா அந்தர்யாமியாக ஜீவனுக்குள்ளே (அவன் ஸ்வரூபத்திலே)யிருப்பதால் அந்த ஜீவனுக்கு ஆத்மாவாகவிருக்கும் பரமாத்மா தன்னைப் பற்றிய ஞானத்தை உண்டாக்குகிறான் (அதிகிருபாளுவாக • மிக்கதயையுள்ளவனாக) அதனால் அந்த ஜீவாத்மா எல்லாவற்றையும் பிரும்மாத்மகமாக உணருகிறான். அவனது கிருபையே அவனை, எல்லாம் எங்கும் வியாபித்த ஆத்மாவாகவே காணும்படி செய்கிறது. எதைக் கண்டாலும் ஆத்மாவைக் காண்பதே என அவனுக்கு ஆகும்படி செய்கிறது.

இதற்கு இந்த்ரிய அடக்கம் செய்து முயற்சி செய்து உபாஸனை செய்யவேண்டும் என்றும் சொன்னார். அந்த பரமாத்மா எப்படிப்பட்டவன் — அவனுடைய ஸ்வரூபம் விளக்கப்படுகிறது. स एष नेति नेति பரமாத்மாவை அறிவது மிக மிகக்கடினம். அதனாலே அந்த பாமாத்மா नेति नेति— இது இல்லை இது இல்லை (பிரு. உ. 4-5-15) என்று அறியப்பட்டவனாகிறான்—(அதாவது இதனால் ஸர்வமும் நிஷேதிக்கப்படவில்லை. ஆனால் (முதல்) नेति அசேதன ஸலக்ஷணம் யேற்படுவதில்லை. (இரண்டாவது) नेति-சேதன ஸலக்ஷணம் ஏற்படுவதில்லை என்று அர்த்தம். அதாவது விகார புருஷார்த்த உபயவித ஹேயராஹித்யம் என்று சொல்லவேண்டியது.) இப்படிப்பட்ட இந்த ஸர்வேஸ்வரன் தனக்கே யேற்பட்டுள்ள விகார மற்ற ஸ்வரூப ஸ்வபாவங்களை உடையவனாகவும்; அவனில் ஸ்வரூபஸ்வபாவங்களில் வேறுபட்ட ஸமஸ்தசித்-அசித் வஸ்துக்களைவிட விலக்ஷணமாகவுள்ள ஸ்வரூபமுள்ளவனாகவும், அந்த பரமாத்மாவே இந்த சித் அசித் வஸ்துக்களடங்கிய ஜகத்தை தன் சரீரமாகக் கொள்வதாலே ஸர்வ சரீர: சரீரி (ஆத்மாவாக) எல்லாப் பொருள்களும் சரீரமாயும் அவனே ஆத்மாவாகவுமிருப்பதாலே, ஒவ்வொரு சித் அசித் வஸ்துவிலும் அவஸ்திதே: உள் இருந்து நியமனம் செய்கிறவன் என்பதாக; ஸ்வசரீரபூதசித் அசித் வஸ்துக்களைச் சரீரமாகக் கொண்டு தான் அவைகளுக்கு ஆத்மாவாகவிருப்பதால் சரீரதோஷங்கள் ஆத்மாவை ஸ்பர்

சிக்கமாட்டா தாகையாலே என்று சொல்லி. विज्ञातारमरे केन विजानीयादित्युक्तानुशासनसि मैत्रेयि, எதனுல் ஒருவன் விக்ஞாதாரம் (எல்லாவற்றையும் அறிகிற பிரும்மத்தை) அறியக்கூடும்? இவ்விதமாக மைத்ரேயி, நீ என்னிடமிருந்து பிரும்மத்தைப் பற்றிய ஞானத்தை மேலே சொல்லியபடி உபதேசம் பெறுவதற்கு யோக்யதை உள்ளவனுய், பிரியே, இது தான் அம்ருதத்வம் (மோக்ஷம்) எனப்படுவது.

**விளக்கம்**:—விக்ஞாதாரம் சேதன அசேதன ஸர்வ விஷய யதார்த்த ஞானத்தை உடையவன் அவனுக்கு ஞானம் மாத்திரம் இல்லை அறிகிறவனுகவுமிருக்கிருன். அவனுக்கு மற்ற கல்யாண குணங்களும் உண்டு. ஸர்வஸ்ய விக்ஞாதாரம் — பரமாத்மா சொல்லப்படுகிருன். ஸார்வக் ஞத்வம் சொல்லப்படுகிறது. பிற்பாடு ஞாதிகரணத்தில் ஆத்மா ஞானத்தை ஸ்வரூபமாக உடையவன் மாத்திரமல்ல ஞானத்தை குணமாகவும் உடையவனுகவிருக்கிருன். ஏன்? ஏஷஹித்ரஷ்டா ச்ரோதா ஞான ஸ்வரூபமுன இந்த ஜீவன் காண்பவனுகவும் கேட்பவனுகவும்...விக்ஞான ஆத்மா புருஷ: என்று பிரஸ். 2-6-5 சொல்லப்படுகிருன். பத்த நிலையிலும் முக்தநிலையிலும் வாசியற எப்போதும் ஜீவன் அறிபவனுகவேயிருக்கிருன் அதே மாதிரி ஜாநாத்யேவா அயம் புருஷ: ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிலும் அதன் குணமான அறிவை வேருகவே காட்டுகிறது. வ்யதிரேகா கந்தவத்ததா சதர்சயிதி என்னும் சூத்திரத்தில் (2-3-27); ஆகவே அத்வைதிகள் சொல்வதுபோல ஞான ஸ்வருபமே அல்ல; ஞானத்தைக் குணமாக உடையவன் ஆத்மா. பரமதத்தை அடக்குவதற்காக விக்ஞாதாரம் என்று சொல்லப்பட்டது)

**ஸ்ரீ பாஷ்யம்**: — ஸமஸ்த வஸ்துக்களிலிருந்தும் வேருனவனும் நிகில ஜகத்யேக காரணபூதனுன ஸர்வக்ஞனை பரமாத்மா எல்லாப் பொருள்களை அறிகிறவனுகவுமிருக்கிற புருஷோத்தமனை எதனுல் ஒருவன் அறியக் கூடும்? வேறு ஒன்றினுலுமல்ல உபாஸனை ரூபமாகத்தான்.

பரமாத்மா உபாதான காரணம் என்றும் அவனே நிமித்த ஸஹகாரி காரணம் என்று அறிவதால் இப்படிப்பட்ட உபா ஸனம் தான் அம்ருதத்வ உபாயம் பிரும்ம பிராப்திக்கு உபா யம் பிருஹ்ம பிராப்தியே அம்ருதத்வம் (சாகாமை மோக்ஷம்) என்று காட்டினர் யாக்ஞ்ய வல்கியர் மைத்ரேயியிடம். (ஆகையால் விக்ஞானகனுத் பதத்திற்கு ஞாத்ருத்வத்தைக் குணமாக உடைய ஜீவவிசிஷ்ட பரமாத்மா என அறியத் தகுந்தது.)

ஆகையால் பரமாத்மாவே இந்த வாக்ய பிரகரணத்தில சொல்லப்பட்ட आत्मा वा अरे द्रष्टव्यः—(பரமாத்மாவே காணத் தகுந்தது). பிரதி பாதிக்கப்படுகிறுன். அதனுல் பரமாத் மாவே ஜகத் காரணம்; சாங்கியன் சொல்லுகிறபடி பிரதான முமில்லே. பிரதானத்தை அதிஷ்டிக்கும் புருஷனும் இல்லே. பிரகிருதி மாத்திரம் ஸ்வதந்திரமாகவும் ஜகத் காரணமில்லே என்பது ஸ்தாபிதம்.

**விளக்கம்:**—यत्र हि द्वैतमिव भवति எங்கே இரட்டையாகப் பார்க்கிறுனே—பிரும்மத்தை ஆத்மாவாக கொள்ளாமல் பல வாகப் பார்க்கிறுனே—அது அவித்யையினுல் யேற்படுவ தாகும். அபேதமாகப் பார்க்கிறவன் அதாவது பிரும்மாத் மகமாகப் பார்க்கிற பேதத்தை நிஷேதிக்கிறுன். இதனுல் சொல்லப்படுகிறது. எங்கே (பிரும்மத்தைவிட்டு. ஸ்வதந்திரமாக இருப்பதாக) இரட்டையாகக் காண்கிறுனே, அப்போது ஒருவன் மற்றென்றை முகருகிறுன். மற்ருென் றைப் பார்க்கிறுன். கேட்கிறுன். பேசுகிறுன். நினைக்கிறுன் இத்யாதி. எங்கே எவனுக்கு எல்லாம் ஒன்றுன ஆத்மா வாகவிருக்கிறதோ, அப்போது அதனுல் (ஸ்வதந்திரமான உருப்பினுல்) எதை முகருவான். எதனைக் கேட்பான் பார்ப் பான் இத்யாதி. பிரும்மத்தை எல்லாவற்றிற்கும் ஆத்மா வாக உள்ளதை நிஷேதிப்பதால் பேதம் ஏற்படுகிறது எனக் காட்டப்படுகிறது.

முன்பு துந்துபி உதாரணம் பிறகு மற்ற வாத்யங்களின் உதாரணங்கள் காட்டப்பட்டதாகச் சொல்லப்பட்டது.

முதலில் யாக்ஞயவல்கியர் சொன்னார்—பேரிகை சப்தம் கேட்கப்பட்டது பிறகு பேரிகை அடிக்க வேண்டாம் என்று சொன்னதின் பிரகாரம் பேரிகை சப்தம் கேட்கப்படவில்லை. அது போல மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கி விஷயங்களை சம்பந்திக்க வொட்டாமல் செய்வதாகும். விஷயங்களைத் தூர விலக்குவதாலும் மனம் விஷயங்களை அடக்குவதாலும் மனம் விஷயங்களிலிருந்து விடுபடுகிறது. இதே மாதிரி சங்கு, வீணை இத்யாதி வாத்ய சப்தங்கள் கேட்கப்படாமலிருக்க வேண்டும், ஸந்நிஹிதமாகவிராமல் தூரவிருக்க வேண்டும் என்பதாகும்.

எவ்விதம் நனைந்த விறகிலிருந்து பல வகைப்பட்ட புகை கிளம்புகின்றதோ அது மாதிரி பரமாத்மாவின் மூச்சுக் காற்று இது எல்லாம் ஆகும். எல்லாம் இது इदं सर्वं என்பதற்கு விரிவான அர்த்தம் நான்கு வேதங்கள் இதிஹாஸங்கள் புராணங்கள் உபநிஷத்துக்கள் ஸ்மிருதி சூத்ரங்கள் வ்யாக்யானங்கள் இத்யாதி. இங்கு புகைக்கு உபதான காரணம் சொல்லப்படுகிறது. நனைந்த விறகு நெருப்பு நிமித்த காரணம், மூச்சுக் காற்றைவிடுவது எவ்விதம் சுலப மாகவுள்ளதோ அதுபோல ஸ்ருஷ்டி பரமாத்மாவுக்கு சுலப மாகும்.

உப்புக்கட்டி வெளியிலும் உள்ளேயும் உப்புமயமாக விருக்கிறதோ அதுபோல ஜீவாத்மாவின் ஸ்வரூபம் ஞானமே. ஆயினும் அவன் அறிபவனாகவுமிருக்கிறான். ஞான குணத்தை உடையவனாகிறான். ஸம்ஜ்ஞை தேக ஆத்ம பிரமத்தைக் குறிக்கும்.

அவஸ்திதேரிதி காசுக்ருத்ஸ்ந: அவஸ்திதி: என்கிற சப்தத்திற்கு பூதலேகட: அவதிஷ்டதே பிராஸாதே தேவதத்த: அவதிஷ்டதே இத்யாதி வ்யவஹாரங்களிற் போல, ஒரு வஸ்துவில் இன்னொரு வஸ்து இருப்பதைச் சொல்லக்கடவது பிருதிவ்யாம் திஷ்டந் அப்ஸு திஷ்டந் தேஜஸி திஷ்டந் ஆத்மநி திஷ்டந் இத்யாதி உதாரண

உபநிஷத் வாக்யங்களிலே ஷட் தாது பிரயோகத்தை ஸர்வ நியந்திருத்வம் அடியொற்றியே அவஸ்திதே: என்கிற ஸௌத்ரபிரயோகம் உள்ளதைத் தெரிந்துக் கொள்ள வேண்டும். ஆகவே காசக்ருத்ஸனமதம் அத்வைதிகளின் அபிப்ராயத்துக்குப் பொருந்தாது, விசிஷ்டாத்வைத சித்தாந்தம் ஸ்தாபிதம்.

இந்த அதிகரணத்தில் ச்ரோத்வ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: ஆத்ம சப்தத்தால் குறிக்கப்பட்டவன் யார்? பரமாத்மாவென்று சித்தாந்தம் ஜீவனல்ல என்று சொல்லப்பட்டது. எப்படி ஆத்ம சப்தம் பரமாத்மாவாகும், என்பதற்கு மூன்று சூத்ரங்கள் மூலம் மூன்று மதங்கள் காட்டப்பட்டன.

ஆஸ்மரத்யமதம் ஜீவபரமாத்மாவுக்குக் காரிய காரண பாவம் சுருதியில் சொல்லப்பட்டிருக்கையாலே அதனால் அவர்களுக்கு பேதம் ஏற்படுகிறது. காரணமான மண்ணுக்கும் காரியமான பானைக்கும் அபேதம் இருப்பதன்றோ இதைத் தெரிவிக்க ஜீவபரமாத்மா ஐக்யோக்தி உள்ளது என்றார் இவர்.

**ஔடலோமிமதம்:** — ஜீவன் பரமாத்மாவிடமிருந்து உற்பத்தியைக் கொள்வதாலே. ந ஜாயதே ம்ரியதே வாவிப்ஸ்சித் இத்யாதி பிரமாணங்களுக்கு அது விரோதிக்கையால் இன்னும் இதரதோஷங்கள் இருப்பதால் ஆஸ்மரத்ய மதம் ஸாதுவல்ல என்று கருதிய ஔடலோமி முக்தி தசையில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடு அபேதம் சுருதி ஸித்தமாகையாலே முக்தியடையும் போது ஏற்படக்கூடிய ஜீவாத்ம பரமாத்மா ஐக்கியம் சொல்லி நிர்வஹித்தார்.

**காசக்ருத்ஸ்நமதம்:** — விஷ்ணுபுராண வசனத்தினால் பரமாத்மநோர்யோக. பரமார்த்த இதீஷ்யதே - மித்யைதத் அந்யத் த்ரவ்யம் ஹி நைதிதத்த்ரவிய தாம்யத: என்கிறபடி

வெவ்வேறுபட்ட பொருள்கள் ஒன்றொடொன்று சேருமே யொழிய, ஐக்யத்தை அடையமாட்டாது என இதில் கூறப் பட்டது. பரமாத்மாவோடு ஐக்யாபத்தி என்பதில்லை என்னுமிடம் பிரு. சூத் 4-4-1 ஸம்பத்யா விர்பாவாதி கரணத் தில் நிர்ணயிக்கப்பட்டது. ஆக இத்தனைக்கும் முரணுக நிர்ணயிப்பது அனுசிதம் என்று அபிப்ராயம் கொண்ட காசுக்ருத்ஸ்நர் பரமாத்மா ஜீவனுக்குள் அந்தர்யாமி அந்த ராத்மாவாக விருப்பதால் ஜீவாத்மா பரமாத்மாவுக்கு சரீர மாகவும் பரமாத்மா சரீரியாகவும் (ஆத்மாவாகவும்) இதற்கு சுருதி பிரமாணம் ய ஆத்மநி திஷ்டந்...யஸ்ய ஆத்மா சரீரம் இத்யாதி சுருதி ஸித்தமாகையால் சரீர வாசகசப்தம் சரீரிபரியந்தம் வாசகத்வம் ஆகிருத்யதி கரணத்தில் ஸித்த மாகையால் இங்கே आत्मा என்னும் பதத்திற்கு ஜீவாத்பா வாசியான ஆத்மசப்தத்தைப் பரமாத்மா பரியந்தம் வாசக மாக நிர்வஹிப்பது உசிதம் என்றூர்.

மூன்று மதங்களை உதாஹரித்த சூத்ரக்காரர் நான்கா வது மதத்தை பிரஸ்தாபிக்காத படியாலே, காசுகிருத் ஸ்ந மதமெ சூத்ரக்காரருக்கு அபிமதம். விசிஷ்டாத்வைத சித்தாந் தத்திலே பரமாத்மா அந்தர்யாமியாக விருப்பதாலே பரமாத்மா தானே ஜீவாத்மாவாக இருப்பதாலே அவஸ்திதே என்பது ஸமஞ்ஜஸமாகும். காசு கிருத்ஸ்ந மதம் சரீர ஆத்ம பாவத்தை அவலம்பித்து பொருந்த விட்டார். இதனுல் ஸ்வரூபபேதம் ஜீவபிரும்மங்களுக்கு பழுது படாதபடி, நிர்வஹிக்கவும். ஜீவ பிரும்மங்களுக்கு (அத்வைதி சொல் வது போல) ஸ்வரூப ஐச்யம் அவலம்பித்து நிர்வஹிக்க வந்ததல்ல, என்றபடி ஸித்தமாகும். விசிஷ்டாத் வைத கித்தாந்தத்திற்கு இது முக்யமாகும்.



## பிரக்ருத்யதிகரணம் (1-4-7)

சூத்ரம் प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् (1-4-23)

பிரகிருதிஸ்ச பிரதிக் ஞாத்ருஷ்டாந்தாநு.பரோதாத் (1-4-23)

பிரகிருதி: ச—(பிரஹ்மம்) உபாதான காரணமாகவும் ஆகிறது. பிரதிக்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத் இப்படிக் கொண்டால்தான் பிரதிக்ஞையும் திருஷ்டாந்தமும் விரோதிக்காமல் இருக்கும்.

முன் அதிகரணத்தில் ஆத்மாவை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டதாகும் — என்னும் வாக்யத்தைக் கொண்டு, பரமாத்மா உபாதான காரணம் என்று சொல்லப்படுகிறன். இது பொருந்தாது என்கிற வாதம் தள்ளப்பட்டு பரமாத்மவே உபாதான காரணம் என ஸ்தாபிதம்.

இந்த விதமாக, நிரீஸ்வரசாங்கியனின் பக்ஷம் தள்ளப் பட்டதும், மீண்டும் சாங்கிய பக்ஷத்தில் இன்னொருவகை, ஸே ஸ்வரசாங்கியன் மீண்டும் வாதிக்கிறன். (ஸேஸ்வர சாங்கியன் ஈஸ்வரனை ஒத்துக்கொள்பவன். பிரதானம் புருஷன் மாத்திரமில்லை. அவன் ஆட்சேபிக்கிறன்) ஈக்ஷணம் முதலிய குணங்கள் ஸர்வக்ஞனுகிற பரமாத்மா வினிடம் விருப்பதால் அவன் தான் ஜகத் காரணம் என்பது வேதாந்தங்களில் சொல்லப்பட்டதாகிலும், அதே வேதாந்த சுருதிகள் பிரதானம் தான் ஜகத் உபாதான காரணம் (பிரும்மமில்லை) என்றும் சொல்லுகின்றன. வேதாந்தங்கள் சொல்லுவதில்லை — ஸர்வக்ஞனை ஈஸ்வரன் அபரிணமி (பரிணமத்தை அடையாதவன்) எல்லா வஸ்துக்களுக்கும் அதிஷ்டாதா - மேல் பார்வை செய்கிறவன், அத்தகைய பரமாத்மாதான் ஜகத் காரணம். அவன் பிரதானத்தின் உதவியின்றி செயல்படுகிறன். அந்த பிரதானம் அவனு லேயே அதிஷ்டிதம் செய்யப்பட்டு அவனுடைய ஆஜ்ஞை

யினால் பரிணாமத்தை அடைகிறது. ஆகவே பிரதானம் அசேதனமாயினும் பரிணாமமடைவதாலும், ஆனால் ஈஸ்வரனுடைய கட்டளையினால் பரிணாமத்தையடைவதால் பரமாத்மா நிமித்த காரணமாகிறானே யொழிய உபாதான காரணமாக முடியாது (உலகில் குடம் முதலானவற்றிற்கு மண் உபாதான கராணம் அதினும் வேறுபட்ட குயவன் நிமித்த காரணம் நிமித்தமும் உபாதானமும் வேறுபட்டிருப்பதால் யாதொரு பங்கமும் இதனால் விளைவதில்லை என்பது அவன் கருத்து)

ஆகவே இந்த சுருதி பரமாத்மா பரிணாம மடையாதவன், பிருக்ருதியோ பரமாத்மாவினால் அதிஷ்டிக்கப்பட்டு பல மாறுதல்களை (பரிணாமங்களை) யடைகிறது என்று சொல்லுகிறது ஸ்வே. 6-19 निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यम् निरञ्जनम् பரமாத்மா அவயவமில்லாதவன், சேஷ்டிதமில்லாதவன் சாந்தமானவன், தோஷரஹிதன் களங்கமில்லாதவன். அதேபடி பிரு. உ. 4-4-24 स वा एष महानज आत्माऽजरोऽमर इந்த மஹா பெரிய ஆத்மா பிறப்பில்லாதவன், கிழத்தனமற்றவன், இறப்பில்லாதவன், சாலிகா உ. 3 (மந்திரவர்ணம்) विकारजननीमज्ञामष्टरूपा अजां ध्रुवाम् பிரகிருதி விகாரங்களை உண்டு பண்ணுகிறவள். அசேதனம் (ஜடம்) எட்டு விதமாக இயற்கையில் இருப்பவள், அவளுக்கு பிறப்புமில்லை, அழிவும் கிடையாது, அது பரமாத்மாவினால் தியானிக்கப் படுகிறது. அவனாலே அத்யாஸிக்கப்படுகிறது, அது விரிவடைகிறது, மீண்டும் உலகமாக உற்பத்தியடைகிறது. அது புருஷனுடைய புருஷார்த்தத்துக்காக உழைக்கிறது. இந்த உலகம் அதனால் அதிஷ்டிக்கப்படுகிறது. ध्यायतेऽध्यासिता तेन तन्यते प्रेर्यते पुन. । सूयते पुरुषार्थं च तेनैवाधिष्टतया जगत् । गौरनाद्यन्तवती सा जनित्री भूतभाविनी । (பசுவாகிற பிரகிருதிக்கு) ஆதியுமில்லை அந்தமுமில்லை. அவள் எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிறவள், அவளோ (ஸமஷ்டி) பிரதான ஸ்ருஷ்டிக்கும் அதையடுத்து வரும் வ்யஷ்டிக்கும் காரணமாகிறாள் (சாலி. 2. 5)

∴ இந்த விதமாக பரமாத்மா உபாதான காரணமாகிற பிரதானத்தை அத்யக்ஷிப்பதால் உலகை உண்டுபண்ணுகிறான் என்று சுருதிகள் சொல்கின்றன. ஸ்வே. 2-4-9 अस्मान् मायी सृजते विश्वमेतत्...मायां तु प्रकृतिं विद्यां मायिनं तु महेश्वरम्। பிரக்ருதியிலிருந்து மாயீ - மாயையைத்தன் வசம் வைத்திருப்பவன் அதாவது பரமாத்மா இந்த உலகைப் படைக்கிறான் மாயையை பிரக்ருதியாக அறிவாய், மாயின் பரமேஸ்வரனாகும். (மாயையை ஆள்பவன்) இதே பிரகாரம் ஸ்மிருதியிலும் கீதை 9-10ல் मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् பிரத்யக்ஷமாகக் பார்க்கக் கூடியவனாய் ஸத்ய சங்கல்பனாயும் இருக்கிற நான் ஜீவாத்மாக்களின் புண்ய பாபரூப கர்மாக்களுக்கு தக்கபடி (மாறுதலை) (பலவாக) பரிணமிக்க வேண்டும் என்று சங்கல்பித்து அதைக் கடாக்ஷிக்கிறேன். கடாக்ஷிக்கப்பட்ட என்பிரகிருதி ஜங்கமதாவரங்களுடன் உலகை உண்டு பண்ணுகிறது. என் கடாக்ஷத்தினால் ஸம்சாரமும் யேற்படுகிறது.

இந்த விதமாக சுருதியும் பிரதானத்தை உபாதான காரணமாகச் சொல்லாதபோனாலும், பிரும்மம்தான் ஜகத் காரணம் என்று சொல்லும் சுருதி வேறுவிதமாக அர்த்தம் செய்து கொள்ளமுடியாது. ஏனெனில் பிரதானத்தின் நிஜ ஸ்வரூபம் அது பரமாத்மாவினால் அத்யக்ஷிக்கப்பட்டு மாறுதலை அடையும் போது உபாதான காரணமாக விருப்பதால்- இவை இரண்டும் நம்மால் ஒத்துக் கொள்ளப்பட்டு ஸித்திப்பதால், பிரும்மபரமாகவுள்ள சுருதியும் வேறுவிதமாக அர்த்தம் செய்யப்படமாட்டாது. உலகத்திலும் நாம் காண்கிறோம். நிமித்தக்காரணமும் உபாதானகாரணமும் வெவ்வேறாக விருப்பதால் பேதம் காணப்படுகிறது. ஒரே வஸ்துவுக்கு இரண்டும் ஸம்பவியாது எனக்கருத்து. உதாரணமாக ம்ருத் (களிமண்) தங்கம், முதலிய பொருள்கள் இவை அசேதனம், இந்த பேதம் நிமித்த உபாதானகாரணம் என்பதில் காணப்படுகிறது; குயவன் — தங்கஆசாரி நிமித்த காரணமாகிறார்கள். ஒரு வஸ்துவை உண்டாக்க பல உபகரணங்களும் கர்த்தாக்களும் தேவைப்படுகின்றன, இவ்

விதமாக ஒரு வஸ்துவை உண்டாக்குவதில் நிமித்த உபா தான காரணம் இவை பின்னமாக விருப்பதால் அதேமாதிரி பல உபகரணங்களும் கர்த்தாவும் நியமேந அபேக்ஷிக்கப் படுவதால், பிரும்மம் ஒன்றுதான் — அது நிமித்த காரண மாகும். உபாதான காரணமாகாது. வேதாந்தி சொல்வது போல (உபாதான நிமித்த காரணமும் ஆகவே ஆகாது) வேதாந்த வாக்யங்களின் உதவி கொண்டு, உபாதான காரணம் பிரும்மம் என்று சொல்ல முடியாது; (இரண்டு காரணமாகவும் ஆகாது என்று அர்த்தம்) ஆகவே பிர தானம் ஈஸ்வரனுல் அத்யக்ஷிக்கப்பட்டு உலக உற்பத்திக்கு உபாதான காரணமாகிறது. (இது பூர்வபக்ஷம்) अतो ब्रह्म-निमित्तकारणमेव - नोपादानम् - उपादानं च तदधिष्ठितं प्रधानमेव इति.

(ஈஸ்வரனை ஒப்புக் கொள்ளும் சாங்கியனின் பக்ஷம் இந்த அதிகரண விஷயமாகிறது. அவன் சொல்வது பிர தானம்தான் உபாதான காரணம் பிரதானம் பிரும்மத்தை விடவேருனது, அது பிரும்மாத்மகமாக இல்லை. ஆகவே பிரும்மம் நிமித்தகாரணமாகும். குயவனைப் போல சுருதி பிரமாணமும் காட்டுகிருன். லௌகிக வாழ்க்கையிலும் நாம் பார்ப்பது. உபாதான காரணம் நிமித்த காரணத் திலிருந்து வேறுபட்டது. ஒரே விடத்தில் காணப்படுவ தில்லை. இதற்கு நமது பதில் பிரும்மம் இரண்டு காரணங் களாகும் (உபாதானம் நிமித்தம் ஆக இரண்டும், (மேலும் ஸஹகாரி காரணமாகவுமிருக்கிறது.) சுருதி சா. உ. 6-1-5 இது சாங்கியபக்ஷத்திற்கு விரோதம், வேதமும் சரியானபடி அர்த்தம் நிர்வஹிக்கப்படுகிறது. பிரும்மம் தனிப்பட்ட அசாதாரண வஸ்து. அதற்கு லௌகிக முறையில் காணப் படும் நியமம் சரியாகாது. சாஸ்திர யோனித்வம் கொண்டது.)

அவ்விதம் (சாங்கியன்) சொல்லுவாயாகில் அது சரி யில்லை என்று பதில் அளிப்போம். ஏனெனில் प्रकृतिश्च प्रति-ज्ञादृष्टान्तानुपरोधात् (சூத்ரம் 1-4-23) பிருஹ்மம் உபாதான காரணமாகவும் ஆகிறது; பிரதிக்ஞா...ரோதாத் இப்படி

கொண்டால் தான் பிரதிக்ஞையும் திருஷ்டாந்தமும் விரோ திக்காமலிருக்கும். (முன் அதிகரணத்தில் ஆத்மாவை அறிந் தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும் என்னும் வாக்யத் தினுல் பிரும்மத்திற்கு உபாதான காரணம் ஸித்திக்கிறது என்பதாகும். இதில் வாதிப்பது—பிரும்மம் அதிஷ்டிக்கும் பிரதானம் தான் காரணம். பிரும்மம் நிமித்தம் என்றும்—; பிரக்ருதி என்பதால் பரமாத்மாவே சொல்லப்படுகிறுன். அதெப்படி யெனில் கடக ஸ்ருதி (அந்தர்யாமி பிராம்மணம்) அன்வேஷ்டவ்ய: என்பதால் பிரகிருதி அதிஷ்டிதா பிரும் மமே உபாதான காரணம்; च காரத்திஞல் நிமித்தத்வமும், இரண்டும் சேர்ந்து ஸமுச்சயமாக சூத்ரத்தில் பிரகிருதி பதம் பிரும்மமே உபாதான பரமாக விருக்கிறது என்ப தாகும். ஆகவே மூல பிரக்ருதி மாத்திரம் உபாதான காரணமாகாது. அது அசேதனம். அது விகாரத்தை அடைவதால் அஸத்யமானது என்பதாகும்).

பிரகிருதிஸ் ச—உபாதானம் ச ("ச" காரத்திஞல் உபா தானமும் நிமித்தமும் ஸமுச்சயமாகச் சொல்லப்படுகிறது. பிரும்மம் நிமித்த காரணமாத்திரமல்ல. உபாதான காரண மாகவும் பிரும்மம் ஆகிறது என்பது அர்த்தமாகும். எப்படி प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् (சா. 2. 6ல் கூறப்பட்ட) பிரதிக்ஞை யும் திருஷ்டாந்தமும் விரோதிக்காமல் இருக்குமாகையால ஏவமேவஹி - இந்த விதமாக ஒன்றுக்கொன்று (திருஷ்டாந் தங்களும் பிரதிக்ஞையும் விரோதிக்கிறதில்லை. இந்த பிரதிஞ்ஞை ஏகவிக்ஞானத்திஞல் ஸர்வ வஸ்துக்களின் விக்ஞானம் சொல்லப்படுகிறது. அதாவது பிரும்மம் ஒன்றை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும். இந்த சுருதியில்—स्तब्धोऽस्युत तमादेशमप्राक्ष्यः, येनाश्रुतं श्रुतं भवत्यमतं मतमविज्ञातं विज्ञातं நீ உணர்வு அற்றவஞக விருக்கிருய். நீ உன் ஆசார்யாரிடமிருந்து ஆதேச வாக்யத்தைப் பற்றி கேட்டாயா? ஆதேச சப்தம் காரண வாக்யம் (காரணப் பொருள் தத்வம்) யேநாஸ்ருதம். விக்ஞாதம் (சா. 2. 6-1-3 எதைக் கேட்டால் கேட்கப்படாத எல்லாம் கேட்கப்பட்ட தாகும், எதை நினைத்தால் நினைக்கப்பட்டதெல்லாம்

நினைக்கப்பட்டதாகும், எதை அறிந்தால் அறியப்பட வேண்டிய எல்லாம் அறியப்பட்டதாகும். அந்தப் பரம் பொருளை காரணப் பொருளைக் கேட்டாயோ-என்று தந்தை தன் பிள்ளை ஸ்வேத கேதுவை வினவினர்.

இதனால் பிருஹ்மத்தை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும் எனப் பிரதிக்ஞை செய்யப்பட்டது. (ஏக விக்ஞானேந ஸர்வ விக்ஞான விஷயம்.) த்ருஷ்டாந்தமாக இவை கொடுக்கப் பட்டன—यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात्...यथा सोम्यैकेन लोहमणिना...यथा सोम्यैकेन नखनिकृन्तनेन इति காரண விக்ஞானாத் காரிய விக்ஞானவிஷய:—அதாவது (சா. உ. 6-1-4) குழந்தாய் எப்படி ஒரு மண் கட்டியை அறிந்தால் மண்ணால் உண்டாக்கப்பட்ட சட்டிபானைகள் முதலான எல்லாப் பொருள்களும் அறியப்பட்டதாகிறதோ; (சா. உ. 6-1-4); (இன்னொரு உதாரணம்) 6-1-5-; பிரியனே, ஒரு தங்கக்கட்டியை அறிந்தால், தங்கத்தால் பண்ணப்பட்ட வளையல்கள் இத்யாதி அறியப்படுமோ; (இன்னொரு உதாரணம் 6-1-6 ஸோம்ய, ஒரு இரும்புக்கட்டியை அறிவதால் இரும்பால் உண்டு பண்ணப்பட்ட சாமான்களை (கோடாலி - கரண்டி - தட்டு) எல்லாம் அறியப்பட்டதாகிறதோ (அப்படியே காரண வஸ்துவாகிற பிருஹ்மத்தை அறிவதால், எல்லாக் காரியங்களும் அறியப்பட்டதாகும். (இப்படி) மூன்று த்ருஷ்டாந்தங்கள் கூறப்பட்டன.

இவற்றிலிருந்து சட்டிபானை முதலிய காரியங்களுக்கு மண் உபாதான காரணமாவது போல் எல்லா உலகிற்கும் பிரும்மம் உபாதான காரணமாகும். பிரும்மத்தை குயவனைப் போல நிமித்த காரணமாக மாத்திரம் கொண்டால், பிரும்மத்தை அறிந்தால், உலகை அறிந்ததாகும் என்று கூறுவது சரியாகாது. அதாவது ஜகத்திற்கு பிரும்மம் நிமித்த காரணம் மாத்திரம் என்றால் அதைப் பற்றி அறிவதால் ஸமஸ்த ஜகத்தும் அறியப்பட்டதாகாது. எப்படி குயவனை மட்டும் தெரிவதால், கடம் முதலியவை

அறியப்படமாட்டாதோ அதுபோல், ஆகையால் பிரதிக்ஞைக்கும் த்ருஷ்டாந்தத்திற்கும் ஸாம்யம் பிருஹ்மம் இப்படி உபாதான காரணமாகி அதனுல்யேற்பட்ட காரியமாகிற வஸ்துக்கள் எப்படி உபாதான பூதமிருத்பிண்டம், (சுவர்ணம் தங்கம்) லோஹமணி (இரும்புக் கட்டி) இவைகளைத் தெரிவதால் அதனதன் காரியங்கள் தெரியப்படுமோ அதேபோல் காரண வஸ்துவான பிரும்மத்தை அறிவதால் (அதேபடி மூன்று திருஷ்டாந்தங்களின் காரியங்களாகிற குடம்—பானை முகுடம் (க்ரீடம்) கை கொலுசு கோடாறி சம்மட்டி இத்யாதி காரியங்களை அறிவதுபோல்) இங்கேயும் ஜகத்தாகிற உலகமும் அறியப்பட்டதாகும். இப்படி பிருஹ்மம் ஒன்றை அறிவதால் அதன் காரியமாகிற நிகில ஜகத்தின் உற்பத்திக்கு, உபாதான காரணமாக ஆவதால், பிருஹ்மம் அறியப்பட்டதாகும். இந்த உதாரணங்களால காரியங்கள் காரணத்தின் மாறுதல்களாக விருப்பதால் காரிய காரணபாவம் (ஒற்றுமை—ஐக்யம்) அவைகளுக்கு யேற்படுகிறது. (அதாவது விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் ஸத்க்யாதிவாதம், ஒப்புக்கொள்ளப் பட்டது. இருக்கிறதானே உண்டாகும். ஞானமும் ஸத்யம், அதன் விஷயங்களும் பரமார்த்தமே ஆகையால் ஸ்வப்னமும் ஸத்யம், ஆதலால் ஜகத்தும் ஸத்யம் எவ்விதம் பிரும்மம் ஸத்யமோ அது போல).

(இது மீண்டும் விவரிக்கப்படுகிறது) காரிய காரண ஒற்றுமை எவ்விதம் யேற்படுகிற தென்றுல் பிரும்மத்தை அறிவதாலே அதன் காரியமான ஜகத்தும் அறியப்பட்டதாகிறது. அதாவது காரணமேவ (காரணமாத்திரம் தான்) வேறு அவஸ்தையை அடைவதால் காரியமாகிறது. அதை இன்னெரு விதமாகவும் சொல்லலாம். காரியம் காரணத்தில் அடங்கியுள்ளது; காரணம் அவஸ்தாந்தர நிலையை அடையும்போது காரியமாகிறது. காரியம் காரணத்தின் இன்னெரு அவஸ்தையைக் குறிக்கும் அதனுல் காரியம் வேறுபட்ட திரவியமல்ல. ம்ருத்பிண்டத்தின் விகாரத்தினுல் பானை சட்டிகள் தோன்றி உற்பத்தியாகின்றன. இந்த

ம்ருத்திகாவின் (களிமண்ணின்) விகாரங்களைக் காட்டி காரிய காரணங்களுக்குள் ஒற்றுமையைக் காட்டுவதால் பிரதிக்ஞை (ஏகவிக்ஞானத்தினால் ஸர்வவிக்ஞானம் யேற்படும்) என்பது பூர்ணமாகிறது. அதேபடி பிரும்மமும் ஜகத்தின் உபாதான காரணமாவதால் இவ்விதம் காரண காரிய பாவம் (ஐக்யம்) நிச்சயிக்கப்படுகிறது.

இங்கு சொல்லப்படுவது—உலகில் நிமித்தமும் உபாதானமும் ஒன்றாகக் காணப்படவில்லை; அதனால் பிருஹ்மம் இரண்டும ஆகாது என்றான் ஸேஸ்வர சாங்கியன். **வேதாந்தி** உலகிலுள்ள எல்லாப் பொருளிலும் வேறாக (விலக்ஷணமாக ஸ்வரூப ஸ்வபாவங்களில் வேறுபட்டவனாக) விருப்பவன் பரமாத்மா எல்லாவித சக்தி பெருமைகளை உடையவன். சாஸ்திரம் ஒன்றினால் அறியப்படுபவன். சாஸ்திரத்திலிருந்து ஸ்ருஷ்டிக்கு முன் அவன் ஸூக்ஷ்மமான சேதனாசேதனங்களை தன் சரீரமாகக் கொண்டவன் என்றும், ஸ்ருஷ்டிக்குப் பின்பு அவனே ஸ்தூலமான சேதனாசேதனங்களை சரீரமாகக் கொண்டவனாக ஆகிறான் என்று தெரிய வருகிறது. சரீரத்திற்கு யுவா பாலன் விருத்தன் என்கிற மாறுதல் யேற்படுவது போல ஸூக்ஷ்ம சித் அசித் வஸ்துக்கள் ஸ்தூலசித் அசித் வஸ்துக்களாக மாறுகின்றன ஆகவே பரமாத்மா ஆத்மாவாகவிருப்பதால் அவனுக்கு மாறுதல் இல்லை, அவனுடைய சரீரமே ஸூக்ஷ்ம அவஸ்தையிலிருந்து ஸ்தூல அவஸ்தையாக மாறுகிறது. இதனால் பரிணாமம் என்றும் சொல்வதற்கில்லை. பிரும்மம் நிரவயவம். ஆனால் பிரும்மம் அந்தர்யாமியாக எல்லா சித் அசித் வஸ்துக்களில் நுழைந்து அவைகளை நியமனம் செய்வதால் பிரும்மம் ஸர்வாந்தராத்மாவாகிறான். சரீரதோஷங்கள் ஆத்மாவிற்கு யேற்படுவதில்லை. அதுபோல சித் அசித் வஸ்துக்களைச் சரீரமாகக் கொண்ட பிரும்மத்திற்கு, ஆத்மாவிற்கு, ஒருவித தோஷமும் யேற்படாது. இத்தகைய பரமாத்மா ஒருவனே உலகிற்கு நிமித்த காரணமாகவும் உபாதான காரணமாகவும் இருப்பதில் யாதொரு தடையில்லை. விகாரங்கள் அவனுக்கு சரீரமாகவிருக்கும் அசேதன ஜீவவர்க்கங்களில்

இருக்கும் பிரும்மம் எந்த அவஸ்தையிலும் விகாரமற்றது. அதுவே உபாதான நிமித்த காரணமாகலாம். அதுவே ஸஹகாரிகாரணமாகவும் ஆகலாம் என ஸ்தாபிதம்) (சுருதிகளும் அவ்விதமே சொல்கின்றன)

முன்பு என்ன சொல்லப்பட்டதென்றால் நிமித்த உபாதான காரணங்களுக்குள் பேதம் இருக்கிறதாக சுருதி சொல்கிறது என்கிறாயே அது சரியல்ல. (சாங்கியனைக் குறித்து சொல்லும்பதில்) நிமித்த உபாதான காரணங்களுக்குள் ஐக்யம் (ஒருவனிடமே இரண்டு காரணங்களும் இருக்கலாம்) எனக் காட்டப்பட்டிருக்கிறது. சா. உ. 6-1-3 उतत्तमादेशमप्राक्ष्यः येना श्रुतं श्रुतं भवति பிதா பிள்ளையைக் கேட்டார். நீ உன் குருவினிடமிருந்து ஆதேசத்தைக் கேட்டாயா? எந்த ஒன்றைத் தெரிந்து கொள்வதால் எல்லாம் தெரிந்துக் கொள்ளப்பட்டதாகும் (எதைக் கேட்டால் கேட்கப்படாத எல்லாம் கேட்கப்பட்டதாகவும், எதை நினைத்தால் நினைக்கப்படாத எல்லாம் நினைக்கப்பட்டதாகும், எதை அறிந்தால் அறியப்படாத எல்லாம் அறியப்பட்டதாகவும் ஆகிறதோ அத்தகைய பரம்பொருளைக் கேட்டாயா? என்று அர்த்தம்) ஆதேச சப்தத்திற்குப் பொருள் आदिशते உள்ளிருந்து நியமனம் செய்கிறவன் அவனே ஆதேசத்தின் கர்த்தாவாகச் சொல்லப்படுகிறான். பிரசாசனம் செய்பவன் உள்ளிருந்து மேலான நியமனத்தை (கட்டளையிடுபவன்) செய்பவன். இந்த ஆதேச உபதேசம் இந்த சுருதி வாக்யத்தில் காட்டப்படுகிறது. பிரு. உ. 3 8-9 கார்க்கி, அக்ஷரத்தின் மேலான நியமனத்தினால், சூரியனும் சந்திரனும் தனித்தனியாகத் தாங்கப்படுகிறார்கள். एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि என்று சுருதி ஓதுகிறது. ஆதேசம் (கட்டளை) யிடுவதால கர்த்தா காட்டப்படுகிறான்.

(ராமானுஜரின் அபிப்ராயம் ஆதேச திஸ் என்கிற தாதுவிலிருந்து அ என்கிற எழுத்தும் பிற்பாடு घञ् என்றும் சேர்க்கப்பட்டு ஆதேச என மாறுகிறது. ராமானுஜர் மூன்றும் வேற்றுமையில் சொல்லி அர்த்தம் நிர்வஹிக்கிறார்.

பிரும்மத்தை மேலான ஆக்ஞையிடுபவன் அதனால் ஐக்யம் கட்டளையிடுபவனையும் ஆதேசமிடுதலுக்கும் காட்டப்படு கிறது, ரங்கராமானுஜ முனியின் வியாக்யானம் சா. உ. 6.1-1ல் பார்க்கவும் விபரத்திற்கு (साधकतमस्य-फलायोगव्यवच्छेदात्) तेन प्रशासनस्य सार्वकालिकत्वसिद्धिः; (आदेशशब्दस्य - उपदेश्यमित्यर्थस्तु न -) (உத்தமூர் ஸ்வாமி)

அந்த ஆதேசம் (கட்டளை) யிடுபவனின் ஞானத்தை பற்றிக் கேட்டாயா? ஆதேஷ்டாரம்; அதாவது எதைக் கேட் டால் கேட்கப்படாததெல்லாம் கேட்கப்பட்டதாக ஆகிறதோ இதன் அர்த்தம் அந்தப் பரம்பொருளைப் பற்றி கேட்பதாலே येनाऽऽदेष्टाऽधिष्टाता श्रुतेनाश्रुतमपि श्रुतं भवतीति அந்த பரமாத்மா எல்லோரையும் ஆள்பவனாகவும் எல்லாப் பொருள்களையும் அத்யக்ஷிக்கிறவனாகவும் அதிஷ்டாதாவாகவும், உள்ளிருந்து நியமிப்பவனாகவுமிருக்கிறான், அதனாலே அவனைப்பற்றி கேட்பதாலே, எது கேட்கப்படாமலிருக்கிறதோ அது கேட்கப்பட்டதாக ஆகிறது येनाऽऽदेष्टाऽधिष्टात्रा श्रुतेन श्रुतमपि श्रुतं भवतीति - இதனால் நிமித்த உபாதான காரணங்களின் ஐக்யம் பரமாத்மாவினிடம் காட்டப்படுகிறது அது மீண்டும் சுருதி பலத்தினால் வற்புறுத்தப்படுகிறது. सदेवसोम्येदमग्र असी-देकमेव சா உ.6-2-1 ஸௌம்ய ஸத் ஒன்றுதான் முதன் முதலில் இருந்தது அத்விதீயமாகவிருந்தது. அதாவது ஸ்ருஷ்டிக்கு முன்பு ஒரே காரணமாக அத்விதீயமாக இரட்டையில்லாதபடி ஒன்றாகவே விருந்தது ஏகத்வம் சொல்லப்பட்டது; அத்வி தீயபதத்தினால் பிரும்மத்தைத்தவிர இன்னொரு(வேறுஒன்று) (பிரதானமோ வேறு ஏதுவோ) அதிஷ்டாதாவாக சொல் லப்படவில்லை. பிரும்மம் ஒன்றே இருந்ததாகச் சொல்லப் பட்டது. (अद्वितीयपदेनाधिष्टात्रान्तरनिवारणाच्च) -

நீ (சாங்கியனைக் குறித்து) கேள்வி கேட்கலாம் (அதாவது உபாதான காரணமாக பிரும்மம் இருக்குமாகில்) பிரகிருதியும் அநாதி, அதுவும் நித்யம் தானே ஆதி அந்த மில்லாதபடி நித்யத்வம், உபாதானத்வம் பிருகிருதிக்கும் உண்டு, சுருதி சொல்கிறதே (மந்திரி) विकारजननीं பிரக்ருதி

எல்லா மாறுதல்களுக்கும் மாதாவாகவிருக்கிருள். गौरनाद्यन्त-वती (பசு-பிரகிருதி) ஆதி அந்தமில்லாதவள் (சூலிகா உப. 3-5); அதற்கு நாம் (வேதாந்தி) பதில் அளிப்போம், அங்கே கூட (அதாவது பிரகிருதி என்பது ஸ்வதந்திரமான தத்வமாக விருக்க முடியாது பிரகிருதி விசிஷ்ட பிரும்மமே உபாதான காரணம் என அர்த்தம்) பிருஹ்மம் அவிபக்த (நாமரூபவ்யாகரணம் யேற்படுவதற்கு முன்பு) அந்தக் காரண அவஸ்தையில், பிருஹ்மமே பிரகிருதி சப்தத்தால் அறிவிக்கப்படுகிறது; ஏனெனில் பிரும்மத்தை ஆத்மாவாகக் கொள்ளாத வஸ்து ஒன்றும் இருக்கமுடியாதபடியால் பிரும்மமே பிரகிருதி சப்தத்திஞல் அறியப்படுகிறது. இதற்கு இந்த சுருதிகளே ஆதாரம். (பிரும்மவ்யதிரிக்த வஸ்து வந்தரம் அபராவாத் சுருதிகளும் இதேயே ஓதுகின்றன பிரு.உ.2-4-6 & 4-5-7 सर्वं तं परादात्, योऽन्यत्रात्मनः सर्वं वेद; எல்லா வஸ்துக்களும் அவனை நிராகரிக்கின்றன. (நிந்திக்கின்றன) (எவனை) எவன் தன்னை பிரும்மத்துக்கு (ஆத்மாவுக்கு) வேருகவிருப்பதாக நினைக்கிருனே அவனை;பிரு.6-5-15 यत्र त्वस्य सर्वमात्मैवाभूत्, तत् केन कं पश्येत् இத்யாதிகளால் எங்கே ஒருவனுக்கு எல்லா வஸ்துக்களும் பிருஹ்மமாக ஆகின்றதோ, வாஸ்தவத்திலே, அப்போது எதஞல் (எதன் உதவியின்றி) ஒருவன் எவனை பார்க்கக்கூடும்? (அதாவது எவன் எல்லாவற்றையும் பிரும்மமாகப் பார்க்கிருனே (ஆத்மாவாகப் பார்க்கிருனே அவன் எவஞல் எவனைப் பார்க்கக்கூடும்? (பிரும்மவ்யதிரிக்த வஸ்து ஒன்றும் இல்லை எல்லாம் பிரும்மமாகவே அவனுக்கு தோன்றும்). மீண்டும் சா. உ 3-14-1 सर्वं खल्विदं ब्रह्म இவை எல்லாம் பிருஹ்மமே; சா. உ. 6-8-7 ऐतदात्म्यमिदं सर्वं இந்தப் பொருள்கள் எலலாம் பிருஹ்மத்தையே ஆத்மாவாகக் கொண்டிருக்கின்றன. இந்த விதமாக பிருஹ்மத்தை இரண்டு அவஸ்தைகளில் (நிலைகளில்) காரியாவஸ்தை காரணவஸ்தை ஆகிற இரண்டிலும் ஸர்வ ஜகத்தும் பிரும்மத்தை ஆத்மாவாகக் கொண்டது என்று ஓதுவதாலே (பிரும்மாத்மகமிதி)

என்ன சொல்லப்பட்டது வென்றல் சரீர ஆத்மபாவம் சொல்லப்பட்டதாகும். சுபோல. லே य: पृथिव्यामन्तरे सञ्चरन् यस्य

पृथिवी शरीरं यं पृथिवी न वेद - என்று ஆரம்பித்து (எவன் பிருத்வியின் உள்ளே சஞ்சரித்துக் கொண்டு, எவனுக்கு பிருத்வி சரீரமாக விருக்கிறதோ, எவனை பிருத்வி அறியாதோ; என்று ஆரம்பித்து योऽव्यक्तमन्तरे सञ्चरन् यस्याव्यक्तं शरीरं यमव्यक्तं न वेद - योऽक्षरमन्तरे सञ्चरन् यस्याक्षरं शरीरं यमक्षरं न वेद - என்று முடிக்கிறது (அவன் எவன் அவ்யக்தத்தினுள்ளே சஞ்சரிக்கிருனே, எவனுடைய தேகம் அவ்யக்தமாக விருக்கிறதோ, எவனை அவ்யக்தம் அறியாதோ - यःपृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरोयं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं य. पृथिवीमन्तरो यमयति (அவன் எவன் அக்ஷரத்தினுள்ளே சஞ்சரிக்கிருனே, எவனுடைய தேகம் அக்ஷரமாக விருக்கிறதோ, எவனை அக்ஷரம் அறியாதோ; எவன் पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरोयं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं यः पृथिवीमन्तरो यमयति என்று ஆரம்பித்து முடிக்கிறபோது ஓதுகிறது यः आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरोयमात्मा न वेदयस्स्याऽऽत्मा शरीरं यः आत्मानमन्तरो यमयति, स त आत्माऽन्तर्याम्यमृतः எவன் பூமியினுள்ளே வசித்துக் கொண்டு, பூமியில் இருக்கிருனே, எவனை இந்த பூமி அறியாதோ, எவனுடைய தேகம் பூமியாக விருக்கிறதோ, எவன் உள்ளிருந்து பூமியை ஆள்கிருனே (அது முடிக்கிறபோது) அவன் (எவன் ஜீவாத்மாவினுள் இருந்து கொண்டு, ஆத்மாவினுள் வசிக்கிருனே, எவனை இந்த ஜீவாத்மா அறியாதோ, எவனுடைய தேகம் இந்த ஜீவாத்மாவாக விருக்கிறதோ, எவன் உள் இருந்து கொண்டு ஆத்மாவை ஆள்கிருனே, அவனே உனக்கு அந்தராத்மா, அந்தர்யாமி— அம்ருதன் என்பதால், ஸர்வசித்அசித் வஸ்துக்கள் பரமாத்மாவுக்குச் சரீரமாகிற படியாலே, (இவன் அவைகளுக்கு ஆத்மாவாக விருப்பதால்) ஸர்வதா ஸர்வாத்மபூதனாக விருக்கிருன். பரமாத்மா அவனுக்கு எப்போதாவது அவிபக்த நாமரூபம் யேற்படுகிறது-எப்போதாவது அவிபக்த நாமரூபம் யேற்படுகிறது.

அதாவது நாமரூபவியாகரணமின்றி ஸூக்ஷ்ம தசையில் (பிரளயத்திலே) சித் அசித் வஸ்துக்கள் அவனிடம் ஒடுங்கி லயமடைகின்றன) ஸ்ருஷ்டி சமயத்தில் விபக்த (நாமரூப வ்யாகரணம் யேற்பட்டு சித் அசித் வஸ்துக்கள் ஸ்தூல

மடைந்து அதனுல் வேறுபட்டிருக்கின்றன. பிரும்மத்தைக் காட்டிலும் அப்போதும் (பிரளயத்திலும் ஸ்ருஷ்டியிலும்) அவை பிரும்மத்துக்கு சரீரமாக விருக்கிறபடியால் பிரும்மமே விபக்த அவிபக்த நிலையில் பேசபபடுகிறது. சூக்ஷம் சித் அசித் விசிஷ்ட பிருஹ்மம் ஸ்தூல சித் அசித் விசிஷ்ட பிரும்மமாகிறது. ஸ்ருஷ்டியிலே அவஸ்தா பேதம் பிரும் மத்துக்கு யேற்படுகிறது. மாறுதல் சரீரத்திற்கே பிரும் மத்துக்கு அல்ல, இது மீண்டும் விளக்கப்படுகிறது எப்போது பிரும்மம் விபக்த நாமரூபம் கொண்டதோ அப்போது (ஸ்ருஷ்டிக்கு பின்பு) அந்த பிரும்மமே பல விதப் பட்ட காரியங்களாக சொல்லப்படுகிறது. சித் அசித் ஸ்தூல மாகி நாமரூபவ்யாகரணம் யேற்பட்டு பஹூத்வம் பஹூபவன த்வம் (ஜகத்திற்கு) யேற்படுகிறது. அதனுல் ஒன்றுன பிரும்மத்தை பஹூத்வம் என்று காரியத்தால் சொல்லப்படு கிறது.

அதேமாதிரி எப்போது அவிபக்த நாமரூபம் (பிரளய தசையில் ஸ்ருஷ்டிக்கு முன்பு) சூக்ஷ்மமாக அந்த சித் அசித் வஸ்துக்கள ஒடுங்கிப்போய் பிரும்மத்துடன் ஒட்டிக் கொண்டு இருக்கிறபோது, பிரும்மம் ஒன்றுகவே அத்விதீய மாகவே பிரும்மத்தைத் தவிர வேறு பிரதானமோ யாதும் இல்லாதபடி) விருந்ததால் அந்த பிருஹ்மம் உபாதான காரணமாகிறது. இவ்விதம் ஸர்வதா சித் அசித் வஸதுக் களைச் சரீரமாகக் கொண்ட பரபிரும்மமே அவிபக்த நாம ரூபத்திருல் விருக்கும் போது எந்த காரண தசையில் அவ்விதமிருந்ததோ सा गौरनाद्यन्तवती – विकारजननीमज्ञाम् अजामेका என்பவைகளால விளக்கப்படுகிறது. அது (பிரகிருதி) எல்லா மாறுதல்களுக்கு உற்பத்தி ஸ்தானமாகவும் அறிவற்றதாகவுமிருக்கிறது. (சூலிகா. 3); அது (பிருகிருதி பிறப்பற்றது ஒன்றுகவிருக்கிறது (சூலி. 4-5)

ஆனுல் சுருதியில் இவ்விதம் சொல்லப்படுகிறதே என்று சொல்லலாம் சுபோ. உ. महान् अव्यक्ते लीयते; अव्यक्तमक्षरे लीयते என்று பிரளய சுருதிகளில் அவ்யக்தத்தின் உற்பத்தி

பிரளயத்தில் காட்டப்படுகிறதோ; (மஹான் அவ்யக்தத்தில் லயமடைகிறது. அவ்யக்தம் அக்ஷரத்திலும்; அவ்யக்தம் என்பதற்கு உற்பத்தி நாசம் இரண்டும் உண்டு எனக்காட்டப்படுகிறது. (அஜாம் गौरित्यादि பதம் அவ்யக்தத்தைக் குறிக்காது ஆனால் மூலபிரக்ருதியை சொல்லும். மூலபிரகிருதியே அசித் என்றும் சொல்லப்படுகிறது) (அவ்யக்தம் என்பதற்கு திரிகுண அவஸ்தைகளைச் சொல்வது; குணவைஷம்ய ரூபவ்யக்தத்வ ப்ரத்யனீக குணத்ரய ஸாம்யாவஸ்தையைச் சொல்வதால் திரிகுணம் என்று அவ்யக்தம் எனச் சொல்லப்படுகிறது. (அக்ஷர சப்தம் ஜீவனைக் குறிக்கும்). மஹா பாரதத்திலும் சாந் 389. तस्मादव्यक्तमुत्पन्नं त्रिगुणं द्विजसत्तम:...अव्यक्तं पुरुषं ब्रह्मन् निष्क्रिये संप्रलीयते பிராம்மணோத்தமா, அவ்யக்தம் முக்குணங்களை (ஸத்வரஜஸ் தமஸ்ஸாகிற) உடையது அதிலிருந்து உற்பத்தியடைந்தது மோக்ஷ தர்மத்திலே நாரதருக்கு பகவானால் ஸ்வேததீபத்தில் உபதேசிக்கப்பெற்றது.) (அவ்யக்தம் புருஷனிடம் முழுதும் லயமடைகிறது. அப்போது அந்த புருஷன் காரியம் ஒன்றுமில்லாமல் (நிஷ்கிரியம்) ஆகிறான்.

இவ்விதம் சொல்வதால் தோஷமில்லை. அதாவது (நாம் சொல்லுகிறோம் அசித் வஸ்து பிரும்மத்துக்கு சரீரமாகிறது. அது அவ்யக்த சப்தவாச்யமான திரிகுண வஸ்தையை அடைவதால் பிரும்மத்தின் காரியமாகும். (எப்படி) यदातमस्तन्न दिवा न रात्रि: - (என்று) எப்போது தமஸ் அங்கிருக்கிறதோ, அப்போது அங்கு தினமும் இல்லை. ராத்திரியும் இல்லை. (ஸ்வே. 2. 4. 18); இதனால் ஸம்பூர்ண பிரளயம் யேற்படும் போது, அசித் வஸ்து பிரும்மத்தை ஆத்மாவாகக் கொண்டு, தான் அதன் சரீரமாக, மிகச்சூக்ஷ்மமான நிலையில் இருக்கிறது. அந்த அசித் வஸ்துவுக்கு அவிபக்த தமஸ் எனப்பெயர். (ஜிக்ஞா அதிகரணம் பார்க்கவும்). ஆகவே ஜகத் காரணமான பிரும்மத்துக்கு அந்த அசித் வஸ்து பிரளய தசையில் சரீரமாக விருப்பதாலே அதி சூக்ஷ்ம அவஸ்தையை அடைந்திருப்பதால் அது நித்யமேவ

(நித்யம்தான்) ஆயினும் அது பிரும்மத்துக்கு சரீரமாக விருக்கிறது तत्प्रकारं ब्रह्मैव; ஆகையால் गौरनाद्यन्तवती (பசு - அந்த பிரசிருதி, அதற்கு ஆதியுமில்லை அந்தமுமில்லை என்று சுருதிகளில் சொல்லப்படுகிறது (சூலிகா. 5. 2)

இதே காரணத்தினால்தான், சுபோ. 2 अक्षरं तमसि लीयते तमः परेदेव एकीभवति அக்ஷரம் தமஸ்ஸியில் ஒடுங்குகிறது. தமஸ் (மூல பிரகிருதி) பரமாத்மாவும் ஒன்றாகி ஏகீபவதி ஆகிறது. (அதனால் லயமில்லை, அழிவதில்லை, நித்யம்) ஏகீபாவம் மாத்திரம் தான் தமஸ்ஸுக்கு ஓதப்படுகிறது. லயம் என்று சொல்லப்படவில்லை. ஏகீ பாவம் என்பது பிரும்மத்துடன் சேர்ந்து ஒன்றாகி, அப்போது தமோ சப்தத்தினால் அதி சூக்ஷ்ம அசித் வஸ்து (மூல பிரகிருதி) பிரும்மத்திற்கு சரீரமாக அவிபக்த (நாம ரூபவ்யா காரணம் (பிரிக்கப்படாத) அதி சூக்ஷ்ம அவஸ்தையில் பிரும் மத்துடன் கூழிக் கொண்டிருக்கிறது. சரீரமாக என்று சுருதியால் காட்டப்படுகிறது. (யஜு. பிர. தை. 2. 8. 9 तम: आसीत् तमसा गूढमग्रे प्रकेतम्...तमसस्तन्महिनाऽजायतैकम् । என்பதால் இதே சொல்லப்படுகிறது. (அங்கே அப்பொது) தமஸ் இருந்தது. தமஸ்ஸினால் அறிவு மறைக்கப்பட்டிருந்தது. சக்தியினால் அது தமஸ்ஸிலிருந்து உற்பத்தியாயிற்று. அது ஏகம் (ஒன்றுதான்) இங்கே ருக் வேதத்திலும், தை. பிரா. ஸ்ருஷ்டி தமஸ்ஸிலிருந்து உண்டாயிற்று. பிரும்மம் தபஸ் செய்தது (ஆலோசித்தது).

மனு ஸ்மிருதியிலும் आसीदिदं तमोभूतमप्रज्ञातमलक्षणम् । अप्रतर्क्यमविज्ञेयं प्रसुप्तमिव सर्वतः அது (அப்போது) தமஸ்ஸின் நிலையிலிருந்தது. நேராகப் பார்க்கப்பட முடியாமல் அதி சூக்ஷ்மமாக, குணர ஹிதமாக, அறியப்பட முடியாதபடி, வித்யாஸப்படுத்தப்பட்ட நாம ரூபாதிகள் இல்லாதபடி, அதி சூக்ஷ்ம ஸ்திதியில் பிரஸுப்த மிவ சுஷுப்தியில் இந்திரியங்கள் எவ்விதம் ஒடுங்கியிருக்குமோ அதுபோல ஸர்வமும் ஒடுங்கியிருந்தது. (பிரும்மத்தினிடம்). यस्मा-न्मायीसृजते विश्वमेतत् இந்த மாயின் என்பவனிடமிருந்து

மாயையை உடைய பரமாத்மா என்பதாகும். விஸ்வமாகிற இந்த உலகம் உற்பத்தியாக்கப்பட்டது. இதிலிருந்து சொல்லப்பட்டது. பிரும்மத்துக்கு பரிணுமம் இல்லே. மூல பிரகிருதிக்கும் சித் வஸ்துக்களுக்கும் தான் உண்டு. பிரும்மம் ஆத்மாவாகிற படியால் இவை சரீரமாகிறபடியால் சரீரத்வாரா பரிணுமம் ஓதப்படுகிறது. இந்த விஷயம் கூடிய சீக்கிரம் சொல்லப்படும். பிரும்மம் நித்யம், நிர்விஹாரம், ஸத்யம், என்பதாகும்.

(ஸ்வேதா. 2. 4. 2-ல் பிரும்மம் ஒவ்வொரு காரண வஸ்துவிலும் அதிஷ்டாதாவாகவிருக்கிறது. அதில் எல்லாப் பொருள்களும் ஒன்று சேர்ந்து, பிரளய தசையில் அதனிடமே லயமடைந்து உற்பத்தி தசையில் அவை வெளிக் கிளம்புகின்றன என்று ஓதப்படுகிறது.

இனிெருவிஷயம் உபாதானமும் நிமத்தமும் பிரும்மத்தினிடம் ஒன்று சேர்வதால் களி மண் கூட இரண்டு காரணங்களாகுமே வெனில் களி மண் அசேதனம், நிமித்தம் என்பதற்கு கேவலம் சித்வஸ்து மாத்திரமல்ல வ்யாபகஞாத்ருத்வம் வேண்டும். மண் பானேக்கு குலாலன் தேகத்துடனிருப்பதால் நிமித்தம். ஆகவே பரமாத்மா விஷயத்தில் விலக்ஷண சக்தி உள்ளதால் நிமித்த உபாதான காரணங்கள் ஒன்று சேரலாம்

ஆகவே நீ ஆட்சேபிக்கலாம் (சாங்கியனேக்குறித்து) ஒரு வஸ்துவுக்கு நிமித்த உபாதானத்வம் ஏற்படாது. மேலும் காரியம் ஒரே காரகனுல் (ஒரே கர்த்தாவென்று சொல்லும்படி) உற்பத்தியாகாது. இப்படிப்பட்ட நியமம் லோகத்திலே காணப்படுகிறது. ஆகையால் சுருதி எவ்விதம் அர்த்தமில்லாதபடி இவ்வாறு சொல்லுமோ अग्निना सिञ्चेदितिवत् ஒருவன் அக்னியினுல் தெளிக்கட்டும் (தெளிக்க வேண்டியது) இது எப்படி அர்த்தமின்றி இருக்குமோ அது போல வேத வசனங்கள் ஒரே வ்யக்திக்கு நிமித்த உபாதான காரணத்வம் ஒரே காரகன் இருப்பது, சொல்வது

விருத்தமாகிறது. இவ்விதம் சொல்வாயாகில் நாம் பதில் சொல்வது, ஸகலேதர விலக்ஷணன் பரஸ்ய பிரும்மண: (பரமாத்மா) அவனுக்கு ஸர்வ சக்தி ஸர்வக்ஞத்வம் எல்லாம் அவனிடம் கூடியிருக்கின்றன. ம்ருத் (களிமண்) கூட உபாதான காரணம் நிமித்தமாகலாமே என்று கூடச் சொல் வாயாகில் அது அசேதனம்-ஞானமில்லை. அதற்கு அதிஷ்டாதாவாக (நிமித்த காரணமாக) விருக்க யோக்யதை யில்லை. அதேபடி குலாலன் நிமித்தமாகிறானே, அவன் உபாதான காரணமாக மாட்டான். ஏனெனில் பரிணாம சக்தி அவனுக்கில்லை. மேலும் ஸத்ய ஸங்கல்பமும் இல்லை. ஆகையால் பிரும்மமே ஜகத்தின் நிமித்தமும் உபாதான காரணமும் ஆகிறது.

**सूत्रम्:— अभिध्योपदेशाच्च (1-4-24)**
**அபித்யோபதேஸாச்ச (1-4-24)**

அபித்யோப தேஸாத்ச— (பிருஹ்மம் தானே பலவாக ஆவதாக ஸங்கல்பிக்கிறதாக(சுருதி)கூறுவதாலே பிரும்மம் உபாதான காரணமாகிறது.

இந்த காரணத்தினாலும் பிருஹ்மம் உபாதான நிமித்த காரணமாகிறது. ஏனெனில் சுருதி தை. ஆ. 6-2 सोऽकामयत बहुस्यां प्रजायेयेति - சா. 2-6-2-2 பிரும்மம்-ஸங்கல்பித்தது நான் பலவாக ஆவேன்; तदैक्षत बहुस्यां प्रजायेय சா. 2-6-2-3 நான் பல வாகக்கடவேன் என்று பிரும்மம் சங்கல்பித்தது. (அதாவது நானே பலவாக ஆவேன். பரிணாமத்தை அடைவேன் என அர்த்தம் (சரீரத்வாரா); இல்லாத போனால் நான் ஸ்ருஷ்டிக் கக் கடவேன் என்று சங்கல்பித்ததாக கூறவேண்டும். அவ் விதம் கூறாமல், நானே பலவாக ஆவேன் என்பதால் உபா தான காரணம் ஆகும். பிரும்மம் ஸ்வயமாகவே பஹுபவன ஸங்கல்பம் செய்தது. (எப்படிப்பட்ட பரிணாமம் ஸ்ருஷ்டி) விசித்திரசித் அசித்ரூபேண अहमेव (நானே தான் ஆயிடு வேன்). बहुस्याम् அவ்விதமே प्रजायेयेति பிரஜைகளை (சித் அசித் வஸ்துக்களாக) ஸ்ருஷ்டிக்க முதலில் சங்கல்பம். பிறகு ஸ்ருஷ்டி உபதேசம் ஏற்படுகிறது.

सूत्रम्:—साक्षाच्चोभयाम्नानात् (1-4-25)
ஸாக்ஷாச்சோபயாம்நாநாத் (1-4-25)

ஸாக்ஷாத் — நேரேயே, உபயாம நாநாத்ச (நிமித்தமாயி ருக்கை உபாதானமாகவிருக்கை ஆதிய) இரண்டு தன்மை களும் பிருஹ்மத்துக்கு இருப்பதாக ஒரு வேதவாக்யம் கூறு கிறது. (அதனுல் பிரும்மம் உபாதான காரணமாகும்).

**(வேதாந்தி)** கேவலம் பிரதிக்ஞை திருஷ்டாந்தத்தி னுலே மாத்திரம், பிரும்மம் நிமித்த - உபாதானத்வம்மாகிற இரு விதகாரணங்களாகும் என்பது அல்ல. சுருதி கூட அவ் விதம் இருப்பதற்கு ஓதுகிறது. தை. பி. 8-7— किं स्विद्वनं क उस वृक्षआसीत् यतोद्यावापृथिवी निष्ठतक्षुः। मनीषणो मनसा पृच्छत इदुतत् यदध्यतिष्ठद्भुवनानिधारयन्। ब्रह्मवनं ब्रह्म स वृक्ष आसीत् यतो द्यावापृथिवी निष्ठतक्षुः। मनीषिणो मनसा विब्रवीमि वो ब्रह्माध्यतिष्ठद्भुवनानि धारयन्। அறிவாளியே, எது வனம்? எது மரம்? வனம் (நிமித்தம்) விருக்ஷம் உபாதான காரணம) எதிலிருந்து அவர்கள் த்யுலோகத்தையும் பிருத்வியையும் உண்டு பண்ணினுர்கள்? உங்கள் மனத்தையே கேட்டுக் கொள்ளுங்கள். பரமாத்மா உலகங்களைத் தாங்குகிறவன் அந்த பரமாத்மா எந்த வஸ் துக்களுக்கு அதிஷ்டாதாவாகவிருக்கிறுன் என்று. அர்த்தம் (பரமாத்மா) பிருஹ்மமே வனம், பிரும்மமே வ்ருக்ஷம். அதிலிருந்து அவன் தியு பிருத்வியைச் ச்ருஷ்டித்தான். பிரும்மமே இந்த உலகங்களைத் தாங்கி தானே தன் மனத் துதில் அத்யக்ஷிக்கிறுன். இதை நான் சொல்கிறேன் அறிவாளிகளே கேளுங்கள்.

(இங்கு சொல்லப்படுவது வனம்போல ஆதாரமாயிருப் பது எது? எதிலிருந்து இந்த உலகம் ஆக்கப்பட்டதோ அந்த விருக்ஷம் உபாதானம் எது? உலகங்களை தரித்து நிற்பவன் எந்த உபகரணங்களை அதிஷ்டித்து நிற்கிறுன்! ஸ: வ்ருக்ஷம் என்பதற்கு த்யாவா பிருத்வியாதி ஸர்வகார்ய உபாதான பூதவ்ருக்ஷம். முந்தின இரண்டு சூத்ரங்களில்

வேதங்களின் பொதுவான அர்த்தம் கொடுக்கப்பட்டது இதிலும், சூத். 26, 28லும் வேதபிரமாணங்களே கொடுக்கப்படுகின்றன) சிஷ்யர்கள் குருவை வினவினர் — ஸ்ருஷ்டிக்கு முன்பு இந்த உலகம் எங்கிருந்தது? அதற்கு உபாதான காரணம் யாது? பரமாத்மாவினுல் உபயோகப்படுத்தப்பட்ட ஆயுதங்கள் யாவை? குருவின் பதில் பிரும்மம்தான் இடம்; அதுதான், உபாதான காரணம் ஆயுதங்களின் ரூபமாக விருந்த அது, அதற்கே அது அத்யக்ஷகராக விருந்தது. இங்கே பிரும்மம் ஸ்ருஷ்டிகர்த்தா, எவை உபாதானம் அதற்கு பிரும்மாத்மகமாக எவையோ அவைகளை லோக திருஷ்டியினுல் கேள்விகேட்டால், அதற்குப் பதில் ஸகலேதர விலக்ஷண பிருஹ்மம் ஸர்வசக்தியுள்ள பிரும்மம் என்பதால் விருத்தமில்லை. இதனுல் பிரும்மமே உபாதான உபகரணங்கள் ஆகும் (பிரும்மாத்மகமாக உபகரணங்கள் என அர்த்தம்) என்பதால் பரிகரிக்கப்படுகிறது. ஆகவே இரண்டு காரணங்களும் பிரும்மம். (பிரும்மம் எல்லா உலங்களையும் தரித்தும், உபகரணமான தன்னையே அதிஷ்டித்து நிற்கிறது. புவநாநி தாரயந் நிமித்தமாக எடுக்கப்பட்ட பிருஹ்மத்தையே, பிருஹ்மஸ வ்ருக்ஷ ஆஸித் என்று உபாதான காரணமாக இந்த வாக்யம் கூறுகையாலே, இரண்டும் பிரும்மமே ஆகும் என்பதாம்.

சூத்ரம்: आत्मकृतेः (1-4-26)

ஆத்மகிருதே: (1-4-26)

ஆத்மகிருதே: பிரும்மம் தன்னைத்தானே ஸ்ருஷ்டித்துக் கொண்டதாகக் கூறுவதாலே பிருஹ்மம் உபாதான காரணம்.

தை. ஆ. 6-2 सोऽकामयत बहु स्यां प्रजायेय (அது ஸங்கல்பித்தது நான் பலவாக ஆகக்கடவேன்) என்கிறபடி ஸ்ருஷ்டி செய்யத் தொடங்கியதாக இந்த பிரகரணத்தில் கூறப்பட்ட பிருஹ்மம் तदात्मानं स्वयमकुरुत (தை. 7-1) அந்த பிரும்மம் தன்னைத் தானே ஸ்ருஷ்டித்துக் கொண்டது

இதனுல்தானே ஸ்ருஷ்டிகர்த்தாவாக ஆயிற்று. (கர்மத்வம் கர்த்ருத்வம் ச) என்பதால்தானே ஆவதால் ஆத்மந ஏவ பஹீத்வ கரணுத்—காரணமாயிற்று. அதனுல் அதனுடைய நிமித்த உபாதானத்வம் காட்டப் பெற்றது. இங்கே அவிபக்த நாமரூப ஆத்மா கர்த்தா (நாமரூபவியாகரணம் யேற்படுவதற்கு முன்பு அது ஒன்ருகவிருந்தபடியால் கர்த்தா); அவனே விபக்த (பிரிக்கப்பட்ட ஸ்ருஷ்டியில்) நாமரூபகள் கொண்ட காரியம் என்பதால் கர்த்ருத்வம் கர்மத்வம் இரண்டும் பிரும்மமாக விருப்பதில் விரோதம் ஒன்றுமில்லே. இப்படி தன்னைத்தானே ஸ்ருஷ்டித்துக் கொண்டதாகக் கூறுவதால், நிமித்தகாரணமான பிரும்மமே உபாதான காரணமாகும். स्वयमेवाऽऽत्मानं तथाकुरुतेति निमित्तउपादानं च। நாமரூப பிரிவுகளற்ற சேதனுசேதனங்களைச் சரீரமாகக் கொண்ட பிரும்மம் ஸ்ருஷ்டிகர்த்தா; பிரிவுகளை உடைய சேதனுசேதனங்களைச் சரீரமாகக் கொண்ட பிரும்மமே ஸ்ருஷ்டிக்கப்படும் பொருளாகவும் ஆகிறதாகையாலே ஸ்ருஷ்டிகர்த்தாவாயும், கர்மம் (விஷயமாயும்) ஆயிற்று நிமித்த (கர்த்தா) உபாதான காரியம் (கர்மம்) ஆயிற்று.

தை. ஆ. 1-2 सत्यं ज्ञानं अनन्तंब्रह्म பிரும்மம் ஸத்யமாயும் ஞான முள்ளதாயும் அனந்தமாயுமிருக்கிறது. தை. ப்ரு आनन्दो ब्रह्म பிரும்மம் ஆனந்தியாகவிருக்கிறது; अपहतपाप्मा-विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपास: பிரும்மத்திற்கு பாபமின்மையும் ஜரையில்லாமை இறப்பு இல்லாமை துக்கமின்மை பசிதாகமின்மை ஓதப்படுகிறது (சா. உ. 8-1-5) निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम् பிரும்மம் அவயவமற்றது கிரியை இல்லாதது சாந்தமுள்ளது தோஷமில்லாதது களங்கமற்றது. பிரு. 6-4-25 स वा एष महानज आत्माऽजरोऽमर: மேலே சொல்லப்பட்ட புருஷன் மஹான் ஆத்மா பிறப்பற்றவன், ஜரையற்றவன் இறப்பு அற்றவன் என்பவைகளால் பிரும்மம் ஸ்வபாவமாகவே நிரஸ்த நிகில சேதன அசேதனங்களுக்குள்ள தோஷங்கள் இல்லாதவன், நிரதிசய ஞான ஆனந்தம் முதலியவற்றிற்கு இருப்பிடமாகவிருப்பது; அந்த பிரும்மம் விசித்திர அனந்த அபுருஷார்த்தங்களுக்கு

இருப்பிடமாகவிருக்கும் சித் அசித் வஸ்துக்கள் மிஸ்ரமான பிரபஞ்சத்திற்கு ஆத்மனோ பஹீத்வம் எனப்படும் ஸ்ருஷ்டிக்கு முன்பு அது சங்கல்பம் செய்தது என்பதால் சங்கல்ப பூர்வக ஸ்ருஷ்டி அதனுல் பிரும்மத்தின் பஹீத்வகரணம் பலவாக ஆகுதல் எப்படியெற்படும் என்கிற சங்கைக்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிருர் அடுத்த சூத்திரத்தில்

சூத்ரம் : परिणामात् (1-4-27)
பரிணுமாத் (1-4-27)

பரிணுமாத் ஐஸ்வர்யத்தைக் காட்டும் பரிணுமத்தையே இங்கு பிருஹ்மத்திற்குக் கூறுகையாலே பிரும்மத்தின் பெருமைக்கு ஒரு குறைவுமில்லை.

பரிணும ஸ்வபாவத்தை உடையது (பிரும்மம் சரீர த்வாரா அடையும் பரிணுமமாகும். ஸ்வரூபத்திலே இல்லை). முற் கூறியபடி, பிரும்மமே உலகமாகப் பரிணமிக்கும் உபாதானமாவதாகக் கொண்டால் பிரும்மத்தின் நிர்விகார த்வம் முதலிய சுருதி ஸித்தமான பெருமைகளுக்கு குறை வருமே என்ருல், இந்த பரிணுமம் ஹேயத்வமன்று, பெருமையையே அளிக்கும். ஜட ஜீவர்களின் பரிணுமமே பிரும்மத்தின் சரீரத்வாரா யேற்படுவதால் பிரும்மம் ஸ்வரூபத்திலே விகாரமற்றது. சரீரத்திலே தான் மாறுபாடு என்பதாகும். ஆகவே இங்கு சொல்லப்படும் பரிணுமம் மேலான பிரும்மத்திற்கு யாதொரு தோஷத்தை உண்டாக்குவதில்லை. ஆனுல் அது நிரங்குச ஐஸ்வர்யங்களையே பிரும்மத்துக்கு அளிப்பதாகும். அதனுல் பிரும்மத்தின் பெருமைகளை விஸ்தரிப்பதாகும். அநன் ஆற்றலையும் சக்தியையும் விபூதிகளையும் அதிகரிப்பதாகும். இம்மாதிரியான பரிணுமம் (மாறுதலே) ஓதப்படுகிறது. பிரும்மம் ஸ்வரூபத்திலே அசேஷ ஹேய ப்ரத்யனீக கல்யாணை கதானம் (கல்யாண குணங்களுக்கு யிருப்பிடம்) ஸ்வேதர ஸமஸ்த வஸ்து விலக்ஷணன்; (ஸ்வரூபஸ்வபாவத்திலே வேறுபட்டவன்); ஸர்வக்ஞன்; ஸத்ய ஸங்கல்பன், அவாப்த ஸமஸ்த காமன்; அநவதி காதிசய

ஆனந்த ரூபி; தன் பிரயோசனத்திற்கும் (லீலா மாத்ரம்) சேதனு சேதன உபகரண பூத ஸமஸ்த சித் அசித் வஸ்துக்களைத் தனது சரீரமாகக் கொண்டு, தான் அவைகளுக்கு ஆத்ம பூதனுகவிருப்பவன், அப்பேற்பட்ட பர பிரும்மம், அது தனது சொந்த சரீரமாகிற பிரபஞ்சம், தன் மாத்திரைகள், அஹங்காரம் முதலியவைகளுக்கு ஆதிகாரண பரம்பரையாக விருப்பதாக. ஓதப்படுவது. அது பிரளய தசையில் எல்லாம் ஒடுங்கிப் போய், அகி சூக்ஷ்மமாக ஆகி தமஸ் சப்த வாச்யமாக விருக்கிறது. அந்த பிரகிருதியாகிற அசித் வஸ்து, அதி சூக்ஷ்ம காரணத்தினுல் தனியாகப் பிரித்துச் சொல்லப்படாதபடி, பரமாத்மாவின் சரீரமாக விருக்கிறது. அச்சமயம் அது பரமாத்மாவுடன் ஒன்ருகி கலந்து விட்டிருக்கிறது (சரீரமாக); அந்த தமஸ் பிரும்மத்திற்கு சரீரமாக விருக்கிறது. தமஸ்ஸை சரீரமாகவுடைய பிருஹ்மம் அது நினைக்கிறது—ஸங்கல் பிக்கிறது. "நான் முன்பு போல என் சரீரமாகிற சேதன அசேதன வஸ்துக்களடங்கிய இந்த உலகத்தை நாம ரூபங்களால் வித்யாஸப் படுத்துவேன்" என்று ஸ்ருஷ்டியை துவக்கியது. பிறகு லயமடையும் போது, பிரகிருதியின் அந்த அந்த தத்வங்கள் லயக்ரமத்திலே ஒன்று ஒன்ருக ஒடுங்கும் போது, வரிசையாக ஓதப்படுகின்றன. இம்மாதிரி ஆரோஹண அவரோஹண க்ரமத்திலே இவை பிரும்மத்திற்குச் சரீரமாக விருக்கிறபடியாலே, பிரும்மத்தை, ஆத்மானம் பரிணமயதீதி, தானே பரிணமிக்கிறது என்று ஸர்வ வேதங்களிலும் பரிணுமம் ஓதப்படுகிறது.

பிரும்மத்திற்கு ஸம்பூர்ண ஜகத்தும் சரீரமாகிறது. ஜகத்தோ பிருஹ்ம சரீரத்வம். அந்த பிரும்மம் அதற்கு ஆத்மாவாக ஆகிறது என்பது இங்க சுருதியில் ஓதப்படுகிறது. (பிரும்மண: ததாத் மத்வம்); பிரு. 2-5-7-ல்

**यः पृथिव्यां तिष्टन् पृथिव्या अन्तरो यं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं यः पृथिवीमन्तरो यमयति, एष त आत्माऽन्तर्यामृतः** என்று ஆரம்பித்து **यस्याऽऽपःशरीरम्, यस्याग्निश्शरी-**

रम्; यस्यान्तरिक्षं शरीरम्; यस्यवायुश्शरीरम्; यस्यद्यौश्-शरीरम्; यस्यादित्यः शरीरम्; यस्यदिश्शरीरम्, यस्यचन्द्रतारकं शरीरम्, यस्याकाशश्शरीरम्, यस्य तमश्शरीरम्: यस्य तेज श्शरीरम्, यस्य सर्वाणि भूतानि शरीरम्, यस्य प्राणश्शरीरम्-यस्य वाक शरीरम्, यस्य चक्षुः शरीरम्, यस्य श्रोत्रं शरीरम्, यस्यरेतः शरीरम्, இப்படியாக முடிக்கிறது காண்வசாகை; மாத்யந்தின சாகையில் விக்ஞான ஸ்தானத்தில், यस्याऽऽत्माशरीरम् என்று விசேஷங்களாகிற உலகங்கள், யக்ஞங்கள், வேதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டு, பரமாத்மாவின் சரீரமாக ஆகின்றன என்று அதிகமான பாடமும் காணப்படுகிறது. (எந்த பரமாத்மாவுக்கு பூமி சரீரமோ என்று ஆரம்பித்து, (எவனை பிருத்வி அறியாதோ எவனுக்குக் ப்ருதிவி சரீரமோ - பிருத்விக்குள்ளே சஞ்சரித்துக் கொண்டு கட்டளையிடுகிறதோ அவனே ஆத்மா அந்தர்யாமி, அம்ருதன் என்று ஆரம்பித்து) பரமாத்மாவுக்கு ஆப: ஜலங்கள் சரீரமாயும், அக்னி சரீரமாயும், ஆகாசம் சரீரமாயும், வாயு சரீரமாயும், த்யௌ லோகம் சரீரமாயும், ஆதித்யன் சரீரமாயும் திசைகள் சரீரமாயும், சந்திர தாரகைகள் சரீரமாயும், ஆகாசம் சரீரமாயும், தமஸ் சரீரமாயும், தேஜஸ் சரீரமாயும், ஸர்வ பூதங்களும் சரீரமாயும், பிராணன் சரீரமாயும், வாக்கு சரீரமாயும், கண் சரீரமாயும், ச்ரோத்ரம் சரீரமாயும், மனம் சரீரமாயும், தோல் (த்வக்) சரீரமாயும், விக்ஞானம் சரீரமாயும், ரேத: சரீரமாயும் இருக்கிறது என்று கண்வ சாகையின் முடிவிலே சொல்லப்படுகிறது. மாத்யந்தின பாடத்தில விக்ஞான ஸ்தானத்தில் ஆத்மா சரீரம் என்றும் சொல்லி அத்துடன் கூடச் சேர்த்து, லோகங்கள், யக்ஞங்கள், வேதங்களும் பரமாத்மாவின் சரீரமாவிருக்கின்றன என்கிற அதிக பாடம் இருக்கிறது. (தமஸ் சரீரம் பிரும்மேதி) என்றால், சூக்ஷ்ம விசிஷ்ட பிரும்மபவதி என்று அர்த்தம். அவரோஹண கிரமத்தை அப்யய விபரீத க்ரமம் உற்பத்தி க்ரமம் மாறுக, லயக்ரமம் போதிக்கப்படுகிறது.

லியதே என்பது லயக்ரமம். உதாரணமாக ஆகாசம் இந்திரி யங்களிலும், இந்திரியங்கள் தன் மாத்திரைகளிலும், லயம் சொல்லப்படுகிறது.

சுபோலோப நிஷதிதிலும், பிருத்வி முதலான தத்வங் கள் பரமாத்மாவுக்கு சரீரமாக விருப்பதாகச் சொல்லி, பிறகு ஓதப்படுகிறது. வாஜஸேநயகர்களால் (பிரு. உப.) ஓதப் படாத தத்வங்கள் பரமாத்மாவுக்குச் சரீரமாயும் பிரும்மம் அவைகளுக்கு ஆத்மாவாக ஆகிறது என்றும் காட்டப் படுகிறது.

**यस्य बुद्धिः शरीरम्, यस्य अहङ्कारश्शरीरम्; यस्य चित्तं शरीरम्; यस्याव्यक्तं शरीरम्; यस्याक्षरं शरीरं, यो मृत्यु-मन्तरे सञ्चरन् तस्य मृत्युशरीरम्, यं मृत्युर्नवेद, एष सर्वभूता-न्तरात्माऽपहतपाप्मादिदिव्योदेव एको नारायणः**

எவனுடைய சரீரம் புத்தியாகவும், அஹங்காரமாயும், மன மாகவும், அவ்யக்தமாயும், அக்ஷரமாயும் இருக்கிறதோ, எவன் ம்ருத்யுவினுள்ளே சஞ்சரிக்கிறதோ, எவனுடைய தேகம் ம்ருத்யுவாக விருக்கிறதோ, எவனை ம்ருத்யு அறி யாதோ, அவனே எல்லாப் பிராணிகளுக்கும் அந்தராத்மா, பாபமற்றவன் அவரே திவ்யமான பிரபு, ஒரே ஒன்றான நாராயணர்.

இங்கே ம்ருத்யு சப்தம் மிகமிக சூக்ஷ்மமாக விருக்கும் அசிஸ்வஸ்து தமஸ் சப்தத்தினால் காட்டப்படுகிறது. ஏனெனில் இதே உபநிஷத்தில் லயக்ரமம் இவ்விதம் ஓதப் படுகிறது. அவ்யக்தம் அக்ஷரத்தில் ஒடுங்குகிறது; அக்ஷரம் தமஸ்ஸில் (மூலப்பிரகிருதியில்) லயமடைகிறது எல்லா ஜீவாத்மாக்களுக்கும் ஞான ஆவரணத்தை வேறொடு மறைப்பதாலே அது (தமஸ்) ம்ருத்யு சப்தத்தினால் காட்டப்படுகிறது சுபோலோபநிஷத்திலேதான் பிரும்ம சரீரமாகவிருக்கும் எல்லாத் தத்துவங்களும் பிரும்மத்தி னிடம் ஒடுங்குகின்றன, ஏனெனில் அவை பிரும்மத்தை

ஆத்மாவாகவுடையதாலும் அவை பிரும்மத்துக்கும் சரீர மாக விருப்பதாலும் (சுருதி)

पृथिव्यप्सु प्रलीयते, आपस्तेजसि लीयन्ते, तेजो वायौ लीयन्ते, वायुराकाशे लीयते, आकाशमिन्द्रियेष्विन्द्रियाणि तन्मात्रेषु, तन्मात्राणि भूतादौ लीयन्ते, भूतादिर्महति लीयते, महानव्यक्ते लीयते, अक्षरं तमसि लीयते, तमः परेदेव एकीभवति-

ப்ருதிவி அப்பில் ஒடுங்குகிறது அப்பு தேஜஸ்ஸில்; தேஜஸ் வாயுவில் வாயு ஆகாசத்திலும், ஆகாசம் இந்திரியங்களிலும் இந்திரியங்கள் தன் மாத்திரைகளில்; தன் மாத்திரைகள் பூதாதிகளிலும் பூதாதிமஹத்திலும், மஹத் அவ்யக்தத் திலும், அவ்யக்தம் அக்ஷரத்திலும் அக்ஷரம் மீண்டும் தமஸ் ஸில் ஒடுங்குகிறது. தமஸ் பரமாத்மாவோடு ஏகிபவதி ஒன்ருகிவிடுகிறது (இங்கே தமஸ் ம்ருத்யு பதங்கள் மூல பிரகிருதியைக் குறிக்கும். பிரகிருதி ஞானத்தை மறைக் கிறது ம்ருத்யு ஸம்சாரம் (இறப்பு) அதனால் ம்ருத்யு) சூத்ரக் காரரும் பிற்பாடு சொல்லப்போகிருர். न कर्माविभागादिति चेन्नानादित्वादुपपद्यते चाप्युपलभ्यते च பிரு. சூத் 2-1-35 (ஸ்ருஷ்டி காலத்தில் நகர்ம கர்மமில்லை. அவிபாகாத் (அக்காலத்தில்) பிரும்மம் தவிர்த்து வேறு ஒன்றில்லையென சுருதி கூறு கிறது. இதனால் ஜீவனில்லை என்று தேறுகிறபடியால், இதி சேத்என்று கூறினால் ந அது சரியல்ல. அநாதித்வாத் ஜீவன் அநாதியாகையால, உபபத்ய தேச (அநாதியாயினும் பிருஹ் மம் ஒன்றே இருந்தது என்ற சுருதியும் பொருந்தும் உபலப்யதே ச ஜீவனை அநாதி என்று சுருதியிலும் காணப் படுகிறது). ஆகவே நாமரூபவிபாகம் ஏற்படாத பிரளய தசையிலும் சித் அசித் வஸ்து அதிசூக்ஷ்மமாகவிருந்து கர்ம வாஸனைகளால விரம்பியவைகளாகவும் (ஸகர்ம ஸம்ஸ்காரம் கூடியவையாகவும்) பிரும்மத்துடன் சம்பந்தப்பட்டிருக் கின்றன என்றும் சொல்லப்படுகிறது.

இந்த விதமாக, சித் அசித் வஸ்துக்கள் நாமரூபவிபாகத் திற்கு அர்ஹதை இல்லாமல் அத்யந்த சூக்ஷ்மமாக விருப்ப

தாலும் அந்த பிரளய தசையில் பரமாத்மாவுடன் ஏகீபூதமாக (ஒன்றாகவே கலந்துவிட்டிருக்கிறபடியால்) சரீரமாக ஒட்டிக் கொண்டிருப்பதாலும், அந்த பிரும்மம் ஸ்ருஷ்டிக்க விரும்பும் போது (பஹுபவன) சங்கல்பம் முதலில் ஏற்படுவதாலும் (ஸங்கல்ப பூர்வக) நிரதிசய ஆனந்தமுடையதும், ஸர்வக்ஞத்வம் கொண்டதும், ஸத்ய சங்கல்பம் கொண்ட பிருஹ்மம் நாமருபவிபாக அர்ஹமாக, ஸ்தூலசித் அசித் வஸ்துக்களைத் தனது சரீரமாகக் கொண்டு बहु भवन सङ्कल्पपूर्वको जगदाकारेण ஜகத்தை ஸ்ருஷ்டிப் பதால்ஏற்படும் ரூபத்தை பரிணாம: (பிரும்மத்தின் சரீர பரிணாமம் என்று சொல்லப்படுகிறது - சூக்ஷ்ம சித் அசித் விசிஷ்ட பிருஹ்மம் ஸ்தூலசித் அசித் விசிஷ்ட பிரும்மமாக மாறுகிறதை சரீரத்வாரமாறுபாட்டை அடைகிற ஆகாரத்தை பரிணாம: என்று சொல்லப்படுகிறது. பிரும்மம் ஆத்மாவாகவிருப்பதால் அதற்கு பரிணாமம் இல்லை. நிர் விகாரமான பிருஹ்மம் எப்போதும் விகாரமாகவிருக் கிறது) (இதிலிருந்து ஜகத் பரிணாமத்தை அடைகிறது. ஜகத் பிரும்மத்துக்கு சரீரமாக இருப்பதால் பரமாத்மா தன்னையே ஜகத்தாக பரிணமிப்பதற்கு காரணமாகிறது. தை. சுருதி இதை விளக்குகிறது)

தை. ஆ-1-1- सत्य ज्ञान अनन्त ब्रह्म तस्माद्वा, बहुस्याम् प्रजायेयेति, सतपोऽतप्यत् (ஆலோசித்தது - தபஸ் செய்தது), सतपस्तप्त्वा इदं (இந்த உலகத்தை) सर्वमसृजत (ஸ்ருஷ்டித்தது), यदिदं किंच तत् सृष्ट्वा (ஸ்ருஷ்டித்ததும்) तदेवानुप्राविशत् (அதற்குள்ளே நுழைந் தது பிரும்மம்); तदनुप्रविश्य सच्चत्यच्चाभवत् (ஸத் ஆகவும் த்யத் தாகவும்) ஆயிற்று சித் வஸ்துவாகவும் அசித்தாகவும் ஆயிற்று). निरुक्तं (ஜீவனாகவும்) चानिरुक्तं (அசேதனமாகவும்) च निलयनं चानिलयनं (சித்-அசித்) च विज्ञानं चाविज्ञानं च सत्यं चानृतं च सत्यमभवत् (பரமாத்மா-ஆனந்தமயனாகவிருப்பவன் சூக்ஷ்ம சித் அசித் வஸ்துக்களைச் சரீரமாகவுடையவன் தபஸ் செய் தான் (ஸங்கல்பம்-தபஸ்-பூர்வகம்); நிருக்தம் வாக்யந்தரம் பூர்வவாக்யார்த்த விவரணாநுவாதபூர்வகம் ஸத்யத்வ விதாயகம். நிருக்தமில்லையாம் ஜீவன் (சித்) தேவமனுஷ்

பாதி சப்தமுக்யார்த்தம். கர்மபலத்தின் அநுஸாரணையாக தேகம் யேற்படுவது. ஸ்ருஷ்டி எதற்கு?-கருணையும் லீலையும் பகவானுக்கு யேற்படுவதால். பரமாத்மா ஸமஷ்டி ஸ்ருஷ்டி செய்பவன்; தன்னிலிருந்து மஹாபூதங்கள் பரியந்தம் அவனுடைய சரீரமாக ஸ்ருஷ்டிக்கிறான், அவனுடைய சரீரமான பிரக்ருதி புருஷ ஸமஷ்டி வஸ்துக்களின் பரம்பரையை அவைகளின் விரிவான பரிணாமத்தை செய்கிறான் - என அர்த்தம். (இதில் சதுரானனன் வ்யஷ்டியில் முதன்மையானவன்) அவன் ஜீவரை ஸ்ருஷ்டிக்கிறான். சதுரானனன் வ்யஷ்டி ஸ்ருஷ்டியை ஸ்த்ரி புருஷ ஸம்யோகத்தால் எற்படுத்துகிறான். அதற்கு முன்பு பகவத் ஸங்கல்பத்தால் யேற்படுகிறது. கீழே அது விவரிக்கப்படுகிறது. பிரும்மத்துக்கு காரணாவஸ்தை காரியாவஸ்தை இரண்டும் ஏற்படுகின்றன. பரமாத்மா ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஒவ்வொரு பொருளிலும் அநுப்ரவேசம் செய்து, வஸ்துவை உண்டாக்குகிறான். திரிவிருத்கரணம் பேசப்படுகிறது. பரமாத்மாவுக்கு தர்மபூத ஞானத்திலுல் கல்யாண பரிணாம விசேஷம் யேற்படுகிறது.)

இங்கே—''தபஸ்'' சப்தத்திலுல்—முந்தின கல்பத்திலிருந்த ஆகாரங்களை (வடிவங்களை) பகவான் ஆலோசித்து ஸ்மிருதியிலுல் செய்கிற படியால் பர்யாலோசநரூபம் அத்தகைய ஞானம் என்று காட்டப்படுகிறது. முண். உ. 1-1-6ல் यस्य ज्ञानमयं तपः (எவனுடைய ஞானம் தவமாகவிருக்கிறதோ என்று சுருதிகளும் சொல்கின்றன. இதற்கு அர்த்தம் விளக்கப்படுகிறது. இந்த மாதிரியாக பிரும்மம் முந்தின கல்பங்களிலிருந்த ஜகத்தின் உருவத்தை (அது எப்படியிருந்ததோ அதேபடியாக) ஆலோசித்து - மீண்டும் இந்த உலகத்தை (சித் அசித் மிஸ்ர ஜகத்தை) ஸ்ருஷ்டிக்கிறான்; (அதெப்படி என்பதற்கு சுருதி ஆதாரம் காட்டப்படுகிறது). सर्वं हि [illegible] कल्पेषु कल्पयेत् [illegible] பரமாத்மா அதேபடி அதே ஸ்வபாவத்துடன் முந்தின கல்பங்களில் இருந்தபடி ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறான். தை. நா. 6-24 सूर्याचन्द्रमसौ धाता (பரமாத்மா) यथापूर्वमकल्पयत् । दिवं च पृथिवीं चान्तरिक्षमथो स्वः - பரமாத்மா சூரியன் சந்திரர்களை முந்தியிருந்த

படி ஸ்ருஷ்டிக்கிறான். ஸ்வர்க்கம், ப்ருத்வி அந்தரிக்ஷம் ஸுவர் லோகங்களையும் ஸ்ருஷ்டிக்கிறான்.

வி. பு. (1. 5. 65) यथर्तुष्वृतुलिङ्गानि नानारूपाणि पर्यये । दृश्यन्ते तानि तान्येव तथा भावा युगादिषु எப்படி விதவிதமான ருதுக்களின் வரிசை மீண்டும் மீண்டும் தோன்றி, அதன் ஸ்வபாவங்களில் மாருமல் இருக்கின்றதோ, அதே பல வகைப்பட்ட பொருள்கள் பிராணிகள் ஒவ்வொரு யுகத்தின் ஆரம்பத்தில் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன என்று சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் சொல்லப்படுகிறது.

இதற்கு அர்த்தம் இது தான். பரமாத்மா பிரளய தசையில் எவ்விதம் இருக்கிருர் என்ருல் ஸ்வயம் அபரிச்சின்ன (அளவிட முடியாதபடி) ஞான ஆனந்த ஸ்வபாவமுள்ளவன். அவன் தனது சரீரமாக அத்யந்த சூக்ஷ்ம தசையை அடைந்தபடியால், "அஸத்" (வியாகம் செய்யப்படாதபடி) என்று சொல்லும்படி விருப்பவையும், பரமாத்மாவுக்கு லீலோப கரணங்களாக (தான் ஆனந்திப்பது மாத்திரமல்ல, மற்றவர்களையும் ஆனந்திக்கிறான்). சித் அசித் வஸ்துக்களைச் சரீரமாகக் கொண்டதால் தன் மயமாக பரமாத்மாவிருக்கிறான். ஸ்ருஷ்டி சமயத்தில், அந்த பரமாத்மா விசித்திரமானதும் முடிவில்லாத (அலகிலா விளையாட்டை உடையவன்) லீலா க்ரீடைகளுக்கு உபயோகப்படும்படி தன் வசம் வைத்திருப்பவனும் தமக்கு சரீரமாகவிருக்கும் பிரகிருதி புருஷன் ஆகிய ஸமஷ்டி பரம்சரையை (தன்னிலிருந்து ஆரம்பமாக) மஹா பூதங்கள் பர்யந்தம் (ஆத்மாகம்) தானே பரிணமித்து (சரீரத்வார பரிணமித்து) அந்த அந்த வஸ்துக்களாக மாறி, தன் மய: என்பதால் தான் ஒவ்வொன்றிலும் அனுப்ரவேசம் செய்வதால் தானே அந்த வஸ்து என்று சொல்லும்படி, மீண்டும் ஸத் (சித்-ஜீவன்) த்யத் (அசித்-பிரகிருதி) சப்த வாச்ய விசித்திர சித் அசித் மிஸ்ர தேவாதி (தேகங்களை உடைய தேவர்கள்) ஸ்தாவரம் முடிய ஜகத் ரூபம் பரமாத்மாவின் ஸங்கல்பத்திருல் தபஸ்ஸினுலும் யேற்பட்டது என்று அர்த்தம்.

இந்தக் கருத்து மீண்டும் சுருதியில் ஓதப்படுகிறது. தை. ஆ. 6-3-ல் तदेवानुप्राविशत् ஒவ்வொன்றிலும் பிருஹ்மமே உள் நுழைந்தது. (அதை) தானே என்று சொல்லும்படி ஆயிற்று. தன்மய ததேவ அனுப்ரவேசத்தினுல் யேற்பட்டது (தன்மய தபத்தினுல் பர்யாலோசனம் செய்து, அந்த பிருஹ்மம் ஸர்வதேவ மனுஷ்யாதி, பிரகிருதி பொருள்களில் அனுபிரவேசம் செய்தபடியால், तदर्थमाह तदेवान्विति அது தான் இவை காரியமும் காரணமும் ஐக்யம். ஒன்று எனச் சொல்லும்படி ஆயிற்று. காரிய காரண அவஸ்தைகளில் பிரும்மம் தான் ஒரே ஆத்மா என்று காட்டப்பட்டது. ஐக்ய வ்யப தேசத்தினுல்).

அதனுல் तदनुप्रविश्य அதில் உள் நுழைந்தபடியாலே என்று அர்த்தம்; காரண அவஸ்தையிலிருந்து ஒரே ஆத்மா காரிய அவஸ்தையிலும் அதே ஆத்மாவாக ஆயிற்று. பரமாத்மாதான் परमात्मैवकार्य ரூபத்தினுல் வஸ்துக்கள் பலவகைப்பட்ட திரவியங்களை உண்டு பண்ணினுலும், आत्मतया अवस्थाय அதே ஆத்மாவாக இருதசைகளிலும் இருப்பதால் अवस्थाय உள் இருந்து மேலான நியமனம் செய்வதாலே பரமாத்மாவே அந்த அந்த பொருளாக பரிணமித்தான் உண்டானுன் என்று சொல்லப்படுகிறது. (இங்கே சொல்லப்படுவது— வஸ்துத்வம் பரமாத்மாவின் அனுப்ரவேசத்தினுலும், பரமாத்மா ஆத்மாவாக ஒவ்வொன்றுக்கும் இருப்பதாலே அவனது நியமனமும் யேற்படுகிறது. விக்ரியா பலவகைப்பட்ட தேகங்கள் வஸ்துக்கள் திரவியங்கள் பரிணமத்தால் யேற்பட்டது. ஆகையால் பரமாத்மாவே உபாதான நிமித்த ஸஹகாரி காரணங்களாகும். பிரகிருதி பிரும்மாத்மகமாக இருப்பதால் அதுவும் பிருஹ்மமே எனக்கருத்து).

இந்த விதமாக பரமாத்மா சித் அசித் சேர்க்கை கொண்ட ரூபமாகிற ஜகத்தை அந்த ஜகத்தாகிற சரீரம் பரிணமயமடைவதாலே (அதாவது பிரளய தசையில் ஸூக்ஷ்ம அவஸ்தை ஸ்ருஷ்டியில் ஸ்தூல அவஸ்தை). இரண்டு தசைகளிலும் (காரண காரிய தசைகளிலும்) அவைகள் பரமாத்மா

சரீர பூததயா ஸர்வம் (எல்லாமே) அபுருஷார்த்தங்களாகும். (அதாவது பரமாத்மாவின் அம்சமாகிற சேதனனிடம் அபுருஷார்த்தங்கள் யேற்படுகின்றன. அதே மாதிரி எல்லா உண்மையான விகாரங்களும் மாறுதல்களும் பரமாத்மாவின் அம்சமாகிற அசேதனப் பொருள்களைச் சேர்ந்ததாகும். ஆனால் பரமாத்மா விஷயத்திலே அவை உண்டாக்கப்பட்ட காரியமாகவிருத்தல் என்பதற்கு அதற்கு ஆத்மாவாகவும், பரமாத்மாவே சித் அசித் ஆகிற இரு வஸ்துக்களில் அவஸ்திக்கிற படியால், உள் இருந்து எல்லாவற்றிற்கும் நியந்தாவாக விருப்பதால் அவை அவனுக்குச் சரீரமாக விருப்பதாலே பரமாத்மாவே அவைகளுக்கு ஆத்மாவாக விருக்கிறன். சரீர தோஷங்கள் சரீரியை ஸ்பரிக்கப்பட மாட்டா, அது போல அவைகளின் அபுருஷார்த்தங்களும் (சேதனனுடையவை), விகாரங்களும் (அசேதன வஸதுக்களுடையவை) பரமாத்மாவை ஸ்பர்சிப்பதில்லை. (अवस्ययो:) तयोर्नियन्तृत्वेन (உள்ளிருந்து மேலான நியமனம் செய்வதாலே) ஆத்மாவாகவிருந்து எல்லாம் நியமிப்பதாலே பரமாத்மாவே அவைகளுக்கு தன் சொந்த சரீரபூதமாக விருப்பதாலே, நியந்த்ருத்வம் (மேலான நியமனம் செய்வது) ஆத்ம பூத: (அவைகளுக்கு வஸ்துத்வம் என்கிற தன்மையைக் கொடுக்கும் ஆத்மாவாக விருப்பதாலே) அந்த அந்த சித் வஸ்துக்களுக்கு யேற்படும் அபுருஷார்த்தங்கள் (ஜீவாத்மாக்கள் விஷயத்திலே, அதே மாதிரி) அசித் வஸ்துக்களுக்கு யேற்படும் விகாரங்கள் (மாறுதல்கள்) பரமாத்மா ஆத்மாவாக விருப்பதால் அவை சரீரமாக விருப்பதால் பரமாத்மாவை ஸ்பர்சிப்பதில்லை (சரீர தோஷங்கள் ஆத்மாவை ஸ்பர்சிப்பதில்லை என்கிற கருத்தினால் சொல்லப்படுகிறது.) பரமாத்மாவின ஸ்வரூப ஸ்வபாவங்கள் பிரளய தசையிலும் ஸ்ருஷ்டிக்குப் பின்பும், எப்போதும் இருக்கிறபடியாக, அபரிச்சின்னனான, ஆனந்த மயனாகவும் ஸர்வதைக ரூப மேவ, ஒரே மாதிரியான ஏக ரூப ஏவ (மாறுதபடி நிர்விகாரனாக ஆகத ஸ்ருஷ்டி எனபபடும்). லீலையுடன் சம்பந்தப்பட்டவனாக விளங்குகிறான். सर्वैकरूप एव अपरिवर्तनशीलतया अवतिष्ठते - सदैक-रूपरूपाय प्रमाणपूर्वकम् -சிலையாம் प्रमाणमाहु सर्वविदीति - எனக் காட்டும்

படி பிரும்மமே லீலையினால் ஸ்ருஷ்டியை செய்தது. சரீர த்வார பரிணாமத்தை அடைந்தது என்று சொல்லாம்.

அதனாலே இந்த விஷயம் சுருதியிலும் ஓதப்படுகிறது. सत्यं चानृतं च सत्यमभवत् (தை. உ. உ. 6-1) பரமாத்மாவே சரீர ஆத்மபாவத்தினால் தான் மாறாதபடியும் தன்னைச் சேர்ந்த ஸத்யம் எனப்படும் ஜீவாத்மா ஸ்வரூபத்திலே மாறாதபடி அதேபோல அந்ருதம் (விகாரத்தை இருப்பிடமாகக் கொண்ட அசித் வஸ்துவாகவும்) பிரும்மமே ஆயிற்று. (பகவானுக்கு விகாரம் இல்லை. ஜீவ பிரகிருதிகள் சரீரமாக இருப்பதாலே ஸத் என்றும் த்யத் என்றும் ஆயிற்று. (சூக்ஷ்ம தசையிலிருந்து ஸ்தூலதசையை அடைந்தது பரமாத்மா இரண்டிலும் ஆத்மாவான படியால் பரிணாமம் சரீரத்வார பரமாத்மாவுக்கு ஏற்பட்டது. பரமாத்மாவின் அநுப்ரவேசத்தினால் அந்தர்யாமியாக இருந்து அவைகளை சட்டளையிடுபவராகவும் ஆயிற்று. இதனாலே பதார்த்த ஸாமான்யாத் (அத்வைதம்) காட்டப்பட்டது. பரமாத்மாவும் அவைகளும் ஒன்று சரீர ஆத்மபாவத்தினாலே சேதனா சேதன சரீரமாக இருக்கிறான். நிருடனும் ஸ்தாணுவும் (கம்பமும்) ஒன்று என்பதாதம். பரமாத்மாவும் ஒன்று (சரீர ஆத்மபாவத்தினால்) அசேதனமும் விசித்திரசித் அசித் ரூபத்தில இருக்கும் பலவகைப்பட்ட விக்ரியா (காரியங்கள்) ஏற்பட்டாலும் பிரும்மமே ஸ்வபாவத்திலே மாறாதபடி நிர்விகாரமாக இருப்பதாலே ब्रह्मसत्यमेवाभवत् நிரஸ்த நிகில தோஷ கந்தம் அபரிச்சின்ன ஞான ஆனந்த ரூபமே வாபவதி ஸ்வரூபம், ஏக ரூபமாய் பிரும்மமாய் இருந்தது என்று இதன் அர்த்தம்.

**सर्वाणि चिदचिद्वस्तूनि सूक्ष्मदशापन्नानि । स्थूलदशापन्नानि च** எல்லா சேதனவஸ்துக்களும் அசித் வஸ்துக்களும் மீண்டும் பழைய படி சூக்ஷ்ம அவஸ்தையை அடையும் போது, (எவ்விதம் அவை ஸ்தூல தசையை அடைந்தனவோ அதுபோல) பரமாத்மாவுக்கு லீலோப கரணங்களாகின்றன. ஸ்ருஷ்டி முதலியவை லீலா பகவத் விளையாட்டு (அலகிலா விளை

யாட்டை உடையவன்) என்று பகவத் போதாயனரே பராசரரும் இன்னும் மற்றவர்களும் சொல்லிருக்கிறார்கள் இந்த வசனங்களாலே (வாயு பு உத்தர கண் 36-66ல் अव्यक्तादि-विशेषान्तं परिणामर्धिसंयुतम् । क्रीडा हरेरिदं सर्वं क्षरमित्युपधार्यताम् ஒருவன் இதை எல்லாம் அறியவேண்டும், எது அவ்யக்தத்துடன் ஆரம்பமாகிறதோ, எது விசேஷாந்தம் (எது விசேஷத்துடன் அதாவது பூமியுடன் முடிகிறதோ) என்றும்; எது மாறுதல் களுடனும் வளர்ச்சியுடனும் சம்பந்தம் கொண்டதோ இவை எல்லாம் பரமாத்மாவின் விளையாட்டாகும். (ஹரி பகவானின்லீலை, அது எல்லாம் க்ஷரம் (அழியும் தன்மை) யுள்ளது வி. பு. 1-2-18 क्रीडतो बालकस्येव चेष्टां तस्य निशामय பகவான் அவர் ஒரு விளையாடும் குழந்தையைப்போல விருக்கிறார், அவர் சேஷ்டிதங்களைக் கேளிக்கைகளை கொண்டவர் வி. பி. 40-97 बाल:क्रीडनकैरिव (அவன் குழந்தை களுக்கு சமமாகிறான், விளையாட்டு வஸ்துக்களை உடைய தால்) இந்த கருத்து சாரீ. சூ. 2-1-33 लोकवत् लीलाकैवल्यम लோகவத்து உலகில் அரசர்களுக்கு பந்தாடுவது முதலான செயல்களைப் போல லீலா கைவல்யம் (கேவலம் லீலையே (ஜகத் ஸ்ருஷ்டி முதலானவற்றின் பயனாகும். லீலை என்பதும் சேதனனுக்கு ஸம்பிரயோசனம்தான். பிரளயத்தில் யிருந்தபடி இருந்தால் அவன் எவ்விதம் மோக்ஷமடையக் கூடும்? சாஸ்திரம் எவ்விதம் எதற்கு உண்டுபண்ணப்படும் ஜீவன் உய்வதற்க்காக ஸ்ருஷ்டியும் சாஸ்திர ஆரம்பமும் யேற்படுகிறது. ஆகவே பகவந் கருணையினால் யேற்படு வதாகும்)

ஸ்வே. உ. अस्मान्मायी सृजते विश्वमेतत् तस्मिंश्चान्यो मायया संनिरुद्धः மாயீக் (பரமாத்மா மாயையை தன் வசம் வைத்திருப்பவன் अस्मात् (பிரகிருதி) இதிலிருந்து இந்த உலகத்தை ஸ்ருஷ்டித் தார். எதில் (எந்த உலகில்) அன்யோ (ஜீவன்) மாயை யினால் கட்டப்பட்டிருக்கிறான். அஸ்மாத் என்பது ப்ரதானம். சுருதி பூர்வபக்ஷத்தைக் காட்டுவது போலவும் தன் பக்ஷத் தையும் காட்டும். அதெப்படியெனில் ஜகத் விசிஷ்ட பிரும் மத்தையே காரணமாகவும் காரியமாகவும் ஒப்புக் கொள்

வதால் — ஜகத்தும் பிரும்மமும் வேறுபட்ட லக்ஷணங்கள் உடையவை. அதாவது பிரும்மம் ஜகத்ரூபத்தை அடைவதாலும் அது அதற்குச் சரீரமாக விருப்பதாலும் அசேதன வஸ்துவுக்கு பலமாறுதல்கள் ஏற்பட்டாலும், அந்த காரணங்கள் பிரும்ம சரீரத்திற்கே யேற்படும் மாறுதல் களாகும், அதே மாதிரி அந்த பிரும்மத்தின் சரீரமாக விருக்கும் க்ஷேத்ரக்ஞன் (ஜீவனுக்கு) யேற்படும் அபுருஷார்த்தங்கள் சுகதுக்காதிகள் ஜீவனையே சேரும் பரமாத்மாவைச் சாராது ஸ்பர்சிக்காது. அவன் ஆத்மாவாக விருப்பதால். இம்மாதிரி வித்யாஸப் படுத்துவதற்க்காக, பிரகிருதி புருஷன் (ஜீவன்) இவை பிரும்மத்தின் சரீரமாக விருப்பதால் அவை ஸ்ருஷ்டிக்கு முன்பு மிகமிக சூக்ஷ்மமான நிலையை அடைந்த காரணத்தினால் அவை பிரும்மத்துடன் ஒட்டிக் கொண்டு ஏகீ பாவத்தையடைந்த போதிலும் அதின் ஸ்வரூப ஸ்வபாவங்களும் பிரும்மத்தின் ஸ்வரூபம் ஸ்வபாவங்கள் வேறு வேறுதான் என்று இவைகளுக்குள் பேதம் வ்யபதேசம் காட்டப்பட்டிருக்கிறது.

தை. ஆ. 6-3 तदात्मानं स्वयमकुरुत ஆதலால அந்த பிரும்மம் தன்னையே பல விதமாக ஆக்கிக் கொண்டது இத்யாதிகளினால் ஒரே அர்த்தம் ஸ்தாபிக்கப்படவேண்டும். அவ்விதமே மனுவின் வாக்யமிருக்கிறது. मनु स्. 1-1-8 सोऽभिध्याय शरीरात् स्वात् सिसृक्षुर्विविधाः प्रजाः । अप एव ससर्जादौ तासु वीर्यमवासृजत् (பிரும்மம் நினைத்தது நான் பலவாக ஆவேன் அதன்படி சங்கல்பித்துக் கொண்டு) பிரும்மம் (பரமாத்மா பலவகைப்பட்ட பிராணிகளை (பிரஜைகளை) உண்டு பண்ண ஆசை கொண்டார். முதலில் அவர் காரண ஜலங்களை உண்டு பண்ணி, அதில தனது வீர்யத்தை வைத்தார். ஆகையால் இந்தக் காரணத்தினால் பிரும்மம் நிர்தோஷத்வம் நிர்விகாரத்வம் என்று இந்த சுருதிகள் சொல்வது சரியானதாகும்.

ஆகையால் பிரும்மமே ஜகத்தின் நிமித்த உபாதான காரணமும் ஆகும் என்பது தெளிவு.

ஸூத்ரம் யோனிஶ்ச ஹி கீயதே (1-4-28)

யோநிஸ்ச ஹி கீயதே (1-4-28)

யோநி ஸ்ச கீயதே ஹி — யோநி (நிமித்தம் உபாதானம் என்று பிருஹ்மம் புகழப்படுகிறதன்றோ. அதற்கு கர்த்தாரம் யோனி என்பதாகும். (அதர்வசிரஸ்ஸில் யோனியோனிமிதி உற்பத்தி ஸ்தானம் ஆதலால் உபாதானமே முக்கியமாகும்.

இங்கே, இந்தக் காரணத்தினாலும் கூட பிருஹ்மம் நிமித்த உபாதான காரணமாகும் (ஜகத்திற்கு). யஸ்மாத யோனித்வேன (எதிலிருந்து, உற்பத்தி ஸ்தானம் சொல்லப்படுகிறது. அதாவது பிருஹ்மமே யோநி, ஜகத்தின் உற்பத்தி ஸ்தானமாகச் சொல்லப்படுகிறது. முன் உ. 3-1-3-ல் கர்தாரமீஶம் புருஷம் ப்ரஹ்ம யோனி இதி பிரும்மம் ஜகத் உற்பத்திக்குக் கர்த்தா கர்த்தாரம். அதுவே ஈசன், புருஷன், யோநி, முண். 1-1-7ல் யத்பூதயோனிம் பரிபஶ்யந்தி தீரா: தீரர்கள் (அறிவுள்ளவர்கள்) பரமாத்மாவை எல்லாப் பிராணிகளுக்கும் உற்பத்தி ஸ்தானம் (யோநி) என்று காண்கிறார்கள. யோநி சப்தம் உபாதான காரணத்தைக் குறிக்கிறது. அது இதில காணப்படும் முண். உ. 1-1-7ல் யதோர்ணநாபி: ஸ்ருஜதே க்ருஹ்ணதே ச எப்படி சிலந்திபூச்சி தன்னிடமிருந்து சிலந்தி நூலைக் கக்கிய பிறகு அதை வாபஸ் (தன்னிடம் இழுத்துக் கொள்கிறதோ) பெறுகிறதோ அது போல இதை யாகய சொல்லுதாலே காட்டபபடுகிறது. (இங்கே ஊர்ணநாபி திருஷ்டாந்தம் எப்படி பொருந்தும் எனச சொல்லப்படும். சிலந்தி தன் தேகத்திலிருந்தே நூலை உண்டு பண்ணி, வெளியில் தள்ளுகிறது. தன் ஸ்வரூபத்திலிருந்தல்ல. அதுபோல பிருஹ்மமும் தூஷ்ம சேதன அசேதன விசேஷண (பிரும்மத்தைத் தவிர்த்து) ரஹித ஸ்வரூபத்திலிருந்து படைப்பதில்லை. இவ்வாறால் நிர்விகாரத்வம் பங்கமாகிறதில்லை (அதாவது ஊர்ணநாபி: திருஷ்டாந்தேக சரீரவை சிஷ்டயே ஸித்தேத தஸ்ய வைசிஷ்டஸ்ய ப்ரக்ருதே கார்யா வஸ்தாயாமபி ஸத்வே விம்ருஷ்டே உபாதானத்வ ஸ்யுககமத் வாத் (உத்த ஸூர்ஸ்வாமி). ஊர்ணநாபி திருஷ்டாந்

நத்தோடு வாக்ய சேஷமும் அதையே ஙிமித்தத் வஸ்ய உபா தான சரீர கத்வஸ்ய ச ஸித்தே:—யதா ப்ருதிவ்யா் இத்யாதி உதாரணங்களாலே ஸாக்ஷாத் உபாதானத்வம் ஸித்தி: என்பதாகும். पृथिवी योनिरोषधिवनस्पतीनाम् என்பதும் பிரஸித்தம்). ஆகவே சேதன அசேதன விசிஷ்ட பிரும்ம உபாதான கத்வம் வாக்ய சேஷத்திஞல் அடையப்படுகிறது என்பதாகும்.

### सर्वव्याख्यानाधिकरणम् (1-4-8)

### ஸர்வ வ்யாக்யாநாதிகரணம் (1-4-8)

### சூத்ரம் एतेन सर्वे व्याख्याताः व्याख्याताः (1-4-29)

### ஏதேந ஸர்வே வ்யாக்யாதா வ்யாக்யதா: (1-4-29)

ஏதேந—இவ்வளவால், ஸர்வே—எல்லாக்காரண வாக்யங்களும் வ்யாக்யாதா: வ்யாக்யாதா: வியாக்யாமைம் செய்யப்பட்டன.

இந்த முதல் அத்யாயத்தில் ஸ்ரீமந் நாராயணனே ஜகத் காரணமாகவும் முமுக்ஷுக்களுக்கு உபாய பூதனுகவும், உபாஸ்ய பொருளாகவும் நிருபிக்கப்பட்டான். இது தவறு, ருத்ரன் பிரும்மா, இன்னும் சிலரும் சில சாகைகளில் காரணமாகச் சொல்லப்படுகிறார்களே என்றால் முற்கூறப் பட்ட ஙியாயங்களாலே, இந்த ஐயம் தள்ளப்பட்டு எல்லா காரண வாக்யங்களும் ஸ்ரீமந்நாராயணனிடத்திலே பர்யவஸிக்கின்றன; ஏதேந—பாதசதுஷ்டய உக்த ந்யாய கலாபே: என்று அர்த்தம். நான்கு பாதங்களிலும் காட்டப் பட்ட ஙியாயங்களாலே, ஸர்வவேதாந்தங்களிலும் ஜகத் காரண பிரதிபாதன பரமான எல்லா வாக்யவிசேஷங்களும் சேதன அசேதன வஸ்துக்களிலிருந்து விலக்ஷண (வேருன) ஸர்வக்ஞ, ஸர்வ சக்தி இத்யாதி கல்யாணகுணங்களை யுடைய பிருஹ்மத்தையே பிரதிபாதிக்கின்றன அவைகள் வ்யாக்யானம் செய்யப்பட்டன, பிரும்ம பரமாகவே வ்யாக்யானம் செய்யப்பட்டன.

(அனுபந்தத்தையும் பார்க்கவும்)

வ்யாக்யாதா வ்யாக்யாதா: என்று இரண்டு தடவைகள் பதப்ரயோகம் முதல் அத்யாயத்தின் பரிஸமாப்தியைச் சொல்வதாகும் என அர்த்தம்.

இப்படி ஸ்ரீ பகவத்ராமாநுஜவிரசிதே சாரீரக மீமாம்ஸாபாஷ்யத்திலே முதல் அத்யாயம் நான்காவது பாதம் ஸமாப்தம்.

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

श्रीरस्तु



# அனுபந்தம்

இந்த அதிகரணத்திற்கு சங்கதி முன்னால் சொல்லப் பட்ட ஸர்வ அதிகரண நியாயங்கள் இங்கேயும் யுக்தம். இங்கே சொல்லப்படுவது முதல் அத்யாயம் 4 பாதங்களில் சொல்லப்படும் விஷயம் — பிரும்மம்தான் ஜகத்காரணம் என்கிற விஷயத்தில் எட்டுவிதமான பிரிவுகள் ஏற்படலாம்.

(1) சில சுருதிகள் ஜகத்காரணத்தை "ஸத்" பிருஹ்மம், அக்ஷரம் என்றும் அதாவது பிரகிருதி அல்லது ஜீவன் பிரும்மம். என்று சொல்லும்.

2&3 சுருதி வாக்யங்களில் க்ஷேத்ரக்ஞன் கொ: (ஜீவன் பிரகிருதியைக் குறிக்கும்) பிரயோகங்கள் இருக்கின்றன.

4. சிலவிடங்களில் ஆத்மசப்த பிரயோகம் அது ஜீவனையோ அல்லது பரமாத்மாவையோ குறிக்கும்.

5. சிலவிடங்களில் ஒரே பதத்திற்கு இப்படி அர்த்தமா அல்லது வேறுவிதமா என்று சொல்ல முடியாதபடியிருக்கும் உதாரணம் வைஸ்வாநர சப்தம், ஜீவன் அல்லது அசேதனத் தைக் குறிக்கும்.

6&7 இந்திரன் போன்ற குறிப்பிட்ட ஜீவர்கள் அசேமாதிரி ஆகாசம் (பிரக்ருதியின் மாறுதலில் ஒன்று)

8. பிரும்ம சப்தம் பிரும்மத்திற்கே தனிப்பட்ட உப போகம்—அந்தர்யாமி பிராம்மணம்.

இந்த எட்டுவகைகளிலும் பிரும்மத்தின் லக்ஷணங்கள் மற்ற வஸ்துக்களிலும் நேரடியாகவோ மறைவாகவே காணப்படுவதால் பிரும்மத்தைத் தவிர வேறு ஒன்று ஜகத் காரணம் என ஊகிக்கலாம் ஆனால் பிரும்மத்துக்கே உரித்த தான லக்ஷணங்களால் இந்த சந்தேகம் போக்கடிக்கப்படு கிறது.

இப்போது பிரஸ்னை சில சுருதிகளிலே ஜகத்காரணம் சொல்லப்படும் போது அது சித் அல்லது அசித் அல்லது பிரும்மம் இவைகளின் லக்ஷணங்களுடன் சம்பந்தமின்றி உபயோகப் படுத்தப்படுகின்றன. இதற்குப் பதில் பிரும்மமே அந்த ஒவ்வொரு விஷயத்தில் சொல்லப்படுகிறது. ஏனெனில் பிரும்மமே ஜகத்காரணமாக ஸ்தாபிதமாகையால். சுருதபிரகாசிகையில் எப்படி அர்த்தம் செய்ய வேண்டியது. நியாயம் யாது என்பது விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அது கீழ் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**சுருத பிரகாசிகையில்** எல்லா அதிகரண நியாயங்களால் சொல்லப்பட்டது இதற்கு ஸங்கதி. முதல் சூத்ரம் ஸமந்வய சூத்திரத்தின் விஷயம் ஸித்தபரமான பிரும்மமே ஸர்வ வேதாந்த வாக்யங்களின் விஷயம். வாக்ய விசேஷம்-மற்ற அதிகரணங்களின் விஷயங்கள்; எல்லாம் 35 விஷயங்கள் ஆகின்றன.

1-வது அதிகரணம் பிரும்ம விசாரம் செய்யத்தகுந்தது. ஜகத்காரண வாக்யங்கள் பிரும்மபரமா சேதனபரமா பிரகிருதி பரமா என்பது விஷயம். ஒவ்வொன்றிலும் பிரும்மமே ஸ்தாபிதம். உபாஸனை அதன்பலன் இவைகளைச் சொல்லும் வாக்யங்களை வ்யவச்சேதம் செய்வதாலே பிரும்மமே ஜகத்காரண பிரதிபாதனம் என்று கொள்ளவேண்டியது. பிரும்மம் ஒவ்வொன்றிலும் சேதன அசேதன விலக்ஷணம் என்று காட்டப்பட்டது. அதனாலே பிரும்மம் ஸர்வக்ஞம் ஸர்வ சக்தி என்கிற சப்தங்களால குணங்களாகக் காட்டப்பட்டு அதனால் நிமித்தமும் உபாதான காரணமுமாக பிரும்மம் ஆகிறது என்பது ஸ்தாபிதம்.

ஜகத் காரண வாக்யங்களில் சில ஸர்வ சாதாரண சப்தங்களால் सत् (ஸத் என்று) அக்ஷரம் (என்றும்) காட்டப்பட்டது. சில சுருதிகள் க்ஷேத்ரக்ஞசப்தத்தினால் சேதன (ஜீவ) பரமாக சொல்கின்றன. சில அசித் விஷயபரமாக [illegible] என்று சொல்கின்றன. சில ஈச்வரனை

யும் ஜீவனையும் ஸாதாரண சப்தங்களால் आत्मन् ஆகாச: என்றும் पुरिशयंपुरुषं என்றும் காட்டுகின்றன. சில சித் அசித் விசேஷங்களை அஸாதாரண சப்தமாக காட்டுகின்றன— வைஸ்வாநரசப்தம். சில அசித் விசேஷ அசாதாரண சப்தங்களால் यथा आकाशादेव समुत्पद्यन्ते என்பதாகும். இன்னும் சில சேதன விஷயமாக அசாதாரண சப்தங்களால் "இந்திரன்" சப்தத்தை பிரதர்தனன் உபாஸிக்க வேண்டியது; இன்னும் பரமபுருஷனை அஸாதாரண சப்தங்களால் காட்டுவதாகும் यथाऽन्तरादित्य வித்யா சுருதியில்; அதேபடி புருஷஸூக்தம; இன்னும் சில சாக்ஷாத்தாகவே (நேரடியாகவே) காரணத்தைச் சொல்லும் காரணத்வம், வ்யாப்தி, வேதிதவ்ய:, நிரதிசய தீப்தியோகத்துடன் கூடியது (இது பிரும்மபரம்)

காரண வாக்யங்களில் சித் அசித் ஸாதகமாகவிருக்கும் லிங்கங்கள் பூர்வ பக்ஷத்தில் காட்டப்பட்டு பிறகு பல முக்ய காரணங்களால் அதாவது ஈக்ஷண (சங்கல்பம் செய்தல்) ஆனந்த விசேஷ; ஸர்வ பிரசாஸ்த்ருத்வம் (கட்டளையிடுதல்) ஸமஸ்த ஹேயப்ரத்யனீ கத்வம் ஸர்வசித் அசித் தாரகத்வம் பதித்வம் அந்தராத்மாவாக விருப்பது, முக்தனுக்கு அடையுமிடமாக (ப்ராப்யம்) இத்யாதி தர்ம விசேஷங்களால் பிரும்ம பரமாக ஸ்தாபிதம். அதாவது சித் அசித் விலக்ஷண ஜகதேக காரணபூத தேவதாவிசேஷம், அதாவது ஸ்ரீமந் நாராயணன் என்று பிரதிபாதனம் செய்யப்பட்டது.

அதனால ஸ்ரீமந்நாராயணனின் பரத்வமும் ஸ்தாபிதம். ஈக்ஷணவிசேஷத்தினால பரமபுருஷனுக்கு அஸாதாரணமாக முப்பத்து இரண்டு அதிகரணங்களின் விஷயமாக நிர்ணயம் செய்யப்பட்டு, ஜகத் காரணம் ஸ்ரீமந்நாராயணனே என்றும், அவன் (அந்த தேவதா விசேஷம்) சித் அசித் விலக்ஷணம் ஸர்வவித காரண பூதமாகவும், பரபிருஹ்ம சப்தத்தாலும் வாச்யன், இந்த பரதேவதாவிசேஷம் பரத்வ ஸாதகம் என்பது பூர்ணமாக ஸ்தாபிதமாகும். இந்த விஷயமே ஸ்ரீமந்நாரயண பரத்வமாக கீழே விவரிக்கப்படும். ஜகத் காரணத்வத்திற்கு

பரமாத்மா லிங்கம் இல்லையென்பதும் இருக்கிறது என்ரு லும், அதனுல் தேவதா விசேஷம் எப்படி ஸ்தாபிதம்? இதற்கு சமாதானம் கொடுக்கப்படுகிறது.

1. முதல் சூத்ரம் பிருஹ்மசப்தம் பகவத் சப்ததுல்யத்வம் என்பது ஸதாபிதம்.

2. ஜன்மாத்யஸ்ய யத: ஸ்ரீமந்நாரயணனே ஸ்தாபிதம் यतः எதனிடமிருந்து ஜகத் தோன்றியதோ இத்யாதிஜநிகர்து:

மூன்ருவது வேற்றுமை சாதாரண சப்தம்; நான்கவது- தேவதா விசேஷத்தைக் காட்டுவது (பஞ்சமியில்லைஹேது விருப்பதால் 3, அல்லது 4ம் வேற்றுமையில் காட்டப் பட்டது).

3. आनन्दो ब्रह्म - रसो वै सः ஆனந்தவல்லி வாக்யங்களால் அந்தராதித்ய வித்யையே பேசப்படுகிறது.

4. ஈக்ஷத் அதிகரணம்—கதிஸாமாந்ய: சாதாரண "ஸத்" சப்தவாச்யம் தேவதா விசேஷ (ஸ்ரீமந்நாராயணமேவ) நிஷ்டத்வமேவ தர்ஶிதம்

5. ஆனந்தமயன் பிருஹ்மம் अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः என்பதால் அந்தராத்ம சப்தத்தினுல் சுபாலோபநிஷத் வாக்யங்களை दिव्यो देवो एको नारायणः என்பதை நினைவுபடுத்தி உபக்ரம ஸ்தலஸ்யானந்த சப்தஸ்ய ருடியை பரித்யாகம் हदिपरित्यागे हेत्वभावाच्च सिद्धं பகவத் பரம் எனக்காட்டபட்டது. அந்தராதித்ய வித்யையில் புண்டரீக காக்ஷத்வம், புருஷசப்தத்தினுல் ஹிரண்மயத்வ விசேஷணத்தினுல் புருஷஸூக்தபிரதிபாத்ய புருஷன் அபஹதபாப்மத்வாதி குணங்கள் கொண்ட திவ்யோதேவ ஏக நாராயண. (சுபால. 2)

6. ஆகாசாதிகரணம், பிராண, ஜ்யோதி இந்திராதி சப்தங்களிலும் புருஷ சூக்த பிரதிபாத்யமான பரமபுருஷனே அங்கங்கே சரீர ஆத்மபாவத்தால் சொல்லப்படுகின்ருன் (இந்திர சரீரபரமாத்மா என்பதுபோல)

7. மனோமயத்வ பா (भा) ரூபத்வத்தைச் சொல்வதால் வித்யுத்குணர் ஹிரணமய புருஷபரமாக்ச் செல்வது हृदा मनीषा मनसाऽभिक्लृप्त:, तस्मिन्नयं पुरुषो मनोमय: अमृतो हिरण्मय: இவைகளால் ஐக்யார்த்தம் சாண்டில்ய வித்யையின் தேவதா விசேஷம்.

8. கடவல்லியும் பரமாத்மாபரம்-தத்விஷ்ணோ: பரமம் பதம் என்கிற வைஷ்ணவ பரம பதம் விஷயமாகும்.

9. அக்ஷி அந்தர புருஷன் - புருஷ் சப்த வாச்யன் மோக்ஷத்தை அளிப்பவன் तद्दिमतत्पमिति.

10. அந்தர்யாமி வித்யையில் நாராயண விஷயம் சுபோலோப நிஷத்தின் ஐக்ய அர்த்தத்தால் யேற்படுவது.

11. முண்டகோபநிஷத்தில் பரமபுருஷ விஷயத்வம் பிருஹ்ய அக்ஷரசப்தங்களில் புருஷசப்தத்திற்கு ஸமான அர்த்தத்வம் காட்டப்பட்டது.

12. வைஸ்வாநரவித்யை பரமாத்மாபரம் पुरुषमपि चैनमधीयते इति च ஸ்புட முக்தம்.

13. த்யுவாத்யதி கரணம் முண்டக வாக்யத்தினல் பரம புருஷபரம்.

14. பூமவித்யா-நிரதிசய சுகாநுபவஸ்து விஷயத்வத்தினல் ஆனந்த வல்லி துல்யவிஷயம்.

15. அம்பராந்ததாரகமக்ஷரம் சூர்ய சந்திரர்களை அவரவர்களின் ஸ்தானங்களில் தனது மேலான ப்ராஸாஸனத்தினல் நிலை நிறுத்துவது. ஆனந்த வல்லியை ஞாபகப்படுத்தி அக்ஷர சப்த வாச்யத்திற்கு முண்ட கோப நிஷத் வாக்யத்தை ஞாபகப்படுத்தி, பிருஹதாரண்யக உபநிஷத்தில் உள்ள அந்தர்யாமி வித்யா நந்தரவாக்யத்தை ஞாபகம் செய்வதாகும்.

16. ஈக்ஷத் கர்ம—பரம புருஷ விஷயமே,

17. த ஹராதி கரணம்: வ்யோம அதீத மத ப்ரத்யனீ கத் வாத் स उत्तमः पुरुषः என்று சொல்ல (उक्त) தேவதா விசேஷ ஸாதகம்.

18. பிரமிதாதி-புருஷ ஏவ ஸ்ருத:—ஸ்ரீமந் நாராயணன்.

19. தேவதாதி கரணம் - மதுவித்யையில் - ஹிரண்யகர்ப்ப இந்திரர்களுக்கும் குரு சிஷ்ய பாவ பிரதர்சனத்தினால் ஆதித் யாதிகளுக்கும் அந்தர்யாமி விஷயமாதலால் பகவத் நாரா யணனின் மகிமை ஓதப்பட்டதாகும்.

20. आकाशो वै नाम—இந்த வாக்யம் புருஷ சூக்த பரம புருஷ பரம் (அர்த்தாந்த ரத்வாதி கரணம்). ஆகாசம் சரீரத்வாரா பரமாத்மா.

21. நான்காவது பாதத்தில்-पुरुषावपरं [illegible]—உபாஸநத்தை (அநுமாநிகாதி கரணம்) பூர்த்தி செய்து பலன் தருபவன் நாராயணனே. எல்லே நிலமாக ஓதப்படுகிறான். வசீ கார்ய பரம்பரையைச் சொல்வது.

22. சமஸாதி கரணம் - அதில் அஜாயா: என்பது பரம புருஷ ஆத்ம கத்வம். தைத்ரீய உபநிஷத்திலே அஜாவாக்ய சிந்தாநுவாகே - यस्मात्परं என்று வாக்யத்தினால் அறியப் படுவது. மூலபிரகிருதி பிரம்மத்தையே ஆத்மாவாகக் கொண்டது—தைத்ரீய சாகையினர் ஓதுகின்றனர் எனக் காட்டப்பட்டது.

23. ஸங்க்யோபஸங்கிரஹாதி கரணம்—यस्मिन् पञ्च पञ्च- जना: என்பது பகவத் பரம். அம்ருதாத்ம பிருஹ்ம சப்த நிர்தேசத்தினால் காட்டப்பட்டது.

அந்த ராக்ஷிணி புருஷன் காணப்படுகிறதே - ஏஷ ஆத்மேதி ஹோவாச ஏததம்ருதமேததபய மேதத் பிருஹ்ம அம்ருதோ ஹிரண்மய:, स व [illegible]: என்று வாக்ய ஐக்யார்த்தம் காட்டப்படுகிறதாலே,

यश्चक्षुषि तिष्ठन् என்பதால் அந்தர்யாமி பிராம்மணம் ஓதப்பட்டது. பஞ்ச ஜன ஸங்க்யைக் குறிப்பது இந்திரியங்கள் பகவத் அதீனம் என்பதாம்.

24. காரணத்வாதி கரணத்திஞல் ஆனந்தவல்லி வாக்ய விஷயத்திஞல், பரம புருஷத்வ நிர்தாரணம்.

25 பாலாகி அஜாத சத்ரு ஸம்வாதத்திலே ஜகத்வாசித்வாதி கரணம். வேதிதவ்ய: —பரம புருஷனே ஆகும். तमेव विद्वान् ஐக்யார்த்த ஸ்தாபிதம். மோக்ஷமடைதலைப் பலனுகக் கூறுவதாலே பிருஹ்மமே அறியத்தகுந்தது. ஜீவசரீர பிரும்ம உபாஸனம்—அசேதன சரீர பிரும்மோபாஸனம், கேவல பிரும்மோபாஸனம் மூவகை உபாஸனம் சொல்லப்பட்டாலும்—ஜீவமுக்ய பிராண லிங்கங்களை அவற்றை சரீரமாகக் கொண்ட பிருஹ்மமே உபாஸனம் என்று கொள்ளவேண்டியது.

26. வாக்யாந்வயாதிகரணம் அவஸ்திதேரிதி சூத்ரத்தில் அந்தர்யாமி பிராம்மண விஷயமாதலால் மைத்ரேயீ பிராம்மணமும் ஜீவஸமாஞுதி கரண வாக்யங்களால் நாராயண பரத்வம் ஸ்தாபிதம்.

27. பிரகிருதி அதிகரணத்தில் நிமித்த உபாதான பேத வாதி பாசுபத பிரகிரியா விரோதித்வாத், ருக்ம வர்ண புருஷனுடைய யோநித்வம் சொல்லப்பட்டதால் — பரம புருஷன் நாராயணனே விஷயமாகிறது என்பது ஸ்பஷ்டம்.

என்ன சொல்லப்பட்டதென்ருல் சில வாக்ய விசேஷங்கள் அநுவாதரூபமாகவும் புரோவாத வாக்யங்களை ஸாகாங்க்ஷங்களாக விருப்பவை, உதாரணம் यतो वा इमानि; यो वै [illegible] एवं [illegible] என்பவை. அதுமாதிரி சில சாதாரணசப்தமாகச் சொல்வதால் விசேஷாகாங்க்ஷ வாக்யங்களாக விருப்பது-[illegible] என்பது போல. அயோக்யார்த்த பிரதிபாதநத்வம் இல்லாமையோடு கூடின யோக்யார்த்த பிரதிபாதகத்வமே உள்ளதாகும்,

இன்னும் சில சப்தங்கள் ஆகாச பிராணாதி சப்தங்கள் இவை அயோக்ய ஸ்வார்த்ததயா யோகவிசேஷா கங்களாக விருப்பவை, இன்னும் சில யோக்ய விசேஷ ப்ரத்யபிஜ்ஞயாக விசேஷணுபஸ்தாபகா: – உதாரணம் ஸர்வவ்யாபி, ஸர்வபூதாந்தராத்மா, என்பவை ஸர்வவியா பித்வம் ஸர்வ பூதாந்தராத்மா ஸ்ரீமந் நாராயணனுக்கே தகும். உதாரணம் व्याप्य नारायण: स्थित: - सर्वभूतान्तरात्माऽपहत-पाप्मा दिव्यो देव एको नारायण:—என்பது ஓதப்படுகிறது.

சில யோக்ய விசேஷோபஸ்தாபகா: — हिरण्मय: पुरुष - तस्य यथाकप्यासं पुण्डरीकमेवमक्षिणी तद्विष्णो: परमं पदम् இத்யாதய:—

ஆகவே ஸமந்வய அத்யாயத்தில் ஜகதேககாரணசித சித் விலக்ஷண தேவதா விசேஷ (ஸ்ரீமந்நாராயணன்) காரண வாக்யங்களை ஸமன் வயப்படுத்தி நாராயண பர மாகச் சொல்லிற்று. நாராயண பரத்வமே சரமாதிகரணே (ஸர்வ வ்யாக்யாநாதி கரணத்தில்) சொல்லப்பட்டதாகும்.

சுபாலோப நிஷத்தில் காரணத்வாதேவ நாராயண பரத்வம் ஸித்தம். நாராயணனே அடிக்கடி பிரதிபாதிக்கப் படுவதாலே தாத்பர்யலிங்கம்—ம்ருத்யு தமஸ் (ஸ்தான பிர மாணத்தினுலே) பரோதேவே நாராயண: – "ம்ருத்யு" சப்தத் தாலே (தமஸ்); உபாதான அவிபாகஸ்தானயோர் ஏகத்வாத் நாராயணன் முக்தனுக்குப் பிராப்தி, ஸத ஸதுபவ விலக்ஷண; மத்யே புருஷோதிவ்ய: — என்கிற வாக்யம் (அண்டமத்யே), அவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சதுர்முக ரூபேண வஸ்தானம் தர்சயதி; கேவலம் புருஷ சப்த: சதுர் முகபர: தச்சரீரக: பரமாத்மா सहस्रशीर्षा पुरुष: என்று ஓதப்படு கிறது. योऽयं भूतानां मृत्युमसृजत् என்று திரிசிரஸ்ம்ருத்யு ஸ்ருஷ்டி:, சதுர்முகரூபதர பரமாத்மா கர்த்ருகா ब्रह्म एव हि तस्य वाप्ता विधाते என்று பிற்பாடு சொல்லப்படுகிறது. ஆகவே नवमरुद्वसर सविद्युक्तं जगत्कारणं नारायण इति - स्थितम्—

பிருஹ்ம சப்தம் நாராயண: பரம். சிவசப்தம் மங்கள வசனம். ருத்ரனுக்கும் அந்தர்யாமி நாராயணனே. இவ்வித

மாக சரீர ஆத்ம பாவத்திஞல் ருத்ர சரீர பரமாத்மா—ஆகாசாதிகரண நியாயத்திஞல் சப்தங்கள் அறியப்பட வேண்டியது என்பது ஸித்தம்.

நாராயணனே ஜகத் காரணமாகவும் முமுக்ஷு உபாஸ்யஞகவும் நிரூபிக்கப்பட்டது. இது தவறு, ருத்ரன் பிரும்மா முதலானோரும் காரணமாகச் சொல்லப்படுகின்றனரே யெனில், முற் கூறிய நியாயங்களாலே இந்த சந்தேகமும் தள்ளப்படவேண்டியதே.

(பூர்வபக்ஷம்) ஸ்வே. உப.-யதாத மஸ் தந்நதி வா ந ராத்திரி
நஸந்ந சாஸச் சிவ ஏவ கேவல:

தத்க்ஷரம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்ஜ்ஞாச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ-எப்போது தமஸ் மட்டுமிருந்ததோ, பகல், இரவு, ஸத் அஸத் ஆகிய ஒன்றும் இல்லையோ, சிவன் மட்டும் இருந்தாரோ அந்த பரவஸ்துவே அழிவற்றது அதுவே ஸூர்யனுக்குள்ளேயிருக்கும் வஸ்து, பழமையான தான அறிவும் அதனிடமிருந்தே வெளிப்பட்டது என்று நான்காவது அத்யாயத்தில் படிக்கப்படும் வாக்யங்களிலிருந்து சிவனே எல்லா உலகமும் அழிந்தபின்பு மீதி நிற்கும் ஸர்வகாரணஞகச் சொல்லப்படுகிருன் என்பதாம். ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்—ப்ருஹ்மவா இதமக்ர ஆஸித் ஆத்மாவா இதமேக ஏவாக்ர ஆஸித் என்றும்;

தமோவா இதமேமாஸ: நாஸதாஸீந் நோஸீத் ததாநீம் தம ஆஸித்। ப்ரஜாபதிர்வா இதமேக ஆஸீத், நாஹரா ஸீந் ந ராத்ரி ராஸீத், ஸோஸ்மிந் அந்தே தமஸி ப்ராஸர்ப்பத் முதலில் தமஸ் ஒன்றேயிருந்தது அப்போது ஸத்துமில்லை. அஸத்துமில்லை தமஸ்ஸை சரீரமாகக் கொண்ட ப்ரஜாபதி ஒருவரேயிருந்தார். பகலுமில்லை, இரவுமில்லை, அவர் அந்த தமஸ்ஸில் அசைந்து கொண்டிருந்தார் என்றும் சொல்வதாலே சிவனே பர வஸ்து என்பதாகிறது. மேலும் ததக்ஷரம் என்றதால் முண்டகாதி உபநிஷத்துக்களில் அக்ஷரமென்றும், தத் ஸவிதுர்வரேண்யம் என்றதால் சாக்

தோக்ய ஸ்ருதியிலும் காயத்ரி மந்திரத்திலும் சூரியமத் யாந்தர் விருத்தியென்றும், ப்ரஜ்ஞாசதஸ்மாத் ப்ரஸ்ருதா புராணி என்றதால் ததைக்ஷத பஹூஸ்யாம் ப்ரஜாயே யதி என்கிற வாக்யங்களில் ஸ்ருஷ்டி ஸங்கல்ப பூர்வகமாகவும் பரதத்வம் சிவனே என்றும் ஒதப்படுகிறது.

**சித்தாந்தம் :** இது தவறான அபிப்ராயம். மீமாம்ஸா நியாயத்தாலே ஸதேவ ஸோம் யேதமக்ர ஆஸீத்; பிருஹ்ம வா இதமக்ர ஆஸீத்; ஆத்மாவா இதமேக ஏவாக்ர ஆஸீத் என்கிற வாக்யங்களில் ஸத் - பிரும்மா சாமாந்த சப்தங்கள். ஏகோஹவை நாராயண ஆஸீந்ந பிருஹ்மா நே ஸாந: (மஹா. நா. உ.) நாராயணனே ஒருவனே இருந்தான், பிரமனுமில்லை, சிவனுமில்லை. விசேஷ சப்தத்தால் 'நாராயண'' என்று குறிப்பிட்டவனையே காட்டும். நாராயணனே மனஸ்ஸினால் சங்கல்பித்தான். நாராயணனிடமிருந்து தோன்றிய அண்டத்தில் நான்முகன் தோன்ற நெற்றியிலிருந்து முக்கண்ணன் (சிவன்) தோன்ற என்று மஹாநாரா உபநிஷத் சொல்லியது நாராயணாத் ப்ரவர்த்தந்தே நாராயணே ப்ரலியந்தே (ஸ்ருஷ்டி லயம் பேசப் பட்டது) ஆகவே நாராயணன் ஜகத்காரணம்.

2. உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட பரபிருஹ்மம் ஒன்றே அது நாராயணன். பிரும்மா சிவன் இவர்கள் ஜீவர்கள்; உண்டாக்கப்பட்டவர்களை இவர்களைச் சரீரமாகக் கொண்டவன் நாராயணன் ஒருவனே பரதெய்வம்.

ஆகவே பிரும்மா சிவ ருத்ராதிபதங்களால் அவர்களுக்கு அந்தர்யாமியான நாராயணனையே குறிக்கும். நாராயணாதி சப்தங்கள் விஷ்ணுவினிடத்தில் ரூடியை உடையவை, "நாராயண'' என்பதில் ''ணத்வம்'' முக்யம், பாதிக்கிறது. மற்ற பதங்களின் அர்த்தத்தைச் சொன்னால், நாராணும் அயநம் (நாரஸமூஹங்களுக்கு யிருப்பிடமாகக் கொண்டவன்) பூர்வ பதாத் ஸம்ஞ்ஞாயாமக:—என்கிற பாணினி சூத்ரம் அப்பெயரால் பிரஸித்த விஷ்ணுவைக் குறிக்கும்

